# மகாத்மா காந்தி

## நூல்கள்

### பதினொன்றும் தொகுப்பு

முதல் பதிப்பு: *30, ஏப்ரல், 1964*

[இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள காந்திஜியின் கட்டுரைகள், கடிதங்கள், பிரசங்கங்கள் முதலியன நவஜீவன் டிரஸ்டின் அனுமதியும், ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'The Gita According to Gandhi' என்ற நூல் ஸ்ரீ நாராயண தேசாயின் அனுமதியும் பெற்றவை.]



விலை: ரூ. 7-50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை - 29.



கீதா வழியில் தன்னையே ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து ஆழ்ந்த தியானத்தில் இருக்கிறார் காந்திஜி.

# மகாத்மா காந்தி நூல்கள்

## 11

பகவத் கீதையைப் பற்றி மகாத்மா காந்தி ஆரம்ப காலத்தி
லிருந்து கூறிய கருத்துகள், செய்த பிரசங்கங்கள், எழுதிய
கட்டுரைகள், கடிதங்கள், காந்திஜி மொழி பெயர்த்த
கீதை, அதன் சம்பந்தமான பல சிறந்த மேற்
கோள்களுடன் ஸ்ரீ மகாதேவ தேசாய்
எழுதிய முன்னுரை, குறிப்புகள் முதலி
யவை இந்தத் தொகுப்பில்
அடங்கியுள்ளன.

வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[ தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் ]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2

# பகவத் கீதை

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :
ஜெயமணி சுப்பிரமணியம்

# பதிப்புரை

இந்து மதத்திற்கு அடிப்படையாக விளங்கும் நூல்களில் பகவத் கீதை முக்கியமானது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியிருப்பினும், இது இன்னும் பல கோடிக்கணக்கான மக்களுக்கு தங்கள் வாழ்க்கையை நடத்த வெளிச்சம் கொடுத்து, வழிகாட்டியாக இருந்து வருகிறது. வியாத கீதை, ரிபு கீதை, பிரம்ம கீதை என்று பல கீதைகள் உள்ளன. பகவான் ஸ்ரீ கிருஷ்ணனால் போதிக்கப்பட்டதால் இதற்கு பகவத் கீதை என்று பெயர். இது அனைவற்றிலும் சிறப்பாக விளங்குவதாகும். பொதுவாக இது கீதை என்றே வழங்கப்பட்டு வருகிறது.

இது காடுகளில் அல்லது குகைகளில் அல்லது ஆஸ்ரமங்களில் வாழ்ந்திருந்த தபஸ்விகளுக்கு போதிக்கப்பட்டதல்ல. வாழ்க்கைப் போரின் மத்தியில், ஒரு யுத்தத்தின் முன் அணியில் அப்போரை நடத்தவிருக்கும் மகாவீரன் மனத்தில் ஏற்பட்ட குழப்பத்தை நீக்கி, தெளிவும் தைரியமும் ஏற்படும்படி செய்வதற்காக உபதேசிக்கப்பட்டது அது. வாழ்க்கையின் போக்கில் மனிதனின் மனத்தில் குழப்பத்தையும், அதைரியத்தையும், சந்தேகத்தையும் உண்டாக்கக்கூடிய நிகழ்ச்சிகள் பல நிகழ்கின்றன. அச்சந்தர்ப்பத்தில் அவன் வலிமையற்று பலவீனனாக ஆகிறான். இச்சமயங்களில் அவன் ஆண்மையுடனும், வீரத்துடனும் இப்பிரச்னைகளை எதிர்த்து, தெளிவு பெற்று, சம்சயத்தை நீக்கி, பலம் பெற்று முன்செல்ல வேண்டும். இதற்கு, கீதை அர்ச்சுனனுக்கு அன்று உதவி செய்தது போல், லட்சக்கணக்கான மக்களுக்கு இன்றும் உதவி செய்து வருகிறது.

கீதையில் பகவானின் ஆரம்ப வார்த்தைகளே ஆண்மை ஊட்டுவனவாக அமைந்திருக்கின்றன:

**क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत् त्वय्युपपद्यते ।**
**क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥**

“சோர்வுக்கும், கோழைத்தனத்திற்கும் இடம் கொடுக்காதே. அர்ச்சுன! அது ஆண்மையுள்ள மனிதனுக்கோ, அல்லது வாழ்க்கையில் வெற்றியும் புகழும் பெறுபவனுக்கோ ஏற்றதல்ல. இதை உதறித்தள்ளி வீரனய் எழுவாயாக” என்று கிருஷ்ண பகவான் கூறுகிறர்.

எனவே ஆண்மையும், வீரமும், அளவில்லா ஆற்றலும், சக்தியும்தான் கீதையின் அடிப்படை உபதேசமாகும். மனிதனின் மனத்தில் கோழைத்தனம் உண்டாவதற்குள்ள காரணங்களை அது ஆழ்ந்து ஆராய்ந்து, அவற்றை விலக்க வழி கூறுகிறது. அதுவே மனிதன் பலவீனங்களை நீக்கி, உயர் வாழ்வு பெற்று உய்யும் மார்க்கமாய் இருக்கிறது. இக்காரணத்தினல்தான் அறிஞர்கள் கீதையைப் போற்றி, கற்று, பின்பற்றி வந்திருக்கிறர்கள். அக்காரணத்திற்காகவே அது உலகத்திலுள்ள மற்ற மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது; அதனல் அம் மக்களும் பயன் பெற்று வந்திருக்கின்றனர்.

காந்தி அடிகளுக்கு கீதை தான் தினசரி வாழ்க்கைக்கு வெளிச்சம் கொடுக்கும் அறிவுச் சுடராக அமைந்திருந்தது. ராமநாமம் அவர் நாவில் எப்பொழுதும் இருந்தது போல, கீதை போதித்த லட்சியங்களும் அவர் மனத்தில் எப்பொழுதும் குடிகொண்டிருந்தன. அனுதினமும் காலையிலும் மாலையிலும், லட்சிய மனிதனின் குணதிசயங்களைப் பற்றி அவர் பாராயணம் செய்து வந்த சுலோகங்கள் கீதையின்

இரண்டாவது அதிகாரத்திலிருந்து எடுக்கப்பட்டவை. எனவே அந்த நூலை அவர் ஆழ்ந்து பயின்று, அதைத் தம் மொழியில் மொழி பெயர்ப்பும் செய்ததில் ஆச்சரியம் இல்லை.

இந்தத் தொகுதியில் கீதையைப் பற்றிய காந்தி அடிகளின் கருத்துக்களும், கட்டுரைகளும், பேச்சுக்களும் இருப்பதுடன், காந்தி அடிகளின் மொழி பெயர்ப்புக்கு மகாதேவ தேசாய் எழுதியுள்ள விஸ்தாரமான முன்னுரையும் விளக்கங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைத் தவிர, சங்கர பாஷ்யத்திலிருந்தும், திலகரின் 'கீதா ரகஸ்யத்தி'லிருந்தும், ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மொழிகளிலிருந்தும், திருக்குறளிலிருந்தும் பொருத்தமான குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருப்பது இந்நூலின் விசேட அம்சமாகும்.

காந்தி அடிகளின் வாழ்க்கைக்கு ஊன்றுகோலாக இருந்த இந்த நூலும், அதைப்பற்றிய அவரது கருத்துக்களும், இதைப் பயிலும் அனைவருக்கும் உயிர்ச் சக்தி கொடுக்கும் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை.
15-4-64

தி. சு. அவினாசிலிங்கம்

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

## அனுஸக்தி யோகம்



பகுதி இரண்டு

## உபநிடதங்களின் சாரம்



பகுதி மூன்று

## கீதையின் சுருக்கம்

பகுதி நான்கு

## கிருஷ்ணபகவானின் மகிமை

பகுதி ஐந்து

## ஸ்ரீ மகாதேவ தேசாயின் விளக்கம்

பகுதி ஆறு

## பகவத் கீதை

## பின்சேர்க்கைப் பகுதி

# பகவத் கீதை

[ பாரதப் போரில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுல் அர்ஜுன னுக்கு உபதேசிக்கப்பட்ட பகவத் கீதையை அடிப்படை யாகக் கொண்டே தமது வாழ்க்கை உருவாகியதாக காந்திஜி பல இடங்களிலும் கூறியுள்ளார். அஞ்சாமை, சத்தியம், தன்னலத் தியாகம், அகிம்சை, தோட்டி முதல் தொண்டமான் வரையில் எல்லோரையும் எவ்வித வேற்றுமையுமின்றி சமமாகக் கருதுவது போன்ற குணாதி சயங்களை, கீதையிலிருந்தே தாம் பயிற்சி செய்து கொண்ட தாகவும் அவர் கூறியிருக்கிறார். "கீதை ஜீவசக்தி வாய்ந்த ஒரு வழிகாட்டி. அது ஒரு சத்குருவின் ஸ்தானத்தில் எனக்கு வழிகாட்டியாக இருந்துவருகிறது. அது என் னுடைய காமதேனு. எத்தகைய கஷ்டங்களிலிருந்தும், துன்பங்களிலிருந்தும் விடுதலை பெறுவதற்கான வழியை எனக்குக் காட்ட அது ஒருபோதும் தவறியதில்லை." இவ் விதம் காந்திஜி குறிப்பிட்டிருப்பதுடன், கீதையை அரசி யல், லௌகிக, ஆன்மிக வாழ்க்கை சம்பந்தமான எல்லாப் பிரச்னைகளையும், சந்தேகங்களையும் தீர்க்கவல்ல ஓர் அற்புத மான அகராதி என்றும் சொல்லியிருக்கிறார். அத்தகைய கீதையைப் பற்றி, வேத சாஸ்திரங்களின், உபநிடதங் களின் சாரத்தையே பிழிந்து கொடுத்துள்ள கீதையைப் பற்றி காந்திஜி எழுதிய கட்டுரைகள், நிகழ்த்திய பிரசங் கங்கள், கடிதங்கள் முதலியவை இப் பகுதியிலிருந்து தொடர்ச்சியாகக் கொடுக்கப்பட்டுள்ளன .]

பகுதி ஒன்று

## அனாஸக்தி யோகம்

( இரண்டு ஆண்டுகள் காத்திருந்தபின், அதாவது 1929 ஜூன் 24-ஆம் தேதி, அல்மோராவைச் சேர்ந்த சொஸானியில்தான் நான் என்னுடைய கீதையின் மொழி பெயர்ப்புக்கு குஜராத்தியில் முன் னுரையை எழுதி முடித்தேன். அதன் பிறகுதான் அது முழுவதும் பிரசுரமாயிற்று. ஹிந்தி, வங்காளி, மராத்தி முதலிய பாஷைகளில் அது மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அதை ஆங்கிலத்தில் மொழி

பெயர்க்கவேண்டும் என்று பலரும் இடைவிடாது வற்புறுத்தி வந்தார்கள். எராவ்டா சிறையில் முன்னுரையின் மொழிபெயர்ப்பை* நான் எழுதி முடித்தேன். நான் விடுதலையடைந்ததிலிருந்து அந்த மொழிபெயர்ப்பு நண்பர்களிடம் இருந்து வந்தது. அதை இப்போது வாசகர்களுக்குக் கொடுக்கிறேன். இந்த வாழ்க்கை நூலில் அக்கறை இராதவர்கள், இந்தப் பத்திரிகையில் இதற்கு இடம் கொடுத்திருப்பதற்காக மன்னிப்பார்களாக. இந்தக் காவியத்தில் (கீதையில்) அக்கறையுள்ளவர்களுக்கும், இதைத் தங்களுடைய வாழ்க்கையின் வழிகாட்டியாகக் கருதுவோருக்கும், எனது தாழ்மையான இந்த முயற்சி ஏதோ ஓரளவு உதவியாக இருக்கலாம். —மோ. க. கா.)

# 1

# கீதையின் உபதேசம்

சுவாமி ஆனந்தரையும் மற்றவர்களையும் போன்ற சக ஊழியர்களின் அன்பிற்கு இணங்கவே, நான் எனது 'சத்திய சோதனை'யை எழுதினேன். அது போல, அவர்களுடைய அன்பின் காரணமாகவே கீதையையும் நான் மொழிபெயர்த்துள்ளேன்.

"கீதை முழுவதையும் நீங்கள் மொழி பெயர்த்தால்தான், அதை நாங்கள் வாசித்து கீதோபதேசத்தின் மூலம் தாங்கள் காணும் பொருளை நாங்கள் உணர்ந்து கொள்ள முடியும். நீங்கள் அவசியம் என்று கருதும் குறிப்புகளையும் அதனுடன் சேர்க்க வேண்டும். அங்கே ஒன்றும் இங்கே ஒன்றுமாக சில சுலோகங்களிலிருந்து அகிம்சை முதலிய தத்துவங்களைப் பற்றி நீங்கள் ஊகிக்க முற்படுவது நியாயமானதாக எனக்குத் தோன்றவில்லை" என்று சுவாமி ஆனந்தர் ஒத்துழையாமை இயக்கம் நடந்து கொண்டிருந்த காலத்தில் என்னிடம் கூறினார். அவர் கூறியதன் உண்மையை நான் உணர்ந்தேன். எனவே, எனக்கு நேரம் கிடைக்கும் போது அவரது யோசனையை நிறைவேற்றுவதாகவும் அவரிடம் சொன்னேன்.

அதன் பின் சில நாட்களில் என்னைச் சிறைப்படுத்திவிட்டார்கள். நான் சிறையிலிருந்த காலத்தில், கீதையை இன்னும் அதிகமாகவும் பூரணமாகவும் ஆராய்ச்சி செய்வது எனக்குச் சாத்தியமாயிற்று. லோகமான்ய திலகர் கீதையை குஜராத்தியில் மொழி பெயர்த்துள்ளார். அந்த அரிய நூலை நான் பயபக்தியுடன்

---

* காந்திஜி குறிப்பிட்டுள்ள மொழி பெயர்ப்பு 6-8-1931 'எங் இந்தியா' வில் வெளியாயிற்று. அதிலிருந்தே அம் மொழி பெயர்ப்பு இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது.

வாசித்தேன். அவர் மராத்தியில் எழுதிய கீதையையும், அதன் குஜராத்தி, ஹிந்தி மொழி பெயர்ப்புகளையும் அவர் எனக்கு அன்புடன் அளித்தார். அவர் மராத்தியில் எழுதிய கீதையை வாசிக்க முடியாவிட்டாலும், குஜராத்தி மொழி பெயர்ப்பை யாவது வாசிக்கும்படி அவர் என்னைக் கேட்டிருந்தார். சிறைக்கு வெளியே அதை வாசிக்க என்னால் இயலவில்லை. ஆனால், நான் சிறைபட்ட பொழுது, அவரது குஜராத்தி மொழி பெயர்ப்பை வாசித்தேன். அவ்விதம் வாசித்தது, என் ஆர்வத்தை மேலும் தூண்டியது. எனவே, கீதையைப் பற்றிய மற்றும் பல நூல் களையும் நான் வாசிக்கலானேன்.

2. 'சொர்க்க கீதம்' என்று சர் எட்வின் ஆர்னால்டு செய்யுள் வடிவில் கீதையை மொழிபெயர்த்திருக்கிறார். அதன் மூலம் தான், *1888-89*-இல் கீதையை முதன் முதலாக அறிந்து கொள்ளத் தொடங்கினேன். அதிலிருந்துதான், குஜராத்தி மொழி பெயர்ப்பை வாசிக்க வேண்டும் என்ற பேரவா எனக்கு உண்டா யிற்று. எனவே, என் கைக்கு கீதையின் எத்தனை மொழிபெயர்ப் புகள் கிடைத்தனவோ அவை எல்லாவற்றையும் வாசித்தேன். அப்படி வாசித்தும் கூட, எனது மொழி பெயர்ப்பைப் பொது ஜனங்களிடம் சமர்ப்பிக்கும் உரிமையை நான் பெற முடியவில்லை. மேலும், வடமொழியில் எனக்கு உள்ள அறிவு சொற்பமேயாகும். குஜராத்தியிலும், நான் ஒரு விதத்திலும் பண்டிதன் அல்ல. இந் நிலையில் எனது மொழிபெயர்ப்பை, பொதுமக்களிடம் சமர்ப்பிக் கும் துணிவு எனக்கு எப்படி ஏற்பட முடியும்?

3. என் அறிவுக்கு எட்டிய வரையில், கீதையின் உப தேசத்தை நடைமுறையில் கொண்டுவருவதே எனது முயற்சி யாக இருந்து வருகிறது. என் சகாக்களில் சிலரும் அவ்விதமே முயன்று வருகின்றனர். ஆன்மிகத் துறையில் சந்தேகத்தைத் தீர்க்கும் ஒரு நூலாகவே கீதை எங்களுக்கு இருந்து வருகிறது. அந்த உபதேசத்திற்கு இணங்க, சிறிதும் குற்றம் குறையின்றி அதை நடைமுறையில் அனுசரிக்க நாங்கள் எப்போதுமே தவறி விடுகிறோம் என்பதை நான் அறிந்திருக்கிறேன். நாங்கள் அவ்விஷ யத்தில் தோல்வியடைவதற்குக் காரணம், எங்களுடைய முயற் சிக் குறைவு அல்ல. நாங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் கூட அதில் தோல்வியடைந்துவிடுகிறோம். அந்தத் தோல்விகளுக்கு இடையேயும் நாங்கள் நம்பிக்கையாகிய ஒளிக்கதிர்களைக் காண் பதுபோல் தோன்றுகிறது. இதைத் தொடர்ந்து வரும் மொழி பெயர்ப்பில் கீதோபதேசத்தின் பொருள் அடங்கியிருக்கிறது. இச் சிறுகோஷ்டியினரான நாங்கள் அன்றாட வாழ்க்கையில் அந்த உபதேசத்தை அனுசரிக்கவும் முயற்சித்து வருகிறோம்.

4. மேலும் பெண்கள், வியாபாரிகள், சூத்திரர்கள் எனப்படு வோர் ஆகிய மற்றவர்களுக்கும் உதவியாக இருக்கவேண்டும் என்

பதே இந்த மொழி பெயர்ப்பின் நோக்கமாகும். ஏனெனில், அவர்கள் கீதையை அதன் மூல மொழியில் (வடமொழி) வாசிப்பதற்கான இலக்கிய அறிவோ, நேரமோ அல்லது ஆர்வமோ இராதவர்கள். எனினும், அவர்கள் கீதையின் ஆதரவை நாடவேண்டியவர்களாக இருக்கிறார்கள். குஜராத்தியில் எனக்கு பாண்டித்யம் இரா விட்டாலும் கூட, கீதையில் எனக்குள்ள அறிவை குஜராத்தியர்களுக்கு அவர்களுடைய தாய் மொழியின் மூலம் கற்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். குஜராத்தியர்களிடையே ஆட்சேபகரமான நூல்கள் வெள்ளம் போல் பரவி வரும் இக் காலத்தில், இணையற்ற ஆன்மிக மகத்துவம் வாய்ந்த இந்த நூலைப் பெரும்பாலோர் அறிந்து கொள்ளும்படியாக மொழி பெயர்க்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இதன் மூலம், தூய்மையில்லா நூல்களின் பெருவெள்ளத்தைத் தடுத்து நிறுத்தும் சக்தி அவர்களுக்கு ஏற்படும்.

5. எனது இந்த ஆர்வம் காரணமாக, கீதையின் மற்ற மொழிபெயர்ப்புகளை நான் மதிக்கவில்லை என்று பொருள்கொள்ளக் கூடாது. அவையெல்லாம் அதனதன் சொந்த முறையில் தகுதி வாய்ந்தவையாகவே இருக்கின்றன. ஆனால், கீதையை மொழி பெயர்த்த அவர்கள், கீதைக்குக் கொடுத்துள்ள அர்த்தத்தை தங்கள் சொந்த வாழ்க்கையில் அனுசரித்துக் காட்டியதாகக் கூறவில்லை. ஆனால், என்னுடைய ஆராய்ச்சியின் பின்னணியில், இடைவிடாமல் சென்ற நாற்பது வருடங்களாக என்னுடைய வாழ்க்கையில் நான் கீதோபதேசத்தை அனுசரித்து நடக்க முயற்சித்து வருகிறேன் என்ற ஆதாரம் இருக்கிறது. தங்களுடைய சமய நம்பிக்கைக்கு இணங்க தங்களுடைய நடத்தையை உருவாக்கிக் கொள்ள விரும்பும் குஜராத்தி ஆடவர்கள், பெண் மணிகள் யாவரும், இங்கே கொடுக்கப்பட்டுள்ள மொழி பெயர்ப்பை ஆழ்ந்து வாசித்து, மன பலத்தைத் தேடிக் கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பம்.

6. இந்த மொழிபெயர்ப்பில் எனது சகாக்களும் சேர்ந்து உழைத்திருக்கிறார்கள். வட மொழியில் எனக்கு உள்ள அறிவு மிகவும் சொற்பமானதால், வார்த்தைக்கு வார்த்தை அப்படியே மொழி பெயர்க்கும் விஷயமாக எனக்குள்ள திறமையில் எனக்கு பூரண நம்பிக்கை இல்லை. எனவே அந்த அளவுக்கு, விநோபா, காகா கலேல்கார், மகாதேவ தேசாய், கிஷோர்லால் மஷ்ருவாலா ஆகியோரும் இந்த மொழிபெயர்ப்பை மேற்பார்வையிட்டுள்ளனர்.

## 2

7. இப்போது கீதையின் உபதேசத்தைப் பார்ப்போம்.

8. 1888—89-இல் முதன் முதலாக கீதையைப் பற்றி நான் அறிந்து கொண்ட போதே, அது சரித்திர நூல் அல்ல என்பதை உணர்ந்தேன். வெளிப்பார்வைக்கு அது லௌகிகமான யுத்தமாகத் தோன்றினாலும், மனிதரின் உள்ளங்களில் இடைவிடாது நடந்து வரும் போராட்டத்தையே அது விவரிக்கிறது என்பதையும், உள்ளத்தில் நடக்கும் போராட்டத்தை அதிகக் கவர்ச்சிகரமான முறையில் வர்ணிப்பதற்காக மாத்திரமே லௌகிக யுத்த உருவம் அதற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதையும் நான் தெரிந்து கொண்டேன். முதன் முதலாக ஏற்பட்ட இந்த உணர்வு, மதத்தையும் கீதையையும் நான் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்ய முற்பட்டபோது இன்னும் அதிகமாக வலுவடைந்தது. எல்லோரும் அறிந்த சரித்திர நூல்களைப்போல், மகாபாரதத்தையும் ஒரு சரித்திர நூலாக நான் கருதவில்லை. எனது கருத்துக்கு ஆதரவாக, ஆதி பர்வத்திலேயே அசைக்க முடியாத சாட்சியம் இருக்கிறது. மகாபாரதத்தில் உள்ள முக்கியமான பாத்திரங்களை, மனிதருக்கு மேற்பட்ட அதாவது தெய்விக புருஷர்களாகவோ அல்லது மனிதருக்குக் கீழ்ப்பட்டவர்களாகவோ வியாச முனிவர் வர்ணித்துள்ளார். அவ்வாறு வர்ணித்ததன் மூலம், மகாபாரதம் சாதாரண மன்னர்கள், அவர்களுடைய பிரஜைகள் முதலியோரின் சரித்திரம் என்ற எண்ணத்திற்கே இடம் ஏற்படாமல் செய்துவிட்டார். அதில் விவரிக்கப்பட்டுள்ள நபர்கள் சரித்திரத் தொடர்பு உடையவர்களாக இருக்கலாம். எனினும், மகாபாரதத்தை இயற்றியவர், தரும சம்பந்தமான தமது கொள்கைகள் எல்லோருடைய மனத்திலும் பதியும்படி செய்வதற்காகவே அவர்களை உபயோகித்துள்ளார்.

9. மகாபாரதத்தின் கர்த்தாவான வியாசர், லௌகிக யுத்தத்தின் அவசியத்தை நிரூபிக்கவில்லை. அதற்கு மாறாக, யுத்தத்தினால் யாதொரு பலனும் ஏற்படாது என்பதையே நிரூபித்திருக்கிறார். வியாசர், அந்தப் போரில் வெற்றி பெற்றவர்கள் துக்கத்தினால் கண்ணீர் விடும்படியும், பச்சாத்தாபத்தினால் பரிதவிக்கும்படியும் செய்திருக்கிறார். வெற்றி பெற்றவர்கள் அடைந்த பலன், தொடர்ச்சியான துன்பங்களைத் தவிர வேறெதுவும் இல்லை.

10. வியாசர் எழுதிய இந்த மகத்தான காவியத்தில், கீதை தான் சிகரமாக விளங்குகிறது. அதன் இரண்டாவது அத்தியாயம், லௌகிக யுத்த விதிகளைக் கற்பிக்கவில்லை; அவற்றிற்குப் பதிலாக, குற்றம் குறையற்ற நிறை மனிதனை எப்படி அறிந்து கொள்ளுவது என்பதையே நமக்குக் கூறுகிறது. கீதை கூறும் அப்பழுக்கற்ற நிறை மனிதனின் லட்சணங்களுக்கும் லௌகிக யுத்தத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. யுத்தத்தில் ஈடுபட்டுள்ள கட்சிகளுக்கு இடையே

நிலவ வேண்டிய நடவடிக்கை விதிகளுக்கும், கீதையின் நோக்கத்திற்கும் எள்ளளவும் சம்பந்தமே இல்லை.

*11.* கீதையின் நாயகனான கிருஷ்ணன், குற்றம் குறையற்ற குணங்களின், மகோன்னதமான ஞானத்தின் உருவாகத் திகழ்கிறார். எனினும், கிருஷ்ணனைப் பற்றிய சித்திரம் கற்பனையே. மக்களால் கொண்டாடப்பட்ட கிருஷ்ணன் ஒரு காலத்திலும் வாழ்ந்ததில்லை என்பது அதன் அர்த்தமல்ல. பரிபூரணமானவர் என்பது கற்பனைச் சித்திரமே. கிருஷ்ணன் குற்றம் குறையற்ற நிறைந்த அவதாரம் என்ற கொள்கை பிற்காலத்தில் ஏற்பட்டதாகும்.

*12.* மனித வர்க்கத்திற்கு ஏதாவது மகத்தான தொண்டு புரிந்த ஒருவரை அவதார புருஷர் என்று ஹிந்து சமயத்தில் கூறுகிறோம். உடல் உள்ள எல்லா ஜீவனும் உண்மையில் கடவுளின் அவதாரம்தான். எனினும், உயிருள்ள ஒவ்வொரு ஜீவனும் கடவுளின் அவதாரம் என்று சாதாரணமாகக் கருதப்படுவதில்லை. ஒருவர் தமது தலைமுறையில் விசேஷமான புண்ணிய புருஷராக இருந்தால், அத்தகையோரை எதிர்கால சந்ததிகள் வணங்கி அஞ்சலி செய்கின்றனர். இதில் யாதொரு தவறும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவ்விதம் செய்வதால், கடவுளின் மகிமை சிறிதும் குன்றுவதில்லை. அது சத்தியத்திற்குப் புறம்பானதும் அல்ல. 'ஆதாம்* கடவுள் அல்ல, ஆனால் அவன் தெய்வ அம்சத்தின் ஒரு பொறியே' என்று உருதுவில் ஒரு பழமொழி உண்டு. எல்லோரையும் விட யார் மிகுந்த தரும நெறியுடன் நடந்து கொள்ளுகிறாரோ, அவரிடம் விசேஷமான தெய்விக ஒளி இருக்கிறது எனலாம். இத்தகைய சிந்தனைப் போக்கிற்கு இணங்கவே, ஹிந்து சமயத்தில் கிருஷ்ணன் குற்றம் குறையற்ற பூரண அவதாரமாகத் திகழ்கிறார்.

*13.* அவதாரத்தில் உள்ள இந்த நம்பிக்கையே, மனிதனின் மகோன்னதமான ஆன்மிக லட்சியத்திற்கு ஓர் உதாரணமாகத் திகழ்கிறது. மனிதன் கடவுளுடன் ஐக்கியபாவத்தை அடையும் வரையில், அவனுக்கு ஆன்ம சாந்தி ஏற்படுவதில்லை. இந்த நிலையை அடைவதற்கான முயற்சியே எல்லாவற்றையும் விட உயர்ந்தது ; அது ஒன்றுதான் செய்வதற்கு உகந்தது. தன்னைத் தானே உணர்ந்து கொள்ளுதல் என்பதும் இதுதான். மற்ற எல்லா வேத நூல்களையும்போல் கீதையிலும், இந்த நிலையை அடைவதற்கான வழியே விவரிக்கப்பட்டுளது. ஆனால், அந்த சித்தாந்தத்தை ஸ்தாபிப்பதற்காக கீதையின் ஆசிரியர் அதை எழுதவில்லை என்பது நிச்சயம்தான். தன்னைத்தானே அறிந்து கொள்வதற்கான மிகச் சிறந்த வழியைக் காட்டுவதே கீதையின் நோக்கம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஹிந்து சமய நூல்களில் இங்கும் அங்கும், தெளிவாகவும் பரவலாகவும் காணப்படும்

---

* பைபிளில் உள்ள ஆதியாகமத்தின்படி கடவுள் ஆதாமைச் சிருஷ்டித்தார். அவரால் சிருஷ்டிக்கப்பட்ட முதல் மனிதனே ஆதாம் என்று பைபிள் கூறுகிறது.

விஷயமே, கீதையில் ஐயம் திரிபுக்கு இடமின்றி மிகமிகத் தெளிவாகவும் திரும்பத் திரும்பவும் விவரிக்கப்பட்டிருக்கிறது.

**14. இணையற்ற அந்த உபாயம்தான், நாம் செய்யும் நற்பணிகளின் பலன்களைத் துறந்து விடுவதாகும்.**

*15.* இந்த லட்சியத்தை மையமாகக் கொண்டே கீதை உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்தத் துறவுதான் நடுவில் உள்ள சூரியனைப் போன்றது. பக்தி, அறிவு முதலிய மற்றவையெல்லாம் கிரகங்களைப்போல் அதைச் சுற்றிவருகின்றன. இந்த உடலை ஒரு சிறைக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. உடல் எங்கே இருக்கிறதோ, அங்கே செயலும் இருக்கவேண்டும். உடல் எடுத்த ஒருவர் கூட கர்மாவிலிருந்து அதாவது உழைப்பிலிருந்து தவிர்க்கப்பட்டிருக்கவில்லை. எனினும், இந்த உடலை கடவுளின் கோவிலாகச் செய்வதன்மூலம், மனிதன் விடுதலை பெற முடியும் என்று எல்லா மதங்களும் பறைசாற்றுகின்றன. ஒவ்வொரு செயலும், அது எவ்வளவு அற்பமானதாயினும் களங்கம் உள்ளதுதான். இந்த உடலை, கடவுளின் ஆலயமாக எவ்வாறு செய்ய முடியும்? வேறு விதமாகக் கூறுவதாயின், கர்மத்திலிருந்து அதாவது பாவமாகிய களங்கத்திலிருந்து ஒருவன் எப்படி விடுதலை பெற முடியும்? இந்தக் கேள்விக்கு கீதை சந்தேகத்துக்கு இடமின்றி திட்டவட்டமாகப் பின்வருமாறு பதில் அளித்திருக்கிறது:

"எவ்வித ஆசையும் இல்லாத நடவடிக்கையால், செய்த காரியங்களின் பலன்களைத் துறப்பதால், எல்லா நடவடிக்கைகளையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்வதால், அதாவது உடலையும் ஆன்மாவையும் அவரிடம் அர்ப்பணம் செய்து முற்றிலும் சரண் அடைவதால், மனிதன் பாவங்களிலிருந்து விடுதலை பெற முடியும்."

*16.* ஆசையின்மையோ அல்லது துறவோ, அதைப்பற்றி வாயளவில் பேசுவதால் வந்துவிடாது. அறிவின் திறனாலும் அதைப் பெற்றுவிட முடியாது. இடைவிடாது உள்ளத்தைத் துருவிப் பார்ப்பதால் மாத்திரமே அந்த நிலையை அடைய முடியும். துறவு நிலையை அடைவதற்கு நேரான ஞானம் அவசியம். கற்றறிஞர்களான பண்டிதர்கள் ஒருவித ஞானத்தைப் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் வேதங்களை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கலாம். அப்படியிருந்தும் அவர்கள் சிற்றின்ப விஷயங்களில் ஆழ்ந்தவர்களாக இருக்கலாம். ஞானம், தான்தோன்றித்தனமாகப் போய்விடக் கூடாது என்பதற்காகவே, ஞானத்துடன் பக்தியும் சேர்ந்திருக்க வேண்டும் என்று கீதையின் ஆசிரியர் வற்புறுத்தி, பக்தியுடன் சேர்ந்த ஞானத்திற்கு முதல் ஸ்தானம் கொடுத்துள்ளார். பக்தியில்லாத ஞானத்தினால் யாதொரு பலனும் ஏற்படாது. அதனால்தான், "பக்தியுடன் இரு; பின்னர் ஞானம் தானாக வரும்" என்று கீதை கூறுகிறது. இந்த பக்தி, வெறும் வாயளவில் தோத்திரம் செய்வதல்ல, அது

மரணத்துடன் மற்போர் செய்வதாகும். அதனால்தான், கீதை விவரிக்கும் பக்தனின் குணங்கள், முற்றும் துறந்த முனிவரின் குணங்களுக்கு ஒப்பாக இருக்கின்றன.

*17.* கீதை கோரும் பக்தி, இளகிய மனத்திலிருந்து எழும் உணர்ச்சிப் பெருக்கல்ல. அது மூட பக்தியும் அல்ல என்பது நிச்சயம். கீதை விவரிக்கும் பக்திக்கும், வெளிப் பகட்டுகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. ஒரு பக்தர் தமது விருப்பம்போல் ஜபமாலைகளையோ, திலகம் போன்ற சின்னங்களையோ உபயோகிக்கலாம்; கடவுளுக்கு நைவேத்யங்கள் செய்யலாம். ஆனால், அவையெல்லாம் அவரது பக்தியைக் காட்டுவதாகா. ஒரு பக்தன் யார் மீதும் பொறாமை கொள்ளக்கூடாது; இரக்கமே உருவானவனாக இருக்க வேண்டும்; அவன் இறுமாப்பும் தன்னலமும் அற்றவனாக இருக்க வேண்டும்; குளிரையும் உஷ்ணத்தையும், சுகத்தையும் துக்கத்தையும் அவன் சமமாகக் கருத வேண்டும்; எப்போதும் மன்னிக்கும் சுபாவம் உள்ளவனாக இருக்க வேண்டும்; போதுமென்ற மனம் உடையவனாக இருக்க வேண்டும்; தான் செய்யும் தீர்மானங்களை உறுதியுடன் நிறைவேற்ற வேண்டும்; தன்னையே கடவுளிடம் அர்ப்பணம் செய்து கொண்டவனாக இருக்க வேண்டும்; அவனால் யாருக்கும் பீதி ஏற்படக் கூடாது; அவனும் எவரையும் கண்டு அஞ்சக் கூடாது; ஆனந்தம், துக்கம், பயம் ஆகியவற்றிலிருந்து அவன் விடுபட்டவனாக இருக்க வேண்டும். அவன் தூய்மையானவனாகவும், நற்பணிகளைச் செய்யும் திறன் பெற்றவனாகவும் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அப்பணிகளின் மூலம் ஏற்படக்கூடிய பலாபலன்களைப் பொருட்படுத்தக் கூடாது. நற் பலனையோ அல்லது தீய பலனையோ அவன் துறந்துவிட வேண்டும்; நண்பனையும் விரோதியையும் அவன் சமமாகக் கருத வேண்டும். தனக்கு பிறர் மரியாதை செய்தாலும் அவமரியாதை செய்தாலும், தன்னை பிறர் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும், அவன் எல்லாவற்றையும் சமமாகக் கருத வேண்டும்; அவன் மௌனத்தையும் தனிமையையும் விரும்ப வேண்டும்; ஒழுங்கான, உறுதியான அறிவு படைத்தவனாக இருக்க வேண்டும். இத்தனை லட்சணங்களும் உடையவன்தான் பக்தனாவான். உலக விஷயங்களில் பற்றுதல் உள்ளவனிடம் அத்தகைய பக்தி இருக்க முடியாது. பக்திக்கும் பற்றுதலுக்கும் பொருந்தாது.

*18.* இவ்விதமாக, தன்னைத் தான் உணர்ந்து கொண்டவனே உண்மையான பக்தன் என்பதை நாம் பார்க்கிறோம். தன்னைத் தான் அறிந்து கொள்ளுதல் என்பது, ஏதோ தனித்து இலங்கும் வேறு விஷயம் அல்ல. ஒரு ரூபாயைக் கொண்டு விஷமோ அல்லது அமுதமோ வாங்க முடியும். ஆனால், ஞானத்தினாலோ அல்லது பக்தியினாலோ நாம் மோட்சத்தையோ அல்லது அடிமை நிலையையோ அடைந்துவிட முடியாது. இவை பண்டமாற்று சாதனங்கள் அல்ல. இவ்விஷயத்தில் லட்சியமும் அதை அடைவதற்கான சாதனங்களும் ஒன்றே அல்லவாயினும், அவை அநேக

மாக ஒன்றுதான். சாதனங்களின் இறுதி எல்லையே மோட்ச மாகும். கீதை கூறும் மோட்சம் அப்பழுக்கற்ற சாந்தியே.

19. ஆனல், அத்தகைய ஞானமும் பக்தியும் உண்மையான வையாக இருக்க வேண்டுமாயின், கர்ம பலன்களைத் துறத்தல் என்ற சோதனையில் அவை தேற வேண்டும். சரியா, தவரு என்பதை நிர்ணயிக்கும் வெறும் அறிவு, ஒருவனை மோட்சத் திற்குத் தகுதியானவனுகச் செய்துவிடாது. சாதாரணமான கல்வி யறிவுள்ள ஒருவனைக்கூட பொது மக்கள், எல்லாம் அறிந்த பண்டிதன் என்று எண்ணுகிருர்கள். எந்த வேலையும் செய்ய அவனுக்குக் கையாலாவதில்லை. ஒரு சிறிய லோட்டாவைக் கையில் எடுப்பது கூட அடிமைத்தனம் என்று அவனுக்குத் தோன்றுகிறது. எவ்விதத் தொண்டும், கர்மாவும் செய்யாமல் இருப்பதே ஞானத்தின் அறிகுறி எனில், லோட்டாவைத் தூக் குவது போன்ற அற்பமான லௌகிக காரியங்களுக்கு இடம் இல்லை அல்லவா!

20. அல்லது பக்தியை எடுத்துக்கொள்ளுவோம். இளகிய மனமே பக்தி என்ற எண்ணம் பொதுவாக இருந்துவருகிறது. அதாவது, ஜபமாலையை உருட்டுவதும், மாலையை வைத்துக் கொண்டு ஜபம் செய்வதற்கு இடையூறு ஏற்படக் கூடாது என்ப தற்காக, அன்புடன் தொண்டு எதுவும் செய்வதை வெறுப்பதுமே பக்தி என்று கருதப்படுகிறது. அத்தகைய பக்தியுள்ளவன் சாப்பிடும் போதும், தண்ணீர் அருந்தும் போதும், அவைபோன்ற வேறு காரியங்களைச் செய்யும் போதும் ஜபமாலையை அப்பால் வைத்துவிடுகிருன். ஆனல், அவன் ஜபமாலையை அப்பால் வைத்துவிட்டு, உணவுக்காக மாவரைப்பது, அல்லது நோயாளி களுக்குத் தொண்டு செய்வது போன்ற காரியங்களில் ஒருகாலத் திலும் ஈடுபடுவதில்லை. அத்தகைய தொண்டுகள் ஜபமாலையை உருட்டுவதற்கு இடையூருக இருக்கின்றன என்றே அவன் கருது கிருன்!

21. ஆனல், கீதை இவ்வாறு கூறுகிறது: "கர்மாவைச் செய்யாமல் எவனும் தனது லட்சியமான மோட்சத்தை அடைந்த தில்லை. ஜனகரைப் போன்றவர்கள் கூட, கர்மாவைச் செய்தே மோட்சத்தை அடைந்தார்கள். நான்கூட சோம்பேறித் தனத் தினல் யாதொரு வேலையும் செய்யாமல் இருந்துவிட்டால், உலகம் அழிந்துவிடும். அப்படியிருக்க, சாதாரண மக்கள் தங்களுடைய தொழில்களைச் செய்யவேண்டியது எவ்வளவு அதிக அவசிய மானது?"

22. ஒருபுறம், எல்லாச் செயல்களும் பந்தத்திற்குக் காரண மாகின்றன என்பதில் சந்தேகமில்லை. மற்ெருருபுறம், எல்லா ஜீவராசிகளும், விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் ஏதாவது செயல் புரிந்தவண்ணமாக இருக்கின்றன என்பதும் உண்மை யாகும். இங்கே செயல் என்பதில், மனம் அல்லது உடல் சம்பந்

தமான எல்லா நடவடிக்கைகளும் அடங்கியிருக்கின்றன. அப்படியானல், ஏதாவது செயல் புரிந்தவண்ணம் இருக்கும் ஒருவன், செயல்களின் பந்தத்திலிருந்து எப்படி விடுதலே பெற முடியும்? எனக்குத் தெரிந்தவரையில் இந்தப் பிரச்னையை கீதை தீர்த்துள்ள விதம் அற்புதமானது. கீதை கூறுகிறது: "உனக்கு இடப்பட்டுள்ள வேலையைச் செய், ஆனல் அதன் பலனைத் துறந்துவிடு. பற்றுதலின்றி கடமையைச் செய். எத்தகைய வெகுமதிக்கும் ஆசைப்படாமல் செயல் புரி."

கீதையின் இந்த உபதேசம் மிகத் தெளிவாக இருக்கிறது. கடமையை விட்டவன் வீழ்ச்சியடைகிறான். கடமையைச் செய்து கொண்டு அதன் பலனை விட்டவன் உயர்ந்த நிலையை அடைகிறான். துறப்பது என்பதற்கு, பலனைப் பொருட்படுத்தாமல் இருப்பது என்று அர்த்தமல்ல. செயல் புரியும் ஒருவன் ஒவ்வொரு செயலின் மூலமும் எதிர்பார்க்கும் பலனையும், அதை அடைவதற்கான முறைகளையும், திறமையையும் அறிந்திருக்க வேண்டும். அவ்விதம் அறிந்த ஒருவன் பலனில் ஆசை வைக்காமல், அதே சமயம் முன்னுள்ள கடமையைச் சரிவர நிறைவேற்றுவதில் தனது முழு கவனத்தையும் செலுத்தினல், அவனே தனது செயலின் பலன்களைத் தியாகம் செய்தவனாகிறான்.

23. கர்மத்தின் பலனைத் துறப்பது எனில், அவ்விதம் தியாகம் செய்பவனுக்குப் பலனே கிடைக்காது என்று அர்த்தம் செய்துகொள்ளக்கூடாது. அவ்வாறு அர்த்தம் செய்துகொள்ள கீதை இடம் கொடுக்கவில்லை. துறவு என்பதற்கு,பலனில் சிறிதும் ஆசையில்லாமல் இருப்பது என்றே பொருள். உண்மையில் யார் பலனைத் துறக்கிறானே, அவன் ஆயிரம் மடங்கு அதிகமாக பலனைப் பெறுகிறான். கீதையில் குறிப்பிட்டுள்ள துறவு, நம்பிக்கைக்கு சிறந்த சோதனையாகும். எப்போதும் பலனைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருப்பவன், தன் கடமையைச் செய்வதற்கான உறுதியை அடிக்கடி இழந்துவிடுகிறான். அவன் பின்னர் பொறுமையிழந்து கோபத்துக்கு இடம் கொடுப்பதுடன், தகுதியற்ற காரியங்களையும் செய்யத் தொடங்குகிறான். அடிக்கடி அவன் ஒரு காரியத்தை விட்டுவிட்டு மற்றொன்றைச் செய்வதும், அதையும் விட்டு விட்டு வேறொன்றைச் செய்வதுமாக நிலையற்றவனாகிவிடுகிறான். அவன் எதிலும், உறுதியுடனும் நம்பிக்கையுடனும் இருப்பதில்லை. பலன்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவன், புலன்களுக்கு அடிமைப்பட்ட ஒரு மனிதனைப் போல் ஆகிவிடுகிறான். அவன் எப்போதும் நிலை குலைந்து, நியாயம்-அநியாயம், தருமம்-அதருமம் என்று பாகுபாடு செய்யும் தன்மையையே இழந்துவிடுகிறான். பின்னர் அவனுக்கு எல்லாம் நியாயமாகத் தோன்றுகின்றன. எனவே, அவன் தனது லட்சியத்தை அடைவதற்காக நியாயமான முறைகளையும் அநியாயமான முறைகளையும் கூட கைக்கொள்ள முற்பட்டுவிடுகிறான்.

24. பலனில் ஆசை வைப்பதால் ஏற்படும் விபரீதங்களைக் கண்டே கீதையின் ஆசிரியர், பலனைத் துறக்கும் வழியை எல்லோருக்கும் திருப்தியளிக்கும் வகையில் உலகத்தின் முன் வைத்தார். ஸ்தூல நன்மைகள் எப்போதும் மத விரோதமானவை என்ற நம்பிக்கை பொதுவாக நிலவிவருகிறது. 'வியாபாரத்திலும், அது போன்ற மற்ற விஷயங்களிலும் தருமமாக நடந்து கொள்ளமுடியாது. அத்தகைய துறைகளில் மதத்திற்கோ, தருமத்திற்கோ இடமில்லை. மோட்சம் அடைவதற்கு மாத்திரமே தருமம் ஒரு சாதனமாகும்' என்று உலகாயதமான மனப்போக்கு உடைய பலரும் கூறுவதை நாம் கேட்கிறோம். இந்த மயக்கத்தை கீதையின் ஆசிரியர் அகற்றிவிட்டார் என்பதே எனது அபிப்பிராயமாகும். மோட்சத்திற்கும் லௌகிக விவகாரங்களுக்கும் இடையே அவர் எல்லைக் கோடு எதுவும் கிழிக்கவில்லை. அதற்கு மாறாக, நமது லௌகிக விவகாரங்களையும் தருமமே ஆட்சி புரிய வேண்டும் என்பதைக் காட்டியுள்ளார். அன்றாட வாழ்க்கையில் எதை நடை முறையில் அனுசரிக்க முடியவில்லையோ, அதை தருமம் என்று கூற முடியாது என்றே கீதை நமக்கு உபதேசிக்கின்றது. கீதையின் உபதேசத்திற்கிணங்க, பற்றுதலின்றி செய்ய முடியாத எல்லா நடவடிக்கைகளையும் தவிர்க்க வேண்டும். பொன்னை இந்த விதி, பல படுகுழிகளிலிருந்தும் மனித வர்க்கத்தைக் காப்பாற்றுகிறது. இந்த வியாக்கியானத்தின்படி கொலை, பொய், விபசாரம் ஆகியவற்றை பாவச் செயல்களாகக் கருதி தவிர்க்க வேண்டும். அப்போதுதான் மனிதனின் வாழ்க்கை எளிதாகிறது. இந்த எளிமையிலிருந்தே சாந்தி பிறக்கின்றது.

25. இந்த ரீதியில் ஆலோசிப்போமாயின், ஒருவன் தனது வாழ்க்கையில் கீதையின் மூலாதாரமான உபதேசத்தை அனுசரிக்க வேண்டுமானால், அவன் சத்தியத்தையும் அகிம்சையையும் பின்பற்றக்கடமைப்பட்டிருக்கிறான். பலனில் ஆசை இல்லையெனில், பொய் கூறுவதிலோ அல்லது இம்சை செய்வதிலோ ஆசை இருப்பதற்கில்லை. பொய் கூறுவதற்கோ அல்லது பலாத்காரம் செய்வதற்கோ காரணமான எந்தச் சம்பவத்தை வேண்டுமாயினும் எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு குறிப்பிட்ட லட்சியத்தை அடைய வேண்டும் என்ற ஆசையே அதற்குக் காரணமாக இருக்கும். எனினும், அகிம்சைக் கொள்கையை நிலைநிறுத்துவதற்காக கீதை எழுதப்படவில்லை என்பதை ஆட்சேபணையின்றி ஒப்புக்கொள்ளலாம். கீதை தோன்றிய காலத்திற்கு முன்பு கூட அகிம்சை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட, மூலாதாரமான ஒரு கடமையாக இருந்தது. பலனைத் துறக்க வேண்டும் என்று உபதேசிப்பதே கீதையின் நோக்கம். இது, கீதையின் இரண்டாவது அத்தியாயத்திலேயே தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

26. கீதையில் அகிம்சைக்கு இடம் இருந்தாலும் சரி, அல்லது பற்றின்மைத் தத்துவத்தில் அகிம்சையும் அடங்கியிருக்கிறது என்றாலும் சரி, கீதையின் ஆசிரியர் யுத்தத்தை ஏன் ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்ள வேண்டும்? அதற்குக் கார

ணம் என்னவெனில், கீதை எழுதப்பட்ட போது அகிம்சையில் மக்களுக்கு நம்பிக்கை இருந்தாலும், யுத்தத்திற்கு யாதொரு தடையும் இருக்கவில்லை. அதுமாத்திரமல்ல, யுத்தத்திற்கும் அகிம்சைக்கும் முரண்பாடு இருப்பதாகவும் யாரும் கருதவில்லை.

27. பலனைத் தியாகம் செய்வதில் உள்ள நுணுக்கங்களை நிர்ணயிக்க முற்படும்போது, கீதை ஆசிரியரின் மனத்தையோ, அகிம்சை போன்ற தத்துவங்களையொட்டி அவர் வகுத்துள்ள எல்லைகளையோ நாம் துருவிப் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை. ஒரு கவி, குறிப்பிட்ட ஓர் உண்மையை உலகிற்கு எடுத்துக் கூறுகிறார் என்றால், அதனால் ஏற்படக் கூடிய விளைவுகளை அவர் அறிந்திருக்க வேண்டும் அல்லது ஆராய்ச்சி செய்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை; ஆராய்ச்சி செய்திருந்தாலும், அவற்றை அவர் எப்போதும் தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றல் பெற்றவராக இருக்கவேண்டும் என்ற அவசியமும் இல்லை. அதில் தான் கவியின் பெருமையும், அவர் இயற்றிய கவிதையின் பெருமையும் அடங்கியிருக்கின்றன. ஒரு கவி உபயோகிக்கும் சொற்களின் பொருளுக்கு எல்லையே இல்லை. மனிதனைப் போல், மகான்களின் வரலாற்றை நாம் பரிசீலனை செய்வோமாயின், முக்கியமான சொற்களின் அர்த்தம் மாறியிருப்பதையோ அல்லது விரிந்திருப்பதையோ காணலாம். கீதையைப் பொறுத்தவரையில் இது உண்மையாகும். வழக்கத்தில் உள்ள சில சொற்களின் பொருட்களை கீதையின் ஆசிரியரே விரிவு படுத்தியிருக்கிறார். மேலெழுந்தவாரியாகப் பரிசீலனை செய்தால் கூட, இதை நாம் கண்டுகொள்ள முடியும்.

கீதையின் காலத்திற்கு முன், யக்ஞங்களில் மிருகங்களைப் பலி கொடுப்பது அனுமதிக்கப்பட்டு இருந்திருக்கலாம். ஆனால் கீதையில் கூறப்படும் யக்ஞங்களில் அத்தகைய அறிகுறியே இல்லை. இடைவிடாது மனத்தை கடவுளிடம் லயிக்கும்படி செய்வதே, யக்ஞங்களுக் கெல்லாம் ராஜா என்று கீதையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. முக்கியமாக யக்ஞம் என்பதன் பொருள் உடல் உழைப்பினால் தொண்டு செய்வதே என்று கீதையின் மூன்றாம் அத்தியாயம் கூறுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் மூன்றாவது, நான்காவது அத்தியாயங்களைச் சேர்த்து வாசிப்போமாயின், யக்ஞம் என்பதற்கு வேறு அர்த்தங்களும் உண்டு என்பதையும், எனினும் மிருக பலி ஒரு காலத்திலும் அந்தச் சொல்லின் பொருளாக இருந்ததில்லை என்பதையும் நாம் தெரிந்து கொள்ளலாம். அது போலவே 'சந்நியாசம்' என்ற சொல்லின் பொருளும் கீதையில் மாறுதலை அடைந்திருக்கிறது. கீதையில் உள்ள 'சந்நியாசம்' என்ற சொல்லுக்கு எல்லா அலுவல்களையும், சகல கர்மங்களையும் முற்றிலும் விட்டுவிடவேண்டும் என்பது பொருள் அல்ல. கீதையில் குறிப்பிடப்பட்டுள்ள சந்நியாசி எல்லாக் கர்மங்களையும் செய்து கொண்டே ஒன்றும் செய்யாத் துறவியாக இருக்கிறார். இவ்விதமாக, கீதையின் ஆசிரியர் சொற்களின் பொருளை விரிவாக்கி, அம்

முறையைப் பின்பற்றும்படி நமக்குக் கற்பித்திருக்கிருர். கீதையில் உள்ள சொற்களின் மேலெழுந்தவாரியான பொருளுக்கிணங்க, யுத்தத்திற்கும் பலனைத் துறப்பதற்கும் முரண்பாடு எதுவும் இல்லை என்று கூறுவது சாத்தியமே. எனினும், கீதையின் உபதேசத்தை என் சொந்த வாழ்க்கையில் பூரணமாக அனுசரிக்க, சென்ற நாற்பது ஆண்டுகளாக நான் இடைவிடாது முயற்சித்து வந்துள்ளேன். அதன் பலனுக, நான் ஒரு விஷயத்தை மிகப் பணிவுடன் கூற வேண்டியவனுக இருக்கிறேன். அதாவது, எல்லாவிதத்திலும் பூரண அகிம்சையை அனுசரித்தாலன்றி, அப்பழுக்கற்ற துறவு நிலையை அடைவது முடியாத காரியம் என்பதே.

28. கீதை, சூத்திரங்கள் அடங்கிய ஒரு நூல் அல்ல. அது கவிதை உருவான மகத்தான தரும நூலாகும். நீங்கள் அதை எவ்வளவுக்கு ஆழ்ந்து பரிசீலனை செய்கிறீர்களோ அவ்வளவுக்கு, அதிலிருந்து அற்புதமான அர்த்தங்களை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அது சாதாரண மக்களுக்காக இயற்றப்பட்டுள்ளது. சில விஷயங்கள் திரும்பத் திரும்பக் கூறப்பட்டிருந்தாலும், அவை மகிழ்ச்சியளிப்பவையாகவே இருக்கின்றன. காலம் செல்லச் செல்ல, அதில் உள்ள முக்கியமான வார்த்தைகள் புதிய, விரிவான அர்த்தங்களுடன் திகழ்கின்றன, எனினும், ஒரு காலத்திலும் அதனுடைய மூலாதாரமான கொள்கையில் எவ்வித மாறுதலும் ஏற்படாது. அதை ஆராய்ச்சி செய்வோர், அந்தப் பொக்கிஷத்திலிருந்து தாம் விரும்பும் அர்த்தத்தைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம். அதன் பலனுக, அவர் தமது வாழ்க்கையில் கீதையின் மூலாதாரமான உபதேசத்தை அனுசரிப்பது சாத்தியமாகும்.

29. கீதை, செய்ய வேண்டிய காரியங்களும் செய்யத் தகாத காரியங்களும் அடங்கிய ஒரு நூல் அல்ல. ஒருவருக்கு நியாயமாக இருப்பது, மற்ருெருவருக்கு நியாயமற்றதாக இருக்கலாம். ஒரு காலத்தில் அல்லது ஓரிடத்தில் அனுமதிக்கத் தக்கது, மற்ருெரு காலத்தில் அல்லது மற்ருேரிடத்தில் அனுமதிக்கத் தகாததாக இருக்கலாம்; ஆனுல், பலனில் ஆசை வைக்கக் கூடாது என்பது, எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் அனுசரிக்க வேண்டியதாகும். பற்றின்மை, எக்காலத்திலும் அனுசரித்துத் தீரவேண்டிய கொள்கையாக இருக்கிறது.

30. ஞானத்தின் சிறப்பைப் பற்றி கீதை புகழ் பாடியிருக்கிறது. ஆனுல், அந்த ஞானம் வெறும் அறிவுக்கு அப்பாற்பட்டது. அது மனப் பூர்வமாகப் படிக்க வேண்டியதாகும்; மனத்தினுல் அறிந்துகொள்ள வேண்டியதாகும். எனவே, நம்பிக்கையில்லாதவர்களுக்கு கீதையினுல் பலனில்லை.

கிருஷ்ணன் பின்வருமாறு கூறியதாக கீதையின் ஆசிரியர் சொல்லுகிருர்:

"தவம் இல்லாதவனுக்கும், பக்தியற்றவனுக்கும், இந்த உபதேசத்தைக் கேட்கும் ஆர்வம் இராதவனுக்கும், என்னை மறுப்பவனுக்கும் இந்தப் பொக்கிஷத்தை எடுத்துக் கூருதே. அதற்கு மாருக, இந்த அரிய பொக்கிஷத்தை எனது பக்தர்களுக்கு யார் போதிக்கிருர்களோ, அவர்கள் அந்தத் தொண்டின் பலனுக நிச்சயமாக என்னை வந்து அடைவார்கள். துவேஷமின்றியும், நம்பிக்கையுடனும் இந்த உபதேசத்தில் மனம் லயிப்பவர்கள் விடுதலை பெற்று, உண்மையான புண்யம் செய்தவர்கள் மரணத்திற்குப் பிறகு போகும் இடத்திற்குச் சென்று வாழ்வார்கள்."

—'எங் இந்தியா' – 6—8—1931

பகுதி இரண்டு

# உபநிடதங்களின் சாரம்

## 1

## கீதை அன்னை

காந்திஜி காசி நகருக்கு விஜயம் செய்த போது, காசி விசுவ வித்யாலயத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு கீதையைப் பற்றி சில வார்த்தைகள் கூற வேண்டும் என்று ஆச்சாரிய ஆனந்த சங்கர் துருவா அவரைக் கேட்டுக் கொண்டார். அங்கே நடந்த மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி பேசியதாவது:

காசி விசுவ வித்யாலயத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு கீதையைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல வேண்டும் என்று ஆச்சாரிய ஆனந்த சங்கர் துருவா என்னிடம் கூறினர். அவரது அழைப்பை நான் தயக்கத்துடனேயே ஒப்புக்கொண்டேன். என்னைப் போன்ற சாதாரணமான ஒரு மனிதனுக்கு, ஆச்சாரிய ஆனந்த சங்கரைப் போன்ற மகா பண்டிதரின் முன்னிலையில், கீதையைப் போன்ற மாபெரும் விஷயத்தைப் பற்றிப் பேச என்ன உரிமை இருக்கிறது? அவரைப் போன்ற சிறந்த பாண்டித்தியம் எனக்கு இல்லை. பண்டித மாளவியாஜியைப் போல் புராதனமான நமது மத நூல்களை நான் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தவனும் அல்ல. சர்தார் வல்லபாய் பட்டேல், அவருக்கே உரித்தான முறையில் இன்று காலை என்னிடம் ஒரு விஷயம் சொன்னர். என்னையும் அவரையும் (பட்டேலையும்) போன்ற தோட்டிகளுக்கும், விவசாயிகளுக்கும், நெசவாளர்களுக்கும், காசியைப் போன்ற பண்டிதர்கள் நிறைந்த ஒரு நகரில், மாளவியாஜியையும், ஆச்சாரிய துருவாவையும் போன்ற பண்டித சிரேஷ்டர்களின் முன்னிலையில், பேசுவதற்கு சிறிதாவது உரிமை உண்டா என்றே அவர் என்னைக் கேட்டார். ஒரு விதத்தில் அவர் அவ்விதம் கேட்டது நியாயமேயாகும். ஆனல், அறிவில் தேர்ச்சி பெற்ற பண்டிதன் என்று பாசாங்கு செய்துகொண்டு இங்கே நான் வரவில்லை; என்னையும் சர்தாரையும் போன்ற சாதாரணமானவர்களின் மனத்தில் கீதை எத்தகைய உணர்ச்சிகளை உண்டாக்கியிருக்கிறது என்று கூறவே இங்கே வந்திருக்கிறேன்.

சர்தார் சிறையில் இருந்த போது கீதை அவரது இருதயத்தில் எத்தகைய ஆழ்ந்த உணர்ச்சியை உண்டாக்கியது என்பதை நீங்கள் எள்ளளவும் அறிந்து கொண்டிருக்க முடியாது. எராவ்டா

சிறையில் சர்தார் பட்டேலுக்கு, உணவையும் தண்ணீரையும் காட்டிலும் அதிக பலத்தையும் போஷாக்கையும் கொடுத்தது கீதைதான். இந்த உண்மையை நானே நேரில் கண்டேன். கீதையை அதன் மூலமொழியில் வாசிப்பதற்காக சர்தார் சமஸ்கிருதம் கற்றுக் கொள்ள முனைந்தார். அதற்காக அவர், பண்டித சதாவலேகர் எழுதிய சமஸ்கிருத போதனை நூலை வாசிக்கலானார். அதைக் கற்கத் துவங்கியபின், அந்த நூல் அவரது கையை விட்டுப் பிரியவே இல்லை. காலையிலிருந்து இரவு வரையில் அந்தப் புத்தகமே அவரது கவனம் முழுவதையும் ஈர்த்தது. வேறு வேலை எதுவும் இராததால், அதில் அவர் முழு கவனத்தையும் செலுத்தியதாக நீங்கள் கருதலாம். ஆனால், அது அப்படியல்ல. ஆழ்ந்த சிந்தனையின் பலனாகவே அவர் அதை வாசிக்கலானார். 'கிறிஸ்தவர்களுக்கு பைபிள் எப்படியோ, அல்லது முஸ்லிம்களுக்கு குரான் எப்படியோ, அதுபோல் ஹிந்துக்களுக்கு அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நூல் எது?' என்று எங்களை நாங்களே கேட்டுக் கொண்டோம். வேதங்களா? இல்லை. பாகவதமா? இல்லை. தேவி புராணமா? இல்லை. நான் சிறுவனாக இருந்தபோது, வாழ்க்கையில் சோதனைகளையும் கவர்ச்சிகளையும் சமாளித்து வெற்றி பெறுவதற்கான தவறாத ஒரு வழிகாட்டியாக இருக்கக் கூடிய ஒரு தரும நூல் எனக்குத் தேவையாக இருந்தது. அந்தத் தேவையை வேதங்களால் பூர்த்தி செய்ய முடியவில்லை. ஏனெனில், காசியைப் போன்ற ஓரிடத்தில் பதினான்கு அல்லது பதினைந்து ஆண்டுகள் வரையில் கஷ்டப்பட்டு வாசித்தால்தான் வேதங்களைக் கற்றுக்கொள்ள முடியும். அவ்விதம் பல வருடங்கள் வரையில் அவற்றை வாசிப்பதற்கு நான் தயாராக இல்லை. ஆனால் சாத்திரங்கள், உபநிடதங்கள் முதலியவற்றின் சாரத்தை 700 சுலோகங்கள் அடங்கிய கீதையிலிருந்து தெரிந்து கொண்டு விடலாமென நான் எங்கேயோ வாசித்திருந்தேன். அதுதான், அவ்விஷயமாக நான் ஒரு முடிவான தீர்மானத்திற்கு வரக் காரணமாக இருந்தது.

கீதையை வாசிப்பதற்காக நான் சமஸ்கிருதம் கற்றுக் கொண்டேன். இன்று கீதை எனது பைபிள் அல்லது குரான் மாத்திரமல்ல; அதைக் காட்டிலும் எவ்வளவோ மேலானது. அதாவது, இன்று கீதைதான் என் தாய். இந்த பூமியில் என்னைப் பெற்றெடுத்த தாயாரை நான் இழந்து வெகு காலமாகிறது. ஆனால், அதிலிருந்து அந்த ஸ்தானத்தை இந்த அழிவற்ற தாய் (கீதை) பூரணமாக ஏற்றுக் கொண்டு விட்டாள். கீதை அன்னைக்கு என் விஷயத்தில் ஒருபோதும் மனமாற்றம் ஏற்பட்டதில்லை; அவள் என்னை எக்காலத்திலும் கைவிட்டதில்லை. எனக்கு கஷ்டமோ அல்லது துன்பமோ நேரும்போது, நான் அவள் மடியில் அடைக்கலம் அடைகிறேன்.

தீண்டாமையை எதிர்த்து நான் போராடும்போது, மேதாவிகளான பண்டிதர்களின் மாறுபாடான அபிப்பிராயங்களை நான் அடிக்கடி சமாளிக்கவேண்டியிருக்கிறது. இன்று அனுசரிக்கப்பட்டு

வரும் தீண்டாமைக்கு ஹிந்து மதத்தில் ஆதாரமே இல்லை என்று அவர்களில் சிலர் என்னிடம் சொல்லுகிறார்கள்; அதை ஒழிப்பதற்காக, நான் செய்துவரும் முயற்சிகளுக்கும் அவர்கள் ஆசி கூறுகிறார்கள். தீண்டாமை, ஆதியிலிருந்தே ஹிந்து மதத்தின் ஒரு முக்கியமான அம்சமாக இருந்து வந்திருக்கிறது என மற்றும் சிலர் உறுதியாகக் கூறுகிறார்கள். இந்த நிலையில், யாருடைய கட்டளையை நான் பின்பற்றுவது? என்ன செய்வதென்றே புரியாமல் எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. இச்சந்தர்ப்பத்தில் வேதங்களும் ஸ்மிருதிகளும் எனக்கு உதவி அளிப்பவையாக இல்லை. அப்போதுதான் நான் அன்னையை அணுகி, "தாயே, கற்றறிஞர்களான இந்தப் பண்டிதர்கள் என்னை தரும சங்கடமான ஒரு நிலையில் கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள். இந்தச் சிக்கலிலிருந்து வெளியேற எனக்கு உதவி செய்" என்று கெஞ்சுகிறேன். அன்னையும் புன்முறுவலுடன் எனக்கு இவ்விதம் பதில் கூறுகிறாள்: "ஒன்பதாவது அத்தியாயத்தில் நான் கொடுத்துள்ள உறுதிமொழி பிராம்மணர்களுக்கு மாத்திரம் கொடுக்கப்படவில்லை, தாழ்த்தப்பட்டவர்கள், உரிமை இழந்தவர்கள் முதலியோருக்கும் கூடத் தான் கொடுக்கப்பட்டதாகும்."

எனினும், இந்த உறுதிமொழிக்கு நாம் தகுதி வாய்ந்தவர்களாக இருக்க வேண்டுமாயின், அன்னைக்குக் கீழ்ப்படிந்து அவளிடம் பக்தியுள்ள குழந்தைகளாக இருக்கவேண்டும்; அடங்காப் பிடாரிகளாகவோ, விசுவாசமற்றவர்களாகவோ, பக்தியிருப்பதாகப் பாசாங்கு செய்பவர்களாகவோ இருக்கக் கூடாது.

கீதையைக் கூட, சாதாரண மனிதர்கள் அறிந்து கொள்ளுவது கஷ்டமாக இருக்கிறது என்று சிற்சில சமயங்களில் புகார் கூறப்படுகிறது. அந்தப் புகாருக்கு ஆதாரமில்லை என்று கூறத் துணிகிறேன். அறிவுக் களஞ்சியமாக விளங்கிய காலஞ் சென்ற லோகமான்ய திலகர் கீதையை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்து, அதற்கு மகத்தான வியாக்கியானம்* எழுதியுள்ளார். அவரது மேதைக்கு, கீதை அரிய பெரிய உண்மைகள் அடங்கிய பொக்கிஷமாகத் தோன்றியது. எனினும், அதைக் கண்டு சாதாரண வாசகர்கள் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. பதினெட்டு அத்தியாயங்களையும் வாசித்து ஆராய்ச்சி செய்வது உங்களுக்குக் கஷ்டமாக இருந்தால், முதல் மூன்று அத்தியாயங்களையாவது நீங்கள் கவனமாக வாசியுங்கள். மீதியுள்ள பதினைந்து அத்தியாயங்களில் அதிக விவரங்களுடனும், வெவ்வேறு கோணங்களிலும் கூறப்பட்டிருப்பவையே, முதல் மூன்று அத்தியாயங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த மூன்று அத்தியாயங்

---

* லோகமான்ய திலகர் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எழுதிய 'கீதா ரகசியம்' என்ற வியாக்கியானத்தையே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார். அது இந்தியாவில் உள்ள பல முக்கிய பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. சுமார் 1500 பக்கங்களுக்கு மேல் உள்ள அந்த வியாக்கியானம், அரும் பெரும் இலக்கியப் பொக்கிஷங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது.

களிலிருந்து கூட சில சுலோகங்களை மாத்திரம் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதன் மூலம், அந்த அத்தியாயங்களின் சாரத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதைத் தவிர, மற்ருெர் உண்மையையும் கவனிக்க வேண்டும். கீதையில் வெவ்வேருன மூன்று இடங்களில், எல்லாக் கொள்கைகளையும் விட்டுவிட்டு இறைவனையே சரணம் அடைந்துவிட வேண்டும் என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. எனவே, கீதையின் உபதேசம் சூட்சுமமாகவோ, அல்லது சிக்கலாகவோ இருக்கிறது என்பதும், சாதாரண அறிவு உள்ளவர்கள் அறிந்து கொள்ள முடியாததாக இருக்கிறது என்பதும் ஆதாரமற்ற புகார்கள் என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

கீதை எல்லோருக்கும் அன்னை. அவள் யாரையும் பிடித்து வெளியே தள்ளுவதில்லை. கதவைத் தட்டுவோருக்கு அவள் அன்புடன் கதவைத் திறந்து அடைக்கலம் அளிக்கிருள். கீதையின் உண்மையான பக்தன், ஏமாற்றம் என்ருல் என்ன என்பதையே அறியான். அறிவுக்கே எட்டாத ஆனந்தமும், சாந்தியும் அத்தகைய பக்தனுக்கு ஏற்படுகின்றன. எனினும், அத்தகைய சாந்தியும் ஆனந்தமும் சந்தேகவாதிக்கோ அல்லது அறிவையும் பாண்டித்தியத்தையும் குறித்து இறுமாப்பு அடைபவனுக்கோ ஏற்படுவதில்லை. பணிவுள்ளவனுக்கும், மனதைச் சிதற விடாமல் பூரண நம்பிக்கையுடன் கீதை அன்னையை வணங்குபவனுக்கும்தான் அத்தகைய அமைதியும் ஆனந்தமும் உண்டாகின்றன. அத்தகைய பணிவுடனும் பக்தியுடனும் அந்த அன்னையைப் பூஜித்தவன் ஒரு காலத்திலும் ஏமாற்றம் அடையும்படி நேர்ந்ததில்லை.

நமது மாணவர்கள், அற்ப விஷயங்களுக்கும் நிலைகுலைந்து விடும் தன்மையுள்ளவர்களாக இருக்கிருர்கள். பரீட்சையில் தேருதது போன்ற அற்ப விஷயம் கூட, அவர்களைத் தாங்க முடியாத சோகத்தில் ஆழ்த்திவிடுகிறது. தோல்வி நேர்ந்த சமயத்திலும், விடாமுயற்சியுடனும் உறுதியுடனும் இருப்பதே கடமை என்பதை கீதை எல்லோருக்கும் வற்புறுத்துகிறது. கடமைகளைச் செய்ய மாத்திரமே நமக்கு உரிமை உண்டு, ஆனல் அவற்றின் பலனை எதிர்பார்க்க நமக்கு உரிமை இல்லை என்றே கீதை நமக்குக் கற்பிக்கிறது. வெற்றியும் தோல்வியும் அடிப்படையில் ஒன்றே என்பதும் கீதையின் உபதேசமாகும். கலப்பற்ற கடமையைச் செய்வதிலேயே நமது உடல், மனம், ஆன்மா எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்ய வேண்டும் என்றும், ஒழுங்கற்ற உணர்ச்சிகளுக்கும், மனம் போனபடி ஆசைகளுக்கும் இடம் கொடுத்து மானசிகமான சிற்றின்பப் பிரியர்களாகி விடக் கூடாது என்றும் கீதை நமக்குக் கட்டளையிடுகிறது. கீதை எப்போதும் புதிய புதிய பாடங்களைக் கற்பிக்கிறது என்பதை, ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில் நான் பிரகடனம் செய்ய முடியும். இது என் மன மயக்கமே என்று யாராவது என்னிடம் கூறுவாராயின், இந்த மயக்கத்தை நான் மாபெரும் பொக்கிஷமாகத் தழுவிப் பாதுகாத்து வருவேன் என்பதே, அவருக்கு நான் அளிக்கும் பதிலாகும்.

விடியற்காலம் கீதை பாராயணத்துடன் ஒவ்வொரு நாளும் அலுவல்களை ஆரம்பிக்க வேண்டும் என்று நான் மாணவர்களுக்கு ஆலோசனை கூறுகிறேன். நான் துளசிதாசரிடம் மிக்க அன்பும் பக்தியும் கொண்டவன். வேதனையில் ஆழ்ந்துள்ள உலகத்திற்கு ராமநாம மந்திரமாகிய சிறந்த ஔஷதத்தைக் கொடுத்த அந்த மகானை நான் போற்றி வணங்குகிறேன். துளசிதாசரைப் பற்றிப் பேசுவதற்காக, இன்று நான் இங்கே வரவில்லை. நீங்கள் கீதையை வாசிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் முற்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவே வந்திருக்கிறேன். குதர்க்க புத்தியுடனோ அல்லது குற்றம் குறைகளைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடனோ நீங்கள் அதை வாசிக்கக் கூடாது; ஆழ்ந்த பக்தியுடனும் பணிவுடனும் வாசிக்க முற்பட வேண்டும். அவ்விதம் நீங்கள் அதை அணுகினால், அது உங்களுடைய ஒவ்வொரு விருப்பத்தையும் நிறைவேற்றும்.

பதினெட்டு அத்தியாயங்களையும் மனப்பாடம் செய்து ஞாபகத்தில் வைத்துக் கொள்வது வேடிக்கையான விஷயம் அல்ல என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்; ஆனால் அந்த முயற்சி, செய்து பார்ப்பதற்கு உரியதே. அந்த இனிய அமுதத்தின் சுவையை நீங்கள் ஒரு தடவை அனுபவித்துவிட்டால், பின்னர் அதில் உங்களுக்குள்ள பற்றுதல் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே போகும். நீங்கள் தனிமையான இருட்டறையில் அடைக்கப்பட்டிருந்தால் கூட, உங்களுக்கு சோதனைகள் ஏற்படும் போது கீதையின் சுலோகங்கள் உங்களுக்கு ஆதரவாக இருக்கும்; உங்களுக்குத் துன்பம் ஏற்படும்போது அவை உங்களுக்கு ஆறுதல் அளிக்கும். இந்த சுலோகங்களை உச்சரித்த வண்ணம் நீங்கள் இறுதிக் கட்டளைக்குப் பணிந்து உங்கள் ஆன்மாவை இறைவனிடம் ஒப்படைப்பீர்களாயின், நீங்கள் பிரம்ம நிர்வாண நிலையை, அதாவது இறுதியான மோட்சத்தை அடைவீர்கள். அந்த ஆனந்த நிலை எப்படி இருக்கும்? உங்களுடைய குருமார்கள் தான் உங்களுக்கு அதை விவரித்துக் கூறவேண்டும்.

—'ஹரிஜன்' – 24—8—34

## 2

# கீதையின் ரகசியம்

புனாவில் உள்ள 'கேசரி' பத்திரிகையைச் சேர்ந்த ஸ்ரீ ஜி. வி. கேட்கர் பின் வருமாறு எழுதுகிறார்:

''இந்த ஆண்டில் டிசம்பர் 22-ஆம் தேதி வெள்ளிக்கிழமை கீதை ஜெயந்தி வருகிறது. கீதையையும், கீதை ஜெயந்தியையும் பற்றி 'ஹரிஜனி'ல் நீங்கள் எழுத வேண்டும் என்று சென்ற சில வருடங்களாக உங்களை நான் வேண்டிக்

கொண்டு வருகிறேன். இந்த வருடமும் அவ்விதமே மீண்டும் கேட்டுக்கொள்ளு கிறேன். சென்ற வருடம் நான் கேட்டுக் கொண்ட மற்ருெரு விஷயத்தையும் இப்போது நான் மீண்டும் கூறுகிறேன். கீதையில் உள்ள 700 சுலோகங்களை வாசிக்க நேரம் இராதவர்கள், இரண்டாவது, மூன்ருவது அத்தியாயங்களை மாத்திரம் வாசித்தால் போதும் என்று, கீதையைப் பற்றி நீங்கள் நிகழ்த்திய பிரசங்கங்கள் ஒன்றில் கூறியிருக்கிறீர்கள். அந்த இரண்டு அத்தியாயங்களை யும்கூட மேற்கொண்டு சுருக்க முடியும் என்றும் நீங்கள் கூறியிருக்கிறீர்கள். இரண்டாவது, மூன்ருவது அத்தியாயங்களை நீங்கள் ஏன் அவ்வளவு முக்கிய மாகக் கருதுகிறீர்கள் என்பதை, சாத்தியமாயின் நீங்கள் விளக்கிக் கூற வேண்டும். நீங்கள் அவ்விதம் கூறியதைக் கேட்டபின், 'கீதையின் சாரம்' என்ற தலைப்பில் இரண்டாவது, மூன்ருவது அத்தியாயங்களை மாத்திரம் ஒரு நூலாக நான் வெளியிட்டிருக்கிறேன். பொதுமக்கள் அதை அறிந்து பயன் பெற வேண்டும் என்பதே எனது நோக்கமாகும். இவ்விஷயமாக நீங்கள் ஏதாவது எழுதினல் மிகவும் பலன் தரத்தக்கதாக இருக்கும்.''

ஸ்ரீ கேட்கரின் வேண்டுகோளுக்கு இதுவரை நான் இணங்க வில்லை. எந்த நோக்கத்திற்காக இந்த ஜயந்திகள் கொண்டாடப் படுகின்றனவோ, அந்த நோக்கம் அவற்றின் காரணமாக நிறை வேறுகிறதா என்பது எனக்குத் தெரியாது. ஆன்மிக விஷயங் களுக்கு, சாதாரண விளம்பர முறை சிறிதும் பொருந்தாது. ஆன் மிக விஷயங்களுக்கான சிறந்த விளம்பரம், நடைமுறையில் அவற்றை அனுசரிப்பதேயாகும். ஆன்மிக சம்பந்தமான நூல்க ளின் சிறப்பிற்குக் காரணம் என்னவெனில், முதலாவதாக, அவற் றின் ஆசிரியர்கள் தங்களுடைய அனுபவங்களை ஒளிவு மறை வின்றி அப்படியே குறிப்பிடுகிருர்கள். இரண்டாவதாக, அந்த பக்தர்கள் சாத்தியமானவரையில் தங்களுடைய உபதேசங்களின் படியே தங்கள் வாழ்க்கையையும் நடத்தியவர்களாக இருக்கிருர் கள். அவ்விதமாக, அவர்கள் அந்த நூல்களுக்கு உயிர் கொடுக் கிருர்கள்; அவற்றின்படி வாழ்ந்து அவை சக்தி பெற்று விளங்கும் படியும் செய்கிருர்கள். அதுதான், கீதையும், துளசிதாசரின் ராமா யணம் போன்ற மற்ற நூல்களும் கோடிக்கணக்கானவர்களைக் கவர்ந்திருப்பதன் ரகசியம் என்று என் மனத்திற்குத் தோன்று கிறது.

எனவே, ஸ்ரீ கேட்கரின் வற்புறுத்தலுக்கு இப்போது நான் இணங்கியதற்குக் காரணம் இதுதான்: அதாவது, வரப்போகும் கீதை ஜெயந்தியில் பங்கு எடுத்துக் கொள்ளுவோர், ஒழுங்கான மனநிலையுடன் அதை அணுகுவார்கள் என்றும், வாழ்க்கையில் அந்த உயர்ந்த கீதத்தின் உபதேசத்திற்கு இணங்க நடந்து கொள்ளுவார்கள் என்றும் நான் நம்புகிறேன்.

ஒருவர் பற்றுதலின்றி, பலனை எதிர்பாராமல் தமது கடமை யைச் செய்ய வேண்டும் என்பதே கீதையின் உபதேசம் என் பதை எடுத்துக் காட்ட நான் முயற்சித்துள்ளேன். கீதையின் அந் தச் சித்தாந்தம் இரண்டாவது அத்தியாயத்தில் அடங்கியிருக்கி றது. அதை நடைமுறையில் கொண்டு வருவதற்கான வழியை

மூன்ருவது அத்தியாயத்தில் காணலாம். இதிலிருந்து, மற்ற அத்தியாயங்கள் அவ்வளவு சிறப்புடையவை அல்ல என்று கூறுவதாக நினைக்கக் கூடாது. உண்மையில், ஒவ்வொரு அத்தியாயமும் ஒவ்வொரு விதத்தில் சிறப்புடையதாகும்.

எல்லோருக்கும் புரியக் கூடிய எளிய, ஆனல் கம்பீரமான மராத்தி பாஷையில் வினேபா கீதையை மொழிபெயர்த்துள்ளார். அதற்கு அவர் 'கீதாயீ' என்று பெயர் கொடுத்துள்ளார். கீதையில் உள்ள சமஸ்கிருத சுலோகம் ஒவ்வொன்றையும் அவர் மராத்தியில் அதே சந்தத்தில் சுலோகமாகவே மொழிபெயர்த்துள்ளார்.

ஆயிரக்கணக்கானவர்களுக்கு கீதைதான் உண்மையான அன்னையாக இருக்கிறது. கஷ்டம் நேர்ந்த சமயங்களில் அது, ஆறுதல் அளிக்கக்கூடிய அமுதம் போன்ற பாலைக் கொடுக்கிறது. கீதை, என்னுடைய ஆன்மிக அகராதி என்று நான் குறிப்பிட்டுள்ளேன். ஏனெனில், எனக்குத் துன்பம் ஏற்பட்ட காலங்களில் அது ஒரு போதும் என்னைக் கைவிட்டதில்லை. இன வெறியோ, பிடிவாதமான கொள்கையோ இராத ஒரு நூல் கீதைதான். அது எல்லோருடைய மனத்திற்கும் உகந்ததாக இருக்கிறது. கீதையை, தெளிவற்ற, மறை பொருள் அடங்கிய ஒரு நூலாக நான் கருதவில்லை. பண்டிதர்கள், எல்லா நூல்களிலும் மறைபொருளைக் காணமுடியும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனல், சாதாரண அறிவுள்ள ஒருவர் கூட கீதையில் உள்ள தெளிவான உபதேசத்தை அறிந்து கொள்ளுவதில் கஷ்டம் எதுவும் இராது என்பதே எனது அபிப்பிராயமாகும். அதில் உள்ள சமஸ்கிருத சுலோகங்கள் நம்பமுடியாதவாறு அவ்வளவு எளிய நடையில் இருக்கின்றன.

கீதையின் பல ஆங்கில மொழிபெயர்ப்புகளை நான் வாசித்திருக்கிறேன். இருந்தாலும், எட்வின் ஆர்னல்டின் மொழி பெயர்ப்பைப்போல் செய்யுள் நடையில் அவ்வளவு அழகான, பொருத்தமான மொழி பெயர்ப்பு வேறு எதுவுமே இல்லை. எனவே, அவர் அந்த மொழி பெயர்ப்புக்குக் கொடுத்துள்ள 'சொர்க்க கீதம்' ('Song Celestial') என்ற பெயர் மிகப் பொருத்தமானது.

—'ஹரிஜன்' – 16–12–1939.

## 3

# எனது கொள்கைகளின் அடிப்படை

கானன் ஷெப்பர்ட் தலைமையில் நடைபெறும் ஆங்கிலேயர்களின் சமாதான இயக்கத்தைப்பற்றி சமீபத்தில் நான் சில கட்டுரைகள் எழுதியிருந்தேன். அவற்றைக் குறிப்பிட்டு ஒரு நண்பர் பின் வருமாறு எழுதுகிறர் :

"கீதையும், அர்ஜுனனுக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் நடந்த பூர்வாங்க சம்பாஷணையும் எதுவாயினும், கட்டுக்கோப்பான முறையில் படையெடுப்பு ஏற்படும்போது, அகிம்சையை அனுசரிக்க வேண்டும் என்று ஹிந்து மதம் கூறவேயில்லை. நமது சிறந்த தரும நூல்களையெல்லாம், கஷ்டப்பட்டு இயற்கைக்கு விரோதமான முறையில் வியாக்கியானம் செய்வது சரியல்ல. கருணையும் அன்பும் காட்டுவதே மனிதனின் மகோன்னதமான கடமை என்று ஹிந்து மதம் விதித்துளது என்பது உண்மையே. எனினும், நீங்களோ அல்லது சமாதானவாதிகளோ உபதேசிக்கும் அகிம்சையை அது உபதேசிக்கவில்லை. அந்த நோக்கத்துடன், ஒவ்வொன்றுக்கும் கஷ்டப்பட்டு பொருள் கற்பிக்க முற்படுவது நல்லதல்ல."

கீதைக்கு முன்னுரையாக நான் எழுதியிருக்கும் 'அனாஸக்தி யோக'த்தில், அது அகிம்சையைப்பற்றிய ஒரு விளக்கம் அல்ல என்றும், யுத்தத்தைக் கண்டிப்பதற்காக அது எழுதப்படவில்லை என்றும் நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். இன்று அனுசரிக்கப்படும் ஹிந்து சமயமோ அல்லது முன்பு அனுசரிக்கப்பட்ட ஹிந்து சமயமோ, யுத்தத்தை நான் கண்டித்துவருவதைப்போல் கண்டித்ததில்லை என்பது நிச்சயம்தான். நான் செய்ததெல்லாம் என்னவெனில், கீதை உபதேசம் முழுவதற்கும் ஹிந்து மத தத்துவத்திற்கும் ஒரு புதிய, இயல்பான, பகுத்தறிவுக்கு உகந்த முறையில் வியாக்கியானம் செய்திருப்பதேயாகும். ஹிந்து மதம் எப்போதும் வளர்ச்சி பெற்று வருகிறது. மற்ற மதங்களைப்பற்றி இங்கே குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. குரானைப் போலவோ அல்லது பைபிளைப் போலவோ ஹிந்து சமயத்தில் ஒரே ஒரு வேதநூல் மாத்திரம் இல்லை. ஹிந்து சமய நூல்களும் எப்போதும் வளர்ச்சி பெற்று வருகின்றன. அவற்றில் புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டும் வருகின்றன.

அதற்கு உதாரணமாக கீதையையே கூறலாம். கர்மம், சந்நியாசம், யக்ஞம் ஆகியவற்றிற்கு கீதை ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுத்திருக்கிறது. ஹிந்து மதத்திற்கே அது புத்துயிரை அளித்திருக்கிறது. அது ஒழுக்க சம்பந்தமாக ஒரு புதிய விதியையே வகுத்திருக்கிறது. கீதையில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்கள், அதற்கு முந்திய நூல்களிலும் மறைமுகமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் நுணுக்கமான இவ்விஷயங்களுக்கு கீதைதான் உறுதியான ஓர் உருவத்தைக் கொடுத்திருக்கிறது.

உலகத்திலுள்ள மற்ற சமயங்களை நான் பயபக்தியுடன் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். கீதையில் கூறியுள்ளபடி ஹிந்து மத உபதேசங்களுக்கு இணங்க வாழவும் முயற்சிசெய்து வந்திருக்கிறேன். அவற்றின் பலனாகவும், எனது சொந்த அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டும் நான் கீதைக்கு இயல்பான, விரிவான அர்த்தத்தை எடுத்துக் கூறவும் முற்பட்டுள்ளேன். ஹிந்து மதத்தில் உள்ள ஏராளமான வேதநூல்களில் புதைந்து கிடக்கும் அர்த்தத்தை எடுத்துக் கூற நான் முயற்சிக்கவில்லை; ஹிந்து

சமயம் ஜீவ சக்தி வாய்ந்த ஒரு மதம் என்ற முறையிலேயே, வேதனையில் ஆழ்ந்துள்ள தன் குழந்தையிடம் ஒரு தாய் பேசுவது போல நானும் பேச முயற்சித்துள்ளேன்.

நான் செய்திருப்பது முற்றிலும் சரித்திர பூர்வமான காரியமாகும். இவ்விஷயத்தில் நமது மூதாதையர்களின் அடிச்சுவடுகளையே நான் பின்பற்றிச் சென்றிருக்கிறேன். அவர்கள் ஒரு காலத்தில், கோபம் கொண்ட தெய்வங்களைச் சாந்தப்படுத்துவதற்காக மிருகங்களைப் பலியிட்டார்கள். அவர்களுடைய சந்ததிகள், அதாவது அவர்களுக்குப் பின் வந்த நமது மூதாதையர்கள், ‘பலி’ என்ற சொல்லுக்கு வேறு அர்த்தம் செய்தார்கள். கோபம் கொண்ட தெய்வங்களை அல்ல, நம்முள்ளே வாழ்ந்து வரும் கடவுளைத் திருப்தி செய்வதற்காக நம்முடைய இழி குணங்களைப் பலி கொடுப்பதே ‘பலி’ என்ற சொல்லுக்குப் பொருள் என்று அவர்கள் கற்பித்தார்கள். உயிரை விலையாகக் கொடுத்தாவது அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்பதே கீதையின் உபதேசத்திலிருந்து வெளியாகிறது. அது பகுத்தறிவுக்கும் உகந்ததாக இருக்கிறது என்றே நான் கருதுகிறேன். மானிட வர்க்கத்தின் மகோன்னதமான லட்சியமும் அதுதான்.

மகாபாரதம், ராமாயணம் இவ்விரண்டு நூல்களையும் கோடிக்கணக்கான ஹிந்துக்கள் அறிவார்கள். அவர்கள் தங்களுடைய வாழ்க்கையில் வழிகாட்டியாகவும் அந்த நூல்களைக் கருதுகிறார்கள். அவற்றின் உள்ளே பொதிந்து கிடக்கும் விஷயங்கள், அவை சிலேடையாகவே குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்பதை சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டுகின்றன. அவை சரித்திர பூர்வமான பாத்திரங்களையே குறிப்பிடுகின்றன என்றால் கூட, அதனால் எனது கொள்கைக்குப் பாதகம் ஏற்படாது. மகத்தான காவியங்களான அவை, இருளின் சக்திகளுக்கும் ஒளியின் சக்திகளுக்கும் இடைவிடாது நடைபெற்றுவரும் போராட்டத்தையே விவரிக்கின்றன. அது எப்படியாயினும், நான் ஏற்கனவே உருவாக்கிக் கொண்டுள்ள கொள்கைகளுக்கு இணங்க, ஹிந்து சமயத்தின் அர்த்தத்தையோ அல்லது கீதையின் அர்த்தத்தையோ திரித்துக் கூறும் நோக்கம் எதுவும் எனக்கு இல்லை. கீதை, ராமாயணம், மகாபாரதம், உபநிடதங்கள் முதலிய மற்றும் பல நூல்களையும் ஆராய்ச்சி செய்ததன் பலனாகவே எனது கொள்கைகள் உருவாகியிருக்கின்றன.

—‘ஹரிஜன்’ – 3-10-1936

# 4

# கீதையை வாசிக்க தகுதி!

ஓர் உயர்தரக் கல்வி சாலையைச் சேர்ந்த தலைமை ஆசிரியருடைய உதவியுடன், அங்கே உள்ள மாணவர்களிடையே கீதையின் உபதேசத்தைப் பரப்ப ஓர் அன்பர் முயற்சித்து வருகிறார். ஆனால், சமீபத்தில் அங்கே கீதை வகுப்பை ஆரம்பிப்பதற்காக நடந்த கூட்டம் ஒன்றில், சிவ பூஜையில் கரடியை விட்டதுபோல், ஒரு பாங்கி மானேஜர் எழுந்து அமைதியாக நடந்த கூட்ட நடவடிக்கைகளைக் குழப்பத் தொடங்கினார். கீதையை வாசிக்க மாணவர்களுக்கு அதிகாரம் (தகுதி) இல்லை என்றும், மாணவர்களின் முன்னிலையில் வைப்பதற்கு அது ஒரு விளையாட்டுப் பொருள் அல்ல என்றும் அவர் கூறினார். அந்த அன்பர் அச் சம்பவத்தைப்பற்றி விவரித்து எனக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதியிருக்கிறார். மேலும், அவர் தமது வாதத்திற்கு ஆதரவாக ராமகிருஷ்ண பரமஹம்சரின் பொன்மொழிகளிலிருந்து மிகப் பொருத்தமான சிலவற்றைத் திரட்டி அனுப்பியிருக்கிறார். அவற்றிலிருந்து சில பொன்மொழிகளைக் கீழே கொடுத்திருக்கிறேன் :

''கடவுளைத் தேடி அறிந்து கொள்ள சிறுவர்களுக்கும் யுவர்களுக்கும் உற்சாகம் அளிக்க வேண்டும். அவர்கள், ருசி பார்க்கப்படாத பழங்களைப் போன்றவர்கள். உலக ஆசைகளால் அவர்கள் சிறிதும் களங்கம் அடையாதவர்களாக இருக்கிறார்கள். அத்தகைய ஆசைகள் ஒரு தடவை அவர்களுடைய மனத்திற்குள் பிரவேசித்து விட்டால், பிறகு மோட்சத்திற்கான பாதையில் அவர்கள் செல்லும்படி செய்வது மிகவும் கஷ்டமாகிவிடும்.

''இளைஞர்களை நான் ஏன் அவ்வளவு அதிகமாக நேசிக்கிறேன்? ஏனென்றால், அவர்கள் அவர்களுடைய முழு மனத்திற்கும் எஜமானர்களாக இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு வயது ஆக ஆக, அவர்கள் தங்களுடைய மனத்தை பலருக்கும் பிரித்துக் கொடுத்து விடுகிறார்கள். விவாகம் செய்து கொண்டவரின் மனத்தில் பாதி அவரது மனைவிக்குச் சென்று விடுகிறது. குழந்தை பிறந்து விட்டால் அவர் மனத்தில் கால் பகுதி அதனிடம் சென்று விடுகிறது. மீதியுள்ள கால் பகுதி, பெற்றோர்கள், லோகாயதமான கௌரவங்கள், உடை முதலியவற்றில் சென்று சிதறி விடுகிறது. எனவே, முழு மனத்துடன் இருக்கும் இளைஞன்தான் இறைவனை எளிதில் அறிந்து கொள்ள முடியும். வயதானவர்களுக்கு இறைவனை அறிந்து கொள்ளுவது மிகவும் கஷ்டமாகும்.

''கிளியின் தொண்டையில் உள்ள ஜவ்வு (மெல்லிய தோல்) அதன் வயது ஆக ஆக கெட்டிப்பட்டுவிடும். பின்னர் அதற்கு பாடக் கற்றுக் கொடுக்க முடியாது. குஞ்சாக இருக்கும்போதே பாட அதற்குக் கற்பிக்க வேண்டும். அதுபோலவே வயதான பின், மனம் கடவுளிடம் நிலைத்து நிற்பது கஷ்டமாகும். இளம் வயதில் மனம் கடவுளிடம் லயிக்கும்படி செய்வதே எளிதாகும்.

“பாலில் பதினறில் ஒரு மடங்கு தண்ணீர் கலக்கப்பட்டிருந்தால், அதை ஆடையாகச் செய்வதில் அதிகக் கஷ்டம் இராது; அதிகமாக விறகுகளையும் உபயோகிக்க வேண்டியிராது. ஆனல், ஒரு சேர் பாலில் முக்கால் சேர் தண்ணீர் கலக்கப்பட்டிருந்தால், அதை கெட்டியாகக் காய்ச்சுவது முடியாத காரியம்; அதைக் காய்ச்ச ஏராளமாக விறகும் தேவையாக இருக்கும். லோகாயதமான ஆசைகளால் சிறிதளவே களங்கமாக்கப்பட்ட இளைஞரின் மனத்தை இறைவனை நோக்கி எளிதில் திருப்பிவிட முடியும். ஆனல், வயதானவர்களின் மனத்தை அவ்விதம் திருப்ப முடியாது. ஏனெனில், அவர்களுடைய மனம் லோகாயதமான ஆசைகளால் மிகவும் அதிகமாகக் களங்கம் அடைந்திருக்கும் அல்லவா?

“இளம் மூங்கிலை எளிதில் வளைத்துவிட முடியும். ஆனல், பூரண வளர்ச்சியடைந்த மூங்கிலை வளைக்க முற்பட்டால், அது முறிந்துவிடும். அதுபோலவே, இளைஞர்களின் இதயத்தை கடவுளை நோக்கி வளைப்பது எளிதாகும். ஆனல், வயதானவர்களின் இதயத்தை அவ்விதம் வளைப்பது இயலாத காரியம்.

“மனிதரின் மனம், கடுகு விதைகள் நிறைந்துள்ள ஒரு பொட்டணத்தைப் போன்றது. பொட்டணம் கிழிந்து விட்டால், அவை நாலா பக்கங்களிலும் சிதறிவிடும். பின்னர் அவற்றை ஒன்று சேர்ப்பது கஷ்டமான காரியம். அதுபோலவே, மனிதரின் மனம் நாலா பக்கங்களிலும் சிதறி லோகாயதமான விஷயங்களில் ஈடுபடுமாயின், அதை ஓரிடத்தில் லயிக்கும்படி செய்வது எளிதான காரியம் அல்ல. பல்வேறு திசைகளிலும் ஓடாத இளைஞரின் மனத்தை எதிலும் எளிதில் லயிக்கும்படி செய்துவிடலாம். ஆனல், வயோதிகரின் மனம் லோகாயதமான பல்வேறு திசைகளிலும் முற்றிலும் ஈடுபட்டிருக்குமாதலால், அவற்றிலிருந்து அதைத் திருப்பி கடவுளிடம் லயிக்கும்படி செய்வது மிகவும் கஷ்டமாகும்.”

வேதங்களை வாசிக்க குறிப்பிட்டவர்களுக்குத்தான் அதிகாரம் அதாவது தகுதி உண்டு என்று கூறப்படுவதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனல், பாங்கி மானேஜர் நினைப்பதுபோல் கீதை வாசிப்பதற்குக் கூட தகுதிகள் உண்டு என்பது எனக்குத் தெரியவே தெரியாது. அவர் கூறும் தகுதிகள் எவை என்பதை அவர் குறிப்பிட்டிருந்தால் நன்ருக இருந்திருக்கும். ஏளனம் செய்பவர்களைத் தவிர மற்றெல்லோரும் அதை வாசிக்கலாம் என்றே, கீதை சந்தேகத்துக்கு இடமின்றி தெளிவாகக் கூறுகிறது. ஹிந்து மாணவர்கள் கீதையை வாசிக்கக் கூடாது என்ருல், அவர்கள், வேறு எந்த சமய நூல்களையும் வாசிக்கக் கூடாது. மாணவர்களின் வாழ்க்கை என்பது பிரம்மச்சாரிகளின் வாழ்க்கையே என்பதுதான் ஹிந்து மதத்தின் கருத்தாகும். அவர்கள் முதன் முதலாக மத சம்பந்தமான அறிவையே பெற வேண்டும்; அதை நடைமுறையிலும் தினசரி வாழ்க்கையிலும் கொண்டுவர வேண்டும். பண்டைக் காலத்து மாணவர்கள் மதம் என்ருல் என்ன என்பதைத் தாங்கள் தெரிந்து கொள்ளுவதற்கு முன்பே, மதத்திற்கிணங்க வாழ்வது வழக்கமாக இருந்தது. பின்னர்தான் மதத்தைப் பற்றிய அறிவும் தெளிவும் அவர்களுக்கு ஏற்பட்டன. அப்போதுதான் அவர்கள், தங்களுக்கு விதிக்கப்பட்

டுள்ள ஒழுக்க விதிகளின் காரணத்தைத் தெரிந்து கொண்டார்கள்.

அக் காலத்தில் அவர்களுக்கு தகுதி இருக்கத்தான் செய்தது. ஆனல், அது நேர்மையான ஒழுக்கத்தின் பலனுக ஏற்பட்ட தகுதியே. அதாவது ஐந்து யமங்களின் அல்லது மூலாதாரமான கட்டுப்பாடுகளின் பலனுக ஏற்பட்ட தகுதியேயாகும். அகிம்சை (சாத்விகம்), சத்தியம்(உண்மை), அஸ்தேயம் (திருடாமை), அபரிக்ரகம் (உடமைகள் வைத்துக் கொள்ளாதிருத்தல்), பிரம்மச்சரியம் ஆகிய ஐந்துமே 'யமங்கள்' என்று குறிப்பிடப்படுகின்றன. மதத்தை ஆராய்ச்சி செய்ய விரும்பும் எவரும் மேற்கண்ட விதிகளைப் பின்பற்றித் தீரவேண்டும். மதத்தின் மூலாதாரமான இந்த விதிகளின் அவசியத்தை நிரூபிப்பதற்காக, அவர் மத நூல்களை ஆராய வேண்டிய அவசியமில்லை.

ஆனல், இன்று சக்தி வாய்ந்த மற்றும் பல சொற்களைப் போல் அதிகாரம் அதாவது தகுதி என்ற சொல்லின் பொருளும் சிதைந்திருக்கிறது. தீய வழிகளில் செல்லும் ஒருவன், அவன் பிராம்மணன் என்பதற்காக,சாத்திரங்களை வாசிக்கவும், அவற்றை நமக்கு எடுத்து உபதேசிக்கவும் தகுதி பெற்றவனுக இருக்கிருன். மற்ருெருவன் எவ்வளவு சிறந்த ஒழுக்கமுடையவனுக இருந்தாலும், அவன் தீண்டத்தகாதவர்களின் வகுப்பில் பிறந்தான் என்பதற்காக, சாத்திரங்களை வாசிக்க அவன் தகுதியற்றவனுகிவிடுகிருன். பைத்தியக்காரத்தனமான இந்த ஆட்சேபணையைச் சமாளிக்கும் நோக்கத்துடனேயே மகாபாரதத்தின் ஆசிரியர், ஜாதி, மத வேற்றுமையின்றி எல்லோரும் வாசிப்பதற்காக அதை எழுதினுர். மகாபாரதத்தின் ஒரு பகுதியே கீதையாகும். மகாபாரதத்தை வாசிப்போர், மேலே குறிப்பிட்ட மூலாதாரமான கட்டுப்பாடுகளை நடைமுறையில் அனுசரிப்பவர்களாக இருக்க வேண்டும் என்ற நிபந்தனை கூட இருப்பதாக எனக்கு நினைவில்லை. எனினும், தரும சாத்திர நூல்களை ஒழுங்கான முறையில் அறிந்து கொள்ளுவதற்கு மனத் தூய்மையும் பக்தியும் இருக்கவேண்டியது அவசியம் என்பதை அனுபவமானது நமக்குக் காட்டுகிறது. அச்சு யுகமானது, எல்லாத் தடைகளையும் தகர்த்துவிட்டது. மதப் பற்றுள்ளவர்களைப் போல் மதத்தை ஏளனம் செய்பவர்களும் தங்கள் விருப்பம்போல் மத நூல்களை வாசிக்கிருர்கள். பக்தியைப் பயிற்சி செய்து கொள்ளுவதற்காகவும் மதக் கல்வி பெறவும் கீதையை வாசிக்க மாணவர்களுக்கு தகுதி உண்டா என்பதைப் பற்றியே இப்போது நாம் வாதித்துக் கொண்டிருக்கிருேம். அதை வாசிக்க மாணவர்களைக் காட்டிலும் அதிகத் தகுதி வாய்ந்த ஒரு பிரிவினரை நான் கற்பனை செய்துகொள்ளவும் முடியாது. மற்றவர்களை விட அவர்கள் கட்டுப்பாடுகளுக்கு அதிகமாக உட்படக் கூடியவர்கள். எனவே, கீதையை வாசிக்க அவர்களுக்குத் தான் அதிகமான தகுதி உண்டு. ஆனல் துரதிருஷ்டவசமாக, பெரும்பாலும் மாணவர்களோ அல்லது ஆசிரியர்களோ ஐந்து கட்டுப்பாடு

களை அடிப்படையாகக் கொண்ட உண்மையான தகுதியைப் பற்றிச் சிந்திப்பதே இல்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

—'எங் இந்தியா' – 8—12—1927

# 5

# ஹிந்து மாணவர்களும் கீதையும்

இந்தியா உண்மையிலேயே ஆன்மிகத் துறையில் முன்னேற்றம் அடைந்துள்ள ஒரு தேசமா? அப்படியானல், தங்கள் சொந்த மதத்தைப் பற்றியும், கீதையைப் பற்றியும் கூட ஒரு சில மாணவர்களே தெரிந்துகொண்டிருப்பதேன்? அன்ருெரு நாள் ஒரு பாதிரி நண்பருடன் நான் பேசிக் கொண்டிருந்த போது, அவ்விதம் அவர் என்னைக் கேள்விகள் கேட்டார். அந்தப் பாதிரியார் கல்வித் துறையில் நிபுணர். அவர் தமது கூற்றுக்கு ஆதாரமாக, தாம் பெற்ற அனுபவத்தையும் கூறினர். அதாவது, மதத்தைப் பற்றியோ அல்லது பகவத் கீதையைப் பற்றியோ ஏதாவது அறிந்து கொண்டிருக்கிருர்களா என்று தாம் சந்தித்த மாணவர்களைக் கேட்பதை ஒரு முக்கிய அலுவலாகக் கொண்டிருந்ததாயும், ஆனல் பெரும்பாலான மாணவர்களுக்கும் அவற்றைப் பற்றி எதுவுமே தெரியவில்லை என்றும் அவர் கூறினர்.

தங்கள் சொந்த மதத்தைப் பற்றிய அறிவே சில மாணவர்களுக்கு இல்லை என்பதற்காக, இந்தியா ஆன்மிகத் துறையில் முன்னேற்றம் அடைந்துள்ள ஒரு நாடு அல்ல என்று முடிவு செய்து விடுவதா? இவ் விஷயமாக தற்போது நான் எதுவும் கூற உத்தேசிக்கவில்லை. ஆனல், ஒன்று மாத்திரம் கூறுகிறேன். மத நூல்களைப் பற்றி மாணவர்களுடைய அறியாமையிலிருந்து, நாட்டில் மதப்பற்றுள்ள வாழ்க்கையே இல்லை என்ருே, மக்கள் ஆன்மிகச் சிறப்பு அற்றவர்கள் என்ருே கூறிவிட முடியாது. எனினும், அரசாங்கக் கல்வி ஸ்தாபனங்களிலிருந்து தேர்ச்சி பெற்று வரும் மாணவர்களில் மிகப் பெரும்பாலோர், மத போதனையே பெருதவர்களாக இருக்கிருர்கள் என்பது உண்மையே.

மைசூர் மாணவர்களைக் குறித்தே பாதிரியார் அவ்விதம் கூறினர். மைசூர் சமஸ்தானத்தின் அரசாங்கக் கல்விசாலைகளில் கூட மாணவர்களுக்கு மத போதனை அளிக்கப்படவில்லை என்பதைப் பார்க்க நான் வேதனை அடைகிறேன். அரசாங்கக் கல்விசாலைகளில் லௌகிகமான கல்விக்கு மாத்திரம்தான் இடம் உண்டு என்பதில் நம்பிக்கையுள்ள ஒரு பிரிவினர் இருக்கிருர்கள் என்பதை நான் அறிவேன்.

உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் இந்தியாவில் இருக்கின்றன; ஒரே மதத்தில் பல பிரிவுகளும் இருக்கின்றன. எனவே, இந்தியாவைப் போன்ற அப்படிப்பட்ட ஒரு நாட்டில், மத போதனைக்கு வழிவகை செய்வது கடினமானது என்பதையும் நான் அறிவேன். எனினும், இந்தியா ஆன்மிகத் துறையில் சூன்ய நிலையை அடையாதிருக்க வேண்டுமாயின், இந்திய இளைஞர்களுக்கு லௌகிகமான கல்வியைப் போல் அவ்வளவுக்காவது மதக் கல்வியும் அவசியமாக அளிக்கப்பட வேண்டும். மத நூல்களைப் பற்றிய அறிவு மதத்திற்கு ஈடாகிவிடாது என்பது உண்மையே. அதற்கு அடுத்தபடியாக, அறநெறி நூல்களைப் பற்றியாவது நமது சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் போதிக்கலாம். கல்வி சாலைகளில் அத்தகைய போதனை அளிக்கப்பட்டாலும் அளிக்கப்படா விட்டாலும், வயதுவந்த மாணவர்கள் மற்ற விஷயங்களைப் போல் மத சம்பந்தமான விஷயங்களிலும் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளும் கலையைப் பயிற்சி செய்துகொள்ள வேண்டும். அவர்கள் தங்களுக்குத் தாங்களே தர்க்க சபைகள், நூற்போர் சங்கங்கள் முதலியவற்றை ஆரம்பித்து நடத்திவருவதுபோல், மத சம்பந்தமான விஷயங்களில் பயிற்சி பெறவும் தங்களுக்கென வகுப்புகளை ஆரம்பிக்க வேண்டும்.

ஷிமோகாவில் நடந்த கல்லூரி உயர்தரக் கல்விசாலை மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் நான் பேசியபோது, ஒரு விஷயத்தை அறிந்து கொண்டேன். அக் கூட்டத்தில் நான் விசாரித்ததிலிருந்து அங்கே கூடியிருந்த நூறுக்கு மேற்பட்ட ஹிந்து மாணவர்களில் பகவத் கீதையை வாசித்தவர்கள் எட்டுபேர் கூட இல்லை என்பது தெரிந்தது. கீதையை வாசித்த அந்த ஒரு சிலரில் யார் யார் அதைப் புரிந்து கொண்டார்கள் என்று கேட்ட போது, அதற்குப் பதிலாக ஒருவன் கூடக் கையைத் தூக்கவில்லை. அங்கே இருந்த ஐந்து அல்லது ஆறு முஸ்லிம்களில் குரானை யார் வாசித்திருக்கிறுர்கள் என்று கேட்டபோது, அவர்கள் யாவரும் கையைத் தூக்கினுர்கள். ஆனல், குரானின் அர்த்தத்தை அறிந்து கொண்டவர்கள் எத்தனை பேர் என்று கேட்டபோது, அவர்களில் ஒரே ஒருவன் தான் கையைத் தூக்கினுன்.

கீதை, மிகவும் எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய ஒரு நூல் என்பதே எனது அபிப்பிராயமாகும். அது சில மூலாதாரமான பிரச்னைகளை எழுப்புகிறது என்பது உண்மையே. அந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பது கஷ்டமான காரியம் என்பதிலும் ஐயமில்லை. எனினும், கீதையின் பொதுவான நோக்கத்தைப் பற்றி யாருக்கும் சந்தேகம் இருப்பதற்கில்லை. கீதை ஆதார பூர்வமான நூல் என்பதை ஹிந்துக்களில் எல்லாப் பிரிவினரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். தான்தோன்றித்தனமான சித்தாந்தம் எதையும் அது வற்புறுத்தவில்லை. அது சுருக்கமான முறையில் முற்றிலும் பகுத்தறிவுக்கு உகந்த தார்மிக சட்டத்தை உருவாக்கியிருக்கிறது. அது அறிவுக்கும் இதயத்திற்கும் உகந்ததாக இருக்கிறது. அவ்வாறுக அது, தத்துவ ஞானம், பக்தி இரண்டையும் போதிப்ப

தாக இருக்கிறது. அதன் உபதேசம், உலகம் முழுவதும் எல்லோருக்கும் உகந்ததாக இருக்கிறது. அது யாரும் நம்பமுடியாதவாறு அவ்வளவு எளிய நடையில் இருக்கிறது. இருந்தாலும், இந்தியாவில் உள்ள ஒவ்வொரு பாஷையிலும் கீதை ஆதாரபூர்வமாக மொழிபெயர்க்கப்படவேண்டும். சாத்திரீயமான நுணுக்கங்களைத் தவிர்த்தும், சராசரி மனிதன் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய விதத்திலும் கீதையின் மொழிபெயர்ப்புகளைத் தயாரிக்க வேண்டும். இவ்விதம் கூறுவதற்கு, மூல நூலுடன் மேற்கொண்டு சில விவரங்களைச் சேர்க்க வேண்டும் என்ற அர்த்தமில்லை. ஒவ்வொரு ஹிந்து சிறுவனும், சிறுமியும் சமஸ்கிருதம் அறிந்தவர்களாக இருக்க வேண்டும் என்ற என் அபிப்பிராயத்தை நான் மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறேன். எனினும், இன்னும் வெகு காலம் வரையில் சமஸ்கிருதத்தைத் தெரிந்து கொள்ளாதவர்கள் கோடிக்கணக்கில் இருந்து கொண்டுதான் இருப்பார்கள். அவர்கள் சமஸ்கிருதத்தைத் தெரிந்து கொள்ளவில்லை என்பதற்காக, பகவத் கீதையின் உபதேசங்களை அறிந்து கொள்ள முடியாத நிலையில் அவர்களை வைத்திருப்பது, தற்கொலைக்கு ஒப்பாகும்.

—'எங் இந்தியா' – 25-8-1927.

## 6

# தருமத்திற்கு உகந்த சம்பிரதாயம்

மன்னார்குடியில் நடந்த மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி பேசியபோது கூறியதாவது :

என்னைப்போல் நீங்களும் பைபிளில் உள்ள வாக்கியங்களை தினந்தோறும் வாசிப்பதாக, நீங்கள் அளித்துள்ள உபசாரப் பத்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். பைபிள் வேத வாக்கியங்களை நான் தினந்தோறும் வாசித்து வருவதாகக் கூறமுடியாது. எனினும், அந்த வாக்கியங்களை நான் பணிவுடனும், பக்தியுடனும் வாசித்திருக்கிறேன். அதே உணர்ச்சியுடன் நீங்களும் அந்த வாக்கியங்களை வாசித்துவருவது சிறந்த காரியமே. எனினும், உங்களில் மிகப் பெரும்பாலோர் ஹிந்து சிறுவர்களே என்று எண்ணுகிறேன். உங்களிடையே உள்ள ஹிந்து சிறுவர்களாவது தினந்தோறும் பகவத் கீதையை வாசிக்கவேண்டும் என்பதே என் விருப்பமாகும். அதிலிருந்துதான் ஹிந்து சிறுவர்கள் உணர்ச்சியும் உத்வேகமும் பெறவேண்டும். உலகத்தில் உள்ள பெரிய மதங்கள் யாவும் சற்றேறக்குறைய உண்மையானவை என்பதே எனது நம்பிக்கை. 'சற்றேறக்குறைய' என்று நான் கூறுவதன் காரணம் என்னவெனில், மனிதர்கள் யாவரும் குற்றம்

குறையுள்ளவர்களே. எனவே, குற்றம் குறையுள்ள அவர்கள் எதைத் தொட்டாலும் அதுவும் குற்றம் குறையுள்ளதாகிவிடுகிறது. குற்றம் குறையற்ற நிறை நிலை, கடவுளின் பிரத்தியேகமான மகத்துவமாகும். அது விவரிக்க முடியாதது, வியாக்கியானம் செய்ய முடியாதது.

கடவுளைப் போல் ஒவ்வொரு மனிதனும் குற்றம் குறையற்ற நிறை நிலையை அடைவது சாத்தியம் என்பதே எனது நம்பிக்கையாகும். அந்த நிலையை அடைய நாம் எல்லோரும் பெருமுயற்சி செய்ய வேண்டியது அவசியம். அத்தகைய அருள் நிலையை நாம் அடையும்போது, அது விவரிக்க முடியாததாக, வரையறுத்துச் சொல்ல முடியாததாக ஆகிவிடுகிறது. எனவே, நான் மிகப் பணிவுடன் ஒப்புக்கொள்ளுவது என்னவெனில், வேதங்கள், குரான், பைபிள் எல்லாம் கடவுளின் வாக்கியங்களேயாகும், ஆனால் குற்றம் குறைகள் நிறைந்த, பல்வேறு வெறிக்குணங்களால் அங்குமிங்கும் அலைக்கப்படும் நாம் கடவுளின் வாக்கியங்களை அவற்றின் பூரண நிலையில் புரிந்து கொள்ளுவது கூட சாத்தியமற்றது என்பதுதான். 'உங்களுடைய சம்பிரதாயங்களை வேரோடு களைந்து விடாதீர்கள்' என்று முஸ்லிம், கிறிஸ்தவ சிறுவர்களுக்கு நான் கூறுவது போலவே, உங்களுடைய வளர்ச்சிக்குக் காரணமான சம்பிரதாய முறைகளை வேருடன் களைந்து புறக்கணித்து விடவேண்டாம் என்று ஹிந்து சிறுவர்களுக்கும் நான் கூறுகிறேன். எனவே, நீங்கள் பைபிளையும் குரானையும் கற்றுக்கொள்ளுவதை நான் வரவேற்கிறேன் என்றாலும், எனக்கு வற்புறுத்தும் சக்தி இருக்குமாயின், கீதையைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஹிந்து சிறுவர்கள் எல்லோரையும் நான் நிச்சயமாக வற்புறுத்துவேன். கல்விசாலைகளில் உள்ள மாணவர்களிடையே தூய்மை இல்லை. வாழ்க்கையின் முக்கியமான விஷயங்களைக் கூட அவர்கள் பொருட்படுத்துவதில்லை. வாழ்க்கையின் மகத்தான, மூலாதாரமான பிரச்னைகளைக் கூட மாணவர் உலகம் இறுமாப்புடன் அற்பமானவையாகக் கருதுகிறது. இதற்கெல்லாம் காரணம், இதுவரையில் அவர்களுக்குப் பாதுகாப்பாக இருந்து வந்த சம்பிரதாயங்கள் வேருடன் களையப்பட்டிருப்பதுதான் என்பது எனது கருத்தாகும்.

எனினும், நான் கூறுவதைக் குறித்துத் தப்பெண்ணம் கொள்ளவேண்டாம். புராதனமான ஒவ்வொன்றையும், அது புராதனமானது என்பதற்காக நல்லது என்று நான் கருதுவதில்லை. புராதனமான சம்பிரதாயம் சம்பந்தப்பட்டவரையில், கடவுளால் அளிக்கப்பட்ட பகுத்தறிவை உபயோகிக்காமல் அதை விட்டுவிடவேண்டும் என்று நான் கூறவில்லை. எந்த ஒரு சம்பிரதாயமும், அது எவ்வளவு புராதனமானதாக இருப்பினும், ஒழுக்கத்திற்கும் தருமத்திற்கும் முரணாக இருக்குமாயின், அதை நாட்டிலிருந்தே ஒழித்துவிடவேண்டும். தீண்டாமையை, ஒரு புராதன சம்பிரதாயமாகக் கருதலாம். சிசு விவாகம், பால்ய வைதவ்யம் (சிறு பெண்கள் விதவையாதல்) ஆகியவையும் புராதன சம்பிர

தாயங்களாகக் கருதப்படலாம். மற்றும் அவைபோன்ற பல பயங்கரமான நம்பிக்கைகளேயும், மூடத்தனமான வழக்கங்களேயும் புராதன சம்பிரதாயங்களாகக் கருதலாம். எனக்கு அதிகாரம் இருக்குமாயின், அத்தகைய வழக்கங்களேயெல்லாம் அடியோடு ஒழித்துவிடுவேன். எனவே புராதனமான சம்பிர தாயங்களுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று நான் கூறுவதன் அர்த்தத்தை இப்போது நீங்கள் அறிந்து கொள்ள லாம். பைபிளிலும் குரானிலும் நான் காணும் அதே கடவுளேயே பகவத கீதையிலும் காண்கிறேன். பகவத் கீதையிலிருந்து அதிக உணர்ச்சியையும் உத்வேகத்தையும் பெறமுடியும் என்று நான் ஹிந்து மாணவர்களுக்குக் கூறுகிறேன். ஏனெனில், மற்ற நூல்களேக் காட்டிலும் கீதையே அவர்களுக்கு அதிகப் பொருத்த முள்ளதாக இருக்கும்.

—'எங் இந்தியா' – 22-9-1927

# 7
# கிருஷ்ணனும் கீதையும்

மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த அர்சிகரியில் நடந்த கூட்டத்தில் கீதையைப்பற்றி காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் சுருக்கமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

கிருஷ்ண ப்ரமாத்மாவின் வாழ்க்கை நமக்குக் கற்பிப்பது என்ன என்பதை நாம் அறியோம். நாம் கீதையை வாசிப்ப தில்லே. அதை நமது குழந்தைகளுக்குக் கற்பிக்கவும் நாம் முயற் சிப்பதில்லே. கீதை ஒரு மகோன்னதமான நூல். சாதி, மதம், வயது, தேசம் என்ற வேற்றுமையின்றி அதை எல்லோரும் பக்தி யுடன் வாசிக்கலாம். தங்கள் தங்களுடைய மதங்களின் கொள்கைகளே அவர்கள் கீதையில் காணலாம்.

ஒவ்வொரு ஜன்மாஷ்டமி தினத்திலும் நாம் கிருஷ்ணனேப் பற்றிச் சிந்திக்கவேண்டும்; கீதையை வாசிக்கவேண்டும்; அதன் உபதேசங்களேப் பின்பற்றுவதாக உறுதி செய்து கொள்ள வேண்டும். அவ்விதம் செய்து வந்திருந்தால், இன்றுள்ள துக்க கரமான நிலேயில் நாம் இருக்க மாட்டோம். ஸ்ரீ கிருஷ்ணன் தமது ஆயுள் முழுவதும் மக்களுக்குத் தொண்டு புரிந்து வந்தார். அவர் தான் மக்களின் உண்மையான ஊழியராக இருந்தார். குருக்ஷேத்திரத்தில் பாண்டவர்களுக்கும் அவர்களுடைய சைன் யங்களுக்கும் தலேமை வகித்து அவர் போரை நடத்தியிருக்கலாம். ஆனல், அர்ஜுனனின் சாரதியாக இருப்பதையே அவர் விரும்பினர். அவரது ஆயுள் முழுவதும் இடைவிடாத கர்ம

கீதையாகவே இருந்தது. கர்வம் பிடித்த துரியோதனன் அளிக்க முன் வந்த அறுசுவை விருந்தை அவர் நிராகரித்துவிட்டு, பக்தியும் பணிவும் உள்ள விதுரர் அளித்த கீரையையே விருப்பத்துடன் சாப்பிட்டார்.

குழந்தைப் பருவத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் மாடு மேய்க்கும் இடையனுக இருந்தார். இன்னும் நாம் அவரை மனம் நெகிழ்ந்து 'கோபாலா' என்றே அழைக்கிறோம். ஆனல், அவரைப் பூஜிப்பவர்களான நாம் இன்று பசுவை அசட்டை செய்துவிட்டோம். ஆதிகர்னுடகர்கள் பசுக்களைக் கொன்று அவற்றின் இறைச்சியைத் தின்கிருர்கள். அதனுல் நமது குழந்தைகளும் நோயாளிகளும் பசும்பால் கிடைக்காமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. தூக்கம் அல்லது சோம்பேறித்தனம் என்ருல் என்ன என்பதே கிருஷ்ணனுக்குத் தெரியாது. அவர் தூக்கமே இல்லாமல் எப்போதும் விழித்தவண்ணம் உலகத்தைப் பாதுகாத்துவந்தார். ஆனல், அவரது சந்ததிகளான நாம் சோம்பலுக்கு இடம் கொடுத்து, நமது கைகளின் உபயோகத்தையே மறந்துவிட்டோம்.

கிருஷ்ண பகவான் பகவத் கீதையில் நமக்கு பக்தி மார்க்கத்தைக் காட்டியிருக்கிருர். அதுதான் கர்ம மார்க்கமாகும். நாம் பக்தர்களாக விரும்பினுலும் அல்லது ஞானிகளாக விரும்பினுலும், அதற்கு ஒரே வழி கர்மத்தைச் செய்வதுதான் என்று லோகமான்ய திலகர் நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிருர்.* கர்மம் என்பது தனக்குத்தானே தொண்டு செய்வதல்ல, பிறருக்குத் தொண்டு செய்வதேயாகும். தன் சொந்தத்திற்குச் செய்யும் காரியம் தன்னை மேலும் கட்டுப்படுத்துவதாக இருக்கிறது. பிறருக்காகச் செய்யும் காரியம் அடிமைத்தனத்திலிருந்து நம்மை விடுதலை செய்கிறது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோரும் செய்யக் கூடிய பிறருக்கு நலன் அளிக்கும் செயல் எதுவாக இருக்க முடியும்? நூற்பது ஒன்றுதான் சிறந்த தியாகம் என்பதையும், பிறருக்கு நலன் அளிக்கக் கூடியது என்பதையும் நிரூபிக்க நான் முயற்சித்து வந்திருக்கிறேன். கடவுளின் பெயரால் செய்யக் கூடிய தொண்டு, பரம ஏழைகளுக்காகச் செய்யக் கூடிய தொண்டு, சோம்பேறித்தனமான உறுப்புகளுக்கு வேலை கொடுக்கக் கூடிய தொண்டு நூற்பது ஒன்றுதான். உண்மையான பக்தர்களாக இருக்கவேண்டுமாயின், ஒரு பிராம்மணனுக்கும் ஒரு தோட்டிக்கும் இடையே நாம் எவ்வித வேற்றுமையும் பாராட்டக் கூடாது என்று கிருஷ்ண பரமாத்மா நமக்குக் கற்பித்திருக்கிருர். அது உண்மையாயின்,

---

*கர்ம யோகம் அல்லது கடமையைச் செய்வதுதான் கீதையின் ரகசியமாகும், என்று லோகமான்ய திலகர் கூறியிருப்பதையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். லோகமான்யர் கூறுவதாவது: "கடமையைச் செய்துதான் தீர வேண்டும். கடமையைச் செய்வது மோட்சத்திற்குத் தடையாக இருப்பதில்லை. அதற்குமாருக, கடமையைச் செய்வதன் மூலம்தான் மோட்சத்தை அடைய முடியும்.''

பின்னர் ஹிந்து மதத்தில் தீண்டாமைக்கு இடம் இருக்க முடியாது. ஹிந்து மதத்தில் தீண்டாமைக்கு இடம் உண்டு என்ற மூடநம்பிக்கையை நீங்கள் தழுவிக் கொண்டிருப்பீர்களாயின், கிருஷ்ணன் பிறந்த இந்தப் புனித தினத்தில் நீங்கள் அந்த மூடநம்பிக்கையை ஒழித்து உங்களைத் தூய்மைப் படுத்திக் கொள்ளவேண்டும். கீதையை உறுதியுடன் பின்பற்றுவோர், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் பாராட்டக் கூடாது. கடவுளை உண்மையான உள்ளத்துடன் பூஜிப்பவன் எந்தப் பெயரில் பூஜித்தாலும், அதைத் தாம் ஏற்றுக் கொள்ளுவதாக கிருஷ்ண பரமாத்மா பிரகடனம் செய்திருக்கிறார். கீதையில் விவரித்துள்ளபடி பக்தி, கர்மம், அன்பு மார்க்கமானது, ஒரு மனிதன் மற்றொரு மனிதனை வெறுப்பதற்கு இடமே கொடுக்கவில்லை.

—'எங் இந்தியா' – 1—9—1927

# 8

# மகாபாரதத்தின் ஒரு பகுதி

கீதை, மகாபாரதத்தின் ஒரு சிறு பகுதியே. மகாபாரதம் ஒரு சரித்திர நூலாகவே கருதப்படுகிறது. ஆனால், மகாபாரதமும் ராமாயணமும் சரித்திர நூல்கள் அல்ல என்றே நாம் கருதுகிறோம். அவ்விரண்டும் மத சம்பந்தமான தரும நூல்கள் என்பதே நமது கருத்தாகும். அவற்றை சரித்திர நூல்கள் என்று கூறுவதாயின், அவை ஆன்மாவைப் பற்றிய சரித்திரங்களே. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் என்ன நிகழ்ந்தது என்பதை அவை வர்ணிக்கவில்லை; ஒவ்வொரு மனிதனின் மனத்திலும் இன்று என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதையே அவை சித்திரிக்கின்றன. ராமாயணத்திலும் மகாபாரதத்திலும் யுத்தத்தைப் பற்றிய வர்ணனை அடங்கியிருக்கிறது. தேவர்களுக்கும் அசுரர்களுக்கும், ராமனுக்கும் ராவணனுக்கும் தினந்தோறும் நடந்துவரும் யுத்தத்தைப் பற்றியதே அந்த வர்ணனையாகும். கீதையில் கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையும் அத்தகைய ஒரு வர்ணனையே. குருடனான திருதராஷ்டிரனின் முன்னிலையில், சஞ்சயனால் அந்த சம்பாஷணை விவரிக்கப்படுகிறது. கீதா என்ற சொல்லுக்கு 'பாடப்பட்டது' என்பதே பொருள். இங்கே உபநிடதம் என்ற சொல் தொக்கி நிற்கிறது. அதாவது, 'உபநிடதம் பாடப்பட்டது' என்பதே அதன் பூரண அர்த்தமாகும். ஞானம் அதாவது போதனை அல்லது உபதேசம் என்பதே உபநிடதம் என்ற சொல்லின் பொருளாகும். எனவே கீதை என்பதற்கு, அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் செய்த உபதேசங்கள் என்று பொருள் கொள்ளலாம்.

நம்முள் இருக்கும் இறைவனை கிருஷ்ண பரமாத்மா எப்போதும் நம் இதயத்தில் இருக்கிறார். அர்ஜுனனைப் போல் நாமும் ஞானம் பெறவேண்டும் என்று ஆர்வம் கொள்ளும் போதெல்லாம் அவரை நாம் நாடினால், அவர் நமக்கு அடைக்கலம் அளிக்க எப்போதும் தயாராக இருக்கிறார். நாம் தூங்குகிறோம். நம்முள் இருக்கும் இறைவன் எப்போதும் விழித்துக் கொண்டிருக்கிறார். நமக்கு ஞானத்தில் ஆர்வம் ஏற்பட வேண்டும் என்பதற்காக அவர் காத்துக் கொண்டிருக்கிறார். அவரை எப்படிக் கேட்பது என்பது நமக்குத் தெரியவில்லை. அவரைக் கேட்க வேண்டும் என்ற விருப்பம் கூட நமக்கு இருப்பதில்லை. அதனாலேயே கீதையைப் போன்ற ஒரு நூலை நாம் தினந்தோறும் பாராயணம் செய்கிறோம்; ஞானத்தைப் பெறவேண்டும் என்ற ஆர்வம் நம் மனத்தில் உண்டாகும்படி செய்ய நாம் விரும்புகிறோம்.

இடுக்கண் ஏற்படும்போது கஷ்டம் தீர்ந்து ஆறுதல் பெறுவதற்காக நாம் கீதையின் துணையை நாடுகிறோம். அது நமக்கு ஏக காலத்தில் குருவாகவும் தாயாகவும் இருக்கிறது. அந்தத் தாயின் மடியில் தலையை வைத்துக் கொண்டால், நமக்கு ஒரு போதும் எவ்வித அபாயமும் ஏற்படாது என்பதில் நமக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். நமது ஆன்மிக சிக்கல்களையெல்லாம் கீதை தீர்த்து, நமது மனத்திற்குத் தெளிவை உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்விதமாக கீதையைப் பற்றிச் சிந்திப்போருக்கு ஒவ்வொரு நாளும் புதிய ஆனந்தம் ஏற்படும்; அதற்குப் புதிய புதிய அர்த்தங்களும் தோன்றும். கீதையினால் தீர்க்க முடியாத ஆன்மிக சம்பந்தமான சிக்கல் எதுவுமே இல்லை. போதிய நம்பிக்கையின்மை காரணமாக அதை வாசிக்கவோ, புரிந்து கொள்ளவோ நமக்குத் தெரியாவிட்டால், அது வேறு விஷயமாகும்.

நம் மனத்தில் நம்பிக்கை இடைவிடாது வளர்ச்சி பெறவேண்டும் என்பதற்காகவும், எப்போதும் நாம் கண் விழிப்புடன் இருக்கவேண்டும் என்பதற்காகவுமே நாம் தினந்தோறும் கீதையைப் பாராயணம் செய்கிறோம்.

—'எங் இந்தியா' – 20—11—1930

## 9

# கீதையை மனப்பாடம் செய்ய வேண்டும்

கீதை எனக்கு எவ்வளவு முக்கியமானது என்பதை 'ஹரிஜன்' வாசகர்கள் அறிவர். கீதையைப் போன்ற நூல்களை மனப்பாடம் செய்து கொள்ள வேண்டியது மிகவும் விரும்பத்தக்கது என்பதே எப்போதும் நான் கொண்டுள்ள கருத்தாகும். எனினும் நான் பல தடவை முயற்சித்தும் கூட, கீதையில் உள்ள எல்லா

அத்தியாயங்களையும் மனப்பாடம் செய்ய என்னால் இயலவே இல்லை. நெட்டுருப் போட்டு மனப் பாடம் செய்து கொள்ளும் திறமை எனக்கு இல்லை என்பதை நான் அறிவேன். எனவே, கீதையை மனப்பாடம் செய்துள்ள ஆடவரோ, பெண்ணோ யாரை யாவது நான் சந்தித்தால், எனக்கு அவர்மீது மிகுந்த மதிப்பு ஏற்படுகிறது.

நான் தமிழ்நாட்டில் யாத்திரை செய்த போது, அவ்விதம் கீதையை மனப்பாடம் செய்த இருவரைச் சந்தித்தேன். அவ்விருவரில் ஒருவர் மதுரையில் உள்ள ஒரு கனவான்; மற்றொருவர் தேவக்கோட்டையில் உள்ள ஒரு பெண்மணி. மதுரையைச் சேர்ந்த அந்த கனவான் யாருக்கும் தெரியாத ஒரு சிறிய வியாபாரி. பார்வதிபாய் என்ற பெயருள்ள அந்தப் பெண் காலஞ் சென்ற நீதிபதி சதாசிவ ஐயரின் மகள். வருடந்தோறும் கீதையை யார் சிறிதும் தவறாமல் மனப்பாடம் செய்து ஒப்புவிக்கிறாரோ, அவருக்குப் பரிசளிக்க நீதிபதி சதாசிவ ஐயர் தாம் ஜீவதசையுடன் இருந்தபோது ஏற்பாடு செய்திருந்தார்.

எனினும், கீதையை மனப்பாடம் செய்து ஒப்புவிப்போர், ஒரு விஷயத்தை உணர்ந்துகொள்ள வேண்டும். மனப்பாடம் செய்து ஒப்புவிப்பதுடன், கீதையை வாசிப்பதன் லட்சியம் பூர்த்தியாகி விடாது. கீதையைப் பற்றிச் சிந்திப்பதற்கும், அதன் உபதேசத்தையும் பொருளையும் ஆராய்ந்து நடைமுறையில் அனுசரிப்பதற்கும், அவ்விதம் மனப்பாடம் செய்வது உதவியாக இருக்க வேண்டும். பொறுமையுடன் முயற்சித்தால், ஒரு கிளியைக் கூட கீதையை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும்படி செய்துவிட முடியும். எனினும், அதனால் கிளி யாதொரு பலனும் பெறுவதற்கில்லை.

கீதையை மனப்பாடம் செய்து ஒப்புவிப்போர், அவரிடமிருந்து கீதையின் ஆசிரியர் என்ன எதிர்பார்க்கிறாரோ, அவ்விதம் இருக்கவேண்டும். அதாவது, பரந்த அர்த்தத்தில் அவர் ஒரு யோகியாக இருக்க வேண்டும். கீதையின் பக்தர்களுடைய ஒவ்வொரு எண்ணமும், பேச்சும், செயலும் ஒன்றுக்கொன்று சிறிதும் முரணின்றி ஒரேவிதமாக இருக்க வேண்டும். ஒருவருடைய பேச்சும் செயலும் அவரது எண்ணங்களுக்கு இணங்க இராவிட்டால், அவரை ஒரு மோசக்காரர் அல்லது வேடதாரி என்றுதான் கூற வேண்டும்.

—'ஹரிஜன்' – 2—2—1934

# 10

# கீதையின் கொள்கை

சாபர்மதி ஆசிரமவாசிகள் அடங்கிய கூட்டம் ஒன்றில் காந்திஜி கூறியதாவது:

நான் கீதையின் பக்தன். கர்மவினையின் தயவு தாட்சண்யமற்ற விதியில் உறுதியான நம்பிக்கை உள்ளவன். மிகவும் அற்பமான தடுமாற்றமும் தவறும்கூட காரணமின்றி ஏற்படுவதில்லை. எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் கீதையைப் பின்பற்றி நடக்க முயற்சிக்கும் ஒருவன் நோய்வாய்ப்படுவது, எனக்கு விந்தையாகவே இருக்கிறது. அதிக ரத்த அமுக்கத்தினால் எனக்கு உண்டாகும் இந்த வேதனைக்குக் காரணம் மனக் கவலையும் மனத்திற்கு அதிக வேலை கொடுப்பதும்தான் என்று டாக்டர்கள் என்னிடம் நிச்சயமாகக் கூறுகிறார்கள். அது உண்மையாயின், நான் அனாவசியமாக மனத்தை அலட்டிக் கொண்டு கவலைப்படுகிறேன், அனாவசியமாக ஆத்திரப்படுகிறேன் எனலாம். கோபம், காமம் போன்ற வெறிகளுக்கு ரகசியமாக இடம் கொடுக்கிறேன் என்று ஏற்படலாம். எத்தகைய நிகழ்ச்சியோ, சம்பவமோ எனது மனச் சாந்தியை ஏன் கெடுக்க வேண்டும்? நான் எவ்வளவோ முயற்சித்தும்கூட, எனது மன அமைதியை அவை சீர்குலைக்கின்றன என்பதிலிருந்து, கீதையின் கொள்கையில் குறைகள் இருக்கின்றன என்று கூறுவதற்கில்லை; கீதையில் எனக்குள்ள பக்தியில்தான் குறைகள் இருக்கின்றன என்று கூறவேண்டும். கீதையின் கொள்கை எக்காலத்துக்கும் உண்மையே. அதைப் பற்றிய எனது அறிவிலும், அதன் உபதேசங்களை நான் நடைமுறையில் அனுசரிப்பதிலும்தான் குற்றம் குறைகள் ஏராளமாக இருக்கின்றன.

—'ஹரிஜன்' - 29—2—1936

# 11

# அவன் அருள் இன்றேல்...

விசேஷ முன்னெச்சரிக்கையுடன் இருக்கும்படி வைத்திய நண்பர்கள் எனக்கு ஆலோசனை கூறியிருக்கிறார்கள். எனது இரண்டு சக கைதிகளும்* என் விஷயத்தில் விசேஷ அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் விளைவாக நான், என் விருப்பமின்றியே ஓய்வு எடுத்துக் கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டி

---

* தம்முடன் சிறையில் இருந்த சர்தார் வல்லபாய் பட்டேலையும், ஸ்ரீ ஜம்னாலால் பஜாஜையுமே இரண்டு சக கைதிகள் என்று காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

ருக்கிறது. அவர்களின் வற்புறுத்தல் இல்லாவிடில், நான் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்க மாட்டேன். எனினும் இந்த ஓய்வு, என் உள்ளத்தை நானே துருவிப் பார்த்துக் கொள்ள நிறைய அவகாசம் அளித்தது. அதனுல் நான் பலன் அடைந்தது மாத்திரமல்ல, எனக்குப் புரிந்தவரையில் கீதையின் உபதேசத்தை நான் பின்பற்றுவதில் உள்ள முக்கியமான குறைகளும் அதன் பலனுக எனக்குப் புலப்பட்டன. நான் தீர்க்க வேண்டிய எண்ணிக்கையற்ற பிரச்னைகளையும் நான் போதிய அளவு பற்றற்ற முறையில் அணுகவில்லை என்பதைக் கண்டுகொண்டுள்ளேன். அந்தப் பிரச்னைகளில் பல எனக்கு சஞ்சலத்தைக் கொடுத்து என் மனத்தில் பல்வேறு உணர்ச்சிகளை எழுப்பவும், என் மன அமைதியைப் பாதிக்கவும் நான் இடம் கொடுத்திருக்கிறேன். மற்ருெரு விதமாகக் கூறுவதாயின், அந்தப் பிரச்னைகளால் என் உடலும் மனமும் பாதிக்கப்படாமல் இருக்கவில்லை. ஆனல், கீதையின் உண்மையான ஒரு பக்தனுடைய உடலையோ, மனத்தையோ எந்தப் பிரச்னையும் பாதிக்காது. என்றென்றும் அழிவற்ற அன்னையான கீதையின் உபதேசங்களை எழுத்துக்கு எழுத்து அப்படியே பின்பற்றும் ஒருவருடைய மனம் ஒரு காலத்திலும் தளர்ச்சியடையாது; என்றென்றும் இளமையாகவே இருக்கும். அத்தகைய ஒருவரது உடல், பச்சை மரத்தில் உள்ள இலைகளைப் போல் நாளடைவில் உலர்ந்து உதிர்ந்துவிடும். ஆனல், அவரது மனம் எப்போதும் போல் பசுமையாகவும் இளமையாகவுமே இருக்கும். பீஷ்மர் மரணப் படுக்கையில் இருந்தபோது கூட, யுதிஷ்டிரருக்கு அற்புதமான உபதேசம் செய்யும் சக்தியுடையவராக இருந்ததன் ரகசியம் அதுதான் என்றே எனக்குத் தோன்றுகிறது. என்னைச் சுற்றி நிகழும் சம்பவங்களைக் கண்டு நான் பரபரப்போ, கவலையோ அடையக் கூடாது என்று வைத்திய நண்பர்கள் அலுப்புசலிப்பின்றி என்னை எப்போதும் எச்சரித்து வருகிருர்கள். துக்ககரமான செய்திகள் ஏதாவது வந்தால், அவற்றை எனக்குத் தெரியாமல் மறைக்கப் பெருமுயற்சி செய்கிருர்கள். என் விஷயத்தில் அவர்கள் அவ்வளவு முன்னெச்சரிக்கையான ஏற்பாடு செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், நான் கீதையின் அவ்வளவு மோசமான ஒரு பக்தன் அல்ல. எனினும், அவர்களுடைய முன்னெச்சரிக்கைக்கு ஆதாரம் இருக்கிறது என்பதில் ஐயமில்லை. மகன்வாடியிலிருந்து மகிளா ஆசிரமத்திற்குப் போகவேண்டும் என்ற ஜம்னலால் பஜாஜின் நிபந்தனையை ஒப்புக்கொள்ள எனக்கு விருப்பமே இல்லை. மகன்வாடியை விட்டுச் செல்ல மனமின்றியே, அவரது நிபந்தனையை நான் ஏற்றுக் கொண்டேன். அது எப்படியாயினும், நான் பற்றில்லாதவன் என்பதில் அவருக்கு இருந்த மதிப்பு போய்விட்டது. நான் பெருமையடித்துக் கொண்டிருந்த பற்றின்மையை இகழ்வதற்கு அவருக்கு தகுந்த காரணம் கிடைத்துவிட்டது. எனவே, அவ்விஷயத்தில் நான் குற்றவாளிதான் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

பிறகு, அதைக் காட்டிலும் மோசமான ஒரு சம்பவமும் நிகழ்ந்துவிட்டது. *1899*–ஆம் ஆண்டிலிருந்து நெஞ்சறிந்தும் தீர்க்

காலோசனையுடனும் நான் பிரம்மச்சரியத்தை அனுசரிக்க முயற்சித்து வந்திருக்கிறேன். பிரம்மச்சரியம் என்ருல் உடல் சம்பந்தப்பட்டவரையில் மாத்திரம் அல்ல, பேச்சிலும் எண்ணத்திலும் கூட பரிசுத்தமாக இருக்க வேண்டும் என்பதே எனது உறுதியான கருத்தாகும். ஒரே ஒரு தடவை அதிலிருந்து நான் தவறியதாகவே கருதப்பட வேண்டும் என்பதைத் தவிர, மற்றப்படி சென்ற முப்பத்தாறு ஆண்டுகளாக இடைவிடாமலும் மனப்பூர்வமாகவும் நான் அனுசரித்துவரும் பிரம்மச்சரியத்திலிருந்து ஒரு தடவை கூட வழுவியதாக எனக்கு ஞாபகம் இல்லை. ஆனுல், இந்த முறை நான் நோயுற்றிருந்தபோது மாத்திரம் ஒரே ஒரு முறை என் மன உறுதி கலைந்தது. அதைக் குறித்து என் மீது எனக்கே வெறுப்பு உண்டாகியது. அந்த உணர்ச்சி எனக்கு ஏற்பட்டதும் நான் எனது நிலையை எனக்குப் பணிவிடை செய்பவர்களுக்கும் வைத்திய நண்பர்களுக்கும் அறிவித்தேன். அவர்களால் எனக்கு எவ்வித உதவியும் அளிக்க முடியவில்லை. நான் அவர்களிடமிருந்து எவ்வித உதவியையும் எதிர்பார்க்கவும் இல்லை. அந்த அனுபவத்திற்குப் பிறகு நான், என்மீது திணிக்கப் பட்டிருந்த கண்டிப்பான ஓய்வை உதறித் தள்ளிவிட்டேன். மிகவும் இழிவான அந்த அனுபவத்தை நான் ஒப்புக் கொண்டது, எனக்கு மிகுந்த மன ஆறுதலைக் கொடுத்தது. என் தலை மீதிருந்த ஒரு பெரிய சுமையே அகன்று விட்டதுபோல் எனக்குத் தோன்றியது. அதன் காரணமாக, எத்தகைய அபாயமும் ஏற்படுமுன் என்னை நிதானப்படுத்திக் கொள்ளுவதும் சாத்தியமாயிற்று.

என் மீது சுமத்தப்பட்ட இந்த ஓய்வானது, என்னை இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு மிகப் பணிவுள்ளவனுகச் செய்துவிட்டது. எனது எல்லைகளையும் குற்றம் குறைகளையும் அது வெளிப்படுத்தியிருக்கிறது. அந்தக் குற்றம் குறைகளைக் குறித்து நான் வெட்கப்படவில்லை. பொது மக்களுக்குத் தெரியாமல் அவற்றை நான் மறைத்திருந்தால், அதைக் குறித்தே வெட்கப் படவேண்டியிருக்கும். கீதையில் எனக்குள்ள நம்பிக்கை எப்போதும் போல் பிரகாசமாகவே இருந்துவருகிறது. அந்த நம்பிக்கையை, பொன் போன்ற சிறந்த அனுபவமாக மாற்றுவதற்கு நான் கொடுக்கவேண்டிய விலை, சோர்வில்லாத, இடைவிடாத முயற்சியே. இறைவனின் அருள் இன்றேல் அத்தகைய அனுபவம் நமக்குக் கிட்டாது என்பதை, சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி அதே கீதைதான் நமக்கு உபதேசிக்கிறது. இறைவனின் அருளுக்கு அத்தகைய மகத்துவம் இல்லையெனில், இறுமாப்பினுல் நம் எல்லோருக்கும் மண்டைக் கனம் ஏற்பட்டிருக்கும்!

—'ஹரிஜன்' – 29-2-1936

# 12

# அன்பே கடவுள், போர் அல்ல

இங்கிலாந்தில் கேனன் ஷெப்பர்டும் மற்றும் சில கிறிஸ்தவர்களும் யுத்த எதிர்ப்பு இயக்கத்தை நடத்திவருகிறார்கள். அந்த இயக்கத்தை எல்லையின்றிக் கண்டித்து டில்லி 'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகையில் நான்கு கட்டுரைகள் வெளியாகியிருக்கின்றன. அந்தக் கட்டுரைகளை எழுதியவர், தமது கூற்றுக்கு ஆதாரமாக பகவத் கீதையின் பெயரையும் இழுத்திருக்கிறார். அவர் கூறுவதாவது :

"கிறிஸ்தவ சமயத்தின் உண்மையான, ஆனால் அனுசரிப்பதற்குக் கஷ்டமான உபதேசம் என்னவெனில், சமூகம் அதன் விரோதிகளை எதிர்த்துப் போராட வேண்டும்; அதே சமயத்தில் அவர்களிடம் அன்பு காட்டவும் வேண்டும் என்பதே.

"பகவத்கீதையின் தெளிவான உபதேசமும் அதுதான். இதை தயவு செய்து ஸ்ரீ காந்தியும் கவனித்துக்கொள்ளுவாராக. எள்ளளவும் அச்சமின்றி யார் போர் புரிகிறானோ, மனத்தில் சிறிதும் துவேஷ உணர்ச்சியின்றி நடந்து கொள்கிறானோ அவனே வெற்றியடைந்தவனாகிறான் என்று பகவத் கீதையில் கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். கொள்கை காரணமாக யுத்தத்தை ஆட்சேபிப்பவருக்கும் போர் வீரருக்கும் நடைபெறும் வாதத்திற்கு, அந்த மகத்தான இலக்கியத்தின் இரண்டாவது அத்தியாயம் ஒரு முடிவு கட்டிவிடுகிறது. அதிலிருந்து மேற்கோள்களை எடுத்துக்கூற இங்கே இடமில்லை. அந்தக் காவியமானது (பகவத் கீதை) ஒரு முறை அல்ல, பல முறையும் திரும்பத் திரும்ப வாசிப்பதற்கு உகந்தது."

'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகையில் கட்டுரைகளை எழுதியவர் தமக்குச் சாதகமாக எந்த சுலோகங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கிறாரோ, அதே சுலோகங்களையே பலாத்காரத்தில் ஈடுபட்டுள்ள பயங்கரவாதிகளும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள் என்பதை அவர் ஒரு வேளை அறியாமல் இருக்கலாம். ஆனால், உண்மை என்னவெனில், 'ஸ்டேட்ஸ்மென்' கட்டுரையாளர் காணும் அர்த்தத்திற்கு நேர்மாறான அர்த்தமே, பகவத் கீதையை விருப்பு வெறுப்பின்றி நான் வாசித்ததன் பலனாக என் மனத்திற்குத் தெளிவாகத் தோன்றியிருக்கிறது. யுத்தக் கொள்கையையே எதிர்க்கும் மேநாட்டினருக்கும் அர்ஜுனனுக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. யுத்தக் கொள்கையை அர்ஜுனன் ஆட்சேபிக்கவில்லை என்பதை, கட்டுரையாளர் மறந்துவிட்டார்.

அர்ஜுனனுக்கு யுத்தத்தில் நம்பிக்கை உண்டு. கௌரவர்களின் படைகளை எதிர்த்து அதற்கு முன் பல தடவைகளிலும் அவன் போர் செய்திருக்கிறான். யுத்த முஸ்தீபுகளுடன் இரு கட்சிப் படைகளும் நின்றதைப் பார்த்தபோது அவன் தைரி

யத்தை இழந்துவிட்டான். தனக்கு நெருங்கிய உறவினர்களையும் மதிப்பு மிக்க குருமார்களையும் எதிர்த்துப் போரிடும்படி நேரும் என்பதை அவன் திடீரென உணர்ந்து கொண்டதே, அவன் தைரியத்தை இழந்ததற்குக் காரணம். அவன் மனத்தில் சந்தேகம் உண்டாகி, அவன் கிருஷ்ணனைக் கேள்விகள் கேட்டதற்குக் காரணம், மனிதனிடத்தில் அவனுக்குள்ள அன்போ அல்லது யுத்தத்தில் உள்ள வெறுப்போ அல்ல. அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் அளித்த பதிலைத் தவிர வேறு எந்த பதிலும் அவர் அளித்திருக்கவும் முடியாது.

மகாபாரதமாகிய இலக்கியச் சுரங்கத்தில் எத்தனையோ ரத்னங்கள் அடங்கியிருக்கின்றன. அந்த ரத்னங்களில் எல்லாவற்றையும் காட்டிலும் அதிக ஒளி பொருந்தியது கீதைதான். மகாபாரதத்தின் அமரத்தன்மைவாய்ந்த ஆசிரியர், யுத்தத்தினல் யாதொரு பலனும் இல்லை என்பதை உலகத்திற்குக் காட்டியுள்ளார். அந்த யுத்தத்தில் ஈடுபட்ட லட்சக்கணக்கானவர்களில் ஏழு பேர்களே இறுதியில் உயிருடன் மிச்சம் இருந்தார்கள். வெற்றிபெற்ற அவர்களுக்குக் கிடைத்தது, அர்த்தமற்ற வெறும் புகழேயாகும். இரு கட்சியினரும் சொல்லத்தகாத அட்டூழியங்கள் புரிந்தனர். இதை யெல்லாம் ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார். யுத்தம் மூடத்தனமானது என்பதையும், ஒரு வீண் பிரமை என்பதையும் காட்டிலும் மற்றொரு சிறந்த உபதேசமும் மகாபாரதத்தில் அடங்கியிருக்கிறது. அதுதான் மனிதனின் ஆன்மிக சரித்திரமாகும். மனிதனின் மனத்தில் உள்ள நல்ல சக்திகளுக்கும் தீய சக்திகளுக்கும் இடையே தினந்தோறும் நடைபெறும் போராட்டத்தையே மகாபாரதம் எக்காலத்துக்கும் பொருத்தமாக வர்ணித்திருக்கிறது. இறுதியில் நல்ல சக்திகளே வெற்றி பெறுகின்றன என்றாலும், தீய சக்திகளும் பிரமாதமாகப் போர் புரிந்து எல்லோரையும் பிரமிக்க வைக்கின்றன. நீதிநெறியுடன் நடந்து கொள்வதற்கான ஒரே வழியையும் மகாபாரதம் காட்டுகிறது.

—'ஹரிஜன்' – 5-9-1936

# 13

# கீதையும் அகிம்சையும்*

யுத்தத்தை எதிர்த்து கேனன் ஷெப்பர்ட் ஆரம்பித்துள்ள யுத்தத்தைக் கண்டித்து 'ஸ்டேட்ஸ்மெனி'ல் வெளியான கட்டுரைகளுக்கு நான் பதில் அளித்திருந்தேன் அல்லவா? எனக்கு

* கீதைக்கும் அகிம்சைக்கும் உள்ள தொடர்புபற்றி காந்திஜி எழுதியுள்ள சில கட்டுரைகள், 'மகாத்மா காந்தி நூல்கள்' 2-ஆம் தொகுப்பில் 87-லிருந்து 99-ஆம் பக்கம் வரையில் வெளியாகியுள்ளன. எனவே அந்த அத்தியாயங்கள் மீண்டும் இந்தத் தொகுப்பில் கொடுக்கப்படவில்லை.

பதிலளிக்கும் வகையில், அப்பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறது. எனது வாதத்திற்கு தர்க்க ரீதியாக அக்கட்டுரையில் பதில் அளிக்கப்பட்டிருக்கிறது. நான் கூறிய வாதங்களையெல்லாம் அடியோடு மறுக்க, அக் கட்டுரையை எழுதியவர் மிகவும் கெட்டிக்காரத்தனமாக முயற்சித்திருக்கிறார்.

தாம் கொண்டுள்ள நிலைக்கு பகவத் கீதை உதவியாக இருப்பதாகவும், ஆனால் பயங்கரவாதிகளுக்கு அது உதவியாக இல்லை என்றும் கட்டுரையாளர் கூறுகிறார். நோயாளியின் நன்மைக்காகவே ஒரு சர்ஜன் பலாத்காரத்தை உபயோகிக்கிறார். அது போலவே ஒரு நபரின் நன்மைக்காகவே அவருக்கு விரோதமாக பலாத்காரம் உபயோகிக்கப்படவேண்டும். இவற்றைத் தவிர மற்ற சந்தர்ப்பங்களிலும் பலாத்காரத்தை உபயோகிப்பது சட்ட பூர்வமானதே என்று ஒரு தடவை நீங்கள் ஒப்புக்கொண்டுவிட்டால், பின்னர் அவ்விஷயமாக உங்கள் விருப்பப்படி எல்லை வகுக்க முடியாது.

கீதை, மகாபாரதத்தில் உள்ள மிகச் சிறியதோர் அத்தியாயமேயாகும். ஓர் இரவில் நிரபராதிகள் படுகொலை செய்யப்பட்ட பயங்கரமான விவரங்களை மகாபாரதம் வர்ணிக்கிறது. இன்றைய நாகரிக யுத்த சம்பந்தமான சமீப கால அனுபவங்கள் நமக்கு இருந்திராவிடில், அந்த விவரங்களெல்லாம் நடைமுறையில் நம்பக்கூடியவை என்று நாம் எண்ணவே மாட்டோம். பயங்கரமான உண்மை என்னவெனில், பயங்கரவாதிகள் முற்றிலும் யோக்கியப் பொறுப்புடனும், உறுதியுடனும், முன்னுக்குப் பின் முரணின்றியும் கீதையைத் தங்களுக்கு ஆதாரமாக மேற்கொண்டு வந்திருக்கிறார்கள். தங்களுடைய கொள்கைக்கும் சித்தாந்தத்திற்கும் கீதைதான் ஆதாரம் என்றும் அவர்கள் கூறி வந்திருக்கிறார்கள். அவர்களில் சிலருக்கு கீதை மனப்பாடமாகவும் தெரியும்.

எனினும், கீதையின் உபதேசத்தைக் குறித்து நான் செய்யும் வியாக்கியானத்திற்கு அவர்கள் தகுந்த பதில் அளிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள். என்னுடைய வியாக்கியானம் தவறு என்றும், அவர்களுடைய வியாக்கியானம்தான் சரி என்றும் கூறுவதைத் தவிர, இவர்களால் வேறு எதுவும் கூற முடியவில்லை. யாருடைய வியாக்கியானம் சரி என்பதை காலம்தான் முடிவு செய்ய வேண்டும். கீதை வெறும் ஏட்டுச் சுரைக்காய் அல்ல. மானிட வர்க்கத்திற்கு அது ஜீவசக்தி வாய்ந்த, ஆனால் மௌனமான ஒரு வழிகாட்டியாகும். ஒருவர் பொறுமையுடன் பெரு முயற்சி செய்தால்தான், அதன் கட்டளைகளை அறிந்துகொள்ள முடியும்.

கேனன் ஷெப்பர்டின் நிலை அர்ஜுனனின் நிலைக்கு ஒப்பாகும் என்று கட்டுரையாளர் குறிப்பிட்டிருக்கிறார். இது முற்றிலும் தவறான ஓர் உவமையாகும். ஆய்ந்தோய்ந்து பாராமல் அவசரப்பட்டு அவர் அவ்விதம் கூறியிருக்கிறார். அர்ஜுனன், பாண்டவர்

களின் பிரதம தளபதியாக இருந்தான். படைகள் யுத்தத்துக்கு ஆயத்தமாக நிற்கும் கோரக் காட்சியைப் பார்த்ததும், அவன் திடீரென்று தைரியமிழந்து செயலற்றுப்போய்விட்டான். தளபதி என்ற முறையில் தான் செய்ய வேண்டியது என்ன என்பதை அவன் நன்கு அறிவான். தனது தாயாதிகளான உறவினர்களை எதிர்த்துப் போர் புரிய நேர்ந்திருப்பதையும் அவன் அறிவான். தாற்காலிகமாக ஏற்பட்ட பலவீனமே, அர்ஜுனனின் செயலற்ற நிலைக்குக் காரணமாகும். தன் முன் உள்ள கடமையை அவன் கைவிட்டிருக்க முடியாது. அவ்விதம் கைவிட்டிருந்தால், படைக ளிடையே ஒழுங்கு குலைந்து பெரும் குழப்பம் ஏற்பட்டிருக்கும். அதன் விளைவாக, அவனுக்கும், அவனது நண்பர்களுக்கும், அவர்களைப் பின்தொடர்வோருக்கும் அவமானம் ஏற்பட் டிருக்கும். அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் பயங்கரமான படுகொலையில் ஈடுபடக் கடமைப்பட்டிருந்தார்கள். அதற் காகவே அவர்கள் பயிற்சி பெற்றும் இருந்தார்கள். உண்மையில் திடீரென்று எண்ணத்திலும் பேச்சிலும் செயலிலும் அகிம்சைத் தத்துவம் அவனை ஆட்கொண்டிருந்தால், என்ன நேர்ந்திருக்கும் என்று ஊகிப்பது யாதொரு பயனுமற்ற காரியமாகும்.

ஷெப்பர்டையும், அவரது சகாக்களையும் அத்தகைய தத்து வம் ஆட்கொண்டிருப்பதாக நாம் நம்புவோமாக. அது எப்படி யாயினும், எனக்குத் தெரிந்தவரையில் ஷெப்பர்டின் நிலை, அர்ஜுனனின் நிலையிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும். யுத்த சன்னத்தமாக இருக்கும் எந்தப் படைக்கும் ஷெப்பர்ட் தளபதி அல்ல. உறவினர்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையே அவர் யாதொரு வேற்றுமையும் பாராட்டவில்லை. ஒருவர் எங்கே பிறந்தவராக இருந்தாலும், அவரது தோலின் நிறம் எதுவாக இருப்பினும், அவரது பெயர் எதுவாயினும் எல்லோரும் மனிதர் என்பதுதான் ஷெப்பர்டின் சித்தாந்தமாகும். அவர் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்த நூல், வாழ்க்கை நூல்தான். அதை பக்தி யுடன் ஆராய்ச்சி செய்ததன் பலனாக, தம் சொந்த நலனுக் காகவோ அல்லது நாட்டின் நலனுக்காகவோ சக மனிதர்களுக்கு யாதொரு தீங்கும் இழைக்கக் கூடாது என்ற முடிவுக்கு அவர் வந்துள்ளார். எனவே அதற்கு முதற்படியாக, யுத்தத்தில் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ பங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதும் அவரது தீர்மானமாகும். அடுத்த படியாக, அவர் இயல்பாகவே யாதொரு விதிவிலக்குமின்றி எல்லோரிடத்திலும் சமாதானமாகவும், அன்புடனும், நல்லெண் ணத்துடனும் நடந்துகொள்ள வேண்டும் என்ற சித்தாந்தத்தை அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்கு உபதேசிக்க முற்படுகிறார். இந்த நிலையை அர்ஜுனன் எக்காலத்திலும் மேற்கொள்ளவில்லை.

—'ஹரிஜன்' – 26—9—1936

# 14

# ஆன்மிகப் போர்

[டாக்டர் ககாவா மதங்களின் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். காந்திஜியின் அகிம்சை உபதேசத்திற்கும் பகவத் கீதைக்கும் எப்படிப் பொருந்தும் என்பதை அறிந்துகொள்ள அவர் விரும்பினர். சிறிது நேரத்திற்குள் அதைப்பற்றி விவாதித்து முடிவு செய்ய முடியாது என்று அவரிடம் கூறினர் காந்திஜி. கீதைக்குத் தாம் எழுதியுள்ள முகவுரையை வாசிக்கும்படியும் ககாவாவின் கேள்விக்கு அதில் தாம் பதில் அளித்திருப்பதாகவும் காந்திஜி குறிப்பிட்டதுடன், தமது சொந்த அனுபவத்திலிருந்தே தாம் அதை எழுதியிருப்பதாகவும், எனவே தமது நிலையைக் குறித்து பிறருக்கு எப்படியாவது திருப்தி ஏற்படும்படி செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் அந்த விளக்கம் எழுதப்படவில்லை என்றும் அவர் கூறினர்.

—மகாதேவ தேசாய்.]

**டாக்டர் ககாவா:** நீங்கள் தினந்தோறும் பகவத் கீதையைப் பாராயணம் செய்துவருவதாகக் கூறுகிறீர்களே.

**காந்திஜி:** ஆம், ஒவ்வொரு வாரமும் நாங்கள் ஒரு தடவை கீதை முழுவதையும் வாசித்து முடித்துவிடுகிறோம்.

**கேள்வி:** ஆனல், கீதையின் இறுதியில் கிருஷ்ணன் பலாத்கார முறையைத்தான் சிபாரிசு செய்கிறார் அல்லவா?

**பதில்:** நான் அவ்வாறு நினைக்கவில்லை. நானும் போராடி வருகிறேன். நான் பலாத்கார முறையில் போராடுவேனாயின், எனது போராட்டம் பலன் தரத்தக்கதாக இராது. கீதையின் உபதேசத்தை, அந்த நூலின் இரண்டாம் அத்தியாயத்தில் காணலாம். அந்த அத்தியாயத்தில்தான், துக்கத்தையும் சுகத்தையும் சமமாகக் கருதும் மன நிலையைப்பற்றி, மன உறுதியைப்பற்றி கிருஷ்ணன் கூறுகிறார். இரண்டாவது அத்தியாயத்தின் இறுதியில் உள்ள 19 சுலோகங்களில் அந்த நிலையை எவ்வாறு அடைய முடியும் என்பதை கிருஷ்ணன் விவரிக்கிறார். வெறிக் குணங்களையெல்லாம் கொன்றுவிட்டால் அதாவது அடியோடு ஒழித்துவிட்டால்தான் அத்தகைய நிலையை அடைய முடியும் என்று அவர் கூறுகிறார். 'உன்னுடைய வெறிக் குணங்களையெல்லாம் கொன்றபின், உன்னுடைய சகோதரரைக் கொல்லுவதென்பது முடியாத காரியம். வெறிக் குணங்கள் இல்லாதவன், இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக நினைப்பவன், பிறப்பு இறப்பு உள்ள மனிதனை ஆட்டிவைக்கும் சூறாவளிகளால் சிறிதும் கலங்காதவன், எவ்விதம் பிறரைக் கொல்ல முடியும்?' அவ்விவரங்களெல்லாம் ஈடு இணையற்ற விதத்தில் கீதையில் வர்ணிக்

கப்பட்டிருக்கின்றன. கிருஷ்ணன் குறிப்பிடும் போர் ஆன்மிகப் போர் என்பதை அந்த சுலோகங்கள் காட்டுகின்றன.

கே: அது உண்மையான யுத்தம் என்றே சாதாரண மனிதனுக்குத் தோன்றுகிறது அல்லவா?

ப: கீதை முழுவதையும், அது எந்தச் சந்தர்ப்பத்தில் உபதேசிக்கப்பட்டது என்பதையும் விருப்பு, வெறுப்பின்றி நீங்கள் வாசிக்கவேண்டும். போரைப்பற்றி முதலில் குறிப்பிட்ட பின், மற்ற எந்த இடத்திலும் அதைப்பற்றிய பிரஸ்தாபமே இல்லே. மீதியெல்லாம் ஆன்மிக சம்பந்தமான உபதேசங்களே.

கே: உங்களேப் போலவே வேறு யாராவது அதற்கு அவ்விதம் விளக்கம் கொடுத்திருக்கிருர்களா?

ப: ஆம். கீதையில் யுத்தத்தைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனுல் அது நம் உள்ளத்தில் நடக்கும் யுத்தமே. பாண்டவர்களும் கௌரவர்களும், நம்முள் இருக்கும் நல்ல சக்திகளும் தீய சக்திகளுமே ஆவர். அது மனிதனின் உள்ளத்தில் ஜெக்கிலுக்கும் ஹைடுக்கும்,* கடவுளுக்கும் சைத்தானுக்கும் நடைபெற்றுவரும் யுத்தமே. இந்த விளக்கத்திற்கு மகாபாரதத்திலேயே ஆதாரம் இருக்கிறது. கீதை, மகாபாரதத்தின் மிகச் சிறிய நுணுக்கமான ஒரு பகுதிதான். அது இரு குடும்பங்களுக்கிடையே நடந்த யுத்தத்தின் சரித்திரம் அல்ல; அது மனிதனைப் பற்றிய சரித்திரமே; மனிதனின் ஆன்மிகப் போராட்டத்தைப் பற்றிய சரித்திரமே. நான் கொடுக்கும் இந்த விளக்கத்திற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன.

கே: அதனுல்தான், அது நீங்கள் கொடுக்கும் விளக்கம் என்று நான் கூறுகிறேன்.

ப: அதெல்லாம் ஒன்றுமில்லே. அது நியாயமான விளக்கமா, அல்லவா என்பதும், அது உறுதியான நம்பிக்கையை அளிக்கக் கூடியதாக இருக்கிறதா, இல்லேயா என்பதுமே கேள்வியாகும். அது அவ்விதம் இருக்குமாயின், பின்னர் அது எனது விளக்கமாக இருந்தாலும் அல்லது வேறு எந்த நபரின் விளக்கமாக இருந்தாலும் ஒரு பெரிய விஷயம் அல்ல. அது நியாயமான விளக்கமாகவோ அல்லது உறுதியான நம்பிக்கையை அளிக்கக்கூடியதாகவோ இல்லே

---

* ஸ்காட்லந்தில் மிகப் பிரபல நூலாசிரியராக விளங்கிய ராபர்ட் லூயி ஸ்டீபன்சன் (1850—1894) எழுதிய 'டாக்டர் ஜெக்கிலும் மிஸ்டர் ஹைடும்' என்ற உலகப் புகழ்பெற்ற நாவலேயே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். டாக்டர் ஜெக்கில் என்ற நல்ல மனிதன் சிற்சில சமயங்களில் கொடிய அரக்கனுக மாறி பயங்கரமான செயல்களில் ஈடுபடுவதையே அந்த நாவல் சித்திரிக்கின்றது.

யாயின், அது நான் கொடுக்கும் விளக்கமாக இருந்தாலும் கூட அதற்கு மதிப்பில்லை.

**கே:** அர்ஜுனனின் கொள்கைகள் அற்புதமானவை என்றே என் மனத்திற்குத் தோன்றுகின்றன. கிருஷ்ணன் அவனுக்காக ஏதோ காரணத்தைக் கண்டுபிடித்துக் கூறினர். கிறிஸ்தவ மதம் ஏற்படுவதற்கு முன் அது இயல்பாகவும் அவசிய மாகவும் இருந்தது.

**ப:** சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்டு கூட இந்த விளக்கம் தவருகும். ஏனெனில், கிறிஸ்தவ சகாப்தத்திற்கு வெகு காலத்திற்கு முன் புத்தர் வாழ்ந்து வந்தார். அவர் அகிம்சைக் கொள்கையையே உபதேசித்தார்.

**கே:** அர்ஜுனனின் அபிப்பிராயங்கள் கிருஷ்ணனுடைய அபிப் பிராயங்களைக் காட்டிலும் உயர்ந்தவையாக எனக்குத் தோன்றுகின்றன.

**ப:** அப்படியாயின், குருவைக் காட்டிலும் சீடன் மிகப் பெரிய வன் என்று நீங்கள் கருதுகிறீர்கள்!

**டாக்டர்:** எனினும், உங்களுடைய அகிம்சை உபதேசத்தை நான் ஒப்புக் கொள்கிறேன். உங்களுடைய விளக்கத்தை மனத் திற் கொண்டு நான் மீண்டும் கீதையை வாசிக்கிறேன்.

'ஹரிஜன்' — 21 - 1 – 1939

பகுதி மூன்று

# கீதையின் சுருக்கம்

[ 1930–இல் சரித்திரப் புகழ் பெற்ற தண்டி உப்பு சத்தியாக்கிர கத்தில் ஈடுபட்ட காந்திஜியை அதிகாரிகள் எராவ்டா சிறையில் வைத்திருந்தபோது அங்கிருந்து அவர் சாபர்மதி ஆசிரம வாசிகளுக்கு கீதையைப்பற்றி தொடர்ச்சியாகப் பல கடிதங்கள் எழுதினர். காந்திஜி குஜராத்தியில் எழுதிய கடிதங்களை ஸ்ரீ வால்ஜி கோவிந்த தேசாய் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இந்தப் பகுதியில் அக்கடிதங்களே வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. கீதையில் உள்ள பதினெட்டு அத்தியாயங்களின் சுருக்கமும், பதினெட்டு கடி தங்களாக எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.]

## 1

## அர்ஜுனனின் துக்கம்

பாண்டவர்களும் கௌரவர்களும் தங்கள் தங்களுடைய சேனைகளுடன் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் கூடிய போது, கௌரவர்களின் மன்னனுன துரியோதனன், தனக்கு யுத்த சாத்திரத்தைக் கற்பித்த குருவான துரோணரை அணுகினுன். இரு கட்சிகளிலும் உள்ள பிரபல போர் வீரர்களின் பெயர்களை அவன் துரோணருக்கு எடுத்துக் கூறினுன். யுத்தம் தொடங்கப் போகிறது என்பதற்கு அறிகுறியாக இரு பக்கங்களிலும் உள்ள வீரர்கள் சங்கநாதம் செய்தனர். அர்ஜுனனின் சாரதியாக ஸ்ரீ கிருஷ்ணன், இரு படைப் பிரிவுகளுக்கும் மத்தியில் கொண்டுபோய் தமது ரதத்தை நிறுத்தினுர். அப்போது அர்ஜுனன் கண்ட காட்சி, அவன் சோர்வுற்று தைரியத்தை இழக்கும்படி செய்து விட்டது. உடனே அவன் கிருஷ்ணனிடம் இவ்வாறு கூறினுன்:

‘‘கிருஷ்ணு, இவர்களை எதிர்த்து நான் எப்படி யுத்தம் செய்வேன்? அந்நியர்களுடன் யுத்தம் செய்வதாயின் நான் சிறிதும் ஆட்சேபணையின்றி போர் புரிவேன். ஆனுல், இவர்களோ. என் நெருங்கிய உறவினர்கள். கௌரவர்களும் பாண்டவர்களும் சிறிய தந்தை, பெரிய தந்தையின் புதல்வர்கள். நாங்கள் எல்லோரும் சேர்ந்து வளர்ந்தவர்கள். துரோணர் எங்களுடைய குரு; கௌரவர்களுக்கும் அவர் தான் குரு. பூஜ்யரான பீஷ்மரோ எங்கள் இருவருக்கும் பாட்டனுர். கௌரவர்கள் குற்றவாளிகள் என்பதும், தீச்செயல்கள் புரிவோர் என்பதும் உண்மைதான். அவர்கள் பாண்டவர்களுக்குத் தீங்கு இழைத்து அவர்களுடைய நிலங்களைப் பறித்துக் கொண்டு விட்டார்கள். மகா பதிவிரதையான திரௌபதியை அவர்கள் அவமானம் செய்தனர். இருந்தாலும்,

அவர்களைக் கொல்லுவதால் எனக்கு என்ன லாபம்? அவர்கள் மூடர்கள். அத்ற்காக நானும் அவர்களைப் போல் மூடத்தனமாக நடந்து கொள்ள வேண்டுமா? எனக்கு சிறிதளவு அறிவு இருக்கிறது. நியாய அநியாயத்தைப் பாகுபாடு செய்யும் ஆற்றல் எனக்கு உண்டு. உறவினர்களை எதிர்த்துப்போர் செய்வது ஒரு பாவம் என்பதை நான் அறிவேன். ராஜ்யத்தில் பாண்டவர்களுக்குச் சேரவேண்டிய பகுதியை அவர்கள் அநியாயமாக எடுத்துக் கொண்டுவிட்டார்கள். இருந்தாலும், அதை நான் பொருட்படுத்தப் போவதில்லை. அவர்கள் எங்களைக் கொன்றாலும் கூட, எனக்குக் கவலையில்லை. அவர்களை எதிர்த்து ஆயுதங்களை ஓங்க நாங்கள் எப்படித் துணிவோம்? கிருஷ்ணா, என் உற்றார் உறவினருடன் நான் யுத்தம் செய்யமாட்டேன்!''

இவ்விதம் கூறிக்கொண்டே அர்ஜுனன் துக்கம் தாங்க முடியாமல் ரதத்தின் பீடத்தில் அப்படியே சாய்ந்துவிட்டான்.

இத்துடன் கீதையின் முதலாவது அத்தியாயம் முடிவடைகின்றது. இந்த அத்தியாயத்திற்கு, 'அர்ஜுனனின் துக்கம்' என்ற தலைப்பு கொடுக்கப் பட்டிருக்கிறது. அர்ஜுனனைப் போல் நம் எல்லோருக்குமே யுத்தத்தைக் கண்டு துக்கம் ஏற்பட வேண்டும். நம்மிடம் ஏதோ குறை இருப்பதை நாம் உணர வேண்டும். உண்மையை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் நமக்கு இருக்கவேண்டும். அவ்விதம் இருந்தாலொழிய, ஞானத்தைப் பெறுவது முடியாத காரியம். எது தவறு, எது நியாயம் என்பதைக் கூட அறிந்து கொள்ளும் ஆர்வம் ஒருவனுக்கு இராவிடில், அவனுக்கு மதத்தினால் என்ன பலன் ஏற்பட முடியும்?

குருக்ஷேத்திரப் போர் முனை, அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் சம்பாஷணை நடப்பதற்குற்ற ஒரு சந்தர்ப்பத்தை மாத்திரமே அளிக்கின்றது. மனிதனின் இருதயமே உண்மையான குருக்ஷேத்திரம். அதுதான் தரும க்ஷேத்திரமும் (தருமம் இருக்கும் இடம்) ஆகும். உள்ளத்தை கடவுள் இருக்கும் கோவிலாக நாம் கருதி, அதை ஆக்கிரமித்துக் கொள்ளும்படி கடவுளைப் பிரார்த்திப்போமாயின் அது தரும க்ஷேத்திரமேயாகும். தினந்தோறும் இந்தப் போர் முனையில் ஏதாவதொரு விதத்தில் போர் நடந்து வருகிறது. இந்தப் போர்களில் பெரும்பாலானவையும், 'என்னுடையது, உன்னுடையது' என்பதற்கும், உறவினர்களுக்கும் அந்நியர்களுக்கும் இடையே ஏற்படும் வேற்றுமை காரணமாகவே எழுகின்றன. அதனால்தான், ஆசையும் துவேஷமுமே பாவங்களுக்கெல்லாம் ஆணிவேராக இருக்கின்றன என்று பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். அதை நாம் பின்வரும் அத்தியாயங்களில் பார்க்கலாம்.

ஒரு நபரையோ அல்லது ஒரு பொருளையோ என்னுடையது என்று நான் கருத முற்படும்போது, ஆசை என் மனத்தை ஆட்கொள்ளுகிறது. அவரை நான் அந்நியராகக் கருதும்போது, என்

மனத்தில் வெறுப்பு அல்லது துவேஷம் பிரவேசிக்கின்றது. ஆகையால்,'என்னுடைய' என்பதற்கும் 'உன்னுடைய' என்பதற்கும் உள்ள வேற்றுமையை நாம் மறந்துவிட வேண்டும். அதாவது, நாம் நமது விருப்பு வெறுப்புகளை அறவே அகற்றிவிட வேண்டும். கீதை முதலிய மற்ற எல்லா தரும நூல்களுடைய உபதேசமும் இதுதான். இதை வாயளவில் கூறுவது எளிது. எனினும் இதை நடை முறையில் அனுசரிப்பது மிகவும் கஷ்டமாகும். இதை நடைமுறையில் எப்படி அனுசரிப்பது என்பதையே கீதை நமக்கு உபதேசிக்கிறது. அது எடுத்துக் காட்டும் முறையை அறிந்து கொள்ள நாம் முயற்சிக்க வேண்டும்.

# 2

# புலன்களை அடக்காதவனுக்கு கதிமோட்சம் இல்லை

அர்ஜுனனுக்கு ஏற்பட்ட சோர்வு சிறிது அகன்றதும், பகவான் அவனைக் கடிந்து கொண்டு, "இந்த மதி மயக்கம் உனக்கு எப்படி வந்தது? உன்னைப் போன்ற வீரனுக்கு இது சிறிதும் தகுதியில்லை" என்று கூறினார். அப்போதுகூட அர்ஜுனன் தான் முதலில் மேற்கொண்ட நிலையைக் கைவிடவில்லை. அவன் யுத்தம் செய்ய மறுத்து பின் வருமாறு கூறினான்: "எனது மூத்தோர்களையும் மற்ற உறவினர்களையும் கொல்லுவதன் மூலம் எனக்கு ராஜ்யம் கிடைக்குமாயின், இந்த பூமியில் உள்ள சாம்ராஜ்யத்தை மாத்திரமல்ல, சொர்க்க சாம்ராஜ்ய ஆனந்தத்தைக் கூட நான் விரும்பவில்லை. என் மனம் இருளில் தடுமாறுகின்றது. எனது கடமை என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. ஆகையால், நான் உங்களைச் சரண் அடைகிறேன். கருணை கூர்ந்து எனக்கு வழிகாட்டுங்கள்."

அர்ஜுனன் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நிற்பதையும், ஞானத்தை அடைய ஆர்வம் கொண்டிருப்பதையும் கண்ட கிருஷ்ணன், அவன் மீது கருணைகொண்டு அவனுக்கு விஷயங்களை விளக்கிக் கூற முற்பட்டார்: "ஒரு காரணமும் இல்லாமல் நீ துக்கத்திற்கு இடம் கொடுத்திருக்கிறாய். நீ விஷயத்தைப் புரிந்துகொள்ளவில்லை. ஆனால், ஞானியைப் போல் பேசுகிறாய். உடலுக்கும், உடலுக்கு உள்ளே இருக்கும் ஆன்மாவுக்கும் இடையே உள்ள வேற்றுமையை நீ மறந்துவிட்டாய். ஆன்மா எக்காலத்திலும் இறப்பதில்லை. உடல்தான் குழந்தைப் பருவம், யௌவனம், வயோதிகம் முதலிய கட்டங்களைக் கடந்து இறுதியில் அழிவடைகின்றது. உடலுக்குப் பிறப்பு உண்டு; ஆனால் ஆன்மாவுக்கு பிறப்போ, மாறுதலோ எதுவும் இல்லை. ஆன்மா முன்பு இருந்தது; இப்போதும் இருக்கிறது; இனி எக்காலத்

திலும் இருந்து வரும். அப்படியிருக்க, இப்போது நீ யாருக்காக துக்கப்படுகிறாய்? வீண் மதிமயக்கத்தினாலேயே இப்போது உனக்கு இந்த துக்கம் உண்டாகியிருக்கிறது. இந்த கௌரவர்கள் யாவரும் உன் சொந்தக்காரர்கள் என்று நீ கருதுகிறாய். ஆனால், இவர்களுடைய உடல்கள் யாவும் ஒரு நாள் அழிந்துதான் தீரும் என்பது உனக்குத் தெரியும். அவர்களின் உடல்களுக்கு உள்ளேயுள்ள ஆன்மாவை யாராலும் அழிக்க முடியாது. ஆன்மாவை ஆயுதங்களால் காயப்படுத்த முடியாது, நெருப்பால் எரிக்க முடியாது, காற்றினால் உலர்ந்து போகும்படி செய்ய முடியாது, தண்ணீரில் மூழ்கடிக்க முடியாது. மேலும் ஒரு விஷயத்தை நீ யோசனைசெய்து பார். படைகளுக்குத் தலைமை வகிக்கும் ஒரு போர் வீரன் என்ற முறையில் நீ உனது கடமையைச் சிந்தித்துப்பார். இந்த தரும யுத்தத்தைச் செய்ய நீ மறுத்தால், அதனால் ஏற்படக் கூடிய விளைவுகள் நீ எதிர்பார்ப்பதற்கு நேர் விரோதமாக இருக்கும்; நீயும் உலகத்தின் ஏளனத்திற்கு இலக்காகி விடுவாய். நீ தைரியம் வாய்ந்த வீரன் என்ற புகழ் உனக்கு எப்போதும் இருந்து வருகிறது. இப்போது நீ யுத்தத்திலிருந்து பின்வாங்கினால், பயம் காரணமாகவே நீ இதிலிருந்து ஓட்டம் பிடிக்கிறாய் என்று எல்லோரும் எண்ணுவதற்கு இடம் ஏற்படும். அபாயத்தைக் கண்டு ஓடுவது உனது கடமையின் ஓர் அம்சமாக இருக்குமாயின், அவமானத்தைப் பற்றி கவலைப் படவேண்டியதில்லை. ஆனால், இப்போது நீ யுத்தத்திலிருந்து விலகிச் செல்லுவதால், உன் கடமையில் நீ தவறியவனாவாய். போர்முனையிலிருந்து நீ ஓடுவதைக் குறித்து ஜனங்கள் கண்டிப்பதும் நியாயமாகவே இருக்கும்.

"இதுவரையில், உடலுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள வேற்றுமையை உனக்கு எடுத்துக் கூறி, ஒரு போர் வீரன் என்ற முறையில் உனது கடமையை உனக்கு ஞாபகப்படுத்த முற்பட்டேன். ஆனால், இப்போது கர்மயோகத்தைப் பற்றி, அதாவது செயல் முறையைப் பற்றி உனக்கு நான் விவரித்துக் கூறவேண்டும். கர்மயோகத்தை அனுசரிப்பவனுக்கு ஒரு காலத்திலும் அபாயம் நேருவதில்லை. வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்ற தர்க்கத்திற்கும் அதற்கும் சிறிதும் சம்பந்தம் இல்லை. அது செயலிலும் அனுபவத்திலும் காட்டவேண்டியதாகும். நாட்கணக்கிலும், மாதக்கணக்கிலும் வாதித்துக்கொண்டிருப்பதைக் காட்டிலும், நடைமுறையில் சிறிதளவாவது அனுசரிப்பதே லாபகரமானது. நடைமுறையில் அனுசரிப்பது கூட, பலனைப் பற்றிய எண்ணம் காரணமாக களங்கம் அடைந்துவிடக் கூடாது. வார்த்தைகளின் உட்கருத்தை கவனியாமல் மேலெழுந்தவாரியான அர்த்தத்தை மாத்திரம் கவனிப்பவர்கள், ஸ்தூலமான ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக வைதிகச் சடங்குகளில் ஈடுபடுகிறார்கள். ஒரு சடங்கு எதிர்பார்த்த பலனைக் கொடுக்காவிடில், அவர்கள் மற்றொரு சடங்கைச் செய்கிறார்கள்; அதிலும் ஏமாற்றம் ஏற்பட்டால் மூன்றாவது சடங்கைச் செய்ய முற்படுகிறார்கள். அவ்வித

மாக, அவர்களுடைய மனம் முற்றிலும் குழப்பத்தில் ஆழ்ந்துவிடுகிறது.

''உண்மை என்னவெனில், நம்முடைய செயலின் பலனைக் குறித்து சிந்திப்பதில் நேரத்தை வீணாக்காமல் நமது கடமையைச் செய்வதே சிறந்ததாகும். நீ இப்போது யுத்தம் செய்வதே, உனது கடமையை நிறைவேற்றுவதாகும். லாபமோ நஷ்டமோ, வெற்றியோ அல்லது தோல்வியோ உன் கையில் இல்லை. அவற்றைப் பற்றி நினைக்கும் அனாவசியமான பளுவை நீ ஏன் சுமந்து செல்லவேண்டும்? ஒரு வண்டிக்குக் கீழே செல்லும் நாய், மாடுகள் வண்டியை இழுக்கவில்லை என்றும் தானே இழுத்துச் செல்லுவதாயும் கற்பனை செய்துகொள்ளுவது போல் நீயும் ஏன் நினைக்கவேண்டும்? தோல்வியும் வெற்றியும், உஷ்ணமும் குளிர்ச்சியும், சுகமும் துக்கமும் மனிதனுக்கு மாறிமாறி வருகின்றன. அவற்றை அவன் சகித்துக்கொள்ள வேண்டும். ஒரு மனிதன், தனது செயலின் பலனைக் குறித்து அலட்டிக்கொள்ளாமல், விருப்பு வெறுப்பின்றி தன் கடமையைச் செய்வதில் முழு கவனத்தையும் செலுத்தவேண்டும். இதுதான் யோகம் அல்லது செயல் திறன் என்பதாகும். செயல் எதுவாயினும், அதன் வெற்றி அதைச் செய்வதில்தான் இருக்கிறதேயன்றி, அதன் பலனில் இல்லை. ஆகையால், அமைதியாக இருந்து உன் கடமையைச் செய்.''

இதையெல்லாம் கேட்ட அர்ஜுனன் மேலும் கூறியதாவது: ''நான் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென நீங்கள் குறிப்பிட்டிருப்பது, எனது சக்திக்கு அப்பாற்பட்டது என்று எனக்குத் தோன்றுகின்றது. தோல்வியையோ அல்லது வெற்றியையோ குறித்து கவலைப்படாமல், பலனைப் பற்றி சிறிதும் சிந்திக்காமல் ஒருவர் எப்படி விருப்பு வெறுப்பற்ற தன்மையையும், மன உறுதியையும் பெற முடியும்? அத்தகைய சாதனைகள் உள்ள ஒருவன் எப்படி நடந்துகொள்வான்? அவனை நாம் எப்படி அறிந்து கொள்வது?''

பகவான் சொன்னார்: 'மன்னனே, இதயத்தைச் சித்திரவதை செய்யும் ஆசைகளையெல்லாம் துறந்து யார் உள்ளதைக் கொண்டு தனக்குத்தானே திருப்தி அடைகிறானே, அவன்தான் ஸ்திதப்ரக்ஞன் என்று கூறப்படுகின்றான். அவன் துன்பங்களைக் கண்டு கலங்குவதில்லை; சுகபோகங்களை நாடிச் செல்லுவதும் இல்லை. ஐந்து புலன்களின் மூலம்தான் சுகத்தையும் துக்கத்தையும் அனுபவிக்க முடிகிறது. ஓர் ஆமை தனது உறுப்புகளை உள்ளே இழுத்துக்கொண்டு விடுவதைப் போல, ஞானி புலன்களைக் கவரும் சாதனங்களிலிருந்து தனது புலன்களை அப்பால் இழுத்துக்கொண்டு விடுகிறான். ஆமை, தனக்கு ஏதாவது அபாயம் நேரும் போல் தோன்றினால் தன் உறுப்புகள் எல்லாவற்றையும் தன் மேல் ஓட்டிற்கு உள்ளே இழுத்துக்கொண்டு விடுகிறது. மனிதர்களைப் பொறுத்தமட்டில், புலன்களுக்கான

சாதனங்கள் எப்போதும் புலன்களைத் தாக்க தயாராக இருந்து வருகின்றன. எனவே, அவர்கள் தங்களுடைய புலன்களை எப்போதும் உள்ளடக்கிக் கொள்ளவேண்டும். தங்களுடைய புலன்களை இழுக்கும் சாதனங்களை எதிர்த்துப் போராட அவர்கள் எப்போதும் தயாராக இருக்கவேண்டும். இதுதான் உண்மையான போராட்டம்.

"புலன்களை இழுக்கும் சாதனங்களை எதிர்த்து நிற்பதற்காக சிலர் தன்னைத் தானே வருத்திக்கொள்ளுதல், உண்ணுவிரதம் போன்ற முறைகளைக் கருவிகளாக உபயோகிக்கிருர்கள். இந்த முறைகள் ஓரளவுக்குத்தான் பலன் தரத் தக்கவை. ஒரு மனிதன் உண்ணுவிரதம் இருக்கும்வரையில் அவனது புலன்கள் அந்தச் சாதனங்களை நாடிச் செல்லுவதில்லை. எனினும், உண்ணுவிரதம் மாத்திரம், அவற்றில் அவனுக்கு உள்ள ஆசையை அழித்துவிடுவதில்லை. அதற்கு மாருக, அவன் உண்ணுவிரதத்தைக் கைவிட்டதும் அந்த ஆசை இன்னும் அதிகமாகிவிடலாம். எனவே, கடவுளின் அருளினல் மாத்திரமே அவன் அந்த ஆசையை ஒழிக்க முடியும். புலன்கள் சக்தி வாய்ந்தவை. மனிதன் மிகவும் கண்காணிப்புடன் இராவிடில், அவை அவனை பலாத்காரமாகக் கீழே இழுத்துவிடும். எனவே, மனிதன் புலன்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டியது அவசியமாகும். அவன் அவனது கண்களை உள்நோக்கித் திருப்பி, அவனது இதயத்தில் குடிகொண்டிருக்கும் கடவுளிடம் பக்தியுடனிருந்தால்தான், அவன் அந்த லட்சியத்தை அடைய முடியும். அதாவது, புலன்களைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியும். யார் என்னை அடைவதையே வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டு புலன்களைக் கட்டுப்படுத்தி, அவனுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்கிருனே, அவனே மன உறுதிவாய்ந்த யோகியாவான். அதற்கு மாருக, ஒருவன் தன் புலன்களை அடக்கி அவற்றிற்கு எஜமானனுக இராவிடில், புலன்கள் விரும்பும் சாதனங்களையே நினைத்துக்கொண்டு அவற்றிலேயே மனத்தை லயிக்கச் செய்துவிடுவான். பின்னர் வேறு எதிலும் அவனுக்கு மனம் செல்லாது. இத்தகைய பற்றுதலிலிருந்துதான் ஆசை ஏற்படுகிறது. ஆசைக்கு இடையூறு ஏற்படும்போது கோபம் உண்டாகின்றது. கோபம் காரணமாக அவன் சற்றேறக்குறைய பைத்தியக்காரனைப் போல் ஆகிவிடுகிருன். தான் செய்ய வேண்டியது என்ன என்பதையே அவனுல் அறிந்துகொள்ள முடிவதில்லை. அவ்விதமாக அவன் ஞாபக சக்தியையும் இழந்து, ஒழுங்கீனமான முறையில் நடந்துகொள்ளுகிருன். இறுதியில் அவன் மானமிழந்து மதிகெட்டு மரணமடைகிருன்.

"ஒரு மனிதனின் புலன்கள் விருப்பப்படியெல்லாம் சுற்றித் திரியும்போது, அவன் சுக்கான் இல்லாத கப்பலைப் போலாகிவிடுகிருன். சுக்கான் இல்லாத கப்பல் புயலில் சிக்கி அல்லல்பட்டு, இறுதியில் பாறைகளில் மோதி தூள்தூளாகிவிடுகிறது

அல்லவா? ஆதலால், மனிதர்கள் எல்லா ஆசைகளையும் துறந்து, அவர்களுடைய புலன்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். அப்போதுதான் புலன்கள், விரும்பத்தகாத ஆசைகளில் நாட்டம் கொள்ளாமல் இருக்கும்.

"அப்போது கண்கள் நேர்மையான பாதையில் சென்று, புனிதமான பொருட்களையே பார்க்கும்; கடவுளைப் பற்றிய தோத்திரங்களையோ அல்லது ஏழைகளின் வேதனைக் குரல்களை யோதான் காதுகள் கேட்கும்; கைகளும் கால்களும் தொண்டு செய்வதிலேயே ஈடுபட்டிருக்கும். அப்போது ஞானேந்திரி யங்கள், கர்மேந்திரியங்கள் யாவும், ஒரு மனிதன் தன் கடமை யைச் செய்வதற்கே உதவியாக இருக்கும்; அவை, கடவுளின் அருளுக்கு அவனைத் தகுதியானவனாகவும் செய்யும். கடவுளின் அருளுக்கு அவன் ஒரு தடவை பாத்திரனாகி விடுவானாயின், பின்னர் அவனது துக்கங்கள் எல்லாம் பறந்தோடிவிடும். சூரிய னின் ஒளியால் பனி மறைவது போல, ஒருவன் மீது கடவுளின் ஒளி வீசுமாயின் அவனது துக்கங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடுகின்றன. அவன்தான் மன உறுதி யுள்ள யோகியாகத் திகழ்கிறான். ஒருவன், உறுதி வாய்ந்த மனம் உள்ளவனாக இராவிடில், அவன் மனத்தில் நல்ல சிந்தனைகள் எவ்வாறு எழ முடியும்? நல்ல சிந்தனைகள் இன்றேல், மனச் சாந்திக்கும் வழியில்லை. மனச் சாந்தி இராவிடில், ஆனந்தத்திற்கு இடமில்லை. மன உறுதிவாய்ந்தவன், பகலில் பார்ப்பதுபோன்றே எல்லா விஷயங்களையும் தெளிவாகக் காண்கிறான். மன உறுதி யில்லாதவனோ, உலகத்தின் சிக்கல்களால் கலக்கம் அடைந்து, அந்தகனைப் போல் தவிக்கிறான். உலகாயதமான விஷயங்களில் புத்திசாலியாக இருப்பவனின் கண்களுக்கு எது சுத்தமாகத் தோன்றுகிறதோ அது, மன உறுதிவாய்ந்த ஞானிக்கு அசுத்த மாகத் தோன்றுகிறது; அதை அவன் வெறுக்கிறான். நதிகள் இடைவிடாமல் கடலுக்குள் பாய்ந்த வண்ணம் இருக்கின்றன. எனினும், கடல் அசையாமல் அப்படியே இருக்கிறது. அது போலவே, புலன்களுக்கான சாதனங்கள் யோகியிடம் வருகின் றன. ஆனால், ஒரு யோகி அவற்றினால் ஒருபோதும் நிலை குலைவ தில்லை; அவன் எப்போதும் அமைதியாகவே இருக்கிறான். அவ் விதமாக, எல்லா ஆசைகளையும் துறந்து, இறுமாப்பிலிருந்தும் சுயநல நோக்கத்திலிருந்தும் விடுதலை பெற்றிருப்பவன் மனச் சாந்தி பெற்ற மனிதனாகத் திகழ்கிறான். தெய்வ பக்தியுள்ள பரிபூரணமான ஒரு மனிதனின் நிலை இதுதான். இறுதி நேரம் வரும்போதாவது அந்த நிலையில் ஒருவன் இருந்துவிட்டால்கூட, அவன் காப்பாற்றப்பட்டு விடுகிறான் (மோட்சத்தை அடை கிறான்)."

## 3

# தியாகம் அல்லது தொண்டின் சிறப்பு

ஸ்திதப்ரக்ஞனின் லட்சணங்களை கிருஷ்ண பகவான் எடுத்துக் கூறியபோது, ஒருவன் அத்தகைய நிலையை அடைய அமைதியாக உட்கார்ந்து கொண்டிருப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று அர்ஜுனன் எண்ணினான். ஸ்திதப்ரக்ஞன், செயலில் ஈடுபட வேண்டிய அவசியத்தைப் பற்றி கிருஷ்ணன் எதுவும் குறிப்பிடாததே அர்ஜுனன் அவ்விதம் எண்ணியதற்குக் காரணமாகும். எனவே, அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்து இவ்வாறுகக் கேட்டான்: "செயலைவிட ஞானமே உயர்ந்தது என்று நீங்கள் கூறுவது போல் எனக்குத் தோன்றுகிறது. அப்படியாயின், இந்த பயங்கரமான நடவடிக்கையில் ஈடுபடும்படி நீங்கள் என்னை ஏன் வற்புறுத்துகிறீர்கள்? அவ்விதம் வற்புறுத்தி என் மனத்தை ஏன் குழப்புகிறீர்கள்? என்ன செய்தால் எனக்கு நன்மை ஏற்படும் என்பதைத் தயவு செய்து தெளிவாகக் கூறுங்கள்."

கிருஷ்ணன் கூறியதாவது: "பாவமற்ற அர்ஜுனா, இரண்டு வழிகளில் ஏதாவது ஒன்றை, மோட்சத்தை நாடுவோர் ஆதி காலத்திலிருந்து மேற்கொண்டு வந்திருக்கிறார்கள். அந்த இரண்டு வழிகளுக்குள் ஒன்றில், ஞானத்திற்கு உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. மற்றொன்றில், செயலுக்கு உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. செயலின்றி, செயலிலிருந்து விடுதலை பெறும் நிலையை அடைய முடியாது என்பதை நீ காணலாம். யாதொரு செயலிலும் ஈடுபடாமல் இருக்கிறான் என்பதற்காக, ஒருவனுக்கு எக்காலத்திலும் ஞானம் ஏற்படாது. எல்லாவற்றையும் துறப்பதால் மாத்திரமே மனிதன் பூரண நிலையை அடைந்துவிட முடியாது. நம்மில் ஒவ்வொருவரும் இடைவிடாமல் எப்போதும் ஏதாவதொன்றைச் செய்துகொண்டிருக்கிறோம் என்பதை நீ பார்க்கவில்லையா? நமது இயற்கை சுபாவமே, நம்மை ஏதாவது செயலில் ஈடுபடும்படி தூண்டுகிறது. அதுதான் இயற்கை விதி. அவ்விதமிருக்கையில், ஒருவன் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்த வண்ணம் மனத்தை புலன் நுகர்ச்சிக்கான சாதனங்களில் லயிக்கும்படி விடுவானாயின், அவன் ஒரு மூடனே. அவனை ஒரு வேடதாரி என்றும் கூறலாம். அர்த்தமில்லாத அத்தகைய செயலற்ற நிலையில் இருப்பதைக் காட்டிலும், ஒருவன் தனது புலன்களைக் கட்டுப்படுத்துவதும், ஆடம்பரமின்றியும் பற்றுதலின்றியும் ஏதாவது நடவடிக்கைகளில் ஈடுபடுவதும் சிறந்ததல்லவா? புலன்களை அடக்கி, உனக்கு இடப்பட்டுள்ள கடமையைச் செய். செயலற்றிருப்பதைக் காட்டிலும் அவ்விதம் செய்வதே சிறந்தது. ஒரு சோம்பேறியின்

காலம், அவனது சோம்பேறித்தனம் காரணமாக சீக்கிரமே முடிந்துவிடும். ஆனல், செயலில் ஈடுபடும்போது ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, தியாக உணர்ச்சியின்றி செய்யப்படும் எந்தக் காரியமும் அடிமைத்தனத்தில் கொண்டு போய்விடும். தியாகம் (யக்ஞம்) என்ருல், பிறருடைய நலனுக்காகப் பெருமுயற்சி செய்வதே; அதாவது, அதை 'தொண்டு' என்று ஒரே வார்த்தையில் கூறிவிடலாம். தொண்டு புரியவேண்டும் என்ற ஆர்வத்துடன் தொண்டு செய்யப்படும் போது, பற்றுதலுக்கோ, விருப்பு வெறுப்புகளுக்கோ இடம் இல்லை. அத்தகைய தியாகம் செய், அத்தகைய தொண்டு செய்.

''உலகத்தை பிரம்மா சிருஷ்டித்தபோது, அத்துடன் தியாகம் அதாவது யக்ஞத்தையும் சிருஷ்டித்தார். அப்போது அவர் மானிட வர்க்கத்தினிடம் இவ்விதம் கூறினர்: 'பூவுலகத்திற்குச் செல்லுங்கள். ஒருவருக்கொருவர் தொண்டு புரிந்து க்ஷேமத்தையும் சுபிட்சத்தையும் அடையுங்கள். எல்லாப் பிராணிகளையும் தெய்வங்களாகக் கருதுங்கள். அந்த தெய்வங்களுக்குத் தொண்டு புரிந்து அவர்களைத் திருப்தி செய்யுங்கள். அவர்கள் உங்கள் மீது அன்புகொண்டு, நீங்கள் கேட்காமலேயே உங்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுவார்கள்'.

''எனவே, மக்களுக்குத் தொண்டு செய்யாமல், முதலில் அவர்களுடைய பங்கை அவர்களுக்குக் கொடுக்காமல் இந்த பூமியிலிருந்து பலன்களை அனுபவிப்பவன் யாராயினும் அவன் திருடனே யாவான். எல்லாப் பிராணிகளுக்கும் அவற்றின் பங்கைக் கொடுத்துவிட்டால், அவன் தான் அனுபவிப்பதற்கு உரியவனுவதுடன், பாவத்திலிருந்தும் விடுதலை பெறுகிருன். அதற்கு மாருக, யார் தங்கள் சொந்த நலனுக்காக மாத்திரமே உழைக்கிருர்களோ அவர்கள் பாவம் செய்தவராகிருர்கள், பாவத்தின் பலனையே உண்பவராகிருர்கள். பிராணிகள் உணவினுல் உயிர் வாழ்வது, இயற்கையின் விதியாகும். உணவுப் பொருட்களின் உற்பத்தி, மழையையே பொறுத்திருக்கிறது. யக்ஞத்தினுல்தான், அதாவது எல்லாப் பிராணிகளுடைய உழைப்பினுல்தான் பூமியில் மழை பெய்கிறது. ஜீவராசிகள் இராத இடத்தில் மழை பெய்வதில்லை; அவை இருக்கும் இடத்தில்தான் மழை பெய்கிறது. எல்லா ஜீவராசிகளும் உழைப்பினுல்தான் உயிர் வாழ்கின்றன. ஒரு பிராணிகூட. சோம்பேறியாக இருந்துகொண்டு உயிர்வாழ முடியாது. கீழ்த்தர பிராணிகளைப் பொறுத்தவரையில் அது உண்மையாயின், மனிதரைப் பொருத்தமட்டில் அது இன்னும் அதிக உண்மையாகும். பிரம்மாவிலிருந்து செயல் ஆரம்பமாகிறது. அழிவற்ற பிரம்மத்திலிருந்து பிரம்மா செயல் புரியத் தொடங்குகிருர். எனவே, அழிவற்ற பிரம்மம் எல்லாவிதமான யக்ஞத்திலும் அல்லது தொண்டிலும் சம்பந்தப்பட்டிருக்கிறது. பரஸ்பரம் தொண்டு புரிய வேண்டும் என்ற இந்த விதியை மீறினுலும் அவர்கள் பாவம் செய்தவர்களாகிருர்கள். அவர்கள் வாழ்வது வீணேயாகும்.

"ஒரு மனிதன் மனச் சாந்தியுடனும், போதுமென்ற திருப்தியுடனும் வாழ்ந்தால், அவன் செய்வதற்கு எதுவுமே இல்லை என்று கூறலாம். அவன் செயலில் ஈடுபட்டாலும், செயலற்றிருந்தாலும் அவனுக்கு லாபம் எதுவும் இல்லை. அவனுக்கு சுய நல நோக்கம் எதுவும் இல்லை. அப்படி இருந்தாலும் கூட, அவன் தியாகம் செய்வதை நிறுத்திவிடக் கூடாது. எனவே, விருப்பு வெறுப்புகளின்றியும், பற்றுதலின்றியும், தினந்தோறும் உன் கடமையைச் செய். அத்தகைய உணர்ச்சியுடன் செயலில் ஈடுபடுபவன் பேரின்பத் தோற்றத்தை அனுபவிக்கிறான். ஜனகரைப் போன்ற சுயநலமற்ற ஒரு மன்னர் கூட மக்களின் நன்மைக்காக ஊழியம் புரிந்த வண்ணம் பரிபூரண நிலையை அடைந்தாரெனில், நீ அதே முறையைப் பின்பற்றாமல் வேறுவிதமாக எவ்வாறு நடந்துகொள்ள முடியும்? ஒரு நல்ல, பெரிய மனிதன் என்ன செய்தாலும், அதைப் பின்பற்றி சாதாரண மக்களும் செய்வது வழக்கம். உதாரணமாக, எனது நிலையையே எடுத்துக்கொள். செயலின் மூலம் எனக்கு எவ்விதமான லாபமும் ஏற்படுவதற்கில்லை. அப்படியிருந்தும் நான் இடைவிடாது செயலில் ஆழ்ந்திருக்கிறேன். அதனாலேயே மக்களும் வேலை செய்துகொண்டே இருக்கிறார்கள். நான் வேலை செய்வதை நிறுத்திவிட்டால் என்ன நேரும்? சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் எல்லாம் அசையாமல் நின்றுவிட்டால், உலகமே சீரழிந்துவிடும். அவை இடைவிடாது போய்க்கொண்டிருக்கும்படி செய்வதும், அவற்றின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதும் நான்தான். எனினும், எனது நிலைக்கும் சாதாரண மனிதனின் நிலைக்கும் வேற்றுமை உண்டு. எள்ளளவும் பற்றுதலின்றி நான் செயலில் ஈடுபடுகிறேன். ஆனால், சாதாரண மனிதனோவெனில், மனத்தில் பற்றுதலுடனும், தன் சொந்த நலனில் அக்கறையுடனும் வேலை செய்கிறான். உன்னைப் போன்ற அறிவாளியான ஒருவன் செயல் புரிவதை நிறுத்திவிட்டால், பின்னர் மற்றவர்களும் அவ்விதமே செய்ய முற்படுவார்கள். பின்னர் அவர்களுடைய மனம் நிலையற்றுப் போய்விடும். எனவே, பற்றின்றி உனது கடமையைச் செய். அப்படி நீ செய்தால்தான், மற்றவர்கள் செயல் புரிவதை நிறுத்தாமல் இருப்பார்கள்; பின்னர் பற்றின்றி செயல் புரிவதைச் சிறிது சிறிதாகக் கற்றுக் கொள்ளுவார்கள். மனிதன் தனது இயல்பை அனுசரித்து ஏதோ செய்யக் கடமைப்பட்டிருக்கிறான். தானே ஏதோ செய்வதாக மூடன்தான் நினைப்பான். மூச்சு விடுவது, மனிதனுடைய இயல்பின் ஓர் அம்சமே. ஒரு பூச்சி கண் இமையில் வந்து உட்காருமாயின், இமை தானாகவே மூடிக்கொள்ளுகிறது. 'நான் மூச்சை உள்ளே இழுக்கிறேன்' என்றோ அல்லது 'நான் இமையை அசைக்கிறேன்' என்றோ யாரும் கூறுவதில்லை. அதைப் போலவே, மனிதனின் செயல்கள் யாவும் அவனது இயல்பான குணங்களுக்கிணங்க நடைபெறுகின்றன என்று ஏன் யாரும் எண்ணுவதில்லை? அதை, தான் செய்வதாக எண்ணி மனிதன் ஏன் இறுமாப்பு அடைய வேண்டும்? அவ்விதம் இயற்கையாகவும், பற்றுதலின்றியும் ஒரு மனிதன் செயல் புரிவதற்கான சிறந்த வழி என்னவெனில், அவனு

டைய நடவடிக்கைகளையெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்து விடுவதுதான். அவன் தன்னை என்னுடைய கையில் உள்ள ஒரு கருவியாக எண்ணி, தான் என்ற இறுமாப்பின்றி செயல்களைப் புரிவதே, பற்றின்றி செயல் புரிவதற்கான சிறந்த வழியாகும். அவ்வாறாக, ஒரு மனிதன் சுயநலனை உதறித் தள்ளி விடுவானாயின், அவனது செயல்கள் யாவும் இயல்பாகவும், களங்கமற்றும் இருக்கும். அதன் பலனாக அவன் பல கஷ்டங்களிலிருந்தும் தப்பித்துக் கொள்ளுவான். பின்னர் செயல்களுக்கு அவன் கட்டுப்பட்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. செயல் புரிவது என்பது இயற்கையாதலால், அதற்கு மாறாக நடந்துகொண்டு செயலற்றிருப்பதாகக் கூறுவது இறுமாப்பேயாகும்; அத்தகைய இறுமாப்புக்கு இலக்கானவன் செயல் புரியாதவனைப் போல் வெளிப் பார்வைக்குத் தோன்றுவான். ஆனால், அவனது மனம் எப்போதும் விபரீதமான திட்டங்களை வகுத்த வண்ணம் இருக்கும். பகிரங்கமாகச் செயல்களில் ஈடுபடுவதைக் காட்டிலும் இது மோசமானது. ஏனெனில், மனத்தில் உருவாகும் அத்தகைய திட்டங்கள் அவனை அடக்கியாளத் தொடங்கிவிடும்.

"உண்மை என்னவெனில், புலன்களுக்கு சில சாதனங்கள் கவர்ச்சியாக இருக்கின்றன; மற்றும் சில சாதனங்களைப் புலன்கள் வெறுக்கின்றன. உதாரணமாக, காதுகளால் கேட்க சில விஷயங்கள் இன்பமாக இருக்கின்றன; மற்றும் சில வெறுப்பாக இருக்கின்றன. ரோஜா மலரின் நறுமணத்தை மூக்கு விரும்புகிறது; ஆனால், குப்பையின் நாற்றத்தை விரும்புவதில்லை இதுவே மற்ற புலன்களின் விஷயத்திலும் உண்மையாகும். எனவே, மனிதன் செய்ய வேண்டியது என்னவெனில், கவர்ச்சி, வெறுப்பு என்ற இந்த இரண்டு கொள்ளைக்காரர்களிடமும் அடிபணிந்துவிடாமல் இருப்பதுதான். ஒருவன் அந்தக் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பித்துக்கொள்ள விரும்பினால்,செயலைத் தேடிக்கொண்டு அவன் போகக் கூடாது. இன்று ஒன்றும், நாளை வேறொன்றும், அதற்கு மறுநாள் மற்றொன்றுமாகச் செய்ய அவன் ஆசைப்படக் கூடாது. தன் பங்கிற்குக் கிடைக்கும் தொண்டை அவன் கடவுள் சாட்சியாகச் செய்யத் தயாராக இருக்க வேண்டும். அவன் உண்மையில் எதைச் செய்தாலும், அது கடவுளின் செயலேயன்றி தன் செயல் அல்ல என்ற உணர்ச்சியை அவன் தனக்குள் பயிற்சி செய்து கொள்ள வேண்டும். அவ்விதம் செய்தால், அவனது இறுமாப்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும். இதுதான் சுயதருமம் (தனக்கு ஏற்பட்ட கடமை). ஒருவன் சுயதருமத்தில் உறுதியுடன் இருக்கவேண்டும். இதுதான் அவனுக்குச் சிறந்தது. பரதருமம் (பிறரது கடமை) இன்னும் மேலானதாகத் தோன்றலாம். இருந்தாலும் அதை அபாயகரமானதாகவே கருதவேண்டும். ஒருவன் தனது சொந்தக் கடமையைச் செய்யும்போது மரணத்தைத் தழுவுவதிலேயே மோட்சம் அடங்கியிருக்கிறது."

விருப்பு வெறுப்புகளின்றி செயல் புரிவதே தியாகமாகும் என்று கிருஷ்ணன் கூறியபோது, அர்ஜுனன் கேட்டான்:

''பாவம் செய்யும்படி ஒரு மனிதனைத் தூண்டுவது எது? பெரும்பாலும் தன் சொந்த விருப்பமின்றியே யாரோ வெளியாரால் வற்புறுத்தப்பட்டு அவன் பாவம் செய்வது போல் தோன்றுகிறதே.''

அதற்குப் பதிலாக கிருஷ்ணன் கூறினர்: ''அடிமையைப் போல் அவனை விரட்டுபவை, காமமும் (ஆசை) குரோதமுமே (கோபம்). இவ்விரண்டும் கூடப் பிறந்த சகோதரர்களைப் போல் இருக்கின்றன. ஆசை நிறைவேருவிடில், அதன் விளைவாக கோபம் ஏற்பட்டேதீரும். ஆசைக்கும் கோபத்திற்கும் அடிமையாக இருப்பவன், ரஜோ குணத்தினல் தூண்டப்படுகிருன். ரஜோ குணம் என்ற வெறிக் குணம்தான் மனிதனின் மாபெரும் விரோதி. அவன் இரவு பகலாக அந்த விரோதியை எதிர்த்துப்போராட வேண்டியவனுக இருக்கிருன்.

''தூசி கண்ணுடியை மறைப்பது போலவும், புகை நெருப்பை மறைத்துக் கொண்டிருப்பது போலவும், கருவை கருப்பை மறைத்துக் கொண்டிருப்பது போலவும், கோபம் அறிவின் ஒளியை மறைத்து அறிவு திக்குமுக்காடும்படி செய்துவிடுகிறது. ஆசை, தீயைப் போல் திருப்தி செய்ய முடியாதது, எதையும் கபளீகரம் செய்யக் கூடியது. அது மனிதனின் புலன்களையும், மனத்தையும், அறிவையும் ஆக்கிரமித்துக் கொண்டு அவனை வீழ்த்திவிடுகிறது. எனவே, முதலில் உனது புலன்களைக் கட்டுப்படுத்திக்கொள்; பிறகு உன் மனத்தை அடக்குவதில் வெற்றி பெற முயற்சி செய். நீ இவ்விதம் செய்யும்போது, உன் அறிவு கூட உன் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும். புலன்களிடையேகூட வேற்றுமை உண்டு. புலன்களைக் காட்டிலும் மனம் பெரியது; மனத்தைக் காட்டிலும் அறிவு பெரியது; எல்லாவற்றையும் காட்டிலும் ஆன்மா மிகப் பெரியது. மனிதன் தன்னுடைய சொந்த பலத்தையோ அல்லது ஆன்ம சக்தியையோ தெரிந்துகொள்ளவில்லை. புலன்கள், மனம், அறிவு இவையெல்லாம் தன் கட்டுப்பாட்டிற்கு உட்படாதவை என்று அவன் நம்புகிருன். ஆன்ம சக்தியில் அவனுக்கு ஒருமுறை நம்பிக்கை ஏற்பட்டுவிடுமாயின், பின்னர் எல்லாம் அவனுக்கு எளிதாகிவிடும். புலன்களையும், மனத்தையும், அறிவையும் வென்றவன், ஆசையையும் கோபத்தையும் அவற்றின் எண்ணிக்கையற்ற சகபாடிகளையும் கண்டு அஞ்சவேமாட்டான்.''

இந்த அத்தியாயம்தான் கீதையை அறிந்து கொள்ளுவதற்கான சாவி என்று நான் கருதுகிறேன். தொண்டிற்காக நமக்கு வாழ்வு அளிக்கப்பட்டிருக்கிறதேயன்றி, சுகபோகங்களை அனுபவிப்பதற்காக அல்ல என்பதே இந்த அத்தியாயத்தின் சாரமாகும். எனவே நமது வாழ்க்கை, தியாகத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். இந்த சித்தாந்தத்தை அறிவைக் கொண்டு ஒப்புக்கொள்வது முதற்படியாகும். இவ்விதம் ஒப்புக் கொண்டு, அதை அனுசரித்து நாம் நடந்துகொள்ளுவதன் மூலம் நாளடைவில் நமது உள்ளத்திலுள்ள அசுத்தங்களெல்லாம் ஒழிந்துவிடும்.

எனினும், உண்மையான தொண்டு என்பது என்ன? இந்தக் கேள்விக்கு சரியான விடை கிடைக்க வேண்டுமாயின், புலன்களை அடக்க வேண்டியது அவசியமாகும். இதுதான், சத்தியமாகிய கடவுளை நாம் மேலும் மேலும் தெளிவாக அறிந்து கொள்ளும் சக்தியை நமக்குக் கொடுக்கிறது. சுயநல நோக்கத்துடன் செய்யும் தொண்டு தியாகமல்ல. அதனால்தான் பற்றற்ற உணர்ச்சி அத்தியாவசியமான தேவையாகிறது. இதைப் புரிந்துகொண்டு விட்டால், எல்லாவிதமான வாக்குவாதங்களும் அர்த்தமற்றதாகிவிடுகின்றன. 'அர்ஜுனனை, அவனது உறவினர்களைக் கொல்லும்படி உண்மையிலேயே கிருஷ்ணன் கேட்டாரா? அவ்விதம் கொல்லுவது ஒருவனது கடமையின் ஒரு பகுதியாக இருக்க முடியுமா?' இவை போன்ற கேள்விகளுக்கு இடமே இல்லாமல் செய்யப்பட்டிருக்கிறது. நமது நடவடிக்கைகள் பற்றற்றிருக்குமாயின், விரோதியைத் தாக்குவதற்காகத் தூக்கப்பட்ட ஆயுதம் கூட நமது கையிலிருந்து கீழே விழுந்துவிடும். பற்றற்றிருப்பது போல் பாசாங்கு செய்வதால் யாதொரு பலனும் ஏற்படாது. உறுதியுடன் முயற்சி செய்துவருவோமாயின், பற்றற்ற நிலையை நாம் அடைவோம். அத்தகைய நிலையை ஒரே நாளில் அடையலாம், அல்லது அந்த நிலையை அடைவதற்கு ஆயிரம் ஆண்டுகளும் செல்லலாம். அவ்வித நிலையை அடைய எவ்வளவு காலம் ஆகும் என்பதைக் குறித்து நாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், அத்தகைய முயற்சியிலேயே வெற்றியின் வித்துக்கள் அடங்கியிருக்கின்றன. எனினும், அது உண்மையான முயற்சியாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளுவதில் நாம் கண்காணிப்புடன் இருக்க வேண்டும். நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளுவதாக இருக்கக் கூடாது. அவ்வித முயற்சி நிச்சயமாக சாத்தியமானதே.

# 4

# விதிகளிலிருந்து யாரும் தப்ப முடியாது

பகவான் அர்ஜுனனுக்குச் சொல்லுகிறார்:

''நான் உன்னிடம் பாராட்டிக் கூறும் சுயநலமற்ற நடவடிக்கையாகிய யோகம் புராதனமான உண்மையாகும். எனவே, நான் உனக்கு புதிய சித்தாந்தம் எதையும் எடுத்துக் கூறவில்லை. நீ என்னிடம் பக்தியுள்ள நண்பன். ஆதலால், உன் மனத்தில் ஏற்பட்டுள்ள தடுமாற்றத்தை அகற்றுவதற்காக நான் அதை உனக்கு எடுத்துக் கூறியுள்ளேன். தருமம் குன்றி அதருமம் மேலோங்கும் போதெல்லாம் நான் பூமியில் அவதாரம் எடுத்து நல்லவர்களைக் காப்பாற்றுகிறேன், கொடியவர்களை அழித்துவிடுகிறேன். என்னுடைய இந்த சக்தியை (மாயையை) அறிந்தவர்கள் அதருமம் ஒழிந்துதான் தீரும் என்பதில் நம்பிக்கையுடையவர்களாக இருக்கிறார்கள். நான் எப்போதும் நல்ல மனிதனின் பக்கத்திலேயே

இருக்கிறேன். நேரடியான குறுகிய பாதையிலிருந்து அவன் ஒருபோதும் விலகிச் செல்லுவதில்லை. அப்படிப்பட்டவன் இறுதியில் என்னிடமே வருகிறான். ஏனெனில், அவன் என்னைப்பற்றியே சிந்தித்த வண்ணம் இருக்கிறான்; எனது பாதுகாப்பை நாடி என்னிடமே லயித்துவிடுகிறான். அவ்வாறாக, அவன் வெறிக் குணங்களிலிருந்தும் கோபத்திலிருந்தும் விடுதலை பெற்று, தவத்தினாலும் ஞானத்தினாலும் தூய்மையடைகிறான்.

‘‘ஒரு மனிதன் எதை விதைக்கிறானோ, அதையே அறுவடை செய்கிறான். நான் வகுத்துள்ள விதிகள் செயல்படுவதிலிருந்து யாரும் தப்ப முடியாது. குணங்களையும் தொழில்களையும் பிரித்து நான் நான்கு வர்ணங்களை ஸ்தாபித்தேன். இருந்தாலும், நான் அவற்றின் கர்த்தா அல்ல. ஏனெனில், எனது செயலின் பலன்களை நான் விரும்பவில்லை. அவற்றிலிருந்து எழும் புண்ணியம் அல்லது பாவத்திற்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இந்த தெய்விக மாயையை அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். உலகத்தில் நடைமுறையில் இருந்துவரும் எல்லா நடவடிக்கைகளும் தெய்விக சட்டங்களுக்கு உட்பட்டவையேயாகும். எனினும், அவற்றினால் கடவுள் களங்கத்தை அடைவதில்லை. எனவே, அவைகளுக்கெல்லாம் கடவுள்தான் கர்த்தா என்று கூற வேண்டும். அதே சமயம் அவைகளுக்கு அவர் கர்த்தாவும் இல்லை. அது போலவே ஒரு மனிதன் செய்தால், நடவடிக்கைகளால் களங்கம் அடையாமலும் பற்றுதலின்றியும் செயலில் ஈடுபட்டால், பலனில் ஆசையில்லாமல் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தால், அவனை நிச்சயமாகக் காப்பாற்றியே தீருவேன். அவன் செயலில் செயலற்ற நிலையைக் காண்கிறான். தவறான செய்கை எது என்பதை அவன் உடனே அறிந்து கொண்டுவிடுகிறான். ஆசையால் தூண்டப்பட்டவை யாவும் தவறான செய்கைகளே. ஆசை இராமல் அத்தகைய செயல்களில் ஈடுபடுவது முடியாத காரியம். உதாரணமாக, திருட்டு, விபசாரம் போன்ற காரியங்களை ஆசை இராவிட்டால் செய்ய முடியுமா? இவற்றையெல்லாம் பற்றுதலின்றிச் செய்வது முடியாத காரியம். ஆசையின்றியும், பலனை எதிர்பார்த்துத் திட்டமிடாமலும் தனது உடனடியான கடமைகளைச் செய்வோர், ஞானமாகிய தீயில் தங்களுடைய செயல்களை எரித்துவிட்டதாகக் கூறலாம். அவ்வாறாக, செயலின் பலனில் பற்றுதலைத் துறந்தவன் எப்போதும் போதுமென்ற மனம் உடையவனாகவும், எப்போதும் சுதந்திரம் உள்ளவனாகவும் இருப்பான். அவன் தனது உடைமைகளையெல்லாம் துறந்துவிடுவான். ஆரோக்கியமுள்ள ஒருவனுடைய உடலின் காரியங்கள் எவ்வாறு இயற்கையாக நடைபெறுகின்றனவோ, அதுபோலவேயே பலனில் பற்றுதலை விட்டவனின் நடவடிக்கைகள் இயற்கையாக செயல்படுகின்றன. அவனுக்கு இறுமாப்போ அல்லது தன் செயல்களுக்குத் தன் சொந்த புத்திதான் காரணம் என்ற எண்ணமோ இருப்பதில்லை. அத்தகைய உணர்ச்சிகளிலிருந்து அவன் விடுபட்டவனாக இருக்கிறான். தான் தெய்வ சித்தத்தினால் செயல்

படும் ஒரு வெறும் கருவி என்பதை அவன் உணர்ந்திருக்கிறான். அவன், தான் வெற்றி பெற்றாலும் சரி, தோல்வியுற்றாலும் சரி, அதைப் பற்றி கவலைப்படுவதில்லை. வெற்றியினால் அவது மனம் பூரிப்பை அடைவதில்லை, தோல்வியினால் அவன் சோர்வுற்று விடுவதும் இல்லை. தியாகம் (யக்ஞம்) செய்வது, அதாவது உலகத்திற்குத் தொண்டு செய்வது என்ற நோக்கத்துடனேயே அவன் எல்லா அலுவல்களையும் செய்கிறான். தனது நடவடிக்கைகளிலெல்லாம் அவன் கடவுளையே சிந்தித்த வண்ணம் இருக்கிறான். இறுதியில் அவன் கடவுளையே அடைகிறான்.

"உலகில் பலவிதமான யக்ஞங்கள் இருக்கின்றன. தூய்மையும் தொண்டும் எல்லா யக்ஞங்களுக்கும் ஆணிவேராகும். உதாரணமாக, தூய்மையடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் பயிற்சி செய்யப்படும் புலன்களின் கட்டுப்பாடு, தரும கைங்கர்யம், பிராணயாமம் போன்றவை யக்ஞங்களே. இவற்றைப்பற்றிய அறிவை, ஞானியான ஒரு குருவினிடமிருந்து பணிவு, மன உறுதி, சிரத்தை, தொண்டு இவற்றின் மூலம் பெறலாம். ஒருவன், தான் யக்ஞம் என்று கருதும் பல்வேறு நடவடிக்கைகளிலும் விருப்பப்படி ஈடுபடுவானாயின் அவன் தனக்கும் உலகத்திற்கும் தீங்கு செய்தவனாவான். எனவே, எல்லா அலுவல்களையும் புத்திசாலித்தனமாக செய்ய வேண்டியது அவசியமாகும். இத்தகைய ஞானம் வெறும் புத்தக அறிவு அல்ல. அதில் சந்தேகத்திற்கே இடம் எதுவும் இல்லை. அது நம்பிக்கையுடன் ஆரம்பமாகிறது. அனுபவத்தில் வந்து முடிகின்றது. அவன் தன்னிடத்தில் எல்லா உயிர்களையும், கடவுளிடத்தில் தன்னையும் பார்க்கும் சக்தியைப் பெறுகிறான். கடவுளுக்குத் தெரிந்தே எல்லாம் நடைபெறுகின்றன என்று அவனுக்குத் தோன்றுகிறது. அத்தகைய ஞானமானது, படுமோசமான பாவிகள் கூட மோட்சத்தை அடையும்படி செய்கிறது; செயல்களின் பந்தத்திலிருந்து அவனை விடுதலை செய்கிறது. எனவே, அவன் செயல்களின் பலா பலன்களால் பாதிக்கப்படுவதில்லை. இந்த ஞானத்தைப்போல் புனிதமானது உலகிலேயே வேறு எதுவும் இல்லை. எனவே, கடவுளிடத்தில் பூரண நம்பிக்கையுடனும், புலன்களைக் கட்டுப்படுத்தியும் ஞானத்தை அடைய முயற்சிப்பவன், சிறிதும் குற்றம் குறையற்ற மனச் சாந்தியைப் பெறுகிறான்."

3, 4, 5-ஆவது அத்தியாயங்களைச் சேர்ந்தாற்போல் வாசிக்க வேண்டும். சுயநலமற்ற கர்மயோகம் (அனாஸக்தி) என்றால் என்ன என்பதையும், அதைப் பயிற்சி செய்வதற்கான வழிகள் யாவை என்பதையும்அந்த அத்தியாயங்கள் விவரிக்கின்றன. இந்த மூன்று அத்தியாயங்களையும் வாசகர்கள் ஒழுங்காக அறிந்து கொண்டு விட்டால், பின்னர் வரும் அத்தியாயங்களை அறிந்துகொள்ளுவதில் அதிகக் கஷ்டம் இராது. அனாஸக்தியை அடைவதற்கான வழிகளையும் முறைகளையும் மீதியுள்ள அத்தியாயங்கள் விவரிக்கின்றன. இந்தக் கோணத்திலிருந்தே நாம் கீதையை ஆராய்ச்சி செய்யவேண்டும். இந்த ஆராய்ச்சியை நாம் தொடர்ந்து நடத்தி

வருவோமாயின், நாள்தோறும் நாம் சமாளிக்கவேண்டி யிருக்கும் பல பிரச்னைகளையும் அதிகக் கஷ்டமின்றி நாம் சமாளிக்க முடியும். இதற்கு தினசரிப் பயிற்சி அவசியமாகும். இதை ஒவ்வொருவரும் முயற்சித்துப் பார்க்கவேண்டும். உதாரணமாக, ஒருவருக்குக் கோபம் ஏற்பட்டால், கோபத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள சுலோகத்தை அவர் நினைவில் வைத்துக்கொண்டு அந்த விரோதியை அடக்க முற்படவேண்டும். நாம் யாரையாவது அறவே வெறுக்கலாம்; பொறுமையை இழந்துவிடலாம்; மிதமிஞ்சிச் சாப்பிடுபவர்களாக இருக்கலாம்; அல்லது ஏதாவதொரு காரியத்தைச் செய்வதா, வேண்டாமா என்ற சந்தேகத்தினல் அல்லல் படலாம். இந்தக் கஷ்டங்கள் எல்லாம், கீதை அன்னையின் உதவியால் தீருவதற்கு இடம் இருக்கிறது. ஆனல், முதலாவதாக கீதையில் நமக்கு நம்பிக்கை இருக்க வேண்டியது அவசியம் என்பதுடன், அதை இடைவிடாது ஆராய்ச்சி செய்தும் வர வேண்டும். நாம் தினந்தோறும் கீதையைப் பாராயணம் செய்ய வேண்டியதும், தொடர்ச்சியான இந்தக் கடிதங்களை வாசிக்க வேண்டியதும் அந்த லட்சியத்தை அடைவதற்கான வழிகளாகும்.

# 5

# கர்மயோகம் அல்லது சுயநலமற்ற செயல்

அர்ஜுனன் கூறினன்: "ஞானத்தைப்பற்றி நீங்கள் பிரமாதமாகப் புகழ்ந்து கூறுகிறீர்கள். அப்படியானல் செயல் அவசியமானதல்ல என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனல், செயலையும் நீங்கள் புகழ்கின்றீர்கள். நீங்கள் கூறுவதிலிருந்து, எந்தச் செயலையும் சுயநலமின்றிச் செய்வதே சரி என்று நான் கருத வேண்டியிருக்கிறது. அந்த இரண்டில் எது சிறந்தது என்பதை நீங்கள் திட்டவட்டமாக எனக்குக் கூறினல், என் மனத்திற்கு அமைதி ஏற்படும்."

பகவான் சொன்னர்: "சந்நியாசம் என்பதற்கு ஞானம் என்பதே பொருள்; கர்மயோகம் என்பதற்கு சுயநலமற்ற நடவடிக்கை என்பதே பொருள். அவ்விரண்டுமே நல்லவைதான். ஆனல், அவ்விரண்டில் ஏதாவதொன்றை நான் தேர்ந்து எடுக்க வேண்டுமாயின், யோகம் அல்லது சுயநலமற்ற செயலே சிறந்தது என்று கூறுவேன். யாரையும், எந்தப் பொருளையும் யார் வெறுப்பதில்லையோ அவனுக்கு எதிலும் ஆசை ஏற்படுவதில்லை. உஷ்ணம்-குளிர்ச்சி, இன்பம்-துன்பம் போன்ற இருமைகளிலிருந்து அவன் விடுதலை பெற்றவனுக இருப்பான். அத்தகைய ஒருவன் செயலில் ஈடுபட்டாலும் அவன் ஒரு சந்நியாசியே. அதாவது, உலகத்தைத் துறந்த ஒரு விவேகியே. அவன் தன்னைப் பிணைத்துள்ள சங்கி

வியை எளிதில் தகர்க்கும் ஆற்றல் பெற்றிருப்பான். விவேகம் வேறு, செயல் வேறு என்று, அறியாதவர்கள்தான் கூறுவார்கள்; கற்றறிஞர்கள் கூறமாட்டார்கள். விவேகம், செயல் இரண்டின் பலனும் ஒன்றுதான். அவ்விரண்டும், நம்மை ஒரே லட்சியத்திற்கே இட்டுச் செல்லுகின்றன. எனவே, அவ்விரண்டையும் ஒன்றாகக் கருதுவோனே உண்மையைக் கண்டு கொண்டவனாகிறான். தூய்மையான ஞானமுடைய ஒருவன், ஒரு சாதனத்தை மனத்தினால் விரும்பிய மாத்திரத்திலேயே பெற்றுவிடுகிறான். அந்தச் சாதனத்தைப் பெற அவன் வெளிப்படையான செயல் எதிலும் ஈடுபட வேண்டும் என்ற அவசியம் இல்லை.

''மிதிலை நகர் தீப்பற்றி எரிந்தபோது அந்தத் தீயை அணைப்பதற்காக மற்றவர்கள் அவசரம் அவசரமாக ஓடவேண்டியிருந்தது. ஆனால் மிதிலை மன்னனான ஜனகன், இருந்த இடத்தில் இருந்து கொண்டே தனது மன உறுதியினால் தீயை எதிர்த்துப் போராடும் விஷயமாகத் தனது பங்கைச் செய்ய முற்பட்டான். ஏனெனில், அவனது ஊழியர்கள் அவனுடைய கட்டளைகளை நிறைவேற்றுவதற்குத் தயாராக இருந்தனர். ஜனக மகாராஜா, தீயை அணைப்பதற்காக ஒரு பானையில் தண்ணீரை நிரப்பிக் கொண்டு அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தால், மக்கள் அவனையே கவனித்துக் கொண்டிருப்பார்கள்; தங்களுடைய கடமையைச் செய்வதில் தவறிவிடுவார்கள். அப்படியே ஏதாவது செய்தாலும், மன்னனுக்கு எவ்வித அபாயமும் நேராமல் தடுப்பதற்காக அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருப்பார்கள். ஒவ்வொருவரும் உடனடியாக ஜனகனைப்போல் ஆகிவிட முடியாது. ஜனகனைப் போன்ற ஒரு நிலையை அடைவது மிகவும் கஷ்டமான காரியம். லட்சத்தில் ஒருவன்தான் பல ஜன்மங்களில் தொண்டு செய்து அதன் பலனாக ஜனகனைப் போன்ற நிலையை அடைய முடியும். மேலும் அந்த நிலை, ரோஜா மலர்களாலான படுக்கையைப்போல் சொகுசானதும் அல்ல. ஒரு மனிதன் சுயநலமற்ற செயல்களைப் புரிந்து வந்தால், அவனது சிந்தனையானது மேலும் மேலும் புதிய சக்தியைப் பெறுகிறது. பின்னர் அவன் வெளிப்படையான நடவடிக்கைகளில் ஈடுபடுவது குறைந்துகொண்டே வருகிறது. ஆனால், அந்த மாறுதலை அவன் அறிந்து கொள்ளுவதில்லை. அத்தகைய மாறுதல் ஏற்படவேண்டும் என்பதில் அவனது மனம் லயித்திருக்கிறது. அதன் பலனாக தொண்டு புரிவதில் அவனுக்கு உள்ள சக்தி நாளுக்கு நாள் அதிகமாகிறது. பின்னர் அவன் தொண்டு புரிவதிலிருந்து ஓய்வே எடுத்துக் கொள்ளுவதில்லை. இறுதியாக, அதிவேகமாக இயங்கும் ஒரு சாதனம் நின்று கொண்டிருப்பதாகவே தோன்றுவதுபோல் அவனது தொண்டும் சிந்தனையுடன் நின்று விடுகிறது. அத்தகைய ஒரு மனிதன் எதுவுமே செய்யாமல் உட்கார்ந்திருப்பதாகக் கூறுவது சரியாகாது. எனினும், அநேகமாக இந்த மகோன்னத நிலையைக் கற்பனை செய்து கொள்ளத்தான் முடியுமேயன்றி அனுபவத்தில் கொண்டுவர முடியாது. அதனாலேயே நான் கர்மயோகத்தை

அதிகமாக விரும்புகிறேன். சுயநலமற்ற நடவடிக்கையின் மூலமே லட்சக்கணக்கானவர்கள் சந்நியாசத்தின் பலனை அடைகிறார்கள். அவர்கள் சந்நியாச நிலையை அடைய முயற்சிப்பார்களாயின், அவர்களது நிலை இரண்டும் கெட்டான் என்பதுபோல் ஆகிவிடும்.

"ஏனெனில், அவர்கள் சந்நியாசத்தை மேற்கொண்டால், போலி வேடதாரிகளாகிவிட இடம் உண்டு. அதற்கு மாறாக, அவர்கள் யாதொரு நடவடிக்கைகளிலும் ஈடுபடாவிடில், அவர்களுடைய நிலை அதோகதியாகிவிடும். சுயநலமற்ற நடவடிக்கைகளால் தன்னைத் தூய்மையாக்கிக்கொண்ட ஒருவன், தனது மனத்தையும் புலன்களையும் கட்டுப்பாட்டில் கொண்டுவந்துள்ள ஒருவன், எல்லா ஜீவராசிகளையும் சமமாகக் கருதி தன்னைப் போலவே எல்லாவற்றையும் அன்புடன் நேசிக்கும் ஒருவன், எப்போதும் செயலில் ஈடுபட்டிருந்தாலும் கூட, செயலிலிருந்து தனித்து நிற்பவனாகவே விளங்குகிறான். செயல்கள் அவனைக் கட்டுப்படுத்துவதில்லை. அவன் பேசுகின்றான்; நடக்கின்றான்; சாதாரணமாக மனிதன் செய்யும் காரியங்களில் ஈடுபடுகின்றான். ஆனால், அவனது நடவடிக்கைகள் அவனது உறுப்புகள் செய்யும் காரியங்களாகவே தோன்றுகின்றன. அவன் எதுவும் செய்யாதவனைப் போலவே தோன்றுகிறான். சரீர ஆரோக்கியமுள்ள ஒருவனது உடல் சம்பந்தமான நடவடிக்கைகள் இயற்கையாகவும், எவ்விதத் தூண்டுதலுமின்றி தன்னிச்சையாகவுமே நடைபெறுகின்றன. உதாரணமாக, அவனது இரைப்பை அவன் அறியாமலேயே வேலை செய்கின்றது. அது வேலை செய்வதைக் குறித்து அவன் கவலைப்படவேண்டிய அவசியமே இல்லை.

"அதைப்போலவே, ஆன்மிக ஆரோக்கியம் வாய்ந்த ஒருவன், அவனது உடலின் மூலம் செயல்கள் புரிந்தாலும் அதனால் அவன் களங்கம் அடைவதில்லை. இந்நிலையில் அவன் தனது செயல்களையெல்லாம் பிரம்மத்திற்கே (கடவுளுக்கே) அர்ப்பணம் செய்ய வேண்டும். கடவுளின் சார்பிலேயே அவற்றைச் செய்ய வேண்டும். அவ்வாறாக, அவன் செயலில் ஈடுபட்டிருந்தாலும் தாமரை இலைத் தண்ணீரைப் போல் அவனுக்கும் செயலுக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதில்லை. எனவே, ஒரு யோகி (சுயநலமற்ற நடவடிக்கையில் ஈடுபட்டிருப்பவன்), பற்றுதலின்றியும், இறுமாப்பின்றியும் உடலினாலும், மனத்தினாலும், அறிவினாலும் செய்யும் காரியத்தின் மூலம் தன்னைத்தானே தூய்மையாக்கிக் கொண்டு, சாந்தியையும் அடைகிறான். அதற்கு மாறாக 'அயோகி'யோவெனில், நடவடிக்கையின் பலனில் பற்றுதல் கொண்டு தன் சொந்த ஆசைகளினால் தன்னைத்தானே சிறைப்படுத்திக் கொள்கிறான். யோகியோவென்றால், ஒன்பது வாயில்கள் உள்ள நகரில், அதாவது அவனது உடலில் பேரானந்தத்துடன் வாழ்கின்றான்; அவன் தனது நடவடிக்கைகள் யாவையும் மனத்தினால் துறந்துவிடுகிறான். தான் எதுவுமே செய்வதில்லை என்பதையும் தனது முயற்சியால் எதுவுமே நடப்பதில்லை என்பதையும் உணருகின்றான். தூய்மையாக்கப்பட்ட ஆன்மாவையுடைய

ஒருவன் பாவம் செய்வதில்லை, யாதொரு புண்ணியமும் செய்வதில்லை. இறுமாப்பை அறவே கைவிட்டு, நடவடிக்கைகளின் பலனைத் துறந்து பற்றுதலின்றி செயலில் ஈடுபடுபவன் ஒரு வெறும் யந்திரத்தைப் போலாகிவிடுகிறான்; தனது விருப்பப்படி எல்லோரையும் ஆட்டிவைக்கும் கடவுளின் கையில் ஒரு கருவியாகிவிடுகிறான். எனவே அவன் புண்ணியமோ அல்லது பாவமோ செய்வதென்ற பிரச்னையே எழுவதற்கில்லை. அதற்கு மாறாக, அறியாமையில் ஆழ்ந்துள்ள ஒருவன் தனது புண்ணியத்தையும் பாவத்தையும் கணக்கு எடுத்துக் கொண்டு மேலும் மேலும் படுகுழிக்குள் ஆழ்ந்து விடுகிறான். அதன் விளைவாக, இறுதியில் அவன் சம்பாதிப்பதெல்லாம் பாவத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை.

"அதற்கு மாறாக, நாளுக்கு நாள் வளர்ச்சி பெறும் தனது விவேகத்தால் அறியாமையை அடியோடு போக்கிக் கொள்ளும் ஒருவன், தனது இயல்பான நடவடிக்கையால் மேலும் மேலும் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளுகிறான். உலகத்தின் முன்னிலையில் அவன் நிறை மனிதனாகவும் புண்ணியசாலியாகவும் தோன்றுகிறான். அவன் எல்லாப் பொருட்களையும் சமமாகக் கருதுகிறான். கல்வியறிவும் பணிவும் உள்ள, பிரம்மத்தை அறிந்த பிராம்மணன், பசு, யானை, நாய், மிருகத்தையும் விட இழிவான நிலையை அடைந்துள்ள ஒரு மனிதப் பிறவி ஆகிய எல்லோரையும் அவன் யாதொரு வேற்றுமையுமின்றி சமமாகவே கருதுகிறான்; சமமான அன்புடன் அவன் எல்லோருக்கும் தொண்டு புரிகிறான். அவர்களில் ஒருவனுக்கு மாத்திரம் கௌரவம் அளிப்பது, மற்றொருவனை வெறுப்பது என்ற வழக்கம் அவனிடம் இருப்பதில்லை. சுயநலமற்ற நடவடிக்கைகளில் ஈடுபடும் ஒருவன், தன்னை உலகத்திற்குக் கடன்பட்டிருப்பவனாகவே எண்ணுகிறான். எனவே, அவன் ஒவ்வொருவருக்கும் தான் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுத்து அதாவது தொண்டு புரிந்து நீதியுடன் நடந்து கொள்கிறான். உலகம் ஒரு மகோன்னத சக்தியினால் இயங்கிவருகிறது என்ற உணர்ச்சி அவனது மனத்தில் நிறைந்திருக்கிறது. யாராவது மகிழ்ச்சியளிக்கக் கூடிய காரியம் எதையாவது செய்தால், அதற்காக அவன் ஆனந்தம் அடைவதில்லை; யாராவது தன்னை கேவலமான முறையில் தூஷித்தால், அதற்காக அவன் மனம் வருந்துவதும் இல்லை.

"உலகத்தில் பற்றுதல் உள்ள மனிதன், தனக்கு வெளியே உள்ள பொருட்களிலிருந்தே இன்பத்தை நாடுகிறான். ஆனால் அதற்கு மாறாக, சுயநல நோக்கமோ பற்றுதலோ இராமல் தன் கடமையைச் செய்பவன், நிரந்தரமான மனச் சாந்தியைக் கொடுக்கும் ஊற்று தன்னிடத்திலேயே இருப்பதை உணருகின்றான். அவன் தனக்குப் புறம்பாக உள்ள பொருட்களில் பற்றுதல் வைக்காமல், மனத்தை அவற்றிலிருந்து அப்பால் திருப்பிக் கொண்டுவிடுகிறான். புலன்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் பொருட்கள் யாவும் இவனுக்குத் துன்பத்தைக் கொடுப்பவையாக இருக்கின்றன. ஆசை, கோபம் போன்ற உணர்ச்சிகள் பொங்கி

எழுவதை ஒவ்வொருவனும் தடுத்துக் கொள்ளவேண்டும். சுயநல மற்ற யோகி, எல்லாப் பிராணிகளுக்கும் இடைவிடாது நன்மை செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறுன். சந்தேகம் எதுவும் அவனது மனத்தை வாட்டுவதில்லே. சந்தேகத்திலிருந்து அவன் விடுதலே பெற்றவனுக இருக்கின்ருன். அவன் இந்த உல கத்தில் இருந்தாலும், உலகத்தில் உள்ள எதிலும் அவன் பாசம் வைப்பதில்லே. பிராணுயாமத்தின் மூலம் அவன் தன் உள்ளேயே திருஷ்டியைச் செலுத்தி, ஆசை, பயம், கோபம் ஆகிய அவஸ்தைகளே வென்றுவிடுகிருன். என் ஒரு வனேயே எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளாக வும், நண்பனுகவும், யாகங்களில் அளிக்கப்படும் காணிக்கைகளே ஏற்றுக் கொள்ளுபவனுகவும் கருதி, என்னிடம் சாந்தியையும் அடைகிருன்.''

# 6
# யோகியின் லட்சணம்

பகவான் கூறியதாவது: ''பலனே அடைய வேண்டும் என்ற சுயநல ஆசை எதுவுமின்றி யார் தனது கடமையைச் செய் கிருனே, அவனேத்தான் சந்நியாசி என்றும், யோகி என்றும் கூற வேண்டும். எத்தகைய நடவடிக்கையிலும் ஈடுபடாமல் ஒதுங்கி இருப்பவன் ஒரு சோம்பேறியே ஆவான். ஒரு பொருளிலிருந்து மற்ருெரு பொருளுக்கும், அதிலிருந்து வேருெரு பொருளுக்கும் ஆசை கொண்டு நிலேயில்லாமல் தாவும்படி மனத்தை விட்டுவிடக் கூடாது. இதுதான் மிகவும் முக்கியமான விஷயமாகும். யோகத்தை அனுசரித்து நடப்பவன், அதாவது எல்லாவற்றிலும் சமத்துவ புத்தி உடையவன் யாதொரு நடவடிக்கையிலும் ஈடு படாமல் இருக்க முடியாது. எல்லாவற்றையும் சமத்துவ புத்தி யுடன் நோக்கும் நிலேயை அடைந்தவன், மிகவும் சாந்தமாக இருப் பான். அவனது மனத்தில் எழும் எண்ணங்களே, செயல்களே நிறைவேற்றுவதற்கான சக்தியை அளிப்பவையாக இருக்கும். புலன்களுக்கு இலக்கான பொருட்களிலோ அல்லது நடவடிக்கை களிலோ பற்றற்று இருப்பவனே ஒரு யோகி; யாருடைய மனம் இடைவிடாமலும் நிலேயற்றும் திரியாமல் இருக்கிறதோ அவனும் ஒரு யோகியே.

''ஒரு மனிதனுக்கு, தன்னேத்தானே காப்பாற்றிக் கொள்ள வும் முடியும்; தன்னேத்தானே படுவீழ்ச்சியடையும்படி செய்து கொள்ளவும் முடியும். எனவே ஒவ்வொருவனுக்கும், தனக்குத் தானே நண்பனுகவோ அல்லது விரோதியாகவோ இருக்கக்கூடிய ஆற்றல் உண்டு. தன் மனத்தை அடக்கி ஆளும் சக்தி வாய்ந்த ஒருவனுக்கு அவனது ஆன்மா நண்பனுக இருக்கிறது. தன்னடக்

கத்தைப் பயிற்சி செய்து கொள்ளத் தவறியவனுக்கு, அவனது ஆன்மாவே விரோதியாகி விடுகிறது. உஷ்ணமோ குளிரோ, இன்பமோ துன்பமோ, கௌரவமோ அகௌரவமோ, தன்னடக்கம் உள்ள ஒருவனுடைய மனச் சாந்தியைச் சீர்குலைத்து விட முடியாது. தன்னடக்கத்தை சோதித்துப் பார்ப்பதற்கான முறை அது தான். எவன் அறிவும் அனுபவமும் உள்ளவனோ, எவன் உறுதியான மனம் படைத்தவனோ, எவன் தன் புலன்களை அடக்கி ஆளும் எஜமானனாக இருக்கிறானோ, எவனுக்கு தங்கம்,கல், மண் எல்லாம் சமமாகத் தோன்றுகின்றனவோ, அவனே ஓர் யோகியாவான். நண்பன் என்றும் விரோதி என்றும், பாவி என்றும் ஞானி என்றும் அவன் வேற்றுமை பாராட்டுவதில்லை. அவன் எல்லோரையும் சமமாகவே கருதுகிறான். ஒருவன் அத்தகைய நிலையை அடைவதற்கு மனத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும்; புலன்களுக்கு இலக்கான ஆசைகளை அறவே ஒழித்துவிட வேண்டும்; மகோன்னதமான ஆன்மாவைக் குறித்து தனிமையில் தியானம் செய்ய வேண்டும். யோக ஆசனங்களைப் பயிற்சி செய்வது மாத்திரம் போதாது. ஒருவன் சமத்துவ புத்தியையும், அமைதியான மன நிலையையும் அடைவதற்கு, எள்ளளவும் குற்றம் குறையின்றி பிரம்மச்சரியத்தைப் போன்ற விரதங்களை அனுசரிக்க வேண்டும். ஒருவன் அத்தகைய உறுதியான மனநிலையை அடைந்து, விரதங்களை அனுசரித்து, மனத்தையும் கடவுளிடம் லயிக்கும்படி செய்வானாயின் அவனுக்கு பரிபூரணமான சாந்தி ஏற்படுகிறது.

''மிதமிஞ்சி உண்பவனோ அல்லது அர்த்தமில்லாமல் பட்டினி கிடப்பவனோ அத்தகைய நிலையை அடைய முடியாது. துக்கத்துக்கு அடிமையாக இருப்பவனும் அல்லது எப்போதும் கண் விழித்துக்கொண்டிருப்பவனும் கூட அந்த நிலையை எட்ட முடியாது. அத்தகைய உயர்ந்த நிலையை அடைய விரும்புவோன், உண்பது, தண்ணீர் அருந்துவது, தூங்குவது, விழித்துக்கொண்டிருப்பது போன்ற எல்லா நடவடிக்கைகளிலும் அளவோடு இருக்கவேண்டும். ஒரு நாள் அமிதமாக உண்பது, மறு நாள் பட்டினிகிடப்பது-ஒரு நாள் எல்லையின்றித் தூங்குவது, அடுத்த நாள் இடைவிடாமல் விழித்துக்கொண்டிருப்பது-ஒருநாள் கடுமையாக உழைத்துவிட்டு மறு நாள் சோம்பேறித்தனமாகக் காலம் கழிப்பது-இவையெல்லாம் ஓர் யோகியின் லட்சணங்கள் அல்ல. யோகி எப்போதும் உறுதியான மனம் படைத்தவனாக இருக்கிறான்; விசேஷ முயற்சி எதுவுமின்றியே அவன் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டவனாக இருக்கிறான். காற்றே இராத ஓரிடத்தில் ஆடாமலும் அசையாமலும் எரியும் ஒரு தீபத்தைப் போல் அவன் இருக்கின்றான். உலக அரங்கத்தில் நடைபெறும் விசித்திரமான நிகழ்ச்சிகளாலோ அல்லது அவனது சொந்த புத்தியினால் ஏற்படும் சம்பவங்களாலோ அவன் அங்குமிங்கும் அலைக்கழிக்கப்பட்டுத் தவிப்பதில்லை. நிதானமாகவும், உறுதியுடனும், நீண்ட காலம் முயற்சி செய்வதன் மூலமே அத்தகைய சீரான மன நிலையை ஒருவன் அடைய முடியும். மனம்

சஞ்சலமானது, அமைதியின்றி அங்குமிங்கும் ஓடக்கூடியது. எனவே, சிறிது சிறிதாக அதை உறுதியான ஒரு நிலைக்குக் கொண்டுவர வேண்டும். உறுதியான புத்தியுடையவனுக்குத் தான் மன அமைதி உண்டாக முடியும். ஒருவன் மனத்தை அங்குமிங்கும் சஞ்சரிக்கவிடாமல் உறுதியான ஒரு நிலைக்குக் கொண்டுவர வேண்டுமாயின், அவன் மனத்தை இடைவிடாது ஆன்மாவில் நிலைக்கச் செய்யவேண்டும். அப்போது அவன் தன்னிடத்தில் எல்லா உயிர்களையும், எல்லா உயிர்களிடத்திலும் தன்னையும் காண்பான்; அவன் எல்லா ஜீவராசிகளிடத்லும் என்னையும், என்னிடத்தில் எல்லா ஜீவராசிகளையும் காண்பான். என்னிடத்தில் லயம் அடைந்து எல்லா இடங்களிலும் என்னையே காண்பவன் தன்னைத்தானே மறந்துவிடுகிறான். அவன் எந்த அலுவலில் ஈடுபட்டிருந்தாலும், அவன் எந்த நேரத்திலும் என்னிடத்திலேயே லயித்தவனாக இருக்கிறான். அத்தகைய ஒருவன் பாவம் செய்வதென்பது முடியாத காரியம்.''

இவ்வாறாக கிருஷ்ணனால் வர்ணிக்கப்பட்ட யோகமானது, நடைமுறையில் மிகக் கடினமானதாக அர்ஜுனனுக்குத் தோன்றியது. எனவே அவன் கிருஷ்ணனைப் பார்த்து இவ்விதம் கூறினான்: ''அத்தகைய உறுதியான மன நிலையை ஒருவன் எவ்வாறு அடைய முடியும்? மனிதனின் மனம் குரங்கைப் போல் ஓரிடத்திலாவது நிலையாக இருப்பதில்லை. காற்றைப் போல் மனத்தையும் அடக்குவது கஷ்டமாக இருக்கிறது. அப்படிப்பட்ட மனத்தை எப்படிக் கட்டுப்படுத்துவது?''

மேற்கண்டவாறு அர்ஜுனன் கேட்டதற்கு பகவான் விடையளித்தார்: ''நீ கூறுவது சரிதான். ஒருவன் பற்றுதலையும் துவேஷத்தையும் ஜயிக்கவேண்டும் என்று முழு மனத்துடனும் முயற்சி செய்வானாயின், அவனுக்கு யோகத்தை நடை முறையில் அனுசரிப்பது கஷ்டமாக இராது. எனினும், ஒரு விஷயத்தை நீ தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். அதாவது தன் மனத்தைக் கட்டுப்படுத்த முடியாத ஒருவனுக்கு, யோகத்தை நடைமுறையில் கொண்டுவருவது முடியாத காரியம்.''

பின்னர் அர்ஜுனன் கிருஷ்ணனிடம் மற்றொரு கேள்வி கேட்டான்: ''ஒரு மனிதனுக்கு நம்பிக்கை இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவன் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ளாததால், தன்னை குற்றம் குறையில்லாதவனாகச் செய்துகொள்வதில் வெற்றி பெற முடியவில்லை. அவனது கதி என்ன? ஆகாயத்தில் கலைக்கப்பட்ட மேகத்தைப்போல் அவன் அழிய வேண்டியது தானா?''

பகவான் கூறினார்: ''அத்தகைய நம்பிக்கையுள்ள ஒருவன் ஒரு காலத்திலும் சீரழிவதில்லை. ஏனெனில், நேர்மையான வழியில் செல்லுபவனுக்கு ஒருபோதும் தீங்கு நேருவதில்லை. அவன் மரணம் அடைந்த பிறகு, அவன் செய்த புண்ணியத்

திற்குத் தகுந்தவாறு அவன் சிறிது காலம் சொர்க்கத்தில் இருந்துவிட்டு, பின்னர் பூமியில் தெய்வ பக்தியுள்ள ஒரு நல்ல குடும்பத்தில் மீண்டும் பிறக்கிறான். எனினும், அத்தகைய பிறப்பை அடைவது கஷ்டமான காரியம். பிறகு அவன் முற்பிறப்புகளில் வளர்ச்சி பெற்றுள்ள மன நிலையை மீண்டும் அடைகிறான். அதன் பின் குற்றம் குறையற்ற நிறை நிலையை அடைவதற்காக மிகவும் கஷ்டப்பட்டு முயற்சித்து, இறுதியில் மகோன்னதமான லட்சியத்தை அதாவது மோட்சத்தை அடைகிறான். சலியாமல் முயற்சி செய்வதன் மூலம் சிலர் அத்தகைய மன நிலையை அடைகிறார்கள். மற்றவர்கள் அவர்களுடைய நம்பிக்கைக்கும், முயற்சிக்கும் உகந்தவாறு பல ஜன்மங்கள் எடுத்த பிறகு அவ்வித நிலையை அடைகிறார்கள். துறவறம், ஞானம், தெய்விகச் சடங்குகள் ஆகியவற்றைக் காட்டிலும் சமத்துவ நோக்கமும், உறுதியும், சாந்தியும் நிறைந்த அத்தகைய மனநிலை மிகவும் உயர்ந்தது. ஏனெனில், அவையெல்லாம் இறுதி லட்சியமான அந்த மன நிலையை அடைவதற்கான வழிகளேயாகும். எனவே, நீயும் அத்தகைய மன நிலையை அடைந்தவனாகவும் ஒரு யோகியாகவும் விளங்கவேண்டும். யோகிகளில் கூட, எனக்கு எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்து, பூரண நம்பிக்கையுடன் என்னை மாத்திரம் பூஜை செய்பவன்தான் சிறந்தவன் என்று தெரிந்துகொள்.''

பிராணாயாமமும் ஆசனங்களும் இந்த அத்தியாயத்தில் போற்றப்பட்டுள்ளன. அதே சமயத்தில் பகவான், பிரம்மச்சரியத்தின் அவசியத்தையும் வற்புறுத்தியிருக்கிறார். மேலும் மேலும் கடவுளுக்கு அருகில் நம்மைக் கொண்டுசெல்லும் விரதங்களை நாம் மேற்கொண்டு, அவற்றிலிருந்து வழுவாமல் நடந்துகொள்ள வேண்டும். ஆசனங்கள் போன்ற முறைகளை அனுசரிப்பதால் மாத்திரம் நமக்கு மன உறுதியோ, சாந்தியோ ஏற்பட்டுவிடாது என்பதைத் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். சஞ்சலமின்றி மனத்தை உறுதிப்படுத்துவதற்கும், மனம் ஒரே லட்சியத்தில் ஈடுபடும்படி செய்வதற்கும், ஆசனங்களும் பிராணாயாமமும் சிறிதளவு பலன் அளிப்பவையாக இருக்கலாம். அந்த லட்சியத்தை அடைவதற்காகவே ஆசனங்களும் பிராணாயாமமும் அனுசரிக்கப்பட வேண்டும். இல்லாவிடில், அவை தேகப்பயிற்சிக்கான மற்ற முறைகளைப் போலாகிவிடும். ஆசனங்களும் பிராணாயாமமும் மிகுந்த பலனை அளிக்கும் தேகப்பயிற்சிக்கான சிறந்த முறைகளே. அந்த முறைகள் ஆன்மாவுக்கும் நன்மை விளைவிக்கக் கூடியவை. எனினும், அசாதாரண சக்திகளைப் பெறுவதற்காகவும், அதிசயமான சாதனைகளைச் செய்து காட்டுவதற்காவும் அம்முறைகளை உபயோகிப்பதால் ஆபத்தே ஏற்படும். முந்திய மூன்று அத்தியாயங்களில் அடங்கியுள்ள உபதேசத்தின் சாரமாகவே இந்த அத்தியாயத்தைக் கருதி, நாம் இதை வாசிக்கவேண்டும். இது, நமது ஆன்மிகப் போராட்டத்தில் நமக்கு உற்சாகம் அளிப்பதாக இருக்கிறது. நாம் சோர்வடைந்து, மன உறுதியையும் சாந்தியையும் அடைவதற்கான முயற்சியை ஒரு காலத்திலும் கைவிட்டுவிடக் கூடாது.

# 7

# பகவானின் யோக மாயை

பகவான் கூறினர்: ''அரசே, ஒருவன் தன் மனம் முழுவதையும் என்னிடம் அர்ப்பணம் செய்து என்னையே அடைக்கலமாகக் கொண்டு கர்மயோகத்தையும் அனுசரித்து வருவானாயின், அவன் என்னைப் பூரணமாக அறிந்துகொள்வான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட இந்த ஞானம் ஒருவனுக்கு ஏற்படுமாயின், பின்னர் அவனுக்கு இந்த உலகத்தில் மேற்கொண்டு தெரிந்துகொள்ள வேண்டியது எதுவுமே இல்லை. எனினும், ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவன்தான் அத்தகைய ஞானத்தை அடைய முயற்சிப்பான். அவர்களிலும் ஒரே ஒருவன்தான் அதில் வெற்றியும் பெறுவான்.

''மண், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், அறிவு, அகங்காரம் ஆகிய எட்டும் சேர்ந்ததே எனது பிருகிருதி அதாவது இயல்பாகும். இது கீழ்த்தரமான இயல்பு; மற்ருென்று உயர்தர இயல்பு, அதாவது உயிர் ஆகும். இந்த உலகம் அந்த இரண்டு இயல்புகளிலிருந்து, உடலும் ஆன்மாவும் ஒன்ருக இணைவதிலிருந்து பிறந்ததுதான். எனவே, எல்லாப் பொருட்களின் உற்பத்திக்கும் அழிவுக்கும் நான்தான் காரணம். ஒரு நூலில் முத்துக்கள் கோர்க்கப்படுவதைப் போல, உலகமும் என்னுல் நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. அவ்விதமாக, தண்ணீரில் உள்ள சுவை, சூரியனிடத்திலும் சந்திரனிடத்திலும் உள்ள ஒளி, வேதங்களில் உள்ள 'ஓம்' என்ற சொல், ஆகாயத்தில் உள்ள சப்தம், மனிதனிடத்தில் உள்ள முயற்சி, மண்ணில் உள்ள நறுமணம், தீயில் உள்ள ஒளி, உலகில் வசிக்கும் எல்லாவற்றிலும் உள்ள உயிர், துறவிகளின் தவம், அறிவாளிகளின் அறிவு, பலவான்களின் தூய பலம், எல்லா ஜீவராசிகளிடத்திலும் உள்ள நேர்மையான ஆசை ஆகிய எல்லாம் நானே. சுருங்கக் கூறுவதாயின், சத்துவ, ரஜஸ், தமோ குணங்களிலிருந்து எழும் யாவும் என்னிடமிருந்தே தோன்றுகின்றன என்பதை நீ அறிந்துகொள்ள வேண்டும். அவையெல்லாம் என்னையே சார்ந்திருக்கின்றன. இந்த மூன்று குணங்களுக்கு இலக்காகி மதி மயங்கியுள்ள மக்கள், அழிவற்ற என்னை அறிந்துகொள்வதில்லை. இந்த குணங்களால் உருவான என்னுடைய மாயையைக் கடந்து வெற்றி பெறுவது கடினமாகும். ஆனல் என்னையே யார் சரணம் அடைகிருர்களோ, அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகின்றனர், மூன்று குணங்களையும் கடந்து செல்கின்றனர். பாவம் செய்யும் மூடர்கள் என்னை வந்து அடையலாம் என்று கனவில்கூட நினைக்க முடியாது. மாயையில் ஆழ்ந்துள்ள அவர்கள், அந்தகாரத்தில்

உழன்று கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு ஞானம் ஏற்படுவதில்லை.

"ஆனல் நற்செயல்களில் ஈடுபடுவோர் என்னைப் பூஜிக்கின்றனர். சிலர் வேதனையிலிருந்தும் துன்பத்திலிருந்தும் விடுதலை பெறுவதற்காக என்னைப் பூஜிக்கின்றனர். மற்றவர்கள் என்னைப் பற்றிய ஞானம் ஏற்படுவதற்காக அவ்விதம் செய்கின்றனர். மூன்ருவது கோஷ்டியினர், தங்களுடைய ஆசைகள் நிறைவேற வேண்டும் என்பதற்காக என்னை வணங்குகின்றனர். வேறு சிலர் அவ்விதம் வணங்கவேண்டியது தங்களுடைய கடமை என்ற ஞானத்துடன் அப்படிச் செய்கின்றனர்.

"என்னைப் பூஜிப்பதென்ருல், என்னல் சிருஷ்டிக்கப்பட்டவர்களுக்குத் தொண்டுபுரிவதே யாகும். தங்களுடைய துன்பம் காரணமாக சிலர் அவ்விதம் தொண்டு புரிகின்றனர்; மற்றும் சிலர் தாங்கள் நலன்பெற வேண்டும் என்பதற்காகத் தொண்டு புரிகின்றனர்; அத்தகைய நடவடிக்கைகளால் என்ன பலன் ஏற்படும் என்பதை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினல் தூண்டப்பட்டு மற்றும் சிலர் தொண்டு செய்கிருர்கள்; நாலாவது கோஷ்டியினர்தான் அத்தகைய தொண்டின் பெருமையை அறிந்து அவ்விதம் செய்கின்றனர். அவர்களால் மற்றவர்களுக்குத் தொண்டுபுரியாமல் இருப்பதென்பது இயலாத காரியம். கடைசியாகக் கூறப்பட்ட இவர்கள்தான் ஞானிகளான எனது பக்தர்கள் ஆவர். இவர்கள்தான் மற்றவர்களைக் காட்டிலும் எனது அன்பிற்குப் பாத்திரர்கள் ஆவர். என்னைக் காட்டிலும் சிறந்தது எதுவும் இல்லை என்பதை இவர்கள் அறிகிருர்கள். எனவே, இவர்கள்தான் எனக்கு வெகு சமீபத்தில் இருப்பவர்கள் ஆவர்.

"இவர்கள் பல ஜன்மங்களாக என்னை நாடியதன் பலனுகவே இந்த ஞானத்தைப் பெறுகிருர்கள். இவர்கள் இந்த ஞானத்தை அடையும்பொழுது, உலகம் முழுவதும் வாசுதேவனுன என்னையே காண்கிருர்கள். ஆனல் பல்வேறு ஆசைகளுக்கு இலக்கானவர்கள் வேறு தெய்வங்களை நாடிச் செல்லுகிருர்கள். எனினும், ஒவ்வொருவருடைய பக்திக்கும் உகந்தவாறு பலனை அளிப்பவன் நான் ஒருவன்தான். குறிப்பிட்ட அளவு ஞானமுள்ள ஒருவனின் சாதனையும் குறிப்பிட்ட அளவுதான் இருக்கும். எனினும், அதைக்கொண்டு அவர்கள் திருப்தியடைந்துவிடுகிருர்கள். அறியாமையினல் அவர்கள், புலன்களின் மூலமாக என்னை அறிந்துகொள்ள முடியும் என்று கற்பனை செய்துகொள்கிருர்கள். அழிவற்ற மகோன்னதமான எனது உருவம் புலன்களுக்கு எட்டாதது என்பதையும், அந்த உருவத்தை கைகளாலோ, காதுகளாலோ, மூக்கினலோ, கண்களாலோ அறிய முடியாது என்பதையும் அவர்கள் உணர்ந்துகொள்வதில்லை. அவ்வாருக, நான் எல்லாப் பொருட்களின் சிருஷ்டிகர்த்தாவாக இருந்தும்கூட, அறியாமையில் ஆழ்ந்துள்ளவர்கள் என்னை

அறிந்துகொள்ளுவதில்லை. இதுதான் எனது யோக மாயையாகும் (சிருஷ்டி சக்தி).

விருப்பு வெறுப்புகளின் விளைவாகவே இன்பமும் துன்பமும் ஏற்படுகின்றன. அவைதான் மனித வர்க்கத்தையே மாயையினால் ஆட்டிவைக்கின்றன. எனினும் மாயையிலிருந்து தங்களை விடுதலை செய்துகொண்டு, தங்களுடைய எண்ணங்களையும் செயல்களையும் தூய்மையாக வைத்துக்கொண்டிருப்பவர்கள், தங்களுடைய விரதங்களில் உறுதியாக நின்று என்னை இடைவிடாது பூஜிக்கிறார்கள். நான் குற்றம் குறையற்ற பரபிரம்மம் என்பதையும், அதே சமயத்தில் உடல்களுடன் கூடிய எல்லா ஜீவராசிகளிடத்திலும் நான் இருக்கிறேன் என்பதையும் (அத்யாத்மம்), என்னுடைய சிருஷ்டித் தொழிலையும் அவர்கள் அறிகிறார்கள்; ஸ்தூல உலகம் (அதிபூதம்), தெய்விக உலகம் (அதிதைவம்) வேள்விகள் (அதியக்ஞம்) ஆகியவற்றை ஆட்கொண்டு நடத்திவைப்பவன் நான்தான் என்பதை அறிந்து, மன உறுதியையும் சாந்தியையும் யோக சித்தியையும் அடைந்து, மரணத்திற்குப் பிறகு பிறப்பு இறப்புகளிலிருந்து அறவே விடுதலை பெறுகிறார்கள். உண்மையான ஞானம் அவர்களுக்கு ஏற்பட்டதும், அவர்களுடைய மனம் அற்ப விஷயங்களில் ஈடுபடுவதில்லை. இந்த உலகம் முழுவதும் கடவுள் மயமாகவே அவர்களுக்குத் தோன்றுகிறது. அவர்கள் கடவுளிடமே லயித்துவிடுகிறார்கள்.''

# 8

# மகோன்னத நிலையை அடைய வழி

அர்ஜுனன் கிருஷ்ணனைக் கேட்டதாவது: ''எள்ளளவும் குறையற்ற பிரம்மம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் முதலியவற்றைப் பற்றி நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். ஆனால் இந்த சொற்களின் அர்த்தத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. உங்களை அதிபூதமாகவும், அதிதைவமாகவும், அதியக்ஞமாகவும் அறிந்து மன உறுதியையும் சாந்தியையும் பெறுவோரின் மரண காலத்தில், நீங்கள் அவர்களின் முன்னிலையில் தோன்றுகிறீர்கள். தயவு செய்து இவற்றை யெல்லாம் எனக்கு விளக்கிக் கூறுங்கள்.''

அர்ஜுனனுக்கு பகவான் அளித்த பதில் இதுதான்: ''கடவுளின் அழிவற்ற மகோன்னதமான அம்சமே பிரம்மம். அத்யாத்மம் என்பது, எல்லா ஜீவராசிகளின் உடல்களிலும் வசிக்கும் ஆன்மாவே. கர்மத்தின் பலனாகவே எல்லா ஜீவராசிகளும் பிறக்கின்றன. அதாவது கர்மமே சிருஷ்டி முறையாகும். அதிபூதம்

என்பது, அழியும் உடலாகத் தோற்றம் அளிக்கும் நான்தான். வேள்வியினுல் தூய்மையாக்கப்பட்ட தனித்தனி ஆன்மாவே அதியக்ஞம் ஆகும். உடல், மூட ஆன்மா, தூய்மையாக்கப்பட்ட ஆன்மா அல்லது பிரம்மம் எல்லாவிடத்திலும் நானே இருக்கிறேன். மேற்கண்ட எல்லா அம்சங்களுமாக என்னை எவன் மரணம் அடையும் தறுவாயில் தியானம் செய்கிருனே, அவன் தன்னை அடியோடு மறந்துவிடுகிருன்; அவன் எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை; எதையும் விரும்புவதில்லை; இறுதியில் அவன் என்னிடம் ஐக்கியம் அடைகிருன் எனபதைப் பற்றி நீ சிறிதும் சந்தேகம்கொள்ள வேண்டாம். ஒரு மனிதன் தன் மனத்தில் எப்போதும் எதை நினைத்துக்கொண்டிருக்கிருனே, மரணம் அடையும் தறுவாயில் எதை நினைக்கிருனே அதை அவன் அடைகிருன். எனவே எப்போதும் நீ என்னையே நினைத்து வரவேண்டும்; உன்னுடைய மனமும் இருதயமும் என்னிடம் லயிக்கும்படி செய்ய வேண்டும். அப்படியாயின், நிச்சயமாக நீ என்னிடம் வந்து சேருவாய். மனத்தை அவ்விதம் நிலை நிறுத்துவது கஷ்டமாக இருக்கிறது என்று நீ கூறலாம். தினந்தோறும் பயிற்சி செய்வதாலும், இடைவிடாது முயற்சி செய்வதாலும் ஒருவன் அத்தகைய மனநிலையை அடையலாம் என்று நான் கூறுவதை நீ நம்பு. உடல்களுடன் கூடிய எல்லா உயிர்களிடத்திலும் பல்வேறு உருவங்களில் நான்தான் இருக்கிறேன் என்று உனக்கு சற்றுமுன் கூறினேன். மேற்கண்ட மனநிலையை அடைய ஒருவன் ஆரம்பத்திலிருந்தே தன்னைத் தயார் செய்துகொள்ள வேண்டும். அப்படியானுல் தான், மரணம் அடையும்போது அவனது மனம் வழி தவறிப்போகாமல் இருக்கும். அப்படியானுல் தான், அவனது மனம் பக்தியில் ஆழ்ந்து நிலையான ஜீவ சக்தியுடையதாக இருக்கும். அப்போதுதான் அவன், என்னை எல்லாவற்றையும் அறிந்தவனுகவும், ஆதிமூலமாகவும், உலகம் முழுவதையும் ஆட்சி புரிபவனுகவும், எல்லோரையும் ஆதரிப்பவனுகவும், இருளை அகற்றும் சூரியனைப் போல் அறியாமையை அகற்றுபவனுகவும் எண்ணுகிருன்.

"இந்த மகோன்னதமான நிலையைத்தான் அக்ஷர பிரம்மம் அதாவது அழிவற்ற பிரம்மம் என்று வேதங்கள் கூறுகின்றன. விருப்பு வெறுப்புகளிலிருந்து தங்களை விடுதலை செய்துகொண்ட ரிஷிகளே அத்தகைய நிலையை அடைகின்றனர். அந்த நிலையை அடைய விரும்புவோர் யாவரும் பிரம்மச்சரியத்தை அனுசரிக்க வேண்டும்; உடல், மனம், பேச்சு ஆகியவற்றைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும்; பேச்சளவில்கூட புலன் நுகர்ச்சிக்கான சாதனங்களுக்கு இடம் கொடுக்கக் கூடாது. தங்களுடைய புலன்களை அடக்கி, ஓம் என்ற தெய்விக மந்திரத்தைக் கூறி மரணம் அடையும் போது என்னை நினைப்பவர்கள், பிறப்பு இறப்பு இல்லாத மகோன்னத நிலையை அடைகின்றனர். அவர்களுடைய மனம், வேறு எண்ணங்களால் ஒரு போதும் நிலைகுலைவதில்லை. அவர்கள் அவ்விதம் என்னிடம்

வந்துவிட்டால், துன்ப மயமான இந்த உலகில் அவர்கள் மீண்டும் பிறப்பதில்லை. பிறப்பு இறப்பாகிய கொடிய சுழலைத் தகர்த்து விடுதலை பெறுவதற்கு என்னை அடைவது ஒன்றுதான் வழியாகும்.

''மனிதனின் ஆயுட்காலம் நூறு வருடங்களாகும். அதை அடிப்படையாக வைத்துக்கொண்டே மனிதன் காலத்தைக் கணக்கிடுகிறான். அந்தக் காலத்திற்குள் அவன் ஆட்சேபகர மான காரியங்களை ஆயிரக்கணக்கில் செய்துவிடுகிறான். ஆனால், காலத்திற்கு எல்லையே இல்லை. ஆயிரம் யுகங்கள் சேர்ந்து பிரம் மாவுக்கு ஒரு நாளே ஆகும். அதனுடன் ஒப்பிடும்போது, மனிதனின் ஒரு நாளோ அல்லது மனிதனின் ஆயுட்காலமான நூறு வருடங் களோ மிகமிக அற்பமானதே. மனிதனின் அத்தகைய அற்ப மான கால அளவை கணக்கிட்டுக் கொண்டிருப்பதால் என்ன பலன்? எல்லையற்ற கால சக்கரத்தில் மனிதனின் ஆயுள் ஒரு வினாடியே. எனவே மற்றெல்லாவற்றையும் பற்றிய சிந்தனையை விட்டுவிட்டு, கடவுள் ஒருவரையே நினைக்கவேண்டியது கடமை யாகும். அப்படியிருக்க, ஒருவன் கண நேர இன்பத்தை நாடி எவ்விதம் ஓடிக்கொண்டிருக்க முடியும்? பிரம்மாவின் நாளான பகலிலும் இரவிலும் சிருஷ்டியும் மரணமும் இடைவிடாது நடந்து கொண்டிருக்கின்றன; இனி எதிர்காலத்திலும் அவ்விதமே நடந்துகொண்டுதான் இருக்கும்.

''ஜீவராசிகளைச் சிருஷ்டித்தும் அழித்தும் வரும் பிரம்மா என்னில் ஓர் அம்சமே. நாம் பிரத்தியட்சமாகப் பார்க்கக் கூடிய உருவம் அவருக்கு இல்லை. அவரைப் புலன்களால் அறிந்துகொள்ள முடியாது. இதைத் தவிர, பிரத்தியட்சமாகப் பார்க்க முடியாத என் அம்சத்தில் மற்றொரு பகுதியும் இருக்கிறது. அதைப்பற்றி உன்னிடம் நான் கூறியிருக்கிறேன். அந்த நிலையை அடைபவன் மீண்டும் பிறப்பதில்லை. ஏனெனில், அந்தப் பகுதி சம்பந்தப்பட்ட வரையில் பகலோ, இரவோ எதுவும் இல்லை. இதுதான் அமைதியான, அசைக்க முடியாத ஓர் அம்சமாகும். சஞ்சல மற்ற ஒரே பக்தியினால்தான் அதை உணர்ந்துகொள்ள முடியும். அதுதான் உலகத்தையே தாங்குகிறது; உலகம் முழுவதையும் வியாபித்து நிற்கிறது.

''உத்தராயணத்தின் போது (ஜனவரி மாதத்திலிருந்து ஜூலை வரையில் சூரியன் வடதிசையாகச் சாயும்போது) சுக்ல பட்சத்தில் (வளர் பிறை) யார் இறுதியில் என்னை நினைத்த வண்ணம் இறக் கிறானோ அவன் என்னை வந்தடைகிறான். தட்சிணாயனத்தின் போது (ஜூலையிலிருந்து ஜனவரிவரையில் சூரியன் சிறிது தென் திசையாகச் சாயும்போது) கிருஷ்ண பட்சத்தில் (தேய் பிறை) யார் மரணம் அடைகிறானோ அவன் மீண்டும் உலகத்தில் வந்து பிறக்கிறான். இங்கே உத்தராயணம் என்றும், வளர் பிறை என்றும் இருப்பதற்கு, சுயநல மற்ற தொண்டு என்று அர்த்தம் செய்துகொள்ளலாம்; தட்சிணாயனம், தேய் பிறை என்ற சொற் கள் சுயநலத்தையே குறிப்பிடுகின்றன. தொண்டின் வழியே ஞானத்தின் வழியாகும். சுயநல வழியே அறியாமையின் வழி

யாகும். ஞானத்தின் பாதையில் செல்லுபவன், பிறப்பு-இறப்பு என்ற தளையிலிருந்து விடுதலை பெறுகிறான். அறியாமைப் பாதையில் செல்லுபவன் அடிமையாகிவிடுகிறான். அந்த இரண் டிற்கும் உள்ள வேற்றுமையை அறிந்துகொண்டபின், அறியா மைப் பாதையில் செல்லும் மடத்தனமான காரியத்தை எவன் தான் செய்ய முற்படுவான்? அந்த இரண்டு பாதைகளுக்கும் உள்ள வேற்றுமையை எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டும்; நற்காரியங்களின் பலன்களைத் துறந்துவிட வேண்டும்; பற்றற்ற உணர்ச்சியுடன் நடந்துகொள்ள வேண்டும்; புத்தி பூர்வமாகவும் ஆன்ம பூர்வமாகவும் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். அவ்விதமாக என்னால் விவரிக்கப்பட்ட மகோன்னதமான நிலையை அடைய எல்லோரும் முயற்சிக்க வேண்டும்."

# 9

# "எல்லாம் நானே"

முந்திய அத்தியாயத்தின் கடைசி சுலோகத்தில் ஒரு யோகி யின் உயர்ந்த நிலை என்ன என்பதை விவரித்தபின், பகவான் இயல்பாகவே பக்தியின் மகிமையைப் பற்றிக் குறிப்பிட முற்படு கிறார். கீதை கூறுவதைப்போல் யோகி என்பவன் வெறும் வரண்ட ஞானம் உடையவன் அல்ல; பக்தன் என்பவன் உற்சாகத் தினால் தன்னை மறந்து காரியங்களைச் செயகிறவன் அல்ல. ஆனால், ஞானமும் பக்தியும் ததும்பும் சுயநலமற்ற தொண்டு செய் பவன்தான் யோகியும் பக்தனும் ஆவான்.

எனவே, பகவான் கூறுகிறார்: "நீ துவேஷ உணர்ச்சியி லிருந்து விடுதலை பெற்றிருப்பதால், ஞானத்தின் ரகசியத்தை இப்போது நான் உனக்கு எடுத்துக் கூறுகிறேன். அதை அறிந்து கொள்ளுவதால் உனக்கு நலன் உண்டாகும். எல்லாவற்றையும் விட இதுதான் புனிதமான அறிவாகும். இதை நடைமுறையில் அனுசரிப்பது எளிது. அந்த அறிவில் நம்பிக்கை இராதவர்கள் என்னைக் காணமுடியாது. உருவம் இல்லாத என்னை மனிதர்கள் புலன்களால் அறிந்துகொள்ள முடியாது. எனினும், என் உருவ மானது உலகம் முழுவதும் வியாபித்து நிற்கிறது. இது உலகத் திற்கே ஆதாரமாகும். அதற்கு உலகம் ஆதாரம் அல்ல. இருந் தாலும் இந்த ஜீவராசிகள் எல்லாம் என்னிடத்தில் இல்லை; என்றும், நான் அவைகளிடத்தில் இல்லை என்றும் ஒருவிதத்தில் கூறலாம். நான் எல்லாவற்றிற்கும் மூலாதாரமாக இருந்து அவற்றைக் காப்பாற்றுகிறேன் என்றாலும் அவைகள் என்னி டத்தில் இல்லை, நானும் அவைகளிடத்தில் இல்லை. அறியா மையால் அவர்கள் என்னை அறிவதில்லை, என்னிடத்தில் பக்தி யுடன் இருப்பதில்லை. இதுதான் என்னுடைய தெய்வ ரகசியம் என்பதை அறிந்துகொள்.

“இந்த ஜீவராசிகளிடத்தில் நான் இராததுபோல் தோன்றினாலும், காற்றைப் போல் நான் எல்லா இடங்களிலும் நடமாடிக் கொண்டிருக்கிறேன். கால சக்கரத்தின் இறுதியில் எல்லா ஜீவ ராசிகளும் என்னுள் பிரவேசித்துவிடுகின்றன. பின்னர் சிருஷ்டியின் ஆரம்பத்தில் மீண்டும் பிறக்கின்றன. இந்த நடவடிக்கைகள் யாவும் என்னுடையவை. எனினும், அவைகளால் நான் கட்டுண்டு இருப்பதில்லை. பற்றுதல் உணர்ச்சி எதுவுமின்றியே நான் செயல் புரிகிறேன். அவற்றால் ஏற்படும் பலனிலும் நான் அக்கறை கொள்வதில்லை. அச்சம்பவங்கள் நிகழ்வதற்குக் காரணம் எனது இயல்பே யாகும். ஆனால் என் பெருமையை மக்கள் உணர்ந்து கொள்ளுவதில்லை. நான் இல்லை என்றும் அவர்கள் அறவே மறுக்கின்றனர். அவர்கள் வீண் ஆசைகளுக்கு இடம் கொடுக்கிறார்கள்; வீண் செயல்களில் ஈடுபடுகிறார்கள்; அறியாமையில் ஆழ்ந்துகிடக்கிறார்கள். எனவே, அவர்களை அசுர இயல்பு உடையவர்கள் என்று கூறலாம். ஆனால், தெய்விக இயல்பு உடையவர்கள், நான் அழிவற்ற சிருஷ்டி கர்த்தா என்பதை உணர்ந்து என்னைப் பூஜிக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய தீர்மானத்தில் உறுதியுடன் இருக்கிறார்கள். அவர்கள் என்னை தோத்திரம் செய்து கொண்டும், என்னை தியானம் செய்து கொண்டும், எப்போதும் நற் செயல்களிலேயே ஈடுபட முயற்சித்துவருகிறார்கள். மற்றவர்கள் என்னை ஒருவன் என்றோ அல்லது பலர் என்றோ நம்புகிறார்கள். எனக்கு எண்ணிக்கையற்ற அவதாரங்கள் உண்டு. என்னை பலவாய் எண்ணுபவர்கள் என்னுடைய பல்வேறு முகங்களையும் பற்றி சிந்திக்கிறார்கள். எனினும் அவர்கள் யாவரும் என்னுடைய பக்தர்களே.

“யாகம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் நான்தான்; யாகமும் நான்தான்; பிதுரு தேவதைகளுக்கு அளிக்கப்படும் அன்னம் நானே; மரம், செடி, கொடிகளாகிய ஓஷதி நான்; தெய்விக மந்திரம் நான்; யக்ஞம் நானே; ஹோமம் செய்யப்படும் தீ நான்தான்; இந்த உலகத்தின் தாயும் தந்தையும் பாட்டனும் நானே; இந்த உலகத்தை ரட்சிப்பவனும், ஞானப் பரம்பொருளும், ஓம் என்ற பிரணவமும், ரிக்வேதமும், சாம வேதமும், யஜுர் வேதமும், எல்லாம் நானே. வாழ்க்கைப் பாதையின் முடிவு நான்தான். நானே எல்லோரையும் காப்பாற்றுபவனாகவும், எல்லோருக்கும் இறைவனாகவும், சாட்சியாகவும் இருக்கிறேன். எல்லோருக்கும் நான்தான் புகலிடம்; எல்லோருக்கும் அன்புடன் அருள் புரிபவன் நான்; ஆதியும் அந்தமும், உஷ்ணமும் குளிரும், இருப்பவனும் இராமல் இருப்பவனும் நானே.

“வேதங்களால் குறிப்பிடப்பட்டுள்ள சடங்குகளைச் செய்வோர், அவற்றின் பலனை அடைய வேண்டும் என்றே அவ்விதம் செய்கிறார்கள். அச் சடங்குகளைச் செய்து அவர்கள் சொர்க்கத்தை அடையலாம். ஆனால் அவர்கள், மறுபடியும் மனிதர்கள் வாழும் இந்த உலகத்தில் பிறந்து இறக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். மனத்தைச் சிதற விடாமல் என்னை தியானம்

செய்து என்னை மாத்திரமே பூஜை செய்பவனுடைய கஷ்டங்களை யெல்லாம் நானே ஏற்றுக்கொள்ளுகிறேன்; அவனுடைய தேவை களை யெல்லாம் நான் பூர்த்தி செய்கிறேன்; அவனுடைய உடைமைகளை யெல்லாம் நானே காப்பாற்றுகிறேன். இருதயத் தில் நம்பிக்கையுடன் மற்ற தெய்வங்களைப் பூஜிப்போர் அறியாமையால் ஆட்கொள்ளப்பட்டவர்களே. இருந்தா லும், உண்மையில் அவர்களும் என்னையே பூஜிக்கிறார்கள். ஏனெனில், யக்ஞங்களுக்கெல்லாம் நான்தான் எஜமானன். எனி னும் எங்கும் வியாபித்துள்ள என்னை அவர்கள் அறிந்து கொள் ளுவதில்லை. அதனால் அவர்கள் மகோன்னத நிலையை அடைய இயலாதவர்களாக இருக்கிறார்கள். தேவர்களைப் பூஜிப்பவர்கள் தேவர்களின் உலகத்தையும், பிதுருக்களைப் பூஜிப்பவர்கள் பிது ருக்களின் உலகத்தையும் அடைகிறார்கள். பூத பைசாசங்களைத் தொழுபவர்கள் அவைகளையே அடைகிறார்கள். பக்தர்கள் அன்பு டன் எனக்கு ஓர் இலையையோ அல்லது ஒரு மலரையோ கொடுத் தாலும்கூட நான் அதை ஏற்றுக் கொள்ளுகிறேன். ஆகையால் நீ எதைச் செய்தாலும் எனக்கே அர்ப்பணம் என்று செய். பின் னர் நன்மையான பலன்களோ, தீமையான பலன்களோ உன்னை எதுவும் செய்ய முடியாது; அவற்றிற்கு நீ பொறுப்பாளியாக இருக்கவேண்டிய அவசியம் இராது.செயல்களின் பலன்களையெல் லாம் நீ துறந்துவிடப்போவதால், உனக்கு இனிமேல் பிறப்போ, இறப்போ எதுவும் இல்லை. நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாக இருக்கிறேன். எனக்கு யார்மீதும் துவேஷம் இல்லை, யார்மீதும் பிரியமும் இல்லை. பக்தியுடன் என்னைப் பூஜிப்பவர்கள் என் னிடத்தில் இருக்கிறார்கள்; நான் அவர்களிடத்தில் இருக்கிறேன். அவர்களுக்கு நான் சலுகை காட்டுவதில்லை. எனினும் அவர்களு டைய பக்தியின் பலனாக அவர்கள் அத்தகைய நிலையை அடைகி றார்கள். பக்தி பல அற்புதங்களைச் சாதிக்கின்றன. முழு பக்தி யுடன் என்னைப் பூஜிப்பவன் பாவம் செய்தவனாக இருந்தால் கூட, மகத்துவம் வாய்ந்த முனிவனாகிவிடுகிறான். சூரியனைக் கண் டதும் இருள் மறைந்து விடுவதைப் போல ஒருவன் என்னை அடை யும்போது, அவன் தீய வழிகளை விட்டுவிடுகிறான். எனவே, எனது பக்தன் ஒரு காலத்திலும் அழிவதில்லை என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொள். அவன் தருமவானாக மாறி, நிரந்தரமான சாந் தியை அடைகிறான். கீழ் சாதியினர் என்று சொல்லப்படும் வைசி யர்களும், சூத்திரர்களும், கல்வியறிவற்ற பெண்களும் என்னைச் சரண் அடைவார்களாயின், அவர்கள் என்னிடம் ஐக்கியமாகின் றனர். அப்படியிருக்க, புனிதமான வாழ்க்கையை நடத்தும் பிராம்மணர்களும், க்ஷத்திரியர்களும் என்னை வந்து அடைவார்கள் என்பதைச் சொல்லாமலே தெரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு பக்தனும் அவனது பக்தியின் பலனை அனுபவிக்கிறான். எனவே, நிலையற்ற இந்த உலகத்தில் பிறந்த நீ, என்னைப் பூஜித்து மோட் சத்தை அடைய முயற்சிக்கவேண்டும். உன் மனத்தை என்பால் நிலை நிறுத்து; என்னிடம் பக்தியுடன் இரு; எனக்காக தியாகங் கள் செய்; என்முன் விழுந்து வணங்கு. என்னிடத்தில் உன்

மனத்தை நிலைநிறுத்தி, நீ உன்னை சூன்யமாகச் செய்துகொள்வாயானல் நீ நிச்சயமாக என்னை வந்தடைவாய்.''

குறிப்பு: பக்தி என்பது கடவுளிடம் ஆழ்ந்த பற்றுதல் கொள்வதே என்பதை இந்த அத்தியாயத்திலிருந்து நாம் அறிந்துகொள்கிறேம். சுயநலமற்ற உணர்ச்சியைப் பயிற்சி செய்துகொள்வதற்கு இதுதான் சிறந்த வழியாகும். அதனுலேயே, பக்திதான் மகோன்னதமான யோகம் என்றும், அது நடைமுறையில் அனுசரிப்பதற்கு எளிது என்றும் முதலில் நமக்குக் கூறப்பட்டிருக்கிறது. இது நமது உள்ளத்தில் உறுதியாக நிலை கொள்ளுமாயின் அதை நடைமுறையில் அனுசரிப்பது எளிதாகும்; இல்லாவிடில் அதை அனுசரிப்பது கடினம்தான். அதற்கு விலையாக நாம் நமது உயிரைக் கூட அர்ப்பணம் செய்ய வேண்டியிருக்கும் என்று விளக்கப்பட்டிருக்கிறது. எனினும் அதில் நாம் ஆழ்ந்து விடுவோமாயின் நமக்குப் பேரானந்தம் ஏற்படுகிறது. பார்ப்பவர்களுக்குத்தான் அந்த நிலை பீதியை அளிக்கிறதேயன்றி, நமக்கு அது ஆனந்தத்தையே கொடுக்கிறது. சுதன்வா கொதிக்கும் எண்ணெயில் கிடந்தபோது சிரித்துக் கொண்டிருந்தான். பக்கத்தில் நின்று அதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்குத்தான் கலக்கமும நடுக்கமும் ஏற்பட்டன. 'தீண்டத் தகாதவனுன' நந்தன் அக்கினிப் பரீட்சைக்கு ஆளானபோது ஆனந்தக் கூத்தாடியதாகக் கூறப்படுகிறது. அவையெல்லாம் உண்மையான கதைகளா, இல்லையா என்பது பற்றி நம்மை நாம் அலட்டிக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. உண்மை என்னவெனில், ஒரு மனிதன் ஏதாவது ஒன்றில் லயித்துவிட்டால், அத்தகைய அமைதியான, கலக்கமே இல்லாத ஒரு நிலையை அடைகிறுன் என்பதுதான். அந்த நிலையில் அவன் தன்னையே மறந்துவிடுகிறுன். கடவுளைத் தவிர வேறென்றில் எவன்தான் இருதயத்தை லயிக்கவிடுவான்? ''இனிக்கும் கரும்பை விட்டுவிட்டு, கசக்கும் வேம்பை நாடாதே. சூரியனையும் சந்திரனையும் விட்டுவிட்டு மின்மினிப் பூச்சியை நாடாதே.'' இவ்வாருக, பக்தி இல்லாவிடில் செயலின் பலனைத் துறப்பது முடியாத காரியம் என்பதை, ஒன்பதாவது அத்தியாயம் எடுத்துக் காட்டுகிறது. அதன் கடைசி சுலோகம் முழு அத்தியாயத்தின் சாரத்தையும் பிழிந்துகொடுத்திருக்கிறது. அது இதுதான்: ''எதற்கும் ஆசைப்படாமல், உன்னை முற்றிலும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிடு.''

# 10

# பாவங்களுக்கெல்லாம் மூலகாரணம்

பகவான் கூறினர்: ''பக்தர்களின் நலனேயே முக்கிய நோக்க மாகக் கொண்டு நான் கூறுவதை மீண்டும் ஒரு முறை கேள். எனது உற்பத்தியை தேவர்களும், மகாரிஷிகளும் கூட அறியார். அதற்குக் காரணம் என்னவெனில், எனக்கு ஆதி இல்லே. தேவர் களும் மகரிஷிகளும் உட்பட உலகத்திற்கே மூலகாரணம் நான் தான். நான் பிறப்பற்றவன் என்றும், ஆதி இல்லாதவன் என்றும் யார் அறிகிருனே, அவன்தான் விவேகியாவான். அவன் சகல பாவங்களிலிருந்தும் விடுதலே அடைகிருன். அவன் என்னே அவ்விதம் உணர்ந்து தன்னே என்னுடைய குழந்தையாகவோ அல்லது என்னுடைய அம்சமாகவோ கருதுவானுயின், பாவத் திற்கான காரணங்களேயே அவன் ஜயித்தவனுகி விடுகிருன். ஒருவன் தன்னுடைய உண்மையான இயல்பை அறியாமல் இருப் பதுதான், பாவங்களுக்கெல்லாம் மூலகாரணம்.

''என்னிடமிருந்தே எல்லா உயிர்களும் உண்டாகின்றன. மன்னிக்கும் குணம், சத்தியம், ஆனந்தம், துக்கம், பிறப்பு, இறப்பு, பயமின்மை முதலிய பல்வேறு குணங்களும் என்னிட மிருந்தே உண்டாகி, எல்லா உயிர்களுக்கும் பகிர்ந்து அளிக்கப் படுகின்றன. இவையெல்லாம் என்னுடைய அம்சங்களே என் பதை அறிவோர், எல்லாவற்றையும் சமமாகக் கருதும் உயர்ந்த மன நிலேயை எளிதில் அடைகின்றனர்! அவர்கள் அகங்காரத் தையும் கைவிடுகின்றனர். அவர்களுடைய உள்ளம் என்னிடத் திலேயே நிலேத்து நிற்கிறது. அவர்கள் எல்லாவற்றையும் எனக்கே அர்ப்பணம் செய்கிருர்கள். அவர்களுடைய சம்பாஷணே யெல்லாம் என்னேப் பற்றியதாகவே இருக்கின்றன. அவர்கள் என்னேயே தோத்திரம் செய்கிருர்கள். அவர்கள் இருப் பதைக் கொண்டு திருப்தியடைந்தவர்களாய் ஆனந்தமாக வாழ் கிருர்கள். என்னே எப்போதும் நிஃனத்த வண்ணம் இருக்கும் இந்த பக்தர்களுக்கு நான் ஞான சக்தியைக் கொடுக்கிறேன். அந்த ஞான சக்தியின் மூலம் அவர்கள் என்னே வந்து அடை கிருர்கள்.''

பின்னர் அர்ஜுனன் பகவானேத் தோத்திரம் செய்தான்: ''எல்லாவற்றிற்கும் மேலான பிரம்மம் நீங்கள்தான். எல்லாவற் றிற்கும் உயர்ந்த ஸ்தானமும் எல்லோருக்கும் இறைவனும் தாங்கள்தான். தேவர்களுக்கெல்லாம் முதல்வராகவும், பிறப் பற்றவராகவும், எங்கும் வியாபித்தவராகவும், கடவுளாகவும், தந்தையாகவும் உள்ள உங்களே மகரிஷிகள் பூஜிக்கிருர்கள் என்று நீங்களே கூறுகின்றீர்கள். உங்களுடைய உண்மையான இயல்பை யாரும் அறியார். அது உங்களுக்கு மாத்திரமே தெரியும். உங்களுடைய மகத்துவம் வாய்ந்த அம்சங்களேப் பற்றி

தயவு செய்து இப்போது எனக்குக் கூறுங்கள். தியானத்தின் மூலம் உங்களை எவ்விதம் அறிந்து கொள்ளலாம் என்பதையும் எனக்கு விளக்கிக் கூறுங்கள்.''

அர்ஜுனனுக்கு பகவான் அளித்த பதில் இதுதான்: ''என்னுடைய தெய்விக அம்சங்களுக்கு முடிவே இல்லை. அந்த அம்சங்களில் சிலவற்றை மாத்திரம் உனக்கு இப்போது எடுத்துக் கூறுகிறேன். எல்லா உயிர்களுடைய உள்ளத்திலும் உறையும் ஆன்மா நானே. அவர்களுடைய ஆதியும் நடுவும் முடிவும் நான் தான். ஆதித்யர்களுள் நான் விஷ்ணு. ஒளிகளுள் நான் ஒளி கொடுக்கும் சூரியன். வாயு தேவர்களுள் நான் மரீசி. நட்சத்திரங்களுள் நான் சந்திரன். வேதங்களுள் நான் சாமவேதம். தேவர்களுள் நான் இந்திரன். இந்திரியங்களுள் நான் மனம். உயிர்களுள் நான் உணர்வு. ருத்ரர்களுள் நான் சங்கரன் (சிவன்). யட்சர்கள், ராட்சஸர்களுள் நான் குபேரன். அசுரர்களுள் நான் பிரஹ்லாதன். மிருகங்களுள் நான் சிங்கம். பட்சிகளுள் நான் கருடன். மோசக்காரர்களின் சூதாட்டம் கூட நான்தான். இந்த உலகில் நன்மையோ, தீமையோ எது நேர்ந்தாலும் என்னுடைய அனுமதியின் மீதே நேருகிறது. எனவே மனிதர்கள் இந்த உண்மையை உணர்ந்து தங்கள் அகந்தையைக் கைவிட்டு, தீய வழிகளிலிருந்து விலகிச் செல்ல வேண்டும். ஏனெனில், அவர்கள் புரியும் நற்செயல்களுக்கும் தீச்செயல்களுக்கும், அவற்றிற்கான பலன்களை அளிப்பவன் நான்தான். என்னில் ஓர் அணுவே இந்த உலகம் முழுவதையும் தாங்கி நிற்கிறது என்பதை நீ உணர்ந்து கொள்ள வேண்டும்.''

## 11

## பகவானின் விசுவரூபம்

அர்ஜுனன் பகவானைப் பார்த்து பின்வருமாறு வேண்டிக் கொண்டான்: ''எல்லாவற்றிற்கும் மேலான, எல்லாம் வல்ல இறைவனான தாங்கள், உண்மையான ஆன்ம தத்துவத்தை எனக்கு உபதேசம் செய்ததன் மூலம் எனது அறியாமையைப் போக்கிவிட்டீர்கள். அழிவற்றவரான தாங்கள்தான் சிருஷ்டி கர்த்தா, சம்ஹார கர்த்தா எல்லாம். உங்களுக்கு மனம் இருந்தால், உங்களுடைய தெய்விக உருவத்தைப் பார்க்க தயவு செய்து எனக்கு அருள்புரியுங்கள்.''

பகவான் கூறினார்: ''பல்வேறு வர்ணங்களில் திகழும் எனது தெய்விக உருவங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. ஆதித்யர்கள், வசுக்கள், ருத்திரர்கள் முதலிய தேவர்கள் யாவரும் என் உடலில் ஐக்கியமாகியிருக்கிறார்கள். உயிர்கள்,

ஜடப் பொருள்கள் யாவும் என் உடலில் ஐக்கியம் அடைந்திருக்கின்றன. எனினும், என்னுடைய இத்தகைய உருவத்தை நீ அந்த ஊனக் கண்களால் பார்க்க முடியாது. எனவே, என் உருவத்தைக் காண்பதற்கான தெய்விகமான ஞானக் கண்ணை உனக்கு நான் அளிக்கிறேன்.''

திருதராஷ்டிரனிடம் சஞ்சயன் கூறியதாவது: ''அரசே, அர்ஜுனனிடம் பகவான் அவ்விதம் கூறிய பின், தம்முடைய அதி அற்புதமான விசுவரூபத்தைக் காட்டினர். அந்த உருவம் வர்ணிக்க முடியாதது. நாம் தினந்தோறும் ஆகாயத்தில் ஒரு சூரியனைத்தான் பார்க்கிறோம். ஆனல், ஆகாயத்தில் ஒரு நாள் ஆயிரம் சூரியன்கள் பிரகாசிப்பதாக வைத்துக்கொள்வோம். அர்ஜுனன் கண்ட மகத்துவம் வாய்ந்த அந்த உருவம், ஆயிரம் சூரியன்களைக் காட்டிலும் அதிகப் பிரகாசத்துடன் கண்களைப் பறிப்பதாக இருந்தது. அந்த உருவம் பூண்டிருந்த ஆபரணங்களும், ஏந்தியிருந்த ஆயுதங்களும் தெய்விகமானவை. அந்த உருவத்தைக் கண்டு அர்ஜுனனுக்கு ரோமம் சிலிர்த்தது. அவன் நடுநடுங்கிக்கொண்டே பேசத் தொடங்கினன்.''

அர்ஜுனன் கூறியதாவது: ''பகவானே, உங்களுடைய உடலில் நான் எல்லோரையும், எல்லாவற்றையும் காண்கிறேன். பிரம்மனும் சிவனும் அதில் இருக்கிருர்கள். அதில் ரிஷிகளையும் தேவஸர்ப்பங்களையும் காண்கிறேன். உங்களுடைய எண்ணிக்கையற்ற கைகளையும் முகங்களையும் நான் பார்க்கிறேன். உங்கள் உருவத்திற்கு ஆரம்பமோ, நடுவோ, முடிவோ, எதுவும் தெரியவில்லை. சகிக்க முடியாத ஒளிப் பிழம்பாகவும், அக்னி ஜ்வாலையாகவும் தாங்கள் பிரகாசிக்கிறீர்கள். உலகத்தின் இறுதியான அஸ்திவாரம் தாங்கள்தான். காலத்தின் ஆதியான கடவுளும், நிரந்தரமான நீதியின் காவலரும் தாங்கள்தான். நான் எங்கு நோக்கினலும் உங்களுடைய உடலின் பாகங்களையே காண்கிறேன். சூரியனும் சந்திரனும் உங்களுடைய கண்களாக இருக்கின்றன. சொர்க்கத்தையும் பூமியையும் நீங்கள் வியாபித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய தேஜஸ் உலகம் முழுவதையும் தகிக்கின்றது. இந்த உருவத்தைக் கண்டு உலகமே நடுங்குகிறது. தேவர்கள், ரிஷிகள், சித்தர்கள் யாவரும் கைகூப்பிய வண்ணம் நின்றுகொண்டு உங்களைத் தோத்திரம் செய்கிருர்கள். பிரமிக்கத் தக்க இந்த உருவத்தையும் பிரகாசத்தையும் கண்டு என் தைரியம் மறைந்துவிட்டது. நான் பொறுமையையும், மன அமைதியையும் இழந்துவிட்டேன். பகவானே, என்மீது இரக்கம்கொண்டு அருள்புரியுங்கள். விட்டில் பூச்சிகள் பறந்துவந்து தீயில் வீழ்வதுபோல, இவர்கள் யாவரும் கோரப் பற்களுடன்கூடிய பயங்கரமான உங்களுடைய வாய்க்குள் வந்து விழுகிருர்கள். நீங்கள் அவர்களைப் பற்களால் பொடியாக்கி விடுகிறீர்கள். இந்தப் பயங்கரமான தோற்றம் உள்ள நீங்கள் யார்? உங்களுடைய செயல்களை என்னல் அறிந்துகொள்ள முடியவில்லை.''

பகவான்: "உலகங்களை அழிக்க வல்ல காலம் நான்தான். நீ போர் செய்தாலும், செய்யாவிட்டாலும், இரு கட்சிகளிலும் உள்ள போர் வீரர்கள் அழிவது நிச்சயம். தெய்வ சித்தத்தின் வெறும் கருவிதான் நீ."

அர்ஜுனன்: "உலகம் முழுவதற்கும் இருப்பிடமாகிய ஈசுவரா, நீங்கள் அழிவற்றவர். நீங்கள் இருப்பவர், இராமலும் இருப்பவர், இவ்விரண்டிற்கும் அப்பாற்பட்டவர். நீங்கள் தேவர்களின் முதல்வர், காலத்தின் ஆதியான கடவுள், நீங்கள் உலகம் முழுவதற்கும் அடைக்கலம் அளிப்பவர். உங்கள் ஒருவரைத்தான் எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறுர்கள். நீங்கள்தான் வாயு, யமன், அக்கினி, பிரஜாபதி. உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரம். இப்போது தயவு செய்து உங்களுடைய பழைய உருவத்தையே பார்க்க விரும்புகிறேன்."

பகவான்: "உலகம் முழுவதும் வியாபித்திருக்கும் என்னுடைய இந்த உருவத்தை உன்மீதுள்ள அன்பினுலேயே நான் உனக்குக் காட்டினேன். வேதங்களையோ அல்லது வேறு தெய்விக நூல்களையோ ஆராய்ச்சி செய்வதாலோ, சடங்குகளை அனுசரிப்பதாலோ, தானங்களாலோ அல்லது தவங்களாலோ நீ இன்று பார்த்த தோற்றத்தைக் காணமுடியாது. நீ அந்தத் தோற்றத்தைக் கண்டு பிரமிக்க வேண்டாம். பயத்தை உதறித் தள்ளிவிடு, அமைதியாக இரு. நீ நன்கு அறிந்த என்னுடைய பழைய உருவத்தைப் பார். நீ சற்றுமுன் பார்த்த அந்த உருவம் தேவர்களால்கூட காணமுடியாதது. தூய்மையான பக்தியினுல் மாத்திரமே அந்த உருவத்தைக் காணமுடியும். எனக்காக செயல்களில் ஈடுபடுபவனும், என்னையே தனது வாழ்க்கையின் மகத்தான லட்சியமாகக் கருதுபவனும்தான் என்னுடைய பக்தனுகிறுன். அவன்தான் எல்லா பந்தங்களிலிருந்தும் விடுதலை பெற்று, எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொண்டு என்னை வந்தடைகிறுன்."

இந்த அத்தியாயத்தையும் முந்திய அத்தியாயத்தையும் நான் வேண்டுமென்றே சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். இந்த அத்தியாயம் அற்புதமான காவியமாகத் திகழ்கிறது. எனவே, இதில் உள்ள மூல சுலோகங்களையோ அல்லது அவற்றின் மொழி பெயர்ப்பையோ அடிக்கடி வாசிக்கவேண்டும். அப்போது நமக்கு பக்தி உணர்ச்சி பெருகும். நம் மனத்தில் பக்தி உணர்ச்சி ஊடுருவியிருக்கிறதா, இல்லையா என்பதை, கடைசி சுலோகத்தில் குறிப்பிட்டுள்ள கடுமையான சோதனையின் மூலம் தெரிந்து கொள்ளலாம். மாசற்ற முழு அன்புடன் தன்னைக் கடவுளிடத்தில் முற்றிலும் அர்ப்பணம் செய்து கொண்டாலன்றி, பக்தி ஏற்படுவது இயலாத காரியம். கடவுளை, உலகத்தையே அழிக்கும் காலமாகவும், அவரது திறந்த வாய்க்குள் உலகம் முழுவதும் சென்று நாசத்தை அடைவதாகவும் நாம் தியானம் செய்வோமாயின், கடவுளிடம் முற்றிலும் சரண் அடைவதும், எல்லா உயிர்

களும் ஒன்றே என்ற உணர்ச்சி நம் மனத்தில் ஏற்படுவதும் எளிதாகிவிடுகின்றன. நாம் அதை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அத்தகைய விதி நம்மையும் திடீரென்று ஆட்கொண்டு விடுவது நிச்சயம்தான். சிறியவன்-பெரியவன், உயர்ந்தவன்-தாழ்ந்தவன், ஆடவன்-பெண், கீழ்த்தர மிருகங்கள் முதலிய வேற்றுமைகள் யாவும் அவ்வாறாக மறைந்துவிடுகின்றன. அழிக்கும் மூர்த்தி என்ற முறையில் கடவுளின் வாய்க்கு நாம் எல்லோரும் ஒரு வெறும் கவளமாக இருக்கிறோம். எனவே, இதை மனத்தில் உன்னி நாம் பணிவை மேற்கொள்ள வேண்டும்; நம்மை நாமே சூன்யமாகச் செய்துகொள்ள வேண்டும்; ஒவ்வொருவருடனும் நட்பு உரிமை கொள்ளவேண்டும். நாம் இவ்விதம் செய்தால், கடவுளின் இந்த பயங்கரமான உருவத்தைக் கண்டு நமக்கு பயம் ஏற்படாது. அதற்கு மாறாக, அந்த உருவம் நமக்கு மனச் சாந்தியை அளிக்கும்.

# 12

# பகவானை அடைய நான்கு வழிகள்

அர்ஜுனன் பகவானைக் கேட்கிறான் :

''சில பக்தர்கள் உருவமுள்ள (ஸாகாரம்) கடவுளை உபாசிக்கிறார்கள். சிலர் உருவமில்லாத (நிராகாரம்) பரம்பொருளை உபாசிக்கிறார்கள். இந்த இரண்டு முறைகளில் எது உயர்ந்தது?''

பகவான் : ''எல்லாவற்றிலும் உள்ள ஒரே உயிராக, பூரண நம்பிக்கையுடன் என்னிடம் மனத்தைச் செலுத்தி என்னையே சிந்தித்தவராக யார் என்னை உபாசிக்கிறார்களோ அவர்கள்தான் என்னுடைய பக்தர்கள் ஆவர். உருவமற்ற பரப்பிரம்மமான என்னை யார் உபாசித்து, தங்களுடைய புலன்களை அடக்கி ஆள்கிறார்களோ, எல்லா உயிர்களிடத்திலும் யார் சம புத்தியுடன் இருக்கிறார்களோ, சிலர் உயர்ந்தவர்கள் என்றும் மற்றவர்கள் தாழ்ந்தவர்கள் என்றும் கருதாமல் எல்லோரையும் சமமாகக் கருதி யார் தொண்டு புரிகிறார்களோ, அவர்களும் என்னிடம் வந்து சேருகிறார்கள். இரண்டு பிரிவினர்களான இந்த பக்தர்களில், ஒருவன் மற்றொருவனைவிட உயர்ந்தவன் அல்ல. அவர்கள் யாவரும் சமமானவர்கள்தான். எனினும், இந்த உடல் எடுத்தவர்களுக்கு உருவமற்ற பரம்பொருளை பூரணமாக அறிந்து கொள்ளுவதென்பது முடியாத காரியம். குணம், உருவம் எதுவும் அறவே இல்லாத பரம்பொருளை, மனிதர்கள் கற்பனை செய்துகொள்ளுவது கூட கஷ்டமாகும். எனவே, எல்லா பக்தர்களும் தாங்கள் அறிந்தோ, அறியாமலோ உருவம் உள்ள கடவுளையே பூஜிப்பவர்களாக இருக்கிறார்கள்.

''ஆகையால், உலகத்தையே உருவாகக்கொண்ட கடவுளான என்னிடத்தில் நீ மனத்தை வைத்து உனக்குச் சொந்தமான எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய். இது உனக்கு, சாத்தியமில்லையாயின், தாறுமாறாகத் திரியும் உன் மனத்தை நீ கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். யமங்கள், நியமங்கள்* ஆகியவற்றை அனுசரிப்பதன் மூலமும், பிராணாயாமம், யோகப் பயிற்சிகள் முதலியவற்றின் உதவியாலும் நீ மனத்தைக் கட்டுப் பாட்டிற்குள் கொண்டுவர வேண்டும். இதுகூட உனது சக்திக்கு அப்பாற்பட்டதெனில், எல்லாக் காரியங்களையும் எனக்காக செய். அவ்விதம் செய்தால் உன் மன மயக்கம் தீர்ந்துவிடும். பின்னர் உனக்கு பற்றின்மையும், பக்தியும் உண்டாகும். இதுவும் உன்னால் செய்ய இயலவில்லையாயின், நீ செய்யும் காரியங்களின் பலன்களையெல்லாம் துறந்துவிடு. அந்தப் பலன்களில் உள்ள ஆசையைக்கூட நீ விட்டுவிட்டு உனக்கு இடப்பட்டுள்ள கடமையைச் செய்ய வேண்டும். தனது செயலின் பலனைக் குறித்து எதுவும் கூறும் உரிமை மனிதனுக்கு ஒரு காலத்திலும் இருக்க முடியாது. ஏனெனில், பலனின் தன்மை பல்வேறு தனித் தனிக் காரணங்களால் நிர்ணயிக்கப்படுகிறது. எனவே, என் கையில் நீ ஒரு வெறும் கருவியாக மட்டுமே இரு.

''இவ்வாறாக, நான் உனக்கு நான்கு வழிகளை எடுத்துக் கூறியிருக்கிறேன். அவற்றில் எந்த ஒன்றும் மற்றொன்றைக் காட்டிலும் உயர்ந்ததல்ல. அவற்றில் நீ உன் விருப்பம் போல் எந்த வழியை வேண்டுமாயினும் மேற்கொள்ளலாம். யமங்கள், நியமங்கள், பிராணாயாமம், ஆசனங்கள் முதலியவற்றைக் காட்டிலும் ஞான மார்க்கம்தான் எளிதானது என்று தோன்றலாம். தியானம் செய்வது, ஞான மார்க்கத்தைக் காட்டிலும் இன்னும் அதிக எளிதாகும். செயல்களின் பலன்களைத் துறப்பது, எல்லாவற்றையும் விட மிகவும் எளிது. ஆனால், ஒரே விதமான முறை எல்லோருக்கும் தகுதிவாய்ந்ததாக இராது. சிலர் அந்த நான்கு முறைகளையும் மேற்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அவை ஒன்றுக்கொன்று தொடர்பு உள்ளது. எந்த முறையை மேற்கொண்டாலும் நீ ஒரு பக்தனாகவேண்டும். அதே லட்சியத்தை அடைவதற்கான எந்தப் பாதையை வேண்டுமாயினும் நீ மேற்கொள்ளலாம்.

''ஓர் உண்மையான பக்தன் எப்படி இருப்பான் என்பதை இப்போது உனக்கு நான் சொல்லுகிறேன். உயிருள்ள எந்தப் பிராணியையும் அவன் வெறுக்கமாட்டான்; அதனிடம் துவேஷம் கொள்ளமாட்டான். எல்லா உயிர்களிடத்தும் அன்பும் இரக்கமும் காட்டுவான். 'நான்', 'என்னுடையது' என்ற மயக்கத்திலிருந்து அவன் விடுதலை பெற்றவனாக இருப்பான். அவன் தன்

* யோக சாஸ்திரப்படி, அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், உடைமைகளைத் துறத்தல் ஆகிய மூலாதாரமான ஒழுக்கங்களே யமங்கள். உடல் பரிசுத்தம், போதுமென்ற மனம், பொறுமை, வேத பாராயணம், எல்லாம் கடவுள் சித்தப்படியே நடக்கும் என்ற உறுதி ஆகியவையே நியமங்களாகும்.

னைத்தானே சூன்யமாகச் செய்துகொள்ளுவான். இன்பத்தையும் துன்பத்தையும் அவன் சமமாகவே கருதி ஏற்றுக்கொள்ளுவான். தான் மன்னிக்கப்பட வேண்டும் என்று அவன் எதிர்பார்ப்பது போலவே, தவறு செய்தவனை அவன் மன்னித்து விடுவான். தனக்குக் கிடைத்ததைக் கொண்டு அவன் எப்போதும் திருப்தி அடைவான். அவன் செய்து கொண்ட உறுதியிலிருந்து அவனை யாரும் அசைக்க முடியாது. அவன் தன்னுடைய அறிவு, மனம் எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்கிறான். தனது சகமனிதர்களையோ, சக பிராணிகளையோ, அவன் ஒருபோதும் துன்பப்படுத்துவதில்லை. எனவே, அவர்கள் அவனைக் கண்டு ஒருபோதும் பயப்படுவதில்லை. தான் உலகத்தி னால் கலக்கம் அடைவதற்கு அவன் ஒரு நாளும் இடம் கொடுப்ப தில்லை. மகிழ்ச்சி, துக்கம், கோபம், பயம் போன்ற உணர்ச்சிகளி லிருந்து அவன் விடுதலை அடைந்தவனாக இருக்கிறான். அவன் தனக்கு என்று எதையும் நாடுவதில்லை. அவன் திறமையுடனும் தூய்மையுடனும் தன் அலுவல்களைச் செய்கிறான். அவன் எவ்விதப் பொறுப்பையும் மேற்கொள்ளுவதில்லை. தான் செய்துகொண்ட தீர்மானத்தில் அவன் உறுதியாக இருப்பினும், தனது செயலில் வெற்றியையோ அல்லது தோல்வியையோ பற்றி அவன் அக்கறை கொள்ளுவதில்லை. அதாவது, அதன் பலனைப் பற்றி அவன் கவலைப் படுவதில்லை. நண்பன், பகைவன் எல்லாரிடத்திலும் அவன் ஒரே விதமாகவே இருக்கிறான். அவன் மௌனமாக இருந்து கிடைத்த தைக்கொண்டு திருப்தி அடைகிறான். அவன், தான் மாத்திரம் தனி யாக இருப்பவனைப் போல், தங்கு தடை எதுவுமின்றி நடந்து கொள்ளுகிறான். எச் சமயத்திலும், எல்லா இடங்களிலும் அவன் உறுதியான மனம் உடையவனாக இருக்கிறான். இவ்விதம் நம்பிக் கையுடன் நடந்து கொள்ளும் பக்தன்தான் என் அன்புக்குப் பாத் திரமானவன்.''

**கேள்வி:** பக்தன் எல்லாப் பொறுப்புகளையும் துறந்துவிடுகிறான் என்பதற்கு அர்த்தம் என்ன?

**காந்திஜியின் பதில்:** தான் செய்ய வேண்டிய அலுவல்கள் அடங் கிய எதிர்காலத் திட்டங்களை பக்தன் தயாரித்துக் கொள்ள மாட்டான். உதாரணமாக, ஜவுளி வியாபாரம் செய்யும் ஒரு வியாபாரி, எதிர்காலத்தில் விறகு வியாபாரம் செய்வதற் கான திட்டங்களை வகுக்கலாம். அல்லது ஒரே ஒரு கடையின் சொந்தக்காரரான அவர் மேற்கொண்டு அதிகமாக ஐந்து கடைகளை ஆரம்பிக்க வேண்டும் என்று நினைக்கலாம். அவை தான் புதிய பொறுப்புகளாகும். பக்தன் அத்தகைய பொறுப் புகளை ஒரு காலத்திலும் மேற்கொள்ளமாட்டான். இந்தக் கொள்கை தேசத் தொண்டிற்கும் பொருந்தும். உதாரண மாக, கதர் இலாகாவில் வேலை செய்யும் ஒரு ஊழியர், நாளை பசுக்களைப் பராமரிப்பதிலும், அதற்கு மறுநாள் விவசாயத் திலும், நான்காவது நாள் வைத்தியத் தொண்டிலும் ஈடுபட மாட்டார். அவருக்கு அளிக்கப்பட்டுள்ள வேலையை அவர்

தம்மால் இயன்ற வரையில் திறம்படச் செய்வார். நான் அகந்தையிலிருந்து விடுபட்டுவிட்டால், பின்னர் நான் செய்வதற்கே எதுவும் இராது.

सूतरने तांतणे मने हरजीए बांधी।
जेम ताणे तेम तेमनी रे, मने लागी कटारी प्रेमनी॥

ஸூதர்னே தாந்தனே மனே ஹரஜீயே பாந்தீ।
ஜேம் தானே தேம் தேம்னீ ரே, மனே லாகீ கடாரீ ப்ரேம்னி॥

இதன் பொருள்: 'இறைவன் பருத்தி நூலால் என்னைக் கட்டியுள்ளார். அவர் என்னை எங்கே இட்டுச் சென்றாலும் நான் அவருக்குச் சொந்தமானவனே; அன்பாகிய கட்டாரியால் நான் குத்தப்பட்டிருக்கிறேன்.'

ஒரு பக்தனின் ஒவ்வொரு நடவடிக்கையும் கடவுளால் திட்டமிடப்பட்டுவிடுகிறது. இயல்பாகவே அந்தக் காரியத்தை அவன் செய்யும்படி நேருகிறது. எனவே அவன் எதுவாயிருந்தாலும் (येन केनचित्) அதைக் கொண்டு திருப்தியடைகிறான். எல்லாப் பொறுப்புகளையும் துறப்பது என்பதற்கு இதுதான் அர்த்தமாகும். பக்தன் தான் வேலை செய்வதை ஒருபோதும் நிறுத்துவதில்லை. அவன் ஊழியன் அல்ல எனில், அவன் ஒன்றுமே இல்லை. எனினும் அவன் தன் வேலையைப் பற்றிய அவசியமில்லாத எண்ணங்களுக்கு இடம் கொடுப்பதில்லை. அவன் துறக்க வேண்டியது இவற்றைத்தான்.

इदमद्य मया लब्धं इमं प्राप्स्ये मनोरथम्। – गीता १६-१३

இதமத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மனோரதம்

*கீதை, அத்தியாயம்-16, சுலோகம் – 13*

இதன் பொருள்: 'இது என்னால் இன்று சம்பாதிக்கப்பட்டது; அந்த நோக்கத்தை நான் நாளை நிறைவேற்றிக் கொள்வேன்' – இத்தகைய மனோபாவம் பொறுப்புகளைத் துறப்பதற்கு நேர்மாறாகும்.

## 13

# பிரம்மத்தை அறிவது எப்படி?

பகவான் சொன்னார்: "க்ஷேத்திரம் (களம்) என்பது மனித உடலுக்கு மற்றொரு பெயரே ஆகும். க்ஷேத்திரத்தை நன்கு அறிந்தவனே க்ஷேத்திரக்ஞன் எனப்படுகிறான்; எல்லா உடல்களிலும் உள்ள க்ஷேத்திரத்தை நான் அறிந்தவன் என்பதைத் தெரிந்து கொள். மண், தண்ணீர், தீ, காற்று, வானம் முதலிய பஞ்ச பூதங்

கள், அகம்காரம், அறிவு, மூலப்ரகிருதி, பத்து புலன்கள்*, மனம், இந்திரியங்களுக்கான ஐந்து விஷயங்கள்,† ஆசை, வெறுப்பு, இன்பம், துன்பம், சங்காதம் (உடல் அமைப்பு), உணர்வு, உறுதியான உடல், உறுதியான மனம் ஆகியவை எல்லாம் சேர்ந்துதான் க்ஷேத்திரமாகின்றன். இந்த க்ஷேத்திரத்தைப் பற்றிய அறிவு மிகவும் முக்கியமாகும். ஏனெனில், அவற்றையெல்லாம்தான் துறக்க வேண்டியிருக்கிறது. ஞானம்தான் அத்தகைய துறவுக்கு அடிப்படையாக இருக்க முடியும். பணிவு, பாசாங்கு செய்யாமை, அகிம்சை, மன்னிக்கும் குணம், நேர்மை, குருவுக்குத் தொண்டு செய்தல், தூய்மை, உறுதி, தன்னடக்கம், இந்திரியங்களைக் கவரும் விஷயங்களைத் துச்சமாக மதித்தல், அகங்காரமின்மை, பிறப்பின் தீமையை நன்கு அறிதல், மரணம், வயோதிகம், நோய், வேதனை, மனைவி, குழந்தைகள், குடும்பம், வீடு, நண்பர்கள், உறவினர்கள் முதலியோரிடத்தில் பாசமின்மை, அதிர்ஷ்டம்-துரதிருஷ்டம் இரண்டையும் சமமாகக் கருதுவது, கடவுளிடம் இருதய பூர்வமான பக்தி, தனிமையில் விருப்பம், மற்றவர்களைப் போல புலன் நுகர்ச்சிக்கு இடம் கொடுப்பதை வெறுத்தல், ஆன்ம அறிவைப் பெறவேண்டும் என்ற ஏக்கம், இறுதியாக பேரானந்தத் தோற்றம் முதலியன யாவும் உள்ளடங்கியதே ஞானமாகும். மேற்கண்டவற்றிற்கெல்லாம் நேர்மாறானவையே அறியாமை எனப்படும்.

"இப்போது நான் உனக்கு ஒரு விஷயத்தை சொல்லப் போகிறேன். மோட்சம் அடைய வேண்டுமாயின், அதை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். அதுதான் ஆதியற்ற, எல்லாவற்றையும் விட மகோன்னதமான பிரம்மம் ஆகும். பிரம்மத்திற்கு ஆரம்பம் இல்லை. ஏனெனில், அது பிறவாதது. இந்த உலகில் ஒன்றுமே இல்லாமல் ஒரே சூன்யமாக இருந்தபோது கூட பிரம்மம் இருந்தது. அது ஸத்தும் (இருப்பது) இல்லை; அஸத்தும் (இராமல் இருப்பது) இல்லை; அவ்விரண்டிற்கும் அப்பாற்பட்டது. எனினும், மற்றொரு கோணத்திலிருந்து அதை 'ஸத்' என்று கூறலாம். ஏனெனில் அது நிரந்தரமானது. அது இருப்பதை, மனிதப் பிறவிகள் உணர்ந்து கொள்ள முடியாது. அதனால்தான் அது ஸத்திற்கும் அப்பாற்பட்டது என்று கூறப்படுகிறது. அது உலகம் முழுவதும் வியாபித்து நிற்கின்றது. அதற்கு ஆயிரம் கைகளும் ஆயிரம் கால்களும் இருப்பதாகக் கூறலாம். அதற்கு கைகளும் கால்களும் இருப்பதாகத் தோன்றினாலும், புலன் நுகர்ச்சிக்கான உறுப்புகள் இல்லை. ஏனெனில், அத்தகைய உறுப்புகள் அதற்கு அவசியமில்லை. புலன் உறுப்புகள் நிலையற்றவை. ஆனால், பிரம்மமோ நிரந்தர

---

*காதால் கேட்பது, கையால் தொடுவது, கண்ணால் பார்ப்பது, நாவினால் ருசி பார்ப்பது, மூக்கினால் வாசனை அறிதல் ஆகிய ஐந்தும், நாக்கு, கால்கள், கைகள், ஜனனேந்திரியம், மல இந்திரியம் ஆகிய ஐந்தும் சேர்ந்து பத்து புலன்கள்.

†சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரசம், கந்தம் முதலியவையே இந்திரியங்களுக்கான விஷயங்களாகும்.

மானது. அது எங்கும் வியாபித்ததாக, எல்லாவற்றையும் தாங்குவதாக இருப்பதால், அதற்கு குணங்கள் இருப்பதாகக் கூறலாம். எனினும், அது குணங்களிலிருந்து விடுபட்டதாகவே இருக்கிறது. குணங்கள் இருக்குமிடத்தில் விகாரத்திற்கு, அதாவது மாறுதலுக்கு இடம் உண்டு. ஆனால், பிரம்மமோ மாறுதல் அற்றது. அதை எல்லா உயிர்களுக்கும் வெளிப்புறத்தில் இருப்பதாகக் கூறலாம். ஏனெனில், அதை அறிந்து கொள்ளாதவர்களுக்கு அது வெளிப்புறத்தில்தான் இருக்கிறது. என்றாலும், அது எங்கும் வியாபித்ததாக இருப்பதால், அது எல்லா உயிர்களுக்குள்ளும் இருக்கிறது. அதுபோலவே அது அசைந்து கொண்டிருக்கிறது, அசையாமலும் இருக்கிறது. அது சூட்சுமமாக இருப்பதால், அது கண்களுக்குப் புலப்படுவதில்லை. அது தொலைவில் இருக்கிறது, அருகிலும் இருக்கிறது. அது பிரிக்க முடியாதது. ஏனெனில், பெயரும் உருவமும் அழிந்தாலும் அது அழிவதில்லை. அது எல்லா உயிர்களிடத்திலும் இருப்பதாக நாம் கூறுகிறோம். எனவே அது பிரிந்திருப்பதாகவும் தோன்றுகிறது. அது சிருஷ்டிக்கின்றது, பாதுகாக்கின்றது, அழிக்கின்றது. அது இருளுக்கு அப்பால், ஒளிகளுக்கெல்லாம் ஒளியாகத் திகழ்கின்றது. அது ஞானத்திற்கெல்லாம் இறுதி எல்லையாக இருக்கிறது. ஒவ்வொருவருடைய இருதயத்திலும் இருக்கும் பிரம்மம் தான் 'க்ஞேயம்' அதாவது அறிவதற்கு உகந்த ஒரே பொருளாக இருக்கிறது. ஞானமெல்லாம், அதனுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற லட்சியத்தை எய்துவதற்கான வழியேயாகும்.

"கடவுளுக்கும் அவரது மாயைக்கும் (இயல்பு) ஆரம்பமே கிடையாது. மாறுபாடுகள் யாவும் மாயையிலிருந்தே எழுகின்றன. அவை பல்வேறு செயல்களுக்கும் காரணமாக இருக்கின்றன. மாயையின் காரணமாகவே ஆன்மாவுக்கு இன்பம், துன்பம், புண்ணியம், பாவம் எல்லாம் ஏற்படுகின்றன. இதை உணர்ந்துகொண்டு எவன் தன் கடமையைப் பற்றுதலின்றிச் செய்கின்றானோ, அவனது நடவடிக்கைகள் எவ்விதமிருப்பினும் அவன் மீண்டும் உலகில் பிறப்பதில்லை. ஏனெனில் அவன், எல்லோருடைய முகங்களிலும் கடவுளின் முகத்தைக் காண்கிறான். தெய்வ சித்தமின்றி ஓர் இலை கூட அசைவதில்லை என்பதையும் அவன் காண்கிறான். அதன் பலனாக, அவன் அகந்தையிலிருந்து விடுதலை பெறுகின்றான். தான் உடலிலிருந்து வேறானவன் என்பதையும், உடலில் ஆன்மா இருப்பினும் எங்கும் வியாபித்துள்ள ஆகாயத்தைப்போல் அது பாதிக்கப் படுவதில்லை என்பதையும் ஞானத்தின் மூலம் அவன் உணர்ந்து கொள்கிறான்."

# 14

# குணங்களைக் கடந்தவன் யார்?

கிருஷ்ண பகவான் கூறினர்: "உனக்கு நான் மற்றொரு முறை மகோன்னதமான ஞானத்தை உபதேசிக்கிறேன். குற்றம் குறையற்ற உயர்ந்த நிலையை ரிஷிகள் அடைவதற்கு அந்த ஞானம்தான் உதவியது. அத்தகைய ஞானத்தைப் பெற்று அதன்படி தன் கடமையைச் செய்யும் மக்கள், பிறப்பு-இறப்புச் சுழலிலிருந்து விடுதலை அடைகிருர்கள். அர்ஜுன, எல்லா உயிர்களுக்கும் தந்தையும் தாயும் நானே என்பதை அறிந்து கொள். இயற்கையிலிருந்து உண்டாகும் சத்துவம் (நல்ல சுபாவம்), ரஜஸ் (வெறிக் குணம்), தமஸ் (அறியாமை) ஆகிய மூன்று குணங்களாலும் ஆன்மா கட்டுண்டு விடுகிறது. அந்த குணங்களை, முறையே உயர்ந்தது, நடுத்தரமானது, கீழ்த்தரமானது என்றும் வர்ணிக்கலாம். இவற்றுள் சத்துவம் தூய்மையானது, களங்கமற்றது, ஒளியைக் கொடுக்கின்றது. எனவே, அதுதான் இன்பத்திற்கெல்லாம் ஆணி வேராக இருக்கிறது. பற்றுதல், ஆசை ஆகியவற்றிலிருந்து ரஜோ குணம் உண்டாகிறது. மனிதன் எல்லாவிதமான நடவடிக்கைகளிலும் ஈடுபடும்படி செய்வது அதுதான். தமோ குணம் அறியாமையையும் மதிமயக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டது. மனிதனுக்கு அக்கறையின்மையும் சோம்பேறித்தனமும் உண்டாகும்படி அது செய்துவிடுகிறது. சுருங்கக் கூறுவதாயின், இன்பத்திற்கு சத்துவ குணமும், அமைதியின்மைக்கு ரஜோ குணமும், சோம்பேறித்தனத்திற்கு தமோ குணமும் காரணமாக இருக்கின்றன. சிற்சில சமயங்களில் ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் காட்டிலும் சத்துவ குணம்மேலோங்கி நிற்கிறது. மற்றும் சில சமயங்களில் சத்துவ குணத்தையும், தமோ குணத்தையும் விட ரஜோ குணம் மேலோங்கி நிற்கின்றது. வேறு சமயங்களில் சத்துவ குணத்தையும் ரஜோ குணத்தையும்விட தமோ குணம் மேலோங்கிவிடுகிறது. உடலின் நடவடிக்கைகள் எல்லாவற்றின் மூலமும் ஞான ஒளி பிரகாசிக்குமாயின், சத்துவ குணம் அதிகமாகி வருகிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். எங்கே பேராசையும், பரபரப்பும், அமைதியின்மையும், போட்டியும் இருக்கின்றனவோ, அங்கே ரஜோ குணம் ஆதிக்கம் பெற்றுளது என்பதை உணரலாம். அறியாமை, சோம்பல், மதிமயக்கம் ஆகியவை தமோ குணத்தின் விசேஷ அம்சங்களாகும்.

"ஒரு மனிதனின் வாழ்க்கையில் சத்துவம் மேலோங்கி நிற்குமாயின், அவன் மரணத்திற்குப் பிறகு, மகரிஷிகள் வாழும் பாவமற்ற உலகில் பிறக்கிருன். அவனது வாழ்க்கையில் ரஜோ குணம் ஆதிக்கம் செலுத்துமாயின், கர்மங்களில் பற்றுதல் உடையவர்களிடையே அவன் பிறக்கிருன். தமோ குணத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவன், அறிவற்றவர்களின் கருவில் மீண்டும்

வந்து ஜனிக்கின்ருன். சத்துவகுணத்தின் பலன் தூய்மை; ரஜோ குணத்தின் பலன் வேதனே; தமோ குணத்தின் பலனேவெனில் அறியாமைதான். சத்துவ குணம் உள்ளவன் உயர்ந்த நிலேயை எய்துகிருன். ரஜோ குணம் உள்ளவன் இந்த உலகத்திலேயே உழல்கிருன். தமோ குணம் உள்ளவன் விழ்ச்சியுற்று மிகத் தாழ்ந்த நிலேயை அடைகிருன். எல்லாச் செயல்களுக்கும் இந்த குணங்களேத் தவிர வேறு எதுவும் காரணம் அல்ல என்பதை உணர்ந்து, அந்த குணங்களுக்கு அப்பால் நான் இருக்கிறேன் என்பதையும் யார் அறிகின்ருனே, அவன்தான் என்னே அடைகிருன். அந்த மூன்று குணங்களிலிருந்துதான் எல்லா உடல்களும் உண்டாகின்றன. உடலில் இருக்கின்ற மனிதன், அந்த முக்குணங்களேயும் வென்று விடுவானுயின், பிறப்பு, இறப்பு, விருத்தாப்பியம், துன்பம் ஆகியவற்றிலிருந்து அவன் விடுதலே அடைந்து மரணமற்ற நிரந்தர வாழ்வாகிற அமிருதத்தைப் பருகுகிருன்.''

அந்த மூன்று குணங்களேயும் கடந்து செல்லுபவன் வாழ்க்கைப் பாதையில் மகத்தான முன்னேற்றத்தை அடைகிருன் என்று கிருஷ்ணன் கூறியதைச் செவியுற்ற அர்ஜுனன், பகவானே இவ்விதம் கேட்டான் :

''குற்றம் குறையற்ற அத்தகைய நிறை நிலேயின் அடையாளங்கள் என்ன? அத்தகைய அப்பழுக்கற்ற நிலேயை அடைந்தவன் எப்படி நடந்து கொள்வான்? அவன் எவ்வாறு குணங்களேக் கடந்து செல்லுகிருன்?''

அர்ஜுனனுக்குப் பதிலாக பகவான் கூறியதாவது: ''சத்துவ குணமான ஒளியும் ஞானமுமோ, ரஜோ குணமான செயலும் பரபரப்புமோ அல்லது தமோ குணமான மதிமயக்கமும் அறியாமையுமோ இருக்கும்போது அவன் வெறுப்பு அடைவதில்லே; இராத போது விரும்புவதுமில்லே. அத்தகைய ஒரு மனிதனேத்தான் குணங்களேக் கடந்தவன் என்று கூறலாம். எதைப்பற்றியும் கவலேப்படாதவனேப்போல் அவன் உட்கார்ந்திருக்கிருன். அவன் குணங்களால் பாதிக்கப்படுவதில்லே. எல்லாச் செயல்களேயும் புரிவது குணங்கள்தான் என்பதை அவன் உணர்ந்திருப்பதால், அவன் எதற்கும் அசைந்து கொடுக்காமல் தனித்து நிற்கிருன். இன்பம், துன்பம், கல், மண், பொன் எல்லாவற்றையும் சமமாகக் கருதுகிருன். மகிழ்ச்சியைக் கொடுப்பது, மகிழ்ச்சியைக் கெடுப்பது ஆகிய எல்லாம் அவனுக்கு ஒன்றுதான். புகழ்ச்சியைக் கண்டு அவன் மகிழ்வதில்லே; இகழ்ச்சியைக் கண்டு வருந்துவதுமில்லே. கௌரவத்தையும் அகௌரவத்தையும் அவன் ஒன்ருகவே கருதுகிருன். நண்பனிடமும் பகைவனிடமும் அவன் ஒரேவிதமாகவே நடந்து கொள்ளுகிருன். எல்லாப் பொறுப்புகளேயும் அவன் துறந்து விடுகிருன்.

''இந்த லட்சியத்தை ஒரு காலத்திலும் எட்ட முடியாது என்றும், ஆகையால் அவ்விஷயமாக முயற்சிக்க வேண்டிய

அவசியம் இல்லை என்றும் நீ எண்ண வேண்டாம். குற்றம் குறையற்ற ஒரு நிறை மனிதனைப் பற்றியே நான் அவ்விதம் விவரித்திருக்கிறேன். அத்தகைய நிலையை அடைவதற்கான வழி, மனப்பூர்வமான பக்தியுடன் என்னைப் பூஜிப்பதுதான். செயலின்றி ஒரு மனிதன் மூச்சுக்கூட விட முடியாது என்றும், மனிதனாகப் பிறந்த ஒருவன் கூட செயலிலிருந்து தப்ப முடியாது என்றும் நான் மூன்றாவது அத்தியாயத்திலிருந்தே குறிப்பிட்டு வந்திருக்கிறேன். குணங்களைக் கடந்த ஒருவன், அவனது எல்லா நடவடிக்கைகளையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அவற்றின் பலனில் அவன் ஆசை வைக்கக் கூடாது. இவ்விதம் அவன் ஆசை வைக்காவிடில், அவனது முன்னேற்றத்திற்கு அவனது செயல்கள் இடையூறாக இருப்பதில்லை. ஏனெனில் பிரம்மமும், அழிவற்ற உயிரும், நிரந்தரமான சட்டமும், எக்காலத்திலும் குன்றாத பேரானந்தமும் நான்தான்.

"ஒரு மனிதன் தன்னை சூன்யமாகச் செய்து கொண்டு விடுவானாயின், எல்லாவிடத்திலும் அவன் என்னை மாத்திரமே காண்கிறான். அவன்தான் குணாதீதன் (குணங்களைக் கடந்தவன்) ஆகிறான்."

# 15
# கடவுள் இருக்கும் இடம்

பகவான் கூறினார்: "இந்த உலகம் அசுவத்த (அரச மரம்) மரத்தைப் போன்றது. அதன் வேர்கள் மேலேயும், கிளைகள் கீழேயும் இருக்கின்றன. வேத மந்திரங்கள்தான் அதன் இலைகள். அதை அறிபவனே வேதத்தை அறிபவன் ஆகிறான். குணங்களால் வளம் பெற்றுள்ள இந்த மரத்தின் கிளைகள் ஆகாயத்தை நோக்கியும் சென்றிருக்கின்றன; பூமியைப் பிளந்துகொண்டும் சென்றிருக்கின்றன. புலன்களைக் கவரும் பொருட்களே அதன் துளிர்கள். அப்பொருட்களே மனிதர்கள் அடங்கிய உலகில் கர்ம பந்தங்களால் ஆன்மாவைக் கட்டுப்படுத்துகின்றன.

"இந்த மரத்தின் உண்மையான இயல்பை இங்கே யாராலும் அறிய முடியாது. அதற்கு ஆரம்பமும் இல்லை, முடிவும் இல்லை, அஸ்திவாரமும் இல்லை. பலமாக வேரூன்றியுள்ள இந்த மரத்தை ஒத்துழையாமையாகிற ஆயுதத்தால் வெட்டி வீழ்த்த வேண்டும். அப்போதுதான் ஆன்மா, பிறப்பும் இறப்பும் உள்ள மனிதர்கள் அடங்கிய இந்த உலகத்திற்குத் திரும்பி வரவேண்டிய அவசியம் இல்லாத மேலான உலகத்திற்குச் செல்ல முடியும். இந்த இறுதியான லட்சியத்தை மனத்திற் கொண்டே, ஒரு மனிதன் பகவானை இடைவிடாது தொழுவதில் ஈடுபட்டிருக்க

வேண்டும். அவரிடமிருந்தே இந்த மரத்தின் நடவடிக்கைகள் எல்லாம் உற்பத்தியாகி வருகின்றன. எனவே ஒரு விவேகி அகந்தையிலிருந்தும் மதி மயக்கத்திலிருந்தும் விடுதலை பெற்றிருக்கிறான்; பாசம் என்ற தீமையை வென்று, மகோன்னதமான ஆன்மாவிடம் ஈடுபடுகிறான். ஆசைகளிலிருந்தும் அவன் விடுதலை பெறுகிறான். அவனுக்கு இன்பம், துன்பம் யாவும் ஒன்றாக இருக்கின்றன. அத்தகைய விவேகி மாறுதல்களை யெல்லாம் கடந்த ஒரு நிலையை அடைகிறான். அந்த நிலையைப் பிரகாசப்படுத்துவதற்கு சூரியனோ, சந்திரனோ அல்லது தீயோ எதுவும் தேவையில்லை. அதுதான் நான் இருக்கும் பரமபதமாகும்.

"எக்காலத்திலும் அழியாத என்னில் ஓர் அம்சமே இந்த உலகில் தனி ஆன்மாவாக மாறி, ஜடப் பொருளான இந்த உடலில் வசிக்கும் மனம் உள்பட புலன்களைத் தன்னிடத்தே இழுக்கின்றது. ஆன்மா உடலில் பிரவேசிக்கும்போதோ அல்லது உடலை விட்டுச் செல்லும்போதோ தன்னுடன் புலன்களையும் கொண்டு செல்லுகிறது. அதாவது, நறுமணம் உள்ள இடங்களிலிருந்து காற்று அதைக்கொண்டு செல்லுவது போலவே, ஆன்மாவும் இந்திரியங்களை எடுத்துச் சென்று விடுகின்றது. காது, கண், மெய், நாவு, மூக்கு, மனம் முதலியவற்றின் உதவியால் ஆன்மா விஷயங்களை அனுபவிக்கிறது. ஆன்மா போவதையோ, இருப்பதையோ அல்லது குணங்களின் செல்வாக்கினால் விஷயங்களை அனுபவிப்பதையோ அறிவற்றவர்களால் தெரிந்து கொள்ள முடியாது. ஆனால் ரிஷிகள், ஞானக் கண்ணால் அதை அறிந்து கொள்ளுகிறார்கள். பெருமுயற்சி செய்யும் யோகிகள், அது தங்களுடைய உடல்களில் வசித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறார்கள். ஆனால் இன்பம், துன்பம் போன்ற இருமைகளைச் சமமாகக் கருதும் மன நிலையை அடையாதவர்கள், முயற்சி செய்தால் கூட அதைக் காண முடியாது.

"உலகம் முழுவதும் பிரகாசிக்கும் சூரியனிடத்திலும், சந்திரனிடத்திலும், தீயினிடத்திலும் உள்ள ஒளியெல்லாம் என்னிடத்திலிருந்து வந்ததே என்பதை அறிந்து கொள். நான் பூமிக்குள் வியாபித்து எல்லா உயிர்களையும் காப்பாற்றுகிறேன். நான், பயிர்களுக்கு சாரத்தைக் கொடுக்கும் சந்திரனாகி, பயிர்களைப் போஷிக்கிறேன். எல்லா உயிர்களுடைய உடல்களிலும் நான் உயிர்த் தீயாகி மூச்சுக் காற்றுகளுடன் சம்பந்தப்பட்டு நான்கு விதமான உணவை ஜீரணம் செய்கிறேன். நான் எல்லோருடைய உள்ளங்களிலும் வசிக்கிறேன். நினைவும், ஞானமும், நினைவின்மையும், ஞானமின்மையும் என்னிடமிருந்தே உண்டாகின்றன. வேதங்களால் அறியப்பட வேண்டிய பொருள் நான்தான். வேதாந்தத்தின் கர்த்தாவும், வேதங்களை அறிந்தவனும் நானே.

"இந்த உலகில் இரண்டு விதமான நபர்கள் இருப்பதாகக் கூறலாம். அவர்களில் ஒருவன் க்ஷரன் (அழியக்கூடியவன்),

மற்ளுெருவன் அக்ஷரன் (அழிவே இல்லாதவன்). எல்லா ஜீவன்களும் அழியக் கூடியவை. நான் மாத்திரம் அழிவில்லாதவன். எல்லா உயிர்களும் செயல்படும்படி தூண்டுபவன் நானே. நான் எக்காலத்திலும் அழிவின்றி ஒரே விதமாக இருக்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலே மகோன்னதமான ஆன்மா இருக்கிறது. எல்லாவற்றையும் வியாபித்துக் கொண்டு மூன்று உலகங்களையும் பாதுகாப்பது அதுதான். அந்த ஆன்மாவும் நானே. எனவே அழியும் தன்மையுடையதற்கும் அழிவற்றதற்கும் அப்பால் நான் இருக்கிறேன். மாபெரும் உண்மையான வஸ்து என்று உலகத்திலும் வேதங்களிலும் என்னையே கூறுகிருர்கள். என்னை அவ்விதம் உணர்ந்து கொண்டுள்ள ஞானி, அறிந்து கொள்ள வேண்டியதை யெல்லாம் அறிந்து கொண்டவன் ஆகிருன்; அவன் தன் உடல், உயிர் எல்லாவற்றினுலும் எனக்குத் தொண்டு செய்தவன் ஆகிருன்.

"பாவமற்ற அர்ஜுனு, மகத்தான இந்த ரகசியத்தை உனக்கு நான் எடுத்துக் கூறி யிருக்கிறேன். இந்த ரகசியத்தை அறிந்த மனிதன் உண்மையிலேயே ஒரு ஞானியாகிருன்; அவன் மோட்சம் அடைகிருன்."

## 16

# தேவ இயல்பும் அசுர இயல்பும்

பகவான் சொன்னுர்: "தேவ இயல்புக்கும் அசுர இயல்புக்கும் உள்ள வேற்றுமையை இப்போது நான் உனக்கு எடுத்துக் கூறுகிறேன். அஞ்சாமை, உள்ளத் தூய்மை, ஞானம், சமத்துவ புத்தி, தன்னடக்கம், தானம், யக்ஞம், வேதங்களைப் படித்தல், தவம், நேர்மை, அகிம்சை, சத்தியம், கோபமின்மை, துறவு, சாந்தம், கோள் சொல்லாமை, உயிர்களிடத்தில் இரக்கம், பேராசையின்மை, வினயம், தற்பெருமையின்மை, தடுமாருத புத்தி, சக்தி, மன்னிக்கும் குணம், மன உறுதி, அகத் தூய்மை, புறத் தூய்மை, துவேஷத்திலிருந்தும் அகந்தையிலிருந்தும் விடுதலை ஆகியவை தெய்வ இயல்பை உடையவனின் குணங்கள் ஆகும்.

"மோசடி, இறுமாப்பு, தற்பெருமை, கோபம், கொடிய குணம், அறியாமை முதலியவை அசுர இயல்பை உடையவனின் அடையாளங்கள் ஆகும்.

"தெய்வ இயல்பு மோட்சத்தில் கொண்டு போய் விடுகிறது. அசுர இயல்போவெனில், அடிமைத்தனத்தில் கொண்டு போய் விடுகிறது. அர்ஜுனு, தெய்வ இயல்பின் குணங்களுடன் நீ பிறந்திருக்கிருய்.

''அசுர இயல்பைப் பற்றி மேற்கொண்டு அதிகமாக சில விவரங்களைக் கூறுகிறேன். மக்கள் அசுர குணங்களை எளிதாகக் கைவிட்டு விட வேண்டும் என்பதற்காகவே அவ்விவரங்களைக் கூறுகிறேன். அத்தகைய இயல்பு உள்ளவர்களுக்கு எதைச் செய்வது, எதைச் செய்யாமல் இருப்பது என்பதே தெரிவதில்லை. அவர்களிடத்தில் தூய்மையோ அல்லது சத்தியமோ இருப்பதில்லை. எனவே அவர்கள் நன்னடத்தைக்கான விதிகளை அனுசரிப்பதில்லை.

''உலகம் உண்மையல்ல, உலகத்திற்கு அடிப்படையோ அல்லது அதிபரோ யாரும் இல்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். உலகத்திலேயே காம இச்சை ஒன்றுதான் முக்கியமானது என்றும் அவர்கள் எண்ணுகிறார்கள். புலன்களின் நுகர்ச்சியால் ஏற்படும் ஆனந்தத்தைத் தவிர, உலகத்தில் வேறு எதுவுமே இல்லை என்றும் அவர்கள் நினைக்கிறார்கள்.

''அவர்கள் பயங்கரமான செயல்களைப் புரிகின்றார்கள்; மந்த புத்தியுடையவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய கொடிய எண்ணங்களை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நடவடிக்கைகள் யாவும் உலகத்தின் அழிவைத் தேடுபவையாகவே இருக்கின்றன. அவர்களுடைய ஆசைக்கு எல்லையே இல்லை. அவர்களிடம் வஞ்சகமும், அகந்தையும், தற்பெருமையும் தாண்டவமாடுகின்றன. அவ்வாறாக அவர்கள் எண்ணிக்கையற்ற கவலைகளுக்கு ஆளாகி அல்லல் படுகிறார்கள். அவர்கள் ஒவ்வொரு நாளும் புதிது புதிதாக காம நுகர்ச்சியில் ஈடுபட விரும்புகிறார்கள். வீண் நம்பிக்கைகளாகிய ஏராளமான தளைகளில் அவர்கள் சிக்கிக் கொண்டுவிடுகிறார்கள். தங்களுடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக அவர்கள் தரும விரோதமான வழிகளில் செல்வம் திரட்டுகிறார்கள்.

''நான் இன்று இதை அடைந்தேன்; நாளைக்கு அதை அடையப் போகிறேன்; என் விரோதியான இவனை இன்று நான் கொன்றேன்; மற்ற விரோதிகளையும் நான் கொன்று விடுவேன்; நான் சக்தி வாய்ந்தவன்; எனக்கு ஏராளமான சொத்துக்கள் இருக்கின்றன; எனக்கு ஈடு யார்? கீர்த்தியைப் பெறுவதற்காக நான் தெய்வங்களுக்கு காணிக்கைகளைச் செலுத்துவேன்; தான தருமங்களைச் செய்வேன்; இன்ப வாழ்வில் ஈடுபடுவேன்.' அவர்கள் உள்ளூற சிரித்துக் கொண்டே அவ்விதம் தங்களுக்குத் தாங்களே சொல்லிக் கொள்ளுவார்கள். அவ்விதம் வீண் மயக்கமாகிற வலையில் சிக்கி, இறுதியில் நரகத்தில் வீழ்ச்சியடைவார்கள்.

''அத்தகைய இயல்பு உள்ள மனிதர்கள் அகந்தையினால் பிறரைப் பற்றி இழிவாகப் பேசுவார்கள்; அவ்விதமாக எல்லாருடைய உள்ளங்களிலும் உறையும் கடவுள் மீது துவேஷம் கொள்ளுவார்கள். எனவே, அவர்கள் அடிக்கடி இழிவான பெற்றோர்களுக்குக் குழந்தைகளாகப் பிறந்து கஷ்டப்படுவார்கள்.

''ஆன்மாவை அழிக்கக் கூடிய நரகத்திற்கு மூன்று வாயில்கள் இருக்கின்றன. அவையாவன: காமம், கோபம், பேராசை. எனவே, அந்த மூன்றையும் அடியோடு துறந்து விடவேண்டும். அந்தத் தீய வழிகளைவிட்டு நேரடியான, தருமமான வழியில் செல்லுவோர் மிகவும் உயர்ந்த நிலையை அடைகின்றனர்.

''நிரந்தரமான உயர்ந்த கொள்கைகள் அடங்கிய தரும நூல்களை அசட்டை செய்து, யார் இன்ப வாழ்க்கையில் ஆழ்ந்து விடுகிறார்களோ அவர்கள், சீரிய வாழ்வின் அம்சங்களான இன்பத்தையோ அல்லது மன அமைதியையோ அடைவதில்லை.

''ஆகையால், நீ எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்பதைத் தீர்மானிக்கும் விஷயமாக ஞானிகளிடமிருந்து மூலாதாரமான, மாறுதலற்ற கொள்கைகளைப் பற்றிய அறிவை நீ சம்பாதித்துக் கொள்ளவேண்டும். பின்னர் அவற்றைப் பற்றிச் சிந்தித்து, அவற்றின்படி நடந்து கொள்ளவேண்டும்.''

## 17

# மூன்று வித நம்பிக்கைகள்

அர்ஜுனன் கேட்டான்: ''நடைமுறையில் உள்ள ஒழுக்க விதிகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், கடவுளிடத்தில் நம்பிக்கையுடன் தொண்டு புரிவோருக்கு என்ன நேருகிறது?''

பகவான்: ''நம்பிக்கையில் மூன்று விதங்கள் இருக்கின்றன. அவை சத்துவ, ராஜஸ, தாமஸ குணங்களை அடிப்படையாகக் கொண்டவை. ஒருவனுடைய நம்பிக்கை எப்படியோ, அப்படியே தான் அவனது குணமும் இருக்கிறது. சத்துவ குணம் உடையவர்கள் தெய்வங்களை வணங்குகிறார்கள்; ரஜோ குணம் உள்ளவர்கள் யட்சர்களையும் அசுரர்களையும் வணங்குகிறார்கள். தமோ குணம் உள்ளவர்கள் இறந்தவர்களின் ஆவிகளை (பிரேத பூத கணங்களை) வணங்குகிறார்கள்.

''ஒரு மனிதனுடைய நம்பிக்கையின் தன்மையை திடீரென்று தீர்மானித்துவிட முடியாது. அதை சரியாக நிர்ணயிக்க வேண்டுமாயின், அவனது உணவு, தவம், தியாகம், தரும சிந்தனை முதலியவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும். நீண்ட ஆயுளை அளிப்பதுடன், ஜீவ சக்தி, பலம், ஆரோக்கியம் முதலியவற்றை அதிகப்படுத்தும் உணவுகளே சாத்துவிகமானவை என்று கூறப்படுகின்றன. ராஜஸ உணவுகள் மிகவும் கசப்பாகவும், புளிப்பாகவும், உஷ்ணமாகவும், காரமாகவும் இருக்கின்றன. அவை, நோய்க்கும், உடலில் பல்வேறு வலிகளுக்கும் வேதனைகளுக்கும் காரணமாகி விடுகின்றன. சமைத்த பழைய உணவு அல்லது நாற்றம் அடிக்

கும் உணவு, மற்றவர்களின் எச்சில் உணவு முதலியவையே தாமஸ உணவு என்று கூறப்படுகிறது.

''வெகுமதி எதையும் எதிர்பாராமல் கடமை உணர்ச்சியுடனும் முழுமனத்துடனும் செய்யப்படும் யக்ஞமே சாத்விக யக்ஞமாகும். வெகுமதிக்கு ஆசைப்பட்டும், வெளிப் பகட்டிற்காகவும் செய்யப்படும் யக்ஞம், வேத நூல்களில் உள்ள விதிகளுக்கு முரணாக இருக்கும். அந்த யக்ஞத்தில் ஏழைகளுக்கு அன்னமோ அல்லது வேறு பொருள்களோ தானம் பண்ண மாட்டார்கள். அந்த யக்ஞத்தில் மந்திரங்களும் ஜபிக்கப் படுவதில்லை.

''மகான்களுக்கு மரியாதை செய்வது, தூய்மை, பிரம்மச்சரியம், அகிம்சை முதலியவைதான் உடல் சம்பந்தமான தவமாகும். பேச்சு சம்பந்தமான தவம் எனில் சத்தியமாகவும், இனிமையாகவும், பலன் தரத்தக்கதாகவும் பேசுவதும், தரும நூல்களை ஆராய்ச்சி செய்வதும் தான். மகிழ்ச்சி, சாந்தம், மௌனம், தன்னடக்கம், தூய்மையான நோக்கம் முதலியவைதான் மனத்தின் தவம் ஆகும்.

''விருப்பு வெறுப்பின்றி சமத்துவ புத்தியுடன் இருப்போர், பலனில் ஆசை வைக்காமல் மேற்கொள்ளும் மனம், உடல், பேச்சு சம்பந்தமான தவம் சாத்துவிகமானது. கௌரவத்திற்காகவும் பகட்டிற்காகவும் அனுசரிக்கப்படும் தவம் ராஜஸமானது. தம்மைத்தாமே சித்திரவதை செய்துகொண்டோ அல்லது பிறருக்குத் துன்பத்தை உண்டாக்க வேண்டும் என்ற நோக்கத்துடனே செய்யப்படும் தவம்தான் தாமஸமானது.

''பிரதி பலனை எதிர்பார்க்காமலும், அவ்விதம் செய்வதுதான் நியாயம் என்ற உணர்ச்சியுடனும் உற்ற இடத்தில், உற்ற காலத்தில், தகுதிவாய்ந்த ஒருவருக்குக் கொடுக்கும் தானமே சாத்துவிகமாகும். பிரதியாக ஏதோ ஒன்றை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் மனமின்றிக் கொடுக்கும் தானமே ராஜஸமாகும். வெறுப்புடனும், இறுமாப்புடனும், மரியாதையின்றியும், காலம், இடம் ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்க்காமலும் கொடுக்கும் தானம் தாமஸமானது.

''வேதங்களில் பிரம்மமானது 'ஓம் தத் ஸத்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே நம்பிக்கையுள்ளவர்கள் எந்த யக்ஞத்தையோ, தானத்தையோ அல்லது தவத்தையோ ஆரம்பித்தாலும் 'ஓம்' என்ற தெய்விக மந்திரத்தைக் கூறுகிறார்கள். இந்த ஒரே சொல் பிரம்மத்தைக் குறிக்கிறது. 'தத்' என்பதற்கு 'அது' என்று பொருள். 'ஸத்' என்பதற்கு சத்தியம், நன்மை செய்வது என்று அர்த்தம். அதாவது கடவுள் ஒருவரே. இந்த உலகத்தில் அவர் மாத்திரமே உண்மையாக இருக்கிறார். அவர் தான் சத்தியம், உலகத்திற்கு நன்மை அளிப்பவர். இந்த உணர்ச்சியுடன் யார் யக்ஞம் செய்கின்றானோ, யார் தானம் கொடுக்கின்றானோ, யார் தவம் புரிகின்றானோ அவன்தான் சாத்

விக நம்பிக்கையுடையவன். கடவுளுக்கு அர்ப்பணம் என்ற புத்தியுடன், தெரிந்தோ அல்லது தெரியாமலோ அவன் நேர் பாதையிலிருந்து தவறி ஏதாவது செய்துவிட்டாலும் குற்றத்தி லிருந்து விடுதலை யடைகிறான். ஆனால், அத்தகைய உணர்ச்சி யின்றியும், நம்பிக்கை இல்லாமலும் மேற்கொள்ளும் நடவடிக்கை கள் 'அஸத்' அதாவது உண்மைக்கு மாறானவை.''

## 18

# கீதையின் சுருக்கமான சித்தாந்தம்

முந்திய அத்தியாயங்களில் பகவானால் செய்யப்பட்ட உபதே சங்களை ஆழ்ந்து ஆலோசித்த பிறகும் கூட, அர்ஜுனனின் மனத் தில் ஒரு சந்தேகம் இருந்தது. எனவே அர்ஜுனன் பின்வரு மாறு கேட்டான்: ''கீதையில் குறிப்பிடப்பட்டுள்ள சந்நியாசம், சாதாரணமாக எல்லோரும் அறிந்துகொண்டுள்ள துறவு நிலையி லிருந்து வேறானதாகத் தோன்றுகிறது. சந்நியாசமும் தியாக மும் உண்மையிலேயே வெவ்வேறானவையா?''

இந்தக் கேள்விக்குப் பதில் அளித்த பகவான், அர்ஜுனனின் சந்தேகத்தைப் போக்கி அதே சமயத்தில் கீதையின் சித்தாந்தத் தையும் சுருக்கமாகக் குறிப்பிட்டார்:

''சில செயல்களுக்கு ஆசையே காரணமாக இருக்கிறது. பல்வேறு ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ளும் நோக்கத்துட னேயே மனிதர்கள் பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். இவைதான் 'காம்ய'* கர்மங்கள் என்று கூறப்படுகின்றன. இவற்றைத் தவிர, அவசியமான, இயல்பான சில நடவடிக்கை களும் இருக்கின்றன. மூச்சு விடுதல், உண்பது, தண்ணீர் குடிப்பது, படுத்துக்கொள்வது, உட்காருவது போன்றவையே அந்த நடவடிக்கைகள் ஆகும். தொண்டு செய்வதற்குத் தகுதி யான கருவியாக உடலை வைத்துக்கொள்ள வேண்டும் என்பதற் காகவே அந்த நடவடிக்கைகள் ஏற்பட்டிருக்கின்றன. மூன்றாவ தாக, பிறருக்குத் தொண்டு செய்யும் நோக்கத்துடனும் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. 'காம்ய' நடவடிக்கை களைக் கைவிடுவதே சந்நியாசம். செயல்கள் எல்லாவற்றினுடைய பலனையும் துறந்துவிடுவதே, இதுவரை நான் உனக்கு உபதே சித்து வந்துள்ள தியாகமாகும்.

''எல்லா நடவடிக்கைகளிலும், ஓரளவு தீமை இருக்கத்தான் செய்கிறது என்று சிலர் சாதிக்கிறார்கள். இருந்தாலும் அதற் காக யக்ஞம் சம்பந்தமான, அதாவது பிறருக்குத் தொண்டு செய்யும் நோக்கத்துடன் செய்யப்படும் காரியங்களை விட்டுவிடக்

* ஒரு குறிப்பிட்ட பலனை விரும்பி செய்யப்படும் காரியங்களே காம்ய கர்மங் களாகும்.

கூடாது. யக்ஞத்தில், தானம், தவம் இரண்டும் அடங்கியிருக்கின்றன. ஒருவன் மற்றவர்களுக்குத் தொண்டு செய்யும்போது கூட பற்றுதலின்றி நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில், அவனது நடவடிக்கைகளில் தீமையும் கலந்து விடுவதற்கு இடம் உண்டு.

''செய்து தீரவேண்டிய கடமைகளை அறியாததன் காரணமாக எழும் துறவு, தமோ குணத்தினல் தூண்டப்படுகிறது. உடலுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கிறது என்பதற்காக ஒரு நடவடிக்கையைக் கைவிடுவதுதான் ரஜோ குணம் என்று கூறப்படுகிறது. கடமையைச் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியுடனும், அதனல் ஏற்படக்கூடிய பலனில் ஆசையின்றியும் பிறருக்குச் செய்யும் தொண்டுதான் உண்மையான சாத்விகத் தியாகமாகும். இந்தத் தியாகத்தில், எல்லா நடவடிக்கைகளையும் கைவிட்டுவிட வேண்டும் என்பதில்லை. செய்ய வேண்டிய கடமைகளின் பலனை மாத்திரம்தான் துறக்க வேண்டும்; ஒரு பலனை விரும்பி செய்யப்படும் காம்ய நடவடிக்கைகளையும் விட்டுவிட வேண்டும். ஒரு விவேகி சுயநலனற்ற உணர்ச்சியுடன் அவ்விதம் நடந்து கொள்ளுவானயின், அவனது சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்துவிடுகின்றன. அவனது நோக்கங்கள் தூய்மையாக இருக்கின்றன. சொந்த வசதி அல்லது வசதியின்மையைப் பற்றிய எண்ணம் அவனுக்கு ஏற்படுவதில்லை.

''செயலின் பலன்களைக் கைவிடாதவன் அந்த பலன்களை அனுபவிக்க வேண்டும்; அல்லது தன் சொந்த நடவடிக்கைகளின் இயல்பான விளைவுகளுக்கு உட்பட்டுத் தீரவேண்டும். அவ்வாருக, அவன் எக்காலத்திலும் அடிமையாக இருக்கிருன். ஆனல், செயலின் பலன்களைத் துறப்பவன் மோட்சத்தை அடைகிருன்.

''மனிதன், செயலில் ஏன் பற்றுதல் வைக்க வேண்டும்? எனினும் செய்பவன் அவன்தான் என்று கற்பனை செய்து கொள்ளுவது அர்த்தமற்றதாகும். எந்தச் செயல்களையும் நிறைவேற்றுவதற்கு ஐந்து காரணங்கள் இருக்கின்றன. அவையாவன: இந்த உடல், செய்பவன், பல்வேறு கருவிகள், முயற்சிகள், எல்லாவற்றிற்கும் மேலாக இறைவன்.

''இந்த உண்மையை உணர்ந்து மனிதன் அகந்தையை விட்டுவிட வேண்டும். இறுமாப்பின்றி ஒரு காரியத்தைச் செய்தாலும், அவன் அதைச் செய்ததாகக் கூறமுடியாது. ஏனெனில், அந்தச் செயலால் அவன் கட்டுப்படுவதில்லை. தன்னை சூன்யமாக்கிக் கொண்டுள்ள, பணிவுள்ள ஒருவன் மற்ருெருவனைக் கொன்ருல் கூட, அவன் கொன்றதாக ஆவதில்லை. இதிலிருந்து ஒருவனுக்குப் பணிவு இருந்தும் கூட அவன் கொல்லும் செயலில் ஈடுபடலாம் என்றும், அதனல் அவனுக்கு பாதகம் ஏற்படாது என்றும் அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. பணிவுள்ள

அத்தகைய ஒரு மனிதனுக்கு பலாத்காரத்தில் ஈடுபடவேண்டிய அவசியமும், சந்தர்ப்பமும் ஏற்படாது.

"மூன்று விஷயங்கள் செயலைத் தூண்டுகின்றன. அவை யாவன: அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன். அது போலவே மூன்று அம்சங்களே செயலையும் துண்டுகின்றன: கருவி, கர்மம் (செயல்), கர்த்தா (செய்பவன்). செய்ய வேண்டிய கர்மமே அறியப்படு பொருள்; செய்ய வேண்டிய விதமே அறிவு; அதை எவ்விதம் செய்வது என்பதைத் தெரிந்துகொள்ளுபவனே அறிபவன். செயலில் ஈடுபடவேண்டும் என்ற தூண்டுதல் ஏற்பட்டதும் அவன் செயலில் இறங்குகிறான். அப்போது அவனது புலன்களே அவனுக்குக் கருவிகளாக இருக்கின்றன. அவ்வாறாக அவனது எண்ணம் செயலாக மாறுகிறது."

'எல்லா உயிர்களிடத்திலும் மாறுதலே இல்லாத ஒரே ஜீவனை மனிதன் காண முடிகின்றது.'

—எட்வின் அர்னால்டு*

"வெவ்வேறான உயிர்களிலும் மூலாதாரமான ஐக்கியத்தைக் காண்பதே சாத்விக அறிவு; வெவ்வேறு உயிர்களிடத்திலும் வெவ்வேறு ஆன்மாக்கள் இருக்கின்றன என்று கூறுவதே ராஜஸ அறிவு; எதையும் அறிந்து கொள்ளாமல், காரணமின்றி எல்லாம் கலந்தும் குழம்பியும் இருப்பதாகக் கூறுவது தாமஸ அறிவாகும்.

"அது போலவே செயலிலும் மூன்று வகைகள் உண்டு. விருப்பு வெறுப்பின்றி, சொந்த நலனில் ஆசை வைக்காமல் செய்யப்படும் கருமமானது சாத்விகமானது. அனுபவிக்கவேண்டும் என்ற ஆசையுடனும், அகந்தையுடனும், அமைதியில்லாமலும் செய்யப்படுவது ராஜஸமானது. திறமையின்றியும், காரியத்தின் விளைவுகளைச் சிந்திக்காமலும், மதிமயக்கத்தினாலும் செய்யப்படும் காரியம் தாமஸமானது.

"செயல் புரிபவர்களிலும் மூன்று வகையினர் உண்டு. பற்றுதலின்றியும், அகந்தையின்றியும், அதே சமயத்தில் உறுதியுடனும் ஊக்கத்துடனும் செயல் புரிபவன் சாத்விகன் ஆவான். வெற்றியைக் கண்டு அவன் மகிழ்ச்சி அடைவதில்லை; தோல்வியைக் கண்டு கவலைப்படுவதுமில்லை. ரஜோ குணம் உள்ளவன் வெறி பிடித்தும், பேராசையுடனும், பலாத்காரமாகவும் காரியங்களைச் செய்கிறான். தனது செயல்களின் பலன்களையும் அடைய வேண்டும் என்று ஆசைப்படுகிறான்.

'அவன் மாறி மாறி மகிழ்ச்சிக்கும் துக்கத்திற்கும் அடிமையாகி விடுகிறான்'

—எட்வின் அர்னால்டு

---

*'சொர்க்க கீதம்' என்ற மகுடத்தின் கீழ் கீதையை ஆங்கிலத்தில் காவிய நடையில் மொழிபெயர்த்தவரே எட்வின் அர்னால்டு. இந்த அத்தியாயத்தில் அவரது நூலிலிருந்து காந்திஜி சில மேற்கோள்களைக் கொடுத்துள்ளார்.

“தமோ குணம் உள்ளவன் வகை முறையின்றியும், காலம் கடந்தும், பிடிவாதத்துடனும், துவேஷ புத்தியுடனும், சோம் பேறித்தனமாகவும் செயல்களில் ஈடுபடுகிறான்.

“அறிவு, மன உறுதி, மகிழ்ச்சி ஆகியவற்றிலும் மூன்று வகை கள் உண்டு.

“சாத்விக அறிவு உள்ளவன், செயலுக்கும் செயலற்ற நிலைக் கும் உள்ள வேற்றுமையை ஒழுங்காக அறிந்து கொள்ளும் சக்தி யுடையவனாக இருக்கிறான்.”

‘எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யாமல் இருக்க வேண்டும்? எதைக் கண்டு அஞ்ச வேண்டும், எதைக் கண்டு அஞ் சக் கூடாது? ஆன்மாவை அடிமைப் படுத்துவது எது, ஆன்மா வுக்கு விடுதலை அளிப்பது எது? இவற்றையெல்லாம் சாத்விக அறிவுள்ளவன் அறிகிறான்.’ –எட்வின் அர்னால்டு.

“இந்த வேற்றுமைகளையெல்லாம் அறிந்து கொள்ள ராஜஸ குணம் உள்ளவன் முயற்சிக்கிறான் என்றாலும், அவன் அவற்றைச் சரிவர அறிந்து கொள்ளுவதில்லை. அம் முயற்சியில் அவன் தோல் வியே அடைகிறான்.”

‘தாமஸ அறிவு படைத்தவன், தவறான முறைகளையே சரி யானவை என்று கருதுகிறான். எல்லாவற்றையும் உண்மைக்கு முரணாகவே காண்கிறான்.’ -எட்வின் அர்னால்டு.

“ஏதாவது ஒரு காரியத்தை எடுத்துக் கொண்டால், எவ்வ ளவு கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டாலும் அதை உறுதியுடன் சமா ளிக்கும் சக்தியே மன உறுதியாகும். எல்லோரிடத்திலும் அந்த குணம் சற்றேறக் குறைய இயல்பாகவே அமைந்திருக்கிறது. இல் லாவிடில், இந்த உலகமானது ஒரு விநாடிகூட வாழ முடியாது. மனம், முக்கிய வாயுக்கள், புலன்கள் ஆகியவற்றின் நடவடிக்கை கள் சீராக இருக்கும் நிலையில் ஏற்படும் மன உறுதிதான் சாத்விக மானது. கடமையைச் செய்வதிலும் இன்பத்தை அனுபவிப்பதி லும் உறுதியாக இருந்து, எவன் செல்வத்திலும் சொந்த நலனி லும் பற்றுதல் வைக்கின்றானோ, அவனது உறுதி ராஜஸமானது.”

‘தாமஸ குணத்தினால் ஏற்படும் உறுதி காரணமாக மூடன் தன்னுடைய சோம்பேறித்தனம், துக்கம், அச்சம், அகந்தை, நம் பிக்கையின்மை முதலியவற்றை இறுகப் பற்றிக்கொண்டிருக்கி றான்’ -எட்வின் அர்னால்டு.

‘துக்கத்தை உண்மையில் போக்கி, நிரந்தரமான சுகத்தைக் கொடுப்பதே சாத்விக இன்பமாகும். ஆன்மாவுக்கு அது ஆரம் பத்தில் விஷத்தைப் போல் கசப்பாக இருக்கும்; பிறகு அமிருதத் தைப் போல் இனிப்பாக இருக்கும். உண்மையான ஞானத்தி லிருந்தே அத்தகைய இன்பம் ஏற்படுகிறது. புலன் நுகர்ச்சியி லிருந்து ராஜஸ இன்பம் உண்டாகிறது. அது முதலில் அமிருதத்

தைப் போல் இனிப்பாக இருக்கிறது; இறுதியில் விஷத்தைப் போல் கசந்து போய்விடுகிறது. சோம்பேறித்தனம், தூக்கம், மூடத்தனம் ஆகியவற்றிலிருந்து உண்டாவதே தாமஸ இன்பமாகும்.' -எட்வின் அர்னால்டு.

"இந்த மூன்று விதமான அவஸ்தைகள் எல்லாப் பொருள்களுக்கும் பொருந்தும். இந்த குணங்களை அடிப்படையாகக் கொண்டே நான்கு வர்ணங்களின் (புராதன ஹிந்து சமூகத்தின் பிரிவுகள்) கடமைகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

"சாந்தம், ஒழுக்கம், தவம், தூய்மை, மன்னிக்கும் குணம், நேர்மை, விவேகம், அனுபவம், கடவுளிடம் நம்பிக்கை இவையெல்லாம் ஒரு பிராம்மணனுக்கு இயல்பாக இருக்க வேண்டிய குணங்களாகும். சூரத்தனம், சிறப்பு, உறுதி, சாதுர்யம், போரில் புறங்காட்டாமை, கொடை, தலைவராக இருக்கும் தகுதி ஆகியவை க்ஷத்திரியனின் குணங்கள்."

'பூமியை உழுவதும், கால் நடைகளைக் காப்பாற்றுவதும், வியாபாரம் செய்வதும் வைசியனின் கடமையாகும்.' -எட்வின் அர்னால்டு.

"சமூகத்திற்குத் தொண்டு செய்வதே சூத்திரனின் கடமை. இதிலிருந்து ஒரு பிரிவினருக்கு மற்றொரு பிரிவினரின் குணங்கள் இருக்கக் கூடாது என்றோ, அந்த குணங்களை அவர் பயிற்சி செய்து கொள்ளக் கூடாது என்றோ அர்த்தமில்லை. ஆனால், மேலே குறிப்பிட்ட குணங்களும் வேலையும் ஒரு மனிதன் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன் என்பதை அறிந்து கொள்வதற்கான அடையாளங்களேயாகும். ஒவ்வொரு சாதியின் குணங்களையும் கடமைகளையும் நன்கு அறிந்து கொண்டால், அவர்களிடையே விரும்பத்தகாத போட்டியோ அல்லது துவேஷ உணர்ச்சியோ இருப்பதற்கில்லை. அவர்களிடையே உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேச்சிற்கும் இடமில்லை. ஆனால், ஒவ்வொருவனும் அவனவன் இயல்புக்குத் தகுந்தவாறு சுயநலன் எதுவுமின்றி தன் கடமையைச் செய்வானாயின், அவன் குற்றம் குறையற்ற நிறைநிலையை அடைவான். எனவே, ஒருவனுடைய சொந்தக் கடமை பலனற்றதாகத் தோன்றலாம்; மற்றொருவனின் கடமை எளிதாக இருப்பது போல் தோன்றலாம். அவ்விதம் இருப்பினும், ஒவ்வொருவனும் தனக்கு விதிக்கப்பட்டுள்ள சொந்தக் கடமையைச் செய்வதே மேலானதாகும். ஒருவன் தனக்கு இயற்கையாக விதிக்கப்பட்டுள்ள கடமையைச் செய்யும்போது அவன் பாவத்திலிருந்து விடுபட்டவனாக இருக்கிறான். ஏனெனில், அவனுக்கு அப்போது சுயநல ஆசைகள் எதுவும் இருப்பதில்லை. வேறு ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆசை கூட சுயநல நோக்கம் காரணமாகவே எழுகின்றது. தீயை புகை மறைப்பது போல், இயல்புக்கு முரணான எல்லா நடவடிக்கைகளும் குற்றம் குறைகளால் மறைக்கப்படுகின்றன.

ஆனால், பலனில் ஆசையின்றி இயல்பான கடமையைச் செய்யும் போது, அது நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை.

''தனது சொந்தக் கடமையைச் செய்வதன் மூலம் சாந்த முள்ள ஒரு யோகி புனிதத் தன்மையை அடைகிறான். அவனது மனம் அவனிடம் கட்டுப்பட்டதாக இருக்கிறது. ஐந்து புலன் களுக்குக் காரணமாக உள்ள பொருட்களை அவன் விட்டுவிடு கிறான்; அவன் விருப்பு, வெறுப்புகளை வென்றவனாக இருக்கிறான். அவன் தனிமையில் வாழ்கின்றான், அதாவது அவனது கண்கள் உள்நோக்கிய வண்ணமாக இருக்கின்றன. இச்சைகளை அடக்கு வதன் மூலம் அவன் தன் மனம், உடல், பேச்சு ஆகியவற்றை அடக்கி ஆள்பவனாக இருக்கிறான். கடவுள் அருகில் இருப்பதை அவன் எப்போதும் உணர்கிறான் அகந்தை, ஆசை, கோபம், சம் பாதிக்கும் ஆர்வம் போன்றவைகளை அவன் விட்டுவிடுகிறான். அத்தகைய விசேஷ குணங்கள் உள்ள யோகிதான் பிரம்மத் துடன் ஐக்கியம் அடைவதற்குத் தகுதி வாய்ந்தவன். அவன் எல்லோரையும் சமமாகக் கருதுகிறான். அவன் பெருமகிழ்ச்சி அடைவதும் இல்லை; துக்கத்தில் ஆழ்ந்து விடுவதும் இல்லை. அத்தகைய ஒரு பக்தன்தான் கடவுளை உண்மையாக அறிந்து கொண்டு அவரிடத்தில் ஒன்றுபட்டுவிடுகிறான். அவ்வாறாக என்னிடம் சரண் அடைந்து அழிவற்ற நிரந்தரமான இடத்தைப் பெறுகிறான்.

''ஆகையால், உன்னிடம் உள்ள எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு. உன்னுடைய பக்தியின் மகோன்னத மான லட்சியமாக என்னை எண்ணிக்கொள். உன்னுடைய மனத்தை என்மீது லயிக்கும்படி செய். இதைச் செய்தால் எல்லாக் கஷ்டங்களையும் நீ தாண்டிவிடுவாய். ஆனால், அகந்தை கொண்டு நீ, நான் கூறுவதற்கு செவி கொடுக்காவிடில் அழிந்து விடுவாய். ஒரு முக்கியமான விஷயம் என்னவெனில், முரண் பாடான கருத்துகளை யெல்லாம் விட்டுவிட்டு, பாதுகாப்பை மாத்திரமே நீ நாடவேண்டும். அவ்விதம் நாடினால், நீ பாவத்தி லிருந்து விடுதலை பெறுவாய்.

"பக்தனாக இல்லாத, வாழ்க்கையில் தவம் இல்லாத, என்னை வெறுக்கும் யாரிடமும் இந்த உண்மையை நீ சொல்லாதே. இதைக் கேட்க விரும்பாதவனிடமும் இதைச் சொல்லாதே. ஆனால், என் பக்தர்களிடம் இந்த மகத்தான ரகசியத்தை யார் கூறுகிறானோ, அவன் தன் பக்தியினால் என்னை வந்தடைகிறான்."

அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த சம்பாஷணையை திருதராஷ்டிரனிடம் சஞ்சயன் அறிவித்தபின் இவ்விதம் கூறினான்: ''யோகீசுவரனான கிருஷ்ணன் எங்கே இருக்கிறாரோ, அர்ஜுனன் தன் வில்லுடனும் அம்புகளுடனும் எங்கே இருக் கிறானோ, அங்கே லட்சுமி கடாட்சமும், சுபிட்சமும், வெற்றியும், இன்பமும், தருமமும், நீதியும் இருக்கும்.''

இங்கே கிருஷ்ணனை யோகத்தின் மன்னன் (யோகீசுவரன்) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆன்ம அனுபவத்தை அடிப்படையாகக்கொண்ட தூய்மையான ஞானம் என்பதே இதன் அர்த்தமாகும். இங்கே அர்ஜுனனை வில்லாளி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது, உண்மையான ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு தன் கடமையைச் செய்பவனின் தருமத்திற்கும் நீதிக்கும் முரணில்லாத ஆசைகள் யாவும் நிறைவேறுகின்றன என்பதே இதன் பொருளாகும்.

பகுதி நான்கு

# கிருஷ்ண பகவானின் மகிமை

## 1

## அகிம்சையே உருவான அவதார மூர்த்தி

சரித்திர புருஷரான கிருஷ்ணனை கீதாச்சாரியரான கிருஷ்ணனுடன் நாம் குழப்பக்கூடாது. கீதாச்சாரியரான கிருஷ்ணன், பலாத்காரத்தையும் அகிம்சையையும் பற்றி அர்ஜுனனுடன் விவாதிக்கவில்லை. பொதுவாக விரோதிகளைக் கொல்லுவதை அர்ஜுனன் வெறுக்கவில்லை. ஆனால், தன் உறவினர்களைக் கொல்ல வேண்டியிருக்கிறதே என்று மாத்திரமே அவன் வேதனை அடைந்தான். ஒருவன் தனது கடமையைச் செய்யும் போது, உறவினர் என்றும், மற்றவர்கள் என்றும் வேற்றுமை பாராட்டக் கூடாது என்று கிருஷ்ணன் கூறினார். கீதை ஏற்பட்ட காலத்தில், யுத்தம் செய்வதா, வேண்டாமா என்ற பிரச்னையை முக்கிய ஸ்தானத்தில் இருந்த எவரும் எழுப்பவில்லை. சமீப காலத்தில் தான் அப்பிரச்னை எழுந்திருப்பதாகத் தோன்றுகிறது. அந்த நாட்களில் ஹிந்துக்கள் யாவரும் அகிம்சையில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஆனால், எது இம்சை, எது அகிம்சை என்பது பற்றியே அப்போது விவாதம் நடந்தது, இப்போதும் விவாதம் நடந்து வருகிறது. இன்று அகிம்சையானவை என்று நாம் எண்ணும் பல விஷயங்களையும், இம்சையானவை என்று எதிர் கால சந்ததிகள் நினைக்கலாம். ஏனெனில், நாம் பாலையோ அல்லது தானியங்களையோ உணவாக உபயோகிக்கும்போது, நாம் உயிர்ப் பிராணிகளை அழிக்கிறோம். எனவே, நமது சந்ததிகள் பால் உற்பத்தியையும், உணவு தானியங்களைப் பயிர் செய்வதையும் விட்டுவிடலாம். இப்போது நாம் பாலையும் உணவு தானியங்களையும் உட்கொண்டு வந்தாலும் கூட, நம்மை நாம் அகிம்சைவாதிகள் என்றே கருதுகிறோம். அதுபோலவே, கீதை தோன்றிய யுகத்தில், யுத்தமானது சர்வ சாதாரணமான நிகழ்ச்சியாக இருந்தது. எனவே, அதை அகிம்சைக்கு முரணானது என்று யாரும் கருதவில்லை. ஆகையால், கீதையில் யுத்தம் உவமையாகக் கூறப்பட்டிருப்பதில் தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனினும், கீதை முழுவதையும் நாம் ஆராய்ச்சி செய்தால், ஸ்திதப்ரக்ஞன், பிரம்மபூதன், பக்தன்,

யோகி முதலியோரைப் பற்றி அதில் உள்ள வர்ணனைகளை நாம் பரிசீலனை செய்தால், நாம் கீழ்க்கண்ட ஒரே முடிவிற்குத்தான் வரமுடியும்: கீதையை உபதேசித்த கிருஷ்ணன் அகிம்சையே உருவான அவதார மூர்த்தி. யுத்தம் செய்ய வேண்டுமென அவர் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்ததன் காரணமாக அவரது பெருமை எள்ளளவும் குன்றிவிடவில்லை. அதற்கு மாறாக, கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு வேறுவிதமான ஆலோசனை கூறியிருந்தால், அவரது ஞானம் பூரணமானது அல்ல என்று ருஜுவாகியிருக்கும். யோகீசுவரன் (யோகிகளுக் கெல்லாம் மன்னன்) என்ற புகழுக்கு அவர் உரிமையற்றவராகி இருப்பார். என்னுடைய 'அனாஸக்தியோக'த்தில் நீங்கள் இதை யெல்லாம் விவரமாகக் காணலாம். (28-4-1932)

## 2

# கிருஷ்ணன் ஒரு பூரண அவதாரம்

பலாத்கார யுத்தத்தை கிருஷ்ணன் எப்படி ஆதரிக்க முடியும்? கீதையில் ஈடுபாடுள்ள ஒரு பெண்மணி கேட்ட அந்தக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: கீதையை நாம் ஆராய்ச்சி செய்யும்போது, ஒரு முக்கிய விஷயத்தைக் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பதில் அளிக்கப்பட வேண்டிய கேள்வி என்ன என்பதையே நாம் கவனிக்க வேண்டும். ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும் ஆசிரியர், கேள்வியின் தன்மையை அறிந்துகொள்ளாமல் அதன் எல்லைக்கு அப்பால் செல்லுவாராயின், அவரை மந்த புத்தியுள்ளவர் என்றே கருதவேண்டியிருக்கும். ஏனெனில், கேள்வி கேட்போரின் கவனம் முழுவதும் அவரது கேள்வியில் லயித்திருக்கிறது. அவர், தாம் புரிந்துகொள்ளவோ அல்லது பாராட்டவோ இயலாத வேறு விஷயங்களுக்குச் செவி கொடுக்கத் தயாராக இல்லை. இதை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிப்போமாயின், கிருஷ்ணன் அளித்த விடைதான் குற்றம் குறையற்ற சரியான விடையாகும். கீதையின் முதல் அத்தியாயத்தை முடித்துக் கொண்டு நாம் இரண்டாவது அத்தியாயத்திற்கு வரும்போது, அது தூய்மையான, அப்பழுக்கு அற்ற அகிம்சையை உபதேசிக்கின்றது என்பதைக் காண்கிறோம். கிருஷ்ணனை பூர்ண அவதாரமாகக் கருதவேண்டும் என்பதன் சம்பந்தமான எல்லாக் கேள்விகளுக்கும் நேரடியான பதில்களை, கீதையிலிருந்து நாம் பெறுகிறோம் என்று அர்த்தமில்லை. சொற்களின் பொருளை அறிந்து கொள்ள அகராதியைப் பார்ப்பது போல, தினசரி எழும் கேள்விகளுக்கெல்லாம் நேரடியான பதில்களை கீதையில் காண்பதற்கில்லை. அது சாத்தியமானதாக இருந்தால் கூட, அது விரும்பத்தக்கதல்ல. ஏனெனில், நேரடியான பதில்கள் நமக்குத் தெரிந்து

விடுமாயின், பின்னர் மனித வர்க்கத்தின் முன்னேற்றத்திற்கோ, அல்லது புதிய விஷயங்களைக் கண்டு பிடிப்பதற்கோ இடம் இராமற்போய்விடும். பிறகு மனித அறிவை உபயோகிப்பதற்கு இடமின்றி, அது காய்ந்து கருகிவிடும். எனவே, ஒவ்வொரு தலைமுறையிலும் எழும் பிரச்னைகளை அந்தந்தத் தலைமுறையில் உள்ள மக்கள் தங்கள் சொந்த முயற்சியினால் தீர்த்துக்கொள்ள வேண்டும். தற்போது உலக யுத்தங்களைப் போன்ற நமது கஷ்டங்களை, கீதையிலிருந்தும், அதுபோன்ற மற்ற நூல்களிலிருந்தும் நாம் அறிந்துகொள்ளும் பொதுவான கொள்கைகளை அனுசரிப்பதன் மூலம் சமாளிக்க வேண்டும். எனினும், அந்த நூல்கள் ஓரளவு மாத்திரமே நமக்கு உதவியாக இருக்க முடியும். நம்முடைய சொந்த முயற்சிகளினாலும் போராட்டங்களினாலுமே நமக்கு உண்மையான உதவி கிடைக்க முடியும்.

இந்திய ஔஷத சம்பந்தமான நூல்களில், பல்வேறு மருந்துச் சரக்குகளுக்கும் உள்ள பல்வேறு குண விசேஷங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. எனினும் அவற்றை எவ்வாறு உபயோகிப்பது என்பதைப் பற்றிய விவரங்கள் நமக்கு ஒரு வழிகாட்டியாக மாத்திரமே இருக்க முடியும். அந்த மருந்துச் சரக்குகள் நடைமுறையில் சோதனை செய்துபார்க்கப் பட்டாலன்றி, அவற்றைப் பற்றிய ஏட்டு அறிவினால் மாத்திரம் நமக்கு எவ்வித பலனும் ஏற்படாததுடன், அது ஒரு சுமையாகி விடவும் கூடும். வாழ்க்கையில் தீர்க்கப்பட வேண்டிய பல பிரச்னைகளைப் பற்றியும் கூட அதுதான் உண்மையாகும். (*10-5-1932*)

## 3

# அன்பரின் அங்கலாய்ப்பு

ஒவ்வொரு நாளும் கீதையை வாசிப்பது, சுவையற்றதாகவும் 'சப்'பென்றும் இருப்பதாக ஓர் அன்பர் காந்திஜியிடம் அங்கலாய்த்துக் கொண்டார். அவருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: நீங்கள் கீதையில் வாசித்ததைச் சிந்தனை செய்வதில்லை. அதனால்தான் அது சுவையற்றதாக உங்களுக்குத் தோன்றுகிறது. நம்முடைய தாய் நமக்கு வழிகாட்டியாக இருந்து நம்மை நடத்திச் செல்லுகிறாள் என்ற எண்ணத்துடன் நீங்கள் அதை வாசித்தால், அது சுவையற்றதாக உங்களுக்குத் தோன்றாது. தினசரி அதை நீங்கள் பாராயணம் செய்தபின், அதைப்பற்றி ஒரு நிமிடம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அப்போதுதான் நீங்கள் அதில் புதிதாக சில விஷயங்களைக் காண முடியும். குற்றம் குறையற்ற பரிபூரணமான ஒரு மனிதன் தான் அதிலிருந்து எதுவும் தெரிந்து கொள்ளுவதற்கில்லை. ஒவ்வொரு நாளும் தவறு செய்வோருக்கு, கீதைதான் பாதுகாப்பு

அளிக்க முடியும். அப்போது அவருக்கு கீதையில் சுவிப்பே ஏற்படாது. (*16-5-1932*)

## 4

## பக்தனுக்கு ஒன்றுதான் தேவை

கீதையில் *18*-ஆவது அத்தியாயம் *57*-ஆம் சுலோகத்தில் ‘மத்பர:’ (मत्पर:) அதாவது ‘என்னிடம் முழு மனத்தையும் செலுத்தி’ என்று பகவான் கூறியிருக்கிறார். அதற்கு என்ன அர்த்தம் என்று பிரபுதாஸ், காந்திஜியைக் கேட்டிருந்தார். அவருக்குப் புரியாத மற்றும் சில விஷயங்களைப்பற்றியும் காந்திஜியைக் கேட்டிருந்தார். “கடவுள் சத்தியமாயின், அதை எந்த சின்னத்தில் மனிதன் வணங்க வேண்டும்? அவன் ராம நாமத்தை ஜபிக்கலாம் என்றால், ராமன் யார்?'' என்றும் பிரபுதாஸ் கேட்டிருந்தார். அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: ‘‘பக்தனுக்குத் தேவையாக இருப்பது நான் ஒருவன்தான்'' என்று பகவான் கூறுவதன் பொருள் என்னவெனில், பக்தனுக்குத் தேவையாக இருப்பது சத்தியம் ஒன்றுதான் என்பதேயாகும்.

**चरणपद्मे ममचित्त निष्पन्दित करो हे।**

**சரணபத்மே மமசித்த நிஷ்பந்தித கரோ ஹே।** *

இவ்விதமாக, சத்தியத்திற்கு கவி ஓர் உருவம் கொடுத்துள்ளார். தாமரை போன்ற சத்திய நாராயணனின் (சத்தியமாகிய கடவுள்) பாதங்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார். (*20-5-1932*)

## 5

## விக்கிரக வழிபாடும் அவதாரங்களும்

கீதையின் *7*-ஆவது அத்தியாயம், *24*-ஆம் சுலோகம் பின்வருமாறு :

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धय:।**

**அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய:।**

அதாவது “வெளிப்படையாகத் தெரியாத என்னை, பிரத்தியட்ச உருவம் உடையவன் என்று அறியாதவர்கள் எண்ணுகின்றனர்.”

---

* மேற்கண்ட வாக்கியத்தின் பொருள் : ‘இறைவனின் பாத தாமரைகளில் என் மனம் அசையாமல் நிலைத்திருக்கும்படி செய்ய வேண்டும்.’

கீதையின் 12-ஆம் அத்தியாயம், 5-ஆவது சுலோகம் பின்வருமாறு :

क्लेशोऽधिकतरस्तेषां अव्यक्ता सक्त चेतसां।

க்லேசோ (அ)திகதரஸ்தேஷாம் அவ்யக்தா ஸக்த சேதஸாம்।

"புலன்களுக்கு எட்டாத நிர்க்குண பிரம்மமான என்னிடம் பக்திகொண்டுள்ளவர்கள் அதிகமான கஷ்டத்திற்கு உள்ளாக வேண்டியிருக்கிறது."

கீதையில் உள்ள மேற்கண்ட முரண்பாட்டை ஸ்ரீ மகாதேவ தேசாய் காந்திஜியிடம் சுட்டிக் காட்டினார். அவ்விஷயமாக காந்திஜி கூறியதாவது :—

"இவ்விதமாக, வெளிப்படையாகத் தெரியும் உருவத்தையே உபாசனை செய்ய வேண்டும் என்று கூறும் சுலோகங்கள் கீதையில் உள்ளன. கீதையில் பலவிடங்களிலும் இத்தகைய முரண்பாட்டைக் காண்கிறோம். எனினும், ஒரு காலத்தில் ஒன்றும், மற்றொரு காலத்தில் மற்றொன்றும் வற்புறுத்தப்பட்டிருக்கின்றன என்று கூறுவதன் மூலம் அந்த முரண்பாட்டைத் தீர்த்துக் கொள்ள முடியும். ஆனால், வெளிப்படையாகத் தெரியாத அதாவது நிர்க்குண பிரம்மத்தை உபாசனை செய்யக் கூடாது என்று 12-ஆவது அத்தியாயம் கூறவில்லை; அவ்விதம் உபாசிப்பது அதிகக் கஷ்டமாகும் என்றுதான் கூறுகிறது."

ஸ்ரீ மகாதேவ தேசாய் : "ஆனால், நீங்கள் பாவுக்கு எழுதியுள்ள கடிதத்தில், வெளிப்படையான உருவத்தின் ஸ்தானத்தில் வெளிப்படையாகத் தெரியாததையே உபாசிக்கும்படி அவரைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே?"

காந்திஜி : "ஆமாம். ஜீவதசையுடன் இருக்கும் ஒருவரை தியானம் செய்வது ஒழுங்கற்றது என்பதற்காகவே அவருக்கு நான் அவ்விதம் எழுதி யிருக்கிறேன். ஏனெனில், ஜீவதசையுடன் இருப்பவர்கள் ஒருபோதும் குற்றம் குறையற்ற பரிபூரண நிலையை அடைய முடியாது. கீதையில் விக்கிரக வழிபாடு குறிப்பிடப்பட்டிருக்கிறது எனில், அந்த உருவங்கள் கடவுளின் அவதாரங்களாகவே இருக்கவேண்டும்."

ஸ்ரீ மகாதேவ தேசாய் : "அப்படியாயின் அவதார மூர்த்திகள் யார்?"

காந்திஜி : "அவர்களுடைய உண்மையான உருவங்கள் நம்மிடத்தில் இல்லை. அதனால்தான், நமது கற்பனையில் தோன்றும் அவதாரங்களை வழிபடலாம் என்று நான் கூறுகிறேன். உதாரணமாக, ரவி வர்மாவின் படங்களில் ஒன்றை தியானம் செய்யக் கூடாது என்று கூறும் அளவுக்கு நான் போகமாட்டேன். இவையெல்லாம் கடவுளை வழிபடும் பக்தர்களின் மன நிலையைப் பொறுத்தவை." (2-6-1932)

## 6

# குணங்களுக்கு உருவம் கொடுத்துள்ளார்

கீதையின் முதலாவது அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ள பெயர்கள் யாவும் நபர்களைக் குறிக்கும் பெயர்கள் அல்ல என்பதும், குணங்களைக் குறிக்கும் பெயர்கள் என்பதுமே எனது அபிப்பிராயமாகும். தெய்விக குணங்களுக்கும் பைசாச குணங்களுக்கும் நடைபெற்றுவரும் நிரந்தரமான போராட்டத்தை வர்ணித்துள்ள கவி, மகாபாரதத்தில் உள்ள பாத்திரங்களாக அந்த குணங்களுக்கு உருவம் கொடுத்துள்ளார். எனினும் இதிலிருந்து, ஹஸ்தினபுரத்தில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் உண்மையான யுத்தம் நடக்கவில்லை என்று மறுப்பதாக அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. அங்கே நிகழ்ந்திருக்கக் கூடிய அத்தகைய ஏதோ ஒரு சம்பவத்தை நூலாக வைத்துக் கொண்டு கவி தமது பாமாலையைத் தொடுத்திருப்பதாக எண்ணுகிறேன். ஒருவேளை நான் இவ்விதம் கூறுவது தவறாகவும் இருக்கலாம். மேலும், அதில் கொடுக்கப்பட்டுள்ள எல்லாப் பெயர்களும் உண்மையான சரித்திர பாத்திரங்களின் பெயர்களாக இருக்குமாயின், அவற்றை அடிப்படையாகக்கொண்டு கவி கீதையை ஆரம்பித்திருப்பதில் தவறு எதுவும் இல்லை. கீதையில் அடங்கியுள்ள விஷயத்திற்கு முதலாவது அத்தியாயம் முக்கியமானதால், அதையும் கீதையின் ஓர் அம்சமாகப் பாராயணம் செய்ய வேண்டும்.

*(18-6-1932)*

## 7

# ரயிலில் கீதை பாராயணம்

இன்று காலையில் நடந்த பிரார்த்தனையின்போது கீதையின் 11-ஆவது அத்தியாயம் பாராயணம் செய்யப்பட்டது. பிரார்த்தனை முடிந்ததும் காந்திஜி கூறியதாவது :

கிறிஸ்தவ மதத்திற்கு என்னை மாற்றுவதற்காக ஸ்ரீ பேக்கர் என்னை வெல்லிங்டன் (தென்னாப்பிரிக்கா) கன்வென்ஷனுக்கு அழைத்துச் சென்ற சம்பவம் இப்போது என் நினைவுக்கு வருகிறது. கிறிஸ்தவ சமயத்தைப்பற்றி அவர் அடிக்கடி என்னுடன் விவாதிப்பது வழக்கம். 'எனக்கு கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கை உண்டாகும்படி செய்யுங்கள்' என்று அவரிடம் நான்

கூறுவேன். என் மனத்தை மாற்ற அவர் செய்யும் முயற்சிக்கு நான் உட்பட விரும்புவதாகவும் அவரிடம் கூறினேன். அதன் மீது அவர் கிறிஸ்தவர் கன்வென்ஷனுக்கு வரும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். கிறிஸ்தவ சமயத்தின் உண்மையில் எனக்குத் திருப்தி ஏற்படும்படி செய்யக் கூடிய நிபுணர்களை அங்கே நான் சந்திக்கலாம் என்றும் அவர் கூறினர். நான் சென்ற ரயில் வண்டி முழுவதையும் வெள்ளையர்களே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். எனவே நான் மேல் 'பர்த்தி'லேயே படுத்துக்கொள்ள நேர்ந்தது. காலையில், என்னைக் கீழே இறங்கி வந்து வண்டியின் ஜன்னலுக்கு வெளியே தெரியும் அற்புதமான இயற்கைக் காட்சிகளையும், சூரியோதயத்தின் அழகையும் கண்டு களிக்கும்படி அவர்கள் என்னை அழைத்தனர். ஆனல், அவர்களுடைய முயற்சி பலிக்கவில்லை. அப்போது நான் கீதை யின் 11-ஆவது அத்தியாயத்தைப் பாராயணம் செய்துகொண் டிருந்தேன். நான் வாசித்துக்கொண்டிருப்பது என்ன புத்தகம் என்று பேக்கர் என்னைக் கேட்டார். 'கீதை' என்று நான் பதில் அளித்தேன். பைபிளை வாசிப்பதற்குப் பதிலாக நான் கீதையை வாசித்துக்கொண்டிருந்ததால், அவர் என்னை ஒரு முட்டாள் என்று எண்ணியிருக்க வேண்டும். எனினும், அவர் என்ன செய்ய முடியும்? கிறிஸ்தவ மதத்திற்கு மாறும்படி என்னை வற்புறுத்தும் நோக்கம் அவருக்கு இல்லை. கன்வென்ஷனில் எனக்காக விசேஷ பிரார்த்தனையும் நடந்தது. எனினும், நான் போனபடியே யாதொரு மாறுதலுமின்றி திரும்பிவந்து சேர்ந்தேன்! *(19-6-1932)*

## 8

# கற்பனைக் கேள்விகள் பலனற்றவை

ஓர் அன்பருக்கு காந்திஜி எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார் :

"சிற்சில சமயங்களில் கற்பனையான கேள்விகளைக் கேட்க லாம். எனினும், அத்தகைய கேள்விகள் கேட்பதைக் தவிர்ப் பதே சிறந்தது. க்ஷேத்திர கணித மாணவர் ஒருவர் தான் முயற்சி செய்து பார்க்காமல், அந்த கணித சம்பந்தமான கேள்விகளுக்கு விடைகளைத் தெரிந்துகொள்ள அவரது உபாத்தியாயரையே நம்பிக்கொண்டிருப்பாராயின், அவர் அக்கணிதத்தில் தேர்ச்சி பெறமுடியாது. கற்பனையான கேள்விகள் கேட்போரின் நிலையும் அப்படித்தான். அறநூல் சம்பந்தமான விஷயங்களை யொட்டி. கற்பனைக் கேள்விகளுக்கு இடமே இருக்கமுடியாது. உண்மையான வாழ்க்கை நிலைக்கும் கற்பனைக் கேள்விக்கும் சிறிதும் பொருத்தம் இருக்க முடியாது. அதனல்தான், கற்பனையிலிருந்து எழும் நிலைமைகளைச் சமாளிப்பதற்காக

கற்பனைக் கேள்விகளைக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டாம் என்று உங்களை நான் எச்சரித்தேன். ஏனெனில், அத்தகைய கேள்விகளுக்கான விடைகளைக்கொண்டு, உண்மையிலேயே ஏற்படும் பிரச்னைகளைச் சமாளிப்பது முடியாத காரியம். அதற்கு மாருக அந்த விடைகள், உண்மையான பிரச்னைகளைச் சமாளிப்பதற்கு உதவியாக இராததுடன், முட்டுக் கட்டைகளாகவும் அமைந்துவிடும். அத்தகைய பரிகார முறைகளை நாடுவோர் சுயமாக சிந்திக்க முடியாதவர்களாகி விடுவார்கள். எனவே, மூலாதாரமான கொள்கையை அரைகுறையின்றி பூரணமாக அறிந்து கொள்ளுவதே சிறந்ததாகும். அக்கொள்கையை நடைமுறையில் அனுஷ்டிப்பதில் நாம் தவறுகள் செய்துவிடலாம். எனினும், அதைக் குறித்து கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. எதையும் கற்றுக்கொள்ளுவதற்கான நேரான வழி அதுதான். அதற்கு மாருக, கற்பனைப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான முறைகளைத் தயாராக வைத்திருப்போர், சுய நம்பிக்கையை முற்றிலும் இழந்துவிடுகிருர்கள். அதுபோன்ற ஏதாவதொரு அனுபவம் தான், கீதையின் ஆசிரியரை 10-ஆவது அத்தியாயத்தில் உள்ள 10-ஆவது சுலோகத்தை* எழுதும்படி தூண்டியிருக்க வேண்டும். அதாவது, அன்புடனும் இடைவிடாத பக்தியுடனும் தம்மை வழிபடும் பக்தனுக்கு, நெருக்கடியான நிலைமை ஏற்படும்போது ஒழுங்கான வழியைக் காட்டுவதாக அந்த சுலோகத்தில் பகவான் நமக்கு உறுதி கூறுகிருர். அந்த சுலோகத்தில் 'பகவான்' என்ற சொல்லுக்குப் பதிலாக நீங்கள் 'சத்தியம்' என்ற சொல்லை உபயோகிப்பீர்களாயின், அந்த சுலோகத்தின் அர்த்தம் இன்னும் அதிகத் தெளிவாக இருக்கும். எனவே நீங்கள் பல்வேறு பிரச்னைகளையும் கற்பனை செய்துகொள்ளுவதை நான் ஆதரிக்க முடியாது. அவ்விதம் செய்வதால், உங்களுக்குத் தீங்கே ஏற்படும்.''

*(3-7-1932)*

---

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्।

ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥१०.

தேஷாம் ஸதத யுக்தானும் பஜதாம் ப்ரீதி பூர்வகம் |

ததாமி புத்தி யோகம் தம் யேன மாம் உபயாந்தி தே ||

கீதை, அத்தியாயம்–10, சுலோகம்–10.

இதன் பொருள்: எப்போதும் பக்தி யோகத்தில் ஈடுபட்டிருப்பவர்களும், உண்மையான அன்புடன் வழிபடுகிறவர்களுமான அவர்களுக்கு நான் புத்தி யோகத்தைக் கொடுக்கிறேன். அதன்மூலம் அவர்கள் என்னை வந்து அடைகிருர்கள்.

# 9

# பற்றுதல், ஆசை, கோபம்

சத்தியம்தான் கடவுள் என்று காந்திஜி கூறுகிறார். இதே கருத்தை 'இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்' என்ற நூலில் நான் கண்டேன்.

தாமஸ் கெம்பிஸ்* குறிப்பிட்டுள்ள கருத்துக்களைக் கவனிக்கும்போது, அவர் கீதையிலிருந்தே அவற்றை எடுத்துக்கொண்டிருக்கவேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது. அவர் "இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்" என்ற தமது நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்:

"ஒருவனுக்கு எந்தப் பொருளிலாவது பேராசை ஏற்பட்டுவிடுமாயின், அவன் உடனடியாக மன அமைதியை இழந்துவிடுகிறான். அதில் யாராவது குறுக்கிட்டால் அவனுக்கு எளிதில் கோபம் ஏற்பட்டுவிடுகிறது. அவன் தன் பேராசையை நிறைவேற்றிக் கொள்வானாயின், உடனடியாக அவனது மனச் சாட்சி அவனைத் துன்புறுத்தத் தொடங்குகிறது. அவனது வெறிக் குணத்தைப் பின்பற்றுவதன் மூலம் அவனுக்கு யாதொரு உதவியும் கிடைப்பதில்லை. அவன் எதிர்பார்த்த மன அமைதியும் அவனுக்கு உண்டாவதில்லை. வெறிக் குணங்களுக்கு உட்படுவதன் மூலம் அல்ல, அவற்றை எதிர்த்து சமாளிப்பதன் மூலம் தான், ஒருவன் உண்மையான மன அமைதியைப் பெறமுடியும். உடல் அபிமானமுள்ள, சிற்றின்பத்தில் விருப்பம் உள்ள மனிதனின் உள்ளத்திலோ அல்லது வெளிப் பொருட்களில் பற்றுள்ள மனிதனின் உள்ளத்திலோ அமைதி ஏற்பட முடியாது. பக்தியும் ஆன்மிகத் துறையில் ஈடுபாடும் உள்ளவனின் உள்ளத்தில்தான் அமைதி உண்டாக முடியும்."

உதாரணமாக, இந்தக் கருத்தை கீதையின் 2-ஆவது அத்தியாயம், 62-ஆம் சுலோகத்துடன் (த்யாயதோ விஷயான்...)† ஒப்பிட்டுப்பாருங்கள்.

*4-7-1932* —ஸ்ரீ மகாதேவ தேசாய்.

---

* தாமஸ் கெம்பிஸ் (1380—1471) ஒரு ஜெர்மன் ஞானியாவார். அவர் அநேகமாக வாழ்க்கை முழுவதும் ஒரு கிறிஸ்தவ மடத்தில் சந்நியாசியாகவே கழித்தார். அவர் எழுதிய "The Imitation of Christ" என்ற அரிய அற நூல் உலகில் உள்ள பெரும்பாலான பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

† ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते॥

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்தே ஷூபஜாயதே |
ஸங்காத் ஸஞ்சாயதே காம: காமாத் க்ரோதோ(அ)பிஜாயதே ||

கீதை, அத்தியாயம்-2, சுலோகம்-62.

இதன் பொருள்: இந்திரிய விஷயங்களையே நினைத்துக்கொண்டிருப்பவனுக்கு, அவற்றில் பற்றுதல் உண்டாகிறது. பற்றுதலிலிருந்து ஆசை ஏற்படுகிறது. ஆசையிலிருந்து கோபம் வளர்கிறது.

## 10

# மன அமைதியும் உறுதியும்

காந்திஜி ஓர் அன்பருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார் :

தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளுவதோ அல்லது மக்களையோ, உலகத்தையோ ஏமாற்றுவதோ மிகவும் ஆட்சேபிக்கத் தக்கது. ஆகையால் அதற்கு நீங்கள் சிறிதும் இடம் கொடுக்காமல் இருந்தால், எல்லாம் சீராகிவிடும். சென்ற பல ஆண்டுகளாக முரண்பாடான கொள்கைகளால் நீங்கள் ஆட்டி அலைக்கழிக்கப்பட்டு வந்திருக்கிறீர்கள். ஆகையால் முரண்பாடான அக்கொள்கைகளை உதறித் தள்ளுங்கள். பொறுமையுடன் யோசித்து ஒரு முடிவிற்கு வருவீர்களாயின், அது உங்களுக்கு மன அமைதியைக் கொடுக்கும். கீதை உபதேசிப்பது இதுதான் :

**வ்யவஸாயாத்மிகா புத்தி : ஏகேஹ குரு நந்தன***

இதையும், இதற்கு அடுத்துள்ள சுலோகங்களையும் அக்கறையுடன் வாசியுங்கள். இப்போது நீங்கள் இவ்விஷயத்தைப் பற்றி இன்னும் தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

## 11

# ஆயுதப் போர் பலனற்றது

சாதாரண கொள்ளைக்காரனிடம் அர்ஜுனன் தோல்வியடைந்தான். மகாபாரதப் போரில் வெற்றியடைந்தவர்களின் வாழ்வு இமயமலைப் பனியில் முடிவடைந்தது. ஆயுதப்போர் பலனற்றது என்பதைக் காட்டவே மகாபாரதத்தின் ஆசிரியர் அச்சம்பவங்களைக் குறிப்பிட்டுள்ளார். கீதையில் பகவான் தம்மைப் பற்றிய வர்ணனையைக் கொடுத்துள்ளார். அதாவது பகவான் கூறுவதைப்போல் கீதையின் ஆசிரியர் அதைக் குறிப்

---

* व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥

வ்யவ ஸாயா த்மிகா புத்தி : ஏகேஹ குருநந்தன ।
பஹு சாகா ஹ்யனந்தாச்ச புத்தயோ(அ) வ்யவஸாயினாம் ॥

கீதை, அத்தியாயம்-2, சுலோகம்-41

இந்த சுலோகத்தின் பொருள் : இந்த யோகத்தில் உறுதிகொண்டவனுக்கு நிச்சயமான ஒரே புத்தி இருக்கும். உறுதியில்லாதவர்களின் புத்தி பல கிளைகளுடையதாகவும், பலவகைப்பட்டதாகவும், நிச்சயமற்றதாகவும் இருக்கும்.

பிட்டுள்ளார். ஆனால் உண்மை என்னவெனில், பகவானுக்கு உருவம் இல்லை; அவர் மனிதனைப்போல் ஒருபோதும் பேசுவதில்லை. அப்படியாயின் ஒரு கேள்வி எழுகிறது. "அத்தகைய பிரசங்கங்களை பகவான் செய்ததாகக் கூறுவது ஒழுங்காகுமா?" 'ஆம்' என்பதே இந்தக் கேள்விக்கு எனது விடையாகும். பகவான் எல்லாம் வல்லவர், எங்கும் நிறைந்தவர். எங்கும் நிறைந்த ஒருவரின் பிரசங்கமானது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். எனவே, அதை தற்பெருமை என்று கூறமுடியாது. அதைப் போல் ஒரு சாதாரண மனிதன் தனது சக்திகளை எடுத்துக் கூற முடியாது. அவன் அவ்விதம் கூறுவது சிறிதும் பொருத்தமற்றதாக இருக்கும். சந்தர்ப்பம் ஏற்படும்போது, ஒரு மனிதன் தன்னுடைய உயரம் எத்தனை அடி, எத்தனை அங்குலம் என்பதைக் கூறலாம். அப்போது அவன் தற்பெருமையாக அவ்விதம் கூறுவதாக நினைப்பதற்கில்லை. அவன் உண்மையையே சொல்லுகிறான். 6 அடி உயரமுள்ள ஒருவன் தன்னுடைய உயரம் 5 அடி என்று கூறுவானாயின், அது தன்னடக்கம் அல்ல; கலப்பற்ற அறியாமையோ அல்லது மோசடியோ ஆகும்.

—28—8—1932

# 12

# பயபக்தியுடன் ஆராய்ச்சி செய்ய வேண்டும்

சென்ற பல வருடங்களாக நான் பகவத் கீதையைப் பற்றியே அடிக்கடி கூறிவருகிறேன். அதையே நான் பிரமாணமாகக் கொண்டிருக்கிறேன். அது என் கஷ்டங்களுக்கெல்லாம் பரிகாரம் அளிப்பதாக இருக்கிறது. சந்தேகமும் கஷ்டமும் ஏற்பட்ட நூற்றுக் கணக்கான சமயங்களில் அது, என் விருப்பத்தை நிறைவேற்றும் காமதேனுவாகவும், எனக்கு வழிகாட்டியாகவும், சர்வ கஷ்ட நிவாரண மந்திரமாகவும் இருந்து வந்திருக்கிறது. ஒரு சந்தர்ப்பத்தில் கூட அது என்னைக் கைவிட்டதில்லை. அந்தக் காமதேனுவின் மடியில் உள்ள அமுதம் போன்ற பாலை அது நமக்குக் கொடுக்கு முன், நாம் அதை பயபக்தியுடன் வாசித்து ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

## 13

# வேறு சிறந்த நூல் இல்லை

காந்திஜி யாழ்ப்பாணத்துக்கு விஜயம் செய்திருந்த போது அங்கேயுள்ள ஹிந்துக்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில், இலங்கை ஹிந்துக்களின் கடமை பற்றி நீண்ட நேரம் பேசினர். அப்போது காந்திஜி, பகவத் கீதையைப்பற்றிக் குறிப்பிட்டதாவது: ''ஹிந்து சமூகத்தைச் சேர்ந்த எந்தச் சிறுவனாயினும், அவனுக்கு சமஸ்கிருதத்தில் சிறிதளவாவது அறிவு இருந்தாலன்றி அவனது கல்வி பூர்த்தி பெற்றதாகாது என்பதே எனது கருத்தாகும். எனக்குத் தெரிந்த வரையில், ஹிந்து சமயத்தில் பகவத் கீதையைப் போல் அவ்வளவு சாரமான, எல்லோரும் அங்கீகரிக்கக் கூடிய சிறந்த நூல் வேறு எதுவும் இல்லை. எனவே, உங்களுடைய மனத்திலும், உங்கள் குழந்தைகளுடைய மனத்திலும் ஹிந்து சமய உணர்ச்சி ததும்பும்படி செய்ய விரும்புவீர்களாயின், கீதையின் உபதேச தத்துவங்களை நன்கு அறிந்து கொள்ள முயற்சிப்பீர்கள். பொதுவாக நீங்கள் மகாபாரதம், ராமாயணம் ஆகிய தெய்விக நூல்களைப்பற்றியும் கூட அறிந்து கொள்ளவேண்டும்.''

—'எங் இந்தியா' – 15—12—27

## 14

# தேசீயக் கல்விசாலைகளில் கீதை

ஹிந்துக்களாயினும், ஹிந்துக்கள் அல்லாதாராயினும், தேசீயக் கல்விசாலைகளில் உள்ள எல்லா மாணவர்களுக்கும் கீதையைக் கட்டாய பாடமாக போதிக்கலாமா என்று ஓர் அன்பர் கேட்கிறார். இரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் மைசூரில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, ஓர் உயர்தரப் பள்ளியில் உள்ள மாணவர்களுக்கு கீதையைப் பற்றித் தெரியாததற்காக எனது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்தேன். தேசீயக் கல்விசாலைகளில் மாத்திரமல்ல, ஒவ்வொரு கல்வி ஸ்தாபனத்திலும் கீதையைக் கற்பிக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். கீதையை அறியாத ஓர் ஹிந்து சிறுவனோ அல்லது சிறுமியோ இருப்பதை ஒரு வெட்கக் கேடாகக் கருத வேண்டும். கீதையைக் கற்பிக்க வேண்டும் என்று நான் வற்புறுத்துகிறேன் என்றாலும், அதை, குறிப்பாக தேசீயக் கல்விசாலைகளில் கட்டாய பாடமாக வைப்பதை நான் விரும்பவில்லை.

கீதை சர்வமத சம்மதமான ஒரு நூல் என்றாலும், அதை வற்புறுத்தி யாருக்கும் கற்பிக்கக் கூடாது. கீதை அத்தகைய ஒரு நூல் என்பதை, ஒரு கிறிஸ்தவரோ, ஒரு முஸ்லிமோ அல்லது

ஒரு பார்சியோ ஒப்புக்கொள்ள மறுக்கலாம். அவர்கள் முறையே பைபிளோ, குரானே அல்லது அவெஸ்தாவோ* தான் சர்வமத சம்மதமான நூல் என்றும் கூறலாம்.

ஹிந்துக்கள் என்று குறிப்பிடப்படுவோர் எல்லோருக்கும் கூட, கீதையை வற்புறுத்தி உபதேசிக்க முடியாது என்றே அஞ்சுகிறேன். பல சீக்கியர்களும், ஜைனர்களும் தங்களை ஹிந்துக்கள் என்றே கருதுகிருர்கள். எனினும், அவர்களுடைய சமூகங்களைச் சேர்ந்த சிறுவர், சிறுமிகளுக்கு கீதையைக் கட்டாய பாடமாகக் கற்பிப்பதை அவர்கள் ஆட்சேபிக்கலாம். ஆனல், உப பிரிவினருக்காக நடத்தப்படும் கல்விசாலைகளின் நிலைமை வேருகும். உதாரணமாக, ஒரு வைஷ்ணவப் பள்ளிக்கூடத்தில் கீதையை மதக் கல்வி சம்பந்தமான ஒரு பாடமாக வைப்பது பொருத்தமாக இருக்கும். தனி நபருக்குச் சொந்தமான ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் அவரவர் விருப்பம்போல் பாடத் திட்டத்தை அமைத்துக் கொள்ள உரிமை உண்டு. ஆனல், ஒரு தேசீயக் கல்விசாலை குறிப்பிட்ட எல்லைகளுக்கு உட்பட்டே செயல்பட வேண்டும். உரிமையில் குறுக்கிடாத வரையில், அதை நிர்ப்பந்தம் என்று கூற முடியாது. தனி நபர் கல்விசாலையில் பிரவேசிக்க தமக்கு உரிமை உண்டு என்று எவரும் கூற முடியாது. ஆனல், ஒரு தேசீயக் கல்விசாலையில் சேர தேசத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. எனவே, ஓரிடத்தில் சேருவதற்கான நிபந்தனையாக இருப்பது, மற்ருேரிடத்தில் நிர்ப்பந்தமாகவே கருதப்படும். வெளி நிர்ப்பந்தத்தின் மூலம் கீதையை எல்லோரும் வாசிக்கும்படி ஒரு காலத்திலும் செய்ய முடியாது. எனவே, கீதையின் பக்தர்கள் அதை மற்றவர்கள் மீது திணிக்க முற்படாமல், அதன் உபதேசங்களைத் தங்களுடைய வாழ்க்கையில் அனுசரித்துக் காட்டுவார்களாயின், கீதையை எல்லோரும் அங்கீகரிக்கும்படி செய்ய முடியும்.

# 15

# கீதையின் சித்தாந்தம்

எத்தகைய பேரபாயங்கள் ஏற்படுவதாக இருந்தாலும், கடவுளிடத்தில் பயபக்தியுள்ள மனிதன் தீச் செயல்கள் புரிவோருடன் தொடர்பு வைத்துக் கொள்ளமாட்டான். அவ்விதம் வைத்துக் கொள்ளாமல் இருப்பதே அவனது கடமையாகும். நல்ல செய்கையால் மாத்திரமே நல்ல பலன் ஏற்பட முடியும் என்பதில்லை. அவனுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும்; பலனில் பற்றுதலின்றி பணி புரிய வேண்டும் என்ற கீதையின் சித்தாந்தத்திற்குப் பொருள் அதுதான். எதிர்காலத்தை எட்டிப் பார்க்க,

---

*பார்சிகளின் புராதனமான வேத நூலே 'ஸென்ட் அவெஸ்தா' என்று குறிப்பிடப் படுகிறது.

கடவுள் அவனை அனுமதிப்பதில்லை. சைத்தானின் அடிச்சுவடு களைப் பின்பற்றி இறப்பதே மேல் என்பதைக் கடவுளிடம் பய பக்தியுள்ளவன் அறிகிறான்.

## 16

# குணாதீதன் யார்?

குணாதீதனைப்* பற்றி கீதை குறிப்பிடுகிறது. இம்சை, அகிம்சை இரண்டிற்கும் அப்பாற்பட்டவனே குணாதீதன். உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்ட தைரியசாலிகளான ஆயி ரக்கணக்கானவர்களில் ஒருவரைக் கூட சராசரி மனிதருக்கு மேலானவர் என்று கூற முடியாது. அவர்கள் யாவரும் தவறு செய்யும், பாவம் செய்யும் மானிடரே. எனினும், துரும்பைப் போன்ற கருவிகளைக் கூட உபயோகப்படுத்திக் கொள்ளும் சக்தி கடவுளுக்கு உண்டு. ஆனால், அவருக்கு எதிலும் தொடர்பு இருப்பதில்லை. எனவே, அவர் ஒருவர்தான் குணாதீதர்.

—'ஹரிஜன்' - 25—8—1940

## 17

# அர்ஜுனனின் பிரச்னை

**கேள்வி:** கீதையின் சாரமான உபதேசம் என்ன? தன்னலமற்ற நடவடிக்கையா அல்லது அகிம்சையா?

**காந்திஜியின் பதில்:** அது அனாஸக்தி அதாவது தன்னலமற்ற நடவடிக்கைதான் என்பதில் சந்தேகமில்லை. கீதையின் சார மான எனது மொழி பெயர்ப்புக்கு நான் அனாஸக்தி யோகம் என்றே பெயர் கொடுத்திருக்கிறேன். அனாஸக்தனாக அதா வது தன்னலமற்றவனாக இருக்கும் ஒருவன், நடைமுறையில் அகிம்சையை மேற்கொண்டு தீரவேண்டியவனாக இருக் கிறான். அப்படியானால்தான் அவன் தன்னலமற்ற நிலையை அடைய முடியும். அத்தகைய நிலையை அடைவதற்கு, அகிம்சை அவசியமான ஒரு பூர்வாங்க முறையாகும். அனா ஸக்தியில் அகிம்சையும் சேர்ந்திருக்கிறது.

---

*விருப்பு—வெறுப்பு, துன்பம்—இன்பம், மண், கல், பொன், இனியது—இன்னாதது, புகழ்ச்சி—இகழ்ச்சி, மானம்-அவமானம், நண்பன்-பகைவன் எல்லோரையும் சமமாகக் கருதுபவனே குணாதீதன் என்று கீதை கூறுகிறது.

கே: கீதை உபதேசிப்பது என்ன? இம்சையா, அகிம்சையா அல்லது இரண்டுமா?

ப: கீதையில் நான் காணும் அர்த்தம் அது அல்ல. அதன் ஆசிரியர், அகிம்சையைக் கற்பிப்பதற்காக அதை எழுதாமல் இருந்திருக்கலாம். எனினும், மூல சுலோகங்களுக்கு ஒரு வியாக்கியான கர்த்தா பல விளக்கங்களைக் கொடுப்பது போல், நானும் கீதைக்கு எனது விளக்கத்தைக் கொடுக்கிறேன். அதன் முக்கிய கொள்கை அனாஸக்தி எனில், அது அகிம்சையையும் உபதேசிக்கின்றது. இந்த உடலுடன் நாம் இந்த பூமியில் நடமாடிவரும் வரையில், நாம் அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். மேல் உலக வாழ்க்கையில் இம்சையோ, அகிம்சையோ எதுவும் இல்லை.

கே: உண்மையில் கிருஷ்ண பகவான் அகிம்சைக் கொள்கையை எதிர்த்துள்ளார். ''அடிக்கு பதிலாக அடி கொடுப்பதைக் காட்டிலும், எனது உறவினர்களின் பாணத்திற்கும் ஈட்டிக்கும் என் மார்பைக் காட்டுவதே மேலானது என்று நான் கருதுகிறேன்'' என்று அர்ஜுனன் சொல்லுகிறான். ஆனால், அடிக்கு பதில் அடி கொடுக்கும்படி அவனுக்கு கிருஷ்ண பகவான் உபதேசிக்கிறார்.

ப: அதைத் தான் நான் மறுக்கிறேன். அர்ஜுனனின் அந்த வார்த்தைகள் பகட்டு ஞானத்தினால் எழுந்த வார்த்தைகள் ஆகும். ''உன்னுடைய உற்றார் உறவினருடன் நேற்றுவரையில் நீ சிறிதும் ஈவிரக்கமின்றி கொடிய ஆயுதங்களைக் கொண்டு யுத்தம் செய்தாய். பகைவர்கள் உன்னுடைய உற்றார் உறவினராக இராமல் அந்நியர்களாக இருப்பார்களாயின், இன்றும் அவர்களை எதிர்த்து நீ போர் செய்வாய்'' என்று அவனிடம் கிருஷ்ணன் கூறுகிறார். அர்ஜுனனின் முன் உள்ள பிரச்னை அகிம்சையல்ல. அன்பார்ந்த, மிகவும் நெருங்கிய உற்றார் உறவினரைக் கொல்ல வேண்டுமா என்பதே அவனது பிரச்னையாக இருந்தது.

# 18

# எல்லோரையும் சமமாகக் கருதும் நிலை

'ஸ்தித ப்ரக்ஞன்' அதாவது 'உறுதியான ஞானம் உள்ளவன்' அல்லது 'சத்தியாக்கிரகி' என்பதுபற்றி நேற்று நான் உங்களுக்குக் கூறினேன். அந்தக் கொள்கையை நாம் ஒப்புக்கொண்டால், பின்னர் நாம் எவரையும் நமது விரோதியாகக் கருதமாட்டோம். விரோதத்தையும் துவேஷத்தையும் நாம் அறவே களைந்துவிட வேண்டும். ரிஷி அல்லது ஞானியைப்

போன்ற ஒரு சிலர் மாத்திரம்தான் அந்தக் கொள்கையை அனுசரிக்க வேண்டும் என்பதில்லை. அது எல்லோரும் அனுசரிப்பதற்கு உகந்தது. நான், என்னை ஒரு தோட்டி என்று சொல்லிக் கொள்ளுகிறேன். நான் போனிக்ஸில் இருந்தபோது பெயரளவில் மாத்திரமல்ல, உண்மையிலேயே நான் தோட்டி வேலை செய்தேன். ஒன்றும் தெரியாத ஒரு கிராமவாசி கூட, பிரார்த்தனையின் போது பாராயணம் செய்யப்படும் கீதையில் உள்ள சுலோகங்களில் குறிப்பிட்டுள்ளபடி, எல்லாவற்றையும் எல்லோரையும் சமமாகக் கருதும் நிலையை அடைய முடியும். உறுதி வாய்ந்த மனம் உள்ள ஒருவன், ஒரு குழந்தையினிடத்தில்கூட பொறுமையை இழக்க மாட்டான்; கோபம் கொள்ளமாட்டான்; யாரையும் தூஷிக்கவும் மாட்டான். கீதை கற்பிக்கும் மதத்தை, தருமத்தை, வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டும். அதுதான் முக்கியமாகும்.

## 19

# அகிம்சையே நிரந்தர தருமம்

ஒரு நண்பர் பின்வரும் சங்கடமான கேள்வியைக் கேட்டிருக்கிறார்:

"கீதை இம்சையை உபதேசிக்கிறதா அல்லது அகிம்சையை உபதேசிக்கிறதா? இதைப்பற்றிய வாதம் நீண்ட காலத்திற்கு நடந்து கொண்டுதான் இருக்கும் என்று தோன்றுகிறது. கீதையில் நாம் காணும் பொருள் என்ன அல்லது அதில் எத்தகைய கருத்தை நாம் காண விரும்புகிறோம் என்பது ஒரு விஷயம். விருப்பு வெறுப்பு இன்றி அதைப் படிப்பதால் நாம் பெறக்கூடிய பொருள் என்ன என்பது வேறு விஷயமாகும். எனவே, அகிம்சையை வாழ்க்கையின் நிரந்தரமான கொள்கையாக முழுநம்பிக்கையுடன் அங்கீகரிப்பவர்களுக்கு, அக் கேள்விக்கு விடை அளிப்பதில் அதிகக் கஷ்டம் எதுவும் இருப்பதற்கில்லை. கீதை அகிம்சையை போதிப்பதாக இருந்தால் மாத்திரமே, அதைத் தாம் ஒப்புக் கொள்ள முடியும் என்று அவர் கூறுவார். கீதையைப் போன்ற அற்புதமான ஒரு நூல், நிரந்தர தருமமான அகிம்சையை விட அதிக மகத்துவம் வாய்ந்த கொள்கையைப் போதிக்க முடியாது என்றே அவர் கருதுவார். அவ்விதம் அது போதிக்க முடியாவிடில், அது அவருக்குத் தவறில்லாத வழிகாட்டியாக இருக்க முடியாது. அப்போதும் அது அவரது மதிப்பிற்குரிய சிறந்த நூலாக இருக்கலாம். எனினும், அது அவருக்கு குறைபாடு இல்லாத ஆதார நூலாக இருக்க முடியாது.

"அகிம்சை உணர்ச்சியின் மேலீட்டினால் அர்ஜுனன் தன்னிடமிருந்த ஆயுதங்களை யெல்லாம் கீழே போட்டுவிட்டு, கௌரவர்களின் கையினால் இறப்பதற்குத் தயாராகி விடுகிறான் என்பதை, கீதையின் முதலாவது அத்தியாயத்தில் நாம் காண்கிறோம். பேரபாயத்தின் தோற்றத்தை அவன் கண்முன் காண்கிறான். இம்சையில் உள்ள பாவத்தையும் அவன் உணர்கிறான். மனச் சோர்வு அவனை ஆக்கிரமித்துக் கொள்ளுகிறது. அவன் பயத்தினால் நடுங்கிய

வண்ணம், 'எத்தகைய மகாபாவத்தைச் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்!' என்று ஓலமிடுகிறான்.

"அந்த மன நிலையில் இருக்கும் அர்ஜுனனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார்: 'போதும் இந்த உயர்ந்த வேதாந்தம். யாரும் கொல்லுவதில்லை. கொல்லப்படுவதும் இல்லை. ஆன்மா அழிவற்றது. எனினும், உடல் அழிந்தே தீர வேண்டும். யுத்தம் செய்ய வேண்டியது உன் கடமையாக இருக்கிறது. எனவே, போர் செய். வெற்றி தோல்வியைப்பற்றிய கவலை உன்னுடையதன்று. உன்னுடைய கடமையை நிறைவேற்று.'

"கீதையின் பதினொன்றாவது அத்தியாயத்தில், பகவான் அர்ஜுனனுக்கு தம்முடைய விசுவரூபத்தில் பிரபஞ்சம் முழுவதையும் காட்டிக் கூறுகிறார். 'காலன் நான்தான்; உலகங்களை அழிப்பவனும், தொன்மையான கடவுளும் நானே. உலகங்களை அழிப்பது என் வேலை. இங்கே அந்த வேலையில்தான் ஈடுபட்டிருக்கிறேன். என்னால் முன்பே கொல்லப்பட்டுவிட்டவர்களை இப்போது நீ கொன்றுவிடு. துக்கத்திற்கு உன்னை ஆளாக்கிக் கொள்ளாதே.'

"கடவுளின் முன்னிலையில் இம்சை, அகிம்சை எல்லாம் ஒன்றுதான். ஆனால், மனிதனுக்குக் கடவுளின் கட்டளை என்ன? 'போர் செய்; ஏனெனில் போர்க்களத்தில் உன் எதிரிகளை நீ முறியடிப்பது நிச்சயம்' என்பதுதானா அக்கட்டளை? கீதை போதிப்பது அகிம்சையாயின், முதல் அத்தியாயமும் பதினொன்றாவது அத்தியாயமும் மற்ற அத்தியாயங்களுக்குப் பொருத்தமாக இல்லை. பொருத்தமாக இருந்தாலும் இராவிட்டாலும், அவை அகிம்சைத் தத்துவத்தை ஆதரிப்பனவாக இல்லை. என் சந்தேகத்தைப் போக்குவதற்கு உங்களுக்கு அவகாசம் இருக்கவேண்டும் என்பதே எனது ஆர்வமாகும்."

இந்தக் கேள்விக்கு எக்காலத்திலும் முடிவே இல்லை. எனவே, கீதையை வாசிக்கும் ஒவ்வொருவரும், தமக்குத் தாமேதான் தீர்வு காண வேண்டும். இவ்விஷயமாக என்னுடைய கருத்தை நான் கூறப் போகிறேன் என்றாலும், இறுதியாக ஒருவருக்கு வழிகாட்டியாக இருப்பது அறிவு அல்ல, உள்ளம்தான் என்பதை நான் அறிவேன். உள்ளம் ஒரு முடிவை ஒப்புக்கொள்ளுகிறது. பின்னர்தான் அறிவு அந்த முடிவிற்கான காரணங்களைக் கண்டு பிடிக்கிறது. முதலில் சித்தாந்தம் எழுகின்றது. அதைப் பின்தொடர்ந்துதான் வாதங்கள் நடைபெறுகின்றன. மனிதன் எதைச் செய்தாலும் அல்லது எதைச் செய்ய விரும்பினாலும், அதற்கு ஆதாரமாகவே பெரும்பாலும் காரணங்களைக் கண்டுபிடிக்கிறான்.

எனவே, கீதைக்கு நான் கூறும் விளக்கத்தை ஒப்புக்கொள்ள முடியாமல் இருப்பவர்களின் நிலையை நான் நன்கு உணருகிறேன். நான் செய்ய வேண்டியதெல்லாம் என்னவெனில், கீதைக்கு நான் கொடுக்கும் அர்த்தம் எப்படி வந்தது, அந்த அர்த்தம் வருவதற்கு நான் எத்தகைய விளக்க விதிகளை மேற்கொண்டேன் என்பதைக் குறிப்பிடுவதேயாகும். நான் கண்ட பொருளுக்காகப் போராடவேண்டியதே எனது கடமை.

நான் வெற்றி பெறுவதாக இருந்தாலும் அல்லது தோல்வி அடைவதாக இருந்தாலும், அதைப் பற்றிக் கவலைப்படவில்லை.

1889-இல்தான் நான் முதன் முதலாக கீதையைப் பற்றித் தெரிந்துகொண்டேன். அப்போது எனக்கு வயது இருபது. அகிம்சைத் தத்துவத்தைப் பற்றி அப்போது எனக்கு அதிகமாக எதுவுமே தெரியாது. சியாமள பட்டர் என்ற குஜராத்திக் கவி இயற்றியுள்ள அடிகளில் ஒன்று, அன்பினால் பகைவனைக்கூட வென்றுவிடலாம் என்ற தத்துவத்தை எனக்கு போதித்திருந்தது. அப்போதனை என் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தும் இருந்தது. எனினும், அதிலிருந்து அழிவற்ற அகிம்சைத் தத்துவத்தை நான் ஊகித்துக் கொள்ளவில்லை. உதாரணமாக அது, எல்லாப் பிராணிகளுடைய உயிரையும் குறிக்கவில்லை. அற்குமுன் நான் இந்தியாவில் இருந்தபோது, இறைச்சியை ருசி பார்த்தது உண்டு. பாம்புகளைப் போன்ற விஷ ஜந்துக்களைக் கொல்லுவது கடமை என்றும் எண்ணினேன். ஆனால் இன்றோ, அகிம்சையில் நம்பிக்கை உள்ளவர்கள் விஷப் பிராணிகளைக் கூட கொல்லக் கூடாது என்பது என்னுடைய உறுதியான கொள்கையாக இருந்து வருகிறது.

ஆங்கிலேயர்களுடன் போராட நம்மைத் தயார் செய்து கொள்ளவேண்டும் என்று அந்தக் காலத்தில் நான் நம்பிவந்தேன். 'பிரிட்டன் ஆட்சிபுரிவதில் அதிசயம் என்ன?' என்று ஒரு குஜராத்திக் கவி இயற்றியுள்ள புகழ் பெற்ற கேலிப் பாடலை நான் அடிக்கடி கூறுவேன். ஆங்கிலேயர்களுடன் போராடுவதற்கு என்னைத் தகுதியாக்கிக் கொள்ளுவதற்கு முதற்படியாகவே நான் மாமிசம் உட்கொண்டேன். நான் இங்கிலாந்துக்குச் செல்லுமுன் நான் இருந்த நிலை அதுதான். மாமிசம் உண்பது போன்ற பழக்கங்களிலிருந்து அங்கேதான் மீண்டேன். என் அன்னைக்கு நான் கொடுத்த வாக்குறுதியைச் சாகும் வரையில் நிறைவேற்ற நான் கொண்டிருந்த திட சங்கற்பமே, அதற்குக் காரணமாகும். சத்தியத்தில் எனக்கு உள்ள பக்தி, என்னைப் பல படுகுழிகளிலிருந்தும் காப்பாற்றியிருக்கிறது.

நான் இங்கிலாந்தில் இருந்தபோது இரு ஆங்கில நண்பர்களுடன் நான் கொண்ட தொடர்பே, கீதையைப் படிக்கும்படி என்னைத் தூண்டியது. 'படிக்கும்படி என்னைத் தூண்டியது' என்று நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், என் சொந்த விருப்பம் காரணமாக நான் அதைப் படிக்கவில்லை. அவர்களுடன் கீதையை வாசிக்கும்படி அந்த இரு நண்பர்களும் என்னைக் கேட்டபோது, எனது அறியாமையைக் குறித்து நான் வெட்கம் அடைந்தேன். எனது சமய நூல்களைப் பற்றிய என் அறிவு முற்றிலும் சூன்யமாக இருப்பதை நான் உணர்ந்தபோது, எனக்கு மிகுந்த வேதனை உண்டாயிற்று. இந்த வேதனை உணர்ச்சிக்கு எனது அகந்தையே அடிப்படையாக இருந்திருக்க வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். பிறருடைய உதவி

யின்றி, கீதையில் உள்ள எல்லா சுலோகங்களேயும் புரிந்துகொள்ளுவதற்குப் போதிய சமஸ்கிருத ஞானம் எனக்கு இல்லே. அந்த நண்பர்களுக்கு சமஸ்கிருதம் அறவே தெரியாது. எனினும், அவர்கள் சர் எட்வின் அர்னுல்டு எழுதியுள்ள கீதையின் அற்புதமான மொழிபெயர்ப்பை எனக்குக் கொடுத்தார்கள். முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரையில் அதை நான் பேரார்வத்துடன் வாசித்தேன். அது என் மனத்தை முற்றிலும் கவர்ந்தது. அது என்னே மயக்கிவிட்டது என்றே கூறவேண்டும். அதிலிருந்து, இரண்டாவது அத்தியாயத்தின் இறுதியில் உள்ள பத்தொன்பது சுலோகங்களும் என் இதய பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. எனக்கு வேண்டிய ஞானமெல்லாம் அந்த சுலோகங்களில் அடங்கியிருக்கின்றன. அவை போதிக்கும் உண்மைகள், அழிவே இல்லாதவை, நிரந்தரமானவை, சத்தியமானவை. அவற்றில் தர்க்க வாதங்கள் அடங்கியிருக்கின்றன. இருந்தாலும் அவை அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட ஞானமே யாகும்.

அதன்பின் நான், கீதையின் பல மொழி பெயர்ப்புகளேயும், பல வியாக்கியானங்களேயும் வாசித்திருக்கிறேன். என் இதயத்திற்குத் திருப்தி ஏற்படும் வரையில் அதைப்பற்றி வாதித்தும், தர்க்கம் செய்தும் இருக்கிறேன். எனினும், முதல் தடவையாக அதை வாசித்த போது என் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சி என் மனத்தைவிட்டு அகலவே இல்லே. அந்த சுலோகங்கள், கீதையின் விளக்கத்திற்குத் திறவுகோலாக இருக்கின்றன. அந்த சுலோகங்களுக்கு முரணுக இருப்பதுபோல் தோன்றும் மற்ற சுலோகங்களே நிராகரித்துவிடலாம் என்று கூட நான் யோசனே கூறுவேன். எனினும், பணிவுடன் ஆராய்பவன் எதையும் நிராகரிக்க வேண்டிய அவசியம் இல்லே.

'இந்த முரண்பாட்டைத் தீர்க்க எனக்கு உள்ள அறிவு போதவில்லே. பின்னர் எப்போதாவது இதைத் தீர்ப்பதற்கு என்னல் சாத்தியமாகலாம்' என்றே அவன் கூறுவான். அப்படியே அவன் தனக்கும் மற்றவர்களுக்கும் சமாதானம் கூறுவான்.

மத நூல்களுக்கு பிழையின்றி சரியான விளக்கம் கொடுக்க வேண்டுமாயின், அதை பயபக்தியோடு வாசிப்பதுடன், அவற்றில் அனுபவமும் பெறவேண்டியது அவசியமாகும். ஒரு சூத்திரன் வேதங்களேப் படிக்கக்கூடாது என்று விதிக்கப்பட்டுள்ள தடை, முற்றிலும் அர்த்தமற்றது என்று கூறிவிட முடியாது. சூத்திரன் என்பதற்கு ஆன்மிகப் பண்பாடு இல்லாதவன், அறியாமையில் ஆழ்ந்துள்ளவன் என்பதே பொருளாகும். வேதங்களுக்கும், மற்ற சமய நூல்களுக்கும் அவன் பெரிதும் விபரீதமான விளக்கங்கள் கொடுக்கக் கூடும். பீஜ கணித சம்பந்தமான கஷ்டமான கேள்விகளுக்கு எல்லோருமே விடை அளித்துவிட முடியாது. அதற்கு ஓரளவு ஆரம்பப் பயிற்சி இருக்க வேண்டியது இன்றியமையாதது. 'நானே பிரம்மம்' என்ற பேருண்மை, பாவத்தி

லேயே ஆழ்ந்துள்ள ஒருவனுடைய வாயிலிருந்து வருமாயின் அது எவ்வளவு அருவருக்கத்தக்கதாக இருக்கும்! அதை எவ்வளவு இழிவான காரியங்களுக்கு அவன் பயன்படுத்திக் கொள்ளுவான்! அது அவனால் எவ்வளவு தூரம் உருத் தெரியாமல் சிதைக்கப் படும்!

ஆகையால் சமய நூல்களுக்கு விளக்கம் கூறும் ஒருவர், ஆன்மிகக் கட்டுத்திட்டங்களுக்கு உட்பட்டவராக இருக்க வேண்டும். ஒழுக்கத்திற்கு நிரந்தரமான வழிகாட்டிகளான யம, நியமங்களை அவர் நடைமுறையில் அனுசரிப்பவராக இருக்க வேண்டும். அவற்றை மேலேழுந்தவாரியாகப் பயிற்சி செய்வ தால் யாதொரு பயனும் ஏற்படாது. அதனால்தான், ஒரு குரு அத்தியாவசியமாக இருக்க வேண்டும் என்று சாத்திரங்கள் கட்டளை இடுகின்றன. இக்காலத்தில் குரு கிடைப்பது அரிதாகையால், பக்தியைப் புகட்டும் இக்கால நூல்களைப் படிக்க வேண்டும் என்று ரிஷிகள் கூறியுள்ளனர்.

பக்தியோ, நம்பிக்கையோ இல்லாதவர்கள், சமய நூல் களுக்கு விளக்கம் கூறத் தகுதி யற்றவர்கள் ஆவர். பண்டிதர் கள் அறிவை அடிப்படையாகக் கொண்டு அவற்றிற்கு விஸ்தார மாக விளக்கம் கூறலாம். ஆனால், அது உண்மையான விளக்க மாக இருக்க முடியாது. அனுபவம் வாய்ந்தவர்களால் மாத்திரமே, சமய நூல்களுக்கு உண்மையான விளக்கம் கொடுக்க முடியும்.

இருந்தாலும், அனுபவம் இல்லாதவர்களுக்குக் கூட சில விதிகள் இருக்கின்றன. சத்தியத்திற்கு முரண்பாடான விளக் கம் உண்மையான விளக்கமாக இருக்க முடியாது. சத்தியத் தைக்கூட சந்தேகிப்பவருக்கு, சமய நூல்கள் அர்த்தமற்றவை யாகிவிடும். அத்தகைய ஒரு நபருடன் யாரும் வாதிக்கவும் முடியாது. சமய நூல்களில் அகிம்சையைக் காண முடியாத வனுக்கு ஆபத்தே யன்றி, அவனுக்கு அழிவு ஏற்படுவதில்லை. உண்மை (ஸத்) நிச்சயமானது. அகிம்சையோ எனில், எதிர்மறை யானது. இருந்தாலும் அகிம்சைதான் மிகவும், மேலான தருமமாகும். சத்தியம் தானே புலனாகக்கூடியது; அகிம்சையோ, சத்தியத்தின் முதிர்ந்த கனியாகும். அது சத்தியத்தில் அடங்கி யிருக்கிறது. எனினும், அது தானாக புலனாகக்கூடியது அல்ல. ஆகையால், அதை ஒப்புக்கொள்ளாமலேயே ஒருவர் சாத்திரங் களுக்கு விளக்கம் கூற முற்படலாம். ஆனால், சத்தியத்தை அவர் ஒப்புக்கொண்டு விடுவாராயின், அகிம்சையையும் அவர் ஒப்புக் கொள்ளும்படி அது செய்துவிடும்.

சத்தியத்தை உணர்ந்து கொள்ளுவதற்கு, உடல் ஆசை களைத் துறக்கவேண்டியது அவசியமாகும். சத்தியத்தைக் கண்ட முனிவர், தம்மைச் சுற்றிலும் சீறிக் கொண்டிருந்த இம்சையி லிருந்து அகிம்சையைக் கண்டார். 'இம்சை பொய்ம்மையே, அகிம்சையே உண்மையானது' என்றார் அவர். அகிம்சை இன்

றேல், சத்தியத்தைக் காண்பது இயலாத காரியம். பிரம்மச்சர்யம், அஸ்தேயம் (திருடாமை). அபரிக்ரஹம் (உடைமையின்மை) ஆகியவை, அகிம்சையை அடைவதற்கான வழிகளேயாகும். சத்தியத்தின் ஆன்மாவே அகிம்சை. அகிம்சை இன்றேல், மனிதன் ஒரு வெறும் மிருகமே என்றுதான் கூறவேண்டும். சத்தியத்தை நாடுவோர், அதை ஆராய்ச்சி செய்யும்போது இதையெல்லாம் உணர்ந்து கொள்ளுவார். அதன் பிறகு, சாத்திரங்களுக்கு விளக்கம் கூறுவதில் அவருக்கு எவ்விதமான கஷ்டமும் இராது.

விளக்கம் காண்பதற்கான மற்றொரு முறை, மேலெழுந்தவாரியாக எழுத்துக்களை மாத்திரம் கவனித்துக்கொண்டிராமல் அதன் உட்கருத்தையும் ஆராய்ச்சி செய்வதுதான். துளசிதாசரின் ராமாயணம் புகழ்பெற்ற ஒரு நூலாகும். ஏனெனில், தூய்மை, இரக்கம், பக்தி ஆகிய உணர்ச்சிகள் அதில் ததும்புகின்றன. பேரிகைகள், சூத்திரர்கள், மூடர்கள், பெண்கள் முதலியோர் அடிபடுவதற்குத் தான் தகுதியானவர்கள் என்று, அதில் ஒரு பாடல் இருக்கிறது. ஒருவன் தன் மனைவியை அடிப்பதற்கு ஆதாரமாக இந்தப் பாடலை எடுத்துக் கூறுவானாயின், அவன் நாசத்தையே அடைவான். ராமர் தமது மனைவியை அடித்ததே இல்லை என்பது மாத்திரமல்ல; அவளுக்கு அதிருப்தி உண்டாகும்படியாகக்கூட, அவர் ஒருபோதும் நடந்துகொண்டதில்லை. இந்தப் பாடலை ஆதாரமாகக் காட்டி, தங்களுடைய மனைவிமாரை அடிப்பது நியாயம் என்று கூறும் காட்டுமிராண்டிகள் இருப்பார்கள் என்று கனவிலும் கருதாமல், தமது காலத்தில் நிலவிய ஒரு பழமொழியை துளசிதாசர் வஞ்சனையின்றித் தமது பாடலில் சேர்த்துவிட்டார். அவரது காலத்தில் இருந்துவந்த வழக்கத்தைப் பின்பற்றி, துளசிதாசரே அவரது மனைவியை அடித்தார் என்று வைத்துக்கொள்ளுவோம். அதைக் குறித்து என்ன சொல்லுவது? அவர் அடித்தது தவறு என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால், கணவன்மார் தங்களுடைய மனைவிமாரை அடிப்பது நியாயம் என்று நிரூபிப்பதற்காக ராமாயணம் எழுதப்படவில்லை. சிறிதும் குற்றம் குறையற்ற உத்தம மனிதரான ராமனையும், லட்சிய மனைவியான சீதையையும், சகோதர அன்புக்கு லட்சிய புருஷனான பரதனையும் சித்திரிப்பதற்காகவே ராமாயணம் எழுதப்பட்டது. எனவே, அதில் தீய பழக்க வழக்கங்களுக்கு ஏதாவது நியாயம் கூறப்பட்டிருக்குமாயின், அதை நிராகரித்துவிட வேண்டும். துளசிதாசர் பூகோள சாத்திரம் கற்பிப்பதற்காக, தமது இணையற்ற நூலை எழுதவில்லை. ஆகையால், ராமாயணத்தில் பூகோள சம்பந்தமான தவறு எதையாவது காண்போமாயின், அதை நாம் உடனடியாக நிராகரித்து விட வேண்டியதுதான்.

இதுவரையில் கூறியவற்றை முக்கியமாகக் கொண்டு கீதையை நாம் ஆராய்வோம். தன்னைத்தான் அறிந்துகொள்ளுவதும், அதற்கான முறைகளுமே கீதையில் உள்ள விஷயமாகும்.

அதை விளக்குவதற்கான ஒரு சந்தர்ப்பத்தை, இரு படைகளுக்கும் நடந்த யுத்தம் அளித்துள்ளது. நீங்கள் விரும்பினல், கீதையை இயற்றிய கவி யுத்தத்தையோ அல்லது பலாத்காரத்தையோ எதிர்ப்பவர் அல்ல என்றும், அதனுல்தான் யுத்தம் காரணமாக ஏற்பட்ட சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ள அவர் தயங்கவில்லை என்றும் சொல்லிக்கொள்ளலாம். ஆனல், மகாபாரதத்தை வாசித்ததில் எனக்கு ஏற்பட்ட கருத்து முற்றிலும் மாருனது. அற்புதமான அழகுடன் விளங்கும் அந்தப் பெரும் காவியத்தின்மூலம் கவி வியாசர், யுத்தம் பலனற்றது என்பதை நிரூபித்திருக்கிருர். "கௌரவர்கள் தோல்வியுற்று அழிந்தால்தான் என்ன? பாண்டவர்கள் வெற்றி பெற்ருல்தான் என்ன? வெற்றியடைந்தவர்களில் மிஞ்சியவர்கள் எத்தனை பேர்? அவர்களுடைய கதி என்னவாயிற்று? தாய் குந்தியின் வாழ்வு எப்படி முடிந்தது? அந்த யாதவர்கள் இன்று எங்கே இருக்கிருர்கள்?" இவ்விதமெல்லாம் வியாசர் கேட்கிருர்.

யுத்தத்தைப் பற்றிய வர்ணனையும், பலாத்காரம் நியாயம் என்பதும் அந்தக் காவியத்தின் முக்கியமான விஷயமாக இல்லாதபோது, அந்த அம்சங்களை வலியுறுத்துவது முற்றிலும் தவருகும். சில சுலோகங்களை, அகிம்சை போதனைக்கு உடன்பாடு உள்ளவையாகக் கொள்ளுவது கஷ்டமெனில், கீதை முழுவதையும் பலாத்காரக் கொள்கைக்குப் பொருத்தமாக இருப்பதாய்க் கொள்ளுவது இன்னும் அதிகக் கஷ்டமாகும்.

கவி தமது காவியத்தை எழுதியபோது, அதற்கு என்னவெல்லாம் வியாக்கியானங்கள் செய்யமுடியும் என்பதை உணரவில்லை. கவியின் சிருஷ்டி அவரையும் மீறிச் சென்றுவிடுவதே, கவிதையின் அழகாகும். அவர் மகோன்னதமான கற்பனைச் சிகரங்களை எட்டும்போது காணும் உண்மைகளை, பெரிதும் அவரது வாழ்க்கையில் நம்மால் காண முடிவதில்லை. பல கவிகளின் வாழ்க்கை வரலாறுகளும் அவர்களுடைய கவிதைகளைப் பொய்யாக்கிவிடுகின்றன. கீதையின் சாரமான முக்கிய உபதேசம் இம்சையல்ல, அகிம்சையே. இது, இரண்டாவது அத்தியாயத்தில் ஆரம்பமாகி இறுதியான 18-ஆவது அத்தியாயத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கும் விஷயத்திலிருந்து விரிவாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலையை, மற்ற அத்தியாயங்களும் ஆதரிப்பவையாக இருக்கின்றன. கோபமின்றி, பற்றுதலின்றி துவேஷமின்றி இம்சை நிகழ்வதற்கு சாத்தியமே இல்லை. சத்துவம், ரஜஸ், தமஸ் இவற்றிற்கு அப்பால் உள்ள நிலைக்கு நம்மை இட்டுச் செல்ல கீதை முயற்சிக்கிறது. கோபம், துவேஷம் முதலியவற்றிற்கு அத்தகைய நிலையில் இடமே இல்லை. அர்ஜுனன் தனது வில்லில் அம்பைத் தொடுத்து தன் காது வரையில் இழுத்துவிட்ட ஒவ்வொரு தடவையும், அவனது கண்கள் கோபத்தினல் சிவந்து விளங்கியதை, இப்போது கூட நான் என் மனக்கண்முன் சித்திரித்துக் கொள்ள முடியும்.

அர்ஜுனன் யுத்தம் செய்ய மறுத்ததற்கு, அகிம்சை உணர்ச்சி காரணம் அல்ல. அதற்குமுன் அவன் பல யுத்தங்களில் போராடியிருக்கிறான். இம்முறை போலி இரக்கம் அவனை ஆட்கொண்டுவிட்டது. தன் உற்றார் உறவினரைக் கொல்லுவதற்கு அவன் தயங்கினான். கொல்லுவது என்ற பிரச்னையைக் குறித்து அவன் விவாதிக்கவே இல்லை. ஒருவனை மிகக் கொடியவன் என்று தான் கருதினாலும்கூட, அவனைக் கொல்லப் போவதில்லை என்று அர்ஜுனன் ஒருபோதும் கூறவில்லை. ஒவ்வொருவருடைய உள்ளத்தின் ஆழத்திலும் இருக்கும் எண்ணங்களை ஸ்ரீகிருஷ்ணன் அறிவார். அர்ஜுனனுக்கு ஏற்பட்ட தாற்காலிகமான மயக்கத்தை கிருஷ்ணன் தெரிந்துகொண்டார். எனவே அவனிடம் கிருஷ்ணன் சொன்னார்: "கொல்லும் வேலையை நீ முன்பே செய்துவிட்டாய். எனவே, திடீரென்று நீ அகிம்சையைக் கடைப்பிடிப்பதாகக் கூறிக்கொள்ள முடியாது. நீ முன்பே ஆரம்பித்துவிட்ட காரியத்தைச் செய்து முடித்துவிடு."

ஸ்காட் எக்ஸ்பிரஸ் ரயில் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும் ஒருவர், திடீரென்று பிரயாணத்தில் வெறுப்புற்று வண்டியிலிருந்து கீழே குதித்துவிடுவாராயின், அவர் தற்கொலைக் குற்றத்தைச் செய்தவர் ஆகிறார், பிரயாணத்தின் அல்லது ரயில் வண்டியின்மூலம் செய்யும் பிரயாணத்தின் உபயோகத்தை அவர் அறிந்து கொள்ளவில்லை என்றே ஏற்படும். அர்ஜுனனின் நிலையும் அத்தகையதுதான். அகிம்சா மூர்த்தியான கிருஷ்ணன், அர்ஜுனனுக்கு இதைத் தவிர வேறுவிதமான புத்திமதி எதுவும் கூறமுடியாது. குறிப்பிட்ட ஒரு சந்தர்ப்பத்தில் கொல்லும்படி புத்திமதி கூறப்பட்டிருக்கிறது என்பதற்காக, கீதை இம்சையை உபதேசிக்கிறது என்றோ அல்லது யுத்தம் நியாயமே என்று வலியுறுத்துகிறது என்றோ கூறிவிடுவதற்கில்லை. அவ்விதம் கூறுவது, இம்சையே வாழ்க்கை முறை என்று கூறுவதைப்போல் தவறாகும். தினசரி வாழ்க்கையில் ஓரளவு இம்சை தவிர்க்க முடியாதது என்பதற்காக, இம்சையே வாழ்க்கையின் நியதி என்று கூறிவிட முடியுமா? கீதையை வாசித்து அதன் உட்கருத்தை உணரும் ஒருவருக்கு, அகிம்சையின் ரகசியத்தையும், இந்த உடலைக் கொண்டு தன்னைத் தானே அறிந்துகொள்ளும் ரகசியத்தையும் அது போதிக்கிறது.

திருதராஷ்டிரன், யுதிஷ்டிரன், அர்ஜுனன் ஆகியோர் யாவர்? கிருஷ்ணன் யார்? இவர்களெல்லாம் சரித்திர பூர்வமான பாத்திரங்களா? அப்படித்தான் என்று கீதையாவது வர்ணிக்கின்றதா? யுத்தத்தின் நடுவில் அர்ஜுனன் போரிடுவதைத் திடீரென்று நிறுத்திவிட்டு கிருஷ்ணனிடம் கேள்வி கேட்பதும், அவனுக்கு கிருஷ்ணன் கீதை முழுவதையும் எடுத்துக் கூறுவதும் உண்மையா? அந்த கீதை எது? தனது மயக்கம் தீர்ந்துவிட்டதாகப் பிரகடனம் செய்தபின் அர்ஜுனன் அதை மறந்து விட்டு, மறுபடியும் கீதையை கானம் செய்யும்படி கிருஷ்ணனை வேண்டிக் கொண்

டானே, அந்த கீதையா? அல்லது மீண்டும் கானம் செய்ய முடியாததால் கிருஷ்ணன் அனுகீதை வடிவில் அவனுக்கு எடுத்துக் கூறினரே, அந்த கீதையா?

துரியோதனனேயும் அவனது கோஷ்டியினரையும் மனிதனிடம் உள்ள இழிவான குணங்களாகவும், அர்ஜுனனேயும் அவனது கோஷ்டியினரையும் மனிதனின் உயர்ந்த குணங்களாகவும் நான் கருதுகிறேன். போர்க்களம் நமது சொந்த உடலே. அந்த இரு விதமான உணர்ச்சிகளுக்கும் இடையே நிரந்தரமான போராட்டம் நடந்து கொண்டு வருகிறது. தீர்க்கதரிசியான கவி அவற்றைக் தெளிவாக விவரித்திருக்கிருர். உள்ளத்தில் உறைபவர் தான் கிருஷ்ணன். தூய்மையான உள்ளம் படைத்தவரின் செவிகளில் படும்படி அவர் எப்போதும் மெதுவாகப் பேசிக் கொண்டிருக்கிருர். கெடியாரத்துக்கு சாவி தேவையாக இருப்பது போலவே, உள்ளத்திற்கும் தூய்மை என்ற சாவி தேவையாக இருக்கிறது. இல்லாவிடில், உள்ளத்தில் உறைபவர் பேசுவதை நிறுத்திவிடுவார்.

ஸ்தூலமான யுத்தம் என்ற பிரச்னேயே எழுவதற்கில்லே என்று கூற முடியாது. அகிம்சையைப் பற்றியே அறியாதவர்களுக்கு உள்ளம் சோர்வடைந்துவிடும்படியான உபதேசம் எதையும் கீதை செய்யவில்லே. எவன் பயப்படுகிருனே, எவன் தன் தோலேக் காப்பாற்றிக் கொள்ள முற்படுகிருனே, எவன் தன்னுடைய வெறிக்குணங்களுக்கு இடம் கொடுக்கிருனே அவன், தான் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், உடல் வலிமையை அடிப்படையாகக் கொண்ட ஸ்தூலமான போராட்டத்தில் ஈடுபட்டுத்தான் தீர வேண்டும். எனினும், அது அவனுடைய தருமம் அல்ல. தருமம் என்பது ஒன்றே ஒன்றுதான். அகிம்சை என்பது மோட்சமே. சத்தியத்தை உணருவதே மோட்சமாகும். இதில் கோழைத்தனத்திற்கு இடமே இல்லே. விசித்திரமான இந்த உலகில் இம்சை நிரந்தரமாக நிகழ்ந்து கொண்டுதான் இருக்கும். அதிலிருந்து விடுதலே பெறுவதற்கான வழியையே கீதை காட்டுகிறது. கோழைத்தனத்திலிருந்தும் சோர்விலிருந்தும் தப்பி ஓடுவது, அவற்றிலிருந்து விடுதலே பெறுவதற்கான வழி அல்ல என்பதையும் கீதை காட்டுகிறது. கோழைத்தனத்தைக் காட்டிலும், யுத்தத்தில் கொல்லுவதும் கொல்லப்படுவதும் எவ்வளவோ சிறந்ததாகும்.

அன்பர் மேற்கோள் காட்டியுள்ள சுலோகங்களின் அர்த்தம் இன்னும் கூட தெளிவாகப் புரியவில்லே எனில், அதை அவ்விதம் புரிய வைக்கும் திறமை எனக்கு இல்லே என்றுதான் கூற வேண்டும். எல்லாம் வல்ல இறைவன் சிருஷ்டி கர்த்தா என்பதும், பாதுகாப்பவர் என்பதும், அழிப்பவர் என்பதும், அவர் அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதும் ஒப்புக்கொள்ளப்படுகின்றனவா? அவர் படைப்பவர் எனில், அழிக்கவும் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றி அவருக்கு உரிமை உண்டு. அப்படியிருந்தும் அவர் அழிப்பதில்லே; ஏனெனில் அவர் படைப்பதில்லே. ஆனுல், அவரது ஆணே என்னவெனில், பிறப்பவை யாவும் இறக்க வேண்

டும் என்பதுதான். அதில்தான் அவரது கருணை அடங்கியிருக்கிறது. அவரது விதிகள் மாற்ற முடியாதவை. அவர் தமது மனம் போனபடி அந்த விதிகளை மாற்றிக் கொண்டிருப்பாராயின், நாம் எல்லோரும் எங்கே இருப்போமோ?

—'எங் இந்தியா' – 12—11—1925

## 20

# அர்ஜுனனைப்போல் கடமையைச் செய்தனர்

தென்னாப்பிரிக்காவில் நடந்த போயர் யுத்தத்தின் போது இந்தியர்கள் அடங்கிய வைத்தியப் படை செய்த பேருதவியைப் பற்றி காந்திஜி பலவிடங்களிலும் குறிப்பிட்டுள்ளார். அவ்விஷயமாக கல்கத்தாவில் நடந்த கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசிய போது, கீதையைப் பற்றிக் குறிப்பிட்டார். அவர் கூறியதாவது:

"ஓர் ஹிந்து என்ற முறையில், எனக்கு யுத்தத்தில் நம்பிக்கை இல்லை. எனினும், யுத்தத்தைச் சிறிதளவாவது நான் ஆதரிக்கும் படி ஏதாவது செய்யக் கூடுமாயின், அது தென்னாப்பிரிக்கப் போர் முனையில் நாங்கள் பெற்ற சிறந்த அனுபவமேயாகும். அப்போது ஆயிரக்கணக்கானவர்கள் போர் முனை சென்றதற்குக் காரணம் ரத்த வெறி அல்ல என்பது நிச்சயம்தான். நமது உணர்ச்சிகளைப் புண்படுத்தாத வகையில் ஒரு புனிதமான பெயரை இச்சந்தர்ப்பத்தில் நான் உபயோகிக்கலாம் எனில், அர்ஜுனனைப் போலவே அவர்கள் போர் முனைக்குச் சென்றார்கள். அவ்விதம் செல்லுவது தங்களுடைய கடமை என்று அவர்கள் கருதினார்கள். இறுமாப்பும், முரட்டு சுபாவமும், காட்டுமிராண்டித் தனமும் கொண்ட எத்தனை பேரை சாந்த சுபாவம் உள்ளவர்களாக அந்த யுத்தம், மாற்றிவிட்டது தெரியுமா?"

—"இங்கிலீஷ் மென்" – 28—1—1902

## 21

# பெசண்டு அம்மையாருக்குக் கடிதம்

*ஜோகன்னஸ்பர்க், 13-5-1905*

ஸ்ரீமதி அன்னி பெசண்ட்,
சென்ட்ரல் ஹிந்து கல்லூரி,
வாரணாசி.

அன்பார்ந்த அம்மையாருக்கு,

பகவத் கீதையை மீண்டும் பிரசுரித்ததன் சம்பந்தமாக இண்டர் நாஷனல் அச்சகத்தாருக்கு நீங்கள் எழுதிய கடிதத்தை, அவர்கள் எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். அதை மறுபடியும் பிர

சுரிக்கும்படியும், அதில் உங்களுடைய படத்தைச் சேர்க்கும்படியும் யோசனை கூறிய பொறுப்பு முற்றிலும் என்னைச் சார்ந்ததே. சாதாரணமாக, ஆசிரியரின் அனுமதியின்றி ஒரு புத்தகத்தை மீண்டும் பிரசுரிப்பது ஒழுங்கு அல்ல என்றே கருதப்படுகிறது. பகவத் கீதையின் மொழி பெயர்ப்பை அடக்க விலைக்கு அச்சடித்துத் தருவார்களாயின், அந்தச் செலவைத் தாம் ஏற்றுக் கொள்ளுவதாக ஒரு கனவான் கூறினார். அந்தப் பிரதிகளை, ஹிந்து சிறுவர்களுக்கும் மற்றவர்களுக்கும் வழங்க வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். அவ்விஷயமாக அவர் அவசரப்பட்டார். எனவே, பகவத் கீதைக்குத் தாங்கள் எழுதியுள்ள மொழி பெயர்ப்பை மீண்டும் பிரசுரித்து விநியோகம் செய்யும்படி யோசனை கூறப்பட்டது. அதன் சம்பந்தமாக என்னுடைய அபிப்பிராயத்தையும் கேட்டார்கள். மிகவும் தீர்க்காலோசனை செய்த பின், தென்னாப்பிரிக்காவில் விநியோகிப்பதற்காக உங்களுடைய மொழி பெயர்ப்பை மீண்டும் அச்சடிக்கலாம் என்று நான் யோசனை கூறினேன். உங்களைக் கேட்டுச் செய்வதற்கும் அவகாசம் இல்லை. பகவத் கீதையின் மொழி பெயர்ப்பை மீண்டும் அச்சடிக்க வேண்டும் என்ற நோக்கம் தூய்மையானது. எனவே, எந்தக் காரணத்திற்காக அது பிரசுரமாகிறது என்பதை நீங்கள் அறிந்தால், உங்களிடம் அனுமதி பெறாமல் அது பிரசுரிக்கப் பட்டதை நீங்கள் பொருட்படுத்தமாட்டீர்கள் என்று எனக்குத் தோன்றியது. அது பிரசுரிக்கப்பட்ட அதே சமயத்தில், மேற்கண்ட விவரங்கள் அடங்கிய ஒரு கடிதத்தையும் அச்சக சொந்தக்காரர் உங்களுக்கு அனுப்பி வைத்தார். ஆனால், அக் கடிதம் தங்களுக்கு வந்து சேரவில்லை என்று தெரிகிறது. பகவத் கீதையின் மறு பிரசுரத்தை ஆட்சேபித்தோ அல்லது அங்கீகரித்தோ தங்களிடமிருந்து பதில் எதுவும் ஏன் வரவில்லை என்பது எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. நீங்கள் பதில் எதுவும் எழுதவில்லை என்பது, மார்ச் 27-ஆம் தேதி நீங்கள் அனுப்பியுள்ள கடிதத்திலிருந்து வெளியாகிறது. அந்த மொழி பெயர்ப்பில் பிரசுரமாகியுள்ள படம் சம்பந்தமாக நான் ஒன்று கூறமுடியும். அவ்விதம் பிரசுரித்தது தவறாயின், அதற்குக் காரணம் உங்கள் மீதுள்ள மிதமிஞ்சிய பக்தியே ஆகும். அந்த நூலில் படத்தைச் சேர்க்க வேண்டும் என்று நான் யோசனை கூறியபோது, சிலர் அதற்கு எத்தகைய விளக்கம் கொடுப்பார்கள் என்பதை நான் உள்ளூற உணர்ந்திருந்தேன். இருந்தாலும், அதைப் பிரசுரிப்பது தவறாக இருக்குமாயின், அந்தத் தவறுக்காக நீங்கள் கோபம் அடைய மாட்டீர்கள் என்றும் எண்ணினேன். ஏனெனில், அவற்றில் பெருவாரியான பிரதிகள் இந்திய இளைஞர்களுக்கே கொடுக்கப் பட்டுள்ளன. தெய்விக நூல்களில் அத்தகைய படங்களைப் பிரசுரிப்பது சரியாயினும், தவறாயினும், இந்தியாவில் அது சாதாரணமாக நிகழ்ந்துவருவதைத் தாங்கள் அறிவீர்கள். ஆயிரம் பிரதிகளே இப்போது கைவசம் இருக்கின்றன. இந்தப் பிரதிகளும், இப்போது ஒவ்வொரு மாதமும் ஐந்து பிரதிகள் விகிதம் விநியோகிக்கப்படுகின்றன அல்லது விற்கப்படுகின்றன.

இப்போது நான் எல்லா விவரங்களையும் உங்களிடம் கூறி விட்டேன். உங்கள் மனத்தைப் புண்படுத்தியுள்ள இந்தக் குற்றத்திற்காக நான் என் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவிப்பதுடன், தங்களிடம் மன்னிப்பும் கோருகிறேன். இவ்விஷயமாக பகிரங்க அறிக்கை ஏதாவது வெளியிட வேண்டியது அவசியமா? மேற்கொண்டு அந்தப் பிரதிகளை வினியோகிக்காமல் முற்றிலும் நிறுத்தி விடவேண்டுமா? அல்லது அவற்றில் உள்ள படத்தை எடுத்து விட்டால் போதுமா? உங்கள் விருப்பம் எதுவாயினும், அது நிறைவேற்றப்படும்.

தங்கள் ஊழியன்,

**மோ. க. காந்தி.**

# 22

# எல்லோரும் சமம்

ஒரு மனிதரைக் கூட தீண்டாதவராகக் கருதுவதற்கு ஹிந்து மதத்தில் ஆதாரம் இல்லை என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். தமது மதத்தை நன்கு அறிந்து அதன்படி வாழும் ஒரு பிராம்மணர், ஒரு சூத்திரரைத் தமக்குச் சமமானவராகவே கருதுவார். ஒரு பிராம்மணனைக் காட்டிலும் ஒரு சண்டாளன் எந்த விதத்திலும் தாழ்ந்தவன் அல்ல என்றே பகவத் கீதை போதிக்கிறது. பிராம்மணனைவிட சண்டாளன் எந்த வகையிலாவது தாழ்ந்தவன் என்று கீதை ஓரிடத்தில் கூட கூறவில்லை. பிராம்மணன் அகந்தைகொண்டு தன்னை உயர்ந்தவன் என்று கருதும் அந்த விநாடியிலேயே அவன் பிராம்மணனுக இருக்கும் தன்மையை இழந்து விடுகிருன். எல்லா மக்களுடைய நன்மைக்காகவும் தாங்களாக முன்வந்து தியாகம் செய்துள்ள பிராம்மணர்களுக்கு இந்தியா மிகவும் கடன்பட்டிருக்கிறது. பிராம்மணர்கள் தான் கடவுளை, தாசர்களுக்கெல்லாம் தாசர் என்றும், வீழ்ச்சியுற்றவர்களைத் தூய்மைப்படுத்துகிறவர் (பதித பாவனன்) என்றும் கூறியிருக்கிருர்கள். தூய்மையான இதயம் படைத்தவர்களாயின், வேசியும் சண்டாளனும் கூட மோட்சத்தை அடைய முடியும் என்று கற்பித்தவர்கள் பிராம்மணர்கள்தான்.

—'எங் இந்தியா' - 11-5-1921

# 23

# ஒரே கடவுளை வணங்குவோர்

எல்லா வகுப்பு வேற்றுமைகளையும் அகற்றிவிட முடியும் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனல், கீதையில் கிருஷ்ண பகவான் போதித்துள்ள சமத்துவ சித்தாந்தத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய

நான்கு சாதிகளையும் சேர்ந்த எல்லோரையும் சம அந்தஸ்துடன் நடத்தவேண்டும் என்றே கீதை நமக்கு போதிக்கின்றது. தோட்டியைப் போல் பிராம்மணனுக்கும் அது ஒரேவிதமான தருமத்தை விதிக்கவில்லை. எனினும், உயர்ந்த அறிவும் பாண்டித்யமும் பெற்றுள்ள பிராம்மணனை நடத்துவதுபோல் தோட்டியையும் அன்புடனும் மதிப்புடனும் நடத்தவேண்டும் என்று கீதை கூறுகிறது. எனவே, தீண்டாதவர்களை வெறுக்காமலும், தாழ்ந்தவர்கள் என்று கருதாமலும் இருக்க வேண்டியது நம்முடைய கடமையாகும். ஒரே கடவுளை வணங்கும், உடலையும் ஆன்மாவையும் தூய்மையாக வைத்துக்கொள்ளும் ஒருவர், பிராம்மணராயினும் தோட்டியாயினும், அவர் விஷயத்தில் நான் எப்படி வேற்றுமை பாராட்ட முடியும்?

# 24

# கீதையும் சுதேசியும்

சுதேசிக் கொள்கைகளை மீறி நடப்பது மக்களுக்குத் தொண்டு செய்வதாகாது. அதனால்தான், "ஒருவருடைய சொந்தக் கடமையைச் செய்துகொண்டே அதாவது சுயதர்மத்தைப் பின்பற்றிய வண்ணம் இருப்பதுதான் சிறந்தது. பரதர்மத்தை அதாவது மற்றொருவரின் கடமையைச் செய்வதில் அபாயம் நிறைந்திருக்கிறது" என்று கீதை கூறுகிறது. சுயதர்மத்தைப் பற்றி கீதை கூறியிருப்பது, சுதேசிக்கொள்கை விஷயத்திலும் கூட பொருந்தும். சுயதர்மத்தின் ஓர் அம்சமே சுதேசியாகும்.

# 25

# சோதனைகளைச் சமாளிக்க கீதையின் பேருதவி

மன்ஷுக்லால் ஹீராலால் நாஸர், தென்னப்பிரிக்காவில் இந்தியர்களின் நலனுக்காக நடந்த 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து சிறந்த தொண்டு புரிந்தார். அவர் 20-1-1906-இல் காலமானபோது, அவரது அருமை பெருமைகளைப் பற்றி 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையில் காந்திஜி நீண்ட கட்டுரை ஒன்று எழுதியிருந்தார். அக்கட்டுரையிலிருந்து ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

"ஸ்ரீ நாஸரின் உதவி கிடைத்திராவிடில், 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையையே ஆரம்பித்திருக்க முடியாது. அவர் அப்

பத்திரிகையின் ஆசிரியர் பதவியைத் திறம்பட வகித்ததுடன், அதன் கொள்கையை உருவாக்கியவரும் அவர்தான். அவரை, தன்னலம் கருதாத ஒரு யோகி என்றே சொல்லவேண்டும். சாதி, மத வேற்றுமையே அவரிடத்தில் இல்லை. வாழ்க்கையில் அவருக்கு ஆறுதலை அளித்த ஒரே நூல் பகவத் கீதையே. கீதையின் தத்துவம் அவரது மனத்தில் ஊடுருவியிருந்தது. கீதையில் உள்ள எல்லா சுலோகங்களும் அவருக்கு மனப்பாடமாக இருந்தன. அவருக்கு வாழ்க்கையில் பற்பல சோதனைகள் ஏற்பட்டன. சோதனைகள் ஏற்பட்ட காலத்தில் கூட அவர் நிதான புத்தியையும் மன அமைதியையும் இழந்துவிட வில்லை. கீதையின் உபதேசம் அவரது மனத்தில் பதிந்திருந்ததே, அவரது அந்த நிலைக்குக் காரணமாகும்.''

# 26

# நன்மையிலிருந்து தீமை ஏற்பட முடியாது

ஒரு நல்ல நடவடிக்கையிலிருந்து ஒரு காலத்திலும் தீமை ஏற்பட முடியாது என்று எனது கீதை எனக்குக் கூறுகின்றது. நான் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவன் என்பதைச் சிலர் நிராகரிக்கின்றனர். ஏனெனில், நான் பூரண அகிம்சையில் நம்பிக்கையுள்ளவன், பூரண அகிம்சையை உபதேசிக்கிறவன் அல்லவா? கீதை கலப்பற்ற பூரண அகிம்சையையே உபதேசிக்கின்றது என்று நான் வற்புறுத்தும்போது, அதன் அர்த்தத்தை நான் சிதைத்துக் கூறுவதாக சிலர் சொல்லுகின்றனர். குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் கொல்லுவதே கடமையாகின்றது என்று கீதை கட்டளையிடுவதாக எனது ஹிந்து நண்பர்களில் சிலர் கூறுகின்றனர். மிகவும் பண்டிதரான ஒரு சாஸ்திரி, கீதைக்கு நான் கூறிய விளக்கத்தை சமீபத்தில்தான் கேலி செய்து மறுத்தார். தீய சக்திகளுக்கும் நல்ல சக்திகளுக்கும் நிரந்தரமாக நடந்து வரும் போராட்டத்தையே கீதை சித்திரிக்கிறது என்றும், நம் உள்ளத்தில் உள்ள தீய எண்ணங்களை தயக்கமோ தயவு தாட்சண்யமோ சிறிதுமின்றி அகற்றுவதே நமது கடமையென கீதை உபதேசிக்கிறது என்றும் சில வியாக்கியான கர்த்தாக்கள் கூறியிருப்பதற்கு ஆதாரம் இல்லை என்று அந்தப் பண்டிதர் குறிப்பிட்டார்.

# 27
# விஷம் இட்டவனை மன்னித்தார்

"ஆரிய சமாஜத்தினரின் பரந்த உள்ளத்தை நீங்கள் அறிவீர்களா? மகரிஷி தயானந்தர்*, தமக்கு விஷம் கொடுத்தவனை மன்னித்துவிட்டார் என்பதை நீங்கள் அறிவீர்களா?" என்று ஒரு சமயம் சுவாமி சிரத்தானந்தர் என்னைக் கேட்டார். அச் சம்பவத்தை நான் தெரிந்து கொண்டிருந்தேன். அதைப் பற்றி நான் எப்படி அறியாமல் இருந்திருக்க முடியும்? யுதிஷ்டிரரையும், கீதையின் உபதேசத்தையும், உபநிடதங்களையும் உதாரணமாகக் கொண்ட மகரிஷி தயானந்தர் வேறு எவ்விதமாக நடந்து கொண்டிருக்க முடியும்? தமக்கு விஷமிட்டவனை தயானந்தர் மன்னித்ததைக் குறித்து சுவாமி சிரத்தானந்தர் விவரமாகக் கூறினார். அவர் அவ்விதம் கூறியது, தயானந்தரிடம் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியையே காட்டியது. மகரிஷியின் சீடரான சிரத்தானந்தரிடமும் குருவைப் போன்ற உயர்ந்த குணம் இருந்தது என்பதைக் கூற விரும்புகிறேன். முஸ்லிம்களிடம் துவேஷம் காட்டக் கூடாது என்பதே சுத்தி இயக்கத்தின் தத்துவம் என்று சிரத்தானந்தஜி என்னிடம் கூறினார். "கடவுளின் படைப்பு ஒவ்வொன்றிலும் உன்னையே நீ பார்க்க வேண்டும்" என்ற கீதையின் கொள்கையே சுவாமியின் கொள்கையாகும்.

# 28
# கெட்டவர்கள் யார்?

தருமத்தைப் பாழ்படுத்தும் தீயவர்கள் உண்டாகும் போதெல்லாம், அவர்களை ஒழித்துவிடுவதற்காக கடவுள் யாரையாவது அனுப்புகிறார் என்று கீதை கூறுகிறது. புகழ் பெற்ற அந்த சுலோகத்திற்கு† ஒரு விசேஷ அர்த்தம் இருக்கிறது.

---

* மகரிஷி தயானந்த சரஸ்வதியின் வரலாறு, மகாத்மா காந்தி நூல்கள், 10-வது தொகுப்பு 687–688-ஆம் பக்கங்களில் வெளியாகியிருக்கிறது.

† கீதையின் 4-ஆவது அத்தியாயம், 8-ஆவது சுலோகத்தைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். அந்த சுலோகம் பின்வருமாறு:

परित्राणाय साधूनां विनाशायच दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

பரித்ராணாய ஸாதூனாம் விநாசாயச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே ||

இதன் பொருள்: நல்லவர்களைப் பாதுகாப்பதற்காகவும், துஷ்டர்களை அழிப்பதற்காகவும், தருமத்தை நிலை நிறுத்துவதற்காகவும் யுகந்தோறும் நான் அவதாரம் செய்கிறேன்.

எனவே தங்களுடைய கருத்துக்கு மாருக இருப்பவர்களை, கெட்டவர்கள் என்று இளைஞர்கள் நினைத்துவிடக் கூடாது. தாங்கள் குற்றம் குறையற்றவர்கள் என்றோ, தீச் செயல்களில் ஈடுபடுவோரைத் தண்டிப்பதற்காகவே கடவுள் தங்களை அனுப்பியிருக்கிருர்கள் என்றோ எண்ணுவது வீண் தற்பெருமையேயாகும்.

## 29

# செயல்களைக் கைவிடக் கூடாது

**கேள்வி:** ஏதாவது பலன் அல்லது லாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் யுத்தத்தில் ஈடுபடுவது நியாயமா? இது, கீதையின் உபதேசத்திற்கு எவ்வாறு பொருந்தும் என்பது எனக்குத் தெரியவில்லை. நமது செயலின் பலனை அனுபவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு காலத்திலும் நாம் செயலில் ஈடுபடக் கூடாது என்றே கீதை கூறுகிறது.

**பதில்:** கீதையில் உள்ள அந்த சுலோகத்திற்கு இரண்டு விதமான அர்த்தம் உண்டு. ஒன்று, நமது செயல்களுக்கு சுயநல நோக்கம் காரணமாக இருக்கக் கூடாது. சுயராஜ்யத்தைப் பெற வேண்டும் என்பது சுயநல நோக்கம் அல்ல. இரண்டாவதாக, செயல்களினுல் ஏற்படும் பலன்களில் பற்றுதல் இருக்கக் கூடாது. எனினும், செயல்களினுல் ஏற்படும் பலன்களைப் பற்றி அறிந்து கொள்ளாமல் இருப்பதோ, அவற்றை அலட்சியம் செய்வதோ அல்லது அவற்றை ஏற்றுக்கொள்ள மறுப்பதோ அதன் அர்த்தம் அல்ல. பற்றுதலின்றி இருக்க வேண்டும் எனில், ஒரு காலத்திலும் செயல்களைக் கைவிட்டுவிட வேண்டும் என்று அர்த்தம் இல்லை. செயல்களைக் கை விட்டு விட்டால், அவற்றிற்கான பலன் ஏற்படாமல் இருக்கும் என்று எண்ணக் கூடாது. அதற்கு மாருக, ஒரு செயலின் விளைவாக காலக்கிரமத்தில் குறிப்பிட்ட பலன் நிச்சயமாகக் கிடைத்தே தீரும் என்பதில் உள்ள அசைக்க முடியாத நம்பிக்கையே அதற்கு ருஜுவாகும்.

---

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேசங்களிலும் இதன் சம்பந்தமான விவரங்களைக் காண்கிருேம், ''இறைவனுல் பூமிக்கு அனுப்பப்படும் தூதரை, அவதார புருஷர் என்று சொல்லுகிருேம். அவர் ஒரு பெரிய சக்கரவர்த்தியின் பிரதிநிதியைப் போன்றவர். வெகு தொலைவிற்கு அப்பால் இருக்கும் பிரதேசத்தில் கலகம் ஏற்பட்டால், அதை அடக்குவதற்கு மன்னன் தனது பிரதிநிதியை அனுப்புகிருன் அல்லவா? அதுபோலவே உலகத்தில் எங்கேயாவது தருமம் குன்றி அதர்மம் மேலோங்கும்போது, அங்கே தருமத்தைப் பாதுகாத்தும் அதர்மத்தை ஒழித்தும் நிலைமையைச் சீர்படுத்துவதற்காக கடவுள் தமது அவதார புருஷரை அனுப்புகிருர்.''

## 30

# மக்களின் உண்மையான தொண்டர்

[ஜன்மாஷ்டமி தினத்தன்று, மைசூரை சேர்ந்த அர்சிகரியில் நடந்த கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

''வருடந்தோறும் ஒவ்வொரு ஜன்மாஷ்டமியிலும் நாம் கிருஷ்ண பகவானை தியானம் செய்து, கீதையை வாசிக்க வேண்டும். அதன் உபதேசங்களை நடைமுறையில் அனுசரிக்க உறுதி கொள்ள வேண்டும். அவ்விதம் செய்து வந்திருப்போமாயின், இன்றுள்ள மோசமான நிலையில் நாம் இருக்க மாட்டோம். கிருஷ்ணன் தமது ஆயுள் முழுவதும் மக்களுக்குத் தொண்டு புரிந்தார். எனவே, அவர்தான் மக்களின் உண்மையான தொண்டர். குருக்ஷேத்திரத்தில் அவர் படைகளுக்குத் தலைமை வகித்து, போரை நடத்தியிருக்க முடியும். எனினும், அவர் அர்ஜுனனின் சாரதியாக இருப்பதையே விரும்பினர். அவரது வாழ்க்கை இடையருத ஒரு கரும கீதையேயாகும். அகந்தை கொண்ட துரியோதனன் அளித்த உயர்ந்த ராஜ உணவை அவர் நிராகரித்துவிட்டு, விதுரர் கொடுத்த ஏழ்மையான கீரை உணவை விருப்பத்துடன் உட்கொண்டார். அவர் குழந்தைப் பருவத்தில் இடையனுக இருந்தார். எனவே அவரை இன்றும் கூட கோபாலன் என்று அழைக்கிருேம். ஆனல், கிருஷ்ணனை வணங்கி வரும் நாம் இன்று பசுவை அசட்டை செய்துவிட்டோம். ஆதிகர்நாடகர்கள் பசுக்களைக் கொன்று தின்றுவருகிருர்கள். அதனல் நமது குழந்தைகளும் நோயாளிகளும் பசும்பால் இராமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. தூக்கத்தையோ அல்லது சோம்பலையோ கிருஷ்ணன் அறியார். அவர் தூக்கமில்லாமல் உலகத்தைப் பாதுகாத்து வந்தார். அவருடைய சந்ததிகளான நாம் சோம்பேறிகளாகி, கைகளை உபயோகித்து உழைக்கும் வழியை மறந்துவிட்டோம்.

''கீதையில் கிருஷ்ணன், பக்தி மார்க்கத்தைக் காட்டியுள்ளார். பக்தி மார்க்கத்திற்கு கரும மார்க்கம் என்பதே பொருள். நாம் பக்தர்களாக இருக்க விரும்பினலும், ஞானிகளாக இருக்க விரும்பினலும் அதற்கு கருமம் ஒன்றுதான் வழி என்பதை லோகமான்யரும் எடுத்துக் காட்டியுள்ளார். எனினும், நாம் செய்யும் கர்மம் அல்லது கடமை பிறருக்குச் செய்வதாக இருக்கவேண்டும்; சுயநலனை உத்தேசித்துச் செய்வதாக இருக்கக் கூடாது. நமது சொந்த நலனை உத்தேசித்துச் செய்யும் காரியம் நம்மைக் கட்டுப்படுத்துகிறது. ஆனல், பிறருக்காகச் செய்யும் காரியம் அடிமைத்தனத்திலிருந்து நம்மை விடுதலை செய்கிறது.

''நாம் உண்மையான பக்தர்களாக இருக்க வேண்டுமாயின், ஒரு பிராம்மணனுக்கும் ஒரு தோட்டிக்கும் இடையே நாம்



பத்திரிகை வேலையை மகாத்மா கவனித்தபோது எடுத்த படம்.



மக்கள் உய்ய வழிகாட்டி எழுதிவந்த மகாத்மாவின் இக்கரம்தான் தமக்கு வாழ்க்கை வழிகாட்டியாக அமைந்த கீதைக்கும் விளக்கம் எழுதியது.

யாதொரு வேற்றுமையும் பாராட்டக் கூடாது என்று கிருஷ்ணன் நமக்கு உபதேசம் செய்துள்ளார். அது உண்மையாயின், பின்னர் ஹிந்து மதத்தில் தீண்டாமைக்கு இடம் இல்லை. நீங்கள் இன்னும் அந்த மூட நம்பிக்கையைத் தழுவிக் கொண்டிருப்பீர்களாயின், கிருஷ்ணன் பிறந்த இந்தப் புனித தினத்தில் அதை உதறித் தள்ளிவிடுங்கள். அப்போதுதான் நீங்கள் தூய்மையானவர்களாக இருக்க முடியும். கீதையைப் பிரமாணமாகக் கொண்டவன், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் பாராட்ட மாட்டான். ஏனெனில், கடவுளை எந்தப் பெயரால் வணங்கினாலும் உண்மையான உணர்ச்சியுடன் வணங்குபவனே இருதய பூர்வமாக வணங்குபவன் ஆகிறான் என்று கிருஷ்ணன் கூறியிருக்கிறார். கீதை விவரித்துள்ள பக்தி, கருமம், அன்பு மார்க்கத்தில் மனிதனை மனிதன் வெறுப்பதற்கே இடம் இல்லை.”

# 31

# திருமணப் பரிசு

சாபர்மதி ஆசிரமத்தில் *1928*-ஆம் ஆண்டில் காந்திஜியின் மூன்றாவது குமாரனான ராமதாசின் திருமணம் நடைபெற்றது. அப்போது மணமகனும் மணமகளும் தூய வெண்மையான கதர் உடைகளை உடுத்தியிருந்தனர். அவர்கள் யாதொரு ஆபரணமும் அணிந்து கொள்ளவில்லை. அவர்களுக்கு ஒரு கீதை நூல், ஆசிரம பஜனாவளி, இரண்டு தக்ளிகள், ஒரு ராட்டினம் ஆகியவை மாத்திரமே திருமணப் பரிசுகளாகக் கிடைத்தன. திருமண வைபவத்தின் போது கீதையிலிருந்து ஓர் அத்தியாயம் வாசிக்கப் பட்டது. அப்போது புது தம்பதிகளுக்கு ஆசி கூறி காந்திஜி பேசியதன் ஒரு பகுதியே கீழே தரப்பட்டுள்ளது:

‘‘இரண்டு தக்ளிகள், என் உயிர் போன்ற கீதை, பஜனாவளியின் பிரதிகள் ஆகியவற்றைத் தவிர, உங்களுக்கு நான் வேறு எவ்விதப் பரிசுகளும் கொடுப்பதற்கில்லை. நான் விரும்பியிருந்தால், நண்பர்களிடமிருந்து உங்களுக்காக விலையுயர்ந்த பரிசுகளைப் பெற்றிருக்க முடியும். ஆனால், எனது நிலைமைக்கு இவைதான் ஏற்ற பரிசுகளாகும். எனக்கு கீதை, ஒரு வைரச் சுரங்கமாக இருக்கிறது. உங்களுக்கும் அதுவே ஒரு வைரச் சுரங்கமாக இருக்கவேண்டும் அது எப்போதும் வாழ்க்கையில் உங்களுக்கு வழிகாட்டியாகவும், நண்பனாகவும் இருந்துவர வேண்டும். நீங்கள் சமூகத்திற்குத் தொண்டு புரிய இறைவன் உங்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பாராக.’’

## 32

# ஹிந்து மதத்தின் சாரம்

கீதையை இயற்றிய மகா புருஷர், அதன் மூலம் மதத்தின் சாரத்தையே பிழிந்து கொடுத்துள்ளார். கீதையில், ஆழ்ந்த கருத்துக்களுடன் கூடிய வேதாந்தம் அடங்கியிருக்கிறது. அப்படியிருந்தும், அதை சாதாரண அறிவு படைத்தவர்கள் கூட எளிதில் அறிந்துகொள்ள முடியும். எல்லா ஹிந்துக்களும் சுலபமாக வாசிக்கக் கூடிய ஒரே நூல் கீதைதான். மற்ற எல்லா வேத நூல்களும் எரிந்து சாம்பலாகிவிட்டால் கூட, எழுநூறு சுலோகங்கள் அடங்கிய அழிவற்ற இந்த நூல், ஹிந்து மதம் என்ன என்பதையும், ஒருவர் அந்த மதத்திற்கிணங்க எப்படி வாழ முடியும் என்பதையும் விளக்குவதற்குப் போதுமானது. சென்ற நாற்பது ஆண்டுகளாக கீதையின் உபதேசங்களை அனுசரித்தே வாழ நான் முயற்சித்து வருகிறேன். கீதையின் முக்கிய சித்தாந்தத்திற்கு முரணாக இருப்பதையெல்லாம், ஹிந்து மதத்திற்கு உகந்தவை அல்ல என்று நான் தள்ளிவிடுகிறேன். அது எந்த மதத்தையும், எந்த சமய குருவையும் நிராகரிக்கவில்லை. வாழ்க்கை முறை, வெளிச் சடங்குகளில் அடங்கியதல்ல. முற்றிலும் உள்ளத் தூய்மையிலேயே வாழ்க்கை அடங்கியிருக்கிறது. உடல், ஆன்மா, மனம் எல்லாம் கடவுள் தத்துவத்தில் ஒன்றுபட வேண்டும். கீதையின் இந்த உபதேசமே என் வாழ்க்கையில் ஊடுருவி வந்திருக்கிறது.

## 33

# தரும நூல்களின் திறவுகோல்

கீதையை உலகத்தில் உள்ள தரும நூல்களின் திறவுகோலாகவே நான் கருதுகிறேன். அந்த நூல்களில் அடங்கியுள்ள மர்மமான விஷயங்களையெல்லாம் கீதை எனக்கு சிக்கறுத்துக் காட்டுகிறது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள், யூதர்கள் என்பவையெல்லாம் வசதிக்கான முத்திரைகளேயன்றி, வேறு எதுவும் அல்ல. நாம் யாவரும் இறைவனின் குழந்தைகளே என்பதை கீதை போதிக்கின்றது. எல்லா உயிர்களும் சமமே என்பதும், பாவியையும், முனிவரையும், நாயையும், நாயைத் தின்பவனையும் சமமாகக் கருத வேண்டும் என்பதுமே கீதையின் கொள்கையாகும்.

## 34

# மூன்றாவது வகையான தவம்

ஸாதி ஒரு சிறந்த தொண்டர். 1939-ஆம் ஆண்டில் பம்பாய் அரசாங்கம் செய்த தவறுகளைக் கண்டித்து பதினான்கு நாட்கள் உண்ணாவிரதம் இருக்கப்போவதாக அவர் காந்திஜியிடம் அறிவித்தார். சட்டத்திற்கு உட்பட்ட மற்ற முறைகளைக் கைக்கொண்டு பார்த்த பின், கடைசியாகவே உண்ணாவிரதத்தை மேற்கொள்ள வேண்டும் என்று காந்திஜி அவருக்கு யோசனை கூறினார். ஸாதி பிடிவாதமாக இருக்கவே, "நீங்கள் கீதையை வாசிக்கும் ஒரு பக்தர் அல்லவா?" என்று கேட்டார் காந்திஜி.

"ஆம், நான் கீதையை பக்தியுடன் வாசிப்பவன்தான்" என்றார் ஸாதி.

"அப்படியானால் உங்களுடைய உண்ணாவிரதம், கீதையின் 17-ஆவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூன்றாவது வகையான * தவம் ஆகும். அத்தகைய தவம் அறியாமையையும் பிடிவாதத்தையும் அடிப்படையாகக் கொண்டது" என்றார் காந்திஜி.

இதற்குமேல் விவாதிக்க முடியாமல் ஸாதி தமது உண்ணாவிரதத்தைக் கைவிட்டார். "எனக்கு திருப்தி ஏற்படாவிட்டால், இன்னும் ஒரு மாதம் சென்றபின் நான் உண்ணாவிரதம் இருக்கலாம் என்று நினைக்கிறேன்" என்று கூறி அவர் நிலைமையைச் சமாளித்துக் கொண்டார்.

## 35

# மிருகத்திற்கும் மனிதனுக்கும் உள்ள வேற்றுமை

மனிதனுக்கும் மிருகத்திற்கும் ஒரு மூலாதாரமான வேற்றுமை இருக்கிறது. உள்ளத்தில் உள்ள ஆன்மாவை உணர்ந்து கொள்ள மனிதன் மனமறிந்து முயற்சி செய்கிறான். மிருகத்திற்கு

---

*கீதையில் உள்ள கீழ்வரும் சுலோகத்தின் கருத்தையே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்:

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥

மூடக்ராஹேணாத்மனோ யத் பீடயா க்ரியதே தப:
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்தாமஸ முதாஹ்ருதம்||

கீதை, அத்தியாயம்–17, சுலோகம்-19

இதன் பொருள்: மூடத்தனமான கொள்கையால் தன்னைத்தான் துன்புறுத்தவோ அல்லது பிறரைத் துன்புறுத்தவோ செய்யப்படும் தவமே தாமஸமான அதாவது விவேகமற்ற தவமாகும்

ஆன்மாவைப் பற்றிய கவலேயே இல்லே. கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி பதினெட்டு சுலோகங்கள் பிரார்த்தனையின்போது பாராயணம் செய்யப்படுகின்றன. வாழ்க்கைக் கலேயின் ரகசியத்தையே அந்த சுலோகங்கள் சாரமாகப் பிழிந்து தருகின்றன. அர்ஜுனனின் கேள்விக்குப் பதிலாக கிருஷ்ணன், ஸ்தித - ப்ரக்ஞன் அல்லது உறுதியான நெஞ்சம் படைத்தவனேப் பற்றிய வர்ணனேயின் வடிவில், அந்த சாரத்தைப் பிழிந்து கொடுத்திருக்கிறுர். ஸ்தித ப்ரக்ஞன் என்பதற்கு சத்தியாக்கிரகி என்பதே பொருள்.

# 36

# ஆன்மிகச் சிறப்புக்கு இன்றியமையாதது

ஆன்மிகச் சிறப்பை அடைவதற்கு அஞ்சாமையே இன்றியமையாதது என்று கீதை போதிக்கின்றது. புது வருஷம் பிறக்கும் தினத்தில் மக்கள் பல்வேறு நல்ல தீர்மானங்களேச் செய்து கொள்ளுகிறுர்கள். மனத்திலிருந்து அச்சத்தையெல்லாம் அடியோடு ஒழித்துவிடுவதாக உறுதி செய்து கொள்வதே எல்லாவற்றையும் விட சிறந்த தீர்மானமாகும். மனத்தில் அஞ்சாமை இன்றேல், மற்ற சிறந்த குணங்கள் யாவும் மண்ணேடு மண்ணுகி விடும். அஞ்சா நெஞ்சம் உள்ளவன் மாத்திரம்தான், சத்தியத்தையோ அல்லது அகிம்சைக் கொள்கையையோ மேற்கொள்ளுவது சாத்தியமாகும்.

# 37

# உடல் உழைப்பே யக்ஞம்

மிகுந்த அக்கறையுடன் எதையும் கவனித்துவரும் ஒரு நண்பர் பின் வருமாறு எழுதுகிறுர் :

"ஜாம்ஷெட்பூரில் நீங்கள் செய்த பிரசங்கம் 20-8-1925 'எங் இந்தியா'வில் பிரசுரமாகியிருக்கிறது. அறிவை அடிப்படையாகக் கொண்ட உழைப்பைக் காட்டிலும், உடல் உழைப்பு தான் முக்கியம் என்று நீங்கள் அப் பிரசங்கத்தில் வற்புறுத்தியிருக்கிறீர்கள். அதன் பின் நீங்கள் வருமாறு கூறியதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது :

"ஹிந்து மதம் முழுவதும் அதே கருத்தே ததும்பி நிற்கின்றது. 'உழைக்காமல் உண்பவன் பாவத்தை உண்கிறுன். அவன் உண்மையில் ஒரு திருடனே.' பகவத் கீதையில் உள்ள ஒரு சுலோகத்திற்கு இதுதான் அர்த்தம்." உடல் உழைப்புக்கும் மூளே வேலேக்கும் இடையே கீதை அத்தகைய வேற்றுமை எதையாவது குறிப்பிடுகிறதா என்பது ஒரு புறம் இருக்கட்டும். கீதை

யின் மூன்ருவது அத்தியாயத்தில் உள்ள 12, 13-ஆவது சுலோகங்களே, நீங்கள் கூறும் பொருளை ஓரளவு குறிக்கின்றன என்று சொல்லலாம். முதலாவதாக அது ஒரு சுலோகம் அல்ல; இரண்டு சுலோகங்களே. 'உழைப்பு' பற்றி உங்களுடைய கருத்துக்கு ஆதாரமாக அவற்றை உபயோகித்திருக்கிறீர்கள். இரண்டாவதாக, அந்த சுலோகங்கள் ஒன்றிலாவது உடல் உழைப்பு பற்றியோ மூளை வேலை பற்றியோ எதுவும் குறிப்பிடப்படவில்லை. ஆனல், யக்ஞம் (வேள்வி) என்ற கடமையை விளக்கும் முறையில், முதலாவது சுலோகத்தில் அதைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது தனக்கு அளிக்கப்பட்டதை மனிதன் தேவர்களுடன் பகிர்ந்தோ அல்லது அவர்களுக்கு அர்ப்பணம் செய்துவிட்டோ தான் உட்கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் அவன் உண்மையில் ஒரு திருடனே என்பதுதான் முதலாவது சுலோகம். 'தங்களுக்கென்று மாத்திரம் சமைப்பவர்கள் பாவத்தை உட்கொள்ளுகிருர்கள்' என்று இரண்டாவது சுலோகம் கூறுகிறது. ஆனல், கீதையில் உள்ள சுலோகத்தின் அர்த்தத்திற்கும் நீங்கள் கூறியதாக உங்களுடைய பத்திரிகையிலேயே ஸ்ரீ மகாதேவ தேசாய் குறிப்பிட்டுள்ள அர்த்தத்திற்கும் வெகு தூரம் இருக்கிறது. உங்களுக்கு சௌகரியப்படும்போது இதை நீங்கள் கவனிப்பீர்கள் என்று நம்புகிறேன்."

சொற்களின் அர்த்தத்தை மாத்திரம் கவனிப்போமாயின், நண்பர் கூறுவது சரிதான். அதாவது, ஒரு சுலோகத்தின் மொழிபெயர்ப்பை மாத்திரம் ஸ்ரீ மகாதேவ தேசாய் தரவில்லை; இரண்டு சுலோகங்களையும் சேர்த்தே அவர் மொழி பெயர்த்துள்ளார். எனவே, நண்பரின் திட்டவட்டமான திருத்தத்திற்காக நான் நன்றி செலுத்துகிறேன். கீதையில் உள்ள 'யக்ஞம்' என்ற புகழ் பெற்ற சொல்லுக்கு, எனது பிரசங்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள மொழிபெயர்ப்புக்கு ஆதாரம் இல்லை என்பதே, நண்பருடைய வாதத்தின் சாரம் என்று தோன்றுகிறது. ஆனல், அந்த மொழி பெயர்ப்பை நான் உறுதி செய்கிறேன். நண்பர் குறிப்பிட்டுள்ள மூன்ருவது அத்தியாயத்தின் 12, 13, ஆவது * சுலோகங்களுக்கு ஒரே ஒரு பொருள்தான் இருக்க முடியும் என்று கூறத் துணிகிறேன். 14-ஆவது * சுலோகம் இதை முற்றிலும் தெளிவாக்குகிறது. அந்த சுலோகத்தின் பொருள் இதுதான்:

" உயிர்கள் உணவினுல் வாழ்கின்றன ;
மழையினுல் உணவு உண்டாகின்றது ;
புனித வேள்வியினுல் மழை வருகின்றது ;
வேள்விக்கு விலையாக உழைப்பு அளிக்கப்படுகின்றது "

—எட்வின் அர்னுல்டு மொழி பெயர்ப்பு

---

इष्टान्भोगाहि वो देवा दास्यन्ते यज्ञभाविता:।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव स:॥

*இஷ்டான் போகான்ஹி வோ தேவா தாஸ்யந்தே யக்ஞ பாவிதா:।
தைர் தத்தானப்ரதாயைப்ய: யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ:॥

கீதை, அத்தியாயம் – 3, சுலோகம் – 12

இங்கே உடல் உழைப்புக் கொள்கை மட்டும் விளக்கப்பட வில்லை. தனக்காக மட்டுமின்றி பிறருக்காகவும் உழைக்க வேண்டும் என்ற கொள்கையும் உறுதி செய்யப்பட்டிருக்கிறது என்பதே எனது அபிப்பிராயம். அப்படியானால் மாத்திரம்தான் அது யக்ஞம் அல்லது வேள்வியாக இருக்கமுடியும். புத்தியைக் கொண்டு செய்யும் அற்புத வேலைகளால் மழை வந்துவிடுவ தில்லை. மழை பெய்வதற்கு வெறும் உடல் உழைப்பே காரண மாகும்.

காடுகளில் உள்ள மரங்களை அழிப்பதால் மழை நின்று விடுகிறது. எங்கே மரங்கள் இருக்கின்றனவோ அங்கேதான் மழையும் பெய்கிறது. மரங்கள் எவ்வளவுக்கு அதிகமாகப் பயிரிடப்படுகின்றனவோ அவ்வளவுக்கு அந்தப் பிரதேசத்தில் மழையும் அதிகமாகப் பெய்கிறது. இது விஞ்ஞான ரீதியாக உறுதி செய்யப்பட்டுள்ள உண்மையாகும். இயற்கை விதிகள் முற்றிலும் கண்டுபிடிக்கப்பட்டு விடவில்லை. நாம் ஏதோ மேலெழுந்தவாரியாகத்தான் கிளறிப் பார்த்திருக்கிறோம். உடல் உழைப்பை நிறுத்திவிடுவதால், உடலுக்கும் ஒழுக்கத்திற்கும் ஏற்படக்கூடிய தீங்குகளை யார் அறிவார்? நான் கூறுவதைத் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அறிவைக் கொண்டு உழைப்பதன் மதிப்பை நான் குறைத்துப் பேசவில்லை. எனினும் அறிவைக் கொண்டு எவ்வளவு உழைத்தாலும், அது உடல் உழைப்புக்கு ஈடாகி விடாது. எல்லோருடைய பொதுவான நன்மைக்காகவும் உடல் உழைப்பை நல்கவே நம்மில் ஒவ்வொரு

---

இதன் பொருள்: யக்ஞத்தினால் உபசரிக்கப்பட்ட தேவர்கள் உங்களுக்கு வேண்டிய நலன்களை அளிப்பார்கள். எனவே, அவர்களால் அளிக்கப்பட்டவைகளை அந்த தேவர்களுக்கு அளிக்காமல் உண்பவன் திருடனேயாவான்.

यज्ञशिष्टाशिन : सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषै : ।
भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥

யக்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை:|
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்ம காரணாத்||

சுலோகம் – 13

இதன் பொருள்: யக்ஞத்தில் மிஞ்சியிருப்பதை உண்கின்ற நல்லோர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். ஆனால், தங்கள் பொருட்டே சமைத்து உண் பவர்கள் பாவத்தையே புசிப்பவர்களாகிறார்கள்.

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभव : ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञ : कर्मसमुद्भव : ॥

அன்னாத் பவந்தி பூதானி பர்ஜன்யாதன்ன ஸம்பவ:|
யக்ஞாத் பவதி பர்ஜன்ய: யக்ஞ: கர்ம ஸமுத்பவ: ||

சுலோகம்-14

இதன் பொருள்: உணவிலிருந்து உயிர்கள் உண்டாகின்றன. மழையிலிருந்து உணவு உற்பத்தியாகின்றது. யக்ஞத்திலிருந்து மழை வருகின்றது. யக்ஞம் கருமத்தி லிருந்து அதாவது தொண்டிலிருந்து ஏற்படுகின்றது.

வரும் பிறவி எடுத்திருக்கிறோம். அறிவைக் கொண்டு உழைப்பது பல சமயங்களிலும் உடல் உழைப்பை விட மிகவும் உயர்ந்ததாக இருக்கலாம். உயர்ந்ததாகவும் இருக்கிறது. ஆனால், அது ஒரு காலத்திலும் உடல் உழைப்புக்கு மாற்றாக இருப்பதில்லை, இருக்கவும் முடியாது. நாம் உட்கொள்ளும் தானியங்களை விட அறிவுக்கான உணவு எவ்வளவோ மேலானதுதான். எனினும், தானியங்களுக்குப் பதிலாக அறிவுக்கான உணவை உட்கொள்ள முடியுமா? எனவே, பூமியிலிருந்து உற்பத்தியாகும் பொருட்கள் இன்றேல், அறிவிலிருந்து எதுவும் உண்டாவது அசாத்தியமாகி விடும்.

## 38

## யக்ஞத்திலிருந்து மழை

ஆசிரமம் ஸ்தாபிக்கப்பட்டதிலிருந்து, உடல் உழைப்பே அதன் முக்கிய சிறப்பு அம்சமாக இருந்து வந்திருக்கிறது. கீதையின் மூன்றாவது அத்தியாயத்தில் அதே கொள்கைதான் விதிக்கப் பட்டிருக்கிறது என்பது எனது அபிப்பிராயம். அதில் குறிப்பிட்டுள்ள யக்ஞம் என்ற சொல்லுக்குப் பொருள், உடல் உழைப்புத் தான் என்று கூறும் அளவுக்கு நான் போகவில்லை. ஆனால், 'வேள்வியினின்று மழை வருகிறது' (*14*-ஆவது சுலோகம்) என்று கீதை கூறும் போது, அது உடல் உழைப்பின் அவசியத்தைக் குறிப்பிடுகிறது என்றே நான் நினைக்கிறேன். வேள்வியில் மிஞ்சுவதுதான் நாம் வியர்வை கொட்ட உழைத்துச் சம்பாதித்த உணவாகும். ஒருவர். தனக்குத் தேவையான உணவுக்காக உழைப்பது தான் யக்ஞம் என்று கீதையில் விதிக்கப்பட்டிருக்கிறது. உடலைப் பாதுகாப்பதற்குத் தேவையான உணவுக்கு மேல் சாப்பிடுபவன் யாராயினும், அவன் கள்வனே. நம்மில் பெரும்பாலோர் அந்த அளவுக்குக் கூட உழைப்பதில்லை.

## 39

## யக்ஞம் இன்றேல் வாழ்வு இல்லை

யக்ஞம் என்ற பிரிவின் கீழ் வராத எதுவும் அடிமைத்தனத்தைத்தான் வளர்க்கிறது என்று கீதை போதிக்கிறது. அனுபவமும் அதை ருசுப்பிக்கிறது. அத்தகைய யக்ஞம் இல்லாவிடில் ஒரு விநாடி கூட உலகம் இயங்க முடியாது. எனவே கீதை, உண்மையான ஞானத்தைப் பற்றி இரண்டாவது அத்தியாயத்தில் விவரித்துவிட்டு, அதை அடைவதற்கான வழிகளை மூன்றாவது அத்தியாயத்தில் குறிப்பிடுகிறது. கடவுளின் படைப்பு எப்போது தோன்

றியதோ அப்போதே யக்ஞம் தோன்றிவிட்டது என்றும் கீதை தெளிவாகக் கூறுகிறது. எல்லா சிருஷ்டிகளுக்கும் சேவை புரிய வேண்டும் என்பதற்காகவே, இந்த உடல் நமக்கு அளிக்கப்பட் டிருக்கிறது. அதனுல்தான், யக்ஞம் செய்யாமல் உண்பவன் திருட்டு உணவைச் சாப்பிடுகிருன் என்று கீதை கூறுகிறது. தூய் மையான வாழ்க்கை நடத்தும் ஒருவருடைய ஒவ்வொரு செயலும், யக்ஞத் தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டும். பிறக்கும் போதே நம்முடன் யக்ஞமும் வந்துவிடுவதால், நமது ஆயுள் முழு வதும் நாம் கடன்பட்டவர்களாகவே இருக்கிருேம். அவ்விதமாக நாம் உலகத்திற்குத் தொண்டு புரிய எப்போதும் கடன் பட்டிருக் கிருேம். ஊழியம் செய்யும் ஓர் அடிமை, தன் எஜமானனிடமிருந்து உணவு, உடை முதலியவற்றைப் பெறுவது போலவே நாமும் பிர பஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவிடமிருந்து அத்தகைய வெகுமதி களைப் பெறுகிருேம். எனவே, அவற்றிற்காக நாம் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். கடவுளிடமிருந்து நமக்குக் கிடைப் பதை வெகுமதி என்றுதான் கூற வேண்டும்.

# 40

# உறக்கமின்றி உழைப்பு

"உழைப்பின் தத்துவத்தை நீங்கள் எல்லை மீறி வற்புறுத்து கிறீர்கள் அல்லவா?"

காந்திஜியைக் காண்பதற்காக வந்த ஓர் அன்பர் அவ்விதம் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "இல் லவே இல்லை. நான் எப்போதும் மனப்பூர்வமாக எண்ணுவதையே வெளியில் கூறுகிறேன். உழைப்பின் சிறப்பை அளவுக்கு மீறி வற் புறுத்துவது என்பதே இருக்க முடியாது. கீதை உபதேசிக்கும் தத்துவத்தையே நான் திருப்பிக் கூறிவருகிறேன். 'உறக்கமின்றி நான் எப்போதும் வேலை செய்து கொண்டிருக்கிறேன். அவ்விதம் செய்யாவிட்டால் நான் மனித வர்க்கத்திற்குத் தவருன உதார ணம் காட்டியவனுவேன்' என்று கீதையில் பகவான் கூறுகிருர். அறிவை அடிப்படையாகக் கொண்ட வேலைகளில் ஈடுபட்டிருப்ப வர்களைக் கூட, நாட்டில் உள்ள மற்றவர்களுக்கு உதாரணமாக விளங்குவதற்காக ராட்டினத்தில் நூற்கும்படி நான் கேட்டுக் கொள்ளவில்லையா?"

## 41

# யோகிக்கு தூக்கமில்லை

இந்தியா முழுவதும் காந்திஜி சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, லாங்கே என்ற ஒரு கிராமத்திற்குச் சென்ருர். அப்போது இரவு பன்னிரண்டு மணி இருக்கும். காந்திஜியின் வருகையை எதிர்பார்த்த வண்ணம் ஏராளமான கிராமவாசிகள் பல மணி நேரமாகக் காத்துக் கொண்டிருந்தனர். காந்திஜி அக் கூட்டத்திற்கு வந்ததும் கூறியதாவது: "இவ்வளவு நேரமாக உங்களைக் காத்திருக்கும்படி செய்ததற்காக நான் உங்கள் விஷயத்தில் அனுதாபம் காட்டுவதா அல்லது என்னிடம் நானே அனுதாபம் கொள்வதா என்பது எனக்குத் தெரியவில்லை! எனினும், கீதையில் குறிப்பிட்டுள்ள யோகி என்ன செய்வாரோ அதை நாம் எல்லோரும் செய்திருக்கிறோம். 'சாதாரண மனிதர்கள் தூங்கும் இரவு, யோகிக்கு கண்விழித்துக் கொண்டிருக்கும் பகலாக இருக்கிறது'* என்று கீதை கூறுகிறது. எனவே, உங்களுடைய யோக சக்திக்காக நான் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். எனினும், ஏழைகளுக்கு தாராளமாக உதவி புரிவதன் மூலமும், கதர் உடைகளை வாங்குவதன் மூலமும் நீங்கள் உண்மையான யோகிகள் என்பதைக் காட்டுவீர்களாயின், என்னுடைய வாழ்த்துக்களுக்கு அதிக உரிமையுடையவர்களாக இருப்பீர்கள்."

இவ்விதம் காந்திஜி ஹாஸ்யமாகக் கூறியதைக் கேட்டு எல்லோரும் உரக்கச் சிரித்து மகிழ்ந்தார்கள்.

## 42

# மனிதனும் யந்திரமும்

கீதையின் பக்தரான ஒருவர், தமது வாழ்க்கையில் ஏற்படும் நிகழ்ச்சிகளை இயல்பாகவே ஏற்றுக் கொண்டு, யந்திர நிபுணரால் ஓர் யந்திரம் தானுக இயங்குவது போல் தாமும் தமது பங்கை நிறைவேற்றுகிருர். அறிவாளியான ஒருவர் ஓர் யந்திரத்தைப்

---

* கீதையின் இரண்டாம் அத்தியாயத்தில் உள்ள 69-ஆவது சுலோகத்தின் கருத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். அந்த சுலோகம் பின்வருமாறு:

यानिशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः॥

யா நிசா ஸர்வ பூதானும் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ|
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனேः||

இதன் பொருள்: உயிர்கள் அனைத்துக்கும் எது இரவோ அதில் யோகி விழித்திருக்கிருன். உயிர்கள் எல்லாம் விழித்திருக்கும் காலம், தத்துவ தரிசியான யோகிக்கு இரவாக இருக்கிறது.

போல் நடந்து கொள்வது மிகவும் கஷ்டமான காரியம். இருந்தாலும் குற்றம் குறையற்ற நிறை நிலையை அடைய விரும்புவோர், தங்களைச் சூன்யமாகச் செய்து கொள்ள வேண்டும். மனிதனுக்கும் யந்திரத்துக்கும் உள்ள மூலாதாரமான வேற்றுமை என்னவெனில், யந்திரம் உயிரற்றது, மனிதன் உயிர் உள்ளவன். இருந்தாலும், யந்திர நிபுணர்களில் சிரேஷ்டரான கடவுளின் கையில் அவன் நெஞ்சறிந்து ஓர் யந்திரத்தைப் போல் ஆகிவிடுகிறான். ஓர் யந்திரத்தின் பகுதிகளைப் போலவே எல்லா உயிர்களையும் கடவுள் இயங்கச் செய்கிறார் என்று கிருஷ்ணன் தெளிவாகக் கூறுகிறார்.

'மீராவுக்கு பாபுவின் கடிதங்கள், 1940'

## 43

## தவறாத வழிகாட்டி

கீதையை வாசித்ததன் பலனாக எனது நண்பர்களின் மனத்தில் எத்தகைய உணர்ச்சிகள் ஏற்பட்டன என்பதை அவர்களால் தான் கூற முடியும். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில், எனது நடத்தையை உருவாக்கும் தவறாத ஒரு வழிகாட்டியாக கீதை அமைந்தது. அது, தினந்தோறும் எனக்கு ஏற்படும் சந்தேகங்களைத் தீர்க்கும் அகராதியாகத் திகழ்ந்தது. எனக்குப் புரியாத ஆங்கிலச் சொற்களின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள நான் ஆங்கில அகராதியை நாடியதைப் போல், எனக்கு கஷ்டங்களும் சோதனைகளும் ஏற்பட்ட போது அவற்றிலிருந்து பரிகாரம் தேட நான் இந்த அகராதியையே (கீதையை) நாடினேன். அபரிக்ரகம் (உடைமையின்மை) ஸமபாவம் (சமத்துவ உணர்ச்சி) போன்ற சொற்கள் என் மனத்தைக் கவர்ந்தன. உடைமைகளைத் தனக்குச் சொந்தமானவை என்று கருதக் கூடாது; அவற்றின் தருமகர்த்தாவாகவே இருக்க வேண்டும் என்பதன் கருத்தை, கீதையின் உபதேசத்திலிருந்துதான் நான் தெளிவாகத் தெரிந்து கொண்டேன்.

## 44

## புலன்களின் உண்ணாவிரதம்

உடல் மாத்திரம் உண்ணாவிரதம் இருந்தால் போதாது; புலன்களும் உண்ணாவிரதம் இருக்கவேண்டும். கீதையில் குறிப்பிட்டுள்ள 'அல்பாகாரம்,' உடலின் உண்ணாவிரதத்தையும் குறிக்கிறது. உணவில் மிதமாக இருக்க வேண்டும் என்று கீதை கட்டளையிடவில்லை; அற்ப ஆகாரம் என்றே கூறுகிறது.

சொற்ப ஆகாரம் என்பது நிரந்தரமான பட்டினியே. எந்தத் தொண்டிற்காக உடல் ஏற்பட்டதோ, அந்தத் தொண்டிற்காக உடலைப் பாதுகாப்பதற்கு மாத்திரம் போதுமான உணவு என்பதே சொற்பம் என்பதற்கு அர்த்தமாகும்.

# 45
# கீதையின் சக்தி

பகவத் கீதையை பயபக்தியுடன் ஆராய்ச்சி செய்வதைப் போல் சக்தியை அளிக்கக் கூடியது வேறு எதுவுமே இல்லை. சமஸ்கிருதத்தில் தங்களுக்குள்ள புலமையையோ அல்லது கீதையில் தங்களுக்குள்ள அறிவையோ விளம்பரப்படுத்துவதற்காக மாணவர்கள் அதை வாசிக்கக் கூடாது என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அவ்விதம் நினைவில் வைத்துக்கொண்டால், ஆன்மிக இன்பத்திற்காகவும், தங்களுக்கு ஏற்படும் தார்மிக சங்கடங்களைத் தீர்த்துக் கொள்ளுவதற்காகவுமே கீதையைக் கற்றுக்கொள்கிறோம் என்பதை அவர்கள் தெரிந்துகொள்ளலாம். அந்த நூலை பயபக்தியுடன் வாசிக்கும் எவரும் தேசத்தின் உண்மையான ஊழியராகவும், அதன் மூலம் மானிட வர்க்கத்தின் உண்மையான ஊழியராகவும் திகழாமல் இருக்க முடியாது.

—'எங் இந்தியா' – 3–11–1927

# 46
# உழைப்பு, பக்தி, ஞானம்

உழைப்பு, பக்தி, ஞானம் ஆகியவற்றின் தத்துவம் கீதையில் அடங்கியிருக்கிறது. இந்த மூன்றும் ஒன்று சேர்ந்து மிளிர்வதாக வாழ்க்கை இருக்க வேண்டும். ஆனால், உழைப்புத் தத்துவம்தான் எல்லாவற்றிற்கும் அடிப்படையாகும். தேசத்திற்குத் தொண்டு செய்ய விரும்புவோருக்கு, உழைப்புத் தத்துவத்தை விவரிக்கும் அத்தியாயத்துடன் கீதையை வாசிக்க ஆரம்பிப்பதைக் காட்டிலும் அத்தியாவசியமானது வேறு என்ன இருக்க முடியும்? எனினும், அவசியமான ஐந்து சாதனங்களுடன் நீங்கள் அதை அணுக வேண்டும். அவையாவன: அகிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம், அபரிக்ரகம் (உடைமையின்மை), அஸ்தேயம் (திருடாமை). அப்போதுதான், நீங்கள் அதற்கு சரியான விளக்கத்தைக் காணமுடியும். கீதை அகிம்சையையே போதிப்பதை அப்போது நீங்கள் கண்டுகொள்ளுவீர்கள். இப்போதெல்லாம் பலர், கீதையில் இம்சையைக் காண

முயற்சிக்கிறீர்கள் அல்லவா? மேலே குறிப்பிட்ட அவசியமான சாதனங்களுடன் அதை நீங்கள் வாசிப்பீர்களாயின், இதற்கு முன் ஒரு காலத்திலும் ஏற்படாத மனச்சாந்தி உங்களுக்கு ஏற்படும் என்று நான் உறுதி கூறுகிறேன்.

—'எங் இந்தியா' - 3-11-1927

# 47

# ராட்டினமும் கீதையும்

கீதையில் உள்ள ஒரு சுலோகம், ராட்டினத்துக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது என்று ஒரு பண்டிதர் கூறியுள்ளார். அந்த சுலோகத்தின் பொருள் இதுதான்: "முயற்சி வீணாகியது என்ற பேச்சிற்கே இதில் இடமில்லை. இதனால் குற்றமோ, இடையூறோ எதுவும் ஏற்படுவதற்கில்லை. இந்த தருமத்தை சிறி தளவு மேற்கொண்டாலும், இது பேரபாயத்திலிருந்து மனிதனைக் காப்பாற்றுகிறது".*

# 48

# இக் காலத்திய யக்ஞம்

ஏழைகளுக்காகச் சிறிய யக்ஞம் செய்வதன் மூலம் அவர் களுக்கு அற்ப கைம்மாறுவது செய்ய வேண்டும் என்றே உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். தன்னுடைய யக்ஞத்தைச் செய்யாமல் உண்பவன், தன் உணவைத் திருடியவன் ஆகிறான் என்று கீதை கூறுகிறது. சென்ற மகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் பொது மக்கள் ஓர் யக்ஞம் செய்ய வேண்டியவர்களாக இருந்தார்கள். அதாவது, ஒவ்வொரு குடும்பத்தைச் சேர்ந்தவர் களும் தங்களுடைய வீட்டுத் தோட்டத்தில் உருளைக் கிழங்கு பயிர் செய்ய வேண்டியிருந்ததுடன், சொற்ப தையல் வேலையும் செய்ய வேண்டியிருந்தது. அதுதான் அவர்கள் செய்த யக்ஞ மாகும். நம் காலத்தில் நாம் செய்ய வேண்டிய யக்ஞம் ராட்டி னத்தில் நூற்பதுதான்.

—'எங் இந்தியா' - 20—1—1927

---

* கீதையில் உள்ள பின்வரும் சுலோகத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்:

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो नविद्यते।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

நேஹா பிக்ரமனாசோஸ்தி ப்ரத்யவாயோ நவித்யதே|
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்||

கீதை, அத்தியாயம்–2, சுலோகம்–40

# 49

## உதிரத்தால் உறுதி செய்தார்

தோட்டிகள் உங்களுக்கு எவ்வளவு மரியாதை காட்ட வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அது போல் நீங்களும் தோட்டிகளுக்கு மரியாதை காட்ட வேண்டும் :

**आत्मवत् सर्वभूतेषु य: पश्यति स पश्यति ।**

**ஆத்மவத் ஸர்வபூதேஷு ய: பச்யதி ஸ பச்யதி|***

பகவத் கீதையின் உபதேசம் இதுதான். வீரரும் தியாகியுமான சுவாமி சிரத்தானந்தர் இந்த உபதேசத்தைத் தமது வாழ்க்கையிலேயே செயலில் காட்டியதுடன், தமது உதிரத்தினலேயே அதை உறுதிப்படுத்தினர். அவர் சிந்திய உதிரம் நம்மைத் தூய்மைப்படுத்துமாக; தீண்டாதாரை நம்மிடையிருந்து ஒதுக்கி வைக்கும் களங்கத்தை அகற்றுமாக.

—'எங் இந்தியா' - 13—1—1927

# 50

## உண்மையான பக்தர்

அன்பார்ந்த நண்பரும் சக ஊழியருமான யாதவர்கான் பட்டவர்த்தன், நாகபுரியில் இம்மாதம் 4-ஆம் தேதி காலமானர். அவருக்கு மிகவும் நெருங்கிய உறவினர்களேயும் நண்பர்களேயும் தவிர வேறு யாரும் அவருக்காக அழவில்லே. அமராவதியைச் சேர்ந்த பட்டவர்த்தன் பெயரோ, புகழோ பெற்றவர் அல்ல. எனினும் புகழ் பெற்ற பல ஊழியர்களேயும்விட, அவர் தேசபக்தியிலும் தேசத்திற்கு ஊழியம் செய்வதிலும் குறைந்தவர் அல்ல. அவர் பம்பாய் சர்வகலாசாலேயில் சட்டப் பரீட்சையில் தேர்ச்சி பெற்ருர். ஆனல், அவர் வக்கீல் வேலேக்குச் செல்லவே இல்லே. 1915–இல் அவரை முதன் முதலாக அறிந்துகொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவர் எப்போதும் ஆசிரமத்திலேயே இருந்தார். அவரது சீரிய ஒழுக்கமும், எளிமையும், தாம் இருக்கும் இடம் தெரியாமல் ஊழியம் செய்யும் தன்மையும், பணிவும், மன உறுதியும், தமது கடமையை நிறைவேற்றுவதில் அவருக்கு இருந்த பக்தியும் என்னேக் கவர்ந்தன. அவர் யாதொரு ஊதிய

---

* மேற்கண்ட சுலோகத்தின் கருத்து இதுதான் :

''எல்லாப் பிராணிகளிடத்திலும் தன்னேக் காண்பவனே, அதாவது சகல உயிர்களேயும் தன்னேப் போல் சமமாகக் கருதுபவனே எல்லாவற்றையும் உண்மையில் பார்ப்பவனுகிருன்; கண்களேப் பெற்ற பயனே அடைந்தவனுகிருன்.''

மும் பெருமல் 'எங் இந்தியா'வின் உதவி ஆசிரியராக ஒரு வருடம் தொண்டு புரிந்தார். ஷோலாப்பூருக்குச் சென்று அங்கே ஒத்துழையாமை இயக்க சம்பந்தமாக உழைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். சிறிது காலமாக நோய்வாய்ப் பட்டிருந்த அவர், கூடிய விரைவில் குணம் அடைந்துவிடுவார் என்றே எல்லோரும் நம்பியிருந்தோம். ஆனால் கடவுள் சித்தம் வேருக இருந்தது. காங்கிரஸ் வாரத்தின் போது, திடீரென்று அவரது நிலை மோசமாகி விட்டது. பகவத் கீதை இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி சுலோகங்களை* முணுமுணுத்த வண்ணம் அவர் காலமானர்.

—'எங் இந்தியா' - 12—1—1921

# 51
# கீதையில் முஸ்லிம் பிரமுகரின் அக்கறை

காலஞ் சென்ற சர் அக்பர் ஹைதரி பல சிறப்பு அம்சங்கள் வாய்ந்தவர். அவர் சிறந்த அறிஞராக, தத்துவ நிபுணராக, சீர்திருத்தக்காரராக விளங்கினர். அவர் ஆழ்ந்த மதப் பற்று உள்ள ஒரு முஸ்லிம். எனினும், ஹிந்து சமயத்தில் இஸ்லாமுக்கு முரணுக அவர் எதையும் காணவில்லை. அவர் பல்வேறு சமயங்களையும் ஆராய்ச்சி செய்தவர். அவர் தாராள நோக்கம் உடையவர். எனவே, பல்வேறு சமயங்களையும் சேர்ந்த நண்பர்கள் அவருக்கு உண்டு. இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிலிருந்து திரும்பிவருகையில், நாங்கள் இருவரும் ஒரே கப்பலில் பிரயாணம் செய்தோம். தினந்தோறும் கப்பலில் நடந்த மாலைப் பிரார்த்தனைகளில் அவர் தவருமல் கலந்து கொண்டு வந்தார். பிரார்த்தனையின்போது நடந்த பஜனைகளிலும், கீதை பாராயணத்திலும் அவர் மிகுந்த அக்கறை கொண்டு, பஜனை கீதங்களையும், கீதையில் உள்ள சுலோகங்களையும் மகாதேவ தேசாயின் மூலம் மொழி பெயர்த்து வைத்துக் கொண்டார்.

—'ஹரிஜன்' - 18—1—1942

* கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி சுலோகங்களில் மன உறுதி படைத்தவனைப் பற்றியும் (ஸ்திதப்ரக்ஞன்), எல்லா உயிர்களையும் சமமாகக் கருதுபவனைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

# 52

# உள்ளத்தைக் கவர்ந்த கீதை

காந்திஜி தமது சுய சரிதையில் பல இடங்களிலும் கீதையைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தம்முடைய தந்தை அவரது இறுதி நாட்களில் கீதையைப் பாராயணம் செய்யத் தொடங்கியதாகவும், நாள் தோறும் பூஜை செய்யும் காலத்தில் அவர் கீதையிலிருந்து சில சுலோகங்களைக் கூறுவது வழக்கம் என்றும் குறிப்பிட்டுள்ளார். கீதையைத் தாம் வாசிக்கத் தொடங்கியதைக் குறித்து காந்திஜி தமது சுய சரிதையில் பின் வருமாறு கூறியுள்ளார் :

பிரம்மஞான சங்க நண்பர்கள், என்னை அவர்களுடைய சங்கத்திற்குள் நிச்சயமாக இழுத்துவிட உத்தேசித்திருந்தனர். ஹிந்து என்ற முறையில் என்னிடமிருந்து சமய சம்பந்தமாக ஏதாவது தெரிந்து கொள்ளலாம் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். பிரம்மஞான சங்க நூல்களில் ஹிந்து தருமத்தைப்பற்றிய விஷயங்களே நிறைந்திருக்கின்றன, எனவே, நான் அவ்விஷயமாக அவர்களுக்கு உதவியாக இருக்கக்கூடும் என்று இந்த நண்பர்கள் எதிர்பார்த்தார்கள். எனக்கு சமஸ்கிருதத்தில் தேர்ச்சி எதுவும் இல்லை. ஹிந்து சமய நூல்களை அவற்றின் மூல மொழியில் நான் வாசித்ததில்லை. நான் வாசித்த மொழி பெயர்ப்பு நூல்கள் கூட மிகவும் சொற்பமாகும். இதையெல்லாம் நான் அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். ஆயினும் சமஸ்காரம் (பூர்வ ஜன்ம வாசனை), புனர் ஜன்மம் (மறு பிறப்பு) ஆகியவற்றில் அவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாதலின், அவர்களுக்கு நான் ஏதாவது உதவி அளிக்க இயலும் என்று அவர்கள் எண்ணினர். 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை' என்பது போன்ற நிலையில் நான் இருந்தேன். ஆகவே, இந்த நண்பர்கள் சிலருடன் சேர்ந்து நான் சுவாமி விவேகானந்தரின் 'ராஜயோகம்' என்ற நூலையும், மற்றும் சிலருடன் சேர்ந்து எம். என். துவிவேதி எழுதிய 'ராஜயோகம்' என்ற நூலையும் வாசிக்கத் தொடங்கினேன். மேலும் நான், ஒரு நண்பருடன் பதஞ்சலியின் யோக சூத்திரங்களையும், மற்றும் பலருடன் சேர்ந்து பகவத் கீதையையும் வாசிக்க வேண்டியிருந்தது. ஒரு வகையான 'மெய் நாடுவோர் சங்க'த்தை நாங்கள் அமைத்துக் கொண்டு, ஒழுங்காக அந்த நூல்களைப் படித்துவந்தோம். கீதையினிடம் அதற்கு முன்பே எனக்கு நம்பிக்கையும் பக்தியும் உண்டு. அது என் உள்ளத்தைக் கவர்ந்தும் இருந்தது. அதை ஆழ்ந்து படிக்க வேண்டிய அவசியத்தை இப்போது உணர்ந்தேன். கீதையின் ஒன்றிரு மொழி பெயர்ப்புகள் என்னிடம் இருந்தன. அவற்றின் உதவியால், சமஸ்கிருத மூல நூலைப் புரிந்துகொள்ள முயன்றேன். தினந்

தோறும் ஒன்று அல்லது இரண்டு சுலோகங்களை மனப்பாடம் செய்துகொள்வது என்றும் தீர்மானித்தேன் இதற்காக எனது காலைக் கடன்களைச் செய்யும் நேரத்தை பயன் படுத்திக் கொண்டேன். பல் துலக்குவதற்குப் பதினைந்து நிமிடங்களும், ஸ்நானம் செய்ய இருபது நிமிடங்களுமாக மொத்தம் முப்பத் தைந்து நிமிடங்கள் ஆயின. மேனாட்டின் பாணியில் நான் நின்று கொண்டே பல் துலக்குவது வழக்கம். அப்போது எதிரில் உள்ள சுவரில் கீதையின் சுலோகங்கள் எழுதப்பட்ட காகிதத்தை ஒட்டி வைத்தேன். நினைவுபடுத்திக் கொள்வதற்காக அதை அவ்வப் போது பார்த்துக் கொண்டேன். அந்தந்த நாள் பகுதியை மனப் பாடம் செய்துகொள்வதற்கும், ஏற்கனவே மனப்பாடம் செய்த சுலோகங்களை நினைவு படுத்திக் கொள்ளுவதற்கும் அந்த நேரம் எனக்குப் போதுமானதாக இருந்தது. அவ்வாருக, பதின் மூன்று அத்தியாயங்களை நான் மனப்பாடம் செய்து கொண்ட ஞாபகம் எனக்கு இருக்கிறது.

## 53

## அன்பு மயமே கீதை

அன்பு உணர்ச்சி பற்றி கவி துளசிதாஸ் மனம் உருகிப் பாடியிருக்கிருர். அன்பு உணர்ச்சிதான் ஜைன, வைஷ்ணவ சமயங்களுக்கு அடிப்படையாகத் திகழ்கின்றது. பாகவதத்தின் சாரமும் அன்புதான். கீதையின் ஒவ்வொரு சுலோகத்திலும் அன்பு உணர்ச்சி ததும்புகிறது. இந்த தயாளகுணம், இந்த அன்பு, இந்த தரும குணம் மெதுவாக, ஆனல் உறுதியாக, இந்நாட்டு மக்களின் இதயங்களில் வேரூன்றி வளர்ந்துவருகிறது என்பதை, இந்தியா முழுவதும் நான் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது உணர்ந்துகொண்டேன்.

—'எங் இந்தியா – 4—5—1921

## 54

## குற்றம் குறையற்ற ஒரே நூல்

**கேள்வி:** நீங்கள் கீதையை ஆதாரமாகக் கொண்டிருக்கிறீர்கள். குணம், கருமம் ஆகியவற்றை அனுசரித்தே வர்ணம் இருப்ப தாக அது கூறுகிறது. அப்படியிருக்க, இதனுடன் பிறப் பையும் ஏன் கொண்டு வந்து இணைக்கிறீர்கள்.

**பதில்:** என் வாழ்க்கையில் நான் பகவத் கீதையைத் தான் பிரமாணமாகக் கொண்டிருக்கிறேன். ஏனெனில், குற்றம் கண்டுபிடிக்கக் கூடிய எதையும் நான் காணமுடியாதது

அந்த ஒரு நூலில்தான். அது கொள்கைகளை விதிக்கிறது. ஆனால், நடைமுறையில் அவற்றை அனுசரிக்கும் வழிகளை நீங்களே கண்டு கொள்ளும்படி அது விட்டுவிடுகிறது. குணம், கருமம் இவற்றை அனுசரித்தே வர்ணம் இருக்கும் என்று கீதை கூறுகிறது. எனினும், குணமும் கருமமும் பிறப்பின் மூலமே பரம்பரையாக வருகின்றன. 'எல்லா வர்ணங்களும் என்னால் சிருஷ்டிக்கப்பட்டவை' என்று கிருஷ்ண பகவான் கூறுகிறார். அதை, 'பிறப்பினால்' என்றே நான் அர்த்தம் செய்து கொண்டுள்ளேன்.

## 55

# அஞ்சாமைக்கு முதல் இடம்

ஒவ்வொருவரும் மனத்தில் உள்ளதை ஒளிவு மறைவின்றிப் பேச வேண்டும். நாம் சத்தியத்தை வணங்குபவராயின், பயமின்றி கலப்பற்ற முழு உண்மையைப் பேசவேண்டும். எந்த அளவுக்கு பயம் இருக்கிறதோ, அந்த அளவுக்கு நாம் சத்தியம் பேச வேண்டும் என்ற உறுதியும் குறையும். அதனாலேயே, அஞ்சாமைக்கு* கீதை முதல் இடம் அளித்திருக்கிறது.

## 56

# ஆக்குவதும் அழிப்பதும் மனமே

மனிதனை ஆக்குவதும் அழிப்பதும் மனம்தான் என்று கீதை கூறுவது உண்மையே. மனம்தான் மனிதனின் விரோதியாகவும் இருக்கிறது. மனிதனுக்கு நண்பனாக இருந்து அவனுக்கு நன்மைகளைச் செய்வதும் மனமே. இதே கருத்தைத்தான் மில்டன்† வேறு விதமாகக் கூறுகிறார்: "எல்லாம் உள்ளத்தின் செயல்தான். மனம் நரகத்தை சொர்க்கமாகவும், சொர்க்கத்தை நரகமாகவும் செய்துவிடுகிறது."

---

* கீதையின் 16-ஆம் அத்தியாயத்தில் 1, 2, 3-ஆவது சுலோகங்களில், தெய்வ சம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாக அமைந்துள்ள குணங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் குணங்களில் அஞ்சாமைக்கே முதலாவது ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

† ஜான் மில்டன் (1608—1674) உலகப் புகழ் பெற்ற ஆங்கில மகாகவி. அவருக்கு இங்கிலாந்தில் ஞாபகச் சின்னம் அமைக்கப்பட்டுள்ளது.

# 57

# பேச்சில் தவம்

நேர்மையான, தருமமான பேச்சு எது என்பது பகவத் கீதையில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது :

"பிறர் மனம் நோகாமலும், உண்மையாகவும், இனிமையாகவும், நலன் அளிப்பதாகவும் இருக்கக் கூடிய வார்த்தைகளையே பேசுவதும், வேதம் ஓதுவதும்தான் வாய்ப் பேச்சின் மூலம் செய்யும் தவமாகும்."*

# 58

# சிறையில் கீதை அளித்த அமைதி

வால்கிரஸ்ட் சிறையிலிருந்து என்னை ஜோஹன்னஸ்பர்க் சிறைக்குக் கொண்டு போனார்கள். அங்கே மற்ற இந்தியர்களுடன் என்னை வைப்பார்கள் என்று நான் நினைத்தேன். நாங்கள் ஜோகன்னஸ்பர்க்கிற்குச் சென்றபோது மாலை நேரமாகிவிட்டதால், சிறையில் உள்ள ஓர் அறையில் என்னை வைத்தார்கள். அங்கிருந்த காபிர் கைதிகளில் பெரும்பாலோரும் நோயால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். மறுநாள் என்னை மற்ற இந்தியக் கைதிகளுடன் வைக்க அதிகாரிகள் எண்ணியிருந்தனர். ஆனால், அது எனக்குத் தெரியாது. நிரந்தரமாகவே என்னை நோயாளிகளுடன் அந்த அறையில் வைக்க உத்தேசித்திருக்கிறார்களோ என்று நான் நினைத்தேன். அந்த எண்ணம் எனக்கு மிகுந்த கலக்கத்தையும், பீதியையும் உண்டாக்கியது. இருந்தாலும் எத்தகைய துன்பத்தையும் சகித்துக் கொள்வதே என் கடமை என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டேன். நான் என்னுடன் எடுத்துச் சென்றிருந்த பகவத் கீதையை வாசிக்க முற்பட்டேன். அப்போது நான் இருந்த நிலைமைக்குப் பொருத்தமான சில சுலோகங்களை நான் வாசித்தேன். அந்த சுலோகங்களையே நான் சிந்தித்தவண்ணம் இருந்ததால், என் மனத் துன்பமும் கவலையும் தீர்ந்து அமைதி ஏற்படுவது சாத்தியமாயிற்று.

—'இந்தியன் ஒபினியன்' –17—1—1909

---

* பின் கண்ட சுலோகத்தின் பொருளே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது :

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत्।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥

அனுத்வேக கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத்|
ஸ்வாத்யாயாப் யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே||

கீதை, அத்தியாயம்–17, சுலோகம்–15

பகுதி ஐந்து

# ஸ்ரீ மகாதேவ தேசாயின் விளக்கம்

## காந்திஜியின் முன்னுரை

மகாதேவ தேசாய் எழுதியுள்ள பின்வரும் பக்கங்கள், மிகுந்த ஆர்வத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு திட்டம் ஆகும். 1933-34-இல் அவரது சிறை வாழ்க்கையின்போது, ஓய்ச்சல் ஒழிவின்றி அவர் இயற்றிய அரும் பணிக்கு அது ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. ஒவ்வொரு பக்கமும் அவரது பாண்டித்தியத்திற்குச் சான்றாக விளங்குகிறது. பகவத் கீதையை சர் எட்வின் அர்னால்டு "சொர்க்க கீதம்" என்று கவி ரசம் ததும்ப வர்ணித்தார். அப்படிப்பட்ட பகவத் கீதை சம்பந்தமான எல்லாவற்றையும் மகாதேவ தேசாய் சாங்கோபாங்கமாக ஆராய்ச்சி செய்துள்ளார் என்பதையும் பின்வரும் பக்கங்கள் காட்டுகின்றன. அவரது அன்புப் பணிக்கு உடனடியான காரணம் இதுதான்: அதாவது அந்த தெய்விகமான நூலை எனக்குத் தெரிந்தவரையில் நான் குஜராத்தியில் மொழி பெயர்த்தேன். கீதைக்கு நான் கூறியுள்ள அர்த்தத்தை மொழி பெயர்ப்பதற்காக முயற்சித்த மகாதேவ தேசாய், தம்மை அறியாமலேயே கீதைக்கு தமது சொந்த வியாக்கியானம் ஒன்றையும் எழுதுவதில் ஈடுபட்டுவிட்டார்.

கையெழுத்துப் பிரதியை வாசிக்க எனக்கு நேரம் இருந்திருக்குமாயின், அவரது ஆயுட்காலத்திலேயே இந்த நூல் வெளியிடப்பட்டிருக்கலாம். அவருடன் சில பகுதிகளை நான் வாசித்தேன். ஆனால், நான் செய்ய வேண்டிய அவசரமான அலுவல்கள் குறுக்கிட்டதால், அந்த நூல் முழுவதையும் வாசிக்க இயலவில்லை. அதன்பின் 1942 ஆகஸ்டு மாதத்தில் நாங்கள் சிறைக்குச் செல்ல நேர்ந்தது. நாங்கள் சிறைப்பட்ட ஆறு நாட்களுக்குள்ளேயே மகாதேவ தேசாய் திடீரென்று இறந்துவிட்டார். கீதையை மிகுந்த பக்தியுடன் ஆராய்ச்சி செய்து அவர் எழுதிய நூலை, பொதுமக்கள் வாசிப்பதற்காக வெளியிட வேண்டுமென தேசாயின் நெருங்கிய நண்பர்கள் யாவரும் தீர்மானித்தனர்.

அவரது ஆங்கில நண்பர்கள் பார்வையிடுவதற்காக 'டைப்' செய்யப்பட்ட சில பிரதிகளை தேசாய் எடுத்து வைத்திருந்தார். அவரது வியாக்கியானத்தைப் பார்க்க அவர்கள் மிக்க ஆர்வத்

துடன் இருந்தனர். பல ஆண்டுகளாக மகாதேவ தேசாயின் சகபாடியாக இருந்த பியாரிலால், கையெழுத்துப் பிரதி முழுவதையும் வாசித்து, அச்சில் பிழைகளைத் திருத்தும் கடினமான பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார். அதன் பலனாகவே இந்த நூல் வெளியாகியிருக்கிறது.

உண்மையில், நான் ஏதோ ஒரு பண்டிதன் என்று பாசாங்கு செய்ய விரும்பவில்லை. மகாதேவ தேசாய் செய்த முயற்சியின் வரலாற்றை எடுத்துக் காட்டுவதுடன் நான் திருப்தி அடைகிறேன். இந்த நூலின் மொழிபெயர்ப்புப் பகுதி சம்பந்தப் பட்டவரையில், அது முற்றிலும் சரியாக இருக்கிறதென நான் உறுதி கூற முடியும். அவரது மொழிபெயர்ப்பில் சிறிதும் குறையின்றி அர்த்தத்தை எடுத்துக் காட்டி, அவர் தமது பணியை நிறைவேற்றியிருக்கிறார். மிகவும் முக்கியமானவை என்று கருதப் படும் ஒரு சில இடங்களில் மாத்திரமே பியாரிலால் மாற்றங்களைச் செய்துள்ளார். மகாதேவ தேசாய் ஜீவதசையுடன் இருந்தால், அந்த மாற்றங்களை மகிழ்ச்சியுடன் அங்கீகரித்திருப்பார் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

(சென்னைக்கு ரெயிலில் போகும்போது எழுதியது)

20-1-1946. மோ. க. காந்தி

# 1

# எனது சமர்ப்பணம்

## முன்னுரை

(காந்திஜியின் 'அனாஸக்தி யோக'த்திற்கு ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய நீண்ட முன்னுரையே இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது.)

காந்திஜி எழுதிய 'அனாஸக்தி யோக'த்தின் மொழி பெயர்ப்பே இந்த நூல் ஆகும். இந்த நூலுக்கு முன்னுரையாக ஒரு நீண்ட அனுபந்தத்தையும், மிதமிஞ்சிய குறிப்புகளையும் நான் சேர்த்திருப்பது, அதிகப் பிரசங்கித்தனமான ஒரு செயலாகிவிடுமோ என்று அஞ்சுகிறேன். ஏனெனில், 'அனாஸக்தி யோக'த்திற்கு காந்திஜி எழுதியுள்ள சுருக்கமான முன்னுரை, அவருக்கே இயல்பான முறையில் சாரமாகவும், தெளிவாகவும் இருக்கிறது என்பதை நான் அறிவேன். கீதையின் மூலாதாரமான உபதேசத்தைப் பொறுத்தமட்டில், காந்திஜி கூறியிருப்பதைக் காட்டிலும் மேற்கொண்டு எதுவும் குறிப்பிடவேண்டிய அவசியம் இல்லை. அந்த உபதேசத்தை அறிந்து கொள்வதற்கு அவரது சுருக்கமான குறிப்புகளே போதுமானவை. ஆனால், பல காரணங்களை முன்னிட்டு, அவரது முன்னுரையிலும் குறிப்புகளிலும் பல விஷயங்களைச் சேர்க்கவேண்டும் என நான் எண்ணியுள்ளேன்.

முக்கியமாக, குஜராத்தி மொழி வாசிக்கும் பொது மக்களுக்காகவே 'அனாஸக்தி யோகம்' எழுதப்பட்டது. அதிலும் குறிப்பாக, கள்ளம் கபடமற்ற, கல்வியறிவு கூட இல்லாத பொது மக்களுக்காகவே அது எழுதப்பட்டது. இரண்டாவதாக, நாட்டிலுள்ள பரம ஏழைக்கும்கூட அந்த நூல் கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்று காந்திஜி விரும்பினார். அதனாலேயே, சாத்தியமான வரையில் மிகச் சிறியதாகவும், மிக்க மலிவான விலையிலும் அதை வெளியிட்டார்.* இந்த இரண்டு நோக்கங்கள் காரணமாக, காந்திஜியின் முன்னுரையும் குறிப்பும் ஓர் எல்லைக்கு உட்பட்டிருக்க வேண்டியது அவசியமாகியது. கல்வியறிவில்லாத வாசகர்களுக்குக் கடினமாக இருக்கக் கூடிய எல்லா விஷயங்களையும், இந்தச் சிறு நூலில் காந்திஜி வேண்டுமென்றே தவிர்த்துள்ளார். காந்திஜியின் மனத்தில் இருக்கும் கல்வியறிவில்லாத வாசகர்களுக்கு அக்கறையில்லாத சில விஷயங்களையொட்டிய விளக்கங்களை, படித்தவர்களோ அல்லது விஷயத்தைத் தெரிந்து

---

* ஸ்ரீ மகாதேவ தேசாய் மேற்கண்ட முன்னுரையை எழுதிய போது, குஜராத்தி மொழியில் வெளியான 'அனாஸக்தி யோக'த்தின் (ஒரு பிரதியின் விலை அணா 8) 57,800 பிரதிகள் விற்பனையாகியிருந்தன.

கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உடையவர்களோ, அறிந்து கொள்ள விரும்பலாம். ஆனால், அத்தகையோரைப் பற்றி காந்திஜி கவலைப்படவில்லை.

உதாரணமாக, காந்திஜியின் குறிப்புகள் ஒன்றிலாவது, அவரது முன்னுரையில் கூட உபநிடதம் என்ற சொல்லை அவர் ஒரு தடவை கூட, உபயோகிக்கவில்லை. அப்படியிருக்க, பண்டிதரோ அல்லது ஆராய்ச்சி செய்யும் மாணவனோ அக்கறை எடுத்துக் கொள்ளக் கூடிய விஷயங்களை காந்திஜி குறிப்பிட்டிருப்பார் என்று நினைப்பதற்கே இடமில்லை. உதாரணமாக, கீதை ஏற்பட்ட காலம், கீதையின் மூலம், கிருஷ்ண வாசுதேவ சமயக் கொள்கை ஆகியவற்றைக் குறித்து காந்திஜி எதுவுமே குறிப்பிடவில்லை. அவரது முக்கிய கவலை, அவரது வாசகர்களையும் கீதையில் அவர் கண்ட உபதேசங்களையும் பற்றியதேயாகும்.

காந்திஜியின் நோக்கம் ஓர் எல்லைக்கு உட்பட்டது என்பது மாத்திரமல்ல; கடுமையான விவாதத்திற்குக் காரணமாக இருந்து வந்துள்ள சில விஷயங்களுக்கும் கீதையின் உபதேசங்களுக்கும் நெருங்கிய தொடர்பு எதுவும் இல்லை என்றும் காந்திஜி கருதுகிறார். தமக்கு பாண்டித்தியம் எதுவும் இருப்பதாக அவர் கூறிக் கொள்ளவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் தமக்கென வகுத்துக் கொண்ட எல்லைக்கு அப்பால் செல்ல விரும்புவதில்லை என்பதை எல்லோரும் அறிவர்.

காந்திஜி, கீதையை குஜராத்தியில் மொழி பெயர்த்துள்ளார். அந்த மொழிபெயர்ப்பை நான் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறேன். ஆனால், நான் மொழி பெயர்த்திருப்பதன் நோக்கம் முற்றிலும் வேறாகும். கீதையைப் பற்றிய காந்திஜியின் விளக்கத்தை, இந்தியாவில் உள்ள ஆங்கிலம் படித்த ஏராளமான இளைஞர்கள் அறிந்து கொள்ள விரும்புவார்கள் என்று நான் நம்புகிறேன். அவ்விதமே எதிர்பார்க்கிறேன். காந்திஜியின் வாழ்க்கையையும், சிந்தனைகளையும் ஆராய்ச்சி செய்வதில் அக்கறை கொண்ட பல வெளிநாட்டினரும் கூட, இந்த நூலைப் படிக்க விரும்பலாம். மேலும், இந்த நூலை வாசிப்பவர்களில் பெரும்பாலோர் மாணவர்களாகவே இருப்பார்கள் என்பது எனது எண்ணமாகும். எனவே, இவர்களின் தேவைகளை மனத்திற்கொண்டே, சுலோகங்களுக்கு நான் உபரியான குறிப்புகளைச் சேர்த்திருக்கிறேன். குறிப்புகளில் கொடுக்க முடியாத, காந்திஜி எழுதியுள்ள நூலின் எல்லைக்கு அப்பாற்பட்ட விஷயங்களையும், இந்த 'சமர்ப்பண'த்தின் மூலம் கொடுக்க வேண்டும் என்பதும் எனது நோக்கம்.

காந்திஜியைக் காட்டிலும் எனக்கு அதிகமான பாண்டித்தியம் இருப்பதாக நான் கூறிக் கொள்ளவில்லை. முதலில், இதைத் தெளிவாகக் கூறிவிட விரும்புகிறேன். நானே ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள ஒரு மாணவன்தான். நான் இறக்கும்வரையில் அவ்

விதமே இருந்து வருவேன் என்றும் நம்புகிறேன். என்னைப் போன்ற மக்களிடம் எனக்கு அனுதாபம் உண்டு. அவர்களின் தேவைகளை மனத்திற் கொண்டே மேற்கொண்டு சில விஷயங்களை இதில் சேர்க்கத் துணிந்துள்ளேன்.

இது, தத்துவமும் தருமமும் அடங்கிய மகத்தான ஒரு சமஸ்கிருத நூல். இந்த நூல் ஓர் இந்திய பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. இதை ஓர் அந்நிய பாஷையில் மொழி பெயர்க்க வேண்டியிருப்பதால், இயல்பாகவே சில விளக்கக் குறிப்புகள் கொடுக்க வேண்டியது அவசியம் என்று எனக்குத் தோன்றியது. காந்திஜியின் மொழி பெயர்ப்பை நான் திரும்பத் திரும்ப வாசித்தேன். அவ்விதம் வாசித்தபோது, சில சந்தேகங்களும் ஆட்சேபங்களும் என் மனத்தில் எழுந்தன. அவை மற்றவர்களின் மனத்திலும் எழக் கூடும் என்பதையும் உணர்ந்தேன். எனவே, அவற்றிற்கு என்னால் இயன்ற விளக்கங்களைக் கொடுக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அவ்விதம் விளக்க முற்படுகையில், பண்டிதர்களும் நிபுணர்களும் மாத்திரம் அக்கறை கொள்ளக் கூடிய எல்லா விஷயங்களையும் தள்ளிவிட்டு, அடிப்படையான உபநிடதங்களைப் பற்றியே திரும்பத் திரும்பக் குறிப்பிட்டிருக்கிறேன். கீதையாகிய அமுதம் போன்ற பாலைக் கறப்பதற்காக, தெய்விக இடையனான கிருஷ்ணன் உபநிடதங்களையே பசுக்களாக மாற்றிவிட்டார் என்று கூறப்படுகிறது. பைபிள், குரான் ஆகியவற்றிலிருந்தும், அந்த மகத்தான நூல்களிலிருந்து உத்வேகத்தைப் பெற்ற மகான்களின் பொன்மொழிகளிலிருந்தும் உவமைகளை எடுத்துக் கூறவும் துணிந்திருக்கிறேன். வாழ்க்கையின் ஆழ்ந்த தத்துவங்களைப் பொறுத்தமட்டில், ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், இந்தியர், ஐரோப்பியர், உண்மையில் விஷயங்களை உள்ளது உள்ளபடி வாசித்து அறிந்து கொள்ள முயற்சிப்போர் யாவரும் நெருங்கிய ஆன்மிகத் தொடர்பு உடையவர்கள் என்பதைக் காட்டவே நான் அவற்றைக் குறிப்பிட்டிருக்கிறேன். டாக்டர் ராதாகிருஷ்ணனின் நோக்கம் சிறிதளவாவது நிறைவேறுவதற்கு அவை உதவியாக இருக்கும் என்றும் நான் நினைத்தேன். ''இன்று பல்வேறு சமயங்களும், அசுத்தம் ஒட்டிக்கொண்டு விடுமோ என்று அஞ்சி தனித்து நிற்கவில்லை. அவை பரஸ்பரம் தாராளமாகக் கலந்து பழகவும் விரும்புகின்றன'' என்று அவர் கூறியிருக்கிறார். ஹிந்துக்களின் வாழ்க்கையையும், சிந்தனையையும் விளக்கும் சிறந்த வியாக்கியான கர்த்தாவான டாக்டர் ராதாகிருஷ்ணன் 'மதத்தில் கிழக்கும் மேற்கும்' (East and West in Religion) என்ற நூலில் அவ்விஷயத்தை எல்லோரும் கவனிக்க வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார். இந்த உவமைகளையெல்லாம் கண்டு பிடிப்பதற்காக நான் அவற்றைத் தேடிக் கொண்டு எங்கேயும் செல்லவில்லை. சிறையில் உள்ள என் அறையில் நான் உட்கார்ந்து அமைதியாக வாசித்துக் கொண்டிருந்த நூல்களில் இவையெல்லாம் எனக்குக் கிடைத்தன.

## கீதை பிறந்த காலம்

சாதாரணமாக இதுபோன்ற நூல்களில், அவை ஏற்பட்ட காலம், இடம் முதலிய சில விஷயங்களைப் பற்றி விவரிப்பது வழக்கம். ஆனால், நானும் அவ்விஷயங்களைப் பற்றி விவாதிக்க முற்படுவேன் என்று வாசகர்கள் எதிர்பார்க்க வேண்டாம். ஆங்கிலம் அறிந்த வாசகர்களுக்காக காந்திஜி இதை எழுத முற்பட்டால் கூட, என்ன காரணங்களுக்காக அவர் அத்தகைய விவாதத்தைத் தவிர்ப்பாரோ, அதே காரணங்களுக்காகவே நானும் அதைத் தவிர்த்திருக்கிறேன். எனினும், சில விஷயங்களைக் குறித்து ஆராய்ச்சி நிபுணர்கள் கூறியுள்ள முடிவுகளையும், அவற்றில் கீதையின் உபதேசத்தைப் பொறுத்த மட்டில் நெருங்கிய தொடர்பு உடையவற்றைப் பற்றி எனது அபிப்பிராயத்தையும் மாத்திரம் நான் கூற விரும்புகிறேன்.

1. முதலாவதாக, கீதையின் காலத்தைப் பற்றிய பிரச்னையாகும். இவ்விஷயமாக நான் எதுவும் புதிதாகக் கூறுவதற்கில்லை. அதன் சம்பந்தமாக இன்று வரையில் ஆராய்ச்சியாளர்கள் செய்துள்ள முடிவுகளை மாத்திரம் சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன். “இந்தியாவில் கிறிஸ்தவர் செல்வாக்கு ஏற்பட்டது பற்றி கீதையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது” என்று ஸ்ரீ ஹில் கூறியிருப்பதை, ‘ஆதாரமற்றது’ என்று அநேகமாக எல்லோரும் நிராகரித்துவிட்டார்கள். “கி. மு. இரண்டாவது நூற்றாண்டில்தான் தற்போதுள்ள உருவில் கீதை தோன்றியது என்பதற்கான சாட்சியம் இருக்கிறது” என்றும் ஸ்ரீ ஹில் குறிப்பிட்டுள்ளார். இதுவும் சரியான மதிப்பீடு ஆகாது. அவ்விஷயமாக டாக்டர் ராதாகிருஷ்ணன் தமக்குக் கிடைத்த ஆகாரத்தைக் கீழ் வருமாறு சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறார்:

“கீதையின் காலத்தை கி. மு. ஐந்தாவது நூற்றாண்டு என்று நாம் நிர்ணயிப்போமாயின், அது பெரும் தவறாக இருக்க முடியாது என்றே நம்புகிறேன். எனினும், ‘தரும சூத்திரங்’களில் உள்ள குறிப்புகளைக் கவனிப்போமாயின், கீதை தோன்றிய காலத்தை கி. மு. இரண்டாவது அல்லது மூன்றாவது நூற்றாண்டாக நிர்ணயிக்கலாம்.”

கீதையின் காலத்தைப்பற்றி லோகமான்ய திலகரும் ஏராளமான ஆதாரங்களைக் கொடுத்துள்ளார்.* புத்தர் காலத்திற்கு முன்பே கீதை தோன்றியதாகவும், பௌத்த மத வளர்ச்சிக்கு கீதையே முக்கிய காரணம் என்று பாலி நூல்களும், பிற நூல்களும் கூறுகின்றன என்றும், எனவே தற்போதுள்ள கீதை நூல்

* கீதையை விளக்கி லோகமான்ய திலகர் எழுதிய ‘கீதா ரகசியம்’ என்ற நூலில், புத்தர் காலத்திற்கு 800 ஆண்டுகளுக்கு முன் அதாவது கிறிஸ்தவ சகாப்தத்திற்கு 1500 ஆண்டுகளுக்கு முன் கிருஷ்ண பகவானும், பாகவத மதமும் தோன்றியதாகவும், கிறிஸ்தவ சகாப்தத்திற்கு 900 ஆண்டுகளுக்கு முன் ஆதி கீதை தோன்றியதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

கி. மு. ஐந்தாவது நூற்றுண்டில்தான் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை என்றும் லோகமான்யர் குறிப்பிட்டிருக்கிருர்.

2. இரண்டாவது பிரச்னை, கீதையின் மூலத்தைப் பற்றியதாகும். இப்போதுள்ள கீதை, ஆதியில் உள்ள கீதையிலிருந்து உருவாக்கப்பட்டுளது என்பதில் பண்டிதர்களின் மனத்தில் சந்தேகம் எதுவும் இல்லை. கீதையின் உட்பொருளைக் கண்டு பிடிப்பதற்கான முறைகள் ஏதாவது கண்டு பிடிக்கப்பட்டாலொழிய, ஆதி கீதையைப்பற்றிய விவரங்களை நாம் அறிந்து கொள்ளுவது முடியாத காரியம். ஆதி கீதை கண்டு பிடிக்கப் பட்டால் கூட, அதனுல் காந்திஜியைப் போன்ற ஆன்மாக்களின் வாழ்க்கையில் அதிக வேற்றுமை எதுவும் ஏற்பட்டு விடப் போவதில்லை. கீதையின் உபதேசத்திற்கிணங்க வாழ்வதற்கே காந்திஜி, தமது ஆயுட் காலத்தின் ஒவ்வொரு விநாடியும் மனப்பூர்வமாக முயற்சித்து வருகிருர். எனினும், இந்தத் துறையில் பண்டிதர்கள் செய்துவரும் முயற்சிகளில் காந்திஜிக்கு அக்கறை இல்லை என்று அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது. சரித்திர சம்பந்தமான மிகச் சிறிய விஷயங்களில் கூட காந்திஜிக்கு தீவிரமான அக்கறை உண்டு. இதை நான் எனது சொந்த அனுபவத்திலிருந்து கூற முடியும். அமைதி நிலவும் எராவ்டா மத்திய சிறையில் அவர் இவ்விஷயமாக மணிக்கணக்காக வாசிப்பதையும் விவாதிப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். இறுதியில் நிரந்தரமாக இருப்பது கீதையின் உபதேசம்தான் என்பதே அவரது நிலையாகும். கீதையின் மூலத்தைப்பற்றிய எத்தகைய கண்டுபிடிப்பினுலும், கீதை உபதேசத்தின் சாரமோ, உலகமே ஒப்புக்கொள்ளக்கூடிய அதன் கருத்தோ அணுவளவும் பாதிக்கப் படமாட்டாது என்பதே காந்திஜியின் உறுதியான கருத்தாகும்.

3. சரித்திர புருஷரான கிருஷ்ணன், கிருஷ்ண வாசுதேவ வழிபாட்டின், அதாவது பாகவத தருமத்தின் ஆரம்பம், வரலாறு போன்ற பல பிரச்னைகள் சம்பந்தமாகவும் அதே வாதம் பொருந்தும். இதன் சம்பந்தமான ஆராய்ச்சியில் எவ்வளவு உழைத்தாலும், எவ்வளவு காலம் செலவு செய்தாலும் தகும். காந்திஜியைப் பொறுத்தமட்டில், சரித்திர பூர்வமான கிருஷ்ணன் என்பது முற்றிலும் வேறு அர்த்தம் கொண்டதாக இருக்கிறது. ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் கூடிய அவரது சிறிய முன்னுரையிலிருந்து, காந்திஜி கிருஷ்ணனைக் கண்டு கொண்டிருக்கிருர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். கிருஷ்ணன் தெய்விகமான ஓர் இடையன் என்றே அல்லது அர்ஜுனனுக்கு வெற்றியைத் தேடிக் கொடுக்கும் தெய்விகமான ஒரு சாரதி என்றே பண்டிதர்கள் ருசுப்பிப்பதைக் குறித்து அவர் கவலைப்படவில்லை. ஆல்பர்ட் ஷ்வீட்சர்*

*ஆல்பர்ட் ஷ்வீட்சர், கல்லூரியில் தேர்ச்சி பெற்று பல பட்டங்களும் பெற்ற ஜெர்மன் பிரமுகர். பாதிரியாராக இருந்து சிறந்த சமூகத் தொண்டு புரிந்தவர். ஆப்பிரிக்காவில் உள்ள மிகவும் உஷ்ணமான பூமத்திய ரேகைப் பிரதேசத்திற்குச் சென்று மக்களுக்கு வைத்தியத் தொண்டு புரிவதற்காக வைத்தியத் துறையில் உயர்ந்த பட்டம் பெற்றவர். 1952–இல் அவர் சமாதான நோபல் பரிசு பெற்ருர்.

11

அழகாகக் குறிப்பிட்டிருப்பதைப் போல், "கிறிஸ்து" என்ற சொல்லுக்குப் பதிலாக "கிருஷ்ணன்" என்ற சொல்லை சேர்த்துக் கொள்ளுங்கள். மிகவும் நுணுக்கமாகவும், திட்டவட்டமாகவும் காந்திஜியின் நிலை வர்ணிக்கப்பட்டிருப்பதை நீங்கள் கண்டு கொள்ளலாம். ஆல்பர்ட் ஷ்வீட்சர் கூறியிருப்பது இதுதான்: "யாருக்கும் தெரியாத, பெயரோ, புகழோ எதுவுமின்றி கிறிஸ்து நம்மிடம் வருகிறார். ஏதோ ஏரியின் பக்கத்திலிருந்து வருபவரைப் போல் அவரை அறியாத மக்களிடையே அவர் வந்தார்: 'நீங்கள் என்னைப் பின்பற்றி வாருங்கள்' என்ற அதே வார்த்தைகளையே அவர் பேசுகிறார். நமது காலத்தில் அவர் சில கடமைகளை நிறை வேற்ற வேண்டி யிருக்கிறது. நாமும் அதே கடமைகளையே நிறை வேற்ற வேண்டும் என்று அவர் கூறுகிறார். அவர் கட்டளை யிடு கிறார். புத்திசாலிகளாயினும் அல்லது ஒன்றும் அறியாத மக்களா யினும் அவரது கட்டளைக்குப் பணிந்து நடப்போருக்கு கஷ்டங் களிலும், முரண்பாடுகளிலும் துன்பங்களிலும் அவர் காட்சி அளிக்கிறார். அவருடன் கூட அவர்கள் அந்தக் கஷ்டங்களை யெல் லாம் கடந்து செல்லுகிறார்கள். அவர் யார் என்று விவரிக்க இய லாத ரகசியத்தை, அவர்கள் அனுபவத்தின் மூலம் தெரிந்து கொள்ளுகிறார்கள்."

நம்மில் ஒவ்வொருவரிடத்திலும் கிருஷ்ணன் இருக்கிறார் என் பதில் காந்திஜிக்கு எள்ளளவு சந்தேகமும் இல்லை. வெறிக் குணங் கள், அகந்தை முதலியவற்றை யெல்லாம் நம் மனத்திலிருந்து நாம் களைந்து விடுவோமாயின், ஸ்தூல வாழ்க்கைக்கான சாத னங்களைத் தேடிக்கொண்டு ஓடுவதை நாம் நிறுத்திவிடுவோ மாயின், கடவுள் இருப்பதை நாம் உணர்வோம்; கடவுளின் அருளை அடிப்படையாகக் கொண்டு செயல் புரிவோம். அவரே கதி என்று நாம் அவரிடம் அடைக்கலம் புகுந்தால் அவர் நமக்குச் செவி கொடுப்பார்; அவரை விட்டு நாம் எக்காலத்திலும் பிரியாத வர்களைப்போல் நம்மை அவர் மீண்டும் ஏற்றுக்கொள்ளுவார் என்பதும் காந்திஜியின் நிச்சயமான அபிப்பிராயமாகும்.

கீதை தனிச் சித்தாந்தம் எதையும் உபதேசிக்கவில்லை. கிருஷ்ணனை கீதையின் ஆசிரியர் நமக்கு அறிமுகம் செய்து வைக்கும்போது, கிருஷ்ணன் என்ற ஒரு நபரை அறிமுகம்செய்து வைக்கவில்லை. ஆனால், நம்மில் ஒவ்வொருவரிடத்திலும், அர்ஜுன னிடத்திலும் உள்ள தெய்விகத் தன்மையே கிருஷ்ணனின் மூலம் பேசுகிறது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அவ்விதமாயின், சரித்திர பூர்வமான கிருஷ்ணனைப் பற்றிய கேள்விகள் யாவும் இரண்டாந்தர முக்கியத்துவம் வாய்ந் தவையாகிவிடுகின்றன. கடவுளின், பரமாத்மாவின், பரபிரம்மத் தின் பெயரால் கிருஷ்ணன் பேசுவதாகக் குறிப்பிடப்பட்டிருக் கிறது. சுவேதாசுவதர உபநிடதம், முதலிலிருந்து இறுதிவரையில் கடவுளைத் தோத்திரம் செய்கின்றது. அது சிவன் அல்லது ருத்திரன் என்று குறிப்பிடுகின்றது. எனினும் சிவன் அல்லது ருத்ரன் ஒரே கடவுள் என்ற உண்மை, அந்த உபநிடதத்தை

இயற்றிய தீர்க்கதரிசியின் மனத்திலிருந்து ஒரு விநாடி கூட அகலவில்லை.

''சிவனும் ருத்ரனும் ஒரே கடவுள். அவர் எல்லாப் பொருட்களிலும் மறைந்திருக்கிறார்; எங்கும் வியாபித்திருக்கிறார்; எல்லாப் பொருட்களிலும் அந்தராத்மாவாக விளங்குகிறார். எல்லாச் செயல்களையும் கண்காணிக்கிறார்; எல்லாப் பொருட்களிலும் உறைகின்றார்; எல்லாவற்றிற்கும் சாட்சியாக விளங்குகிறார்; எல்லாவற்றையும் சிந்திக்கிறார்; எத்தகைய குணங்களும் இல்லாதவர்; ஒரே விதையை கோடி கோடியாகப் பெருகும்படி செய்கிறார். அவரை ஞானிகள் தங்களுக்கு உள்ளேயே பார்க்கின்றனர். அத்தகைய ஞானிகள் தான் நிரந்தரமான பேரானந்தத்தை அடைகின்றனர்; மற்றவர்கள் அல்ல.''

பகவத் கீதையில் உள்ள கிருஷ்ணனும் அப்படியேதான். அவர்தான் ஆன்மா. அவரே புருஷோத்தமன். அவரே பிரம்மம். அவர்தான் தெய்வங்களுக்கெல்லாம் கடவுள். உலகத்திற்கே ஆண்டவனான அவர் எல்லாருடைய இருதயத்திலும் வீற்றிருக்கிறார். கீதை, மனத்திற்குச் சாந்தி அளிக்கும் விடாப்பிடியான ஒரு திட்டமே என்று ஸ்ரீ ஹில் கூறுகிறார். 'விடாப்பிடியான திட்டம்' என்று அவர் குறிப்பிடுவதற்குக் காரணம் என்னவெனில், 'என்னைக் காட்டிலும் மேலானது இந்த உலகில் எதுவும் இல்லை' என்றும், 'எல்லாம் நானே' என்றும் கிருஷ்ணன் திட்டவட்டமாகக் கூறுவதற்கு எள்ளளவும் மாசு கற்பிக்க கீதையின் ஆசிரியர் விரும்பவில்லை. ''கிருஷ்ணன் கூறுவது'' என்று குறிப்பிடுவது கூடத் தவறாகும் என்பதே எனது கருத்தாகும். எவ்வளவு தெய்விகமானவராக இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட நபரின் பிரகடனத்தை, அதாவது மனிதனின் மனத்தையும், இருதயத்தையும், ஆன்மாவையும் நிரந்தரமான ஒரே ஒரு உண்மைப் பொருளை அடைவதற்கு வழி காட்டுவதாகக் கூறுவதை வற்புறுத்துவது கீதை ஆசிரியரின் நோக்கம் இல்லை. வாசுதேவன் என்ற பெயருக்கு மகாபாரதத்தில் பின்வருமாறு பொருள்

---

*கடவுளைப் பற்றிய மேற்கண்ட வர்ணனை சுவேதாசுவதர உபநிடதத்தில் இருக்கிறது. அதன் மூலம் பின்வருமாறு:

एको देव : सर्वभूतेषु गूढ : सर्वव्यापी सर्व भूतान्तरात्मा ।
कर्माध्यक्ष : सर्वभूताधिवास : साक्षी चेता केवलो निर्गुणश्च ॥
एको वशी निष्क्रियाणां बहूना मेकं बीजं बहुधा य : करोति ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरा : तेषां सुखं शाश्वतं नेतरेषाम् ॥

ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வ வ்யாபீ ஸர்வ பூதாந்தராத்மா|
கர்மாத்யக்ஷ: ஸர்வ பூதாதிவாஸ: ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்க்குணச்ச||
ஏகோ வசீ நிஷ்க்ரியாணாம் பஹூனாம் ஏகம் பீஜம் பஹுதா ய: கரோதி|
தமாத்மஸ்தம் யே(அ)னுபச்யந்தி தீரா: தேஷாம் ஸுகம் சாசுவதம் நேதரேஷாம்||

—சுவேதாசுவதர உபநிடதம், 6. 11–12

கொடுக்கப்பட்டிருக்கிறது: ''எல்லாச் சிருஷ்டிகளிடத்திலும் நான் எனது இருப்பிடத்தை (வாசம்) அமைத்துக் கொண்டிருக்கிறேன். அதனாலேயே எனக்கு வாசுதேவன் என்று பெயர்.'' 'வாசுதேவன்' என்ற பெயரில் கடவுளாகச் செய்யப்பட்ட, வர்ணிக்கப்பட்ட ஒரு நபரை ஏற்கனவே வழிபட்டு வருகிறோம். கீதையின் ஆசிரியர் அவரது உருவத்தை நேரில் பார்த்திருக்கலாம், பாராமலும் இருந்திருக்கலாம். எனினும், அவரது உடலிலும் மனத்திலும் வாசுதேவனைப் பற்றிய எண்ணமே ஊடுருவியிருக்கிறது என்பது மாத்திரம் நிச்சயம்தான். அத்தகைய ஆழ்ந்த பக்திக்கே ஆசிரியர், பெயரையும், உருவத்தையும், உண்மைத் தத்துவத்தையும் கொடுத்திருக்கிறார். இணையற்ற சிறந்த பக்தரின் குணாதிசயங்கள் என்ன என்பதை, காந்திஜி தமது முன்னுரையில் எடுத்துக் காட்டியிருக்கிறார். அது பன்னிரண்டாவது அத்தியாயத்தில் உள்ள விவரங்களின் சாரமேயாகும். அவை, ஒரு குறிப்பிட்ட கடவுளிடம் பக்தி கொண்டவரின் குண விசேஷங்கள் அல்ல. கடவுளின் எந்த உண்மையான பக்தரிடமும் அந்த குண விசேஷங்கள் இருக்கின்றன, இருக்கத்தான் வேண்டும். அத்தகைய பக்தர் தமது கடவுளை, கிருஷ்ணன் என்றோ, கிறிஸ்து என்றோ, ஆண்டவன் என்றோ அல்லது அல்லா என்றோ கூறலாம்.

''எல்லாக் கடமைகளையும் விட்டு விட்டு என்னை மாத்திரமே அடைக்கலமாகக் கொள்''* என்பதில் 'என்னை' என்றிருப்பது கிருஷ்ணன் என்ற ஒரு நபரைக் குறிக்கவில்லை; குறிக்கவும் முடியாது. ஏனெனில், அந்த கிருஷ்ணன் இப்போது உலகில் இல்லை. எனவே, நம்மில் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் எப்போதும் வசிக்கும் இறைவனையே இது குறிப்பிடுகிறது. ''இருதய பூர்வமாகக் கடவுள் ஒருவரையே சரணமாகக் கொள். அவருடைய அருளால் நீ மகோன்னதமான சாந்தியைக் கொடுக்கும் நிரந்தரமான ஸ்தானத்தை அடைவாய்.''‡ அதில் 'கடவுளாகிய என்னையே' என்பதைக் காட்டிலும் 'என் மூலம் பேசும் கடவுளையே' என்பதே வற்புறுத்தப்பட வேண்டும். அவரது பெயரைக் கூறுவதால்

---

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज।

*ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ|

—கீதை, அத்தியாயம்–18, சுலோகம்-66

இதன் பொருள் : எல்லா தருமங்களையும் அடியோடு விட்டு விட்டு என் ஒருவனையே சரணம் அடைவாயாக.

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम्॥

‡தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத|
தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம்||

—கீதை, அத்தியாயம்–18, சுலோகம்–62

(இ – ள்) பரத குலத்தில் உதித்த அர்ஜுனா, உன் முழு மனத்துடனும் அவனையே சரணம் அடைவாயாக. அவனது அருளால், நீ மகோன்னதமான சாந்தியைக் கொடுக்கும் நிரந்தரமான இடத்தை அடைவாய்

அல்ல, அவரது விருப்பத்தையும் அவர் விதித்த கடமைகளையும் நிறைவேற்றுவதன் மூலமே ஒருவன் உயர்நிலையை அடைகிறான். "என்னால் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்பவனும், என்னையே தான் அடையவேண்டிய லட்சியமாகக் கொண்டவனும், எனது பக்தனும், எல்லாப் பற்றையும் அறவே கைவிட்டவனும், யார் மீதும் துவேஷம் இராதவனும் மாத்திரமே என்னை வந்து அடைகிறான்."*

4. மகாபாரதத்தின் புகழ் பெற்ற ஆசிரியரான வியாச முனிவர்தான் கீதையின் ஆசிரியர் என்று நம்ப வேண்டியிருக்கிறது. கீதை, மகாபாரதத்தின் ஒரு பகுதிதான் அல்லவா? எனினும், இதை ருசுப்பிப்பதற்கு இறுதியான சாட்சியம் எதுவும் இல்லை. வியாசரின் வாழ்க்கை சம்பந்தமான உண்மைகளை உறுதிப்படுத்துவதற்கான சாட்சியமும் நம்மிடம் இல்லை.

கிருஷ்ண வாசுதேவரைப் பற்றிய சாட்சியங்கள் அற்பமானவை என்று கூறிவிட முடியாது. ஏனெனில், பண்டைய வேத மந்திரங்களில்கூட கிருஷ்ணனைப்பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. ஆனால், வேத மந்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள ரிஷியான கிருஷ்ணன், தேவகியின் மகனான கிருஷ்ணன், சாந்தோக்கிய உபநிடதம் குறிப்பிடும் கோர அங்கீரசரின் சீடனான கிருஷ்ணன், மகாபாரதத்தில் வரும் கிருஷ்ணன், புராணங்களில் கூறப்படும் கிருஷ்ணன் ஆகிய எல்லோரும் ஒருவர்தானா என்பதை திட்டவட்டமாக நிரூபிப்பதற்கான சாட்சியம் எதுவும் இல்லை. கிருஷ்ணனை சாரதியாகவும், வீரராகவும், மகாதேவனை பூஜித்தவராகவும் வர்ணித்திருக்கிறார்கள். திருதராஷ்டிரன், பீஷ்மர் முதலியோர் கூட கிருஷ்ணனை இறைவனின் அவதாரம் என்று தோத்திரம் செய்திருக்கிறார்கள். கிருஷ்ணன் வெகு சாதாரண மனிதன்தான் என்று ஏளனம் செய்து நிந்திப்பவர்களும் இருந்திருக்கிறார்கள். அது எப்படியாயினும், ஒரு காலத்தில் கிருஷ்ணன் என்ற மகா புருஷர் இருந்தார் என்பதிலும், அவர் வீரராகவும், ராஜதந்திரியாகவும், தத்துவ ஞானியாகவும் சிறந்து விளங்கினார் என்பதிலும் சந்தேகமே இருக்க முடியாது. மேற்கண்ட பல்வேறு சிறப்பு அம்சங்களும் அவரிடம் இருந்ததால், அதைக் கண்டு ஆரியர்கள் பெருமிதம் அடைந்தார்கள் பின்னர் அவரை, கடவுளின் அவதாரம் என்றும் வணங்கலாயினர். காலம் செல்லச் செல்ல அந்தந்தக் காலத்தில் இருந்த மக்களின் பல்வேறு மன நிலைக்கும் ஆன்மிக நிலைக்கும் தகுந்தவாறு,

---

*கீதையில் மேற்கண்ட பொருளைக் குறிக்கும் சுலோகம் இதுதான்:

मत्कर्मकृन्मत्परमो मद्भक्त : सङ्गवर्जित : ।
निर्वैर : सर्वभूतेषु य : स मामेति पाण्डव ॥ ५५ ॥

மத் கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த: ஸங்க வர்ஜித:|
நிர்வைர: ஸர்வ பூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ||

—கீதை, அத்தியாயம்-11, சுலோகம்-55

"உதாரண புருஷரான" கிருஷ்ணனைப்பற்றி பல்வேறு சம்பிரதாயங்களும் கதைகளும் உருவாகி வளர்ந்துவிட்டன.

இந்தப் பிரச்னையையும், இது போன்ற மற்றப் பிரச்னைகளையும் ஒட்டி எனது நிலையை நான் சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன். ஒரு வேளை, காந்திஜியின் நிலையும் இவ்விதமாகவே இருக்கலாம். உயர் நிலையை அடைய ஆர்வம் உள்ளவர், கீதையின் ஆசிரியரைப் பற்றியோ, கிருஷ்ணன் யார் என்பது பற்றியோ அறவே சாட்சியம் எதுவும் இல்லை என்பதற்காகவோ அல்லது நிச்சயமான சாட்சியம் இல்லை என்பதற்காகவோ மன வேதனை அடையமாட்டார். எனினும், பண்டிதர்கள் இவ்விஷயமாகத் தங்களுடைய முயற்சியைத் தளரவிட்டுவிடக் கூடாது. ஆனால், நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு, பண்டைக் கால முனிவர்கள் அனாஸக்தியை (பற்றின்மை) நடைமுறையில் அனுசரித்து வந்தார்கள் என்ற எண்ணமானது மிகுந்த ஆறுதலை அளிக்கும். களங்கமுற்ற மனத்தையுடைய நமது தலைமுறையினருக்கு, புரியாத புதிராக இருக்கும் அளவுக்கு கீதை பற்றின்மையையே போதிக்கின்றது. பற்றின்மை, சுயநலமின்மை அல்லது தியாக உணர்ச்சியுடன் செய்யும் தொண்டு என்ற சித்தாந்தம், சிருஷ்டியைப் போல் அவ்வளவு புராதனமானது. இவ்விதம் கீதையில் கிருஷ்ண பகவானே நமக்கு உறுதி கூறுகிறார். அந்த உபதேசத்தை மனித வர்க்கத்திற்கு வெளியிட்ட தீர்க்கதரிசிகள் அதை எள்ளளவும் குற்றம் குறையின்றி நடைமுறையில் அனுசரித்து வந்திருப்பார்கள் என்பது நிச்சயம்தான். அதுவே கீதையில் சாரமாகப் பிழிந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சித்தாந்தம், கீதையைப் போல் வேறு எந்த நூல்களிலும் விவரமாக வாதிக்கப்படவில்லை. கீதையின் ஆசிரியர் கிருஷ்ணனை உணர்ந்தார், கிருஷ்ணனைப் பார்த்தார், கிருஷ்ணனை அறிந்தார், கிருஷ்ணனுடன் வாழ்ந்தார். அதன் பலனாக, தமது அனுபவத்தை உலகில் விட்டுவிட்டுச் சென்றிருக்கிறார். அது, மனித வர்க்கத்திற்கே நிரந்தரமான ஒரு பொக்கிஷமாகத் திகழ்கின்றது.

## கீதையும் அதன் சித்தாந்தமும்

அப்படியாயின், கீதை ஒரு சரித்திரக் கதை அல்லவா? அது, மகத்தான யுத்த காவியத்தின் ஒரு பகுதி இல்லையா? மகாபாரதம் சரித்திர பூர்வமான ஒரு காவியம் என்பதை காந்திஜி ஆட்சேபித்திருக்கிறார். அந்த ஆட்சேபணைக்கு ஆதாரமாக நானும் சில விஷயங்களைக் கூறத் துணிகிறேன். கீதையை, சரித்திர பூர்வமாக நடந்த சம்பாஷணை என்று கருதுவதற்கே இடமில்லை. இதை எடுத்துக் காட்டவேண்டும் என்பதே எனது நோக்கமாகும். மகாபாரத யுத்தம் என்ற ஓர் யுத்தமோ அல்லது வேறு ஏதாவது யுத்தமோ நடந்தது என்பதை மறுக்கவேண்டிய அவசியம் இல்லை. ஆனால் மகாபாரதம், கீதை ஆகியவற்றின் ஆசிரியருடைய மனத்தில் சரித்திர பூர்வமான ஒரு கதையைக் கூறவேண்டும் என்ற நோக்கம்

ஏதாவது இருந்திருக்கும் என்பது நிச்சயமாக தர்க்க வாதத்திற்குக் காரணமாகியிருகிறது.

மகாபாரதம் என்ற மகா காவியமாகிய தங்கத் தட்டில் கீதை என்ற ரத்னம் இழைக்கப்பட்டிருக்கும் கலைச் சிறப்பைப் பாருங்கள். புகழ் பெற்ற ஆசிரியரான வியாசர் மரணம் இல்லாதவர்களில் (சிரஞ்சீவிகளில்) ஒருவர் என்று கூறப்படுகிறது. பாண்டு, திருதராஷ்டிரனின் மூதாதையரே வியாசர் என்றும் கூறப்படுகிறது. பாண்டு, திருதராஷ்டிரனின் புதல்வர்களே குருக்ஷேத்திரத்தில் போரிட்டார்கள்.

யுத்தம் ஆரம்பமாவதற்கு முன் சிரஞ்சீவியான வியாசர், கண்களை இழந்த மன்னனை திருதராஷ்டிரனை அணுகி, யுத்தத்தை நேரில் பார்ப்பதற்கு வசதியாக அவருக்கு கண்கள் தெரியும்படி செய்ய வேண்டுமா என்று கேட்கிறார். அந்த பாக்கியம் தனக்கு வேண்டாம் என்று திருதராஷ்டிரன் மறுத்துவிடுகிறான். அந்த பயங்கரமான படுகொலைகளைப் பார்த்தால் தனது இருதயமே நின்றுவிடும் என்று கூறுகிறான். எனினும் ஒரு கட்டத்தில், அன்றாடம் நடைபெறும் போர் நிகழ்ச்சிகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அவனுக்கு உண்டாகின்றது. பிறகு சஞ்சயனுக்கு, இருந்த இடத்தில் இருந்துகொண்டே எதையும் ஞானக் கண்ணால் பார்க்கும் சக்தி ஏற்படுகிறது. எனவே, சஞ்சயன் போர் முனைக்குச் செல்லாமலேயே அங்கே நடக்கும் சம்பவங்களை அந்தகனான திருதராஷ்டிர மன்னனுக்கு எடுத்துக் கூறுகிறான். இது போதாதென்று, வியாசர் திருதராஷ்டிரனுக்கு மற்றொரு உறுதியும் கூறுகிறார்: "உன் கண்களுக்கு இயற்கையான பார்வையை அளிப்பதைவிட, சஞ்சயனுக்கு அளிக்கப்பட்டுள்ள ஞானக்கண் பார்வையே உனக்குப் பேருதவியாக இருக்கும். போரில் நடைபெறும் சம்பவங்களை சஞ்சயன் விசித்திரமான முறையில் அறிந்து உனக்குக் கூறுவான். இரவிலும், பகலிலும், எல்லோருக்கும் தெரிந்தும் தெரியாமலும் கூட நிகழும் சம்பவங்களையும், போரில் ஈடுபடுவோர் செய்யும் காரியங்களையும், அவர்களுடைய மனத்திலிருக்கும் எண்ணங்களையும் கூட அறிந்துகொள்ளும் சக்தி சஞ்சயனுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. சஞ்சயனை, எத்தகைய ஆயுதங்களும் தொடாது; அவனுக்கு களைப்போ, சோர்வோ எதுவுமே ஏற்படாது."

இவ்விதம் தெய்விகமான ஞானதிருஷ்டியைப் பெற்ற சஞ்சயன், அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நடைபெற்றதாகக் கூறப்படும் சம்பாஷணையை திருதராஷ்டிரனுக்கு விவரித்துக் கூறுகிறான். எல்லாவற்றையும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற அந்த கிழட்டு மன்னனின் ஆசையை சஞ்சயன் எப்படி நிறைவேற்றுகிறான்? அப்போது திருதராஷ்டிரன் ஒரே ஒரு கேள்வி கேட்டதாகவே கீதை கூறுகிறது. "குருக்ஷேத்திரத்தில் யுத்தத்தில் ஈடுபடுவதற்காகக் கூடியுள்ள எனது குமாரர்களும் பாண்டவர்களும் என்ன செய்தார்கள்?"-இதுதான் திருதராஷ்டிரன் கேட்ட ஒரே கேள்வியாகும்.

இந்தக் கேள்விக்குப் பதிலாகவே, அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த அதிதீவிரமான தத்துவ சம்பாஷணையை பதினெட்டு அத்தியாயங்களின் மூலம் சஞ்சயன் எடுத்துக் கூறியிருக்கிறான். அதன் முடிவில், திருதராஷ்டிரனுடைய புதல்வர்களோ அல்லது பாண்டவர்களுடைய புதல்வர்களோ என்ன செய்தார்கள் என்பதை சஞ்சயன் விவரிக்கவில்லை. அந்த அற்புதமான சம்பாஷணையைக் கேட்கும் மகத்தான பாக்கியம் தனக்குக் கிடைத்ததைக் குறித்து மிகவும் பேரானந்தம் அடைகிறான். "எங்கே யோகீசுவரனான கிருஷ்ணன் இருக்கிறாரோ, எங்கே சிறந்த வில் வீரனான அர்ஜுனன் இருக்கிறானோ அங்கே, அதிர்ஷ்டம் (லக்ஷ்மி), வெற்றி, சுபிட்சம், நிரந்தர நீதி எல்லாம் இருக்கும் என்பது நிச்சயம்" என்று இறுதியில் சஞ்சயன் கூறுகிறான். எனவே இதன் பிறகு, நாம் வாசிப்பது சரித்திர பூர்வமான சம்பாஷணை அல்ல, ஆனால் மிகவும் ஆழ்ந்த கருத்துள்ள காவியமே என்று வாதிக்க வேண்டிய அவசியம் ஏதாவது இருக்க முடியுமா?

ஆகையால், கீதையை வாசிப்பவர்களில் பெரும்பாலோர், அது சிலேடையான பொருளையே குறிக்கின்றது என்று கூறுவதைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. அவர்களில் சிலர், பாண்டவர்களை ஒளி சக்திகளுக்கும், கௌரவர்களை இருள் சக்திகளுக்கும் ஒப்பிட்டுக் கூறுகிறார்கள். மனித உடலையே, கீதையில் குறிப்பிட்டுள்ள தரும க்ஷேத்திரம் என்று கூறுகிறார்கள். அந்தக் காவியத்தில் உள்ள பாத்திரங்களின் தெளிவான பெயர்களுக்குக் கூட சிலர் பல்வேறு அர்த்தங்கள் கூறுகிறார்கள்; சிலேடையான அர்த்தத்தை வெகு தூரத்துக்குக் கொண்டு போகிறார்கள். உடலையே பற்றிக்கொண்டிருக்கும் 'நான்' என்ற அகந்தையே குருடனான திருதராஷ்டிர மன்னனாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது என்று சிலர் கருதுகிறார்கள். திருதராஷ்டிரன் என்ற சொல்லுக்கும் அதுதான் பொருளாகும். நான் என்ற அகந்தையைப் பிரதிபலிக்கும் திருதராஷ்டிரன், கிருஷ்ணனாகிய அந்தராத்மாவுக்கும் அர்ஜுனனாகிய பணிவும் தூய்மையும் நிறைந்த அறிவுக்கும் நடைபெறும் சம்பாஷணையைக் கேட்டான். அறிவு, கடவுளின் கட்டளைக்கு இணங்க அந்தகார சக்திகளை எதிர்த்து நின்று வெற்றி பெறுகிறது என்பதே அதன் தத்துவமாகும். சண்டைக்காரர்கள், சண்டை, போர்க்களம் ஆகியவை யாவும் திருதராஷ்டிரனின் உருவாக இருப்பதாக, அவ்விதம் விளக்கம் கொடுக்கும் வியாக்கியான கர்த்தாக்கள் கருதுகிறார்கள். இவ்விதம் டாக்டர் காரிட் கூறுகிறார். மனப் போராட்டத்தினால் அல்லல்படும் 'நான்' என்ற பொருளாகிய அர்ஜுனன், ஆன்மாவாகிற கிருஷ்ணனை அணுகி வழிகாட்ட வேண்டும் என்று கோருவதாக சிலர் வியாக்கியானம் செய்கிறார்கள்.

மகாபாரதத்தை ஒரு சரித்திரக் கதையாகவே வைத்துக் கொண்டாலும் கூட, கீதை போர் முனையில் நடந்த ஒரு சம்பாஷணையைப்பற்றிய வரலாறாகத்தான் இருக்க வேண்டும் என்பது

அவசியமா? உண்மையான சரித்திர நூல்களில் கற்பனையான சம்பாஷணைகள் அடங்கி யிருப்பதற்கு, எத்தனையோ உதாரணங் கள் உண்டு. மனச்சாட்சிக்கு விரோதமின்றி உண்மையான விவரங்களையே கூறும் பண்டைய சரித்திராசிரியரான தியூஸி டைட்ஸ்* தமது சரித்திரத்தில் கற்பனையான உரையாடல்களை யும் கற்பனைப் பிரசங்கங்களையும் சேர்க்கத் தயங்கவில்லை. நிலைமையைத் தெளிவாகப் புரியும்படி விளக்குவதற்காக அவ் விதம் சேர்த்துக் கொண்டிருப்பதாக அவரே கூறியுள்ளார். மகத் துவம் பொருந்திய பல கவிகள், தங்களுடைய சிறந்த கவிதை களில், வாழ்க்கையின் பயங்கரமான உண்மைகளுடன் மனிதன் போராடும்போது, அவனது அழிவற்ற ஆன்மிகத் தோற்றங்களைச் சித்திரிப்பதற்காகச் சரித்திர நிகழ்ச்சிகளையே எடுத்துக்கொண் டிருக்கிறார்கள். அதை நிரூபிக்க ஒரே ஓர் உதாரணத்தை எடுத் துக் கொள்ளுவோம். மனிதனின் ஆசாபாசங்களைச் சித்திரிப் பதில் ஈடு இணையில்லாத ஷேக்ஸ்பியர், தம்முடைய நாடகங் களில் ஆடவர்களும், பெண்களும் கோரமான சங்கடங்களில் சிக்கிக் கொள்ளும்படி செய்திருக்கிறார். கீதையின் முதல் அத்தி யாயத்தில் அர்ஜுனனை நாம் காண்பதுபோல், ஷேக்ஸ்பியரின் பாத்திரங்களும் சங்கடமான நிலைமைக்கு உள்ளாவதை நாம் காண்கிறோம். ஷேக்ஸ்பியரின் 'கிங் ஜான்' நாடகத்தில் உள்ள பிளான்ஷ் சீமாட்டி, தன் மனத்தில் எழும் பல்வேறு போராட் டங்களுக்கிடையே சிக்கித் தவிக்கிறாள். அர்ஜுனன் பேசியதைப் போலவே அவளும் பேசுகிறாள்:

''நான் எந்தக் கட்சியில் சேரவேண்டும்? நான் இரு கட்சி களின் பக்கத்திலும் இருக்கிறேன். ஒவ்வொரு ராணுவமும் என் னுடைய ஒரு கையைப்பற்றிக் கொண்டிருக்கிறது. நான் இருவரு டைய கைகளையும் பிடித்துக் கொண்டிருப்பதால், அவர்கள் தங்க ளுடைய கோபத்தில் என்னைத் தூக்கி எறிந்து சின்னாபின்னம் ஆக்கிவிடலாம். என் கணவன் வெற்றி பெற வேண்டும் என்று நான் பிரார்த்திக்க முடியாது. இந்தப் போராட்டத்தில் என் மாமன் தோல்வி யுறவேண்டும் என்றே நான் பிரார்த்திக்க வேண் டியவளாக இருக்கிறேன். என் தந்தைக்கு அதிர்ஷ்டம் அடிப் பதையும் நான் விரும்பவில்லை. எனவே யார் வெற்றி பெற்றா லும், போர் நடப்பதற்கு முன்பே எனது தோல்வி நிச்சயமாகி விட்டது.''

அவளுடைய சோகமான, சங்கடமான நிலைமையை வர்ணிப் பதுடன் ஷேக்ஸ்பியர் நின்றுவிடுகிறார். இறுதியில் அவளது விதி என்ன ஆயிற்று என்பதை அவர் குறிப்பிடவில்லை. ஆனால், மெக்

*தியூஸிடைட்ஸ் (460-389 கி. மு.) பிரபல கிரேக்க சரித்திராசிரியர். நேரில் கண்டவர்களின் சாட்சியங்களையும், ஆதாரமுள்ள உண்மைகளையும் அடிப்படையாகக் கொண்டு முதன் முதலாகச் சரித்திரம் எழுதியவர். எனினும், சரித்திரத்தில் வரும் முக்கிய நபர்களின் பிரசங்கங்கள் அவரது கற்பனையிலிருந்து உருவாக்கப்பட்டவையே என்றாலும், அவை அக்காலத்திய கிரேக்கர்களின் மன நிலையையும், அரசியல் நிலையை யும் கண்ணாடிபோல் பிரதிபலிக்கின்றன.

பத்தை* விதி விட்ட வழி விடட்டும் என்று அவர் விட்டுவிட வில்லை. ஒரு சமயத்தில் சூன்யக்காரிகளும், மற்ருெரு சமயத்தில் மெக்பத்தின் மனைவியும் மெக்பத்தின் ஆசைக்கு தூபம் போடும் படி செய்கிருர். மெக்பத்தின் மனத்தில் மனித அபிமானமாகிய அமுதம் அடியோடு வற்றிவிடும்படி செய்கிருர்; இறுதியில் அவன் கொடிய செயலை நிறைவேற்றும்படியும் செய்துவிடுகிருர். ஹாம்லட்,* நிச்சய புத்தியின்றி தடுமாற்றமாகிய கொந்தளிக்கும் கடலில் அங்குமிங்கும் தூக்கியெறியப்படுகிருன். புரூடஸ்,* தூக்க மின்றித் தவிக்கிருன். அவன் மனத்தில் புரட்சியும் போராட்ட மும் எழுகின்றன. அவன் சிந்தனை செய்தவண்ணம் கைகளைக் கட்டிக்கொண்டு பெருமூச்சுவிட்டு விம்முகிருன். அவன் தனது சீரிய மனைவியின் ஆலோசனையைத் தவிர்க்கிருன். குற்றம் செய்ய வேண்டும் என்று அவன் மனத்தில் எழுந்துள்ள நோயை, அவள் குணப்படுத்திவிடுவாள் என்பதற்காகவே அவளது ஆலோச னையை அவன் தவிர்க்கிருன். கடைசியில், 'பொது மக்களின் நன்மைக்காக' என்று எண்ணிக்கொண்டுதான் தான் விரும்பி யதைச் செய்து முடிக்கத் தீர்மானிக்கிருன். கொலை செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியுடன் அல்ல, தியாக உணர்ச்சி யுடனேயே தனது தீர்மானத்தை நிறைவேற்றுகிருன். "ஸீஸரை,* கோபத்துடன் அல்ல, தைரியத்துடன் கொல்லுவோம்" என்று கூறுகிருன்.

அந்த நாடகம் முழுவதும் அவனது அமைதியும் சுயநலமின்மை யும் வெளியாகின்றன. எனவே அவன் விரோதிகள் கூட அவனை, "ரோமியர்கள் எல்லோரையும் காட்டிலும் மிக்க உயர்ந்தவன்" என்று பிரகடனம் செய்கிருர்கள். ஷேக்ஸ்பியர் காலத்துக்குப் பல ஆண்டுகளுக்கு முன் இருந்த கீதையின் ஆசிரியரும், அர்ஜு னனின் மனம் கலங்கி ஊசலாடும்படி செய்திருக்கிருர்; எனினும் அவன் விதிப்படி நடக்கட்டும் என்று அவனை விட்டுவிடவில்லை. தீய வழிகளில் செல்லும்படி தூண்டும் பிசாசின் கையிலும் அவனை ஒப்படைத்துவிடவில்லை; ஆனல், அர்ஜுனன் கடவுளை நேருக்கு நேராகப் பார்க்கும்படி செய்கிருர்; கடவுள், அவன் மனத்தில் ஏற்படும் புயலைத் தணித்து, அவனை ஒளியும் சாந்தியும் பேரானந்த மும் சூழ்ந்து கொள்ளும்படி அருள் புரியச் செய்கிருர். அந்த நூலில் மனப் புரட்சி வர்ணிக்கப்படுகிறது; மன மயக்கம் வெளியா கிறது; சந்தேகவாதியின் நிலையும் அவனது சந்தேகங்களும் பூரண மாகச் சித்திரிக்கப்படுகின்றன. அவை மாத்திரமல்ல, சந்தேகங் களைத் தீர்த்து, மனச் சாந்தியை அளிக்கும் கடவுளும் நமக்குக் காட்சி அளிக்குமாறு செய்யப்பட்டிருக்கிறது. இதுதான், கீதையை மானிடவர்க்கத்தின் பைபிளாக செய்திருக்கிறது என்று என் மனத்திற்குத் தோன்றுகிறது. கீதை கூறுவது இதுதான்: "சந்தேகம், சோர்வு, வேதனை ஆகியவற்றினல் நீ அல்லல்படும் போது, உள்ளத்தின் ஆழத்தில் வசிக்கும் இறைவனை நாடி, அவ

*மேலே குறிப்பிட்ட பெயர்கள் யாவும் ஷேக்ஸ்பியரின் சோககரமான பல்வேறு நாடகங்களிலும் உள்ள முக்கிய பாத்திரங்களின் பெயர்களாகும்.

ரது போதனைக்குச் செவி சாய்த்து, அதன்படி எள்ளளவும் வழுவின்றி நடந்துகொள். பின்னர், நீ வருந்துவதற்குக் காரணமே ஏற்படாது.”

சத்தியத்தைக் காணவேண்டும் என்ற பேரார்வத்தினால் தகிக்கப்படும் ஒவ்வொரு ஞானியும், தமக்குச் சந்தேகங்கள் ஏற்படும்போது தமது கடவுளிடமிருந்து ஆறுதலையும் அருளையும் நாடுகிறார். தியானத்தில் இருக்கும் ஞானியின் ஆன்மாவுக்கும் அவரது கடவுளுக்கும் பல தடவைகளிலும் உள்ளூற சம்பாஷணைகள் நடப்பதாக ஸ்ரீமதி அண்டர்ஹில் அவரது நூலில் குறிப்பிட்டிருக்கிறார். கீதையின் ஆசிரியரோ, மாபெரும் ஞானிகளில் ஒருவர். எனவே, அதைப் போல் அவருக்கும் கடவுளுக்கும் உள்ளூற அத்தகைய சம்பாஷணை நடந்திருக்கலாம் என்று கற்பனை செய்து கொள்ளுவது நியாயமற்றதாகுமா? சத்தியத்தை நாடும் அர்ஜுனனும் கடவுளுடன் சம்பாஷணை நடத்தியதாக அவரது மனக்கண் முன் தோன்றியிருக்கலாம். அதன் பலனாக, உலகில் ஆன்மிக சம்பந்தமான உண்மையை நாடும் எல்லோருக்கும், அந்தக் காட்சியை மகத்தான ஒரு பொக்கிஷமாக அவர் (கீதையின் ஆசிரியர்) விட்டு விட்டுச் சென்றிருக்கலாம் அல்லவா?

கீதையின் ஆசிரியர் விவரித்துள்ள அந்த சம்பாஷணை உண்மையிலேயே கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையாக இருந்தால், ஒரு நிருபரைப் போல் கீதையின் ஆசிரியர் நடந்த சம்பவத்தைக் குறிப்பிட்டிருக்கிறார் என்றே ஏற்படும். ஆனால், அவரை நான் ஒரு கவி என்றே எண்ண விரும்புகிறேன். தீர்க்கதரிசியான கவி என்ற சொல்லை, நாம் கடவுளைப் பற்றிக் குறிப்பிடும்போது அடிக்கடி உபயோகிப்பது உண்டு. எனவே, கீதையின் ஆசிரியர் அவரது மனக்கண்ணுக்குத் தோன்றிய, அவர் நம்பிய கடவுளின் உண்மையான உபதேசத்தையே எடுத்துக் கூறியுள்ளார். இந்த முறையில் கீதை என் மனத்தை மேலும் அதிகமாகக் கவர்ந்திருக்கிறது. உண்மையிலேயே கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணை அதில் குறிப்பிடப்பட்டிருந்தால் கூட, அது என் மனத்தை அவ்வளவு அதிகமாகக் கவர்ந்திராது.

கீதையில் அடங்கியுள்ள விஷயங்களை மேலெழுந்தவாரியாகப் பரிசீலனை செய்தால் கூட, அதன் ஆசிரியர் உபநிடதங்களின் உபதேசங்களில் திளைத்தவர், கிருஷ்ண பரமாத்மாவின் பக்தர் என்பதும், தாம் அனுபவித்ததை, பார்த்ததை, வாழ்ந்ததை மனிதவர்க்கத்திற்கு எடுத்துக் கூற விரும்பினார் என்பதும் நன்கு தெரிகின்றன. பண்டைக் காலத்திய, பல்வேறு விதமான தத்துவக் கருத்துகள் அடங்கிய ஒரு கதம்பமே கீதை என்று ஹாப்கின்ஸ் குறை கூறியுள்ளார். அவரது கூற்றிலும் ஓர் உண்மை இருக்கிறது. அதாவது, கீதை ஒரு சரித்திரக் கதை அல்ல என்பதை அது நிச்சயமாக நிரூபிக்கிறது. எனினும் அவரது குற்றச் சாட்டு, தத்துவ சாத்திரத்தைப் பற்றிய அவரது அறியாமையையும், கீதையை மிகவும்

மேலெழுந்த வாரியாகவே அவர் வாசித்திருக்கிறார் என்பதையும் காட்டுகிறது. நவீன தத்துவ நிபுணர்கள் உபநிடத தத்துவத்தை அநேகமாக ஒப்புக் கொண்டுள்ளனர். அவர்களுடைய கருத்துக்கும் உபநிடத தத்துவத்துக்கும் அதிக வேற்றுமை இல்லை எனலாம். கீதையில் குழப்பமான பல்வேறு கருத்துகள் அடங்கியிருப்பதாகக் கூறப்படுவதற்குக் காரணம், கீதை எழுதப்பட்ட காலத்தில் இருந்த நிலையே ஆகும். அதாவது, வேதங்களில் பல தெய்வங்களைப் பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது; சிற்சில இடங்களில் அத்வைதம், அதாவது கடவுள் ஒருவர்தான் என்று கூறப்பட்டிருக்கிறது. வேதங்களில் கூறப்பட்டிருக்கும் சடங்குகளை உபநிடதங்கள் கண்டிக்கின்றன. அப்படியிருந்தும், சடங்குகளை இன்னும் கூட மக்கள் பற்றிக்கொண்டுதான் இருக்கிறார்கள். சொர்க்கத்தைக் கொடுக்கும் சடங்குகளை இகழ்ந்து கூறும் உபநிடதங்கள், மோட்சம் அடைவதற்கான ஒரே வழி துறவு வாழ்க்கைதான் என்று மிதமிஞ்சி வற்புறுத்தியுள்ளன. சாங்கிய, யோகக் கொள்கைகளும் கீதையின் காலத்தில் இருந்தன. எனினும், அவை திட்டவட்டமான முறைகளாக உருவாகவில்லை. அக்காலத்தில் புத்தர் இருந்தாரா, புத்த மதம் இருந்ததா என்பது இன்னும் திட்டமாகத் தீர்மானிக்கப்படவில்லை. எனினும், அப்போது நாத்திகக் கொள்கைகள் நிச்சயமாக இருக்கத்தான் செய்தன.

அவ்வமயம் கீதையின் ஆசிரியர் சிறப்பு மிக்க, ஆனால் மிகவும் கஷ்டமான ஒரு கடமையை மேற்கொண்டார். சிதறிக் கிடந்த, கலப்படமான சாதனங்களைக் கொண்டு அவர் பொய்யிலிருந்து உண்மையைப் பிரித்துக் காட்ட வேண்டியிருந்தது; முரண்பாடாகத் தோன்றியவற்றையெல்லாம் சீர்படுத்தவேண்டியிருந்தது; புதிய தத்துவத்தையும், புதிய வாழ்க்கைக் கலையையும் உருவாக்கவேண்டியிருந்தது. கீதையில் எங்கு பார்த்தாலும் சாங்கியம், யோகம், யக்ஞம், பக்தி, தேவர்கள் முதலிய வார்த்தைகள் அடிபடுகின்றன, ஆனால், அவை பொருத்தமான இடங்களில் பொருத்தமான முறையில் கூறப்பட்டுள்ளன. சில வார்த்தைகளுக்கு அதற்கு முன் இராத அர்த்தங்களும் வியாக்கியானங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. உபநிடதங்களுக்கும் கீதைக்கும் உள்ள தொடர்பைப் பொறுத்தமட்டில், பசுக்கள், பால், பால் கறப்பவன் என்ற புகழ் பெற்ற உவமையை நான் குறிப்பிட்டிருக்கிறேன். அந்த உவமையை மாற்ற நான் துணியலாம் எனில், உபநிடதங்களைப் புல் அடர்ந்த மைதானங்களுக்கு ஒப்பிடலாம். அந்தப் பசும் புல்லை கீதையின் ஆசிரியர் அமுதம் போன்ற பாலாக மாற்றியிருக்கிறார். அந்தப் பால்தான் கீதையாகும். கீதை முழுவதும் உபநிடதங்களின் சாரம் ஊடுருவியிருப்பதைக் காணலாம். உபநிடதங்களில் உள்ள சொற்கள், சுலோகங்கள் முதலியவை கூட கீதையை உருவாக்குவதில் கையாளப்பட்டுள்ளன. எனினும், அவை சாரமாகப் பிழிந்து இணைக்கப்பட்டிருப்பதால், கீதையாகிய ஞானப் பொக்கிஷத்தை உருவாக்க உபநிடதங்கள் உபயோகிக்கப்பட்டுள்ளன என்றே எண்ண முடியவில்லை.

உபநிடதங்களில் இராதது, கீதையில் என்ன இருக்கிறது? இவ்விதம் யாராவது கேட்கலாம். டாக்டர் ராதாகிருஷ்ணன் கூறுவதைப் போல, "மூலாதாரமான முடிவுகள்" உபநிடதங்களிலிருந்து உருச்சிதையாமல் அப்படியே எடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. உபநிடதங்களில் இருப்பதைப் போல் ஆன்மா, பிரம்மம் என்ற வார்த்தைகள் கீதையிலும் இருக்கின்றன. கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள 19, 20, 29 சுலோகங்களுக்கும், பதினெட்டாவது அத்தியாயத்தில் உள்ள 12-17 சுலோகங்களுக்கும், மற்றும் சில சுலோகங்களுக்கும் நான் கொடுத்துள்ள குறிப்புகள் உபநிடதங்களில் உள்ள முரண்பாடுகளை எடுத்துக்காட்டுகின்றன. உபநிடதங்களில் உள்ள முரண்பாடுகள் உண்மையில் முரண்பாடுகள் அல்ல என்பதை, பேராசிரியர் ரானடே தாம் எழுதியுள்ள உபநிடத தத்துவ ஆராய்ச்சி நூலில் திறமையுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவற்றை, கீதையின் ஆசிரியரும் அபார திறமையுடன் பொருத்தமான இடங்களில் இணைத்திருக்கிறார். உபநிடதங்களில் உள்ள கருத்தை, மிகவும் ஊக்கமும் உத்வேகமும் அளிக்கும் அற்புதமான உபதேசமாக அவர் மாற்றியிருப்பது, அவரது இணையற்ற திறமைக்கு எடுத்துக்காட்டாகும்.

இதற்கு, ஒரு சில உதாரணங்களை எடுத்துக் காட்டுகிறேன். ஈசோபநிடதம் என்ற மிகவும் சுருக்கமான உபநிடதத்தில், மற்ற எல்லா உபநிடதங்களின் சாரமான தத்துவம் அடங்கியிருக்கிறது. அதில் உள்ள பிரபல சுலோகத்தின் கருத்து இதுதான்: "இந்த உலகத்தில் உள்ள எல்லாவற்றிலும் சிருஷ்டி கர்த்தாவான இறைவன் வியாபித்துள்ளார். எனவே, எல்லாவற்றையும் தியாகம் செய்து அவருக்கு அர்ப்பணம் செய்யுங்கள். பிறகு உங்களுக்குக் கிடைக்கும் பங்கை மாத்திரம் உபயோகப்படுத்திக் கொண்டு அனுபவியுங்கள். யாருடைய செல்வத்திற்கும் ஒரு காலத்திலும் ஆசைப்படாதீர்கள். இங்கே கடமையைச் செய்வதில் ஈடுபட்ட வண்ணம் கூட ஒருவன் நூறு ஆண்டுகள் வரையில் உயிர்வாழ விரும்பலாம். அவ்விதம் கடமையைச் செய்பவன் மாத்திரம்தான் தனது செயல்களால் களங்கம் அடைவதில்லை."*

இது ஒரு புதிர் போல் தோன்றுகிறது. ஆனால், கீதையின் ஆசிரியர் மேற்கண்ட இரண்டு சுலோகங்களை அடிப்படையாகக்

---

ईशा वास्यमिदं सर्वं यत्किञ्च जगत्यां जगत् ।
तेन त्यक्तेन भूञ्जीथा : मा गृध : कस्यस्विद् धनं ॥
कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतं समा : ।
एवं त्वयि नान्यथेतोऽस्ति नकर्म लिप्यते नरे ॥

* ஈசாவாஸ்ய மிதம் ஸர்வம் யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத்|
தேன த்யக்தேன புஞ்சிதா: மா க்ருத: கஸ்யஸ்வித் தனம்||
குர்வன்னேவேஹ கர்மாணி ஜி ஜிவிஷேத் சதம் ஸமா:|
ஏவம் த்வயி நான்யதே தோஸ்தி நகர்ம லிப்யதே நரே||

—ஈசோபநிஷதம். 1, 2.

கொண்டே கர்ம யோக தத்துவம் முழுவதையும் உருவாக்கி யுள்ளார். அதாவது, அடிமைப்படுத்தும் செயல், அடிமைப்படுத் தாமல் விடுதலே அளிக்கும் செயல் ஆகிய இரு வகைச் செயல் களேயும் உருவாக்கியுள்ளார்.

முண்டக உபநிடதத்தில் உள்ள ஒரு பிரிவு முழுவதையுமே கீதையின் ஆசிரியர் சுருக்கமாகக் கொடுத்துள்ளார். அதற்கு புதிய பொருளும் புதிய உருவமும் கொடுத்துள்ளார். இதற்கு உதாரணமாக, கீதையின் 4-ஆவது அத்தியாயம் 32-38 சுலோகங் களேப் பார்க்கலாம். மற்றும் அவர் உபநிடதங்களில் உள்ள முக்கியமான விஷயங்களே எடுத்துக்கொண்டு, முக்கியமல்லாத வற்றை உதறித்தள்ளியிருப்பதை, கீதையில் பலவிடங்களில் காண்கிறோம். உதாரணமாக, மரணத்திற்குப் பிறகு ஏற்படும் நிலேயைப்பற்றி அவர் குறிப்பிட்டிருக்கிறார். அவ்விஷயமாக சாந்தோக்கிய உபநிடதத்தில் (5. 10. 1-6) உள்ள பல சுலோகங் களேயும் சுருக்கி, மூன்று அருமையான சுலோகங்களில் சாரமாகப் பிழிந்து கொடுத்திருக்கிறார். இவ்விஷயத்தை, 8-ஆம் அத்தி யாயம், 24-26-ஆவது சுலோகங்களுக்கு நான் கொடுத்துள்ள குறிப்புகளில் காணலாம்.

இப்போது நாம் சாங்கிய யோக முறைகளே எடுத்துக் கொள்ளுவோம். இதைப்பற்றி அடுத்த பிரிவில் விரிவாக ஆராய்ச்சி செய்யலாம். இதைப் பற்றிய முழு விவரங்களும் பிரச்ன உபநிடதத்தில் (4, 8) அடங்கியிருக்கின்றன. அதில் சாங்கிய புருஷனே, பாமரனுகவும், தீர்க்கதரிசியாகவும், கையால் இயக்குபவனுகவும், வாயால் ருசிபார்ப்பவனுகவும், காதால் கேட்பவனுகவும், வாசனேயை நுகர்பவனுகவும், சிந்திப்பவ னுகவும் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. அழிவற்ற, மகோன்னத மான ஆத்மாவே, பரமாத்மாவே அவன் வாழும் இடம் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்ற உபநிடதங்களில் குணங்களேப் பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. எனினும், சிதறிக் கிடக்கும் அந்தப் பகுதிகளிலிருந்து கீதையின் ஆசிரியர் தமது தத்துவம், தருமம் முழுவதையும் உருவாக்கி, அவற்றிற்கு புதிய, அருமை யான அர்த்தத்தையும் கொடுத்துள்ளார்.

தியான யோக சம்பந்தமாக, மைத்ரி உபநிடதத்தில் உள்ள 6. 18-22 பிரிவுகளே எடுத்துக் கொள்ளுங்கள். கீதையின் 6-ஆவது அத்தியாயம் முழுவதும், 8-ஆவது அத்தியாயத்தின் ஒரு பகுதியும் அந்தப் பிரிவுகளேயே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்று கூறலாம். உபநிடதத்தையும் கீதையையும் ஒப்பிட்டு இங்கே நான் எதுவும் கூற விரும்பவில்லே. ஆனல், கீதைக்கு ஹியூம் எழுதியுள்ள விளக்கத்தை வாசிப்போர், கீதை மைத்ரி உபநிடதத்தில் உள்ள நுணுக்கமான விவரங்களே விட்டுவிட்டு, தியானத்தையும் ஞானத்தையும் பற்றி அந்த உபநிடதத்தைக் காட்டிலும் சிறந்த முறையில் விவரித்திருக்கிறது என்பதைக் காணத் தவறமாட்டார்கள். அதிலும் முக்கியமாக, ஞான மார்க்

கத்தைக் காணத் தவறியவனுக்கு பகவான் இடும் கட்டளை, 6-ஆவது அத்தியாயத்தின் இறுதியில் அடங்கியிருக்கிறது. அது கீதையில், எல்லோருக்கும் உத்வேகத்தையும் ஊக்கத்தையும் அளிக்கக் கூடிய அற்புதமான பகுதியாகும்.

வேதங்களில் உள்ள தெய்வங்களைப் பற்றியும், பல்வேறு தெய்வங்களை வணங்குவோரைப் பற்றியும் கீதையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அவ்வாறு வணங்கும் ஒவ்வொருவருக்கும் தகுந்த இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும், அந்த தெய்வங்கள் எங்கும் வியாபித்துள்ள ஒரே கடவுளின் பல்வேறு அம்சங்களே என்றும், அந்த ஒரே கடவுளையே பக்தியுடன் வணங்க வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, அவை ஒரே கடவுளின், ஒரே கடவுளுடைய சித்தத்தின் பல்வேறு அம்சங்களே. இந்த விளக்கத்தை மனத்திற் கொண்டு 10-ஆவது அத்தியாயத்தை வாசிப்போமாயின், அது வேதங்களின் பொருளையே தெளி வாக்கும் சிறந்த வியாக்கியானமாகத் திகழ்கிறது என்பதை அறிந்துகொள்ளலாம்.

உபநிடதங்களில், பணிவுள்ள சீடர்களைப் பற்றிக் குறிப்பிட் டிருப்பதைக் காண்கிறோம். பூரண வளர்ச்சி பெற்றுள்ள பக்தி யாகிய மரத்திற்கு அந்தச் சீடர்களே விதை போன்றவர்கள் என்று பேராசிரியர் ரானடே கூறியிருக்கிறார். அது எவ்வளவு தூரம் நியாயம் என்பது எனக்குத் தெரியாது.

நாரதர், மனம் உடைந்து துக்கத்துடன் சனத்குமாரரை அணுகிக் கேட்கிறார்: "ஆன்மாவை அறிந்தவர்கள், துக்கத்தைக் கடந்து செல்லுகிறார்கள் என்று தங்களைப் போன்ற மகான்களிட மிருந்து நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மிகவும் துக்கத்தில் ஆழ்ந்துள்ள நான் அதைக் கடந்து செல்லுவதற்கு கருணை கூர்ந்து உதவி புரியுங்கள்." அதே நிலையில் இருந்த பிருகத்ர தனும் தன் குருவை அணுகி, தண்ணீர் இல்லாத கிணற்றில் இருக்கும் தவளையைப்போல் தான் சம்சாரத்தில் உழன்று தவித்து வருவதாகவும், எனவே அதிலிருந்து தன்னை விடுவிக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொள்கிறான். கீதை, உபநிடதங் களில் ஒன்றாகச் சேர்க்கப்படாவிட்டாலும் இது ஓர் உபநிடதம் என்றே வர்ணிக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் மறந்து விடக் கூடாது. வேதாந்த சாத்திரம் ஏற்பட்டதிலிருந்து இந்தியாவில் சிஷ்ய உணர்ச்சி இருந்துவந்திருக்கிறது. பிரம்ம வித்தையை (தெய்விக ஞானத்தை) அறிந்து கொள்வதற்காக சீடர்கள் குருமாரை நாடிச் சென்றது போலவே, அர்ஜுனனின் நிலைமையும் இருந்தது என்றே நான் கருதுகிறேன். எனினும், மற்ற சீடர் களுக்கும் அர்ஜுனனுக்கும் வித்தியாசம் உண்டு. வேதங்களில் நிறைந்து கிடக்கும் தோத்திரங்களிலும் பிரார்த்தனைகளிலும் பக்தி விருட்சத்தின் விதைகளைக் காணலாம். உபாசன மந்தி ரத்தில் வேத முனிவர் திரும்பத் திரும்ப கடவுளுக்கு வணக்கம் செலுத்துகிறார். "அக்னியிலும், நீரிலும், உலகம் முழுவதும்

வியாபித்துள்ள, பயிர்களிலும், நிரந்தரமான மரங்களிலும் இருக்கும் கடவுளை மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்'' என்று கூறுகிருர்.

அற்புதமான உபநிடதப் பிரார்த்தனைகளிலும், உணவு அளித்துப் போஷிப்பவரை ஆன்மா வேண்டிக் கொள்கிறது. அவரது முகத்தை மறைத்திருக்கும் பொன் திரையை, சத்தியத்தை வணங்கும் பக்தனுக்காக அகற்ற வேண்டும் என்பதே அதன் வேண்டுகோள் ஆகும். தியாகிக்காக ஓர் உயர்ந்த பிரார்த்தனை முறையை உபநிடதம் விதிக்கின்றது. பொய்யிலிருந்து உண்மையான நிலைக்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மரணத்திலிருந்து இறப்பே இல்லாத ஒரு நிலைக்கும் தியாகிக்கு வழிகாட்டுவதே அந்தப் பிரார்த்தனையின் நோக்கமாகும். அவ்வாருக, கிருஷ்ண வாசுதேவ பக்தர்கள் அடங்கிய ஒரு பிரிவினர், வேத உபாசனையை முறைப்படுத்தி, அதை ஒரே கடவுளிடம் அதி தீவிரமான பக்தியாக மாற்றுவதற்கான சூழ்நிலை ஏற்பட்டது.

கீதையின் 11-ஆவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள கடவுளின் விசுவ ரூபத்தைப் பற்றிய வர்ணனை, ஏற்கனவே முண்டக உபநிடதத்தில் கருவுருவமாக இருப்பதாக பேராசிரியர் ரானடே கூறியிருப்பது முற்றிலும் நியாயமேயாகும். அவர், எழுதியுள்ள உபநிடத தத்துவ பரிசீலனை என்ற நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்: ''முண்டக உபநிடதத்தில் உலகத்தின் சிருஷ்டி கர்த்தாவைப்பற்றிய வர்ணனையை நாம் காண்கிருேம். நெருப்பு அவரது தலையாகவும், சூரியனும், சந்திரனும் அவரது கண்களாகவும், வீடுகள் அவரது காதுகளாகவும், வேதங்கள் அவரது பேச்சுகளாகவும், வாயு அவரது பிராணனுகவும், இந்த பிரபஞ்சம் அவரது இருதயமாகவும், பூமி அவரது பாதங்களாகவும், வர்ணிக்கப்பட்டுள்ளன. பகவத் கீதையில் பிரசித்தி பெற்ற 11-ஆவது அத்தியாயத்தில் கிருஷ்ண பகவானின் விசுவ ரூபத்தைப்பற்றிய விவரமான வர்ணனையையே, பகவத் கீதைக்கு முன் ஏற்பட்ட முண்டக உபநிடதத்தில் சாரமாகக் காண்கிருேம்.''

இந்த ரீதியில் பார்ப்போமாயின், அநேகமாக கீதையில் உள்ள ஒவ்வொரு விஷயத்தையும் உபநிடதங்களில் உள்ளவற்றுடன் ஒப்பிடலாம். கீதைக்கு முந்தி வாசிக்கப்படும் தியான சுலோகங்களில், கீதையை பசுக்களுடன் ஒப்பிடப்பட்டிருக்கிறது. நான் ஒன்று கூற விரும்புகிறேன். கீதையில் பகவான் பேசுவதாகவே எண்ணுபவர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. கிருஷ்ணனை அர்ஜுனனின் சாரதியாகவும், வழிகாட்டியாகவும், தத்துவ குருவாகவும், நண்பனுகவும் சித்திரிக்கும் கொள்கை கடோபநிடதத்திலிருந்து எடுக்கப்பட்டது என்றே நான் கூறுவேன். ஆன்மாவை உடலாகிய ரதத்தின் எஜமானனுகவும், அறிவை சாரதியாகவும், மனத்தை கடிவாளங்களாகவும், புலன்களை குதிரைகளாகவும் கடோபநிடதம் சித்திரிக்

கிறது. இந்த மகத்தான உபநிடதத்திலிருந்து கீதை பத்து, பன்னிரண்டு இடங்களில் கருத்துகளை கடன் வாங்கிக்கொண் டிருக்கிறது. கலை நிபுணர்களிலேயே சிரேஷ்டரான வியாசர், உபநிடதங்களின் தத்துவத்திலிருந்து பகவத் கீதையாகிய ஜீவன் ததும்பும் தருமத்தை உருவாக்குவதற்காக, தமது காவியத்தில் அந்தக் கருத்துகளை ஏன் உபயோகித்திருக்கக் கூடாது?

இந்த விஷயத்தை நான் மேலும் விவரிக்க வேண்டியதில்லை. கீதையை மிகவும் அக்கறையுடன் ஆராய்ச்சி செய்ய விரும்பு வோர், அதற்கு ஆதார நூல்களான உபநிடதங்களை ஆராய்ச்சி செய்ய வேண்டும். "பூஜிக்கத் தகுந்த உபநிடதங்கள்" என்று ஹியூம் உபநிடதங்களைப் போற்றியுள்ளார். அவ்விதம் உபநிட தங்களை ஆராய்ச்சி செய்வோர், நான் மேலே குறிப்பிட்ட பசு, புல், மைதானம் போன்ற உவமைகளின் உண்மையைத் தெரிந்து கொள்ளுவார்கள். எனினும், நான் இவ்விதம் கூறியிருப்பதி லிருந்து, கீதை உபநிடதங்களை எதிரொலிக்கும் ஓர் உயர்தர காவியம் என்று யாரும் முடிவு கட்டிவிட வேண்டாம். அதிகமாக எவருக்கும் தெரியாத ரகசியமான ஒரு சித்தாந்தத்தை, கல்வியறி வற்ற, தாழ்ந்த நிலையில் உள்ள, வீழ்ச்சியடைந்த எல்லோரும் அறிந்துகொள்ளும்படி செய்த பெருமை கீதை ஒன்றுக்கே உரி யது. கீதை அந்த சித்தாந்தத்தை நடைமுறையில் பின்பற்றக் கூடிய உயர்ந்த தருமமாகச் செய்ததுடன், ஆடவர், பெண்கள் யாவ ரும் வாழ்க்கையின் லட்சியத்தை அடைவதற்கான வழியையும் காட்டியிருக்கிறது. எல்லாவற்றையும் விட மேலாக, வாழ்க்கை வாழ்வதற்கு உரியது என்ற உண்மையை எள்ளளவும் சந்தேகத் துக்கு இடமின்றி கீதை பிரகடனப் படுத்தியிருப்பதுடன், அத்தகைய வாழ்க்கையை நடத்துவதற்கான வழியையும் கற்பித் திருக்கிறது. அக்காலத்தில், சந்நியாசமும் (செயலைத் துறப்பது) யோகமும் (செயலில் ஈடுபடுவது) ஒன்றுக் கொன்று முரண்பாடா னவை என்று கருதப்பட்டன. ஆனால், இந்த இரண்டு சித்தாந் தங்களையும் அபூர்வமான முறையில் இணைத்து, அவ்விரண்டுக் கும் ஒருமிப்பை உண்டாக்கியதும் கீதைதான்.

"கிறிஸ்தவ மதத்தில் இருப்பதுபோல் ஹிந்து சமயத்தில் 'புதிய ஏற்பாடு' * எதுவும் இல்லை; எனவே ஹிந்து மதத்தைப் பின்பற்றுவோருக்கு கிறிஸ்தவ மதத்தில் இருப்பதுபோல் ஆக மங்களும்† இல்லை" என்று ஒரு கிறிஸ்தவர் குறை கூறியுள்ளார். ஆனால், பூஜ்யரான டாக்டர் டியூசென், அவருக்குச் சரியான பதில் கொடுத்திருக்கிறார். "கிறிஸ்தவர்களுக்கு புதிய ஏற்பாடு எப்படியோ அது போலவே ஒவ்வொரு இந்திய பிராம்மணருக் கும் இன்று உபநிடதங்கள் இருந்து வருகின்றன" என்று டியூசென் கூறியுள்ளார். டாக்டர் டியூசென் கொடுத்துள்ள

* கிறிஸ்தவ மத வேதமான பைபிள், 'பழைய ஏற்பாடு' என்றும் 'புதிய ஏற் பாடு' என்றும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

† ஆகமங்கள், பைபிளில் உள்ள அத்தியாயங்களையே குறிப்பிடுகின்றன.

உவமையை நான் மேலும் தொடருவதாயின், உபநிடதங்கள் ஹிந்துக்களுக்கு புதிய ஏற்பாட்டைப் போல் இருக்கின்றன என்ருல், கீதை ஆகமங்கள் போன்றவை என்று கூறலாம். கீதையின் ஆசிரியர், உபநிடதங்களின் உபதேசங்களை நடைமுறையில் அனுசரித்து, அவற்றின் சாரத்தை சுருக்கமாகக் கொடுத்துள்ளார்: ''பற்றுதலின்றி செயல் புரிபவன், மோட்சத்தை அடைவான்.''* இதற்கும், கீதையில் உள்ள மற்ற சுலோகங்களுக்கும் ஒரே வாக்கியத்தில் விளக்கம் கூறுவதாயின், ''யக்ஞமே, தரும விதியை நிறைவேற்றுவதாகும்'' என்று கூறலாம்.

எனினும் கீதையில், பிராம்மணருக்கோ அல்லது ஹிந்துக்களுக்கோ மாத்திரம் பொருத்தமான தனித்த உபதேசம் எதுவும் இல்லை. கீதையில் இந்தியாவின் சூழ்நிலைக்குப் பொருத்தமான எல்லாச் சிறப்பு அம்சங்களும் அடங்கி யிருப்பதால், அது ஹிந்துக்களின் மனத்திற்கு முற்றிலும் கவர்ச்சியாக இருப்பது இயல்பேயாகும். எனினும், பைபிள் அல்லது குரானில் உள்ள முக்கிய உபதேசமானது, கிறிஸ்தவரல்லாத அல்லது முஸ்லிம் அல்லாத ஒருவரது மனத்தைக் கவராது என்பதில்லை. அது போலவே கீதையின் முக்கிய உபதேசமானது, ஹிந்து அல்லாத ஒருவரின் மனத்தைக் கவராது என்பதில்லை.

நான் இப்போது மேற்கோள் காட்டிய சுலோகத்தில், கீதையின் உபதேசம் முழுவதுமே ரத்தினச் சுருக்கமாக அடங்கி யிருக்கிறது. கீதை, தன்னுடைய பக்தன் பரம்பொருளின் தோற்றத்தைக் காணும்படி செய்கின்றது. இறைவனை எப்படிக் காண முடியும்? அவரது உண்மையான இயல்பையும் மகத்துவத்தையும் எப்படி அறிந்துகொள்வது? இறைவனுடன் இரண்டறக் கலப்பது எப்படி? அதற்கான வழிகள் என்ன? இவற்றையெல்லாம் கீதை தனது பக்தனுக்கு எடுத்துக் கூறுகிறது.

கீதையில் உள்ள ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவும் குறிப்பிடத்தக்கது. பண்டைய காலம் தொட்டு அது நமக்கு பாரம்பரியமாக வந்திருக்கிறது. முடிவில் கொடுக்கப்பட்டுள்ள ஒவ்வோர் அத்தியாயத்தின் தலைப்பும் பல்வேறு பதிப்புகளிலும் வேறுபாடாக இருக்கின்றன. என்ருலும், அந்த முறை எல்லாப் பதிப்புகளிலும் ஒரேவிதமாகவே இருக்கின்றன. ''இவ்விதமாக,

---

तस्मादसक्त : सततं कार्यं कर्म समाचर।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुष : ॥

‡ தஸ்மாத் அஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர|
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷ:||

கீதை, அத்தியாயம்–3, சுலோகம்-19.

இதன் பொருள்: ஆகையால், எப்போதும் பற்றற்றவனாக இருந்து கொண்டு செயல்புரிய வேண்டும். ஏனெனில், பற்றற்று செயல் புரிகின்ற புருஷனே எல்லாவற்றிற்கும் மேலான நிலையை அடைகிறான்.

பகவத் கீதை என்ற உபநிடதமாகிய பிரம்மவித்தையின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணை அடங்கிய......பெயருள்ள......ஆம் அத்தியாயம் முடிவுறுகின்றது'' என்று ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும் கூறப்பட்டிருக்கிறது.

பகவத் கீதை என்பதற்கு பகவானால் பாடப்பட்டது என்பதே பொருள். குருவின் பாதங்களுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு சீடன் கற்றுக்கொள்ளுவது என்பதே உபநிடதம் என்ற சொல்லுக்கு இலக்கணப்படி பொருளாகும். பரம்பொருளுக்கு அருகில் கொண்டு செல்வதன் மூலம், உலக பந்தங்களை அறுப்பதற்கு உதவி புரிவது என்பதும் அச் சொல்லுக்கு அர்த்தம். அவ்வாறாக ஒரு விதத்தில், பிரம்ம வித்தையும் உபநிடதமும் ஒரே அர்த்தத்தையே குறிக்கின்றன. எனவே கீதையை, யோக சாத்திரம் அல்லது யோகக் கலை எனலாம். அதை வாழ்க்கைக் கலை என்றும் கூறலாம். பிரம்மத்தைப்பற்றி அறிந்து கொள்ளவும், ஞானத்தைப் பெறவும் அது உதவியாக இருக்கிறது அல்லவா? ‘‘பிரம்ம வித்தை அல்லது பிரம்ம ஞானத்தை அடைவதற்கான யோக சாத்திரம்'' என்றிருப்பதை ‘‘பிரம்ம வித்தையில் வேரூன்றியுள்ள யோக சாத்திரம்'' என்றும் கூறலாம். வாழ்க்கைக் கலை ஞான வாழ்க்கையில் வேரூன்றியிருந்தாலொழிய, அது ஒரு காலத்திலும் ஞானத்தை அடைவதற்கு வழிகாட்டியாக இருக்க முடியாது. ஞானம்தான் வாழ்க்கையின் லட்சியம். வாழ்க்கைக் கலையோ அல்லது யோகமோ ஞானத்தை அடைவதற்கான முறையேயாகும். கீதை மகாபாரதத்தின் உபநிடதமே.

## மூலாதாரமான ஆதாரங்கள்

கீதையிலிருந்து வெளியாகும் ஞானத்தைப்பற்றியும், வாழ்க்கைக் கலையைப்பற்றியும் நாம் இப்போது ஆராய்ச்சி செய்ய முற்படுவோம். அவ்விதம் ஆராய்ச்சி செய்வதற்கான சிறந்த வழி என்னவெனில், பல்வேறு அத்தியாயங்களையும் பாகுபடுத்தி சுருக்கமாக விமர்சனம் செய்வதேயாகும். அத்தகைய விமர்சனத்தில் நாம் ஈடுபடுமுன், கீதையின் நிரந்தரமான, அடிப்படையான சில அம்சங்களைப்பற்றிக் குறிப்பிடவேண்டும். விமர்சனம் செய்ய முடியாத சில இறுதி நிலைகள் கீதையின் அடிப்படை அம்சங்களாக இருக்கின்றன. அதாவது ஆன்மா, பரமாத்மா, கடவுள், பிரபஞ்சம் முதலிய மற்றும் சில விஷயங்களை அதற்கு உதாரணமாகக் கூறலாம்.

கீதை, தத்துவ ஆராய்ச்சி எதுவும் செய்ய முற்படவில்லை. மேற்கண்ட இறுதி நிலைகளை ஒப்புக்கொண்டுள்ளவர்களுக்கே அது உபதேசிக்க முற்படுகிறது. ஏனெனில், தத்துவ சாத்திர ஆராய்ச்சியில் ஈடுபடுவதைக் காட்டிலும், வாழ்க்கையில் சாதாரண மனிதனின் லட்சியம் என்ன என்பதை விளக்குவதே

கீதை ஆசிரியரின் நோக்கம். "என்னுள் இருக்கும் அந்த காரத்தை அகற்றி ஒளியைக் கொடுங்கள்" என்று அர்ஜுனன் கிருஷ்ண பரமாத்மாவை அணுகி வேண்டிக் கொள்ளுகிறுன். மின்னெளியைப் போல் திடீரென்று ஏற்பட்ட அவனது வேண்டுகோள், பிறவாத, ஆதி அந்தமற்ற, மரணமற்ற, நிரந்தரமான, நிரூபிக்க முடியாத ஆன்மாவை வெளிப்படுத்துகிறது. 'நிரூபிக்க முடியாத' என்ற பண்புச் சொல்லை அவன் உபயோகிக்கிறுன். அவன் மனத்தில் நினைக்கும் அர்த்தம் முழுவதும் அந்தச் சொல்லில் அடங்கியிருக்கிறது. ஆதாரங்களுக்கெல்லாம் ஆதாரமான பரம்பொருளை ஒருவர் எப்படி நிரூபிக்க முடியும்? அளவுகளுக் கெல்லாம் அளவாக இருக்கும் அவரை யார், எப்படி அளவிட முடியும்? அந்தப் பரம்பொருளை கேன உபநிடதம் பின்வருமாறு வர்ணிக்கிறது: "காதுகளின் கேட்கும் சக்தியும், மனத்தின் மனமும், பேச்சின் தொனியும், மூச்சுக் காற்றின் மூச்சும், கண்களின் பார்வையும் இறைவனே."

அதையே நவீன தத்துவ நிபுணரான டாக்டர் ராதாகிருஷ்ணன் இவ்விதம் குறிப்பிட்டுள்ளார்: "வாழ்க்கையின் இறுதி லட்சியம் நம்மிடத்தில் உள்ள ஆன்மாவை, அதாவது மனிதனிடத்தில் உள்ள தெய்வத் தன்மையைக் காண்பதே. உயிரே கடவுள் தான். உயிர்தான் கடவுள் என்பதை ருசுப்பிப்பது உயிரே. கடவுள் இருக்கிறுர் என்பதை நம்முள் ஏதோ ஓரிடத்தில் நாம் முற்றிலும் நிச்சயமாக அறியாவிடில், நாம் உயிர் வாழ முடியாது. அவ்விஷயத்தில் சூரியனுக்கும் சந்திரனுக்கும் சந்தேகம் ஏற்படுமாயின், அவ்விரண்டும் கூட மறைந்துவிடும். நமது உயிர்கள் அவற்றின் சொந்த எல்லைக்குள் வாழ்வதில்லை. நாம், நாம் மாத்திரமல்ல; நாம் கடவுள்-மனிதர்கள்."

பிரபஞ்சத்தின் அமைப்பைப் பொறுத்தமட்டில், அக்காலத்தில் வழக்கத்தில் இருந்த கொள்கையையே கீதை கடைப்பிடித்திருக்கிறது. உலகத்தில் உள்ள யாவும் வளர்ச்சி பெற்று, முன்னேற்றம் அடைந்து வருகின்றன என்பதே அக்கொள்கை யாகும். நவீன சிந்தனையாளர் எவரும் அக்கொள்கையில் நம்பிக்கை வைத்தே தமது ஆராய்ச்சியைத் தொடங்குவர். பிரபஞ்சத்தின் அமைப்பு சம்பந்தமான சாங்கிய முறையே அக்காலத்தில் அமலில் இருந்தது. அது சில உபநிடதங்களால் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதை ஏற்கனவே பார்த்தோம். கீதையும்* அதைப் பற்றிக் குறிப்பிடுகிறது. கீதையிலிருந்து பல ஸ்மிருதி

---

* கீதையின் இரண்டாவது அத்தியாயத்திற்கு சாங்கிய யோகம் என்றே பெயர். கீதையில் மற்றும் சில இடங்களிலும் சாங்கிய யோகத்தைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

சாங்கிய சாத்திரம், ஒரு விதத்தில் வேதாந்த சாஸ்திரமே என்றுலும் கபில முனிவர் இயற்றியுள்ள சாங்கியம் வேறு. இது, ஆறு சாத்திரங்களுள் நான்காவதாகும். பிரபஞ்சத்தின் அமைப்பைப் பற்றிய விதிகளை அது விளக்குகிறது. முக்குணங்களின் மயமாக உள்ள இயற்கைத் தத்துவங்களுக்கு சாங்கிய சாத்திரமும், பர பிரம்மத்தை அறிவதற்கு வேதாந்த சாத்திரமும் பிரமாணமாக உள்ளன. எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு பரமாத்மா இருக்கிறுர் என்று சாங்கிய சாத்திரம் கூறவில்லை.

களும் அதை மேற்கொண்டுள்ளன. மகாபாரதத்திலும் பல இடங்களில் சாங்கியக் கொள்கையைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

சாங்கிய முறை அதன் முழு உருவத்திலும் அக் காலத்தில் அமலில் இருக்கவில்லை. அதன் முழு உருவத்தில் அமலில் இருந்ததற்கான அடையாளங்களும் இல்லை. அதன் சிதைந்த உருவமோ அல்லது அதன் 'எலும்புக் கூடோ' இருந்ததற்கான அறிகுறிகள் மாத்திரமே உள்ளன. எனினும் அந்த எலும்புக் கூட்டை கீதை ஏற்றுக்கொண்டு, அதற்கு உடலையும், உயிரையும் கொடுத்தது; தன் தத்துவத்திற்கும் தரும விதிகளுக்கும் அதை உபயோகப்படுத்திக் கொண்டது. இச் சந்தர்ப்பத்தில் சாங்கிய முறையைப் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுவது பலன் தரத்தக்கதாக இருக்கும். அப்போதுதான் கீதை, அதை எவ்வளவு தூரத்துக்கு ஏற்றுக்கொண்டது என்பதையும், அந்த மூலச் சரக்கை எப்படி பயன்படுத்திக் கொண்டது என்பதையும் நாம் அறிந்துகொள்ள முடியும். அப்போதுதான், கீதையில் அடிக்கடி வரும் சில சொற்களையும் நாம் உணர்ந்து கொள்ளமுடியும்.

## சாங்கிய முறை

கபிலரோ, அல்லது சாங்கிய முறையை அமலுக்குக்கொண்டு வந்த மாபெரும் தீர்க்கதரிசியான முனிவர் யாராக இருந்தாலும் அவரோ, டார்வினைப்போல்* வெளி உலகத்து ஆராய்ச்சியின் மூலம் தமது ஆராய்ச்சியைத் தொடங்கவில்லை. தம் உள்ளத்தில் இருக்கும் ஆராய்ச்சிசாலையில் நீண்ட காலம் பரிசோதனை செய்ததன் பயனாக, உலகில் யாவும் வளர்ச்சி பெறும் தன்மை

---

* ராபர்ட் சார்லஸ் டார்வின் (1809—1882) உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானி யாவார். ஆதியில் குரங்கிலிருந்து பிறந்து வளர்ச்சி அடைந்தவனே மனிதன் என்பது அவரது சித்தாந்தம். டார்வினின் கொள்கையைப் பற்றி காந்திஜி குறிப்பிட்டுள்ள சில விவரங்கள் பின் வருமாறு:

"மற்ற ஜீவராசிகளைப் போல் மனிதனுக்கும் தன்னைத்தான் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி இயல்பாகவே அமைந்திருக்கிறது என்று டார்வின் கூறுகிறார். வாழ்க்கைப் போராட்டத்தைச் சமாளிப்பவர்களையே வெற்றி பெற்றவர்களாகக் கருத வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். அதாவது, வாழ்க்கைப் போராட்டத்தைச் சமாளிக்கத் தகுதியற்றவர்கள், இந்த உலகத்திலிருந்து மறைய வேண்டியதுதான் என்பதே அவரது கருத்தாகும். அப்போராட்டத்தில் வெற்றி பெறுவது வெறும் உடல் பலத்தை மாத்திரம் பொறுத்ததல்ல என்றும் அவர் கூறுகிறார். உடல் பலத்தையும் அறிவு பலத்தையும் காட்டிலும்கூட ஆன்மிக பலம் மேலானது என்பதை டார்வின் எடுத்துக்காட்டியிருக்கிறார். ஒழுக்கம் இல்லாதவர்களைக் காட்டிலும் ஒழுக்கம் உள்ளவர்கள் அதிக காலம் வாழ்வதை நாம் காண்கிறோம். உடல் பலம் போதுமானது என்று டார்வின் கற்பித்ததாகச் சிலர் கருதுகின்றனர். மேலெழுந்தவாரியாகச் சிந்திப்பவர்களே, ஒழுக்கம் உபயோகமற்றது என்பதில் நம்பிக்கை வைப்பார்கள். ஆனால், இது டார்வினின் கருத்து அல்ல. மனிதர்களில் ஒழுக்கமில்லாத இனத்தைச் சேர்ந்தவர்கள் இருந்த இடம் தெரியாமல் அடியோடு மறைந்து விட்டார்கள் என்பதை, மனிதனின் ஆரம்பகால சரித்திரத்திலிருந்து நாம் அறிகிறோம். எல்லாவற்றையும்விட ஆன்மிக பலமே உயர்ந்தது என்பதை, டார்வின் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.''

வாய்ந்தவை என்பதைக் கண்டார். கிரகங்கள் முடிவின்றி இயங்கிக்கொண்டிருக்கின்றன என்பதையும், எல்லாம் வாழ்க்கைப் போராட்டம் என்ற ஒரே விதியை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சி பெறுகின்றன என்பதையும் டார்வின் கண்டார். சாங்கிய ஞானியோ, ஜடப் பொருள், மனம் இரண்டிற்கும் இடம் இருக்கிறது என்பதைக் கண்டார். அவர், நிரந்தரமான இரண்டு கொள்கைகளுடன் ஆராய்ச்சியைத் தொடங்கினார். அவற்றில் ஒன்று பிரகிருதி; மற்றொன்று புருஷன். பிரகிருதி அல்லது ஆதியான பொருள் அல்லது இயற்கை, பிரத்தியட்ச உலகத்தினால், அதாவது நம் கண்களுக்குத் தோன்றும் உலகத்தினால் நிரூபிக்கப்பட்டுள்ளன என்று அவர் கூறினார். அவற்றின் பலனே பிரத்தியட்ச உலகமாகும். கண்களுக்குத் தெரியும் இந்த உலகமானது, கண்களுக்குத் தெரியாத பிரகிருதியிலிருந்து உண்டாகிறது. பிரகிருதியில் மூன்று சமமான பகுதிகள் இருக்கின்றன. அவை ஏற்றத் தாழ்வை அடைவதன் காரணமாகவே உலகம் உண்டாகின்றது. அந்த மூன்று பகுதிகளே, குணங்கள் என்று கூறப்படுகின்றன. குணங்கள் என்பதற்கு நூல்கள் அல்லது சரடுகள் என்பதே அப்பட்டமான அர்த்தமாகும். அதாவது பிரகிருதியாகிற மாலைக்கு குணங்கள் நூல்களைப் போல் இருக்கின்றன. சத்துவம், ரஜஸ், தமஸ் என்பதே மூன்று குணங்கள் ஆகும். இவைதான் வாழ்வு, செயல், செயலின்மை ஆகியவற்றிற்கு அடிப்படையாக இருக்கின்றன. முறையே ஒளி அல்லது அறிவு, சுறுசுறுப்பு, கட்டுப்பாடு ஆகியவையே அவற்றின் அலுவல்கள் ஆகும். அவை ஒன்றுக்கொன்று முரண்பாடானவை அல்ல. அவை சேர்ந்தே இருக்கின்றன. உண்மையில் அவை ஒருபோதும் பிரிந்து தனித் தனியாக இருப்பதில்லை; இணைந்தே இருக்கின்றன. ஆனால், அந்தக் குணங்களின் சமநிலை குலையும் போது, பிரகிருதி விரிந்து கொடுக்கத் தொடங்குகிறது. அப்போது அதில் இந்த முக்குணங்களின் முத்திரையைக் காண முடிகின்றது. உலகத்தில் உள்ள பொருள்களில் எல்லையின்றி பல்வேறு வேற்றுமைகள் தென்படுவதற்குக் காரணம், அவை ஒவ்வொன்றிலும் இந்த மூன்று குணங்களும் பல்வேறு அளவில் இருப்பதும், அவை ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பு கொண்டு இயங்குவதுமே யாகும்.

எனினும், புருஷனுடைய செல்வாக்கு இன்றேல் பிரகிருதி வளர்ச்சி பெற முடியாது. பிரகிருதியைப் போல் புருஷனும் என்றென்றும் இருந்துவரும் சித்தாந்தமாகும். இதை, உண்மையான ஆதாரங்களுடன் சாங்கிய தத்துவமானது நிரூபித்திருக்கிறது. சாங்கிய தத்துவத்தின் பல்வேறு வாதங்களை இப்போது நாம் கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை.

பிரகிருதிக்கு அதாவது உடலுக்கு, உயிரைக் கொடுக்கும் ஆன்மாவைத்தான் புருஷன் என்கிறோம். ஆனால், புருஷன் பிரகிருதிக்கு மாறானது. புருஷ தத்துவம் செயலற்றது, குணங்கள்

இல்லாதது; குணங்கள் உள்ள எல்லாப் பொருள்களுக்கும் உட்பட்டதாகவும் இருக்கிறது, அவற்றையெல்லாம் கடந்ததாகவும் இருக்கிறது. பிரகிருதி ஒன்றே ஆயினும், புருஷ தத்துவங்கள் எண்ணிக்கையற்றவை. மூலத் தத்துவம் சம்பந்தப்பட்டவரையில் அது எல்லோரிடத்திலும் ஒரே விதமாக இருப்பினும், பிறப்புகள், இறப்புகள், புலன்கள் எல்லாம் தனித் தனியாகவே இருந்து, பல்வேறு நபர்களிடத்தில் பல்வேறு செயல்களைப் புரிகின்றன. பிரகிருதியின் வளர்ச்சியைப் பின்வருமாறு கணக்கு எடுத்துக் கூறலாம் :

1. பிரகிருதி, 2. புத்தி, 3. அகங்காரம்.

ஜீவ தத்துவங்கள் : 4. மனம், 5-9, ஞானேந்திரியங்கள், 10-14 கர்மேந்திரியங்கள்*

ஜட தத்துவங்கள் : 15-19. ஐந்து சூக்ஷ்ம பூதங்கள்*, 20-24. ஐந்து மகா பூதங்கள்*, 25. புருஷன்.

சாங்கிய முறையில், எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளோ அல்லது கடவுளோ இல்லை என்றும், பிரகிருதி, புருஷன் ஆகிய இரண்டு நிரந்தரமான தத்துவங்கள் மாத்திரமே உள்ளன என்றும் ஈசுவரசந்திரரின் 'காரிகை' என்ற நூலில் காண்கிறோம். செயலற்ற புருஷனே, பிரகிருதியின் சமநிலையை எப்படியோ குலைத்துவிடுவதாகக் கூறப்படுகிறது. எனவே, பிரகிருதியின் வளர்ச்சியில் மன உறுதி அல்லது புத்தியே முதற்படியாக இருக்கிறது. பிரகிருதியிலிருந்து முதலில் உருவாவது அதுதான். அதற்கு அடுத்தபடியாக புத்தியிலிருந்து அகங்காரம் உண்டாகிறது. பின்னர் பிரகிருதி எண்ணிக்கையற்ற பொருட்களாகச் சிதறுகிறது. அவை ஜீவதத்துவங்கள் என்றும், ஜடதத்துவங்கள் என்றும் இரு பிரிவுகளாகப் பிரிகின்றன. அகங்காரத்திலிருந்து மனம், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் முதலிய பதினொரு அம்சங்கள் உண்டாகி ஜீவதத்துவ உலகமாக உருவாகின்றது. பஞ்ச மகாபூதங்களும் ஐந்து சூக்ஷ்ம பூதங்களும் சேர்ந்து ஜடதத்துவ உலகமாக உருவாகின்றது. இந்த மூன்று விதமான பஞ்ச தத்துவங்களும் ஒன்றுக்கொன்று ஆதாரமாக இருக்கின்றன. அவற்றில், ஒவ்வொரு புலனும் ஒவ்வொரு துறையில் ஆதிக்கம் செலுத்துகிறது. உதாரணமாக, கண்களுக்கு உருவத்தைப் பார்க்கும் சக்தி மாத்திரமே உண்டு:

---

* ஐந்து ஞானேந்திரியங்கள்: தேகம் (ஸ்பர்சிக்கிறது), நாக்கு (சுவையை அறிகிறது), மூக்கு (வாசனையை நுகர்கிறது), காது (கேட்கிறது).

ஐந்து கர்மேந்திரியங்கள்: ஜனனேந்திரியம், கை, கால், வாய், குதம்.

ஐந்து மகா பூதங்கள்: மண் (பிருத்வீ), நீர் (அப்பு), தீ (தேயூ), வாயு, ஆகாயம்.

சூக்ஷ்ம பூதங்களே ஸ்தூல பூதங்களாக அதாவது மகா பூதங்களாக மாறுகின்றன.

வேறு எவ்வித சக்தியும் இல்லை. காதுகளுக்கு சப்தத்தைக் கேட்கும் சக்தி மாத்திரமே இருக்கிறது; வேறு எவ்வித சக்தியும் இல்லை. அது போலவே ஒவ்வொரு புலனுக்கும் ஒரு குறிப்பிட்ட சக்தி மாத்திரமே உண்டு. அவ்விதமாக, ஐந்து புலன்களுக்கும் குறிப்பிட்ட ஐந்து துறைகளில் மாத்திரமே ஆதிக்கம் இருக்க முடியும். அது போலவே ஆகாயம், காற்று, தீ, நீர், மண் ஆகிய பஞ்ச பூதங்கள் ஐந்து சூக்ஷ்ம பூதங்களைப் பிரதிபலிக்கின்றன.

இது பிரதிருதியை, பிரபஞ்ச சம்பந்தமான கோணத்திலேயே காட்டுகிறது. இயற்கையில் தெளிவாகத் தெரியும் இந்த வளர்ச்சி முறையைக் கண்ட தீர்க்கதரிசியான முனிவர், சிறிய மனிதனின் உடல் நிலையையும் மன நிலையையும் நன்கு பரிசீலனை செய்தே அவ்வித முடிவுக்கு வந்தார். மனிதனாகிய சிறிய உலகமே, பிரம்மாண்டமான வெளி உலகத்தின் சிற்றுருவாக அவருக்குத் தோன்றியது. ஒவ்வொரு நபரிடத்திலும் உள்ள ஞானேந்திரியங்கள் வெளியில் உள்ள சாதனங்களை மனத்திற்கு உணர்த்துகின்றன. பின்னர் அவற்றை அகங்காரமானது புத்திக்கு அறிவிக்கிறது. அவற்றையொட்டி இறுதியாக ஒரு முடிவுக்கு வருவது புத்திதான். அந்த முடிவுகளை புத்தி திரும்பவும் மனத்திற்குத் தெரிவிக்கிறது. மனம், கர்மேந்திரியங்களைக் கொண்டு அவற்றை நிறைவேற்றும்படி செய்கிறது.

பிரகிருதியில் புருஷன் எவ்விதம் சிக்கிக் கொள்ளுகிறான் என்பது ஓரளவு வருமாறு விளக்கப்படுகிறது: பிரகிருதியின் வளர்ச்சி ஆரம்பமான பிறகு, புத்தி பெரிதும் புருஷனைப்போல் நடந்துகொள்ளும் முக்கியமான பாகத்தை வகிக்கிறது. சாத்துவிக குணத்துடன் புத்தி சம்பந்தப்படுமாயின் அது புருஷனை பந்தத்திலிருந்து விடுவிக்க உதவி புரிகிறது. அதுவே ராஜஸ அல்லது தாமஸ குணத்துடன் சம்பந்தப்படுமாயின், புருஷனின் பந்தம் மேற்கொண்டு இறுகுவதற்கு உதவிபுரிகிறது. உண்மையில், புருஷன் மேற்கொள்ளும் ஆசை, துவேஷம், விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம் போன்ற மனம் சம்பந்தமான அனுபவங்கள் யாவும் புத்தியின் மாறுபாடேயாகும். சத்துவ குணத்தின் சேர்க்கை காரணமாக புத்தி, சிறந்த ஒழுக்கத்திற்கும், பகுத்தறிவுக்கும், இச்சையடக்கத்திற்கும் இடம் கொடுக்கிறது. அதன் பயனாக, பந்தத்திலிருந்து விடுதலை ஆரம்பமாகிறது. அப்போது புருஷனுக்கும் பிரகிருதிக்கும் உள்ள வேற்றுமை புத்திக்குத் தெளிவாகிறது; புருஷன் பிரகிருதியிலிருந்தும், பிரகிருதி புருஷனிலிருந்தும் விடுதலை பெறுகின்றன. ஸம்ஸாரம் அல்லது பிறப்பு-இறப்புச் சுழலுக்கு, துன்பம் என்றே பொருள். அந்தத் துன்பத்திற்கு நிரந்தரமாக முடிவு காணவேண்டுமாயின், மேற்கண்ட அறிவு அல்லது பகுத்தறிவு ஒன்றுதான் வழியாகும். ஒரு நபர் அல்லது கீழான பிரகிருதி, மேலான பிரகிருதியுடன் தனக்குள்ள ஐக்கியத் தன்மையை உணர்ந்து கொள்ள எப்போதும் போராடி வருகிறது. அந்த ஐக்கியத் தன்மையை உணர்ந்த உடனேயே பகுத்தறிவு ஏற்படுகின்றது. அதாவது,

'நான் பிரகிருதி அல்ல, புருஷனே', 'எதுவும் என்னுடையது அல்ல,' 'அகங்காரத்திற்கு இடமில்லை', 'செய்பவனோ அல்லது அனுபவிப்பவனோ நான் அல்ல' என்ற உணர்வு ஏற்படுகிறது. பாவம், துக்கம் என்ற பயங்கரமான யந்திரத்திலிருந்து இந்த பகுத்தறிவு நிரந்தரமான விடுதலையளிக்கிறது.

வளர்ச்சி என்ற ஒரு முறை இருப்பதுபோல, தேய்வு என்ற ஒரு முறையும் இருக்கிறது. மனித யந்திரம் தேய்ந்ததும், அதில் உள்ள பஞ்ச பூதங்கள், இயற்கையில் உள்ள பஞ்ச பூதங்களுடன் கலந்து விடுகின்றன. லிங்க சரீரம் என்று கூறப்படும் சூக்ஷ்ம சரீரத்தில் மீதி உள்ள பதினெட்டு அம்சங்களும், ஒரு பிறவியில் செய்துள்ள மன, உடல் சம்பந்தமான கர்ம வினைகளுடன் புதிய இருப்பிடத்துக்குச் சென்று, சென்ற பிறவியில் செய்த நடவடிக்கைகளின் பலன்களை அனுபவிக்கின்றது. இவ்விதமாக, ஓர் உடலுக்குள் புகுவதும், பிறகு அதிலிருந்து வெளியேறி மற்றோர் உடலுக்குள் புகுவதும், மோட்சம் அடைந்த ஆன்மாக்களைத் தவிர மற்ற எல்லோருடைய விஷயத்திலும் நிரந்தரமாக நடைபெற்று வருகின்றன. உலகத்தில் இறுதிப் பிரளயம் ஏற்படும் வரையில், கர்ம வினைக்குத் தகுந்தாற்போல் தெய்வப் பிறவியாகவும், மனிதனாகவும், மிருகமாகவும், தாவரமாகவும் ஜனிக்கும் சம்பவம் நடைபெற்றுவருகிறது. கர்மா என்ற இந்த சித்தாந்தத்தையும், மறுபிறவியையும்பற்றி பின்னர் நாம் விவரமாகக் கவனிப்போம்.

சாங்கிய முறையின் மேலெழுந்தவாரியான, சுருக்கமான விஷயங்கள் இவைதான், அவற்றில் சிலவற்றைப் புரிந்துகொள்ளுவதே கஷ்டமாக இருக்கிறது. பிரகிருதியின் வளர்ச்சிக்கு புருஷன் உதவியாக இருக்கிறான் எனில், புருஷனும் பிரகிருதியைப் போலவே உலக சம்பந்தம் உடையவனாகவும், ஐக்கியப் படுத்துபவனாகவும் இருக்கவேண்டும். புருஷனுக்கும் பிரகிருதிக்கும் இடையே எப்படி ஒத்துழைப்பு இருக்கிறது என்பது நிரந்தரமான ஒரு புதிராக இருந்துவருகிறது. புருஷனை விடுதலை செய்வதற்காக பிரகிருதி நிலையற்ற ஒரு காட்சியை நடத்திவருகிறது. புருஷன், பிரகிருதியுடன் சம்பந்தப்படுவதால், தான் கட்டுண்டிருப்பதாக நம்பி மயக்கத்தில் ஆழ்ந்திருப்பது, அதைக் காட்டிலும் பெரிய புதிராக இருக்கிறது.

அவ்விஷயமாக கீத்* பின்வருமாறு கூறுகிறார் : "உணர்வற்ற உடல் துன்பத்தை அனுபவிக்க முடியாது. ஆன்மாவும் துன்பத்தை அனுபவிக்க முடியாது. இவ்விரண்டும் இணைந்திருக்கும் போதுதான், ஆன்மா துன்பத்தை அனுபவிப்பதுபோல் தோன்றுகிறது. உடல் அனுபவிக்கும் துன்பத்தை, தானே அனுபவிப்பது போல் மனம் தவறாக எண்ணுகிறது. உடலும் மனமும் இணை

---

* பிரபல பிரிட்டிஷ் பிரமுகரான சர் ஆர்தர் கீத் (1866—1955) மனித வர்க்க ஆராய்ச்சி நிபுணராக விளங்கினார். மனிதனின் ஆதி வரலாறு பற்றியும், மனித வர்க்கத்தின் இன்றைய வளர்ச்சியைப்பற்றியும் அவர் பல நூல்கள் எழுதியுள்ளார்.

வதன் நோக்கம் துன்பத்தைத் தவிர்க்க வேண்டும் என்பதே. ஆனால், அவ்விதம் தவிர்க்க வேண்டிய துன்பத்தை, மனம் வீணாக சிருஷ்டித்துக் கொள்ளுகிறது.''

டாக்டர் ராதாகிருஷ்ணன் கூறுவதாவது: ''சாங்கிய தத்துவத்தில் ஆரம்பம் முதல் இறுதிவரையில், புருஷனுக்கும் ஜீவனுக்கும் இடையே ஒரு குழப்பம் இருக்கிறது. புருஷன் என்பது எள்ளளவும் குற்றம் குறையற்ற மனநிலையே. குறிப்பிட்ட மனிதனின் மனநிலையுடன் அதைக் குழப்பக்கூடாது. புருஷன் என்னிடத்தில் நிச்சயமாக இருக்கிறான்; எனது மூலாதாரமான ஜீவ தத்துவம் புருஷன்தான். அர்த்தமற்ற சபலங்களுக்கும், சுயநல நோக்கங்களுக்கும் காரணமான ஜீவன் புருஷனின் திரிபே யாகும். ஒவ்வொரு ஜீவனும் அதன் புருஷனை உணர்ந்துகொள்ள முயற்சித்து வருகிறது என்பதற்கு, ஒவ்வொரு ஜீவனிலும் தெய் வத்தன்மை இருக்கிறது என்பதே அர்த்தமாகும். எல்லா அனுபவங்களுக்கும் அடிப்படையாக இருக்கும் பொதுவான மனப் போக்கே, புருஷனுக்கும் பிரகிருதிக்கும் ஆதாரமாக இருக் கிறது. புருஷனும் பிரகிருதியும் பரஸ்பரம் எதிர்த்து நிற்கவில்லை. உலக அமைப்பில் இரண்டிற்கும் உள்ள முரண்பாடு மறைந்து விடுகிறது. எனவே, இதிலிருந்து அவ்விரண்டும் மூலாதாரமான ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஜீவனுடன் இணைத்துக் குழப்பாமல், புருஷனை சாங்கிய தத்துவம் வற்புறுத்தும்போது, புருஷனின் தூய்மையான, அப்பழுக்கற்ற தன்மையை அது உணர்ந்துள்ளது என்பது தெரிகிறது. லௌகிகமான இடுக்கண்களாலும், போராட்டங்களாலும் புருஷன் பாதிக்கப்படுவதில்லை என்ப தையும், அவன் எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிறான் என்ப தையும் சாங்கிய தத்துவம் அங்கீகரித்துளது என்பதும் தெரி கிறது. இந்த மகோன்னத தத்துவமானது, ஒரு புறம் புருஷனின் அமைதி, பேரானந்தம், சாந்தி, மௌனம் ஆகியவற்றையும், மற்றொரு புறம் பிரகிருதியின் முரண்பாடான பலவித வேறுபாடு களையும், போட்டியையும், துன்பத்தையும் தன்னகத்தே கொண் டிருக்கிறது. இந்த மகோன்னத தத்துவத்தில் எல்லா உயிர் களும், எல்லா உடல்களும் அடங்கியிருக்கின்றன. கரையில் லாமல் பொங்கும் இந்தப் பிரளயத்தில் ஒவ்வொரு நபரும் ஒரு சிறு அலையே ஆவர்; உலக ஆன்மாவின் மிகமிகச் சிறிய ஒரு பகுதியே ஆவர். சாங்கிய தத்துவத்தை இந்தக் கோணத்தில் பார்த்தால்தான், அது அதிக முரண்பாடு இராதது என்பது தெரியும்.''

## பிரகிருதியும் குணங்களும்—கீதையின் கருத்து

சாங்கிய முறையை, பொருத்தமான ஒரு பூரண தத்துவமாக உருவாக்குவதே, வேதாந்தம், கீதை ஆகியவற்றின் நோக்க மாகும். தலையில்லாத ஒரு முண்டத்திற்கு தலையைக் கொடுத்து, அதற்குப் பூரண உருவம் ஏற்படும்படி கீதை செய்கிறது.

சாங்கிய முறையில் உள்ள 24 அம்சங்களேயும் கீதை ஏற்றுக் கொண்டிருக்கிறது. பிரத்தியட்ச மல்லாததிலிருந்து பிரத்தியட்ச உலகம் உருவாவதன் சம்பந்தமான விளக்கத்தையும் கீதை ஒப்புக்கொண்டிருக்கிறது. குணங்களேப் பற்றிய விளக்கமும் கீதையில் பூரணமாக பரிசீலனே செய்யப்பட்டிருக்கிறது. எனினும், புருஷனும் பிரகிருதியும் தனித்து இலங்குகின்றன என்பதை கீதை மறுப்பதுடன், உலகத்தில் உள்ள எல்லாவற்றிற்கும் மூலாதாரம் பர பிரம்மம்தான் என்று கூறி, த்வைதத்தின் ஆணி வேரையே அறுத்துவிடுகின்றது. உலகில் உயிருள்ளவை, ஜடப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் எங்கும் வியாபித்துள்ள பர பிரம்மம்தான் மூலாதாரமானது என்பதையும் கீதை வற்புறுத்தியிருக்கிறது. இந்தப் பரம்பொருள், இரண்டு அம்சங்கள் அல்லது இயல்புகள் உள்ளதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் ஒன்று மேலானது, மற்ருென்று கீழானது. எல்லாவற்றிற்கும் ஜீவசக்தியை அளித்துக் காப்பாற்றுவதே மேலான அம்சம். உலக இயற்கையே கீழான அம்சம் ஆகும். மேலான அம்சமான ஜீவனே, எல்லோரிடத்திலும் தானுக விளங்குகிறது. கீழான உலக இயற்கை என்பது சாங்கிய முறை குறிப்பிடும் பிரகிருதியே. அதாவது மண், நீர், தீ, காற்று, ஆகாயம் (இவற்றில் ஐந்து சூக்ஷ்ம பூதங்களும் அடங்கியுள்ளன), மனம், அகங்காரம், புத்தி (ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களுமாக பத்து இந்திரியங்களும் இவற்றில் அடங்கியுள்ளன) ஆகியவையே. இவையெல்லாம் சேர்ந்து 23 ஆகின்றன. 24-ஆவதுதான் வெளிப்படையாகத் தெரியாத பிரகிருதி. அது வெளிப்படையான உருவத்தில் தெரிவதால், அது இங்கே குறிப்பிடப்படவில்லே. *இந்த பிரகிருதியைப் பற்றி மேலும் கீதையின் 8-ஆவது அத்தியாயத்

---

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥

* பூமி ராபோ நலோ வாயு: கம் மனே புத்தி ரேவச|
அகங்கார இதீயம் மே பின்ன பிரகிருதி ரஷ்டதா ||

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥

அபரேயம் இதஸ்த்வன்யாம் ப்ரகிருதிம் வித்தி மே பராம்|
ஜீவபூதாம் மஹா பாஹோ யயேதம் தார்யதே ஜகத் ||

கீதை, அத்தியாயம் – 7, சுலோகங்கள் – 4, 5.

இவற்றின் பொருள் : மண், நீர், தீ, காற்று, வானம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டுவிதமாக என் பிரகிருதி பிரிவுபட்டிருக்கிறது.—4.

இது என்னுடைய கீழான பிரகிருதி. இதினின்று வேருனதும், ஜீவனுக இருப்பதும் ஆகிய என்னுடைய மேலான பிரகிருதியை அறிந்து கொள்வாயாக. அதனுலேயே இந்த உலகம் தாங்கப்படுகிறது.—5.

தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரம்மாவின் பகல் வரும் போது, தோன்ரு நிலையிலிருந்தே கண்களுக்குத் தோன்றுபவை யாவும் வெளிப்படுகின்றன என்றும், பிரம்மாவின் இரவு வரும் போது அவை யாவும் மறைந்துவிடுகின்றன என்றும், மறுபடியும் பகல் வரும்போது மீண்டும் மீண்டும் தோன்றுகின்றன என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.* எல்லாம் அழியும்போது, பிரகிருதி மாறுதல் அடையும்போது, தோன்ரு நிலையில் உள்ள இதைக் காட்டிலும் மேலான, மாறுதலற்ற, தோன்ரு நிலையில் உள்ள பரம்பொருள் மாத்திரம் அழிவதில்லை (அத்தியாயம்-8 சுலோகம் 20). அந்த நிரந்தரமான பரம்பொருளே எங்கும் வியாபித்து உலகம் முழுவதையும் தாங்குகிறது. (அத்தியாயம்-15, சுலோகம்-17.)

அதே பிரகிருதியைப் பற்றி பதின்மூன்ருவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரகிருதி என்பது இங்கே உடல், க்ஷேத்திரம் அல்லது போர்க்களத்தையே குறிப்பிடுகிறது. ஏற்கனவே நாம் அறிமுகம் செய்து கொண்டுள்ள 24 அம்சங்களால் அது உருவாக்கப்படுகிறது. அவை ஒவ்வொன்றையும்

---

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदु : ।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जना : ॥

* ஸஹஸ்ர யுக பர்யந்தம் அஹர் யத் ப்ரம்மணே விது:|
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தே ஹோ ராத்ரவிதோ ஜனு:||

கீதை, அத்தியாயம்–8, சுலோகம்-17

இதன் பொருள்: ஆயிரம் யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகல் என்றும், ஆயிரம் யுகம் அவருக்கு ஓர் இரவு என்றும் அறிபவர், இராப்பகலின் தத்துவத்தை அறிபவர் ஆகின்றனர்.

अव्यक्ताद्व्यक्तय : सर्वा : प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹ ராகமே|
ராத்ரியாகமே ப்ரலீயந்தே தத்ரைவா வயக்தஸம்க்ஞகே||

சுலோகம்–18.

இதன் பொருள்: (பிரம்மாவின்) பகல் வரும்போது தோன்ரு நிலையிலிருந்து தோற்றங்கள் யாவும் வெளிப்படுகின்றன. இரவு வரும்போது அதே தோன்ரு நிலைக்குள் கலந்து மறைந்துவிடுகின்றன.

भूतग्राम : स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवश : पार्थ प्रभवत्यहरागमे ॥

பூதக்ராம: ஸஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே|
ராத்ரியாகமே அவச: பார்த்த ப்ரபவத்யஹ ராகமே||

சுலோகம்–19.

இதன் பொருள்: இந்த ஜீவராசிகள் யாவும் மீண்டும் மீண்டும் பிறந்து, தாங்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், இரவு வரும்போது மறைகின்றன; பகல் வரும் போது மீண்டும் பிறக்கின்றன.

பற்றி 13-ஆவது அத்தியாயம், 5-ஆம் சுலோகத்தில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. உடலோ அல்லது உலகமோ உழைப்பிற்கும், குழப்பத்திற்கும் நிலைக்களமாக இருப்பதாலேயே அது போர்க் களம் என்று கூறப்படுகிறது. அதிலிருந்தும், அதன் வழியாக வும்தான் மனிதன் தன்னைத்தானே விடுதலை செய்துகொண்டு, தன்மயமான அகில உலகத்துடனும் தனக்குள்ள ஐக்கிய பாவத்தை உணர வேண்டியிருக்கிறது. இரட்டையான இந்த ஜீவன், பிரகிருதி ஆகியவற்றின் சேர்க்கையே உலகத்தில் உள்ள எல்லாப் படைப்புகளுக்கும், ஸ்தாவரம், ஜங்கமம் எல்லாவற்றிற் கும் கர்ப்பாசயமாக இருக்கிறது. (கீதை-7. 6; 13. 26; 14. 3-4 சுலோகங்களைப் பார்க்கவும்). எல்லாவற்றிற்கும் மேலான இறைவன், உலகத்தின் தந்தை என்ற முறையில், சகல சிருஷ்டி களுக்கான விதையையும் இந்த மகத்தான கர்ப்பாசயத்தில் விதைக்கிறார். (கீதை-14. 4) எனவே, அவர் அவ்விதமாக எல்லாவற்றிற்கும் ஆதியாகவும், எல்லாவற்றிற்கும் முடிவாகவும் இருக்கிறார். (கீதை-7. 6). அவரே எல்லாவற்றிற்கும் விதை யாகவும் இருக்கிறார். (கீதை-7. 10) தனி மனிதனின் ஆன் மாவும் உலகத்தின் ஆன்மாவும் ஒன்றுதான். வெவ்வேறு உடல் களிலும் அது வெவ்வேறு விதமாகத் தோன்றுகிறது. அவ்வளவு தான். ஏனெனில் உடல், மனம், அறிவு முதலிய பல்வேறு சாத னங்களுடன் அவன் ஒன்றித்து, வெளியுலக அனுபவங்களையும் பெறுகிறான் அல்லவா? இவற்றில் அவனுக்கு உள்ள பற்றுதலே, இந்தக் குணங்களே, பிறப்பிலிருந்து மரணத்திற்கும், மரணத்தி லிருந்து மீண்டும் பிறப்பிற்கும் அவனை இழுத்துச் செல்லுகின்றன.

## குணங்கள்

குணங்களின் சேர்க்கையே பிரகிருதி என்ற சாங்கிய சித் தாந்தம், கீதையில் மிகவும் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. ஸ்மிருதி நூல்கள் யாவும் அந்த சித்தாந்தத்தை ஏற்றுக்கொண் டிருக்கின்றன. ஹிந்துக்களின் மனத்தில் அது ஆழ்ந்து பதிந் திருப்பதால், சத்துவம், ராஜஸம், தாமஸம் என்ற வார்த்தைகள் எல்லா இந்திய மொழிகளிலும் சாதாரணமாகக் காணப்படு கின்றன. அதன் பயனாக, கல்வியறிவற்ற ஒரு விவசாயிகூட அந்தச் சொற்களின் பொருளையும் கருத்தையும் நன்கு உணர்ந்து கொள்கிறான். குணம் என்ற சொல்லுக்கு நேரடியான அர்த்தம் நூல், சரடு என்பதே. சத்துவம், ராஜஸம், தாமஸம் என்ற சொற்களுக்கு முறையே சாரம், தூசு அல்லது அசுத்தம், இருள் என்பதே பொருள். எனினும், சரடு என்ற சொல், குணம் என்ற சொல்லின் முழுக் கருத்தையும் விளக்குவதாக இல்லை. மூன்று குணங்கள், உலகத்தில் உள்ள எல்லாவற்றினுடையவும் மூன்று நிலைகளைக் குறிக்கின்றன. அவற்றைக் குறிப்பிடுவதற்கு, தெளிவான சாரம், சக்தி, பிண்டம் என்ற சொற்களை டாக்டர் சீல் உபயோகித்துள்ளார். மனநிலை சம்பந்தப்பட்டவரையில் சாத்துவிகம், தூய்மை அல்லது தெளிவையும், ராஜஸம் அமை

தியின்மையையும், தாமஸம் சோம்பேறித்தனத்தையும் குறிக்கின்றன. ஒழுக்கம் சம்பந்தப்பட்டவரையில் சாத்துவிகம் தூய்மையையும், ராஜஸம் கலப்படத்தையும், தாமஸம் கலப்பற்ற அசுத்தத்தையும் குறிப்பிடுகின்றன. மனப்பூர்வமான ஆனந்தம், அறிவு இவற்றின் மூலம் சாத்துவிகமும், அமைதியின்மை, துன்பம் இவற்றின் மூலம் ராஜஸமும், சிந்தனையின்மை, சோம்பேறித்தனம், தூக்கம் இவற்றின் மூலம் தாமஸமும் மனிதனை அவனது உடலுடன் கட்டுப்படுத்துகின்றன என்று கீதை கூறுகிறது (கீதை-14. 5-7). அறிவு, ஒளி, ஆனந்தம் ஆகியவை, சத்துவ குணம் மேலோங்கி நிற்கிறது என்பதைக் குறிப்பிடுகின்றன. பேராசை, அமைதியின்மை, ஏக்கம் ஆகியவை, ராஜஸ குணம் மேலோங்கி நிற்பதைக் காட்டுகின்றன. மந்தம், சிந்தனையின்மை, சோம்பல் ஆகியவை, தாமஸ குணத்தின் ஆதிக்கத்தை நிரூபிக்கின்றன (கீதை-14. 11-13). சத்துவ குணம் உள்ளவர்கள் உயர்ந்த நிலையை அடைகின்றனர்; ராஜஸ குணம் உள்ளவர்கள் பூமியிலேயே உழல்கின்றனர்; தாமஸ குணம் உள்ளவர்கள் தாழ்ந்து ஈனப் பிறவிகளாகின்றனர் (கீதை-14. 18). மேலும், சாத்துவிகம் தன்னலமற்ற உயர்ந்த நிலையையும், ராஜஸம் கலப்பற்ற சுயநலத்தையும், தாமஸம் கண்மூடித்தனமான வெறியையும், கோபத்தையும் குறிக்கின்றன.

உலகத்தில், அதிசயிக்கத்தக்கவாறு எல்லையின்றி பல்வேறு வேற்றுமைகளை நீங்கள் காண்பதற்கு பல்வேறு அளவுக்கு மேற்கண்ட குணங்களின் வேறுபாடுகளும் சேர்க்கையுமே காரணமாகும். இந்தக் குணங்களின் திருவிளையாடல்களைப் பார்த்தவர் எவரோ, அவற்றில் பற்றுதலோ அவற்றுடன் தொடர்போ இராமல் ஒதுங்கி நிற்கும் ஆற்றல் படைத்தவர் எவரோ, இந்த வேற்றுமையின் அடிப்படையில் ஒற்றுமை இருப்பதை உணருவோர் எவரோ, அவர்தான் தீர்க்கதரிசியான முனிவர் ஆவார். அவரைத்தான் 'தத்துவவித்' அதாவது தத்துவத்தை அறிந்தவர் என்கிறோம். பொருட்களின் உண்மையை அறிந்தவரும், விடுதலை பெற்றவரும் அவரே. அவரது செயல் அவரைக் கட்டுப்படுத்துவதில்லை. அவரது குணம் என்பது முக்கியமானது அல்ல, கீழ்த்தரமான அம்சமே. எனவே, அது உண்மையான சாரம் அல்ல, வெறும் நிழலே, வெறும் தோற்றமே.

பிரகிருதி எப்போதும் சுறுசுறுப்புடன் செயல் புரிந்துகொண்டிருக்கிறது என்று அடிக்கடி கூறப்படுகிறது. எனவே, பிரகிருதியாகிய உடலில் ஒருவர் சிறைப்பட்டிருக்கும் வரையில், அவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், செயல்புரிந்து தீர வேண்டியவராக இருக்கிறார். குணங்கள் பிரகிருதியிலிருந்து வேறானவை அல்ல. குணங்கள் "பிரகிருதியிலிருந்து பிறந்தவை" என்றே பற்பல சந்தர்ப்பங்களிலும் வர்ணிக்கப்பட்டுளது. எனினும், பிரகிருதியே குணங்கள்தான். குணங்களும் பிரகிருதியும் ஒன்று என்றே வர்ணிக்கப்பட்டுள்ளன. மனிதனின் புலன்கள், மனம், அறிவு ஆகியவை, அவனது பிரகிருதி அல்லது குணங்களே

ஆகும். ஒரு மனிதனின் உடல் ஸ்தூலமாக இருந்தால், ''நான் பருத்திருக்கிறேன்'' என்று அவன் கூறுகிருன். அதாவது அவன், தன்னை உடலுடன் ஐக்கியப்படுத்திக் கொள்ளுகிருன். அது போலவே, அவனது கால்கள் நடக்கும் போதோ அல்லது அவனது உடல் தூங்கும் போதோ அவன் ''நான் நடக்கின்றேன்'', ''நான் தூங்குகின்றேன்'' என்றே கூறுகிருன். தனக்கும் உடலுக்கும் வேற்றுமை இருப்பதாக அவன் எண்ணுவதில்லை. அதைப் போலவே அவன், மனம், நோக்கம், அறிவு முதலியவற்றுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிருன். புலன்களின் பல் வேறு நடவடிக்கைகளையும் அவன் தான் செய்வதாகவே சொல்லிக் கொள்கிருன். இவையெல்லாம் குணங்களையே குறிக்கின்றன. இதை, கீழான பிரகிருதி என்றும் நாம் கூறலாம்.

மனிதன் பற்றுதலுடன் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் யாவும் சுயநலமானவை; அறவே பற்றுதலின்றி மேற்கொள்ளும் நடவடிக்கைகள் யாவும் சுயநலமற்றவை. மனிதன் கீழான பிரகிருதியுடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்ளுவதிலிருந்தே, செயல்களின் பலனில், அதாவது லாபத்திலும் இன்பத்திலும் பற்றுதல் ஏற்படுகிறது. இந்த ஒன்றிப்பே, மாயை என்றும், அறியாமை என்றும், பந்தம் அல்லது அடிமைத்தனத்தின் ஆணி வேர் என்றும் வர்ணிக்கப்படுகிறது. அந்த வேரை அறுத்து எறிபவனே, அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்பவனே, மகான் அல்லது தத்துவவித் ஆவான். (*கீதை – 3.28; 5.8*)

மாறுதல் அடையும் குணங்களுக்கும் மாறுதல் இல்லாத ஆன்மாவுக்கும், சக்கைக்கும் சாரத்திற்கும் இடையே உள்ள வேற்றுமையை, மேநாட்டு வாசகர்கள், ஜுலியஸ் ஸீஸர்* நாடகத்தில் உள்ள கீழ்க்கண்ட புகழ்பெற்ற வாக்கியங்களிலிருந்து நன்ருக அறிந்து கொள்ளலாம்:

''பயங்கரமான ஒரு சம்பவம் நிகழ்வதற்கும், அதன் சம்பந்தமான முதலாவது நடவடிக்கைக்கும் இடையே நிகழும் செயல்கள் யாவும் மாயத்தோற்றங்களைப் போலவோ அல்லது ஒரு பயங்கரமான கனவைப் போலவோ இருக்கின்றன. அப்போது அந்தராத்மாவுக்கும் கொடிய கருவிகளுக்கும் ஆலோசனை நடக்கின்றது. அவ்வமயம், ஒரு ராஜ்யத்தில் நடப்பது போலவே, மனிதனின் உள்ளமாகிய சிறிய ராஜ்யத்திலும் ஒரு புரட்சி நடைபெறுகிறது.''

மூலாதாரமான விஷயங்களை ஷேக்ஸ்பியர் எவ்வளவு தூரம் ஊடுருவி ஆராய்ந்துள்ளார் என்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். மாறுதலற்ற, அழிவில்லாத ஆன்மாவையே கீதையும் குறிப்பிடுகிறது. ''கொடிய கருவிகள்'' என்று அவர் கூறியிருப்பதை, கீதையின் பாஷையில் ''குணங்கள்'' என்றே குறிப்பிடலாம். அதை விளக்குவதற்கு, ''கருவிகள்'' என்பதைக் காட்டிலும் சிறந்த சொல் வேறு இருக்க முடியாது. ஒரு நபர் அல்லது

---

* 'ஜுலியஸ் ஸீஸர்', கவி ஷேக்ஸ்பியர் எழுதிய பிரபல நாடகங்களில் ஒன்று.

ஆன்மாவின் கையில் குணங்கள் உண்மையில் கருவிகளைப் போலவே இருக்கின்றன. தன்னடக்க சக்தியுள்ள, கலங்காத நெஞ்சம் உள்ள ''தத்துவ வித்'' (தத்துவத்தை அறிந்தவர்) தம்முள் புரட்சி நடப்பதை உணருகிறார். அவர் ''கருவிகளை'' அதாவது குணங்களை தன் விருப்பப்படி இயங்கச் செய்து அந்தப் புரட்சியை அடக்குகிறார்.

இப்போது, இத்தகைய தன்னடக்க நிலையையும், இறுதியான சாந்த நிலையையும், தன்னைத்தான் உணர்ந்து கொள்வதன் மூலமே அல்லது ஞானத்தின் மூலமே பெறுவது சாத்தியமாகும். எத்தனை எத்தனையோ ஆண்டுகள் முயற்சி செய்தே, அத்தகைய நிலையை அடைய முடியும். அதனாலேயே, மதத்தையும் தருமத்தையும் அடைக்கலமாகக் கொள்ளும்படி மனிதனுக்கு புத்திமதி கூறப்படுகிறது. எல்லா நன்மைகளையும் அளிக்கும் கடவுளுக்கு அவன் எல்லாச் செயல்களையும், எல்லா முயற்சிகளையும் அர்ப்பணம் செய்து உயர்ந்த சாத்துவிக நிலையை எட்டுவதற்குப் பாடுபட வேண்டும். இறுதியில் அவன் மூன்று குணங்களையும் கடந்த ஒரு நிலையை அடைய வேண்டும். அந்த மேலான நிலைதான் உண்மையான ஞானத்தையும், மோட்சத்தையும் குறிப்பதாகும்.

குணங்களுடன் கூடிய பிரகிருதியின் மற்றோர் அம்சமும் இருக்கிறது. இச் சந்தர்ப்பத்தில் அதையும் குறிப்பிடுவது பலன் தரத்தக்கதாக இருக்கும். மனிதனின் இயல்பில், எதையும் பிடிவாதமாக வற்புறுத்தக் கூடிய ஒரு பகுதி உண்டு. எத்தகைய பலாத்காரத்தினாலும் அதை மாற்ற முடியாது. மற்றொரு பகுதி, பண்பிற்கும் ஒழுங்கிற்கும் கட்டுப்படுவதாக இருக்கும். இந்த இரண்டிற்கும் உள்ள வேற்றுமையை கீதை குறிப்பிட்டிருக்கிறது. முதலில் கூறப்பட்டிருப்பது, மனிதனின் உடல், மன அமைப்பைப் பொறுத்ததாகும், அந்த அமைப்பு, மனிதனுக்குப் பிறவியிலிருந்தே ஏற்படுகிறது. சாதாரணமாக அவனது தொழிலை நிர்ணயிப்பதும் அதுதான். அவனது இயற்கையான திறமைக்கும், தகுதிகளுக்கும் இணங்கவே அவனது தொழில் நிர்ணயிக்கப்படுகிறது. மனிதன் தானாக வளர்ச்சி அடைய வேண்டும்; சமுதாயத்தின் ஓர் உறுப்பினன் என்ற முறையில் அவன் கடமைகளை நிறைவேற்ற வேண்டும்–இவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டே அவனது தொழில் நிர்ணயிக்கப்படுகிறது. இங்கே தான் கீதை, ''மனிதன், இயற்கையை எதிர்த்து நிற்கக்கூடாது; எல்லா பாரத்தையும் கடவுளின் மீது போட்டுவிட்டு இயற்கையின் விதிக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்'' என்று கூறுகிறது. (கீதை-3. 33).

மனித இயற்கையின் மற்றொரு பகுதி என்னவெனில், மனிதன் தன்னை முற்றிலும் தூய்மையாக்கிக் கொள்ளும்வரையில், திருப்தி அடைந்துவிடக் கூடாது என்பதே. ''காமம், கோபம், பேராசை ஆகிய மூன்றும் நரகத்தின் மூன்று வாயில்களாகும்'' என்றும், ''தீ மயமான அந்த நரகத்திற்கு அப்பால் ஓடிவிடு''

என்றும் கீதை கூறுகிறது. (கீதை-3. 34; 3.37; 16.21). மனிதனின் இயற்கையை அறியும் அபூர்வமான சக்தி வாய்ந்த ஷேக்ஸ்பியர், இந்த வேற்றுமையை அடிக்கடி எடுத்துக் காட்டியிருக்கிறார். சிம்பலேன் மன்னனுடைய* குமாரர்கள் குழந்தைப் பருவத்திலிருந்தே காட்டுமிராண்டிகளான கிராமவாசிகளைப் போல சிறையில் வாழ்ந்து வந்தார்கள் என்றாலும், மன்னனுக்கு உரிய இயற்கையான உயர்ந்த குணமும் பராக்கிரமமும் அவர்களிடமிருந்து அடிக்கடி வெளியாயின என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. "பயிற்சி, இயற்கையான சுபாவத்தைக் கூட மாற்ற வல்லது. ஒன்று, பிசாசை அடக்கு அல்லது ஆச்சரியகரமான சக்தியுடன் அதை வெளியே துரத்தி விடு" என்று ஹாம்லெட் தன் தாயாரிடம் கூறுகிறான்.

எனவே, குணங்கள் என்ற இந்த சித்தாந்தமானது, மேநாட்டுச் சிந்தனையாளர்களுக்கும் தத்துவ நிபுணர்களுக்கும் தெரியாதது அல்ல. எனினும், அவர்கள் அதன் சம்பந்தமான எல்லா அம்சங்களையும் கண்டு கொள்ளவில்லை. பிளாடோவைத்† தவிர அவர்களில் யாரும் அந்தச் சித்தாந்தத்தை விவரமாக ஆராய்ச்சி செய்யவில்லை. மனிதனின் நடத்தையை, ஆர்வம், உணர்ச்சி அறிவு என மூன்று முக்கிய அம்சங்களாக அவர் பிரித்துள்ளார். பெயர்கள் வேறாக இருந்தாலும் அவை மூன்று குணங்களையே குறிப்பிடுகின்றன. சக்திகளுக்கும் இயல்புகளுக்கும் இணங்க அவர் மனிதர்களை மூன்று பிரிவினராகப் பிரித்துள்ளார். அவ்விஷயமாக அரிஸ்டாடிலும் சில மாற்றங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவையெல்லாம், மனிதனிடத்தில் உள்ள மூன்று குணங்களை அங்கீகரிப்பவையாகவே இருக்கின்றன.

பேகனும்‡ பின்வருமாறு கூறியுள்ளார்; "மனித வர்க்கத்தின் ஆசையை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதலாவதாக, தங்களுடைய அதிகாரத்தை விஸ்தரிக்க வேண்டும் என்ற ஆசை. இது கீழ்த்தரமானது, இழிவானது. இரண்டாவதாக, தங்கள் சொந்த நாட்டின் அதிகாரத்தை விஸ்தரிக்க வேண்டும் என்ற

---

* 'சிம்பலேன் மன்னன்', என்பதும் ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் ஒன்று.

† 'ஹாம்லெட்', இதுவும் ஷேக்ஸ்பியர் எழுதியுள்ள புகழ்பெற்ற நாடகமாகும்.

பிளாடோ (427—347 கி. மு.) உலகப் புகழ்பெற்ற கிரேக்க தத்துவஞானி. அவர் எழுதிய அரிய நூல்களின் பெருமை இன்றும் குன்றாமல் இருந்து வருகிறது. பிளாடோ, சாக்ரடீசின் சீடராகவும், உலகப் புகழ்பெற்ற மற்றொரு கிரேக்க தத்துவஞானியான அரிஸ்டாடிலின் குருவாகவும் இருந்தார். பிளாடோவின் உண்மையான பெயர் அரிஸ்டாக்ளிஸ் என்பதாகும்.

‡ பிரான்ஸிஸ் பேகன் (1561—1626) சிறந்த தத்துவ நிபுணராகவும் ராஜதந்திரியாகவும் திகழ்ந்தார். பிரிட்டிஷ் மந்திரி சபையிலும் அவர் பதவி வகித்தார். அவரது ஆழ்ந்த ஆராய்ச்சியையும், அற்புதமான ஆங்கில நடையையும், சீரிய சிந்தனைகளையும் அடிப்படையாகக் கொண்ட அவரது நூல்கள் இன்றும் மங்காத புகழுடன் விளங்குகின்றன.

ஆசை. இது, அதிக கண்ணியமானது என்றாலும், தவறான பேராசையே அல்ல என்று சொல்வதற்கில்லை. மூன்றாவதாக, ஒரு மனிதன் தன்னுடைய அதிகாரத்தை விஸ்தரித்து ஸ்தாபிக்கவும், உலகத்தில் ஆதிக்கம் செலுத்தவும் முயற்சி செய்வானாயின், அவனது ஆசை மேலே குறிப்பிட்ட இரண்டுவிதமான ஆசைகளையும் காட்டிலும் சிறந்தது.''

சாத்விக, ராஜஸ, தாமஸ குணங்களையே பேகன் அவ்விதம் வேறு விதமாகக் குறிப்பிட்டிருக்கிறார் என்று கூறலாம் அல்லவா? தாழ்ந்த நிலையிலிருந்து குற்றம் குறையற்ற உயர்ந்த நிலைக்கு மாறுவதன் சம்பந்தமாக ஸ்பினோஸா உபயோகித்துள்ள பாஷையும் குணத்தையே குறிக்கிறது. ஹர்பர்ட் ஸ்பென்சரும் அறிவை மூன்று விதமாகப் பிரித்துள்ளார்: ''மிகவும் கீழ்த்தரமான அறிவு உறுதியற்றது, ஐக்கியத்தன்மை இல்லாதது; விஞ்ஞானம் ஓரளவு ஐக்கியத் தன்மை வாய்ந்த அறிவே; ஆனால், தத்துவ சாத்திர அறிவுதான் முற்றிலும் ஐக்கியத் தன்மை வாய்ந்த உயர்ந்த ஞானம் ஆகும்.''

சாத்விகம், ராஜஸம், தாமஸம் ஆகியவை கீதையின் *18*-வது அத்தியாயம், *20-22*-ஆம் சுலோகங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் நேரடியான விளக்கமாகவே ஹர்பர்ட் ஸ்பென்சரின் கருத்து அமைந்திருக்கிறது.

சமீப காலத்திற்கு வருவோம். மனித இயற்கையின் இரண்டு வித நிரந்தரமான தன்மைகளைப்பற்றி, அதாவது தன்னலம், பிறநலம் என்ற கொள்கைகளைப்பற்றி டாக்டர் ஹென்ரி டிரம்மண்ட் குறிப்பிட்டிருக்கிறார். அக் கொள்கைகள், ராஜஸ, சாத்விக குணங்களையே குறிக்கின்றன அல்லவா?

இறுதியாக, பேராசிரியர் மெக்கன்ஸி, மனிதனின் ஒழுக்கத்தைப்பற்றி பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்: ''ஒவ்வொரு மனிதனிடத்திலும் உண்மையில் மூன்று விதமான தன்மைகள் இருக்கின்றன. திடீரென்று ஏற்படும் உணர்ச்சிகளின் விளைவாக ஒரு தன்மை வெளிப்படுகிறது. அதை நாம் முற்றிலும் அடக்க முடிவதில்லை. அதுதான் நம் உள்ளே குடியிருக்கும் பாவம் ஆகும். மற்றொன்று, நம்முடைய நிரந்தரமான தன்மை. அதை முக்கியமாகக் கொண்டுதான் இந்த உலகில் நாம் வாழ்கிறோம். மூன்றாவதாக, உண்மையான விவேகத்தை அடிப்படையாகக் கொண்ட தன்மை. நாம் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கு அது ஒன்றுதான் இன்றியமையாதது என்று கருதுகிறோம். அதுதான் நம்மிடத்தில் வாழும் ஏசு கிறிஸ்துவைக் குறிக்கிறது. அவரிடத்திலேயே நாம் மேலும் அதிகமாக நிலைத்திருக்க விரும்புகிறோம்.''

பேராசிரியர் மெக்கன்ஸியின் அந்த வர்ணனை, மூன்று குணங்களைப் பற்றியதாகவே இருக்கிறது. கீதையின் 2-ஆவது அத்தியாயம் 45-ஆம் சுலோகத்தில் சாத்விகத்தில் எப்போதும் நிலைத்திருக்கும்படி கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறுகிறார். புகழ்

பெற்ற அந்த சுலோகத்தின் எதிரொலியாகவே மெக்கன்ஸியின் கடைசி வாக்கியம் இருக்கிறது அல்லவா?

## கர்மாவும் மறு பிறப்பும்

கர்மா, மறுபிறப்பு ஆகிய இரு சித்தாந்தங்களும் குணங்கள் என்ற சித்தாந்தத்துடன் நெருங்கிய தொடர்பு உள்ளவையாக இருக்கின்றன. கர்மாவும் மறுபிறப்பும் மறுக்க முடியாத உண்மைகள் என்று கீதை ஒப்புக்கொண்டுளது. ஆனால், அந்த சித்தாந்தங்கள், மேனாட்டுச் சிந்தனையாளர்களின் வன்மையான கண்டனத்திற்கு இலக்காகியிருக்கின்றன. அந்த சித்தாந்தங்களின் பொருள் என்ன? ஹிந்துக்களின் வாழ்க்கையில் அவற்றிற்கு உள்ள தொடர்பு என்ன? இதையெல்லாம் இப்போது பார்ப்போம். சிற்சில சமயங்களில் கையையும், காலையும், உடலையும் அசைப்பது, அதாவது உபயோகிப்பதுதான் செயல் என்றாலும், அதன் விளைவுகளுக்கு எல்லையில்லை; ஓரளவுக்கு மேல் அவற்றின் எல்லையைக் கண்டு கொள்ள முடிவதில்லை. அவற்றின் விளைவுகளின் எல்லையைக் கண்டு கொள்ள முடியவில்லையெனில், அவற்றின் வேரையும், அடிப்படையையும் கண்டு பிடிப்பது கஷ்டமாகத்தான் இருக்கவேண்டும். பிரௌனிங்* எழுதியுள்ள கவிதைகளில் சில, கர்மா என்ற சொல்லுக்கு விளக்கம் கூறுவதாக இருக்கின்றன.

நாம் எப்படி இருக்கிறோம்? என்ன சிந்திக்கிறோம்? என்ன செய்கிறோம்? இவையெல்லாம் சென்ற பல யுகங்களாக நாம் புரிந்த செயல்களின், அதாவது கர்ம வினையின் பலனே. பிறக்கும் போது மனம் ஒரு சலவைக் கல் பீடத்தைப்போல் சுத்தமாக இருப்பதாக லாக்† கூறியிருப்பது, அவரது அனுபவக் குறைவையே காட்டுகிறது. ஆனால், அவரது காலத்திற்கு முன் வாழ்ந்த பேகன், தமது பிரபல நூல் ஒன்றில் உண்மையை ஆழ்ந்து பரிசீலனை செய்துள்ளார். மனிதனின் மனத்தை மேடு பள்ளமான கண்ணாடியுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளார். அந்த மேடு பள்ளங்கள் முற்பிறப்புகளையே குறிக்கின்றன என்றே கூறவேண்டும். ஒருவன் எதை விதைக்கிறானோ அதையே அறுவடை செய்வான் என்பதை நாகரிகமற்ற மனிதன்கூட அறிவான். ஆனால், இந்திய முனிவர், அந்த நியதி உலகம் முழுவதற்கும் பொருந்தும் என்பதை அறிந்து கொண்டதுடன், அதில் அடங்கியுள்ள பிரமிக்கத்தக்க நுணுக்கங்களையும் நிர்ணயிக்க முயற்சித்துள்ளார்.

---

* ராபர்ட் பிரௌனிங் (1812—1889) உலகப் புகழ்பெற்ற பிரிட்டிஷ் கவிகளில் ஒருவர்.

† ஜான் லாக் (1632—1704) பிரபல பிரிட்டிஷ் தத்துவ சாத்திர பண்டிதராக விளங்கினர். அறிவு அல்லது ஞானத்திற்கும் முற்பிறப்புக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதும், அறிவு அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதும் அவரது சித்தாந்தம். மனித அறிவு, சகிப்புத்தன்மை, அரசாங்க நிர்வாகம், கல்வி முதலிய பல விஷயங்களைப் பற்றியும் அவர் எழுதிய நூல்கள் முக்கியமானவை.

"நீங்கள் எதை விதைக்கிறீர்களோ அதையே அறுவடை செய்வீர்கள். அதோ தெரியும் வயல்களைப் பாருங்கள். எள்ளு விதைத்த இடத்தில் எள்ளு முளைத்திருக்கிறது; சோளம் விதைத்த இடத்தில் சோளமே முளைத்திருக்கிறது. மனிதனின் விதியும் அப்படித்தான். அவன் விதைத்த பொருட்களை அறுவடை செய்யவே இந்த உலகில் வந்து பிறக்கிறான்."-எட்வின் அர்னால்டு.

எள்ளுச் செடியையே எடுத்துக் கொள்ளுவோம். அதற்கு மண், எரு, தண்ணீர், வெய்யில் ஆகியவை எந்த அளவுக்குத் தேவையாக இருந்தன என்பதைக்கூட நாம் அறியோம். எள்ளு விதையை மாத்திரம் தான் நாம் அறிவோம். அது போலவே, நாம் உருவாவதற்கு என்னென்ன தேவையாக இருந்தன என்பது நமக்குத் தெரியாது. ஒவ்வொரு விநாடியும் நாம் புரியும் செயல் நமது வாழ்க்கையையும் பிறருடைய வாழ்க்கையையும் பாதிக்கிறது. இதை நாம் சொந்த அனுபவத்தில் காண்கிறோம். நாம் மனிதராவதற்கு, நம்முடைய பெற்றோர், பாட்டன்மார்களுடைய குணங்களின் பங்கு என்ன, நம்முடைய குழந்தைகள் மனிதராவதற்கு நம்முடைய குணங்களின் பங்கு என்ன என்பது பற்றியும் நமக்கு ஓரளவு தெரியும். எனினும், சிற்சில சமயங்களில் குழந்தைகள் தங்களுடைய பெற்றோர் அல்லது பாட்டன்மாருக்குச் சிறிதும் இராத குணங்களை வெளிப்படுத்துகிறார்கள். எனவே, நாம் மனிதராவதற்கு பரம்பரைக் குணங்கள் ஓரளவு காரணமாக இருக்கின்றனவேயன்றி, முழு அளவுக்கும் அவை தான் காரணம் என்று கூறுவதற்கில்லை. பெற்றோர்கள் அல்லது பாட்டன்மார்கள் செய்த பாவங்கள் அவர்களுடைய குழந்தைகளையும் தொடருகின்றன என்று கூறப்படுவதற்கு ஆதாரம் என்ன என்பதே தெரியவில்லை. இந்த இடத்தில்தான் கர்ம வினை உதவிக்கு வருகின்றது. அதாவது, பரம்பரைக் குணத்துடன் கர்ம வினையும் சேர்ந்து கொள்ளுகிறது. அப்போது புரியாத மேற்கண்ட சில விஷயங்களை நாம் புரிந்துகொள்ளவும், சகித்துக் கொள்ளவும் முடிகின்றது.

ஒரு மனிதன் இறக்கும்போது, அவனிடத்தில் உள்ள பஞ்சபூதங்களும் கரைந்து மறைந்துவிடுகின்றன. மண், மண்ணோடு கலந்து விடுகின்றது. சூக்ஷ்ம பூதங்களுடன் ஆன்மா மாத்திரம் மிஞ்சுகின்றது. அது பழைய வீட்டை விட்டுவிட்டு புதிய வீட்டை, அதாவது புதிய உடலை நாடிச் செல்லுகிறது (கீதை, அத்தியாயம்-18, சுலோகங்கள் 7-8). முகம் தெரியாத அந்த விருந்தாளிக்கு, பெற்றோர்கள் ஒரு புதிய வீட்டை சிருஷ்டித்துக் கொடுக்கிறார்கள் (கீதை, அத்தியாயம்-6, சுலோகங்கள் - 41-42). அந்த விருந்தாளியையே பெற்றோர் தங்களுடைய குழந்தை என்று அருமையாக அழைக்கிறார்கள். அதற்குத் தகுந்தவாறு ஒரு வீட்டையும் அதற்கு ஏற்படுத்திக் கொடுக்கிறார்கள். அந்தப் புதிய வீடு நல்லதாகவோ அல்லது கெட்டதாகவோ இருக்கலாம். அது இந்த ஆன்மா செய்த புண்ணியம் அல்லது பாவத்தின்

பலனாகவே இருக்கும். கீதை கூறுவதுபோல் குணங்களில் மனிதனுக்கு உள்ள பற்றுதலுக்கு உகந்ததாகவே அது இருக்கும் (கீதை, அத்தியாயம்-13, சுலோகம்-21). அந்த வீட்டின் மூலமே, அவன் தனது விதியைத் தொடங்க முற்படுகிறான். அந்த முயற்சி அவனுடைய ஆயுள்காலம் முழுவதும் நீடிக்கிறது. பின்னர் அவனது உடல் அழிகின்றது. ஆன்மா, அதன் சூக்ஷ்ம யந்திரத்துடன் மாறுதல் அடைந்தோ, அபிவிருத்தியடைந்தோ அல்லது சீர்கெட்டோ புதிய உடலை நாடிச் செல்லுகிறது.

அவ்வாறாக, நாம் உருவாவதற்கு எவ்வளவு புண்ணிய, பாவங்கள் காரணம் என்பதை நாம் அறியாவிட்டாலும், நம்மில் ஒவ்வொருவரும் முற்பிறப்பில் செய்த வினைகளுடன் பிறக்கிறோம் என்பதையும், அவற்றிற்கு நாம் வழி சொல்லித் தீர வேண்டும் என்பதையும் அறிந்திருக்கிறோம். அதுவே, நாம் பணிவுடன் நடந்து கொள்ளுவதற்கு உதவியாக இருப்பதுடன், நாம் கோபம் கொள்ளக் கூடாது என்றும், சக மனிதர்களுக்கு விரோதமாக அவசரப்பட்டு எதுவும் முடிவு செய்துவிடக் கூடாது என்றும் நம்மை எச்சரிக்கை செய்கின்றது. எனினும் கர்ம வினையை, தவிர்க்க முடியாத ஆபத்து என்றோ, நாம் முற்பிறப்பில் செய்த தவறுக்கு தண்டனை என்றோ தவறாக எண்ணிவிடக் கூடாது. நாம் அனுபவிக்கும் இன்பங்கள், சென்ற ஜன்மத்தில் நாம் செய்த புண்ணியங்களுக்கு வெகுமதி என்றோ, நமது துன்பங்கள் முற்பிறப்பில் நாம் புரிந்த தீச் செயல்களுக்கு வெகுமதி அதாவது தண்டனை என்றோ அர்த்தம் செய்து கொள்ளுவதும் தவறாகும். முற்பிறப்பில் நமக்கு இன்பவாழ்க்கையில் இருந்த ஈடுபாட்டை, இப்போது நாம் நம்முடன்கொண்டு வந்திருக்கிறோம். அந்த ஆசையைக் கட்டுப்படுத்திக் கொள்ளத் தவறிவிட்டோம். இப்போது நாம் அனுபவிக்கும் இன்பங்கள் அதன் பலனாகவே இருக்கலாம். புத்தரோ, ஏசு நாதரோ அல்லது செயின்ட் பிரான்ஸிஸோ மனித வர்க்கத்தின் நன்மைக்காக, மகிழ்ச்சியுடன் துன்பத்தை அனுபவிக்கத் தயாராக இருந்தார்கள். அது, முற்பிறப்பில் பெரிதும் அவர்களுடைய வாழ்க்கை அப்பழுக்கற்றதாக இருந்ததன் சிறந்த பலனாக இருக்கலாம். அவர்கள் துன்பங்களைத் தாங்களாக வரவேற்றுக் கொண்டார்கள் என்று சிலர் கூற முற்படலாம். வரவேற்காமல் இயற்கையாகவே துன்பங்கள் ஏற்படுவதாகத் தோன்றும் சந்தர்ப்பங்களில்கூட, முற்பிறப்பில் புரிந்த தீச் செயல்களின் பலனாகவே அவை ஏற்படுவதாக எண்ணும் தவறை நாம் செய்யக் கூடாது.

நாம் 'இன்பம்' என்று கூறுவது புண்ணியத்தின் எதிரொலியே என்றும், 'துன்பம்' என்று கூறுவது பாவத்தின் எதிரொலியே என்றும் எண்ணுவது சிறுபிள்ளைத்தனமாகும். அவை, வளரும் சக்திகள் செயல்படும்படி செய்வதற்கான இயற்கையின் வழிகளேயாகும். தெய்வத் தன்மை வாய்ந்த ராம கிருஷ்ண பரமஹம்சர், கொடிய புற்று நோயால் துன்பப்பட்டார். ஏசுநாதரைப் போன்ற ஹென்ரி டிரம்மண்ட் தமது ஆயுட்காலத்தில்

ஒருமுறை கூட நோய் வாய்ப்பட்டதில்லை. எனினும் கடைசியாக அவர் எலும்பு உருக்கி நோய் காரணமாக சகிக்க முடியாத வேதனைக்கு உள்ளாக நேர்ந்தது. இறுதியில் அந்த நோய் அவரது உயிரையே பலிகொண்டது. அவ்விருவரும் பட்ட துன்பத்திற்குக் காரணம் என்ன என்பதை யாரால் கூற முடியும்? ஆனால், அவர்கள் அனுபவித்த துன்பத்திலிருந்து எல்லோருக்கும் ஒரு விஷயம் தெளிவாயிற்று. அதாவது, அவர்கள் உலகத்தில் அப்பழுக்கற்ற வாழ்க்கைக்கு உதாரண புருஷர்களாக விளங்கினார்கள் என்பதும், ஒருவர் தமக்கு ஏற்படும் நோய்களை எப்படி சகித்துக் கொள்ளுவது என்பதைக் கற்றுக் கொள்ளலாம் என்பதுமே. அந்த இரு மகான்களும் தங்களுடைய நோயைப்பற்றிப் பேசுவதற்கே விரும்பவில்லை. தாங்க முடியாத வேதனையை அவர்கள் பேசாமல் எப்படி சகித்துக் கொண்டிருந்தார்கள் என்பது, டாக்டர்களை பிரமிக்கும்படி செய்துவிட்டது. ஆம், கர்ம வினையிலிருந்து யாரும் தப்பித்துக் கொள்ள முடியாது. நாம் அதற்குத் தலைவணங்குவதன் மூலம் பலனை அடையலாம். ஆனால், அதை விண்டு ஆராய்ச்சி செய்ய நாம் துணியக் கூடாது.

செயலையோ அல்லது அதன் விளைவையோ வெளிப்படையான அறிகுறிகளைக் கண்டு முடிவு கட்டிவிடக் கூடாது. இதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இம்மியளவும் பிசகாத அந்த அபூர்வமான தராசைக் கொண்டு நிறுப்பது கடவுளின் கையில் இருக்கிறது, நம் கையில் அல்ல. கர்ம வினை, நமக்குக் கற்பிப்பது இதுதான்: நாம் புரிந்து கொள்ள வேண்டுமேயன்றி, தீர்ப்புக் கூற முற்பட்டுவிடக் கூடாது; மனிதனின் துன்பத்தைத் தணிக்க நாம் ஓடோடியும் செல்ல வேண்டுமேயன்றி, அதை அசட்டை செய்யக் கூடாது; துன்பத்தைத் தணிக்க முற்படுவது, உலகம் முழுவதையும் நம்முடன் நெருங்கிய உறவு கொள்ளும்படி செய்கிறது.

கர்ம வினையைப் பற்றி நாம் பேசும்போது, அதன் மற்றொரு பகுதியான மறு பிறப்பைப் பற்றியும் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகிறது. அவ்விரண்டும், ஒரே நாணயத்தின் இரு புறங்களைப் போன்றவை. நாம் பிறக்கும்போது எதையாவது கொண்டு வருவோமாயின், இறக்கும்போதும் நாம் எதையாவது கொண்டு செல்லுகிறோம். மகத்தான மதிப்பிற்குப் பாத்திரமானவர்களின் வாழ்க்கை, இந்த உலகில் திடீரென்று முடிந்து விடுவதை நாம் அறிவோம். பல சந்தர்ப்பங்களிலும் குழந்தைகள் அசாதாரணமான திறமையுடனும், தகுதிகளுடனும் பிறப்பதையும் நாம் அறிவோம். ஆனால், அவ்விதம் எவரது வாழ்க்கையும் திடீரென்று முடிவடைந்து விடுவதும் இல்லை. அசாதாரணமான திறமையுடன் குழந்தைகள் ஜனிப்பது தற்செயலாக நேரும் சம்பவமும் அல்ல. மரணம் ஒரு தூக்கமே. இந்த வாழ்க்கையை மறந்துவிடுவதேயாகும். ஆன்மா மீண்டும் விழித்துக் கொள்ளுவ

லதயே புதிய பிறப்பு என்கிறோம். லட்சியத்தை நோக்கி முற்றுப் பெறாத தனது பழைய பந்தயத்தை, ஆன்மா வேறு சூழ்நிலையில் தொடருகின்றது.

இந்த உலகில் மீண்டும் மீண்டும் பிறப்பது என்பது, இந்திய தத்துவ ஞானிகளின் கற்பனையான பூச்சாண்டியே என்று மோனியர் வில்லியம்ஸ்* கூறுகிறார். உண்மையைத் தேடுவதிலிருந்து தப்பித்துக்கொள்ளவே அவர்கள் அத்தகைய கற்பனையைச் சிருஷ்டித்திருப்பதாகவும் அவர் எண்ணுகிறார். ஆனால், அவரது இரு கூற்றுகளும் சரியல்ல. உண்மையைத் தேடுவதில் இந்திய ஞானிகள் பெற்றுள்ள வெற்றியின் நேரடியான பலனே அந்தச் சித்தாந்தமாகும். ஆன்மாவுக்கு இறப்பு இல்லை என்பதையும், பஞ்ச பூதங்களுக்கு அழிவு இல்லை என்பதையும் கண்டுகொண்டதன் பலனே, அந்தச் சித்தாந்தமாகத் திகழ்கின்றது. எப்போதும் பிறக்கும் மனிதன், ஒரு காலத்திலும் பிறவாத கடவுளுடன் ஐக்கியம் அடைய முயற்சிக்கிறான். ஒவ்வொரு ஜன்மமும், இன்னும் அவன் ஓடவேண்டியிருக்கும் பந்தயத்தை அவனுக்கு நினைவூட்டும் துக்ககரமான நிகழ்ச்சியாகும். அதே சமயத்தில் ஒவ்வொரு ஜன்மமும், அந்தப் பந்தயத்தை முடிக்கவேண்டிய புதிய சந்தர்ப்பத்தையும் அவனுக்கு அளிக்கிறது. ஒவ்வொரு மறு பிறப்பும், கட்டு திட்டங்களில் பயிற்சியளிக்கும் ஒரு புதிய கல்வி சாலையாக, ஒரு புதிய சிறையாக இருக்கிறது. ஒவ்வொருவரும் அவற்றின் மூலம் தனது விடுதலைக்கு வழி செய்துகொள்ள வேண்டும்.

மனிதன், இந்த உலகில் அவனது நடத்தைக்குத் தகுந்தவாறு பல்வேறு கருப்பைகளிலும் கிடந்து வெளியேறுகின்றானா? சாந்தோக்ய உபநிடதம் கூறுவதுபோல், அருவருக்கத் தக்க நடத்தையுள்ளவன், நாய், பன்றி, அல்லது இழிவான சாதியினர் போன்ற அருவருக்கத்தக்க கருப்பைகளில் பிரவேசிக்கின்றானா? இவற்றையெல்லாம் எவரும் அறியார். அவ்விஷயமாக அக்காலத்தில் நிலவிவந்த நம்பிக்கையையே கீதை பிரதிபலிக்கிறது. எனினும், அது உபநிடதத்தின் வாக்கியங்களை மாற்றி, மூன்று விதமான பிறவிகளைக் குறிப்பிடுகிறது. 1. குற்றம் குறைவில்லாத மேல் உலகில் பிறத்தல், 2. கர்மாவில் பற்றுள்ள மனிதர்களிடையே பிறத்தல், 3. பிராணி வர்க்கத்தில் பிறத்தல். இதையே, ‘மேலே செல்லுவது’, ‘இடையில் நிற்பது,’ ‘கீழ் நோக்கிச் செல்லுவது’ அதாவது ‘தாழ்ந்த நிலையை அடைவது’ என்று கீதை வர்ணிக்கிறது (கீதை, அத்தியாயம்-14, சுலோகங்கள் 15, 18). அதையே பண்டைய வியாக்கியான கர்த்தாக்கள், சிருஷ்டியில் உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கும் தேவர்களாகப் பிறப்பது என்றும், இடையில் உள்ள மனித வர்க்கத்தில் பிறப்பது என்றும், இழி

* சர் மோனியர் வில்லியம்ஸ் (1819—1889) பிரிட்டனில் பல்வேறு கல்லூரிப் பட்டங்கள் பெற்றவர். அவர் சிறந்த சமஸ்கிருத நிபுணராகத் திகழ்ந்ததுடன், இந்தியர்களின் ஞானமார்க்கத்தை மேநாட்டினர் அறிந்து பின்பற்ற வேண்டும் என்பதற்காக இணையற்ற தொண்டு புரிந்து வந்தார்.

வான மிருகங்களாகவும், புழு, பூச்சிகளாகவும், தாவரங்களாகவும் பிறப்பது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். சுமார் ஆறு இடங்களில் 'சொர்க்கம்' என்று கீதை குறிப்பிட்டிருக்கிறது (அத்தியாயம்-2, சுலோகங்கள்-2, 32, 37, 43; அத்தியாயம்-9, சுலோகங்கள்-20, 21); 'நரகம்' என்று நான்கு இடங்களில் குறிப்பிட்டிருக்கிறது (அத்தியாயம்-1, சுலோகங்கள்-42, 44; அத்தியாயம் 16, சுலோகங்கள் 16, 21).

அதாவது, நல்வினைகளைச் செய்தவர்கள் கர்ம பலன்களின் காரணமாக சொர்க்கத்திற்குச் செல்லுவதாயும், தீவினைகளைச் செய்தவர்கள் நரகத்திற்குச் செல்லுவதாயும் பொதுவாக மக்களிடையே ஓர் எண்ணம் இருந்து வருகிறது. அவ்விதமே ஆனந்தத்திற்கு நிரந்தரமான இருப்பிடமாக சொர்க்கத்தையும், துன்பத்திற்கு நிரந்தரமான இருப்பிடமாக நரகத்தையும் கீதையின் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறாரா என்று கூறுவது கஷ்டமாகும். கீதை, மகாபாரதத்தின் ஒரு பகுதியே. சொர்க்கமும் நரகமும் மகாபாரதம் சாந்தி பர்வத்தில் பின்வருமாறு நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன: "ஒளியையே சொர்க்கம் என்றும், இருளையே நரகம் என்றும் கூறுகிறார்கள்." கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட 'தத்துவ கௌமுதி' என்ற நூலில், சொர்க்கம் என்றால் பேரானந்தத்திற்கு நிரந்தரமான இடம் அல்ல என்றும், சொர்க்கம் என்பதற்கு கலப்பற்ற ஆனந்தம் என்றும், நரகம் என்பதற்கு கலப்பற்ற துன்பம் என்றுமே பொருள் கூறப்பட்டிருக்கிறது. அதே காலத்திலோ அல்லது அதற்கும் முந்திய காலத்திலோ தோன்றிய 'விஷ்ணு புராணத்'திலிருந்து டாக்டர் ராதாகிருஷ்ணன் ஒரு சுலோகத்தை மேற்கோள் காட்டியுள்ளார். 'சொர்க்கம்' என்பது இன்பமான மன நிலையையும், 'நரகம்' என்பது அதற்கு நேர்மாறான நிலையையுமே குறிக்கிறது என்பதே அந்த சுலோகத்தின் பொருளாகும். அவ்விரண்டு நிலைகளும் முறையே புண்ணியத்தையும் பாவத்தையும் குறிப்பிடுகின்றன. எனவே, கடவுளுடன் செல்லுவதே சொர்க்கம் என்றும், கடவுளிடமிருந்து விலகி அப்பால் செல்லுவதே நரகம் என்றும் கூறுவது, கீதையின் தத்துவத்திற்கு முரணாக இராது.

மரணத்திற்குப் பிறகு ஆன்மா இரண்டு வழிகளில் செல்லுகிறது என்றும், ஒன்று தேவர்களின் வழி என்றும், மற்றொன்று பிதுருக்களின் வழி என்றும் கீதை கூறுகிறது (அத்தியாயம்-8, சுலோகங்கள்-24–25). அவற்றை ஒளி வீசும் வழி, இருள் சூழ்ந்த வழி, அதாவது ஞான மார்க்கம், அஞ்ஞான மார்க்கம் என்றும் கீதை குறிப்பிடுகிறது. தேவர்கள் என்றும், மற்றுமுள்ள சொர்க்க வாசிகள் என்றும் கூட கீதையில் காண்கிறோம். இவையெல்லாம் பூமிக்குப் புறம்பானவர்களிடம் பரம்பரையாக நமக்கு இருந்து வரும் நம்பிக்கையையே குறிக்கிறது. எனினும், கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் இருந்த யாஸ்கா என்ற புராதன வியாகரண பண்டிதர், கொடுக்கிறது, பிரகாசிக்கிறது அல்லது ஒளி வீசுகின்றது

போன்ற சொற்களிலிருந்தே சொர்க்கவாசிகளின் பெயர்கள் வந்திருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார் என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

இந்தச் சொற்கள் எல்லாம் நமக்குத் தடையாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. இவையெல்லாம் கீதையின் மேலெழுந்தவாரியான சொற்களேயன்றி, அவை கீதையின் முக்கியமான தத்துவத்தை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. சம்பிரதாயமான நம்பிக்கையைக் குறிப்பிடும் இந்தக் குறிப்புகள், கீதையின் முக்கிய தத்துவம் இன்னும் அதிகமாக ஒளி வீசும்படி செய்கின்றன எனலாம். கர்மா, மறுபிறப்பு ஆகிய கொள்கைகள் கூட ஒரு விளக்கமும் உத்தேசமுமே ஆகும். அவை, கீதையின் மூலாதாரமான உபதேசத்தை பாதிக்கவேண்டிய அவசியமில்லை. கீதையின் முக்கிய உபதேசம், அந்தச் சொற்களின் உதவியை நாடி நிற்கவில்லை. ஒரு மனிதனுக்கு அந்தக் கொள்கையில் நம்பிக்கை இருந்தாலும் இராவிட்டாலும், அவன் தன்னலத் தியாகத்தின் மூலம்தான் மோட்சம் அடைய வேண்டும், அல்லது தன்னைத்தானே உணர்ந்துகொள்ள வேண்டும். மனிதப் பிறவியை ஒரு சிறந்த பாக்கியமாகவே ஹிந்துக்கள் கருதுகின்றனர். பல தாழ்ந்த பிறவிகள் எடுத்த பின்னரே மனிதராகப் பிறக்கும் நல்ல அதிர்ஷ்டம் ஏற்படுகிறது என்பதும் ஹிந்துக்களின் அபிப்பிராயம். பல நூற்றாண்டுகளுக்கு முன் இருந்த ஸுபி என்ற முஸ்லிம் ஞானி கூறியிருப்பதை வைதிக ஹிந்துக்கள் கூட முற்றிலும் அங்கீகரிப்பார்கள். ஸுபி கூறுவதாவது :

"நான் உலோகமாக இறந்து, பின்னர் ஒரு செடியாகப் பிறந்தேன். செடியாக இறந்து மிருகமாகப் பிறக்கும் உயர்ந்த நிலையை அடைந்தேன். மிருகமாக இறந்து, மனிதனாகவும் பிறந்தேன். நான் ஏன் அஞ்சவேண்டும்? இறந்ததன் மூலம் நான் குறைந்து விடவில்லை. மீண்டும் ஒரு முறை நான் மனிதனாக இறந்து அருளுடன் கூடிய தேவர்களுடன் ஆகாயத்தில் சஞ்சரிப்பேன். எனினும், தேவர்களைக் காட்டிலும் கூட நான் உயர்ந்த நிலையை அடைய வேண்டும். ஆண்டவனைத் தவிர, மற்றவையெல்லாம் அழிந்து விடுகின்றன. நான் எனது தேவ ஆன்மாவைத் தியாகம் செய்யும்போது, எவரும் மனத்தில் கற்பனை செய்யாத ஒரு நிலையை நான் அடைவேன். ஆஹா, நான் இராமலேயே போய்விட வேண்டும்! இராமல் போவது என்பது, 'நாம் ஆண்டவனிடம் திரும்பிச் சென்றுவிடுவோம்' என்று உரத்த குரலில் பிரகடனம் செய்வதுதான்."

மேற்கண்ட வாக்கியங்கள், கீதையின் கொள்கையைச் சிறிதும் குற்றம் குறையின்றி பூரணமாக விளக்குவதாக இருக்கின்றன. நரகத்தின் மூன்று வாயிற்படிகளான காமம், கோபம், பேராசை ஆகியவற்றிற்கு இடம் கொடுப்போர் அழிவையே தேடிக்கொள்ளுவார்கள் என்று கீதை திட்டவட்டமாகக் கூறுகிறது.

"அநியாயம் செய்பவன் மேலும் மேலும் அநியாயம் செய்யட்டும்; அசுத்தமாக இருப்பவன் இன்னும் அதிக அசுத்தமாக இருக்கட்டும்; நீதியுடன் நடந்துகொள்ளுபவன் இன்னும் அதிக நீதியுடன் நடந்துகொள்ளட்டும்; புனிதமாக இருப்பவன் மேலும் அதிகப் புனிதமாக இருக்கட்டும்".*

பயங்கரமான இந்த வாக்கியங்களுக்கும் கீதையின் 16-ஆவது அத்தியாயத்தில் உள்ள வாக்கியங்களுக்கும் அதிக வேற்றுமை இல்லை. குறுகலாகவும், தண்ணீர் வற்றியும் இருக்கும் கிணற்றுத் தவளையைப் போல, ஆன்மா தன்னைத் தானே சிறைப்படுத்திக் கொண்டிருக்கிறது. அது எங்கும் வியாபித்துள்ள மகாசமுத்திரமாக விரிவடைய வேண்டும். அது யுகம் யுகமாகத் தோன்றி எண்ணிக்கையற்ற சுமைகளைக் களைந்து, ஞானம், ஒளி, பேரின்பமாகிற அதாவது பிரம்ம நிர்வாணமாகிற நிரந்தரமான பேரொளிச் சுடரில் அந்தச் சுமைகளை எரித்துவிட வேண்டும்.

## மனிதன், உலகம், சத்தியம்

அது, நாம் எங்கே ஆரம்பித்தோமோ அங்கே நம்மை மீண்டும் கொண்டு வருகிறது. மனிதன் இந்த உடலில், அவனது சம்ஸ்காரம் அல்லது கர்மாவினால் விளைந்த சூழ்நிலையில் வந்து பிறக்கிறான் என்பதைப் பார்த்தோம். இந்த ஸ்தூல உலகில், மனிதனே முக்கிய நடிகனாக இருக்கிறான். இந்த உலகம் பரம்பொருளிலிருந்தே ஆரம்பமாகியிருக்கிறது. பரம்பொருள் தன்னைத் தானே எவ்விதம் உலகமாக மாற்றிக் கொண்டது என்பதை நாம் அறியோம்; நாம் அதை அறிந்து கொள்ளவும் முடியாது. அது ஆரம்பமற்ற ஒரு நடவடிக்கையாகும். "ஒவ்வொரு யுகத்திலும் நான் எல்லோரையும், எல்லா ஜீவராசிகளையும் அனுப்புகிறேன். அந்த யுகத்தின் முடிவில் அவை திரும்பி வந்து என் பிரகிருதியில் லயிக்கின்றன." இவ்விதம் சிருஷ்டிகர்த்தா என்ற முறையில் கிருஷ்ணன் கூறுகிறான்.

மனிதன்—ஸ்தூல மனிதன்-உலகத்தின் ஒரு பகுதியே. ஆதியந்தமற்ற இந்த நடவடிக்கைக்கு அவன் உட்பட வேண்டியிருக்கிறது. உலகில் அவனது நிலைமை ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. அவன் கவனமாகப் பார்க்கிறான், எண்ணுகிறான், சிந்திக்கிறான், தான் சிறைப்பட்டிருப்பதைக் காண்கிறான், சிறையிலிருந்து விடுதலை பெறுவதற்காகப் போராடுகிறான். தன்னிடத்திலும், தன்னைச் சுற்றிலும் பிரகிருதி அம்சங்கள் இடைவிடாது மாறிக் கொண்டிருப்பதற்கு அவன், தானே சாட்சியாக இருக்கிறான். உடல், புலன்கள், அறிவு ஆகியவை அடங்கிய தன்னுள் இருக்கும் உலகத்தில் மாத்திரமல்ல, தன்னைச் சுற்றியுள்ள வெளியுலகிலும் தான் ஒரு பிரஜை என்பதை அவனது சிந்தனை அவனுக்குக் கூறுகிறது. அவ்விரு உலகங்களும், அதாவது உள் உலகமும்

* இவை 'புதிய ஏற்பாட்டி'ல் (பைபிள்) உள்ள வாக்கியங்களாகும்.

வெளியுலகமும் மாறுகின்றன, அழிகின்றன. எனினும் அவனிடத்தில் உள்ள ஏதோ ஒன்று மாறுதலின்றி உறுதியாக இருந்து வருகிறது. இடைவிடாது மாறும் உலகில் அது மாறுவதில்லை எனில், வெளியுலகமும் உள் உலகமும் அழியும்போது அது எப்படி அழிய முடியும்? மாறும் உலகமும் அழியும் உலகமும், நிரந்தரமான, அழிவே இல்லாத ஒன்று இருக்கிறது என்பதை அவனுக்கு அறிவிக்கின்றன.

மனிதனிடத்தில் ரகசியமான ஏதோ ஒன்று இருக்கிறது. அது, அவனிடத்தில் எல்லைக்கு உட்பட்ட, குற்றம் குறையுள்ள, அழியும் தன்மை வாய்ந்த ஒன்று, எல்லையற்ற, குற்றம் குறையற்ற, அழிவற்ற ஒன்றை ஆர்வத்துடன் நாடும்படி செய்கிறது. அதன் உண்மையைக் காண அவனுக்கு அதிக காலம் பிடிப்பதில்லை. அவனுக்கு உயிர் கொடுக்கும் எல்லையற்ற, அழிவற்ற ஆன்மா, உலகம் முழுவதும் வியாபித்திருக்கிறது என்பதே அந்த உண்மையாகும். புலன்களின் உலகில் கட்டுண்டு கிடக்கும் அவன், உலக ஆன்மாவுடன் தன்னுடைய ஐக்கியத் தன்மையை திடீரென்று தோன்றி மறையும் மின்னல்களைப்போல் காண்கிறான். எனினும், அந்த மின்னல்கள் அவனுக்கு எப்போதோ சிற்சில சமயங்களில் தான் தோன்றுகின்றன. வேறுபடுத்திப் பிரிக்கும் சக்திகளிலிருந்து அவன் தன் தொடர்பை அடியோடு கத்தரித்துக் கொண்டாலன்றி, அந்த ஐக்கியத் தன்மை அவனிடத்தில் நிரந்தரமாக இருக்க முடியாது.

''நமது புலன்கள், உட்புலன்களும் வெளிப்புலன்களும் பொய் கூறுபவை'' என்று ஹெராக்ளிடஸ்* கூறியிருப்பதை, காலஞ் சென்ற ஸ்ரீ கீர்த்திகார் மேற்கோள் காட்டியுள்ளார். புலன்களைப் பற்றி பிளம்மேரியன்† கூறியிருப்பதையும் அவர் மேற்கோளாகக் கொடுத்துள்ளார். ''புலன்கள் பொய் கூறுபவை என்பது எப்படி'' என்பதையும் ஸ்ரீ கீர்த்திகார் பின்வருமாறு சித்திரித்துள்ளார்:

''சூரியன் அடிவானத்திற்கு மேலே உதயமாவதை நாம் பார்க்கிறோம். ஆனால், அது அப்போது நமக்குக் கீழேதான் இருக்கிறது. கெட்டியான பொருள் என்று எண்ணிக் கொண்டு நாம் ஒன்றைத் தொடுகிறோம். கெட்டியான பொருள் என்று இவ்வுலகில் எதுவுமே இல்லை. நாம் இனிய சப்தங்களைக் கேட்கிறோம். ஆனால், காற்று மௌனமாக அசைவுகளைக் கொண்டுவருகிறது.

---

* பிரபல கிரேக்க தத்துவ ஞானியான ஹெராக்ளிடஸ் (கி. மு. 535—475) உலகில் உள்ள ஒவ்வொன்றும் இடைவிடாமல் தொடர்ந்து மாறிவருகிறது என்ற சித்தாந்தத்தை ஸ்தாபித்தவர். எல்லாவற்றிற்கும் ஆதியான மூல தத்துவம் நெருப்புத்தான் என்பது அவரது சித்தாந்தமாகும். ஹிந்து மத வேதங்களும் அக்னியையே பரம்பொருள் அல்லது பரமாத்மா என்று எண்ணிக்கையற்ற இடங்களில் வர்ணித்திருப்பதும் இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடத்தக்கது.

† காமில் பிளம்மேரியன் (1842—1925) பிரான்சில் பிரபல வானசாத்திர பண்டிதராக விளங்கினார். 1897-இல் அவர் பிரான்சில் வானசாத்திர ஆராய்ச்சி சங்கத்தை ஸ்தாபித்து உலகமெங்கும் பெயரும் புகழும் பெற்றார்.

அந்த அசைவுகளும் மௌனமானவையே. ஒளியையும், பல்வேறு வண்ணங்களையும் கண்டு நாம் வியப்படைகிறோம். அவையெல்லாம் அற்புதமான இயற்கைக் காட்சிகளை நம் கண் முன் தெளிவாகக் காட்டுகின்றன. ஆனால், உண்மையில் ஒளியோ, வண்ணங்களோ எதுவும் இல்லை. நம் பார்வைக்கு எட்டாத வான வெளியின் சலனமே, நமது பார்வைக்குரிய நரம்பைத் தாக்குகிறது. அதுவே ஒளியும் வண்ணமும் இருப்பது போன்ற பிரமையை நமக்கு உண்டாக்குகிறது. நமது காலில் நெருப்பு சுட்டுவிடுவதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போது நமக்கு வேதனையைக் கொடுப்பது உண்மையில் கால் அல்ல, நமது மூளையே. காலில் தீ சுட்டுவிட்டது என்ற உணர்ச்சி நமது மூளையிலிருந்தே ஏற்படுகிறது. நாம் உஷ்ணம் என்றும், குளிர் என்றும் கூறுகிறோம். உலகில் உஷ்ணம் என்றும் குளிர் என்றும் எதுவும் இல்லை. கால மாறுதலையே அவ்விதம் குறிப்பிடுகிறோம். அவ்வாறாக, நமது புலன்கள், நம்மை சுற்றியுள்ள பொருட்களின் உண்மையான நிலையை நாம் அறிந்து கொள்ள விடாமல், நம்மைத் தவறான வழியில் செலுத்திவிடுகின்றன.''

வெளிப்புலன்களைப் பொறுத்தமட்டில் எது உண்மையோ அது, உட்புலன்களைப் பொறுத்த மட்டில் இன்னும் அதிக உண்மையாகும். உட்புலன்கள் எவ்வளவுக்கு அதிக நுணுக்கமானவையாகவும், அதிக சிக்கலானவையாகவும் இருக்கின்றனவோ அவ்வளவுக்கு, அவை சம்பந்தப்பட்ட அனுபவங்கள் அதிகக் குழப்பத்தை உண்டாக்குபவையாக இருக்கின்றன.

இந்த ஒளிகளும், இந்த வண்ணங்களும், உஷ்ணம், குளிர் ஆகிய இந்த அனுபவங்களும் குணங்களே. குணம் என்ற சொல்லுக்கு 'கீழ்த்தரமானது' என்றும், குணங்கள் என்பதற்கு 'கொடிய கருவிகள்' என்றும் பொருள் என்பதை ஏற்கனவே பார்த்தோம். பொருட்களின் 'கீழ்த்தரமான' அம்சத்தையே புலன்கள் நமக்குக் காட்டுகின்றன; முக்கியமான அம்சத்தை மறைத்து விடுகின்றன. அதாவது, புலன்கள், உண்மையில்லாதவற்றை நமக்குக் காட்டுகின்றன; உண்மையானவற்றை மறைத்து விடுகின்றன. பிஷ்டே* அற்புதமாகக் குறிப்பிட்டிருப்பது போல், ''பார்வையே, நாம் பார்க்கும் பொருளை மறைத்துவிடுகிறது. நமது கண்களே நமது கண்களுக்கு இடையூறாக இருக்கின்றன.''

இதன் உண்மைத் தத்துவம் என்னவெனில், கண்களுக்கு தென்படும் பல்வேறு தோற்றங்களும் நிழலைப் போன்றவை. உண்மையான சாரத்தை ஊனக் கண்களால் பார்க்க இயலாது; அகக் கண்களால்தான் காணமுடியும். கீதையின் 15-ஆம் அத்தியாயம், 11-ஆவது சுலோகத்தில் கூறியுள்ளபடி, ''தங்களைத் தாங்களே அடக்கி, கட்டுதிட்டங்களுக்கு உட்பட்ட யோகிகள், தங்களுக்கு

---

* ஜே. ஜி. பிஷ்டே (1782—1814) என்ற பிரபல ஜெர்மன் மேதை, ஜெர்மன் கல்லூரிகளில் தத்துவப் பேராசிரியராக இருந்தார். அவர் பல அரிய நூல்களின் ஆசிரியராகவும் திகழ்ந்தார்.

உள்ளேயே இறைவன் வீற்றிருப்பதை ஞானக் கண்களால் பார்க்கின்றனர். தங்களை அடக்கிக் கொள்ளாதவர்கள், எவ்வளவு முயற்சி செய்தாலும் கூட இறைவனைக் காணமுடிவதில்லை.''

இந்த இடத்தில்தான் கீதை, மிகவும் வாதத்திற்கு இடமான 'மாயை' என்ற வார்த்தையை உபயோகிக்கிறது. மாயை என்பது வீண் மயக்கமோ அல்லது பொய்த்தோற்றமோ அல்ல; உண்மையை மறைக்கும் ஒரு திரையோ அல்லது தடையோதான். அந்த மாயை, நம்மிடத்தில் உள்ள இறைவனை மறைக்கும் ஒரு பாசிப் படலமாகவும், நம்மிடத்தில் உள்ள சூரியனை மறைக்கும் மேக மண்டலமாகவும், சத்தியத்தை மூடி மறைக்கும் ஒரு தங்க மூடியாகவும் இருக்கிறது. நம் உள்ளேயும் வெளியிலும் இருக்கும் குணங்கள் அல்லது பிரகிருதியே மாயையாகும். அதுதான் நம்மைத் தடுமாறும்படி செய்கிறது; நம்மைக் குருடாக்கி விடுகிறது; நம்மைத் தவறான வழியில் கொண்டு போய் விடுகிறது. அடிமைத்தனமும், வேறுபாடான எண்ணமும், பல்வேறு தோற்றங்களும் இந்த மாயையினாலேயே ஏற்படுகின்றன. பெயர்களும் உருவங்களும் அடங்கிய பிரபஞ்சமானது நமது புலன்களைத் தாக்குகின்றன. உதாரணமாக, பல வகையான பொன் ஆபரணங்கள் வெவ்வேறான பல ஆபரணங்களாகவே நமக்குத் தோன்றுகின்றன. கடலில் உள்ள எண்ணிக்கையற்ற அலைகள் பல அலைகளாகவே நம் கண்களுக்குத் தோன்றுகின்றன. ஆபரணங்கள் யாவும் பொன் என்பதையோ, அலைகள் யாவும் மாறுதலற்ற கடலே என்பதையோ, பல்வேறு உருவங்களும் பெயர் இல்லாதவை, உருவம் இல்லாதவை என்பதையோ நாம் காண்பதில்லை. பெயர்களும் உருவங்களும் அடங்கிய உலகத்திற்குப் பின்னால் உண்மையாக இருப்பது, பிரம்மம் அல்லது ஆதியந்தமற்ற பரம்பொருளேயாகும். அதில்தான், அதன்மூலம் தான் உலகம் இருக்க முடியும். பிஷ்டே கூறுவதுபோல், ''மூன்று பட்டைகள் உள்ள கண்ணாடியில் இருக்கும் ஒளி பல்வேறு வண்ணக் கதிர்களாகச் சிதறுவதைப் போலவே, தெய்விக உயிர் எண்ணிக்கையற்ற பொருள்களிலும் சிதறி வியாபித்திருக்கின்றது.''

நமது புலன்களே, மூன்று பட்டைகள் உள்ள கண்ணாடியைப் போல் இருக்கின்றன. அந்தக் கண்ணாடியின் காரணமாகவே ஒன்று பலவாகத் தோன்றுகிறது. மாயை என்ற அந்தக் கண்ணாடியின் காரணமாகவே, சுதந்திரமான ஆன்மா, தான் கட்டுண்டிருப்பதாகக் கருதுகிறது. ''பல வர்ணக் கண்ணாடிகளுடன் கூடிய மேற்கூரையைப்போல இந்த வாழ்க்கை, நிரந்தரமான வெண்மையான ஒளியைக் களங்கப்படுத்திவிடுகிறது.'' பர பிரம்மத்தின் பிரதிபிம்பமே உலகம் எனில், மனிதன் உலக ஜோதியின் ஒரு பொறியே ஆவான். பர பிரம்மமும் தனி மனிதனும் ஒன்றுதான். உடலில் உறையும் ஆன்மா, ஒன்றுக்குப் பின் மற்றொன்றாக உடல்களைப்போய் அடைகின்றது. இந்த ஆன்

மாவும், அழிவற்ற, நிரந்தரமான, பிறவாத பரம்பொருளும் ஒன்றே என்பதை கீதையில் பார்க்கின்றோம் (அத்தியாயம்-2, சுலோகங்கள் 13, 18-25; அத்தியாயம்-13 சுலோகங்கள், 2, 13-20; அத்தியாயம்-15, சுலோகங்கள் 7, 11). மகாபாரதத்தில் உள்ள ஒரு சுலோகம் பின்வருமாறு கூறுகிறது: "பிரகிருதியின் குணங்களுடன் சேர்ந்த ஆன்மாவையே க்ஷேத்ரக்ஞன் (இடத்தை அறிந்தவன்) என்று கூறுகிறோம். இந்தச் சேர்க்கையிலிருந்து விடுதலைபெற்ற ஆன்மாதான் பரமாத்மா ஆகிறது." அவ்விரண்டும் வெவ்வேறாகத் தோன்றுகிறது. ஆனால், முக்கிய அம்சங்களில் அவ்விரண்டும் ஒன்றேதான். அவ்விதம் இராவிடில், அவ்விரண்டிற்கும் ஐக்கியமோ அல்லது ஒற்றுமையோ சாத்தியமல்ல. அத்தகைய ஐக்கியபாவம் உண்மையே என்பது, எல்லா யுகங்களிலும் இடங்களிலும் ஞானிகள் பெற்ற அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டுளது. தவிர, ஆன்மிக சம்பந்தமான முயற்சிகள் யாவும், மாயையாகிய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெறுவதற்காகவே செய்யப்படுகின்றன. அது ஆளை மயக்கும் அவ்வளவு படுமோசமானது. மதிப்பிற்குரிய டாக்டர் பெசண்டு அம்மையார் அதைப்பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார்: "மகா வல்லமை வாய்ந்த மாயை, உடலுடன் கூடிய இந்த ஆன்மாவைத் தவறான வழியில் செலுத்துகிறது; மனிதன் தன்னைத்தானே உணர்ந்து கொள்ளுவதற்குத் தடையாக எத்தனையோ முட்டுக்கட்டைகளையும் கஷ்டங்களையும் விளைவிக்கின்றது. மாயை செய்யும் மோசடிகள் எல்லாவற்றையும் விட, போலி வேடங்கள் எல்லாவற்றையும் விட, மதிமயக்கங்கள் எல்லாவற்றையும் விட மிகவும் கொடுமையானது இதுதான்: தூய்மையற்ற வாழ்க்கையை நடத்திவரும் மனிதன் மாயையின் கருவியாகவும், அடிமையாகவும் இருந்து கொண்டு, மாயையுடன் ஐக்கியமடைந்து, அசுத்தமான வாயால், 'மாயாவிக்கூடாகிய (உடல்) நான் தான் பிரம்மம்' என்று கூசாமல் கூறும்படி மாயை செய்து விடுகிறது!"

பிரகிருதிக்கும் புருஷனுக்கும் இடையே உள்ள, சாங்கிய முறைப்படி ஆன்மாவுக்கும் ஜடத்துக்கும் இடையே உள்ள இணைக்க முடியாத பிளவை, வேதாந்தமும் கீதையும் எவ்விதம் இணைக்கின்றன என்பதைப் பார்த்தோம். அவ்விரண்டும் பரம்பொருளைச் சார்ந்திருக்கும்படியும், எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளின் பிரதிபிம்பங்களாக விளங்கும்படியும் செய்து, அவற்றை வேதாந்தமும் கீதையும் இணைத்திருக்கின்றன. இந்தப் பரம்பொருள், கீதையில் எப்படி எடுத்துக் காட்டப்படுகிறது என்பதைப் பார்ப்போம். மனிதனின் அகக் கண் அதன் எல்லைக்குட்பட்டு எவ்வளவு தூரத்துக்குக் கற்பனை செய்து கொள்ள முடியுமோ, அவ்வளவு தூரத்துக்கு அந்தப் பரம்பொருள் பல தோற்றங்களில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது என்று நாம் கூறலாம்.

அது வெளிப்படையாகக் கண்களுக்குத் தெரியாதது, எல்லாவற்றிற்கும் மேலானது, எல்லையற்றது, அழிவற்றது, இடை

விடாது மாறும் தன்மையுள்ள உடையில் அது காட்சி அளிக்கிறது. அது அந்தந்தப் பொருளாகத் தோன்றுவதுடன், அந்தந்தப் பொருளின் குணத்தையும் மேற்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. அது எல்லாவற்றையும் கடந்ததாக இருக்கிறது. அப்படியிருந்தும் அது எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறது; ஊடுருவியிருக்கிறது. நூலிலே கோர்த்த நவரத்னங்களைப் போல், எல்லாம் அந்தப் பரம்பொருளின்மீது கோர்க்கப்பட்டிருக்கின்றன (அத்தியாயம்-7, சுலோகம்-7). அப்படியிருந்தும் அது எல்லாவற்றிற்கும் மேலானதாக இருக்கிறது (கீதை அத்தியாயம்-7, சுலோகங்கள், 13, 24; அத்தியாயம்-8, சுலோகம்-22; அத்தியாயம்-10, சுலோகம் 22). அது எல்லாவற்றிற்குள்ளும் இருப்பதால், அது வியாபித்துள்ள எல்லாவற்றின் குணங்களும் அதற்கு இருக்கிறது. அது எல்லாவற்றையும் கடந்திருப்பதால், எல்லா இயல்புகளிலிருந்தும் குணங்களிலிருந்தும் அது விடுதலை பெற்றதாக இருக்கிறது.

"அது இருக்கவில்லை, இராமலிருக்கவும் இல்லை. புலன்களின் அலுவல்களை அது செய்வதாகத் தோன்றுகிறது. இருந்தாலும் அது புலன்களின் தொடர்பே இல்லாமல் இருக்கிறது. அது எல்லா உயிர்களுக்கும் வெளியில் இருக்கிறது; எல்லாவற்றிற்கும் உள்ளேயும் இருக்கிறது, அது அசைவதில்லை, இருந்தாலும் அசைந்து கொண்டும் இருக்கிறது. அது மிகத் தொலைவில் இருக்கிறது, அதே சமயத்தில் அது மிகவும் அருகிலும் இருக்கிறது. அது பிரிக்க முடியாததாக இருக்கிறது, அதே சமயத்தில் அது எல்லா உயிர்களிடத்திலும் பிரிந்து இருந்துவருவது போலவும் தோன்றுகிறது" (அத்தியாயம்-13, சுலோகங்கள்-12-16).

மேற்கண்ட வர்ணனையில் ஈச, கட, முண்டக உபநிடதங்களில் உள்ள பல சுலோகங்களின் சாரம் அடங்கியிருக்கிறது. உண்மையில் பரம்பொருள் முற்றிலும் எல்லாவற்றிற்கும் வெளியில் இருக்கவில்லை; முற்றிலும் எல்லாவற்றிற்கும் உள்ளேயும் இருக்கவில்லை. கற்பனைசெய்து கொள்ள முடியாத ஒன்றை, எல்லைக்கு உட்பட்ட கற்பனைக்குள் சிறைப்படுத்துவது வீண் வேலையாகும் எனினும், அது வெறும் கற்பனை என்றோ அல்லது இராத பொருள் என்றோ அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. அது மிகப் பெரியது, மிகவும் விரிவானது. எனவே, கற்பனையான எண்ணங்களுக்குள் அதை அடைத்துவிட முடியாது. அதை பூரணமாக வர்ணிப்பது முடியாத காரியம்; போதிய அளவுகூட வர்ணிப்பது முடியாத காரியம். பேராசிரியர் ஜேம்ஸ் அவருக்கே உரித்தான அலங்காரமான அமெரிக்க தோரணையில் வர்ணித்திருப்பதைப் போல், "அது எல்லாவற்றையும் காட்டிலும் அதிகப் பளபளப்பானது, அதிக ஒளி பொருந்தியது, அதிக முக்கியத்துவம் வாய்ந்தது, அதிக கம்பீரமானது, இன்னும் குறிப்பிடக்கூடிய எல்லாச் சிறப்புகளையும் விட அதிகச் சிறப்பு வாய்ந்தது."

அது இல்லை என்பது இல்லையாதலால், நிச்சயமானது என்பதற்கும் இல்லை என்பதற்கும் அது மேலானதாக இருக்கிறது. அது எல்லாவற்றையும் தாங்குகிறது; எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறது. எனினும் அது சோர்ந்து, அதன் சக்தி சூன்யமாகிவிடுவதில்லை; எல்லாவற்றிற்கும் குன்றாத அடிப்படையான சக்தியாக அது இருந்து வருகிறது.

அந்தப் பரம்பொருளைப் பற்றி உபநிடதம் பின்வருமாறு கூறுகிறது: ''அது எல்லையில்லாதது, இதுவும் எல்லையில்லாதது. எல்லையற்ற அதிலிருந்து எல்லையற்ற இது வெளியாகின்றது. எல்லையில்லாத இதை, எல்லையில்லாத அதிலிருந்து எடுத்துவிட்டால், மீதியிருப்பதும் எல்லையில்லாததுதான்,''* கணித பூர்வமான இந்த உவமையைக் கண்டு ஸ்பினேஸாவின்† மனம் குளிரும் என்பதில் ஐயமில்லை. மேற்கண்ட வாக்கியங்களில், எல்லையற்ற இது என்பது, இங்கே தெளிவாக உலகத்தையே குறிக்கிறது. எல்லையற்ற அது என்பது பிரம்மத்தையே குறிக்கிறது. அதனால்தான், இறைவனிடத்தில் உலகம் அடங்கியிருந்தாலும், உலகத்தில் இறைவன் அடங்கியில்லை என்று கீதை கூறுகிறது. மூன்று குணங்களின் மாற்றங்களுக்கெல்லாம் காரணம் இறைவன்தான். ஆனால், குணங்களுக்கு அவர் அடங்கியவர் அல்ல. குணங்கள் அவரை நிர்ணயிப்பதில்லை. களங்கப்படுத்துவதும் இல்லை. எல்லாம் அவரைப் பிரதிபலிக்கின்றன என்றாலும், அவரைத் தாங்க முடிவதில்லை. ''என்னுடைய அணுப் போன்ற ஓர் அம்சத்தினால் இந்த உலகத்தையே தாங்குகிறேன்'' என்று கிருஷ்ணன் கீதையில் கூறுகிறார். (அத்தியாயம்-10, சுலோகம்-42). கடவுள் அல்லது வாசுதேவன் தான் எல்லாம் என்றாலும் எல்லாம் வாசுதேவன் அல்ல.

---

* ஈச உபநிடதத்தில் உள்ள பின்வரும் சுலோகத்தின் அர்த்தமே மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

पूर्णमद : पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥

பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே[
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவ சிஷ்யதே||

† பருச் ஸ்பினேஸா (1632–1677) நெதர்லாண்ட்ஸில் ஓர் யூதர் குடும்பத்தில் பிறந்தவர். இந்த உலகமும் கடவுளும் ஒன்றே என்ற சித்தாந்தத்தை ஸ்தாபித்தவர். யூத சமயக் கொள்கைக்கு விரோதமான சித்தாந்தங்களை அவர் பிரசாரம் செய்ததால், சமய விரோதி என்று அவர் சாதி பிரஷ்டம் செய்யப்பட்டார். கடவுளாலேயே உலகம் சிருஷ்டியாகி இயங்குகிறது என்பதையும், உலகத்தின் சாரமே கடவுள் என்பதையும் விளக்கி ஸ்பினேஸா ஓர் அரிய நூல் எழுதியுள்ளார்.

ஹெகல்*, தம்முடைய ‘சமய தத்துவம்’ என்ற நூலில் பின் வருமாறு எழுதியிருக்கிறார். கீதையின் ஏழாவது, பத்தாவது அத்தியாயங்களை மனத்தில் வைத்துக்கொண்டே இவ்விதம் எழுதியிருக்கிறார் என்று தோன்றுகிறது: “இங்கே இருக்கும் இந்தக் காகிதம் முதலிய எல்லாவற்றிலும் கடவுள் இருக்கிறார் என்று நீங்கள் கூறினால், உலகமும் கடவுளும் ஒன்று என்ற கொள்கையை நீங்கள் ஆதரித்தவர் ஆகிறீர்கள். அதாவது, உலகம் முழுவதும், தனிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் சமமானது என்று உணர்ந்தவர் ஆகிறீர்கள். ஒவ்வொன்றும் கடவுள் என்பதும், எல்லாப் பொருட்களும் தனித்தனியாகவும் சேர்ந்தும் கடவுளே என்பதும், மனிதனின் மனத்தில் ஒரு போதும் பதிவதில்லை. ‘உலோகத்தில் உள்ள பிரகாசம் நான்தான், நதிகளுள் நான் கங்கை, உயிர் வாழும் எல்லாவற்றின் உயிரும் நான்தான்’ என்று பிரம்மா கூறும் போது, அவர் தனி உருவத்துக்குச் சிறிதும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. ‘நான்தான் உலோகம், நான்தான் நதிகள், பல்வேறு தனிப் பொருட்களும் நான்’ என்று அவர் கூறவில்லை. ‘உலோகத்தில் உள்ள பிரகாசம் நான்’, என்று கூறும்போது, பிரகாசம் உலோகம் அல்ல என்பதும் தெளிவாகிறது. பிரகாசம் உலகம் முழுவதும் வியாபித்திருப்பது, உண்மையானது, தனி உருவத்தைக் காட்டிலும் உயர்வானது. இங்கே உலகமும் கடவுளும் ஒன்று என்று குறிப்பிடப்படவில்லை. பொருட்களின் சாரமே கடவுள் என்ற சித்தாந்தம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.”

உலகமும் கடவுளும் ஒன்று என்பதே ஸ்பினோஸாவின் சித்தாந்தம் என்றும் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. அந்தக் குற்றச் சாட்டை மறுத்து ஸ்பினோஸா பின்வருமாறு கூறியுள்ளார்: “கடவுளையும், இயற்கையையும் பற்றி கிறிஸ்தவர்கள் மேற்கொண்டுள்ள கொள்கைக்கு முற்றிலும் மாறுபாடானதே எனது கொள்கையாகும். கடவுள் எல்லாவற்றினுள்ளும் இருக்கிறார் என்பதும், எல்லாப் பொருட்களுக்கும் வெளியில் இருந்து கொண்டு அவர் அவற்றை இயக்கவில்லை என்பதும் எனது உறுதியான கொள்கை. எல்லாம் கடவுள் மயம் என்றும், எல்லாம் கடவுளிடத்திலேயே உயிர் வாழ்கின்றன, இயங்குகின்றன என்றுமே நான் கூறுகிறேன். கடவுளும் இயற்கையும் ஒன்று என்று நான் கூறுவதாகச் சொல்லுவோர் முற்றிலும் தவறு செய்தவர் ஆகிறார்கள். இயற்கை என்பதை ஸ்தூலப் பொருட்கள் என்றே அவர்கள் கருதுகின்றனர். ஆனால், எனது கருத்து அது அல்ல.”

வெளியே கடவுள் இருக்கிறார் என்பதை கீதை நம்பவில்லை. பதினொன்றாவது அத்தியாயத்தில் உள்ள, பேரானந்தத்தைக் கொடுக்கும் அந்த ஒரு பிரார்த்தனையிலும், தோத்திரத்திலும் எல்லாம் அடங்கியிருக்கின்றன. “எல்லாவற்றையும் நீங்கள்

---

* பிரபல ஜெர்மன் தத்துவ ஞானியும் பேராசிரியருமான ஜார்ஜ் வில்லியம் ஹெகல் (1770—1831) தத்துவ சாத்திரத்தில் நிபுணராகத் திகழ்ந்தார். அந்தத் துறையில் அவர் பல அரிய நூல்களும் எழுதியுள்ளார்.

தாங்கிக் கொண்டிருக்கிறீர்கள்; ஆதலால், எல்லாம், நீங்கள் தான்.'' *அவர் தான் எல்லாம். ஏனென்ருல் அவருக்குப் புறம் பாக எதுவும் உயிர்வாழ முடியாது. கிருஷ்ணனின் விசுவ ரூபத் தில் சூரியன், சந்திரன், காற்று, தீ, எல்லாவற்றையும் அர்ஜுனன் பார்க்கிருன். கடவுள் எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்டி ருப்பதாலேயே அவ்விதம் வர்ணிக்கப்பட்டுள்ளது. ''வளமையும் பெருமையும் அழகும் பொருந்தியவை யாவும், என் ஒளியின் ஒரு சிறு பொறியே ஆகும்'' என்று பகவான் கூறுகிருர் (அத்தியாயம் 10 சுலோகம் –41). எனினும், கனவு அல்லது கற்பனையான தோற்றங்கள் தென்படும் நேரங்களில் சாதாரண மனிதர்களுக்குக் கூட அருவருக்கத்தக்க, விகாரமான பொருட்களில் கடவுளின் முகத்தைக் காண்பது சாத்தியமே ஆகும். எனினும், எக்கார்ட்* மறுபிறப்பு எடுத்துள்ள ஆன்மாவை, சூரியனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு கண்ணுக்கு உவமையாகக் கூறி யிருக்கிருர். அவ்விதம் உற்றுப்பார்த்த கண், அதன் பிறகு ஒவ் வொன்றிலும் சூரியனையே காண்கிறது அல்லவா?

ஆனல், மத சம்பந்தமான உணர்ச்சிகளுக்கெல்லாம் மூல காரணமாக இருக்கும் உருவம் உள்ள கடவுளைப்பற்றிய விஷயம் என்ன? இந்தக் கேள்வி, அவ்விஷயத்தை நாம் இரண்டு கோணங்களிலிருந்து கவனிக்கும்படி செய்கிறது. இந்தப் பிரச்னையை அவ்விரண்டு கோணங்களிலிருந்து கீதையும் பரி சீலனை செய்திருக்கிறது. பக்குவமடைந்த தத்துவ நிலையிலி ருந்து பார்ப்பவர்களுக்கு, கடவுள் எல்லாவற்றிற்கும் மேலான, எல்லாவிடங்களிலும் வியாபித்துள்ள பரம்பொருள் என்பது சரிதான். அதாவது ஞான யோகியும், தியான யோகியும் பரம் பொருளையே சிந்தித்த வண்ணம் தியானம் செய்வார்கள். ஆனல் தவறு செய்யும் சாதாரண மனிதனும், தவறுக்காக வருந்தும் பக்தனும் என்ன செய்வது? ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு விஷயங்களைப் பரிசீலனை செய்வதற்கும் உலக, அனுப

---

नम : पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्व : ॥

* நம: புரஸ்தாத் அத ப்ருஷ்டதஸ்தே
நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ|
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ:||

கீதை, அத்தியாயம்-11, சுலோகம்-40

இதன் பொருள்: எல்லாம் தாங்களே. முன்புறத்திலிருந்தும் பின்புறத்தி லிருந்தும் உங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன். எல்லாப் பக்கங்களிலிருந்தும் நமஸ் காரம் செய்கிறேன். அளவற்ற வீரியத்தையும் எல்லையற்ற பராக்கிரமத்தையும் உடைய தாங்கள் எங்கும் வியாபித்திருக்கிறீர்கள். ஆதலால், எல்லாம் தாங்களேதான்.

* பிரபல ஜெர்மானியரான ஜே. எக்கார்ட் (1260—1327), மேநாடுகளிலேயே ஆழ்ந்த சிந்தனையும் கற்பனையும் நிறைந்த சிறந்த தத்துவ ஞானியாகத் திகழ்ந்தார்.

வத்தை அடிப்படையாகக் கொண்டு விஷயங்களைப் பரிசீலனை செய்வதற்கும் உள்ள வேற்றுமையை கீதை தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது.

நிரந்தரமான ஆன்மா சுதந்திரத்துடனும், யாதொரு செயலு மின்றியும், ஒன்பது வாயில்கள் உள்ள கோட்டையில்* சாந்த மாகவும் பேரானந்தத்துடனும் உட்கார்ந்திருக்கிறது. ஆனால், உடலில் பற்றுள்ள ஆன்மா உலகம் முழுவதும் வியாபித்துள்ள ஆன்மாவுடன் ஐக்கியமடைவதற்காகப் போராடிக் கொண்டு செயலில் ஈடுபட்ட வண்ணம் இருக்கிறது. வெளிப்படையான அலங்காரங்களிலெல்லாம் பற்றுக் கொண்டிருக்கிறது; தூக்கி எறிய வேண்டிய கர்ம வினையைச் சுமந்துகொண்டிருக்கிறது. இவ்விதம் போராடிக் கொண்டிருப்பவர் கதி மோட்சம் அடை வதற்காகவே, கீதை வழிகாட்டியிருக்கிறது. தத்துவ முறையை உணர்ந்தவர்கள், தத்துவ நிலையின் சிகரத்தை அடைய முடியும், அடைந்தும் இருக்கிறார்கள். ஆனால், போராடிக் கொண்டிருக்கும் ஆன்மாதான் சாய்ந்து கொள்ள, தன் கவலைகளையெல்லாம் உதறித்தள்ள ஏதாவதொன்றை நாடுகிறான். அவன்கூட சத்திய மான பரம்பொருளை அறிந்து கொள்ள முடியும் என்றும், அதற்கு வழி என்னவெனில், ஒன்று அவன் அவனது செயல்களையெல்லாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிடவேண்டும், அல்லது கடவு ளிடம் அப்பழுக்கற்ற, பூரண பக்தி செலுத்தவேண்டும் என்றும் கீதை கூறுகிறது.

இந்த இடத்தில்தான், உருவம் உள்ள ஒரு கடவுள் அத்தியா வசியமாகிவிடுகிறது. மனிதன் கடவுளின் பிரதிபிம்பமே. பாகவதம் கூறுவதைப்போல், கண்ணாடியைப் பார்ப்போர் என்ன ஆபரணங்களை அணிந்து கொண்டிருக்கிறாரோ அந்த ஆபர ணங்கள் மாத்திரம்தான் கண்ணாடியின் பிரதிபிம்பத்தில் தெரியுமேயன்றி, வேறு எதுவும் தெரியாது. அதுபோலவே, கடவுள் எல்லாவிதங்களிலும் குற்றம் குறையற்றவர் என்று மனிதன் கூறுகிறான். அவரது பிரதிபிம்பமான தானும் அவ்விதம் குற்றம் குறையற்ற நிலையில் இருக்கவேண்டும் என்பதே அவனது விருப்பம். எனினும், எவ்வளவு முயற்சி செய்தாலும் பூரணமான அந்த நிலை அவனுக்கு வெகு தொலைவில் இருப்பதை அவன் காண்கிறான். எனவே, அவன் இறுதியில் கடவுளின் வற்றாத அருளை நாடி அவரிடம் சரண் அடைகிறான். கடவுளுடைய சக்தியில் தானும் சக்தியுடன் இருக்கலாம் என்று அவன் நம்பு கிறான். கடவுளுடைய தூய்மையில் தானும் தூய்மையாக இருக்கலாம் என்று அவன் நம்புகிறான். இங்கே, தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதற்கோ, மூலாதாரமான முரண்பாட்டிற்கோ இடம் எதுவும் இல்லை.

---

* இந்த உடலே, ஒன்பது வாயில்கள் உள்ள கோட்டை என்று மேலே குறிப் பிடப்பட்டிருக்கிறது.

பிரம்மம் என்பது கண்ணுக்குத் தெரியாத, மானசிகமான ஒரு சிந்தனையே என்று ஒருவர் நம்பினால் மாத்திரமே அது முரண்பாடாக இருக்கக்கூடும். அல்லது மெத்யூ அர்னால்டு குறிப்பிட்டிருப்பதைப்போல், "கடவுள் சிந்திக்கும், அன்பு காட்டும் ஒரு நபர் என்பதற்குச் சிறிதளவும் ஆதாரமில்லை" என்பதை ஒருவர் நம்பினாலும் அது முரண்பாடாக இருக்கக்கூடும். ஆனால், கடவுள் சிந்தனைக்கே எட்டாதவர், எல்லாவற்றிற்கும் மேலானவர். இவ்விதம் கூறுவதில் உருவமுள்ள கடவுளும் அடங்கியிருக்கிறார். இதன் சம்பந்தமாக டாக்டர் ராதாகிருஷ்ணன் 'வாழ்க்கையின் மகோன்னத லட்சியம்' என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார் :

"ஒரு தத்துவம் என்ற முறையில் பரம்பொருளுக்கும், ஒரு நபர் என்ற முறையில் பரம்பொருளுக்கும் இடையே உள்ள வேற்றுமை, அதாவது, கடவுள் எப்படி இருக்கிறாரோ அப்படிப்பட்ட கடவுளுக்கும், எப்படி இருப்பதாகத் தோன்றுகிறாரோ அப்படிப்பட்ட கடவுளுக்கும் இடையே உள்ள வேற்றுமை கருத்தளவில்தான் இருக்கிறது. அவ்விரண்டிற்கும் இடையே மூலாதாரமான வேற்றுமை இல்லை. எல்லாவற்றிற்கும் மேலான கடவுளின் மானசிகமான, உருவமற்ற அம்சத்தைப்பற்றி நாம் குறிப்பிடும்போது, அவரை நாம் பரம்பொருள் என்கிறோம். அவரைப் பேரானந்த உருவாக நாம் நினைக்கும்போது கடவுள் என்கிறோம். எனினும் உண்மையான கடவுள், உருவம் அல்லது அருவம் பற்றிய நமது கற்பனைகளுக்கெல்லாம் எட்டாதவராக இருக்கிறார். அவரை வர்ணிக்கவும், விளக்கவும் போதிய வார்த்தைகள் இல்லை என்ற நமது உணர்ச்சியைக் காட்டவே, நாம் அவரைப் பரம்பொருள் என்கிறோம். உலகத்தில் இருக்கும் எல்லாவற்றிற்கும் மூலகாரணம் அவர் என்பதையும், எல்லோருடைய லட்சியமும் அவர்தான் என்பதையும் காட்டவே நாம் அவரைக் கடவுள் என்று கூறுகிறோம். உருவம் என்பது ஓர் அடையாளமே யாகும் அந்த அடையாளத்தை நாம் அலட்சியம் செய்வோமாயின், நாம் உண்மையை அறிந்துகொள்ள முடியாது. உருவத்தை, உலகத்தின் இறுதியான நிலையாகக் கருதுவோர் கூட, கடவுள் எங்கும் வியாபித்தவர், மர்மமானவர், மகா சக்தி வாய்ந்தவர், இறுதியானவர் என்பதை அங்கீகரிக்கிறார்கள்."

முக்கியமாக, ஆன்மா கடைத்தேறுவதற்கான வழியையே கீதை காட்டுகிறது என்றாலும், எல்லாவிதமான மன நிலை உள்ளவர்களுக்கும், எல்லாவிதமான குணங்கள் உள்ளவர்களுக்கும் அதில் வழி காட்டப்பட்டிருக்கிறது. ஆனால், அந்த வழியைப் பின்பற்ற விரும்பும் பக்தர்கள், பரம்பொருளின் சக்தியையும், எல்லாவற்றிற்கும் மேலான, எங்கும் வியாபிக்கும் தன்மையையும் மறந்துவிடக் கூடாது. பரம்பொருளின் மேலான அம்சத்தை அறிந்து கொள்ளாமல் கண்களை மூடிக்கொள்ளுவோரைத்தான்

---

* மெத்யூ அர்னால்டு (1822—1888) மிகவும் புகழ்பெற்ற பிரிட்டிஷ் இலக்கியமேதைகளில் ஒருவர்.

மயக்கத்தில் ஆழ்ந்தவர்கள் என்று கீதை கூறுகிறது.* அவரவர்களுடைய குணங்களுக்கும், மனத் தூய்மைக்கும் தகுந்தவாறு பலனைக் கொடுப்பதாகவும் கீதை கூறுகிறது (கீதை, அத்தியாயம்-7, சுலோகம்-23 ; அத்தியாயம்-9, சுலோகம்-25). ''என்னுடைய பிதாவின் வீட்டில் ஏராளமான ஜாகைகள் இருக்கின்றன.''† அவற்றில் எல்லோருக்கும் இடம் இருக்கிறது.

## அவதாரம்

சில சந்தர்ப்பங்களில், உருவம் உள்ள கடவுள் மூலாதாரமான தேவையாக இருப்பதைப்பற்றி முந்திய பகுதியில் குறிப்பிட்டிருக்கிறேன். அது உண்மைக்கு முரண்பாடானது அல்ல என்பதையும் காட்டியிருக்கிறேன். அத்தகைய நம்பிக்கைக்கு ஆதாரமும் இருக்கிறது. கடவுள் அவதாரம் செய்கிறார் அல்லது மனித உருவத்தில் பூமிக்கு இறங்கி வருகிறார் என்பதே அந்த நம்பிக்கையாகும்.

கடவுள் அவதாரம் செய்கிறார் என்ற கொள்கை, அதன் சாரத்தைப் பொறுத்த அளவில் விசித்திரமானதோ அல்லது இந்தியாவிற்கு மாத்திரம் உரித்தான விந்தையோ அல்ல. அநேகமாக எல்லா மதங்களிலும் ஏதாவதொரு உருவத்தில் அக்கொள்கை அடங்கியிருக்கிறது. ஆனால், ஹிந்து மதத்தில் அது சில தெளிவான விசேஷ அம்சங்களுடன் விளங்குகின்றது. அக்கொள்கைக்கு மூலகாரணம் இதுதான் என்று தோன்றுகிறது: மனிதன் தனது சக்தியின்மையை உணர்ந்திருக்கிறான். அவனது சக்தியும் சாதனங்களும் மிகவும் அற்பமானவை. அவற்றைக் கொண்டு அவன் எல்லா நிலைமைகளையும் சமாளிக்க முடிவதில்லை. எனவே, விசேஷ சக்தியுடனும், எல்லையற்ற கருணையுடனும் கூடிய அமானுஷ்யமான ஏதாவதொன்று தலையிட்டு, அத்தகைய நிலைமைகளைச் சமாளித்துத் தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று அவன் எதிர்பார்க்கிறான். மோசே அல்லது கடவுளின் தூதரிடம் யூதர்கள் நம்பிக்கை வைத்தார்கள்.

---

नाहं प्रकाश : सर्वस्य योगमायासमावृत : ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥

* நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத:|
மூடோயம் நாபிஜானாதி லோகோ மாமஜமவ்யயம் ||

கீதை, அத்தியாயம்-7, சுலோகம்-25

இதன் பொருள்: யோக மாயையினால் நன்கு மறைக்கப்பட்டுள்ள நான் எல்லோருடைய அறிவுக்கும் எட்டுவதில்லை. பிறப்பும், அழிவும் இல்லாத என்னை இந்த மூட உலகம் அறிவதில்லை.

† இது பைபிளில் ஜான் 14-வது அத்தியாயத்தில் உள்ள இரண்டாவது வாக்கியமாகும்.

கடவுளின் குமாரரான ஏசு நாதரிடம் கிறிஸ்தவர்கள் நம்பிக்கை வைத்தார்கள். அவரும் கடவுளும் ஒன்று என்று பைபிள் கூறு கிறது: "நானும் எனது பிதாவும் ஒருவரே"* குரானில் விக்கிரக ஆராதனை பற்றியோ, மனிதனை ஆண்டவனின் அவ தாரம் என்பது பற்றியோ எதுவும் இல்லை. எனினும், தாம் எச்சரிக்கை செய்ய வந்திருப்பதாயும், தாம் சாதாரண தூதரே என்றும் நபி நாயகம் குரானில் அடிக்கடி கூறியுள்ளார். கடவுளின் ஏவுதலால் தம் மனத்தில் எழுகின்றதையே தாம் வெளியிடுவதாக அவர் வற்புறுத்திக் கூறுகிறார். "ஆண்டவனின் ஏவுதலால் என் மனத்தில் எழுவதையே நான் பிரகடனம் செய்து பின்பற்று கிறேன்" என்று நபி நாயகம் கூறினார். அவ்விதம் அவர் பிரகடனம் செய்தது, அவர் தெய்வத் தன்மை வாய்ந்தவர் என்று அவரது சீடர்கள் கூறும்படி செய்தது. தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்பதற்கும், கடவுளின் அவதாரம் என்பதற்கும் அதிக வேற்றுமை எதுவும் இல்லை. ஜைன முனிவரான அர்ஹத்தை ஜைனர்களும், புத்தரை பௌத்தர்களும் அவ்விதமே கருது கிறார்கள். ஆனால், ஒரு குறிப்பிட்ட மனிதரிடத்தில் கடவுளின் சக்தி பிரவேசிப்பதாக மற்றவர்கள் கூறுகின்றனர். தருமம் மறைந்து அதருமம் ஓங்கும் போது, கடவுள் பூமியில் இறங்கி மனி தனாக அவதாரம் எடுப்பதாக ஹிந்துக்கள் நம்புகின்றனர்.

அவதாரம் என்ற சொல்லுக்கு, கீழே இறங்குதல் என்றே பொருள். எனினும், பொதுவாக அவதாரம் என்று நாம் கூறும் போது, கடவுள் பூமியில் இறங்குவதைப் பற்றியே எண்ணு கிறோம். அவதாரம் என்ற நம்பிக்கையில் பல அம்சங்கள் உண்டு. கடவுள் மனிதனாக அவதாரம் செய்கிறார் என்ற நம் பிக்கை அவற்றில் ஒன்றாகும். மனிதனுக்குப் பாதுகாப்பும் விடுதலையும் அளிக்கும் அபூர்வ சக்தி வாய்ந்த ஒரு மனிதனும் மேற்கண்ட அவதாரமும் ஒன்று என்று நம்பலாம். ஆனால், அத் தகைய நிலை, கற்பனையை அடிப்படையாகக் கொண்ட நிலையா கும். எனினும், அதே நம்பிக்கை பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டிருக்குமாயின், மனிதன் உருவத்தில் கடவுள் வருகிறார் என்ற நம்பிக்கைக்கு இடம் இராது. ஆனால், இயற்கை விதி யின் மூலம் கடவுள் பிரபஞ்ச சம்பந்தமான தமது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளுகிறார் என்ற நம்பிக்கைக்கு இடம் உண்டு. அல்லது மனிதன் உலக பந்தங்களையெல்லாம் அடியோடு விட்டு விட்டு முற்றிலும் ஆன்மிக சம்பந்தமான அலுவல்களில் ஈடு பட்டோ அல்லது கடவுளிடத்தில் தன்னை அர்ப்பணம் செய்தோ தெய்வத்தன்மையை அடையலாம் என்ற நம்பிக்கைக்கும் இடம்

---

* ஏசுநாதர் கூறிய விவரங்கள் பைபிளில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கின்றன: "பிதாவை அடைவதற்கான வழி நான்தான், சத்தியமும், ஜீவனும் நானே. என் உதவியின்றி யாரும் பிதாவினிடம் வரமுடியாது. நான் பிதாவினிடத்தில் இருக்கிறேன். பிதா என்னிடத்தில் இருக்கிறார். நான் பிதாவினிடத்திலும், நீங்கள் என்னிடத்திலும், நான் உங்களிடத்திலும் இருக்கிறோம்."

இருக்கிறது. நம்மில் ஒவ்வொருவரிடத்திலும் தெய்வத் தன்மையின் பொறிபோன்ற மிகச் சிறிய அம்சம் இருப்பதால், நாம் எல்லோருமே கடவுளின் அவதாரங்கள்தான். இருந்தாலும், ஒவ்வொருவரையும் கடவுளின் அவதாரம் என்று கருதுவது அசாதாரணமானது. ஏனெனில், நம்மில் மிகப் பெரும்பாலோரிடத்திலும் சாதாரண மனிதத் தன்மையும் அழிவுறும் அம்சமும்தான் அதிக ஆதிக்கம் செலுத்துகின்றனவேயன்றி, தெய்வத்தன்மையும், அழிவற்ற அம்சமும் மேலோங்கி நிற்பதில்லை. இவ்விதம் வாதித்துக் கொண்டு போவோமாயின், மனித முயற்சியின் இறுதி நிலை, அவனும் அவனைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றும் கடவுளின் உருவமே என்பதை உணர்ந்து கொள்வதேயாகும்.

நான் ஏற்கனவே கூறியதைப் போல், அவதாரத்தில் உள்ள வெறும் நம்பிக்கையால் ஒருவருக்கு அதிக பலன் எதுவும் ஏற்பட்டுவிடாது. அது வெறும் மயக்கமாகவும், ஒரு மாய வலையாகவும் கூட முடியலாம். பலன் ஏற்பட வேண்டுமாயின், அந்த நம்பிக்கை பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கவேண்டும். இவ்விஷயத்தை ஸ்ரீமதி அண்டர்ஹில் மிகவும் அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார்:

''உலகத்தைப்போல் தனி நபரிடத்திலும் உள்ள ஆன்மா, உயர்ந்த நிலையை அடையவும், தெய்விகமான, குற்றம் குறையற்ற வாழ்க்கையை நடத்தவும், இறைவனின் தூய்மையான தன்மையைப் பெறவும் இடைவிடாது முயற்சித்து வருகிறது. உடலுக்குள் இருக்கும் இளம் கருவைப் போல் ஆன்மாவும், மானிட வர்க்கத்தின் ஆன்மிக வாழ்க்கைச் சரித்திரத்தில் மேல்நோக்கிச் செல்லும், அதாவது, உயர்ந்த நிலையை அடையும் முயற்சியைத் தொடர்ந்து வருகிறது. 'ஒரு ரகசியம், எல்லாவற்றையும் காட்டிலும் பெரிய ரகசியம், அவதாரத்தைப் பற்றிய சித்தாந்தம்தான். அது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த சரித்திர நிகழ்ச்சியாகக் கருதப்படவில்லை. ஆனால், தனது விதியை நிறைவேற்றுவதற்கான பாதையில் சென்றுகொண்டிருக்கும் ஒவ்வொருவருடைய உடலிலும் திரும்பத் திரும்ப நிகழும் ஒரு சம்பவமாகவே கருதப்படுகிறது' என்று பாட்மோர்* கூறுகிறார்.''

மகாபாரதத்தில் உள்ள அவதாரத்தில் அந்த நம்பிக்கையின் இரண்டு அம்சங்களையும் காண்கிறோம். ஆனால், புராணங்களிலோ வெனில், முற்றிலும் கற்பனையான அம்சத்துக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவதாரத்தில் உள்ள நம்பிக்கைக்கு வேதங்களிலோ அல்லது உபநிடதங்களிலோ ஆதாரம் கண்டு பிடிப்பது கஷ்டமாக இருக்கிறது. எனினும், அந்த நம்பிக்கைக்கு ஆதாரமாகவும் சாரமாகவும் வேதத்தில் பின்வரும் இரண்டே வாக்கியங்கள் இருக்கின்றன. ''உயிர்களுக்கெல்லாம் எஜமானரான கடவுள் கருப்பைகளில் சஞ்சரிக்

* காவென்ட்ரி பாட்மோர் (1823—1896) ஓர் ஆங்கிலக் கவி.

கிறார். அவர் பிறவாதவர் என்றாலும், பல வழிகளிலும் அவர் பிறக்கிறார். இதே கடவுள் ஒவ்வோரிடத்திலும் இருக்கிறார். அவர் முன்பு பிறந்தார். அவர் மீண்டும் பிறந்திருக்கிறார். அவர் முன்பு இருந்தார். இனி மீண்டும் பிறப்பார்" (வாஜஸனேய யஜுஸ் ஸம்ஹிதை *31. 19; 32. 4*). அவதாரக் கொள்கை சம்பந் தப்பட்டவரையில், பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட அம்சம் இதுதான்.

மகாபாரதத்தில், கற்பனை அம்சமும் பகுத்தறிவை அடிப் படையாகக் கொண்ட அம்சமும் போட்டி போட்டுக் கொண்டு செல்லுவதை நாம் காண்கிறோம். வீரரும் ராஜதந்திரியுமான கிருஷ்ணனை, பல இடங்களிலும் அவதாரமாகவே சித்திரிக்கப் பட்டிருக்கிறது; மற்ற இடங்களில் பிரபஞ்ச அம்சமும் வற்புறுத்தப் பட்டிருக்கிறது. துரோண பர்வத்தில் உள்ள ஓரிடத்தில் கிருஷ் ணன் சொல்லுகிறார்: "உங்களைப் பாதுகாப்பதற்காக நான் நான்கு உருவங்களில் எப்போதும் தயாராக இருந்துகொண்டி ருக்கிறேன். அந்த உருவங்களில் ஒன்று பூமியில் தவம் புரிகின் றது; தவறு செய்யும் மானிட வர்க்கத்தின் செயல்களை இரண்டா வது உருவம் கண்காணித்து வருகின்றது; மூன்றாவது உருவம், மனிதர்கள் அடங்கிய உலகை அடைந்து செயல்களில் ஈடுபட்டி ருக்கிறது; நான்காவது உருவம் ஆயிரம் வருட காலத்துக்கு தூக்கத்தில் ஆழ்ந்திருக்கிறது."*

கீதையில் கிருஷ்ணனை மனித அவதாரமாகவே குறிப்பிடப் பட்டிருக்கிறது. கிருஷ்ணனை, 'பகைவர்களைக் கொல்லுபவரே' என்றும் அர்ஜுனன் குறிப்பிடுகிறான். இருந்தாலும் கூட, அது பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட ஒரு கற்பனை என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். மற்ற அம்சங்களுடன்

---

चतुर्मूर्तिरहं शश्व ल्लोकत्राणार्थ मुद्यत: ।
आत्मानं प्रविभज्येह लोकानां हितमादधे ॥
एका मूर्तिस्तपश्चर्यां कुरुते मे भुवि स्थिता ।
अपरा पश्यति ज़गत् कुर्वाणं साध्वसाधुनी ॥
अपरा कुरुते कर्म मानुषं लोकमाश्रिता ।
शेते चतुर्थी त्वपरा निद्रां वर्षसहस्रिकीं ॥

भारत–द्रोणपर्व–२९–३२–३४

* சதுர் மூர்த்தி ரஹம் சச்வல் லோகத்ராணார்த்த முத்யத:|
ஆத்மானம் ப்ரவி பஜ்யேஹ லோகானும் ஹிதமாததே ||
ஏகா மூர்த்தி: தபச்சர்யாம் குருதே மே புவிஸ்திதா|
அபரா பச்யதி ஜகத் குர்வாணம் ஸாத்வஸாதுனீ ||
அபரா குருதே கர்ம மானுஷம் லோக மாச்ரிதா|
சேதே சதுர்த்தீ த்வபரா நித்ராம் வர்ஷ ஸஹஸ்ரிகீம் ||

பாரதம், துரோண பர்வம், அத்தியாயம்–29. சுலோகங்கள்–32-34

இந்த உண்மையும், கீதையையே மகாபாரதத்தின் சிகரமாகவும், முடிவான லட்சியமாகவும் செய்திருக்கிறது.

மனித வர்க்கத்தின் நன்மைக்காகவே தாம் மீண்டும் பிறப்ப தாக கிருஷ்ணன் சொல்லுகிறார். அவர் மேலும் இவ்வாறு கூறுகிறார்: ''என்னுடைய இந்த தெய்விகமான பிறப்பு, அலுவல்கள் ஆகியவற்றின் ரகசியத்தை யார் அறிகின்றாரோ அவன், என்னைவந்து அடைகிறான்'' (அத்தியாயம்–4. சுலோ கம்-9). இங்கே 'தெய்விகமான பிறப்பையும், அலுவல்களையும்' என்பதற்கு, கிருஷ்ணன் வீரராகவும், ராஜதந்திரியாகவும் விளங்கினார் என்பதோ அல்லது தெய்விக இடையனாக இருந்தார் என்பதோ அர்த்தமல்ல. அநீதியை எதிர்த்து நீதி பெறும் பிரபஞ்ச நடவடிக்கையையே அது குறிக்கிறது. அதாவது, ரகசி யத்தை அறிந்து கொள்ளுவதையும், வாழ்வது ஒருவருடைய விதியை நிறைவேற்றுவதற்காகவே என்பதையும், நமது வாழ்க் கையின் ஒவ்வொரு விநாடியிலும் அவதார தத்துவத்தை அனு பவிக்கிறோம் என்பதையுமே அது காட்டுகிறது. ''நான் தூங்காமல் இருப்பதுபோலவே நீயும் தூங்காமல் உன் கடமை யைச் செய்'' என்று மற்றோரிடத்தில் கிருஷ்ணன் கூறுகிறார் (அத்தியாயம்-3, சுலோகம்-23). ஒன்பதாவது அத்தியாயத்திலும் பகவானின் நடவடிக்கைகளைப்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவை, உலகங்களின் சிருஷ்டி, அழிவு முதலிய பிரபஞ்ச நட வடிக்கைகளே யாகும். பதினோராவது அத்தியாயத்தில் அவதா ரத்தின் உருவம் நமக்குக் காட்சி அளிக்கவில்லை; பிரளயகால அழிவில் ஈடுபட்டுள்ள தெய்விக சக்தியின் தோற்றத்தையே நாம் காண்கிறோம். இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் குறிப்பிடப் பட்டுள்ள நடவடிக்கைகள், மகாபாரதத்திலோ அல்லது பாகவ தத்திலோ விவரிக்கப்பட்டுள்ள் நடவடிக்கைகள்தான் என்று பாசாங்கு செய்வது வீண் வேலையாகும்.

''ஆன்மாவின் போக்கை நீ அறியாய். கர்ப்பிணியின் கருப் பையில் உள்ள குழந்தையின் எலும்புகள் எப்படி வளருகின்றன என்பதும் உனக்குத் தெரியாது. அதுபோலவே எல்லாவற் றையும் சிருஷ்டிக்கும் கடவுளின் அலுவல்களையும் நீ அறிந்து கொள்ள முடியாது'' என்று யூத தீர்க்கதரிசி கூறியுள்ளார்.

கிருஷ்ணனின் தெய்விகத் திருவிளையாடல்களை, பாகவதத் தின் ஆசிரியர் தாம் உணர்ந்தவாறு, தாம் கிருஷ்ணனைப் பார்த்த வாறு, இணையற்ற கவிதையில் அற்புதமாக வர்ணித்துள்ளார். ஆனால், அவர் கூட ஓர் எச்சரிக்கை விடுத்திருக்கிறார். அந்த எச்சரிக்கை, எக்காலத்திற்கும் உண்மையாகும்; எக்காலத் திற்கும் பொருந்தும்:

''ஈசுவரன் அல்லாத ஒருவர் அத்தகைய திருவிளையாடல்களில் ஈடுபடலாமென்று மனத்தினால் கூட நினைக்கக் கூடாது. ஈடு படலாமென்று எண்ணுவானாயின், அவன் சிவபிரானைப் பின்பற்றி

விஷத்தைக் குடிக்க முயற்சிப்பவனைப்போல் அழிந்து போவது நிச்சயம். தங்களைச் சூன்யமாகச் செய்து கொண்டவர்களுக்கு, நல்ல விதமாக நடந்து கொள்ளுவதால் யாதொரு லாபமும் ஏற்படாது; தீய வழியில் நடந்து கொள்ளுவதால் அபாயமும் ஏற்படாது. அப்படியிருக்க, பூமியிலும் சொர்க்கத்திலும் எல்லாவற்றிற்கும் கர்த்தாவாக விளங்கும் இறைவனுக்கு நல்லதைப் பற்றியோ அல்லது தீமையைப் பற்றியோ என்ன கவலை?''*

அவதாரத்தின் நடவடிக்கைகளைப்பற்றி ஒருவர் எதை நம்பினாலும், எதைக் கற்பனை செய்துகொண்டாலும், மேற்கண்ட வாக்கியங்களில் அவதாரத்தின் அர்த்தமும் நோக்கமும் ரத்தினச் சுருக்கமாக அடங்கியிருக்கின்றன. அதை பின்வருமாறு விளக்கிக் கூறலாம்: ''முதலில் ஈசுவரனாக, அதாவது கடவுளாக இரு. (ஆக்கவும், அழிக்கவும், பூமியிலும் சொர்க்கத்திலும் உள்ள எதையும் மாற்றவும் சக்தி உள்ளவரே கடவுள்); சிறிதும் பற்றற்ற அவரது மகோன்னதமான சிறப்பை சாதித்துக்கொள். அதன் பிறகும் உன்னிடத்தில் 'எனது' என்பதோ அல்லது 'விருப்பம்' என்பதோ மிஞ்சியிருக்குமாயின், உன் விருப்பம் போல் நீ நன்மையையோ அல்லது தீமையையோ செய்யலாம்.''

மூன்றாவது அத்தியாயம் 18-ஆவது சுலோகத்தின் அர்த்தமும், பதினெட்டாவது அத்தியாயத்தில் உள்ள கடினமான 17-ஆவது சுலோகத்தின் அர்த்தமும் அதுதான் என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்த சுலோகங்களைப்பற்றி பிறகு பரிசீலனை செய்ய நமக்குச் சந்தர்ப்பம் ஏற்படும். கீதையில் கிருஷ்ணன் கூறுவதாக கீதையின் ஆசிரியர் குறிப்பிடும் ஒவ்வொரு சுலோகத்திலும் உள்ள 'அவதாரம்' என்பது, நமக்கு போதிப்பது இது

---

नैतत्समाचरेज्जातु मनसापि ह्यनीश्वरः ।
विनश्यत्याचरन्मौढ्यात् यथा रुद्रोऽब्धिजं विषं ॥
कुशलाचरितेनैषां इह स्वार्थो न विद्यते ।
विपर्ययेण वाऽनर्थो निरहंकारिणां प्रभो ॥
किमुताखिल सत्वानां तिर्यङ् मर्त्यदिवौकसां ।
ईशितुश्चेशितव्यानां कुशलाकुशलान्वयः ॥

भागवतं–१०–३१–३३–३४

* நைதத் ஸமாசரேத் ஜாது மனஸாபி ஹ்யநீசுவர:|
விநச்யத்யாசரன் மௌட்யாத் யதா ருத்ராப்திஜம் விஷம்||
குசலா சரிதேனைஷாம் இஹஸ்வார்த்தோ ந வித்யதே|
விபர்யயேண வா நர்த்த: நிரஹங்காரிணாம் ப்ரபோ||
கிமுதாகில ஸத்வானாம் திர்யங் மர்த்ய திவௌகஸாம்|
ஈசிதுச் சேசி தவ்யானாம் குசலா குசலான்வய:||

—பாகவதம், ஸர்க்கம்–10, சுலோகங்கள்-31, 33, 34

தான்: "பலனில் பற்றுதலின்றி, தன்னைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் செயல் புரிவதன் மூலம் முற்றிலும் சுயத் தூய்மையை அடையவேண்டும்."

"சொர்க்கத்தில் உள்ள உங்களுடைய பிதா அப்பழுக்கின்றி இருப்பதுபோல், நீங்களும் அப்பழுக்கின்றி இருங்கள். நான் பரிசுத்தமாக இருப்பதைப்போல் நீங்களும் பரிசுத்தமாக இருங்கள்" என்றார் ஏசுநாதர்.

"என்னைப்போல் நீங்களும் கடமையைச் செய்வதில் தூங்காமல் இருங்கள்; என்னைப்போல் நீங்களும் எல்லோரையும் சமமாகக் கருதுங்கள். அப்படியானால் நீங்கள் என்னை வந்து அடைவீர்கள்" என்று கிருஷ்ண பகவான் கூறுகிறார்.

தன்னை அறவே 'சூன்யமாக்கிக்' கொண்டுவிட வேண்டும்; குற்றம் குறையற்ற மகோன்னதமான பற்றுதலின்மையுடன் திகழவேண்டும்; அப்பழுக்கின்றி இருக்கவேண்டும்-இவைதான் கீதையில் 'அவதாரம்' விதித்துள்ள சோதனைகளாகும். 'அவதாரம்' என்று நாம் யாரை அழைப்பதாக இருந்தாலும், அவர் அந்தச் சோதனைகளில் தேறியவராக இருக்கவேண்டும். அவதாரத்தின் நடவடிக்கைகளை நாம் அந்தச் சோதனைகளை அடிப்படையாகக் கொண்டே தீர்மானிக்க முடியும். நம்முடைய சொந்த வாழ்க்கையில் கடவுள் எவ்வளவு தூரம் இறங்கி வந்திருக்கிறார் என்பதை அந்தச் சோதனைகளால் மாத்திரமே நாம் கூற முடியும். அதற்கு வேறு சோதனைகள் எதுவும் இருக்கமுடியாது. அந்தச் சோதனைகள் என்ன என்பதையும், ஒரு மனிதன் குற்றம் குறையற்ற எத்தகைய நிறை நிலையை அடையவேண்டும் என்பதையும் எள்ளளவும் சந்தேகத்திற்கு இடமின்றி கீதை தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது. அதன் காரணமாகவே கீதை, நமது இலக்கியத்திலேயே தனிச் சிறப்பைப் பெற்றிருப்பதுடன், மகாபாரதத்தின் மகத்துவம் வாய்ந்த சிகரமாகவும் விளங்குகிறது.

கீதையின் மங்களாசரணத்தில் உள்ள அற்புதமான சுலோகம் கூறுவதைப்போல, "கீதை பாரதத்தின் பங்கஜமாக, அதாவது பாரத பூமியில் தோன்றிய அல்லது பாரத யுத்தம் நடந்த பூமியில் தோன்றிய தாமரை மலராக விளங்குகிறது. கீதையில் உள்ள கிருஷ்ணன் அல்லது அவதார மூர்த்தி, மனிதனின் களங்கமற்ற, குற்றம் குறையற்ற மகோன்னதமான லட்சியத்தின் திரு உருவமே யாவார்."

நாம் உருவத்துடன் கூடிய சூட்சுமமான கடவுளைப் பூஜித்தாலும், உருவத்துடன் கூடிய ஸ்தூலமான கடவுளைப் பூஜித்தாலும், அவரை அடைவதற்காகவே அவ்வாறு செய்கிறோம். "ஒரு கிறிஸ்தவாலயத்தில் பிறப்பது நல்லதுதான், ஆனால் அதில் இறப்பது நல்லதல்ல" என்று சுவாமி விவேகானந்தர் கூறுவது வழக்கம். அறவே எழுதப் படிக்கத் தெரியாத பக்தர் நரசிம்ம

மேத்தா, தமது வாழ்க்கையில் பெரும் பகுதியையும் தமது கற்பனையில் உள்ள அவதார மூர்த்தியைத் தோத்திரம் செய்வதிலேயே கழித்தார்; தம்மை மறந்து கிருஷ்ணனைப் பூஜை செய்வதிலேயே பேரானந்தம் கொண்டார். இறுதியாக அந்த நிலையைக் கடந்து, தமது ஆயுட் காலம் முடியும்வரையில் அவர் இறைவனின் மகத்துவத்தைக் குறித்து இணையற்ற கற்பனையுடன் கூடிய பாடல்களை இயற்றினர். "கருணைக் கடலான தேவா, உங்களை நான் எப்படி பூஜிப்பேன்? சிருஷ்டியில் உள்ள ஒவ்வோர் அணுவிலும் நீங்கள் வியாபித்திருக்கும்போது, உங்களை ஒரு விக்கிரகத்திற்குள் எப்படி அடைத்து வைப்பேன்? எண்ணெயோ அல்லது திரியோ எதுவுமின்றி உங்களுடைய நிரந்தரமான ஜோதி சுடர்விட்டு ஒளி வீசுவதை நான் காண்கிறேன். உருவமற்ற அதை கண்களின்றியே பார்க்க வேண்டும்; சூட்சுமமான புலன்களைக் கொண்டே அனுபவித்துப் பேரானந்தம் அடைய வேண்டும்" என்று அந்த பக்தர் பரவசம் அடைந்து பாடியிருக்கிறார்.

## லட்சியமும் வழிகளும்

பூமியில் மனிதனுடைய வாழ்க்கையின் இறுதி லட்சியத்தையும், அதை அடைவதற்கான வழிகளையும் குறிப்பிடுவதே கீதையின் நோக்கம் என்பதைக் காட்ட மேலே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் போதுமானவை. தான் யார் என்பதையும், தன்னைச் சுற்றியுள்ள உலகம் என்ன என்பதையும் முற்றிலும் அறிந்து கொள்ளுவதே மனிதனின் இறுதியான லட்சியம். தன்னை எது தாங்குகிறது, தன்னை எது வியாபித்திருக்கிறது, உலகத்தை எது தாங்குகிறது, உலகத்தை எது வியாபித்திருக்கிறது என்பதையும், அதுதான் சத்தியம் அல்லது உண்மை என்பதையும் அவன் அனுபவ பூர்வமாக அறிந்து கொள்ளவேண்டும்.

ஆன்மிகத் துறையில் பூரணமான பக்குவ நிலையை மனிதன் அடைந்த உடனேயே, அந்த உண்மையின் தோற்றத்தையும், அதனுடன் அவனது ஐக்கியத் தன்மையையும் அவன் காண்பான். இவ் விஷயத்தைக் குறித்து பிஷ்டே பின்வருமாறு கூறுகிறார்: "மனிதன் தூய்மையுடனும் பூரணமாகவும் தன்னைத்தானே சூன்யமாக்கிக் கொண்டுவிட்டால், பின்னர் மீதி இருப்பது கடவுள் ஒருவர்தான். எல்லாவற்றிலும் எல்லாமாக இருப்பது அவர்தான். மனிதன், தானே கடவுளை உற்பத்தி செய்துவிட முடியாது. அவன், தான் ஒன்றுமே இல்லை என்று தன்னை சூன்யமாக்கிக் கொள்ளலாம். அப்போதுதான் அவன் கடவுளிடத்தில் பிரவேசிக்கிறான்."

அதுதான், கீதையின் பாஷையில் பிரம்ம நிர்வாணம் ஆகும். 'அவன் என்னைக் காண்பான். என்னுள் பிரவேசிப்பான்', 'அவன் பிரம்மம் ஆவான்', 'எனது பிரகிருதியுடன் அவன் ஒன்றாகிவிடுவான்', 'அவன் பிரம்ம நிர்வாண நிலையை அடைவான்' என்றெல்லாம் கீதை சில அடைமொழிகளை உபயோகித்திருக்கிறது. பல்

வேறு கொள்கைகள் உள்ள வியாக்கியான பண்டிதர்கள், அவற்றிற்கெல்லாம் பல்வேறு விதமாக விளக்கம் கொடுத்திருக்கிறார்கள். அந்தச் சுழல்களில் நாம் சிக்கிக் கொள்ளாமல் இருப்போமாக. "அவன் இறைவனுள் பிரவேசிக்கிறான்" என்று பிஷ்டே கூறுவது, பிறப்பும் இறப்பும் உள்ள மனிதர்களாகிய நமக்கு உண்மையே ஆகும். அந்த நிலையை நாம் எட்டிப் பார்ப்பதற்கு எத்தனையோ நூற்றாண்டுகளைக் கடந்தாக வேண்டும். இப்போது நாம் அந்த நிலையை அடைவதற்கான வழிகளில் முழுமனத்தையும் செலுத்துவோமாயின், காலப் போக்கில் லட்சியம் தானாகவே நமக்குத் தென்படும்.

ஆனால், மறு பிறப்புக்கு நாம் நம்மைத் தயார் செய்து கொள்ள வேண்டும். இதை நாம் நினைவுபடுததிக் கொள்ள வேண்டும் செயலின் மூலம் நாம் கர்மவினை என்ற சுமைகளைக் களைந்து எறிய வேண்டும். உடலின் பந்தங்களிலிருந்து நாம் விடுதலை பெற வேண்டும். இவ்விஷயத்தை பாகவதம் மிகவும் அழகாகக் குறிப்பிட்டிருக்கிறது: "பொய்யான, பிறப்பும் இறப்பும் உள்ள இந்த உடலைக் கொண்டே மனிதன், உண்மையான, பிறப்பும் இறப்பும் இல்லாத என்னை அடைகிறான் என்பதுதான் அறிவாளிகளின் அறிவும், விவேகம் உள்ளவர்களின் ஞானமும் ஆகும்."

குணங்களை, நாம் நிர்க்குணத்தின் நிலைக்கு உயர்த்த வேண்டும்; பிரகிருதியின் விருப்பப்படி ஆடுவதை நாம் நிறுத்தவேண்டும்; ஆன்மாவின் விருப்பப்படி பிரகிருதியை ஆடும்படி நாம் செய்ய வேண்டும். சுருங்கக் கூறுவதாயின், உடலைச் சேர்ந்த புலன்கள் ஒவ்வொன்றும், ஆன்மாவைச் சேர்ந்த புலன்களாக மாற வேண்டும். அவை ஒவ்வொன்றும் ஆன்மாவுடன் நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். அவற்றிற்கு ஒளியும் உருவும் அளிப்பது ஆன்மாதான். இரும்பில் உள்ள ஒவ்வோர் அணுவும் நெருப்புடன் சம்பந்தப்படும் போது நெருப்பைப் போலவே மாறுவதைப் போல், எல்லாப் புலன்களும் ஆன்ம மயமாக வேண்டும்.

இந்த முறையை கீதை ஒரே சொல்லில் குறுப்பிட்டிருக்கிறது. அதுதான் 'யோகம்'. யோகத்தைப் பற்றிய பல்வேறு அம்சங்களையும் பின்வரும் விளக்கத்தில் பார்க்கலாம். இந்தப் புராதனமான சொல்லை கீதை நன்கு உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறது. சொர்க்கத்தின் கதவுகளைத் தாக்கி, அவை திறக்கும்படி செய்வதற்கு மனிதன் செய்யும் முயற்சிகள் யாவையும் 'யோகம்' என்ற சொல் குறிக்கிறது. 'யுஜ்' என்ற வினைச் சொல்லிலிருந்தே அந்த வார்த்தை உண்டாகியிருக்கிறது. அந்த வார்த்தைக்கு சேருதல், இணைத்தல், கட்டுதல், வழிகாட்டுதல், கவனத்தை ஒரே இடத்தில் செலுத்துதல், உபயோகித்தல், பிரயோகித்தல், வழங்குதல் ஆகிய பல அர்த்தங்கள் உண்டு. ஒழுங்கு அல்லது கட்டுப்பாடு என்ற அர்த்தத்திலேயே யோக சூத்திரங்களில் அந்த வார்த்தை உபயோகிக்கப்பட்டிருக்கிறது. உடல், மனம், ஆன்மா

ஆகியவற்றின் எல்லாச் சக்திகளையும் கடவுளுடன் இணைப்பது என்பதே அதன் அர்த்தமாகும். அறிவு, மனம், உணர்ச்சிகள், விருப்பம் முதலியவற்றைக் கட்டுதிட்டத்திற்கு உட்படுத்துவது என்பது அதன் பொருள். கடவுளுடன் இணைப்பதற்குப் பூர்வாங்கமாக, அத்தகைய கட்டுதிட்டம் தேவையாக இருக்கிறது. எதையும் சரிசமமாகக் கருதும் மன நிலை ஏற்பட வேண்டும் என்பது அந்த வார்த்தையின் அர்த்தமாகும். அப்படியானால்தான், வாழ்க்கையில் அதன் எல்லா அம்சங்களையும் சரி சமமான நோக்குடன் அணுக முடியும். அந்தக் குணங்கள் எல்லாம் வாழ்க்கையில் யாரிடம் பிரதிபலிக்கிறதோ, அவர்தான் யோகியாவார். யோகி, வாழ்க்கையின் உக்ரமான சூறாவளிக்கும் கொந்தளிக்கும் அலைகளுக்கும் மத்தியில் தனது லட்சிய நிலையில் தடுமாறாதவராக இருப்பார்; கஷ்டங்களையும், மரணத்தையும், தூக்கு மேடையையும் கண்டு அவர் மனம் கலங்கமாட்டார்; ''அவரது மனம் சாந்த நிலையில் இருப்பதால், இடி முழக்கம் கூட தாலாட்டைப் போலவே அவரைத் தூங்கச் செய்துவிடும்.''

பல்வேறு பொருள்கள் உள்ள வார்த்தையான யோகத்தை நாம் ஞான மார்க்கம் என்று கூறுவோமாயின், யோகியை நாம் ஞானி என்றே கூறவேண்டும். தத்துவ சிந்தனையில் ஈடுபட்டுள்ள ஞானியை கர்ம யோகி என்றும் கூறலாம். மேலும் ஞான யோகியைத் தியான யோகி என்றும், கர்ம யோகியைப் பக்தியோகி என்றும் கூறலாம். யோகிகளை இவ்விதம் இரண்டு பிரிவுகளாகப் பிரித்தாலும், இறுதியில் அவர்களுக்குள் ஐக்கியத்தன்மை இருப்பதையும் நாம் காண்போம்.

## மதி மயக்கம்

### ( அத்தியாயங்கள் - 1, 2. )

மகத்தான குருக்ஷேத்திரப் போர் தொடங்கும் தறுவாயில், மனிதர்களையும் சாதனங்களையும் பற்றிய தெள்ளிய வர்ணனையுடன் கீதை ஆரம்பமாகிறது. நல்ல வார்த்தைகள், சமரசப் பேச்சுகள் முதலிய எல்லா முறைகளும் எவ்வாறு கைக்கொள்ளப் பட்டுத் தோல்வி அடைந்தன என்பதை, மகாபாரதத்தின் ஆரம்ப அத்தியாயங்கள் காட்டுகின்றன. சண்டைக்காரர்களான கௌரவர்களுக்கு கிருஷ்ணன் நல்ல வார்த்தைகள் கூறி அவர்களுடன் சமரசம் செய்துகொள்ள முயற்சித்தார். ஆனால், அவரது முயற்சி வெற்றிபெறவில்லை. கௌரவர்களும், பெருந்தன்மையுடன் விட்டுக்கொடுக்கும்படி பாண்டவர்களைக் கேட்டுக் கொண்டார்கள். அவர்களும் தங்களுடைய முயற்சியில் தோல்வி

---

* இங்கே நான் கொடுத்துள்ள விளக்கமானது, சுலோகங்களுக்கு என் சொந்த பாஷையில் கொடுக்கப்பட்டுள்ள விரிவுரையே ஆகும். எனவே, அவ்விஷயமாக வாசகர்களுக்கு எந்த இடத்தில் சந்தேகம் ஏற்பட்டாலும், அவர்கள் மூலத்தைப் பார்த்துக் கொள்வார்களாக. சந்தேகம் ஏற்படும் இடங்களில் அவர்கள் எனது விளக்க உரையைத் தயக்கமின்றி நிராகரித்துவிடலாம்.

அடைந்தனர். பாண்டவர்களுக்குத் தாங்கள் தீங்கிழைத்து விட்டதை, கௌரவர்கள் ஒப்புக்கொண்டார்கள். இருந்தாலும், பாண்டவர்கள் அதைச் சட்டை செய்யாமல் பெருந்தன்மையுடன் நடந்துகொள்ளுவதால் அவர்களுக்கு யாதொரு தீங்கும் நேர்ந்து விடாது என்று வாதித்தார்கள். யுத்தம் ஏற்பட்டால், பாண்டவர்களும் கௌரவர்களும் அடங்கிய குரு வம்சமே அழிந்துவிடுவது நிச்சயம் என்றும், அந்தப் படுகொலைகளின் காரணமாக பாவத்தைத் தவிர வேறு எவ்வித பலனும் ஏற்படாது என்றும், மேலும் அதனால் அவர்களுடைய நற்பெயருக்குக் களங்கம் ஏற்பட்டு விடும் என்றும் கௌரவர்கள் கூறினர். சண்டைக்குக் காரணமானவர்கள் தாங்கள்தான் என்பதைத் தாங்களே ஒப்புக்கொண்ட கௌரவர்களின் போலி வேண்டுகோள், பாண்டவர்களின் மனத்தைக் கவரவில்லை. எனவே, சவால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த சம்பாஷணை, அந்த சமரசப் பேச்சுகளுக்கு முன் ஆரம்பமாகவில்லை; சமரசப் பேச்சுகள் முடியும் தறுவாயில் கூட ஆரம்பமாக வில்லை. ஆனால், வில் வித்தையில் புகழ்பெற்ற தீரனும், அதற்குமுன் எத்தனையோ போர்களில் வெற்றி பெற்ற வீரனுமான அர்ஜுனன் உள்பட எல்லோரும் யுத்தப் பிரகடனத்தை அங்கீகரித்த பிறகுதான் அந்த சம்பாஷணை ஆரம்பமாகிறது. வேறு யாரும் அல்ல, கிருஷ்ணபகவானே, அர்ஜுனனின் சாரதியாக இருக்கிறார். அர்ஜுனன் வற்புறுத்தி அழைத்ததற்கிணங்கவே, அவர் சாரதியாக வருகிறார்.

இரு கட்சிகளிலும் உள்ள புகழ்பெற்றபோர் வீரர்கள் தங்கள் தங்களுடைய ரதங்களில் இருக்கிறார்கள். அவர்கள் சங்க நாதமும் செய்துவிட்டார்கள். நாசகரமான பாணங்கள் பறக்க வேண்டியதுதான் பாக்கி. இந்தக் கடைசி நேரத்தில்தான், அர்ஜுனனை மனவேதனை பற்றிக்கொள்ளுகிறது. பூஜ்யர்களான ஆசாரியர்கள், மூத்தவர்கள், பாட்டன்மார், புதல்வர்கள், பேரன்மார் எல்லோரும் ஒருவரை யொருவர் படுகொலை செய்வதற்காகக் கூடியிருக்கும் காட்சியைக் கண்டதும், அர்ஜுனனின் இருதயமே நின்றுவிடும்போல் இருக்கிறது. ஸ்தூல யுத்தத்தின், தார்மிக யுத்தத்தின், ஆன்மிக யுத்தத்தின் பயங்கரமான நாச வேலைகள் அவனது மனக் கண்முன் காட்சி அளிக்கின்றன. எனவே, அவன் முற்றிலும் மனம் உடைந்து, வில்லையும் அம்பையும் அப்பால் எறிந்துவிட்டுக் கீழே உட்கார்ந்துவிடுகிறான். அவனது கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிகின்றது. இருந்தாலும், அவனது நிலையைக் கண்டு கிருஷ்ணனின் மனம் இளகவில்லை. மன உறுதியற்ற ஒரு கோழையைப் போல் அவன் நடந்துகொள்ளுவதாயும், அத்தகைய நிலை ஓர் ஆரியனுக்கு உகந்ததல்ல என்றும் கிருஷ்ணன் அவனைக் கடிந்துகொள்கிறார். எனினும், அர்ஜுனன் துக்கம் தாங்க முடியாமல் புலம்பும் ஒருவனைப்போல் திரும்பவும் இவ்விதம் கூறுகிறான்: "என் சொந்த உற்றார் உறவினரைக் கொல்லுவதால் எவ்வித நன்மையும் ஏற்படும் என்று

எனக்குத் தோன்றவில்லை. நமக்கு எது நன்மை என்பதும் தெரியவில்லை. நாம் அவர்களை ஜயிப்பது நன்மையா? அல்லது அவர்கள் நம்மை ஜயிப்பது நன்மையா? யாரைக் கொன்றுவிட்டு நாம் உயிர் வாழ விரும்பவில்லையோ, அந்த திருதராஷ்டிரக் கூட்டத்தினர் எதிரில் வந்து நிற்கிறார்கள்.'' அவநம்பிக்கைக்கும் சந்தேகத்திற்கும் இடையே அவன் ஊசலாடுகிறான். ஒளியையும், வழியையும் காட்டும்படி பணிவுள்ள ஒரு சீடனைப் போல் கிருஷ்ணனை வேண்டிக்கொள்கிறான் (அத்தியாயம்-1 சுலோகங்கள் 1-47; அத்தியாயம் 2-சுலோகங்கள், 1-10).

ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் உள்ள கோரமான நிலைமைகளைப் பற்றி நான் ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். 'ஜான் மன்னன்' நாடகத்திலிருந்து ஏற்கனவே நான் மேற்கோளாகக் கொடுத்த பகுதியில்* பிளாஞ்ச் சீமாட்டியின் நிலைமை விவரிக்கப் பட்டிருக்கிறது. எனினும், அர்ஜுனனின் நிலைமைக்கும் அச் சீமாட்டியின் நிலைமைக்கும் வேற்றுமை உண்டு. தார்மிக சம்பந்தமாகவும், ஆன்மிக சம்பந்தமாகவும் அந்தச் சீமாட்டியைக் காட்டிலும் அர்ஜுனன் அதிக சங்கடமான நிலையில் இருந்தான். எனினும், ஒரு விஷயத்தில் இருவருடைய நிலைமையும் ஒரேவிதமாக இருக்கிறது. அவ்விருவருடைய மனத்திலும், 'என்னுடையது,' 'ஒருவருக்குச் சொந்தம்,' 'மற்றொருவருக்குச் சொந்தம்' என்ற எண்ணமானது ஊடுருவியிருக்கிறது. சீமாட்டியைக் காட்டிலும் கூட அர்ஜுனனின் நிலைமை இன்னும் அதிக மோசமானதாக இருக்கிறது. அர்ஜுனனின் பேச்சு, தன்னலம் சிறிதும் இராத ஒருவன் பேசுவது போல் தோன்றுகிறது. பகைவர்கள் யாவரும், எல்லோரும் அறிய பாதகம் செய்தவர்கள் என்பதுபற்றி அர்ஜுனனின் மனத்தில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவர்கள் உறவினர்களாக இராமல் மற்றவர்களாக இருந்திருந்தால், அவனது 'புரட்சிக்கு' மனம் ஒரு விநாடிகூட இடம் கொடுத்திராது. கொடிய செயலைப் புரிய புரூடஸின்† அந்தராத்மா விரும்பவில்லை. அதற்குமுன் அத்தகைய பயங்கரமான செயலில் அவன் ஈடுபட்டதும் இல்லை. ஆனால், அர்ஜுனனைப் பொறுத்த மட்டில் அது ஒரு பயங்கரமான செயல் அல்ல. ஏனெனில், ஒரு க்ஷத்திரியன் என்ற முறையில் அவன் அதற்கு முன் எத்தனையோ தடவை பயங்கரமான செயல்களைப் புரிந்தான்; அதாவது, போர்

---

* மேற்கண்ட பகுதி 169-ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

† ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களில் 'ஜூலியஸ் ஸீஸர்' நாடகமும் புகழ் பெற்றது. அதில் வரும் ஒரு முக்கிய பாத்திரமே புரூடஸ். ரோம் தலைவனாக விளங்கிய ஸீஸரைக் கொன்ற சதிகாரர்களில் முக்கியமானவனும் புரூடஸே. தனக்கு ஜூலியஸ் ஸீஸர் நெருங்கிய நண்பனாயினும், தனக்கு அவன்மீது மிகுந்த அன்பு உண்டு என்றாலும், தான் ஸீஸரைக் காட்டிலும் நாட்டை அதிகமாக நேசித்ததாகவும், எனவே, நாட்டின் நலனை உன்னியே நெருங்கிய நண்பனான ஸீஸரைக் கொன்றதாயும் கூறுகிறான். அவனது மனப்போராட்டம் மேற்கண்ட நாடகத்தில் அற்புதமாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறது.

களில் ஈடுபட்டான். ஆனல், தன் உறவினர்களைப் போரில் கொல்ல வேண்டியிருக்குமே என்ற எண்ணம்தான் அவனுக்கு பயங்கரமாக இருந்தது.

இங்கே மற்ருெரு விஷயத்தையும் கவனிக்க வேண்டும். அர்ஜுனனுடைய மனத்தின் முன் காட்சியளித்த மாயத் தோற்றங்கள் அவனே சிருஷ்டித்துக் கொண்டவை அல்ல. ஏற்கனவே நான் குறிப்பிட்டிருப்பது போல் இவ்விஷயமாக, மகாபாரத காவியத்தின் முந்திய அத்தியாயங்கள் நமக்குக் கூறுகின்றன. அதாவது, வயோதிக மன்னனை திருதராஷ்டிரன், பாண்டவர்களை யுத்தத்தில் ஈடுபடாமல் தவிர்ப்பதற்காகப் பல்வேறு முறைகளைக் கைக்கொண்டு முயற்சி செய்து பார்த்தான். அவ்விஷயமாக திருதராஷ்டிரன் கூறிய வாதங்களையே அர்ஜுனன் முதலாவது, இரண்டாவது அத்தியாயங்களில் உபயோகித்திருக்கிருன். உண்மையில், திருதராஷ்டிரனின் தூதனை சஞ்சயன் பாண்டவர்களிடம் கூறிய அதே வார்த்தைகளையே அர்ஜுனன் கிருஷ்ணனிடம் திரும்பக் கூறுகிருன். தூதனை சஞ்சயன் வேறு யாரும் அல்ல. கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையை திருதராஷ்டிரனிடம் இப்போது விவரித்துவரும் சஞ்சயன்தான். அதனல்தான் கிருஷ்ணன் அர்ஜுனனுடைய வாதங்களை உதறித் தள்ளி விடுகிருர். "ஞானியைப் போல் பேசுகின்ருய்" என்றும் அவனை இடித்துக் காட்டுகிருர் (அத்தியாயம்-2, சுலோகம்-11). அர்ஜுனனுக்கு ஏற்பட்ட இரக்க உணர்ச்சி காரணமாகவே அவன் மனத்தில் மேலெழுந்தவாரியான கொந்தளிப்பு உண்டாயிற்று. திருதராஷ்டிரனின் பயங்கரமான வர்ணனையின் விளைவாக அவன் மனத்தில் கொந்தளிப்பு ஏற்பட்டதேயன்றி, யுத்தத்தில் அவனுக்கு உண்டான வெறுப்பு, ஆன்மிகச் சிறப்பு வாய்ந்த அவனது இருதயத்தின் ஆழத்திலிருந்தோ அல்லது சந்தேகமில்லாத நிச்சய புத்தியினலோ ஏற்பட்டதல்ல. சகோதரர்களுக்குள் ஏற்படும் யுத்தத்தினல் விளையக்கூடிய பயங்கரமான விளைவுகளை விவரிப்பதெல்லாம் சரிதான். எனினும், அது பகட்டு ஞானம் அல்லவா? யுத்த உணர்ச்சி அர்ஜுனனின் ரத்தத்தில் ஊறிக்கிடக்கும் ஓர் உண்மையாகும். இதை அர்ஜுனனின் ஆலோசகரும், சாரதியுமான கிருஷ்ணன், எல்லோரையும் விட நன்கு அறிவார். பார்த்தனின் சாரதி, அவனது யுத்த ரதத்தின் சாரதிமாத்திரமல்ல, அவனது மன ரதத்தின் சாரதியும் ஆவார். அதனல்தான் கீதையின் இறுதியில் கிருஷ்ணன் தமது வாதங்களின் சாரத்தைச் சுருக்கமாகக் கூறுகிருர். அவரது வார்த்தைகள் தீர்க்கதரிசனமாகவும், கண்டிப்பான கட்டளையாகவும் அமைகின்றன: "'நான்' என்ற அகங்கார உணர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்டு 'நான் போர் புரியமாட்டேன்' என்று நீ எண்ணுவாயானல், உன் அகங்காரம் வீணகவே முடியும். ஏனெனில், உனது இயல்பு நீ போர் புரியும்படி உன்னை வற்புறுத்திவிடும்" (அத்தியாயம்-18, சுலோகம்-59).

ஆன்மாவுக்கும் ஆன்மா அல்லாததற்கும் இடையே உள்ள இந்த வேற்றுமையை, முதன் முதலாக உபநிடதங்களின் பாஷையில் அர்ஜுனனின் மனத்தில் பதியும்படி செய்பவர் கிருஷ்ணன் தான். திருதராஷ்டிரனின் போலி வாதங்கள் அர்ஜுனனின் மனத்தை பாதித்துள்ளன. ஆன்மா அல்லாததை ஆன்மாவுடனும், அழியும் தன்மையுள்ளதை அழியாத பொருளுடனும், வெறும் தோற்றத்தை உண்மைப் பொருளுடனும், என்றுமே இல்லாததை நிரந்தரமாக இருப்பதுடனும் இணைத்து, அவற்றை ஒன்றாகக் கருதுகிறான். அப்போதுதான் கிருஷ்ணன் பின்வருமாறு கூறுகிறார்: "நிரந்தரமாக இராத உடல்களில் வாழும் அழிவற்ற ஆன்மாவே உலகம் முழுவதும் வியாபித்து நிற்கின்றது. அந்த ஆன்மாவை, எந்த ஆயுதங்களாலும் காயப்படுத்த முடியாது, எந்த நெருப்பினாலும் எரிக்க முடியாது, எந்தத் தண்ணீராலும் நனைக்க முடியாது. எந்தக் காற்றினாலும் உலர்ந்து போகும்படி செய்ய முடியாது. அந்த நிரந்தரமான, அழிவற்ற ஆன்மாதான் நீ. அர்ஜுனா, ஆன்மாவுக்கு, இந்த உடல் எப்போதும் மாறிக்கொண்டிருக்கும், எப்போதும் அழிந்து கொண்டிருக்கும் துணியைப் போன்றதே. அழியும் பொருளை அழியாத பொருளுடன் இணைத்து, அவ்விரண்டையும் ஒன்றாக நினைப்பதால்தான், 'என்னுடையது', 'உன்னுடையது' என்ற வீண் பிரமை ஏற்படுகிறது. உன்னுடைய உறவினர்களையும், பூஜ்யர்களான உன்னுடைய ஆசாரியர்களையும் கொல்லுவதற்கு நீ காரணமாக இருப்பாய் என்று நீ கூறும் போது, உன்னிடத்திலும் என்னிடத்திலும் வாழும் ஆன்மாவைப்போல், அர்ஜுனன், துரியோதனன், பீஷ்மன், துரோணன் முதலியோருடைய உடல்களிலும் இருக்கும் ஆன்மா அழிவற்றது என்பதை நீ மறந்துவிடுகிறாய். உஷ்ணத்தினாலும் குளிராலும், இன்பத்தினாலும் துன்பத்தினாலும் அந்த ஆன்மா பாதிக்கப்படுவதில்லை என்பதையும் நீ மறந்து விடுகிறாய். உடலில் உனக்குள்ள பற்றும் அதிலிருந்து உண்டாகும் உறவு உணர்ச்சியும்தான், மரணத்தைப்பற்றியும், அழிந்து தீரவேண்டிய பொருட்கள் அழிவதைப்பற்றியும் நீ புலம்பும்படி செய்கின்றன" (அத்தியாயம் - 2, சுலோகங்கள் - *12–30*).

மேற்கண்ட வாதம், அர்ஜுனனின் சந்தேகங்களைத் தீர்த்து, அவனுக்கு மன அமைதியை உண்டாக்கவில்லை. இருந்தாலும் அந்த வாதம் அவனது மனக்கொந்தளிப்பை அடக்கி, அர்த்தமற்ற துக்கத்தை உதறித் தள்ளும்படி செய்கிறது; அவனது மனம் ஏன் அவ்விதம் நிலை குலைந்துவிட்டது என்பதைப்பற்றி தீவிரமாகச் சிந்திக்கும்படி வற்புறுத்துகிறது.

ஏற்கனவே அவன் பல யுத்தங்களில் போர் புரிந்திருக்கிறான். அப்போதெல்லாம், தான் யாரைக் கொல்லுகிறோம் என்பதைப் பற்றி அவன் சிந்திக்க முற்பட்டதில்லை; கொல்லுவது 'பாவம்' என்ற எண்ணம் அவனை ஆட்கொண்டதில்லை. அப்போதெல்லாம் யுத்தம் செய்வது, தனது கடமையின் ஒரு பகுதி என்று

கருதினன்; அன்ருடம் செய்ய வேண்டிய வேலை என்று நினைத்தான். ஒருவேளை தான் வீரன் என்பதைக் காட்டவேண்டும் என்ற எண்ணமும் அவனுக்கு ஏற்பட்டிருக்கலாம். பெயரும் புகழும் பெற்று விளங்க வேண்டும் என்ற ஆர்வத்தால் அவன் அந்த யுத்தங்களில் ஈடுபட்டிருக்கலாம். அல்லது, தன்னை மீறிய ஆத்திரம் காரணமாகவும் அவன் போர் செய்திருக்கலாம். போர் செய்வதே க்ஷத்திரியனின் கடமை என்பதை கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு நினைவூட்டியபோது, அந்த வாதத்திற்கு அர்ஜுனனல் பதில் கூறவே முடியாமற் போய்விட்டது. அவன் பிறவி எடுத்ததே அதற்காகத்தான். அந்தக் கடமையை நிறைவேற்றுவதன் மூலம்தான், அவன் புகழையும், பெருமையையும், சொர்க்கத்தையும் அடைய முடியுமேயன்றி, அதிலிருந்து ஓடிவிடுவதன் மூலம் அடைய முடியாது என்பதை, கிருஷ்ணன் அவனுக்கு ஞாபகப்படுத்துகிருர். (அத்தியாயம்-2, சுலோகங்கள்-31-37). அர்ஜுனன் தன்னைத் தானே அறிந்துகொண்டிருந்ததைக் காட்டிலும். கிருஷ்ணன் அவனை நன்கு அறிந்து கொண்டிருந்தார்.

அர்ஜுனன், கிருஷ்ணனை பின்வருமாறு கேட்டிருந்தால் நன்ருக இருந்திருக்கும்:

''ஆன்மா அழிவில்லாதது எனில், ஆன்மா கொல்லுவதில்லை எனில், ஆன்மா செயல் புரிவதில்லை எனில், இந்த பலாத்காரமான நடவடிக்கையில் நான் ஏன் ஈடுபட வேண்டும்?''

எனினும், கிருஷ்ணனின் சரமாரியான வாதத்தில் அவன் குறுக்கிடவில்லை. அர்ஜுனன் இவ்விதம் கூடக் கேட்டிருக்கலாம்: ''உயர்ந்த சிந்தனைகளைப் புறக்கணித்துவிட்டு, புகழும் பெருமையும் உண்டாக வேண்டும், வீரப் பிரதாபத்தைக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தினுல் தூண்டப்பட்டு முன்பெல்லாம் போரிட்டது போல் இப்போதும் நான் யுத்தம் செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா?'' எனினும், அந்தக் கேள்விக்கும் இடம் இராமற் போய்விடுகிறது. அர்ஜுனனுக்கு ஆண்மை ஏற்படும்படி செய்தாகிவிட்டது என்பதை கிருஷ்ணன் உணர்ந்த உடனேயே, அவர் அர்ஜுனனுடைய இயல்பின் உயர்ந்த அம்சத்திற்குப் பொருத்தமான சீரிய வாதத்தில் ஈடுபட்டுவிடுகிருர்: ''லாபம் - நஷ்டம், வெற்றி-தோல்வி எல்லாவற்றையும் சமமாகக் கருதி, உன் கடமையைச் செய்வதில் தீவிரமாக ஈடுபடு. அவ்விதமாயின், உன்னை எத்தகைய பாவமும் அணுகாது.'' அது, வாழ்க்கைக் கலையான யோகத்திற்கு இட்டுச் செல்லுகிறது. சாங்கிய முறைப்படி ஞானத்தை விளக்கியாகிவிட்டது. இதைப் பின்பற்றி இப்போது கலை வருகின்றது. (அத்தியாயம்-2, சுலோகங்கள்-38, 39). ''அறியாமையிலிருந்தே பாவம் உண்டாகின்றது. மனிதன் அறியாமையினுல் செயல்கள் புரிந்து வரும்வரையில், அவன் புதிதுபுதிதாக அடிமைச் சங்கிலிகளால் கட்டுண்டுவிடுகிருன். ஏற்கனவே, நீயும் அவ்விதம் செய்திருக்கிருய். அவ்வாறு செய்வதை இப்போதிருந்து நீ நிறுத்திவிடவேண்டும் என்பதே என் விருப்பம். பற்றுதல், அறியாமையின் சாரமேயாகும். பற்றுதலை வெட்டி எறிந்துவிட்

டால், அறியாமையையும் வெட்டி எறிந்தவனாகிறாய். முன்பு 'நான்' என்ற உணர்ச்சியுடன் நீ போர் புரிவது வழக்கமாக இருந்தது. பெயர், புகழ், வெகுமதி ஆகிய மற்ற பலன்களிலும் பற்றுதலுடன் நீ யுத்தம் செய்துவந்தாய். இன்றோ, வேறு எண்ணம் காரணமாக உனக்குப் பற்றுதல் ஏற்பட்டிருக்கிறது. ஆயினும், இதுவும் பற்றுதலும் அறியாமையுமே ஆகும். அவற்றை உதறித் தள்ளிவிடு. செயல் மாத்திரமே உனது பொறுப்பாக இருக்க வேண்டும்; அதன் பலன் அல்ல. பலனைப் பற்றிய சிந்தனையை யெல்லாம் மறந்துவிட்டு, போர் செய். இவ்விதம் பலனை மறப்பது தான், இவ்விதம் 'நான்' என்ற உணர்ச்சியைக் கைவிட்டு பற்றற்று இருப்பதுதான், இவ்விதம் வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கருதுவதுதான், யோகம் ஆகும். உண்மையில் பலனில் அக்கறை காட்டாமல் இருப்பதில்தான் வெற்றியின் ரகசியம் அடங்கி யிருக்கிறது. திறமையுடன் செயல் புரிவதே யோகம். இதில் முயற்சி வீணாவது, பின்வாங்குவது என்பதில்லை. அற்ப செயல் கூட மனிதனின் கணக்கில் சேர்த்துக் கொள்ளப் படுகிறது. வேதச் சடங்கினால் விதிக்கப்பட்டுள்ள வழி, அடிச் சுவட்டினால் தேய்ந்த பாதையைப் போன்றது. அது மனிதரின் மனத்தில், பல்வேறு வெகுமதிகள் கிடைக்கும் என்ற நம்பிக் கையை உண்டாக்குகிறது. உலகத்தின் போக்கு அதுதான். மூன்று குணங்களால் உலகம் நிரந்தரமாக இயங்கப்பட்டு வருகிறது. மனிதரின் மனம், உலக ஆசைகளுக்கு இலக்காகி நங்கூரமின்றி ஊசலாடி வருகிறது. சொர்க்கத்தைப்பற்றியும், மற்ற உயர்ந்த பலன்களைப் பற்றியும் உனக்கு எடுத்துக் கூறு வோரை நம்பாதே. வெற்றி, லாபம், சொர்க்கம், மறுபிறப்பில் இன்பம் போன்ற பலன்களைத் துச்சமாக நினைத்து அவற்றி லிருந்து விலகிச் செல்வோரே, பிறப்பு, இறப்பாகிய சுழலிலிருந்து விடுதலை பெற முடியும். நீ, உலகத்தை அனுசரித்து நடந்து கொள்ளவேண்டாம். ஏனெனில், உலகம் துன்ப மயமானது. இருமைகளிலிருந்தும், வெற்றி அல்லது தோல்வியைப் பற்றிய கவலையிலிருந்தும் விடுதலை பெற்று, ஆன்மாவில் புத்தியைச் செலுத்து. ஆன்மாவின் மகத்துவத்தை அறிந்தவர்கள், ஆன் மாவை அனுசரித்து நடந்து கொள்வார்களேயன்றி, உலகத்தை அனுசரித்து நடந்துகொள்ள மாட்டார்கள். தங்களைச் சுற்றி தண்ணீர் வெள்ளமாக இருக்கும்போது மக்கள் கிணற்றை எவ்விதம் நாடமாட்டார்களோ அது போலவே, ஆன்மாவின் மகத்துவத்தை அறிந்தவர்களுக்கு, வேதத்தில் கூறப்பட்டுள்ள சடங்குகளால் யாதொரு பலனும் இல்லை. சடங்குகளில் புத்தி யைச் செலுத்துவோரின் சிந்தனை, புண்ணியத்திலும் பாவத்தி லுமே ஈடுபட்டிருக்கும். யோக மார்க்கம்தான் ஒருவரை புண்ணி யத்திலோ, பாவத்திலோ சிக்கிக்கொள்ளாமல், உடல் சம்பந்த மான துன்பங்களும் அறவே இல்லாத சொர்க்கத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும். ஆகையால், மதிமயக்கமாகிய சேற்றைக் கடந்து செல்வாயாக" (அத்தியாயம்-2, சுலோகங்கள் 40-53).

அர்ஜுனன் கூட யோகத்தைப் பற்றி அதற்கு முன் அநேக மாகக் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனல், இப்போது அவன், அதை ஒரு புதிய கோணத்தில் காண்கிருன். எல்லாவிதமான பலன்களை யும், எல்லாவிதமான பற்றுதல்களையும் மறப்பதே யோகத்தின் அர்த்தம் எனில், கீழ்த்தரமான பிரகிருதியிலிருந்து விலகி, மகோன்னதமான ஆன்மாவுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். அதாவது, ஒருவர் நிரந்தரமல்லாத திலிருந்து தம்மைத் தாமே விலக்கிக் கொண்டு, நிரந்தரமாக இருப்பதுடன் தம்மைத்தாமே இணைத்துக் கொள்ள வேண்டும். எனினும், ஆன்மா நிரந்தரமற்ற இடத்தில், அதாவது உடலில் இருக் கும் வரையில், அதிலிருந்து ஒருவர் தானே விலகிக் கொள்ள முடி யாது. ஆனல், உடலைத் தூய்மையாக்கிக் கொள்ளுவதன் மூலம், அதை ஆன்மிகச் சிறப்பு வாய்ந்ததாகச் செய்வதன் மூலம், ஆன்மா வுடன் ஆன்மா அல்லாதது இணைந்து வேலைசெய்யும்படி பார்த் துக்கொள்ளுவதன் மூலம், அவ்வாறு விலகிக் கொள்ளலாம். அவ் வாருக, யோகம் ஏக காலத்தில் லட்சியமாகவும், அந்த லட்சி யத்தை அடைவதற்கான வழியாகவும் இருக்கிறது.

இந்த யோகத்தில் சித்தி பெற்றவர்கள் இருந்திருக்கிருர் களா? அதை அறிந்து கொள்ள அர்ஜுனன் விரும்புகிருன். அத்த கைய யோகியின் நிலையை கிருஷ்ணன் இப்போது வர்ணிக்கிருர்:

புலன்களின் சாதனங்களில் பற்றற்ற யோகி, அச்சம், கோபம், வஞ்சம், விருப்பு வெறுப்புகள், இன்பம், துன்பம் ஆகிய வற்றிலிருந்து விடுதலை பெற்றவனுகை இருக்கிருன். மனிதன், பாது காப்பைப் பெறுவதற்கு மிகவும் முக்கியமான வழி என்னவெனில், புலன்களுக்குக் கடிவாளம் போட்டு அவற்றைக் கட்டுப்படுத்து வதுதான். அவற்றைக் கட்டுப்படுத்தி வைக்காவிடில், அவை மகா புத்திசாலிகளையும் பாதாளத்தில் கொண்டு போய் வீழ்த்திவிடும். மனத்தைக் கட்டுப்படுத்தாமல் புலன்களை மாத்திரம் கட்டுப் படுத்துவதால், தற்காலிகமான பலனே ஏற்படும். எல்லாவற்றிற் கும் மேலான பரம்பொருளை உணர்ந்து மனத்தைத் திரியவிடா மல் கட்டுப்படுத்துபவனுக்கே, பாதுகாப்பு ஏற்பட முடியும். இது ஒரு புதிர் போல் இருக்கிறது அல்லவா? எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை அறிவதற்கே மனிதன் பெருமுயற்சி செய்ய வேண்டும் என்று கூறப்படுகிறது. எனினும், உலகாயத மான ஆசையும் ஆர்வமும் ஒழியும்படி செய்வதற்கு முன், எல்லா வற்றிற்கும் மேலான பரம்பொருளை அறிந்துகொள்ள வேண்டும் என்றும் கூறப்படுகிறது! இது ஒரு புதிர் போலவே தோன்று கிறது. ஆனல், இது புதிர் அல்ல. ஏனெனில், ஒவ்வொருவ ரிடத்திலும் பரம்பொருளைப் பற்றிய உணர்வு இளமையான கரு உருவில் இருந்துவருகிறது. சுயத் தூய்மையை அடைவதற்கான முயற்சி ஆரம்பமானதும், பரம்பொருளைப் பற்றி எதிர்காலத்தில் ஏற்படப்போகும் பூரண அறிவானது, நாம் செல்ல வேண்டிய பாதையில் ஒளி வீசி நமக்கு உதவியாக இருக்கிறது (அத்தியா யம்-2, சுலோகங்கள் 54–61).

அழிவு ஏணியின் ஒவ்வொரு படியையும் பற்றி கீதை குறிப்பிட்டிருக்கிறது. அது இம்மியளவும் தவருத மன தத்துவ ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. அந்த ஏணியின் முதற்படி, புலன்களுக்கான சாதனங்களையே சிந்தித்துக் கொண்டிருப்பது; இரண்டாவது படி, அவற்றில் பற்றுதல் வைப்பது; மூன்ருவது படி, ஆர்வத்துடன் அவற்றை நாடுவது; நான்காவது படி, தனது ஆசை நிறைவேருவிடில் ஆத்திரம் அடைவது; ஐந்தாவது படி, ஆத்திரம் காரணமாக என்ன நேருவதாக இருந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் கண்மூடித்தனமாக நடந்து கொள்ளுவது; ஆருவது படி. தன்னைத்தானே மறந்துவிடுவது; ஏழாவது படி, பகுத்தறிவை அடியோடு இழந்து விடுவதாகும். பகுத்தறிவை இழந்த ஒருவன் இறுதியில் பாதாளத்தில் வீழ்ச்சியடைகிருன்.

ஒருவர் கண்களை மூடிக்கொண்டுவிட வேண்டும், காதுகளை அடைத்துக் கொண்டு விட வேண்டும் என்பதில்லை. தவருன விஷயங்கள் சம்பந்தப்பட்டவரையில் கண்களை மூடிக்கொண்டு, காதுகளை அடைத்துக்கொள்ள வேண்டும். நியாயமான, தருமமான விஷயங்களைப் பொறுத்தமட்டில் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக்கொள்ளவேண்டும். உலக விஷயங்களில் பற்றுள்ள மனிதர்கள் எவற்றை நாடுகிருர்களோ, அவற்றை யோகிகள் துச்சமாக எண்ணி கண்களை மூடிக்கொள்ளுகிருர்கள். உலகாயதமான மனிதர்கள் எவற்றைக் குறித்து கண் மூடிகளாக இருக்கிருர்களோ, அவற்றைக் குறித்து யோகிகள் மிகவும் விழிப்புடன் இருக்கிருர்கள்.

கவி வார்ட்ஸ்ஒர்த்* மனிதனின் 'ஆனந்த நிலை' யைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பிரத்தியட்ச உலகத்தின் பளுவான, சோர்வை உண்டாக்கும் சுமையை எளிதாக்கும் தூக்கத்தையே அவர் ஆனந்த நிலை என்று குறிப்பிட்டுள்ளார். மனிதன் தூங்கும்போது, மூச்சும் ரத்த ஓட்டமும் கூட அநேகமாக அடங்கிவிடுகின்றன என்றும், அப்போது உடல் துயில் கொண்டாலும் ஆன்மா துயில் கொள்ளுவதில்லை என்றும், அவ்வமயம் ஏற்படும் மனச் சாந்தியே இன்ப நிலை என்றும், அவர் தமது கவிதையில் அற்புதமாக வர்ணித்துள்ளார். ஆனல், உறுதியான மனம் படைத்த யோகியின் நிலை, தற்காலிகமான ஆனந்த நிலை அல்ல; அது நிரந்தரமான ஆனந்த நிலை; நிரந்தரமான சாந்த நிலை. எப்போதும் விழிப்புடன் இருந்து ஆன்மாவைக் கட்டுதிட்டத்திற்கு உட்படும்படி செய்ததன் பலனே அத்தகைய நிலையாகும்.

---

* வில்லியம் வார்ட்ஸ்ஒர்த்: (1770–1850) சிறந்த ஆங்கிலக் கவி. எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையுமே அவரது மூலாதாரமான கொள்கையாகும். அவர் அதை வாழ்க்கையிலும் அனுசரித்து வந்தார். தூய்மையான, மிகச் சிறந்த ஏராளமான கவிதைகளை இயற்றிய பெருமை அவருக்கு உண்டு. இருந்தாலும், இயற்கையின் பல்வேறு அற்புத நிலைகளையும் விளக்கிக் கவி புனைவதில், ஆங்கிலக் கவிகளிலே அவருக்கு ஈடு யாருமே இல்லை எனலாம். 1843–லிருந்து வில்லியம் வார்ட்ஸ்ஒர்த் பிரிட்டிஷ் அரசாங்கக் கவியாகவும் இருந்தார்.

''ஆன்மா மகாசமுத்திரத்தைப் போன்றது. எல்லாப் பிரதேசங்களிலிருந்தும் சமுத்திரத்தில் தினந்தோறும் வெள்ளத் தண்ணீர் வந்து விழுகின்றது. ஆனால், அதன் காரணமாக சமுத்திரம் ஒருபோதும் ததும்பி வழிவதில்லை. அதன் தண்ணீர் கரையைத் தாண்டிச் செல்லுவதில்லை. நதிகளிலிருந்து ஏராளமான தண்ணீர் வந்துவிழுந்தும் கூட சமுத்திரம் பொங்குவதில்லை. குற்றம் குறையற்ற நிறை மனிதனும் அப்படித்தான். அவனது ஆன்மாவாகிய கடலில் புலன்களின் உலகத்திலிருந்து மாயையாகிற நதிகள் வந்துவிழுகின்றன. என்னும், அவன் நிலைகுலைவதில்லை.''‡

புலன்களுக்கு இலக்கான சாதனங்களைப் பற்றிய சிந்தனையையெல்லாம் நிறுத்திவிட்ட யோகி, எல்லாவற்றிற்கும் மேலான பரபிரம்மத்தைப் பற்றிச் சிந்திக்க முற்படுகிறான். அவன் பரபிரம்மத்தை நோக்கி எழும்பி இறுதியில் அவரிடம் ஐக்கியமாகிவிடுகிறான். அதாவது, பிரம்ம நிர்வாணத்தை அடைந்து விடுகிறான். அது திடீரென்று ஏற்பட்ட மாற்றம் அல்ல. பரம்பொருளைப் பற்றிய இடைவிடாத சிந்தனையின் பலனேயாகும். சாதனையை நிறைவேற்றுவதற்கான முயற்சி சாதனையில் மறைந்து விடுகிறது. நெஞ்சறிந்து செய்யும் முயற்சி, மூச்சு விடுவதைப் போல் பிறகு இயல்பாகிவிடுகிறது (அத்தியாயம்-2, சுலோகங்கள்-62, 72).

ஒரு மேநாட்டு ஞானி வர்ணித்திருப்பதைப் பாருங்கள்: ''கடவுளிடம் உண்மையாக ஐக்கியம் அடைவது (பிரம்ம நிர்வாணம்), கடவுளைப் போலவே எக்காலத்திலும் மாறுதலே இல்லாத ஒரு விஷயமாகும். அவ்விதம் ஐக்கியம் அடைவது, வெறிக் குணங்களை சாந்தப்படுத்துகின்றது; கற்பனையைக் கட்டுப்படுத்துகின்றது; மனத்தை உறுதிப்படுத்துகின்றது; மனத்தை திரிய விடாமல் அடக்கி வைக்கின்றது. மேலும் அது, சோதனை வந்தபோதும், செல்வம் வந்தபோதும், கஷ்டங்கள் ஏற்பட்ட போதும், மயக்கத்தினால் ஆசைகள் ஏற்பட்டபோதும், சுபிட்ச காலத்திலும் நம்மை ஒரே சீராகவும், நிதானமாகவும் இருக்கும்படி செய்கின்றது.''

## கர்ம யோகம்

### (அத்தியாயங்கள் 3-4)

அது இப்போது நம்மை மூன்றாவது அத்தியாயத்திற்கு இட்டுச் செல்லுகிறது. கடவுளை அறிந்து கொள்ளுவதால் மனிதன் அடியோடு மாறி, கடவுளைப் போலவே ஆகி, கடவுளிடத்தில் ஐக்கியம் அடைகிறான் எனில், கடவுளை அறியும் முயற்சியிலேயே ஏன் ஈடுபடக் கூடாது? கடவுளின் சிம்மாசனத்தை அடைய படுகொலைகளினூடே செல்லவேண்டும் என்று யாரும் எதிர்பார்க்க முடியாது. உறுப்புகள் ரத்தக் கறையினால் களங்கம்

‡ இந்த வாக்கியங்கள், எட்வின் அர்னால்டின் 'சொர்க்க கீத'த்திலிருந்து எடுக்கப்பட்டவை.

அடையாமல் தவிர்க்க முடியாத படுகொலைகளினூடே செல்லும் ரகசியம் ஏற்கனவே கூறப்பட்டிருக்கிறது. அதற்கான வழிகளை அர்ஜுனன் மறந்துவிடுகிறான். லட்சியத்தின் பளபளப்பான தோற்றமானது அவனது கண்களை மறைத்துவிடுகிறது. போரை நிறுத்திவிட்டு, ஆன்மாவைப் பற்றிய சிந்தனையில் மௌனமாக உட்கார்ந்துவிடுவது எளிதாக அவனுக்குத் தோன்றுகிறது. ஆனால், உண்மையில் அது எளிதல்ல. நாம் முன்பே கூறியிருப்பதுபோல், அர்ஜுனன் தன்னைத்தானே அறிந்து கொண்டிருந்ததைக் காட்டிலும் அதிகமாக கிருஷ்ணன் அவனை நன்கு அறிந்து கொண்டிருந்தார். அர்ஜுனன் போரில் நேரடியாகக் கலந்து கொள்ளாவிட்டாலும், அவன் யுத்தத்தின் போக்கைப் பற்றியே மனத்தில் நினைத்துக் கொண்டிருப்பான். இறுதியில் அவன் யுத்தத்தில் குதித்தாலும் குதித்துவிடலாம். அல்லது, அவன் அவ்விதம் குதிக்காவிட்டாலும், அவன் மனம் ஆழ்ந்த ரத்தக் கறை படிந்ததாகிவிடலாம்.

ஒருவனுடைய உடல் யாதொரு செயலிலும் ஈடுபடாமல் இருக்கலாம். அவன் புலன்களையும் கட்டுப்படுத்தி வைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், அவனது மனம் இடைவிடாமல் புலன்களுக்கான சாதனங்களை நோக்கி ஓடிக்கொண்டிருந்தால், அவன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளுவதுடன் உலகத்தையும் ஏமாற்றுபவனாகிறான். மனிதன் கோரும் முக்கியமான நன்மை, செயலின் பந்தத்திலிருந்து விடுதலை பெறுவதுதான். ஆனால், செயலற்றிருப்பது விடுதலை அல்ல.

வாழ்க்கையில் இரண்டு நிலைகள் இருக்கின்றன. ஒன்று ஞான யோகம், மற்றொன்று கர்ம யோகம். ஆனால், செயலற்ற நிலை என்று எதுவும் இல்லை. தன்னைத்தான் பூரணமாக அறிந்து கொள்ளுவதே ஞான நிலையாகும். அந்த நிலையில் செயலும், செயலற்றிருப்பதும் ஒன்றுதான். பயபக்தியுடன் தீவிரமாக விரும்பத் தகுந்த லட்சியமும் அதுதான். வேறு நிலை சிறந்ததா என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கே அதில் இடமில்லை. இருந்தாலும், எந்த நிலை உயர்ந்தது, இதுவா அல்லது அதுவா என்ற சந்தேகம் ஏற்படுமாயின், அந்நிலையில் கர்மயோகம் ஒன்றுதான் சிறந்தது. எக்காலத்திலும், செயலற்றிருப்பதைக் காட்டிலும் செயல்புரிவதே மேலானது. செயலற்ற வாழ்க்கை என்பது முரண்பாடானது. ஏனெனில், குணங்களுடன் கூடிய பிரகிருதிக்கு செயலற்றிருப்பது முடியாத காரியம். அது, எவரையும் அமைதியாக இருக்கவும் விடுவதில்லை. எனவே, செயல்புரிவது தவிர்க்க முடியாதது. (அத்தியாயம்-3, சுலோகங்கள்-1-8.).

அவ்விதமாயின், அதன் அர்த்தம் என்ன? ஒருவர், பிரகிருதி ஆட்டிவைப்பதற்கு இணங்க ஆடிக்கொண்டு, அதனால் கட்டுண்டு கிடக்கவேண்டுமா? அதன் விளைவாக பிறப்பு இறப்புச் சுழலில் எப்போதும் சிக்கிக்கொண்டிருக்க வேண்டுமா? உண்மையில், தியாக புத்தியுடன் புரியும் செயல்களைத் தவிர, மற்றச் செயல்

கள் யாவும் மனிதன் கட்டுண்டு கிடக்கும்படி செய்துவிடுகின்றன என்று கிருஷ்ணன் கூறுகிறார். தியாகம்தான் வாழ்க்கையின் நியதியாகும். சிருஷ்டியின் விதியும் அதுதான். கடவுள் மனிதனைச் சிருஷ்டித்த போது, தியாகம் செய்ய வேண்டும் என்ற செய்தியை அவனது காதில் மெதுவாக உபதேசித்தார். "தியாகத்தினால் வளர்ந்து பலனை அடைவாயாக" என்று அவனிடம் கூறினார். வேதங்கள் கூறுவதுபோல், உலகத்தைப் படைப்பதற்காக அவர் தம்மையே தியாகம் செய்துகொண்டார். தியாகத்திலேயே சிருஷ்டியெல்லாம் ஆரம்பமாகின்றன; தியாகத்தினாலேயே அவை பாதுகாக்கப்படுகின்றன. காரணம், விளைவு எல்லாம் தியாகம்தான். ஒருவன் தியாக நோக்கமின்றி எதைச் செய்தாலும் சட்டத்தை அதாவது தருமத்தை மீறியவனாகிறான்; பாவம் செய்தவனாகிறான்; பாவத்தை உண்டவனாகிறான்; பாவத்தை சேமித்து வைத்தவனாகிறான். ஏனெனில், தன்னலம்தான் பாவம். தன்னலமின்மை பாவத்திலிருந்து விடுதலை அளிக்கின்றது. தங்களைப் பற்றிய சுயநலமான சிந்தனையை யார் அறவே விட்டுவிடுகிறார்களோ, மனம், அறிவு, புலன்கள் ஆகியவை தூண்டுகிறபடி ஆடுவதை யார் நிறுத்திவிடுகிறார்களோ, அவர்கள் ஆன்மாவிலிருந்து எல்லா ஆனந்தத்தையும் அடைகிறார்கள்; எல்லாவிதமான ஆறுதலையும் பெறுகிறார்கள்; எல்லாவிதமான திருப்தியும் அவர்களுக்கு ஏற்படுகிறது. அத்தகையோர் செய்து தீர வேண்டிய அவசியமான அலுவல் எதுவும் இல்லை. அவர்கள் மீது எத்தகைய விதியும் சுமத்தப்படுவதில்லை. ஏனெனில், தன்னல நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும் என்ற அவசியம் எதுவும் அவர்களுக்கு இல்லை அல்லவா? அவர்களுக்கு தியாக வாழ்க்கையோ அல்லது உலகத்துடன் ஒன்றாகிவிடுவதோ, கடவுளின் சட்டத்தை நிறைவேற்றியதாகிறது. அதுதான் பேரானந்த நிலை. அதுதான் தீவிரமான செயலற்ற நிலை அல்லது செயலற்ற தீவிர நிலை என்பதாகும். பற்றுதலின்றி இடைவிடாது செயல் புரிவதால் மாத்திரமே அத்தகைய நிலையை அடைய முடியும். அது ஒன்றுதான் பரம்பொருளை அடைவதற்கு வழிகாட்டியாக இருக்கிறது (அத்தியாயம்-*3*, சுலோகம்-*9-19*).

ஜனக மகாராஜா அவ்விதமே மோட்சம் அடைந்தார். தியாகமும், மனித வர்க்கத்திற்குத் தொண்டு புரிவதுமே அவரது மூச்சுக் காற்றாக இருந்திருக்க வேண்டும். அவ்விதம் இல்லாவிடில், அவரது தலைநகர் எரிந்துகொண்டிருந்த போது, "மிதிலை சாம்பலாகிவிட்டால்கூட, எனக்குச் சொந்தமானது எதுவும் அழிந்து விடாது" என்று அவர் கலக்கமின்றி சாந்தமாக எவ்வாறு கூறியிருக்க முடியும்? அப்படி அவர் கூறியபோது கூட, அவரைப் பற்றி யாரும் தவறாக நினைக்கவில்லை. நீரோவின்* செய்கை

---

* ரோம் சாம்ராஜ்யத்தில் கொடுங்கோலர்களான பல சக்கரவர்த்திகள் ஆட்சி புரிந்திருக்கிறார்கள். எனினும், நீரோவைப்போல் அவ்வளவு கொடுங்கோலனாக யாரும் இருந்ததில்லை. கொடிய ஆட்சியிலும் தீச் செயல்களிலும் ஈடுபட்டு மக்களால் அறவே வெறுக்கப்பட்ட கிளாடியஸ் சீசர் நீரோ (கி. பி. 37—68) ரோம் சக்கரவர்த்தியாக இருந்த

இரக்கமற்ற அரக்கத்தனமாகக் கருதப்படுகிறது. ஆனால், ஜனகரின்* பெயரையோ இன்றும் கூட மக்கள் பயபக்தியுடன் குறிப்பிடுகிறார்கள். பற்றுதலின்மையைக் காட்டிய அவரது வார்த்தைகள், இன்றும்கூட மக்களின் நினைவில் இருந்து வருகின்றன. அவரது மனத்தில் எழுந்த ஒவ்வொரு சிந்தனையும் மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்வதைப் பற்றியதாகவே இருந்தது. அவர் அத்தகைய உயர்ந்த நிலையை அடைந்திருந்தார். அமைதியான தியான வாழ்க்கையில் ஈடுபடுவதற்காக அவர் பதவியிலிருந்து விலகியிருக்கலாம். ஆனால், அவர் அவ்விதம் செய்யாமல், தமது ராஜ்யத்தை ஆட்சி புரிந்து வந்தார். அவரைப் போல் மற்றும் சில மகாபுருஷர்களும் இருந்திருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்காக வாழவில்லை, உலகத்திற்காகவே வாழ்ந்தார்கள், உலகத்திற்காக உழைத்தார்கள். அவர்கள் மானிட வர்க்கத்திற்கு உதவிபுரிபவர்களாகவும் நண்பர்களாகவும் திகழ்ந்தார்கள்.

கடவுளே மௌனமாகவும், தூக்கமின்றியும் எப்போதும் செயலில் ஈடுபட்டவண்ணம் இருக்கிறார். அவர் அவ்விதம் இல்லாவிடில், உலகங்களுக்கே முடிவு ஏற்பட்டுவிடும். எனவே, விவேகமற்றவர்களுக்கு ஓர் உதாரணமாக விளங்குவதற்காவது, விவேகம் உள்ளவர்கள் வேலை செய்து தீர வேண்டும். சுதந்திரமாகச் செயல் புரிவதன் ரகசியம் பற்றின்மையே. குணங்களே செயல் புரிகின்றன, ஆன்மா அல்ல என்ற ஞானமே பற்றின்மை ஆகும். மாயையினால் ஆட்கொள்ளப்பட்டவர்கள், ஆன்மா அல்லாததற்குச் சொந்தமானவற்றை ஆன்மாவுக்குச் சொந்தமானவை என்று கூறுகிறார்கள். அதன் விளைவாக, செயல்களுக்குப் பொறுப்பாளிகள் தாங்களே என்றும், அவற்றின் பலன் தங்களுக்கே கிடைக்கவேண்டும் என்றும் அகந்தை கொள்ளுகிறார்கள். மன மயக்கம் கொண்ட அத்தகையோரை, அவர்களுடைய பற்றுதலிலிருந்தும் தவறிலிருந்தும் தடுத்து விவேகிகள், தங்களுடைய பற்றற்ற, தன்னலமற்ற செயல்களின் மூலம் அவர்களுக்கு உதாரணமாகத் திகழவேண்டும். செயல்களைத் துறக்க வேண்டும் என்ற கொள்கையைப் பிரகடனம் செய்து அவர்களுடைய மனத்தைக் குழப்பக் கூடாது. அக் கொள்கையைப் பிரகடனம் செய்

---

போது, ரோம் நகர் பற்றி எரிவதைக் கண்டு ஆனந்தம் கொண்டு பிடில் வாசித்ததாகக் கூறப்படுகிறது. ரோமை ஆட்சிபுரிந்த சீசர் வம்சத்தின் கடைசி சக்கரவர்த்தியும் அவன்தான். அவனது பதினான்கு வருட ஆட்சி, ரோம் மக்களுக்கு சகிக்கமுடியாத நரக வேதனையாக இருந்தது.

* ஸ்ரீ மகாதேவ தேசாயைப் போல் காந்திஜியும் ஜனக மகாராஜாவைப் பற்றி அடிக்கடி குறிப்பிட்டுள்ளார். மிதிலை அல்லது விதேஹ மன்னரான ஜனகர் மாபெரும் ஞானியாகத் திகழ்ந்தார். துன்பம், இன்பம் எல்லாம் அவருக்கு ஒன்றுதான். தமது ராஜ்யத்தை நீதி நெறி தவறாமல் ஆட்சிபுரிந்து கொண்டிருந்த அவர், ராஜ்யத்தைத் துறக்காமல் ஞானியாகவும் இருந்ததால் அவர் ராஜரிஷி என்று புகழ் பெற்றார். அவரது ராஜ்யத்தின் கொடியில் கலப்பைச் சின்னம் பொறிக்கப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது. விதேஹ ராஜ்யம் பீகாரைச் சேர்ந்த பிரதேசமாகும்.

வது, மன மயக்கம் கொண்டவர்களைத் தவறான வழியில் கொண்டு போய்விடும். அவர்கள் சோம்பேறித்தனத்தில் ஆழ்ந்துவிடுவார்கள். தற்போது அவர்கள் ஆழ்ந்துள்ள தன்னல நடவடிக்கைகளைக் காட்டிலும் சோம்பேறித்தனம் மிகவும் மோசமானது. (அத்தியாயம்-3, சுலோகங்கள்–20-29).

எல்லாச் செயல்களிலிருந்தும் ஆன்மாவைப் பிரித்து ஒதுக்கிவிட வேண்டும். ஆன்மா அல்லாததற்குச் சொந்தமானவற்றை ஆன்மா அல்லாததுடன் சேர்ப்பிக்க வேண்டும். அத்தகைய ஞானம் ஏற்படாதவர்களுக்குக் கூட, விடுதலை பெற ஒரு வழி இருக்கிறது. அவர்கள் எல்லாச் செயல்களையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும்; கடவுளின் அடிமைகளைப் போல் தொண்டு புரியவேண்டும்; எவ்வித பலனையும் எதிர் பார்க்கக் கூடாது; கடவுள் எதைக் கொடுக்கிறாரோ அதைக் கொண்டு திருப்தி அடையவேண்டும்.

நம்பிக்கை பாழானவர்கள், அந்த விதியை அசட்டை செய்து விடுகிறார்கள். சிற்சில சமயங்களில் இயற்கை சுபாவம் அவ்வளவு சக்திவாய்ந்ததாக இருக்கிறது. எனினும், அவ்விதம் கூறுவதிலிருந்து மனிதன் அவனது இயற்கையான சுபாவத்திற்கு அடிமையாகப் பிறக்கிறான் என்று அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. ஒவ்வொருவனிடத்திலும் ஒரு குறிப்பிட்ட அம்சம் இருக்கிறது. அது அவனை ஒரு குறிப்பிட்ட செயலிலும், தொழிலிலும் ஈடுபடுவதற்கு தகுதி வாய்ந்தவனாகச் செய்கிறது; அவன் அத்தொழிலைச் செய்வதற்கென்றே பிறந்தவனாக இருக்கிறான். அவனது இயல்பின் அந்த அம்சத்திற்கு முரணாக அவன் எதுவும் செய்ய முடியாது. செய்தால், அவன் கஷ்டத்திற்கு உள்ளாக வேண்டியிருக்கும். எனினும், மனிதனிடத்தில் மற்றோர் அம்சம் இருக்கிறது. அதுதான் அவனது தார்மிக இயல்பாகும். அவனது கட்டுப்பாட்டிற்குள் இராத அம்சத்திற்கு, தன்னல உணர்ச்சியின்றி விருப்பத்துடன் உடன்படுவதும், அவனுடைய கட்டுப்பாட்டில் அடங்கக் கூடிய அம்சத்தை அடக்கி வைப்பதுமே மனிதப் பிறவியின் நியதியாகும். அதைத்தான் சுயதர்மம் (स्वधर्मम्) என்கிறோம். ஒருவன் விடுதலை அடைய வேண்டுமாயின் சுயதர்மத்தை 'அனுஷ்டிக்க வேண்டும். சுயதர்மத்தைத் தவிர வேறு எதையும் செய்வது அவனது தர்மம் அல்ல. மற்றவர்களுடைய தர்மமாகும்; அது அவனது வேலை அல்ல, மற்றவர்களுடைய வேலையாகும்.

ஆனால் ஒருவன், தன்னுடைய சுயதர்மத்திற்கு முரணான காரியங்களில் அடிக்கடி இழுக்கப்பட்டு விடுகிறான்; பாவமான காரியங்களில் இழுக்கப்பட்டு விடுகிறான். ஏன்? பிசாசின் இரட்டைப் பிறவிகளான காமமும் கோபமும் அவனது சுயதர்மத்தைக் கெடுக்க முயற்சிக்கின்றன. அவை அவ்வாறு செய்வதற்குக் காரணம், மனிதன் விழித்துக் கொண்டிராவிடில் அவனது புலன்களையும், மனத்தையும், பகுத்தறிவையும் அவை தங்களுக்கு இருப்பிட

மாகச் செய்து கொண்டுவிடுகின்றன. கிருஷ்ணன் இரண்டாவது அத்தியாயத்திலேயே உபதேசித்திருப்பதைப்போல். காமமும் கோபமும் மனிதனின் விரோதிகள். இப்போது கிருஷ்ணன் அதே உபதேசத்திற்கு வேறு உருவம் கொடுக்கிறார். புலன்கள், மனம், அறிவு ஆகியவை விரோதிகளுக்கு இருப்பிடமாகும் என்று கூறுகிறார். அவை ஒன்றைவிட மற்றொன்று அதிக தந்திரம் உள்ளது, ஒன்றைவிட மற்றொன்றைக் கட்டுப்படுத்துவது அதிகக் கஷ்டமானது. எனினும், மனிதனின் உள்ளத்தின் உள்ளே வசிப்பவரான கடவுள் எல்லோரையும் காட்டிலும் மிகமிக நுணுக்கமானவர், எல்லோரையும் காட்டிலும் அதிகத் திறமையும் தந்திரமும் வாய்ந்தவர். எனவே, மனிதன் அவரது சட்டத்திற்குக் கீழ்ப் படிந்து, மற்ற எல்லா மாயைகளையும் ஆசைகளையும் ஒவ்வொன்றாக அடக்கி ஒழித்துவிட வேண்டும்.

இது ஒரு புதிர் அல்ல. ஆன்மாவாகிய சூரியனின் மிகமிக அற்புதமான தோற்றம் கூட மனிதனை தன்னடக்கப் பாதையில் செல்லும்படி செய்வதற்குப் போதுமானது. தன்னடக்கம் அதிகமாவதற்குத் தகுந்தவாறு அத் தோற்றத்தின் ஒளியும் அதிகப் பிரகாசம் உள்ளதாக வளர்ந்துவரும். உயர்ந்த நிலையை அடைய விரும்பும் மனிதன் கடவுளுக்காகவே எல்லாவற்றையும் செய்ய வேண்டும்; பலாபலன்களை அவரது கையில் விட்டுவிட வேண்டும். எல்லாப் பொக்கிஷங்களையும் திறக்கவல்ல சாவி அதுதான். அந்தச் சாவியை அவன் இறுகப்பற்றிக்கொள்ள வேண்டும். செயின்ட் அகஸ்டின் கடவுளைப் பிரார்த்தனை செய்தபோது கூறியதாவது: "இச்சையடக்கத்தை அனுசரிக்க வேண்டும் என்று கட்டளை யிடுகிறீர்கள். உங்கள் கட்டளையை நிறைவேற்றும் சக்தியை எனக்குக் கொடுங்கள். பிறகு நீங்கள் என்ன வேண்டுமானாலும் கட்டளையிடுங்கள்."

கர்ம யோகத்தைப் பற்றிய விளக்கம் நான்காவது அத்தியாயத்தில் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. கடவுள் மனிதனைச் சிருஷ்டித்தபோது, தியாகம் என்ற மந்திரத்தையே அவனது காதில் உபதேசித்ததாக மூன்றாவது அத்தியாயத்தில் கூறப்படுகிறது. இந்த தியாக விதியை கிருஷ்ணன் வைவஸ்வதனுக்கும் (சூரியனுக்கும்), அவன் அவனது புதல்வனுக்கும், அவ்விதமே வாழையடி வாழையாக உபதேசம் செய்ததாக இப்போது (நான்காவது அத்தியாயத்தில்) கூறப்படுகிறது. அதன் அர்த்தம் என்னவெனில், கடவுள் முதலாவது மனிதனுக்கு அதை உபதேசித்தார். அவனிடமிருந்து அது தலைமுறை தலைமுறையாக பின் வந்த சந்ததிகளுக்கு உபதேசிக்கப்பட்டு வந்திருக்கிறது. உலகத்துடன் தொடர்பு ஏற்பட்ட முதலாவது மனிதன், உலகத்துடன் தனக்குள்ள ஐக்கியத் தன்மையை ஓரளவு உணர்ந்து, சட்டப்படி அந்த உபதேசத்தை சந்ததிகளுக்குக் கொடுத்துள்ளான். இதில் என்ன விசித்திரம் இருக்கிறது? சத்தியம் அடிக்கடி வெளியிடப்பட்டு வருகிறது. பிரளய காலம் வரையில் அது வெளியிடப்பட்டுத்தான் வரும்.

சூரியனுக்குக் கீழே உள்ள இந்த பூமியில் எதுவும் புதுமை அல்ல என்று அடிக்கடி கூறப்படுவதை நாம் கேட்கிறோம். பூமியில் எதுவும் புதிதாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், சத்தியமாகிய சூரியனின் உருவங்கள் எண்ணிக்கையற்றவை. அது புதிய புதிய அம்சங்களையும் தோற்றங்களையும் எடுத்துக் காட்டுகிறது. ஒவ்வொரு தீர்க்கதரிசியும் அவரது சூழ்நிலைக்குத் தகுந்தவாறு அந்த அம்சத்தை எடுத்துக் காட்டுகிறார். எனினும், அது அதே சத்தியத்தின் ஓர் அம்சமேயாகும். முஸ்லிம்கள் என்ன நினைத்தாலும் நினைத்துக் கொள்ளட்டும். அல்லாவிடம் சரண் அடைந்துவிட வேண்டும் என்ற விதிக்கும், கீதை அல்லது பைபிள் உபதேசிக்கும் விதிக்கும் ஏதாவது வேற்றுமை இருக்கிறதா?

‘‘லாப நஷ்டக் கணக்கு எதையும் பாராமல் உலகத்தின் மகத்தான ஆழ்ந்த சட்டத்திற்கு உட்படும் மனிதன் சரியாக நடந்துகொள்ளுபவனாகவும் வெல்ல முடியாதவனாகவும் இருக்கிறான். இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்களின் சாரம் இதுதான். தன்னல மறுப்பே இஸ்லாம் என்பதற்கு அர்த்தமாகும். பூமியில் வாழும் நமக்கு வெளியிடப்பட்டுள்ள மகத்தான ஞானமும் இதுதான்’’ என்று கார்லைல் கூறியுள்ளார்.

‘‘இன்று கிறிஸ்தவ மதம் என்று எதைக் கூறுகிறார்களோ, அதுவே பண்டைக்கால மக்களிடையே இருந்துவந்தது. மானிட வர்க்கம் உண்டானதிலிருந்து உடலுடன் நேரில் ஏசுநாதர் தோன்றும் வரையில் அது மக்களை எக்காலத்திலும் கைவிட்டதில்லை’’ என்று செயின்ட் அகஸ்டின் கூறியுள்ளார்.

இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்கள் தோன்றுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, சரண் அடைதல் அல்லது அன்பு அல்லது தியாகம் என்ற விதியை கீதை உபதேசித்திருக்கிறது. ஆனால் உண்மையில், அது மனிதன் இந்த பூமியில் பிறந்ததிலிருந்தே கடவுளால் மனிதனுக்கு உபதேசிக்கப்பட்டு வந்துள்ளது. இதைப் பற்றி கிருஷ்ணன் அர்ஜுனனுக்குப் பின்வருமாறு கூறுகிறார்: ‘‘நமக்கு முன் சென்றுள்ள பல யுகங்களுக்கு முன்பே தியாகம், தன்னலமற்ற செய்கை அல்லது யோகம் என்ற விதியை நான் கற்பித்தேன். இதைக் கேட்டு நீ ஆச்சரியத்தில் ஆழ்ந்து விட்டதாகத் தோன்றுகிறது. நல்லது, நீ இதற்கு முன் பல ஜன்மங்கள் எடுத்திருக்கிறாய். உலகங்களின் கர்த்தாவான, பிறவாத, முடிவற்ற நானும் கூட இதற்கு முன் பலதடவை பிறந்திருக்கிறேன். இதைக் குறித்து நீ ஆச்சரியப்பட வேண்டாம். எனது வருகை, எனது அலுவல்கள் முதலியவற்றைப் பற்றிய ரகசியத்தை நீ அறிந்துகொள். பின்னர், ஞானம் என்ற கடுமையான சோதனையின் மூலம் உன்னைத் தூய்மையாக்கிக் கொண்டு என்னிடம் வந்து சேர். பண்டைக் காலத்து ஞானிகள் இந்த ரகசியத்தை அறிந்து அதை அடிப்படையாகக் கொண்டு செயல் புரிந்தார்கள். நீயும் அவ்விதமே செய்வாயாக. தர்மம் மறைந்து அதர்மம் ஓங்குவதை

நான் காணும்போதெல்லாம், நானே மீண்டும் மீண்டும் பிறப்ப தற்கு நான் இடம் கொடுக்கிறேன். நான் உபதேசித்த யோகம், காலம் செல்லச் செல்ல மறைந்து போவதால், அதை மீண்டும் நான் பிரகடனம் செய்ய வேண்டியிருக்கிறது. அவரவர்களுடைய குணங்களுக்கும். கர்மங்களுக்கும் உகந்தவாறு மனித சமூகத்தை நான் நான்கு பிரிவுகளாகப் பிரித்து ஸ்தாபிப்பதில் ஈடுபடு கிறேன். எனினும், நான் செய்யும் எதுவும் என்னைத் தீண்டுவ தில்லை.''(அத்தியாயம்-4, சுலோகங்கள்-1-15).

மேற்கொண்டு இதுவும் அர்ஜுனனுக்கு ஒரு புதிய ரகசிய மாக இருக்கிறது. அவனுக்கு ஆலோசனை கூறுகிறவரும் சாரதி யுமான கிருஷ்ணன் கடவுளேதான். மனிதன் கடவுளின் நிலைக்கு உயர வேண்டும் என்பதற்காக, அவர் மனிதனின் நிலைக்கு இறங்கி வந்துள்ளார். ''அவதாரமானது, தெய்வத்தின் கருணை வடிவமான ஒரு கண்ணீர்த் துளியே'' என்று கிறிஸ்தவ ஞானி ஒருவர் கூறி யுள்ளார். கடவுள் தனக்காக அல்ல, மனிதனின் நலனுக்காகவே மனிதனாக வருகிறார். கடவுளே மனிதனாக வந்து பூமியைத் தாங்கு கிறார். எனினும், மனிதனால் அக் காட்சியை எப்போதாவது அபூர் வமாகவே காண முடிகின்றது. கீதையின் ஆசிரியர் அந்தக் காட் சியைக் கண்டார். எனவே, கடவுளுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையின் மூலம் நாம் கடவுளைக் காணும்படி ஆசிரி யரான முனிவர் செய்கிறார்.

அர்ஜுனன், தன் முன் கடவுளை கிருஷ்ணனாகக் கண்டான். அவனுக்கு, புதிய வாழ்க்கையின் வாயிற்படியைத் திறந்துவிடவே கிருஷ்ணன் அவன் முன் நிற்கிறார். நண்பரும், உறவினரும், சாரதி யுமான கிருஷ்ணன் தன் எதிரில் நிற்கவில்லை என்பதையும், கட வுளே எதிரில் நின்று யோகத்தின் ரகசியத்தை தனக்கு வெளி யிடுகிறார் என்பதையும், தான் என்ன செய்ய வேண்டும் என்று தனக்குக் கற்பிக்கிறார் என்பதையும், முன் ஒருபோதும் இராத வாறு மிகவும் தெளிவாக அவன் உணருகிறான்.

கிருஷ்ணன் மீண்டும் அந்தச் சித்தாந்தத்தையே வேறு வித மாக உபதேசிக்க முற்படுகிறார். யோகமும் தியாகமும் என்ற விதி யானது இப்போது, செயலற்ற நிலையில் செயலும், செயலில் செய லற்ற நிலையும் என்ற விதியாக விவரிக்கப்படுகிறது. செயலோ அல்லது செயலின்மையோ எங்கேயிருந்து எழுகின்றதோ, அந்த ஆணிவேரை மனிதன் ஆராய்ச்சி செய்ய வேண்டும். காமத்தி லிருந்தும், வெறிக் குணத்திலிருந்தும் எழுவதெல்லாம் மனிதனை அடிமைப்படுத்தும் மோசமான செயலாகும். அந்த விகர்மம், பாம் பைப் போல் மனிதனைச் சுற்றி வளைத்துக் கட்டுண்டு கிடக்கும் படி செய்து விடுகிறது. பலனில் ஒரு கண் வைத்துக் கொண்டு செயல் புரிவதும் அப்படித்தான். இதன் விளைவாக மனிதன் ஒரு வெள்ளிச் சங்கிலியால் கட்டுண்டு விடுகிறான். கடமையைச் செய் யாமல் ஓடிவிடுவதாலும் மனிதன் கட்டுண்டு விடுகிறான். இது, ஒரு வேளை வெள்ளிச் சங்கிலியாகவோ அல்லது இரும்புச் சங்கிலி

யாகவோ இருக்கலாம். மனிதனைக் கட்டுவது எந்தச் சங்கிலியாக இருந்தால் என்ன? கடவுளின் சட்டத்திற்கு இணங்கி, கடவுளின் கட்டளைக்கும் கீழ்ப்படிந்து செயல் புரிவதோ அல்லது செயல் புரியாமல் தவிர்ப்பதோதான் மனிதனைக் கட்டுப்படுத்துவதில்லை. மனிதனுக்கு, தன் விருப்பப்படி எதையும் செய்ய உரிமை இல்லை. சட்டத்தின் கர்த்தாவான கடவுளின் கட்டளைக்கு இணங்கவே, அவன் எதையும் செய்ய வேண்டும். மனிதன், கடவுளின் கையில் ஒரு கருவியே ஆவான். வெகுமதியையோ, பலனையோ நாட அவனுக்கு உரிமை இல்லை. பலனைக் கொடுப்பவர் கடவுள். இதையெல்லாம் அறிந்து கொள்ளுவதே உண்மையான ஞானமாகும். அந்த ஞானம், எல்லாச் செயல்களையும் சாம்பலாகச் செய்து விடுகிறது; அது மாத்திரமல்ல, கர்ம வினைகளைக் கூட அது சாம்பலாக்கி விடுகிறது. தியாகம், அடிமைத்தனத்தை அதாவது புலன்களுக்கும் உலக பந்தங்களுக்கும் அடிமையாக இருப்பதைத் தடுப்பதுடன், எல்லாவிதமான பந்தங்களையும் தீர்த்து வைக்கிறது. (அத்தியாயம்-*4*, சுலோகங்கள்-*16-23*).

இதைப் பற்றி குரான் கூறுவதிலும் அதிக வேற்றுமை இல்லை. "யாராக இருந்தாலும் நல்ல காரியத்தைச் செய்யும்போது, தனது நோக்கத்தை அல்லாவிடம் அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அவ்விதம் செய்பவன் அல்லாவின் கையை உறுதியாகப் பிடித்துக் கொண்டவனாகிறான்" (குரான்-*31.22*). "நற்செயல்கள், தீச்செயல்களை அழித்து விடுகின்றன" (குரான்-*11. 114*).

தியாகங்களிலும் பல விதம் உண்டு. சொர்க்க வாயிலுக்குள் பிரவேசிப்பதற்காகச் செய்யப்படும் தியாகங்கள்தான் சாதாரணமாக இருக்கின்றன. "நீ செய்துள்ள ஏராளமான தியாகங்களால் எனக்கு ஆவது என்ன? அவற்றைப் போன்ற உருப்படாத காணிக்கைகளை இனிமேல் கொண்டு வராதே. உன்னைச் சுத்தம் செய்துகொள், தூய்மையாக்கிக்கொள். உனது செயல்களினால் விளையும் தீமையை அப்பால் உதறித் தள்ளிவிடு; நற்செயல்கள் புரிவதற்குக் கற்றுக்கொள்". இவைதான், கர்த்தரிடமிருந்து யூத தீர்க்கதரிசி கேட்ட வாக்கியங்களாகும். இவற்றையே செயின்ட் பால் பின்வருமாறு விளக்கிக் கூறியுள்ளார்: "உங்களுடைய உடல்களையே உயிர்ப் பலிகளாக, புனிதமானவையாக, கடவுள் அங்கீகரிக்கும் விதத்தில் கொடுங்கள்."

கீதையின் ஆசிரியரோவெனில், யக்ஞத்தைப் பற்றி பகவான் கூறியிருப்பதை பின் வருமாறு சாரமாக வெளியிட்டுள்ளார்: "உன்னுடைய யக்ஞம் ஒவ்வொன்றையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய். நீ அளிப்பது யக்ஞமாகிய காணிக்கை என்ற எண்ணத்தையும் பலி கொடுத்துவிடு. உன்னைக் கடவுளுக்கு அருகில் கொண்டு போகும் செயல்கள் யாவும் யக்ஞமேயாகும். அவ்வாறாக, புலன்களைக் கட்டுதிட்டத்தின் கீழ்க் கொண்டுவருதல், உணர்ச்சிகள், விருப்பம், மூலாதாரமான காற்றுகள், புனிதமான ஞானத்தைப் பெறுவதற்கான முயற்சி ஆகியவை யாவும் யக்

ஞங்களே. பரம்பொருளைப் பற்றிய ஞானத்தை அடைவதற்கான முறை எதுவும் 'ஞான யக்ஞம்' ஆகும். இதுதான், யக்ஞங்களுக்குள் மிகச் சிறந்தது. சடங்குகளை விவரிக்கும் நூல்கள் கற்பிக்கும் யக்ஞத்தினுல், அதாவது ஸ்தூலமான யக்ஞத்தினுல் அதிக பலன் எதுவும் இல்லை. அது மேலும் கட்டுப்படுத்துகிறதேயன்றி விடுதலை அளிப்பதில்லை. விடுதலை அளிப்பதே ஞானம் ஆகும். ஞானத்தில் வந்து முடியாத செயலால் யாதொரு பலனும் இல்லை'' (அத்தியாயம்-4, சுலோகங்கள்-24-33).

லட்சியத்தை அடைவதற்கான வழிகளை கிருஷ்ண பகவான் உபதேசிக்கும் போது கூட, மத்தியில் அவர் எவ்விதம் அடிக்கடி லட்சியத்தை அதாவது ஞானத்தைப் பற்றிக் குறிப்பிடுகிருர் என்பதைப் பார்த்தோம். இங்கே கூட ஞானத்தின் உண்மையான சாரம் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உண்மையான ஞானம் என்பது இதுதான்: ஒருவன் தன்னுடைய ஞானக் கண்ணுல் உலகத்தில் உள்ள ஒவ்வொன்றையும் ஒவ்வொருவரையும் தன்னிடத்தில் பார்க்க வேண்டும்; பின்னர் ஒவ்வொன்றையும் ஒவ்வொருவரையும் கடவுளிடத்திலும் காணவேண்டும்.

உண்மையான ஆன்மிக ஞானம் ஒருவனை, மனிதனிடத்திலும் கடவுளிடத்திலும் தன்னையே காணும்படி செய்கிறது. உண்மையான ஆன்மிக ஞானி, தனக்கும், மற்றவர்களுக்கும், கடவுளுக்கும் இடையே யாதொரு வேற்றுமையையும் காண்பதில்லை. பல்வேறு சடங்குகளையும் அடிப்படையாகக் கொண்ட யக்ஞங்கள் எல்லாம் ''நம்ப முடியாத படகுகள்''* என்று முண்டக உபநிடதம் நமக்கு உபதேசிக்கின்றது. எனவே, மனிதன் அந்தச் சடங்குகளை யெல்லாம் விட்டுவிட்டு, தகுதி வாய்ந்த குருவை அடைய

---

प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्तमवरं येषु कर्म ।
एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरामृत्युं ते पुनरेवापि यन्ति ॥

मुण्डकोपनिषद्-१-२-७

ப்லவா ஹ்யேதே அதிருடா யக்ஞரூபா
அஷ்டாத சோக்த மவரம் யேஷு கர்ம|
ஏதச்ரேயோ ஏபி நந்தந்தி மூடா
ஜராம்ருத்யும் தே புனரேவாபி யந்தி||

—முண்டகோபநிடதம்–அத்தியாயம்–1, பிரிவு-2 சுலோகம்–7.

இதன் கருத்து: யாகம் செய்வதற்கு, யாகம் செய்பவர், அவரது மனைவி, பதினுறு புரோகிதர்கள் (ருத்விக்குகள்) ஆக பதினெட்டு நபர்கள் அவசியம். அவர்கள் செய்யும் யாகங்களோ நம்ப முடியாத படகுகளைப் போன்றவை. யாகங்கள் ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சடங்குகள் அல்ல. எனவே, அவை கீழ்த்தரமானவை. இருந்தாலும் அவற்றினுல் மகத்தான நன்மை ஏற்படுவதாக மூடர்கள் சந்தோஷம் அடைகின்றனர். அவர்கள் அச்சடங்குகளைச் செய்ததற்காக சிறிது காலம் சொர்க்கத்தில் இருந்துவிட்டு, மீண்டும் பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக்கொள்ளுகின்றனர்.

வேண்டும்; அவரிடமிருந்து உண்மையைக் கற்றுக்கொண்டு, அதையே தமது வாழ்க்கையின் முக்கிய ஆதாரமாகக் கொள்ள வேண்டும். முண்டக உபநிடதத்தில் அதன் சம்பந்தமாக உள்ள நீண்ட பிரிவின் கருத்தையே, கீதை சுருக்கமாகவும் சாரமாகவும் கொடுத்திருக்கிறது. ஞானம் ஒரு சிறந்த படகு என்றும், மகா பாவிகள் கூட பாவ சமுத்திரத்தைக் கடப்பதற்கு அது உதவி யாக இருக்கிறது என்றும் கீதை கூறுகிறது. அந்த ஞானத்தை அடைவதற்கான வழிவகைகளையும் கீதை விவரித்திருக்கிறது. ஞானத்திற்கு இருப்பிடமான சிறந்த ஞானியை அணுகி அவரை அன்புடன் வணங்கவேண்டும்; அவருக்குத் தொண்டு புரிய வேண்டும். அடிக்கடி கேள்விகள் கேட்டுத் தனது சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். ஞானத்தை அடைவதற்கான வழி அதுதான். பாவங்களையெல்லாம் சாம்பலாக்கக்கூடிய இந்த தூய்மையான ஞானத்தை, யோகத்தின் மூலம் தம்மை அப்பழுக் கற்றவராகச் செய்துகொள்ளுவோர் பெறலாம் என்றும் அது கூறு கிறது. யோகம் என்பது பூரண நம்பிக்கையுடன் தன்னலமின்றிச் செயல்புரிவதும், தன்னடக்கமும், இறைவனிடம் தன்னை அர்ப்ப ணம் செய்துகொள்ளுவதும்தான். ஒருவர் அதைக் கற்றுக்கொள்ளு வதற்கு, ஒரு குருவின் காலடியில் உட்கார்ந்துதான் தீரவேண்டும் என்பதில்லை. ஆன்மாவைப் பற்றிய பூர்வாங்கமான அறிவைப் பெற்று அர்ஜுனன் தனது சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்றும், எல்லாச் செயல்களையும் கடவுளுக்கு அர்ப் பணம் செய்து செயல்களால் ஏற்படும் பந்தத்தை உதறித்தள்ள வேண்டும் என்றும் கிருஷ்ணன் கூறுகிறார். "ஞானத்தினால் சந் தேகத்தைத் தகர்த்து யோகத்தைக் கைக்கொண்டு எழுந்திரு" (அத்தியாயம்-*4*, சுலோகங்கள்-*33*-*42*).

## ஞானயோகமும் கர்மயோகமும்

**( அத்தியாயம்-5 )**

மீண்டும் அர்ஜுனன் ஒன்றும் புரியாமல் தவிப்பதாக கீதை சித்திரிக்கிறது. மீண்டும் லட்சியமும், அதை அடைவதற்கான வழிகளும் ஏக காலத்தில் போற்றப்பட்டுள்ளன. ஆனால் இப் போது, மனிதனைத் தூய்மைப்படுத்தும் ஞானம், மேற்கொண்டு அதிகமாக வற்புறுத்தப்படுகிறது. அப்படியானால் இரண்டில் எது சிறந்தது? செயலைத் துறப்பதா அல்லது செயல் புரிவதா? வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாமல் ஞானத்தை மாத்திரம் (சாங்கிய முறை) நாடுவதா? அல்லது செயல் புரிய (யோகம்) பயிற்சி பெறுவதா?

உண்மையான ஞானமே லட்சியம் என்பது நிச்சயம்தான். உலகத்தின் சந்தடியிலும் அமளியிலும் மனத்தைச் செலுத்து வதைக் காட்டிலும், கலப்பற்ற ஞானத்தை மாத்திரம் நாடுவது சிறந்ததாக இராதா? கடவுளை நாடுவோர் உலகத்தின் ஆசா பாசங்களுக்கு இடம் கொடுத்துவிடக் கூடாது என்பதற்காகத்

தான் உலகத்திலிருந்து விலகி, ஆன்மாவையும் கடவுளையும் பற்றிய ரகசியங்களை அறிந்து கொள்ளும் முயற்சியில் முற்றிலும் ஈடுபடுகிருர்கள். அப்படியிருக்க, கர்மயோகம் எதற்கு?

இதற்கு கிருஷ்ண பகவான் பதில் கூறுகிருர். "ஞான யோகம், கர்மயோகம் இரண்டும் சிறந்தவையே. இரண்டும் ஒரே லட்சியத்திற்கே கொண்டுபோய் விடுகின்றன."

ஆனல் கர்ம யோகம்தான் சிறந்தது. ஏனெனில், கர்மயோக மின்றி ஞானயோகத்தில் வெற்றி பெறுவது சாத்தியமல்ல. யோகமின்றேல் சந்நியாசமும் சாத்தியமல்ல. திடீரென்று தத்துவ ஆராய்ச்சியிலும், ஞான மார்க்கத்திலும் குதிப்ப வர்கள் துன்பத்திற்கு உள்ளாகும்படி நேரலாம். கடவுளை அடைவதற்கான தீவிர ஞான மார்க்கத்தில் செல்ல விரும் புவோர், சில கட்டுதிட்டங்களுக்கு உட்பட வேண்டும்; தன்னல மற்ற உணர்ச்சியுடன் தினசரிக் கடமைகளைச் செய்யவேண்டும்; உலகத்திலேயே இருக்கவேண்டும், எனினும் உலக விஷயங் களில் லயித்துவிடக் கூடாது. அப்படிப்பட்டவர்கள்தான், ஆன்ம ஆராய்ச்சியில் ஈடுபட்ட ஞானியின் நிலையை இயல்பாகவே அடைகின்றனர்.

இதைப் பற்றிச் சிந்திக்க முற்பட்டால், குற்றம் குறையற்ற கர்மயோகிக்கும், அப்பழுக்கற்ற ஞானயோகிக்கும் இடையே உள்ள எல்லைக் கோட்டை கண்டு பிடிப்பது எளிதல்ல. உண்மை யில் இந்த அத்தியாயத்தில் உள்ள குறிப்பிட்ட ஒரு சுலோகம் அவ்விருவரில் யாரைப்பற்றிக் கூறுகிறது என்பதையே அறிந்து கொள்ள முடியாமல் இருக்கிறது. உதாரணமாக, ஏழாவது சுலோகம் தீவிர ஞானியை இவ்விதம் வர்ணிக்கிறது: "தன்னைத் தூய்மையாக்கிக் கொண்டுள்ள, தன் மனத்தையும் புலன்களையும் அடக்குவதில் வெற்றி பெற்றுள்ள, தன் ஆன்மாவும், உலகத்தி லுள்ள ஆன்மாவும், எல்லாச் சிருஷ்டிகளிடத்திலும் உள்ள ஆன் மாவும் ஒன்றே என்று நினைக்கும் யோகி, எப்போதும் செயல்கள் புரிவதில் ஈடுபட்டாலும் கூட, அவற்றினல் அவன் களங்கம் அடை வதில்லை." இதே விதி, செயல்களில் ஈடுபடாத தத்துவ ஞானிக் கும் ஏன் பொருந்தக் கூடாது? அவரது செயல் வேறு தன்மை வாய்ந்ததாக இருக்கலாம். இருந்தாலும், அவரும் செயலில் ஈடுபட்டுத்தான் தீரவேண்டும். எல்லாப் புலன்களும், கர்மேந்தி ரியங்கள், ஞானேந்திரியங்கள் யாவும் அவர்கள் அறிந்தே செயல் படுகின்றன. என்ருலும், அவை தாங்கள் அறியாமல் தாமாகச் செயல்படுவதாகவே அவர்கள் இருவரும் எண்ணுவார்கள் (அத்தி யாயம்-5, சுலோகங்கள்-8–9). மேலும் தத்துவஞானி, 'ஒன்பது வாயில்கள் உள்ள நகரில்' (உடல்) உறுதியாக உட்கார்ந்திருப் பார். அவர் புலன்களுக்கு அடிமையாக இருக்க மாட்டார், எஜமானராகவே இருப்பார்; அவர் சாந்தமாகவும் அமைதியாக வும் இருப்பார்; அவர் எதுவும் செய்யமாட்டார்; தமக்கு ஏதாவது செய்யும்படி பிறரையும் கேட்கமாட்டார் (அத்தியாயம்-5, சுலோ

கம்-13). இவையெல்லாம் செயல்களில் ஈடுபடும் தீவிர ஞானிக்கும் பொருந்தும். ஏனெனில், அவரது செயல்களெல்லாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்படுமாதலால், செயல் புரியும் அவரது நிலை செயலற்ற நிலையாகவே இருக்கும். எனவே, இரண்டுவிதமான அந்த ஞானிகளுக்கும் இடையே உள்ள வேற்றுமை அடிப்படையான வேற்றுமை அல்ல.

தாம் எதுவும் செய்யவில்லை என்றும், குணங்கள் செயல் புரிகின்றனவேயன்றி ஆன்மா அல்ல என்றும் தத்துவ ஞானி நிம்மதியாக உட்கார்ந்திருப்பார். தீவிர ஞானியோ வெனில், கடவுள் செயல் புரிகின்றாரேயன்றி தாம் அல்ல என்றும், கடவுளே எல்லாவற்றையும் நடத்தி வைக்கிறார் என்றும், தமது உறுப்புகள் கடவுளால் இயங்கப்படும் கருவிகளே என்றும் எண்ணி, அந்த ஞானத்தில் ஆனந்தத்தை அடைவார்.

14, 15-ஆவது சுலோகங்களை எடுத்துக் கொள்ளுங்கள். கர்ம யோகியின் வாழ்க்கையும் ஞான யோகியின் வாழ்க்கையும், அந்த சுலோகங்களில் உள்ள உண்மையை வெவ்வேறு விதமாகப் பிரதிபலிப்பது போல் தோன்றுகின்றன. ஆன்மா செயல் புரிவதில்லை; யாருடைய பாவத்தையும் அல்லது புண்ணியத்தையும் தான் ஏற்றுக்கொள்ளுவதில்லை. இதுதான் ஞான யோகியின் கொள்கை. கர்ம யோகியோவெனில், தாம் கடவுளின் சட்டத்திற்கு உட்பட்டிருப்பதாயும், அந்தச் சட்டத்திற்கு உட்பட்டே செயல் புரிவதாகவும் கருதுகிறார். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவை தவறாமல் இயங்குவதற்கு, கடவுளின் சட்டமே காரணம் என்றும் அவர் கருதுகிறார்.

வெறும் தத்துவ நிலை, வீண் மயக்கமாகவோ அல்லது ஒரு மாய வலையாகவோ இருக்கலாம். எனினும் கர்மயோகியின் பக்தி நிலை, அவரை உண்மையான தத்துவ நிலையில் கொண்டு போய்ச் சேர்க்கும். ஆன்மா செயல் புரிகிறது என்ற தத்துவ உண்மையை வாயளவில் மாத்திரம் கூறுவது, போலி வேடமும் அதைவிட மோசமான செயலும் ஆகிவிடும். தமது விருப்பத்தைக் கடவுளிடம் ஒப்படைத்துவிட்டு நடந்துகொள்ளுவோர், தமது விருப்பமும் கடவுளின் விருப்பமும் ஒன்று என்ற ஞானத்தை இறுதியில் அடைவார்; தாமோ அல்லது தமது ஆன்மாவோ விரும்பவில்லை, செயல் புரியவுமில்லை என்ற ஞான நிலையையும் அடைவார். கபீர், பரம் பொருளிடத்தில் முற்றிலும் ஆழ்ந்து லயித்திருந்தபோது, பார்ப்பது, உண்பது, தண்ணீர் குடிப்பது போன்ற வெளிப்படையான தமது செயல்கள் எல்லாம் கூட கடவுளிடம் பக்தி பூர்வமான, கடவுளுக்கு அர்ப்பணமான செயல்களே என்று பாடியுள்ளார். இங்கே ஞானியின் நிலை 8, 9-ஆவது சுலோகங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. தன்னை மறந்த நிலையை, யாதொரு முயற்சியுமின்றி தானாக எளிதில் அடைந்து விட முடியுமா? வாழ்க்கை

முழுவதும் இடைவிடாமல் சுயத்தூய்மையை மேற்கொள்ளுவதன் பலனுகவே அந்த நிலையை அடைவது சாத்தியமாகிறது. (அத்தியாயம்-5, சுலோகங்கள்-11-12).

அதில்தான் இந்த அத்தியாயத்தின் சாரம் அடங்கியிருக்கிறது. உண்மையான சந்நியாசி, சாந்தமும் சமத்துவ நோக்கமும் கொண்ட ஒரு நிலையை எய்துவான் என்பதில் சந்தேகம் இல்லை. அறியாமையாகிய மயக்கத்திலிருந்து அவன் விடுதலை பெற்றிருப்பான். ஞானமாகிய சூரியன், அவனது அறியாமையை அகற்றிவிடும். எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளின் தோற்றம் அவனுக்குத் தென்படும். அவனது உடல், மனம், அறிவு யாவும் பரம்பொருளிடத்திலேயே உறுதிபெற்று நிலைத்திருக்கும். பண்டிதனை பிராம்மணன், பசு, நாய், நாயைத் தின்பவன் எல்லோரையும் சமமாகவே அவன் கருதுவான். பிரம்மம்தான் ஐக்கியத் தன்மை வாய்ந்தது, அப்பழுக்கற்றது என்பதை உணர்ந்து அதில் நிலைத்திருப்பான் (சுலோகங்கள் 10-19). அவனுக்கு உள்ளேயே அவன் சாந்தியையும், பேரானந்தத்தையும், ஒளியையும் காண்பான் (சுலோகம்-24). ஆனல், அந்த நிலையை எப்படி அடைவது? கர்ம யோகமின்றி அதை அடைய முடியாது. அந்த நிலையை எய்துவதற்கு, கர்மயோகம் பூர்வாங்கமான ஒரு நிபந்தனையாகும். மகத்தான அறிவைக்கொண்டு முயற்சிப்பதன்மூலம் ஒருவன் அந்த நிலையை அடைந்துவிட முடியாது. அபூர்வமாக சிலர், முயற்சி எதுவுமின்றி அறிவினுல் அத்தகைய நிலையை அடையலாம் என்ருலும், பல பிறவிகளில் செய்த முயற்சியின் பலனுகவே அத்தகைய அறிவு ஏற்படும்.

பாவங்களை அறவே களைந்தவர்களும், சந்தேகங்களைப் போக்கிக்கொண்டவர்களும், எல்லா சிருஷ்டிகளின் நன்மையிலும் ஈடுபாடு உடையவர்களும், காமம், கோபம் முதலிய வெறிக் குணங்களின் வெள்ளத்தை எதிர்த்து நிற்கக் கூடியவர்களுமே யோகிகள் ஆவர். எப்போதும் அவர்கள் முன்னிலையில் உள்ள லட்சியம் பிரம்ம நிர்வாணமே, அதாவது பிரம்மத்துடன் ஐக்கியமாகி விடுவதேயாகும் (சுலோகங்கள் 22, 23, 25). அணுவளவும் தன்னலமற்ற, செயல்களை யெல்லாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யும் தீவிர நிலையை, அதாவது கர்ம யோக நிலையை யோகி ஏற்கனவே அடைந்திருக்க வேண்டும் என்பது, மேற்கண்ட வர்ணனையிலிருந்து தெரிகிறது.

மற்ருேர் உதாரணத்தை எடுத்துக் கொள்ளுவோம். பண்டிதன், மூடன், நாய், நாயைத் தின்பவன், எல்லோரையும் ஞானி சமமாகக் கருதுகிருன். அவன் அவ்விதம் கருதுவது எப்படி? இதன் சம்பந்தமாக பாகவதம் சில நிபந்தனைகளை விதித்திருக்கிறது. பாகவத புராணத்தின் சில பகுதிகள், கீதைக்கு தெளிவான விளக்கமாகவே அமைந்திருக்கின்றன. பாகவதம் கூறுவதாவது: "ஒவ்வொருவரிடத்திலும் கடவுள் இருக்கிருர் என்ற உணர்ச்சியை, அதாவது முனிவர், பாவி, பிராம்மணன், தீண்

டத்தகாதவன் ஆகிய எல்லோரிடத்திலும் கடவுள் இருக்கிருர் என்ற உணர்ச்சியை மிகுந்த அக்கறையுடன் பயிற்சி செய்து கொள்ளவேண்டும். அப்படியானுல்தான், வெறுப்பு உணர்ச்சி ஒழியும். எல்லோரிடத்திலும் கடவுள் இருக்கிருர் என்ற உணர்ச்சியைப் பயிற்சி செய்துகொள்ளுவதற்கான ஒரு படி என்ன வெனில், மிகவும் அருவருக்கத்தக்கவர்களின் முன்னிலையில் கூட சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குவதேயாகும். அவ்விதம் வணங்குவோருக்கு தமது அந்தஸ்து, கௌரவம் ஆகியவற்றைப் பற்றி உணர்ச்சி இருக்கக் கூடாது; வெட்கம் இருக்கக் கூடாது; மற்றவர்களுக்கும் தமக்கும் உள்ள ஸ்தூல வேற்றுமைகளையும் அவர்கள் பொருட்படுத்தக் கூடாது. ஒவ்வொரு உயிரிலும் கடவுளைக் காணும் வரையில் அவ்விதம் செய்துவர வேண்டும்."

குஷ்டரோகிகளிடம் தமக்கு ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சியை உதறித்தள்ள, செயின்ட் பிரான்ஸிஸ் பெரிதும் அதே முறையையே மேற்கொண்டார்.

அதனுல்தான் கிருஷ்ண பகவான், இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே ஒரே சொல்லில் உண்மையை எடுத்துக் கூறியிருக்கிருர். சந்நியாசம் என்பதே அந்தச் சொல்லாகும். ''யோகத்தினுலன்றி சந்நியாசத்தில் வெற்றி பெறுவது முடியாத காரியம்'' என்று அவர் கூறியிருக்கிருர். இதுவரையில் செயலை முக்கியமாகக்கொண்டு யோகம் விளக்கப்படுகிறது. இப்போது, பக்தியை முக்கியமாகக்கொண்டு விளக்கப்படுகிறது. தத்துவ ஞானம், தீவிர ஞானம் ஆகிய இரண்டையும் போல் இங்கேயும் இரு பிரிவுகள் இருக்கின்றன. அதுதான் தியான யோகமும் பக்தி யோகமும் ஆகும். இறுதி நிலையில் எல்லாம் ஒன்ருகிவிடுகின்றன. என்ருலும், நாம் விஷயங்களைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அந்தப் பிரிவுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

நாம் ஏற்கனவே பார்த்ததுபோல், ஞான யோகியின் கவனம் முழுவதும் பரம்பொருளில் நிலைத்திருக்கிறது. பரம்பொருளின் குறிப்பை அறிந்துகொண்டு அவன் எல்லாச் செயல்களையும் செயலற்றவைகளாக மாற்றுகிருன். கர்ம யோகியோ வெனில், கடவுளின் குறிப்பை அறிந்துகொண்டு, அவரைச் சரண் அடைந்து, அவர்மீது எல்லாச் செயல்களையும் சுமத்திவிடுகிருன். அந்தச் செயல்களின் பளுவை ஏற்றுக்கொள்ள அவரும் தயாராக இருக்கிருர். உருவமற்ற பரம்பொருளை தியானம் செய்வதன் மூலம் ஒருவன் தியான யோகி ஆகிருன். கடவுளின் முன்னிலையில், கடவுளைத் தோத்திரம் செய்து, அவரது அருளிலும் கருணையிலும், ஆனந்தத்தையும் ஆறுதலையும் காண்போன் பக்தி யோகி ஆகிருன்.

ஐந்தாவது அத்தியாயத்தின் இறுதியில் புதிதாக இரண்டு அம்சங்கள் நமக்கு அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றன.

27, 28-ஆவது சுலோகங்களில் தியான யோகமும், 29-ஆவது சுலோகத்தில் பக்தி யோகமும் குறிப்பிடப்படுகின்றன. பின் வரும் அத்தியாயங்களில் அவ்விரண்டையும் பற்றி விவரிக்கப்படு கின்றன. 6-லிருந்து 8-ஆவது அத்தியாயம் வரையில் ஞான யோகத்தைப் பற்றியும், 9-லிருந்து 11-ஆவது அத்தியாயம் வரையில் பக்தி யோகத்தைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. 12-ஆவது அத்தியாயத்தில் அவ்விரண்டும் ஒப்பிட்டுப் பார்க்கப் பட்டிருக்கின்றன.

## தியான யோகம்

### (அத்தியாயங்கள் 6-லிருந்து 8-வரையில்)

தத்துவ ஞானியையும் தீவிர ஞானியையும் குறிக்க இங்கே சற்று வேறான சொற்றொடர் உபயோகிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். (அத்தியாயம்-6, சுலோகங்கள் 1-4). ஒருவர் யோகமாகிய குன்றுகளைத் தாண்டிவிட்டார். மற்றொருவர் அவற் றைத் தாண்டவேண்டியவராக இருக்கிறார். அந்த உயர்ந்த ஸ்தானத்தை அடைவதில் வெற்றி பெற்று, உழைப்பிலும், தீவிர மான செயலற்ற நிலையிலும் அமைதி பெற்று ஆனந்தம் அடை வோர், அந்த நிலை மிக்க கடுமையான முயற்சியின் பலனே என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒருவன் உயர்ந்த நிலையை அடைவதற்கோ அல்லது வீழ்ச்சியுறுவதற்கோ அவனே காரணமாக இருக்கிறான். அவன், தானே தனக்கு நண்பனாகவோ அல்லது விரோதியாகவோ இருக்கிறான். தன்னைத் தானே வென்றவனால்தான், ஆன்மிகப் பெருமையை உணரும் கலையில் தேர்ச்சிபெற்றவனால்தான், விரோதியையும் நண்பனையும், இன்பத்தையும் துன்பத்தையும், மரியாதையையும் அவமரியாதை யையும், மண்ணாங்கட்டியையும் தங்கத்தையும் சம நோக்குடன் பார்க்க இயலும். தியான யோகத்தின் முறையை எடுத்துக் கூறுவதற்கு, கடுமையான முயற்சியைப் பற்றி இங்கே குறிப்பிட வேண்டியது அவசியமாகும் (அத்தியாயம்-6, சுலோகங்கள் 5-9). இந்த வழியில் செல்ல முற்படும் ஒருவனுக்குத் தேவையான ஆன்மிகத் தகுதிகளை, 10-லிருந்து 17 வரையில் 8 சுலோகங்கள் சுருக்கமாகக் குறிப்பிடுகின்றன. ஆன்மாவின் மூலஸ்தானத்தில் அமைதியாக இருக்க உறுதிகொண்டிருப்போருக்கு உதவியாக இருக்கக் கூடிய அவசியமான ஸ்தூல சூழ்நிலைகளைப் பற்றியும் அந்த சுலோகங்கள் விவரிக்கின்றன.

ஒருவர் இந்த வழியைத் தேர்ந்து எடுத்துக்கொள்ள நினைக்கு முன், சில மூலாதாரமான தகுதிகளைப் பெறவேண்டும். வெளிப் புறத் தூய்மை, பிரம்மச்சரியம், உடலிலும், எண்ணத்திலும், மனத்திலும் இச்சைகளைக் கட்டுப்படுத்துதல் ஆகியவையே அதற்கு அத்தியாவாசியமான தகுதிகள் ஆகும். எனினும், ஒருவன் பலாத்காரமாக இச்சைகளை அடக்க முற்படக் கூடாது. பிரகிரு திக்கு, மிதமான, எனினும் அவசியமான உணவு, தண்ணீர்,

ஓய்வு, தூக்கம் முதலியவற்றை அவன் கொடுக்க வேண்டும். இந்த யோகம், கஷ்டமான உழைப்பை அடிப்படையாகக் கொண்ட நடவடிக்கையாகும். எனவே, அதற்கு பொறுமையும், எல்லை மீறிய தீவிர முறைகளைத் தவிர்க்க வேண்டியதும் அவசியம். அத்தகைய தகுதிகளுடன் யோகி உட்கார்ந்து ஆன்ம சிந்தனையில் உறுதியுடன் ஈடுபடவேண்டும். காற்று இல்லாத இடத்தில் உள்ள தீபத்தின் ஜ்வாலை சிறிதும் அசையாமல் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைப்போல் அவனும், எத்தகைய சூறுவளிக்கும் அசைந்துகொடுக்காமல் உறுதியுடன் இருக்கவேண்டும். அவன் எவ்வளவோ முயற்சி செய்தும்கூட, மனம் தவிர்க்க முடியாத அதனுடைய வழக்கம் காரணமாக அலைந்துகொண்டிருக்கும். எனவே, சலியாத உழைப்பின் மூலம் மெதுவாகவும், சிறிது சிறிதாகவும் மனத்திற்குக் கடிவாளம் போட்டு அதை அடக்க வேண்டும். அவற்றின் மூலம் மனம் உறுதி பெறும்படி செய்து, அதை ஆன்மாவுடன் இறுகப் பிணைக்கவேண்டும். அதன்பின், குழப்பம் உண்டாக்கும் எண்ணங்களெல்லாம் நின்றுவிடும். அந்த நிலையை அடையும்போது, அது வர்ணிக்க முடியாதவாறு அவ்வளவு அற்புதமானதாக இருக்கும். அப்போது மற்ற பலன்களிலோ, மற்ற லாபங்களிலோ, ஆனந்தத்தைக் கொடுக்கும் மற்ற விஷயங்களிலோ எவ்வித ஆசையும் இராது. அதுதான் யோகம் அல்லது பேரானந்த நிலையுடன் ஐக்கியம் அடைவதாகும்; ஆன்மா அல்லாததிடமிருந்தும், தீமைகளிடமிருந்தும் தொடர்பை அறவே கத்தரித்துக்கொண்டு விடுவதாகும்; அதுதான் பிரம்மத்துடன் நிரந்தரமான தொடர்பு கொண்டு குற்றம் குறையற்ற பேரானந்த நிலையை எய்துவதாகும். இன்பத்தையோ அல்லது துன்பத்தையோ லட்சியம் செய்யாத முனிவர்கள், தங்கள் நிலையைக் குறித்து பேரானந்தம் அடைவதைக் காட்டிலும் அதைச் சகித்துக்கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. ஆனல், மேலே குறிப்பிட்ட அபூர்வமான ஆன்மாக்கள் அந்த முனிவர்களைப் போல் இருக்கமாட்டார்கள். அந்த ஆன்மாக்களின் பேரானந்தம் அவர்களுக்குத் தெவிட்டாது. அதாவது, போதும் என்ற திருப்தி ஏற்படாத பேரானந்தத்தை அவர்கள் அனுபவித்துக் கொண்டிருப்பார்கள் (அத்தியாயம்-6, சுலோகங்கள்-18-28).

இந்த யோகமானது வாழ்க்கையில் நிரூபிக்கப்படவேண்டும். யோகத்தில் உறுதி பெற்று எல்லாவற்றையும் சமமாகக் கருதுவோன், எல்லா உயிர்களிடத்திலும் ஒரே ஆன்மாவைக் காண்கிறுன் என்று கிருஷ்ண பகவான் கூறுகிருர். அந்த ஆன்மா இறைவனே யாவார். எனவே, அவன் எல்லாவற்றிலும் இறைவனையும், இறைவனிடத்தில் எல்லாவற்றையும் காண்கிறுன்.

மகாபாரதத்திலிருந்து மேற்கோள் காட்டும் ஒரு வியாக்கியான கர்த்தா இவ்விதம் கூறுகிருர்: "மேகத்திலிருந்து மின்னல் பளீரென்று ஒளி வீசுவதைப் போல், தன்னைத்தானே அறிந்துகொண்ட நிலையை எய்தியிருக்கும் யோகியின் பார்வையிலிருந்து இறைவன் பளீரென்று ஒளி வீசுகிருர்."

பரந்து விரிந்துகிடக்கும் யோகியின் அன்பு, எல்லா உயிர்களையும் தழுவி நிற்கின்றது. எனவே யோகி, எல்லா உயிர்களையும் தன்னில் ஒரு பகுதியாகவும், ஓர் அம்சமாகவும் கருதுவது இயல்பேயாகும். அன்பு, பற்றின்மை இரண்டு நிலையிலும் அவன் ஒரே விதமாகவே இருப்பான். அத்தகைய ஒருவனிடமிருந்து கடவுள் ஒருபோதும் மறைவதில்லை. கடவுளிடமிருந்தும் அவன் ஒரு காலத்திலும் மறைவதில்லை. இது, கிருஷ்ண பகவானின் மகத்தான உறுதிமொழியாகும். அத்தகைய யோகியைக் கடவுள் கைவிடுவதில்லை. கடவுளையும் அவன் கைவிடுவதில்லை என்று கிருஷ்ணன் கூறுகிறார். அத்தகைய ஒரு யோகி எப்படி வாழ்ந்தாலும், எப்படி இருந்தாலும் அவன் தன்னிடத்திலேயே (கிருஷ்ணனிடத்தில்) வாழ்வதாகவும் இருப்பதாகவும் கிருஷ்ண பகவான் சொல்லுகிறார் (அத்தியாயம்-6, சுலோகங்கள்-29-32). ப்ளோடினஸ்* கூறுவதாவது: "அமைதியாகவும் தன்னந் தனியாகவும் கடவுளுடன் ஐக்கியத் தன்மையை நிலைநிறுத்திக்கொள்ளுபவனின் மனம் உறுதியான நிலையிலிருந்து சிறிதும் வழுவுவதில்லை; அது உறுதியே உருவாகிவிடுகின்றது. அப்போது அவன் கண்ணைக் கவரும் எத்தகைய அழகையும் கண்டு பரபரப்பு அடைவதில்லை. ஏனெனில், அவன் அழகைக் கண்டு மயங்கும் நிலையைக் கடந்தவனாகி விடுகிறான்; தார்மிகச் சிறப்புகளைக் கூடக் கடந்தவனாகி விடுகிறான்."

ஆனால், அர்ஜுனன் சொல்லுகிறான்: "உலகத்தில் உள்ள எல்லாச் சிருஷ்டிகளையும் சமமாகக் கருதும் யோகம் எளிதான காரியம் அல்ல. மனம் நிலையற்று அலைந்து திரியும் தன்மை உடையது. எனவே, அதற்குக் கடிவாளம் போட்டு அதைக் கட்டுப்படுத்துவதைவிட காற்றையே கட்டுப்படுத்திவிடலாம். அப்படியிருக்க, அந்த சமத்துவ பாவத்துடன் அல்லது ஐக்கியத் தன்மையுடன் ஒருவன் எப்படி உறுதியாக நிலைநிற்க முடியும்?"

அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் கூறும் பதில் இதுதான்: "ஆமாம், நீ கூறுவது உண்மையே. இருந்தாலும் சலியா உழைப்பினாலும், உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவதாலும், அடங்காப் பிடாரியான மனத்தைக் கூட அடக்குவதில் வெற்றிபெறமுடியும். உண்மையில் அந்த இரண்டும் முக்கியமானவை. வெறிக் குணங்களை அடக்க முடியாத ஒருவன், யோகத்தைப்பற்றிச் சிந்திக்கவே கூடாது. ஆனால், அவற்றை அடக்கியவனுக்கு ஒழுங்கான முறையினால் யோக சாதனையில் வெற்றிபெறுவது கஷ்டமல்ல."

---

*ப்ளோடினஸ் (கி.மு. 203-262) ஒரு கிரேக்க தத்துவ ஞானி. கிறிஸ்தவ சகாப்தத்தின் ஆரம்பத்தில் பல நூற்றாண்டுகள் வரையில் அவரது கொள்கை கிறிஸ்தவர்களிடையே மிகுந்த செல்வாக்குடன் பரவியிருந்தது. மனத்தைச் சிதறவிடாமல் உயர்ந்த சிந்தனைகளில் உறுதியுடன் நிலைபெறச் செய்தால், ஒருவிதமான பரவச நிலையை அடையலாம் என்பதும், அந்நிலையில் கடவுளைக் காணலாம் என்பதுமே நியோப்ளேடோனிஸம் (Neoplatonism) என்று கூறப்படும் அவரது கொள்கையாகும்.

"இருந்தாலும் யோகத்தில் அக்கறையுடையவன் தனது முயற்சியில் தோல்வியடைந்து விட்டால், அவனுடைய கதி என்ன? அவனுக்கு இங்கேயும் நன்மை ஏற்படாது, அங்கேயும் நன்மை ஏற்படாது அல்லவா? அவன் பிரம்ம மார்க்கத்தை அடையும் நோக்கத்துடன் கைவிட்ட வைதிகச் சடங்குகளின் மார்க்கத்திலிருந்தும் நழுவியவன் ஆவான்; அவன் பிரம்ம மார்க்கத்தை இழந்து, அதையும் அடைய முடியாமற் போய்விடும்" என்று அர்ஜுனன் மீண்டும் கூறுகிறான்.

அர்ஜுனனின் அந்த சந்தேகத்தை கிருஷ்ண பகவான் தீர்த்து, அவனுக்கு மீண்டும் பின்வருமாறு உறுதி கூறுகிறார்: "அதன் சம்பந்தமான எந்த முயற்சியும் வீணாவதில்லை. யோக மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்து அவ்வழியில் சென்றுகொண்டிருப்பவன், எக்காலத்திலும் இம்மையிலோ அல்லது மறுமையிலோ துன்பத்திற்கு உள்ளாவதில்லை. மனிதன் எண்ணிக்கையற்ற பிறவிகள் எடுத்து வளர்ச்சி அடைந்த பிறகே, பிரம்மத்துடன் ஐக்கியம் அடைகிறான். ஒரு ஜன்மத்தில் அவன் செய்தது எவ்வளவு குறைவாக இருப்பினும், லட்சியத்தை நோக்கி அவன் ஒரு அடி எடுத்து வைத்தவன் ஆகிறான். உடலை விட்ட சிறிது காலத்திற்குப் பிறகு, அவன் மேற்கொண்டு தனது லட்சியத்தை அடைவதற்கு உதவி அளிக்கக் கூடிய ஒரு குடும்பத்தில் வந்து மீண்டும் பிறக்கிறான். முன் ஜன்மத்தில் எந்த இடத்தில் தனது பயிற்சியைக் கைவிட்டானோ அதிலிருந்து, மீண்டும் தனது லட்சியத்தை நோக்கி முன்னேறத் தொடங்குகிறான். எனவே, சோர்வுக்கோ, அவநம்பிக்கைக்கோ இடமில்லை. அவன் தேர்ந்து எடுத்துக்கொண்டிருக்கும் யோக மார்க்கம், வைதிகச் சடங்குகளை முக்கியமாகக் கொண்ட மார்க்கத்தை அவன் மீண்டும் திரும்பிப் பார்க்கும்படி விட்டுவிடாது." (அத்தியாயம்-6, சுலோகங்கள்-33-44)

எனினும், அவன் ஒவ்வொரு பிறவியிலும் தனது முயற்சியைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டியவனாக இருக்கிறான். இதைப்பற்றி சந்தேகத்திற்கே இடமில்லை. அத்தகைய யோகி, தனது உடலைச் சித்திரவதைகளுக்கு உள்ளாக்கி தவம் புரிகிறவனைக் காட்டிலும் மேலானவன்; கல்வி கற்பதில் ஆனந்தம் அடைகிறவனைக் காட்டிலும் சிறந்தவன்; வைதிகச் சடங்குகளில் கட்டுண்டு கிடப்பவனைவிட யோகி உயர்ந்தவன் என்பதில் சந்தேகமே இல்லை (அத்தியாயம்-6. சுலோகங்கள்-45-46). "அந்த யோகிகளிலும், எவன் என்னிடம் பூரண நம்பிக்கை வைத்து, என்னை பக்தியுடன் பூஜிக்கிறானோ, அவன்தான் எல்லோரையும் விட மிகவும் மேலானவன் என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்" (அத்தியாயம்-4 சுலோகம்-47). மற்ற எல்லாவற்றையும்விட பக்தி யோகத்தையே கிருஷ்ண பகவான் அதிகமாக விரும்புகிறார் என்பது, இந்தக் கடைசி சுலோகத்திலிருந்து நன்கு தெரிகிறது. இந்த உண்மை, 12-ஆவது அத்தியாயத்தில் தகுந்த வாதங்களுடன் நிரூபிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

ஏழாவது அத்தியாயத்தின் ஒரு பகுதியைப்பற்றி, இந்த ஆராய்ச்சியின் முன்னுரையில் நாம் சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறோம். உலகத்தின் இயல்பைப்பற்றியும், தியான யோகி அறிந்துகொள்ளும் சத்தியமான பொருளைப்பற்றியும் ஏழாவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. எனினும், அந்த சத்தியப் பொருளை பூரணமாகக் காண்பதற்கு, ஆயிரத்தில் ஒருவன்தான் முயற்சிக்கிறான். அவ்விதம் முயற்சிப்போரிலும், ஆயிரத்தில் ஒருவன்தான் வெற்றியடைகிறான்.

இந்தத் தோற்றம்தான் பரம்பொருளின் தோற்றமாகும். அத் தோற்றத்தில், உயர்ந்ததென்றும் தாழ்ந்ததென்றும் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. எல்லா உயிர்களையும் இணைக்கும் மூலாதாரமான நூலைப்போல் இருப்பதுதான் உயர்ந்த அம்சம்; ஸ்தூலமான இந்த உலகம்தான் தாழ்ந்த அம்சமாகும். இவ்விதமாக, சிருஷ்டியில் உயிருள்ள, உயிரற்ற எல்லாப் பொருட்களிலும் அந்தப் பரம்பொருள் வியாபித்திருக்கிறது; எல்லாவற்றையும் பாதுகாக்கின்றது; எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கின்றது. ஒரு மாலையில் உள்ள ரத்தினக் கற்களை அதில் உள்ள சரடு இணைப்பதுபோலவே, பரம் பொருள் எல்லோரையும் இணைத்து நிற்கின்றது. உயிர் வாழும் எல்லாவற்றிலும் மூன்று குணங்களும் ஊடுருவியிருக்கின்றன. அவை யாவும் பரம்பொருளின் மூலமே வாழ்கின்றன. எனினும், அவையெல்லாம் தெய்வீக சக்தியின் சின்னம் என்பதையும், தோற்றம் என்பதையும் அறிந்துகொள்ளுவதற்குப் பதிலாக, மாயையில் ஆழ்ந்திருப்போர் வெளித் தோற்றத்தை உற்றுப் பார்க்கிறார்கள்; சாரமான உட்பொருளை மறந்து விடுகிறார்கள்.

இந்த உலகம், மாயை உருவமான ஒரு மர்மமேயாகும். அது, தெளிவாகப் புலப்படுத்த வேண்டிய ஒரு பொருளை மறைத்து விடுகிறது. கண்களால் பார்க்கும் பொருளாகிய திரையின்மூலம், கண்களுக்குத் தெரியாத பொருளை நாம் பார்க்கவேண்டியவர்களாக இருக்கிறோம். "அநித்தியமான இந்த உலகம் முழுதும் பரந்த ஒரு பளிங்குத் திரையாகும். அதன்மூலம் அழிவற்ற நித்தியமான பொருள் பிரகாசிப்பதை நாம் காண்கிறோம்" என்று ஹென்ரி டிரம்மண்ட் கூறுகிறார். ஆனால், தீச் செயல்களைப் புரிந்தவர்கள் அல்ல, அருள் பெற்றவர்களே, நற்செயல்களைப் புரிந்தவர்களே அந்தத் தோற்றத்தைக் காண்கிறார்கள். கடவுளைத் தங்களுடைய புகலிடமாகச் செய்துகொண்டவர்களே, அந்தத் திரையை ஊடுருவிப் பார்க்க முடியும்.

இத்தகைய பக்தர்களில் நான்கு பிரிவினர் இருக்கின்றனர். ஒரு பிரிவைச் சேர்ந்தவன் பக்திக்கு வெகுமதியாக, துன்பத்திலிருந்து விடுதலையை நாடுகிறான். மற்றொரு பிரிவினன், அறிவை நாடுகிறான். வேறொரு பிரிவினன், ஸ்தூலமான லாபத்தை நாடுகிறான். நான்காவது பிரிவைச் சேர்ந்தவன், கடவுளையே நாடுகிறான். கடைசியாகக் கூறப்பட்டவனே ஞானி ஆவான். மற்ற

எல்லோரையும் விட அவன்தான் சிறந்தவன். அவனுக்கு வேறு ஒரு நோக்கமும் இல்லை; வேறு ஒரு லட்சியமும் இல்லை அவன், தான் மறைந்து கொள்ள வேறு ஒரு புகலிடத்தையும் நாடவில்லை. அவன் கடவுளின் ஆன்மாவாகவே இருக்கிறுன். அவனது முயற்சி பல பிறவிகளில் தொடர்ந்து வந்திருக்க வேண்டும். அதன் பலனுகவே அவன் கடவுளின் தோற்றத்தைக் காண்பதில் வெற்றி பெறுகிறுன். அவன்தான் எல்லாவற்றிலும் வாசுதேவனைக் காண்கிறுன் (அத்தியாயம்-7, சுலோகங்கள்-1-19).

வேறு லட்சியங்களை உடையவர்களும் இருக்கிறுர்கள் என்றும், அவர்கள் அந்த லட்சியங்களை அடைவதற்காக வேறு தெய்வங்களை நாடுகிறுர்கள் என்றும் கிருஷ்ண பகவான் கூறுகிறுர். ஆனல், அவர்களுடைய நம்பிக்கையில் அவர் குறுக்கிடவில்லை. அதற்கு மாருக, அவர்கள் தங்களுடைய நம்பிக்கையில் உறுதியுடன் இருக்கும்படி செய்கிறுர். அவர்கள் எதை நாடுகிறுர்களோ அதையும் வழங்குகிறுர். ஆனல், அத்தகையோர் அடையும் பலன் ஓர் எல்லைக்கு உட்பட்டதே. ஏனெனில், முடிவற்ற, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை அவர்கள் ஓர் எல்லைக்கு உட்படுத்திவிடுகிறுர்கள் அல்லவா? அவர்கள் தங்களுடைய சிறிய தெய்வங்களுக்கு அப்பால் பார்ப்பதில்லை. எல்லோரையும் மயக்கும் கடவுளின் மர்மம் அப்படிப்பட்டது. பிறவாத, மாற்ற முடியாத கடவுளின் தோற்றத்தை அது மறைக்கின்றது.

மனிதன், பரம்பரையாக விருப்பு வெறுப்புகளுடன் பிறக்கிறுன். அவை, அவனது மனத்தையும் புலன்களையும் வெளியேயுள்ள பொருள்களை நோக்கி இழுக்கின்றனவேயன்றி, தன்னுள் பார்க்கும்படி அவனை அவை ஒருபோதும் விடுவதில்லை. பாவங்களை அறவே களைந்தவர்கள்தான், துக்ககரமான, பரம்பரையான அந்த நிலையிலிருந்து விடுதலை பெற்று, உறுதியான நம்பிக்கையுடன் கடவுளைச் சரண் அடைகிறுர்கள். அவர்கள் பிரம்மத்தை முழுமையும் அறிகிறுர்கள். அதாவது, அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் ஆகியவை உள்ளடங்கிய பிரம்மத்தைப் பூரணமாக அறிகிறுர்கள். இறக்கும் தறுவாயில் அவர்கள் கடவுளின் தோற்றத்தையும் காண்கிறுர்கள் (அத்தியாயம்-7, சுலோகங்கள்-20-30).

புதிர் போன்ற அத்தனை பெயர்கள் உள்ள இந்த பிரம்மமானது, அர்ஜுனனுக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. அவை, பரம்பொருள் தன்னை மாற்றிக்கொள்ளும் பல்வேறு கட்டங்களே ஆகும். பரம்பொருள் தன்னை தனித்தனி அம்சங்களாக மாற்றிக்கொள்ளுகிறது. பின்னர், அவையெல்லாம் பரம்பொருளில் வந்து ஐக்கியம் அடைந்துவிடுகின்றன. பரம்பொருள் தன்னை பிரகிருதியாக மாற்றிக் கொள்ளுகிறது. இதைத்தான் அத்யாத்மம் என்கிறேம். பிரகிருதி, கர்மா அல்லது செயலில் ஈடுபடத் தொடங்குகிறது. அதன் பலனுக அழியக் கூடிய சிருஷ்டிகள் உண்

டாகின்றன. இவற்றைத்தான் அதிபூதம் என்று கூறுகிறோம். சிருஷ்டிக்கப்பட்ட ஒவ்வொன்றிலும் ஓர் எல்லைக்கு உட்பட்டுள்ள பரம்பொருளையே அதிதைவம் என்று குறிப்பிடுகிறோம். அந்த ஒவ்வொன்றும் யக்ஞத்தின் சக்தியினால் தூய்மையாக்கப்பட்டு அதி யக்ஞமாகின்றது. பிறகு அது மீண்டும் ஆதியில் உள்ள பிரம்மமாக விரிவடைகின்றது. இந்த முழு மர்மத்தையும், பரிபாஷையை விலக்கிவிட்டுப் பார்ப்போமாயின், உண்மையில் யக்ஞ விதி சம்பந்தமான மர்மத்தைத் தவிர இதில் வேறு எத்தகைய மர்மமும் இல்லை. இந்த யக்ஞ விதியைப் பற்றி நாம் மூன்றாவது அத்தியாயத்தில் தெரிந்து கொண்டிருக்கிறோம். எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் தனித்தனி நபர்களாக மாறுவதற்காகத் தன்னையே தியாகம் செய்துகொள்ளுகிறது. பிறகு தனித்தனி நபர்கள் ஆதி நிலையை அடைவதற்காகத் தங்களையே தியாகம் செய்துகொள்ளுகிறார்கள் (அத்தியாயம்-8, சுலோகங்கள் 1-4).

ஒருவன் இந்த உடலை உதறித் தள்ளும்போது பிரம்மத்தின் தோற்றத்தைக் காண்பது, ஒரு ரகசியமாகும். இறக்கும்போது ஒருவன் தன் சிந்தனைகளை யெல்லாம் கடவுளிடத்தில் நிலைநிறுத்த வேண்டும். இவ்விதம் செய்பவன் வேறு எங்கேயும் செல்லுவதில்லை, கடவுளிடமே செல்லுகிறான். மரணம் அடையும்போது கடவுளைப் பற்றிச் சிந்திப்பது, தற்செயலாக நிகழும் சம்பவம் அல்ல; ஆயுட்காலம் முழுவதும் அனுசரித்துவந்த ஒரு வழக்கத்தின் உச்ச நிலையே ஆகும். "ஆதலால், நீ எதைச் செய்தாலும்- வெளியே உள்ள அந்தகார சக்திகளை எதிர்த்து போரிட்டாலும் அல்லது உள்ளே இருக்கும் அந்தகார சக்திகளை எதிர்த்துப் போரிட்டாலும் -எப்போதும் என்னை நினைத்துக் கொண்டே செய்" என்று கிருஷ்ண பகவான் கூறுகிறார். வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாமல் அப்பழுக்கற்ற பக்தியுடன் பரம்பொருளை ஒருமித்த மனத்துடன் தியானிப்பதில் தன் சக்தியை உபயோகிக்க வேண்டும். (அத்தியாயம்-8, சுலோகங்கள் 5-8). இங்கே கீதையில், பரம்பொருளைப் பற்றிய வர்ணனை அடங்கியிருப்பதுடன், பரம்பொருளை எவ்விதம் தியானிப்பது என்பதும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

'ஓம்' என்பதே, அழிவற்ற அந்தப் பரம் பொருளின் சின்னமாகும். 'ஓம்' என்பதுதான் லட்சியமும், லட்சியத்தை அடைவதற்கான முறையும் என்று கடோபநிடதத்தில்* உள்ள சுலோகம்

---

*सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीम्योमित्येतत् ॥
एतद्ध्येवाक्षरं ब्रह्म ह्येतदेवाक्षरं परम् ।
एतद्ध्येवाक्षरं ज्ञात्वा यो यदिच्छति तस्य तत् ॥
एतदालम्बनं श्रेष्ठ मेतदालम्बनं परम् ।
एतदालम्बनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ॥

कठोपनिषद्–१-२-१५-१७

கூறுகின்றது. அதை அடிப்படையாகக்கொண்ட கீதையின் சுலோகமும் அவ்விதமே பிரகடனம் செய்கின்றது. இதுவும், மற்ற உபநிடத சுலோகங்களும் தீர்க்கதரிசிகளின் ஆன்மிக, மானசிக அனுபவத்தை வடித்துக் கொடுத்திருக்கின்றன. அவர்கள் 'ஓம்' என்ற சின்னத்தின் மகத்துவத்தை அறிந்து, அதைத் தங்களுடைய ஆன்மிக லட்சியத்தை அடைவதற்கான மந்திரமாக உபயோகித்தனர். பிரச்ன உபநிடதமும்* ஓங்காரத்தைப் பற்றிப் பின் வருமாறு கூறுகிறது: "'ஓம்' என்ற சின்னத்துடன் எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை யார் தியானிக்கின்றாரோ அவன், பாம்பு தன் சட்டையை உரித்துக் கொண்டு அதிலிருந்து விடுபடுவதைப் போலவே, பாவத்திலிருந்து விடுதலை அடைகிறான். உடலில் உறையும் இறைவனை அவன் காண்கிறான். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் காட்டிலும் அந்த இறைவனை அவன் நன்கு காண்கிறான். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் காட்டிலும் அந்த இறைவனே மேலானவன். உண்மையில் விஷயம் அறிந்தவன், 'ஓம்' என்ற அசைச் சொல்லின் ஆதரவுடன் சாந்தமான, மூப்பற்ற, அழிவற்ற, பயமே இல்லாத பரம்பொருளை அடைகிறான்" (அத்தியாயம் - 8, சுலோகங்கள்-9-15).

பின்னர் வரும் சுலோகங்கள், தோன்றி மறையும் நிலையற்ற காட்சியை வர்ணிக்கின்றன; எப்போதும் நிலைத்திருக்கும் பொருளில் மனிதனின் மனம் பதியும்படி செய்கின்றன. உலகங்கள் இடைவிடாமல் அழிந்து கொண்டும், மீண்டும் தோன்றிக்கொண்டும் இருக்கின்றன. எல்லாம் முடிவே இல்லாத கர்மாவாகிய சங்கிலியினால் கட்டுண்டிருக்கின்றன. பலன்களை அடைய வேண்டும் என்று நற்செயல்களைப் புரிவோர் கூட அந்தச் சங்கிலியினால் கட்டுண்டிருக்கின்றனர். அவர்கள் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய பலன்களை அடைவதற்காக, தாங்கள் ஆர்வத்துடன் கோரும் பல்வேறு உலகங்களையும் அடைகின்றனர். எனினும், பிரம்ம

---

இந்த சுலோகங்களின் கருத்து: எல்லா வேதங்களும் எந்தப் பொருளைப் போற்றுகின்றனவோ, எதை அடைவதற்காகத் தவங்களைச் செய்கிறார்களோ, எதை விரும்பி பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கிறார்களோ, அந்தச் சொல்லை உனக்கு நான் சுருக்கிக் கூறுகிறேன். அதுதான் 'ஓம்' என்பதாகும். அறியத் தகுந்ததும், அடையத் தகுந்ததுமான பொருளை 'ஓம்' என்று யார் அறிகிறாரோ, அவன் அதை அடைகிறான். 'ஓம்' என்ற பதத்தின் மகிமையை அறிந்தவன், பிரம்மலோகத்தில் கௌரவிக்கப்படுகிறான்; பிரம்மத்துடன் கலந்து பிரம்மத்தைப்போல் பூஜிக்கப்படுகிறான்.

*மேலே கொடுக்கப்பட்டுள்ள அர்த்தத்திற்கு பிரச்ன உபநிடதத்தில் உள்ள மூல வாக்கியங்கள் பின்வருமாறு:

यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यत एवं ह वै स पाप्मना विनिर्मुक्त...स एतस्माज्जीवघनात्परात्परं पुरीशयं पुरुषमीक्षते...तमोङ्कारेणैवायतनेनान्वेति विद्वान्यत्तच्छान्तमजरममृत मभयं परं चेति ॥

प्रश्नोपनिषद् ५-७

லோகத்தை அடைவோர் கூட மீண்டும் பிறந்தாகவேண்டும். ஏனெனில், பிரம்மா உட்பட எல்லோருமே இந்தச் சுழலில் சிக்கிக்கொள்ளுகிறார்கள்.

ஆயிரம் யுகங்களுக்கு ஒரு தடவை காலம் ஆரம்பமாகிறது. ஆயிரம் யுகங்கள் பிரம்மாவுக்கு ஒரு பகலாகும். அந்தக் காலம் ஆரம்பமாகும் போது, கண்களுக்குத் தோன்றாத நிலையிலிருந்த யாவும் கண்களுக்குத் தோன்றும் நிலையை அடைகின்றன. பின்னர், ஆயிரம் யுகங்கள் சென்று பிரம்மாவின் இரவு வரும்போது, அவை மீண்டும் தோன்றா நிலையை அடைகின்றன. மறைந்த உயிர்களின் அதே கூட்டம் பிரம்மாவின் ஒவ்வொரு பகலிலும் மீண்டும் பிறந்து, பிரம்மாவின் இரவு வரும் வரையில் பல்வேறு பிறவிகளை எடுக்கின்றது. உயிர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இடையறாத இந்த நடவடிக்கை தொடர்ந்து நிகழ்ந்து வருகின்றது (அத்தியாயம்-8, சுலோகங்கள்-16-19). அதே கருத்தை ஒன்பதாவது அத்தியாயத்தில் உள்ள 7-10 சுலோகங்களில் மீண்டும் காண்கிறோம். அங்கே, பிரம்மாவின் பகல், 'கல்பம்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தோன்றா நிலையை கிருஷ்ணபகவான் ''என்னுடைய பிரகிருதி'' என்று கூறுகிறார். ''என்னுடைய கட்டுப்பாட்டின் கீழ்" உயிர்கள் சிருஷ்டிக்கப் படுகின்றன!என்றும் அவர் கூறுகிறார். இந்த வர்ணனை, தாம்சன்* எழுதியுள்ள 'பயங்கர இரவு சூழ்ந்த நகரம்' என்ற கவிதையில் உள்ள சில விறுவிறுப்பான பின்வரும் வரிகளை நமக்கு நினைவூட்டுகின்றன: ''சிறிது காலமே நீடிக்கும் இந்த அற்பவாழ்வை நாம் சகித்துத் தீரவேண்டியவர்களாக இருக்கிறோம். அதன் பின் சவக்குழியின் மிகப் புனிதமான அமைதியை நாம் பெறுவது நிச்சயம்தான். நாம் ஒருபோதும் விழித்தெழாத தூக்கத்தில் ஆழ்ந்து விடுகிறோம். அவ்வாறாக, நமது வாழ்க்கை முடிவடைகின்றது. துரதிருஷ்டம் வாய்ந்த மானிட வர்க்கத்தைச் சேர்ந்த நாம், பிறப்பு இறப்பாகிய சுழலைக் கடந்து, பிறகு மற்றவர்களுக்கு அதில் இடம் கொடுக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். நமது வர்க்கம் ஆரம்பமாவதற்கு முன் பல யுகங்கள் சென்றுவிட்டன. கடைசி மனிதன் போன பிறகும் பல யுகங்கள் சென்றுவிட்டன. புவியின் சவக்குழியிலும் கருக்குழியிலும் எண்ணித்தொலையாத எத்தனை எத்தனையோ பேர்கள் சென்றுவிட்டனர். எல்லா உயிர்களும் வாழ்கின்றன, எண்ணிக்கையற்ற உருவங்கள் எடுத்து இடைவிடாத போராட்டத்திலும், ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புள்ள எண்ணிக்கையற்ற செயல்களிலும் ஈடுபடுகின்றன. பூமியில் ஒருவர் பிறக்கிறார் எனில், எல்லாக் காலங்களிலும் எல்லா சக்திகளும் அந்தப் பிறப்புக்கு ஆதரவாகவும் உதவியாகவும் இருக்கின்றன. உலகமெல்லாம் ஒன்றுசேர்ந்தால் கூட அதை மாற்றவோ அல்லது தடுக்கவோ முடியாது. உலகம் முழுவதும் நல்லதோ அல்லது கெட்டதோ, அருளோ

* ஜேம்ஸ் தாம்சன் (1834-1882) ஸ்காட்லந்தைச் சேர்ந்த ஒரு சிறந்த ஆங்கிலக் கவிஞர். அவர் எழுதிய கவிதைகளுள் 'பயங்கர இரவு சூழ்ந்த நகரம்' மிகப் புகழ்பெற்றது

அல்லது சாபமோ இருப்பதற்கான அறிகுறி எதையுமே நான் காணவில்லை. எல்லாம் தவிர்க்க முடியாத அவசியம் காரணமாக இயங்குகின்றன. எல்லாம் எல்லையற்ற மர்மமாக இருக்கின்றன; எப்போதும் எங்கும் ஆழ்ந்த அந்தகாரமே நிலவுகின்றது; அந்த அந்தகாரத்தை அகற்றி ஒளியைக் கொடுக்கும் சிறு தீப்பொறியைக்கூட காணமுடியவில்லை. ஒரு கனவில் தோன்றும் நிழல் உருவங்களைப் போலவே, அந்த, அந்தகாரத்தினிடையே நாம் நடமாடி வருகிறோம்.''

இது, தயவு தாட்சண்யமற்ற கர்ம வினையைப் பற்றிய சக்தி வாய்ந்த ஒரு வர்ணனையாகும். எனினும், தாம்சன் கூறுவதைப் போல் நாம் 'மற்ற உயிர்களுக்கு இடம்' கொடுப்பதில்லை. நாமே 'எண்ணிக்கையற்ற உருவங்களை', அதாவது பிறவிகளை எடுக்கிறோம். எண்ணிக்கையற்ற யுகங்கள் வரையில் இந்தக் காட்சி தொடர்ந்து செல்லுகிறது. மற்றும் 'சவக்குழியின் மிகப் புனிதமான அமைதியையும்' நாம் காண்பதில்லை. ஏனெனில், நாம் மீளாத தூக்கத்தில் ஆழ்ந்து, மறுபடியும் விழித்துக் கொண்டுவிடுகிறோம், அதாவது, மீண்டும் பிறக்கிறோம். ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புள்ள செயல்களில் ஈடுபட்டு நாம் போராடுவதாகக் கவிஞர் கூறுவது, அவரது கூற்றுக்கே முரண்பாடாக இருக்கிறது. எப்படியெனில், அவையெல்லாம் ஆழ்ந்த அந்தகாரமான மர்மமாக இருக்கிறது என்றும், அதை விளக்க ஒரு சிறு பொறியின் ஒளியைக்கூட காண முடியவில்லை என்றும் அவரே கூறுகிறார். இந்த வேற்றுமையின் அடிப்படையில் ஒற்றுமை இருந்தாலொழிய, எல்லா விஷயங்களும் கண்மூடித்தனமான அவசியத்தினால் அல்ல, கடவுளைக் குறிக்கும் சட்டத்தினால் இயங்குவதாக இருந்தாலொழிய, எண்ணிக்கையற்ற செயல்களின் மூலம் நாம் நெருங்கிய தொடர்பு உள்ளவர்களாக இருக்க முடியாது. நாம் நாடவேண்டிய அமைதி, இறந்தபின் ஏற்படும் அமைதி அல்ல, கடவுளிடம் அடைக்கலம் புகுவதன் மூலம் காணும் அமைதியேயாகும். கீதையிலிருந்து பின்னர் வரும் சுலோகமானது அந்த சிந்தனையைப் பூர்த்தி செய்கிறது. எனவே, தாம்சனின் பயங்கரமான வர்ணனையை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. அதன் சம்பந்தமாக, கிருஷ்ண பகவான் கூறுகிறார்:

''உருவம் உள்ளதும் உருவமற்றதும் இறுதியானவை அல்ல. உருவம் இல்லாததற்கும் மேலாக பிரம்மம் இருக்கிறது. அது தான் எல்லாவற்றையும்விட மகோன்னதமானது, உறுதியாகவும் நிரந்தரமாகவும் இருப்பது, அழிவற்றது. மற்றவையெல்லாம் அழிந்துவிடுகின்றன. மகோன்னதமான பிரம்மத்தினிடம் எல்லா உயிர்களும் இருக்கின்றன; எல்லா உயிர்களிடத்திலும் பிரம்மம் இருக்கிறது. அதுதான் மிகவும் உயர்ந்த ஸ்தானமாகும். அதை அடைந்தவர்கள் மீண்டும் திரும்பிவரமாட்டார்கள். பிரம்மமாகிய பரம்பொருளினிடம் குற்றம் குறையற்ற உறுதியான பக்தியே அதை அடைவதற்குற்ற வழியாகும். பிரம்மத்தினிடம் கொண்டு

போய்ச் சேர்க்க அந்த வழி ஒருபோதும் தவறியதில்லை" (அத்தியாயம்-8, சுலோகங்கள்-19-22).

ஆயிரம் யுகங்கள் கொண்ட ஒரு நாள் என்பதைக் கண்டு யாரும் திகில் அடைய வேண்டிய அவசியமில்லை. அதனால் எவருக்கும் உற்சாகமே ஏற்படவேண்டும். பரம்பொருளை அடைவதற்குப் பல ஜன்மங்கள் எடுக்கவேண்டியிருப்பது நன்மையே ஆகும். அப்படியானால்தான் ஒவ்வொரு ஜன்மத்திலும் மீண்டும் மீண்டும் அம் முயற்சியில் மேற்கொண்டு ஈடுபடுவதற்கு வசதியாக இருக்கும். இதெல்லாம் ஒருவரைப் பொறுமையுள்ளவராகச் செய்வதுடன், தான் தூசிக்கு சமம் என்று எண்ணும் பணிவு உள்ளவராகவும் செய்கிறது. பௌதிக சாத்திர நிபுணரான பிளாங்க்* கூறுவதாவது: "தனி மனிதனும், மனித வர்க்கம் முழுவதும், அகில உலகமும், எல்லையற்ற இயற்கையின் பரப்பில் ஒரு தூசியேயாகும். எந்த மனிதனின் மூளையினாலும் இயற்கையின் விதிகள் பாதிக்கப்படுவதில்லை. அதற்கு மாறாக அவை, பூமியில் உயிர் எதுவும் உண்டாவதற்கு முன்பே இருந்தன; உலகிலிருந்து கடைசி பௌதிக சாத்திர நிபுணர் இறந்த வெகு காலத்திற்குப் பின்னரும் தொடர்ந்து இருந்துவரும்."

இயற்கையின் அந்த விதிகளில் ஒன்று தியாகம் என்பதை தீர்க்கதரிசிகள் கண்டுள்ளனர். அந்த விதிக்கு இணங்கவே, யோகி தனது வாழ்க்கையை நடத்தவேண்டியவனாக இருக்கிறான். அவன் தன்னை சூன்யமாக்கிக்கொண்டு, உலக ஆன்மாவுடன் ஒன்றாகிவிடவேண்டும். இவ்விதம் செய்பவன், சம்பிரதாயமான பாதைகளை, அதாவது தேவர்களும், பிதுருக்களும் அறிந்த பாதைகளைக் கடந்து சென்றவனாகிறான். அவன் பாதைகளின் ரகசியத்தை அறிந்து ஒளி வீசும் பாதையையே லட்சியமாகக் கொண்டு வாழ்வான் அவ்வாறாக அவன், வேதங்களால் உறுதி கூறப்பட்டுள்ள சில்லறையான வெகுமதிகளை, அதாவது நற்பலன்களைக் கடந்து சென்று, இறுதியான லட்சியமாகிய பரம்பொருளை அடைகிறான். (அத்தியாயம்-8, சுலோகங்கள் 23-28).

## பக்தி யோகம்

### (அத்தியாயங்கள் 9-11)

தியான யோகத்தையும், தியான யோகியையும் பற்றி இப்போது தெரிந்துகொண்டுள்ளோம். உருவமற்ற பரம்பொருளைத் தியானிப்பதில் தனது மனத்தையும் ஆன்மாவையும் அர்ப்பணம் செய்பவனே தியான யோகி யாவான். அந்தப் பாதையில் செல்லுவதற்குக் கடுமையான முயற்சி தேவை என்பதையும் பார்த்

* ஜெர்மன் பேராசிரியரான டாக்டர் மாக்ஸ் பிளாங்க் (1858-1947) உலகத்தில் உள்ள தலைசிறந்த பௌதிக சாத்திர நிபுணர்களில் ஒருவர். பௌதிக சாத்திர சம்பந்தமான சில புதிய நுட்பங்களைக் கண்டு பிடித்ததற்காக, 1918-ஆம் ஆண்டில் அவருக்கு, பௌதிக நோபல் பரிசு வழங்கப்பட்டது.

தோம். இப்போது நமக்கு பக்தி மார்க்கம் விவரிக்கப்படுகிறது. உருவம் உள்ள கடவுளிடம் முற்றிலும் ஈடுபடுவதே பக்தியாகும் மாபெரும் மர்மம், சாத்திரங்களுக்கெல்லாம் ராஜா, தூய்மையாக்கும், எல்லாவற்றிற்கும் மேலான தருமம் என்றெல்லாம் பக்தி யோகம் வர்ணிக்கப்பட்டுள்ளது. இதுவரை விவரிக்கப்பட்ட வழிகளைவிட, பக்தி மார்க்கமே எவரும் நேரடியாக அறிந்து கொள்ளக்கூடியது. பயிற்சி செய்வதற்கும் அதுதான் எளிதாகும். கடவுளின் தோற்றம் எப்படி இருக்கிறதோ அப்படியே அவரை அறிந்துகொள்ளுவதும், அவருடைய அவதாரங்களின் தத்துவத்தை பகுத்தறிவினுல் உணர்ந்து கொள்ளுவதுமே பக்தி யோகத்தின் அடிப்படையாகும். நம்பிக்கையுள்ளவர்கள் மாத்திரமே இந்த வழியை மேற்கொள்ளுகிருர்கள். ஏளனம் செய்பவர்களும், நிந்திப்பவர்களும், மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பு என்கிற காலச் சக்கரத்தைச் சுற்றி வருகிருர்கள் (அத்தியாயம்-9, சுலோகங்கள் 1-3).

9, 10, 11 ஆகிய மூன்று அத்தியாயங்களிலும், பக்தியோகத்திற்குத் தேவையான ஞானத்தின் பின்னணியாக உள்ள முறைகள் நமக்கு எடுத்துக் கூறப்படுகின்றன. அழிவற்ற, உருவமற்ற பரம்பொருளான கிருஷ்ண பகவான், உருவம் உள்ளவராகிருர். அவரிடத்தில் உலகம் இருக்கிறது. ஆனல், உருவமற்ற அவர் அந்த உலகத்தில் இல்லை. ஏனெனில், அவர் உலகத்தைக் கடந்தவராக இருக்கிருர். எல்லா ஜீவன்களையும் அவர் தாங்குகிருர். ரத்தின மாலையில் உள்ள சரடு எல்லா ரத்தினங்களையும் இணைப்பது போலவே அவர் எங்கும் வியாபித்திருக்கிருர். எல்லாவற்றிற்கும் அவர்தான் ஆதாரமேயன்றி, அவருக்கு அவையெல்லாம் ஆதாரம் அல்ல. மேலும், அவரிடம்தான் எல்லாம் அடங்கியிருக்கின்றன. அவர், பூரணமாக அடங்கக்கூடிய பொருள் எதுவுமே இல்லை. காற்று எவ்விதம் வானத்தைப் பாதிக்காமல் சஞ்சரிக்கின்றதோ அதுபோலவே, அவரை எள்ளளவும் பாதிக்காமல் எல்லா உயிர்களும் அவரிடத்தில் வாழ்கின்றன; அவரிடத்திலேயே நடமாடுகின்றன (அத்தியாயம்-9, சுலோகங்கள் 4-6).

கடவுள் எப்படி சிருஷ்டிக்கிருர்? எல்லாவற்றிலும் அவர் எப்படி இருக்கிருர்? அவர் எல்லாமாக எப்படி இருக்கிருர்? அதாவது யக்ஞம், காணிக்கை, ஓஷதிகள் (மரம், செடி, கொடிகள்), மந்திரம், தீ, ஹோமம், தந்தை, தாய், சிருஷ்டி கர்த்தா, நண்பர், லட்சியம், இருப்பிடம், ஆதி, முடிவு, மரணம், மரணமின்மை, கொடுப்பவர், கொடுக்காமல் வைத்துக் கொள்ளுபவர், யக்ஞங்களில் கொடுப்பவற்றையெல்லாம் வாங்கிக் கொள்ளுபவர் எல்லாம் அவரேதான். இவையெல்லாம் இந்த அத்தியாயத்தில் வர்ணிக்கப்படுகின்றன. (அத்தியாயம் 9, சுலோகங்கள் 16-19, 24).

மேலும் பிறவாத, ஆதியற்ற அவரே எல்லாவற்றிற்கும் பிறப்பிடம், எல்லாவற்றிற்கும் ஆரம்பம். தெய்வங்கள், மனத்தின் பல்வேறு நிலைகள், மகோன்னதமான பிரம்மம், என்றென்றும் இருக்கும் பரம்பொருள், மூலகர்த்தா எல்லாவற்றிற்கும் அவரே தான் ஆதி புருஷர். "அதெல்லாம் மாத்திரம் அல்ல, மேற் கொண்டும் எல்லாம் தாங்களே" என்கிருன் அர்ஜுனன். அவன் மேலும் கூறுவதாவது: "எல்லோரையும் திகைக்க வைக்கும் ஆச்சரியகரமான உங்களுடைய சக்தியை, ஈடு இணையில்லாத சக்தியை, தேவர்களும் ரிஷிகளும் கூட அங்கீகரித்திருக்கிருர்கள். யோகிகளுக்கெல்லாம் மேலான யோகியே! உங்களுடைய பல்வேறு உருவங்களையும் நான் அறிந்து கொள்ளலாமா? நான் அறிந்துகொண்டால், அவையெல்லாம் என்னை எப்போதும் உங்களையே நினைத்துக் கொண்டிருக்கும்படி செய்யும்" (அத்தியாயம்-10, சுலோகங்கள்-1-8, 12-18).

அர்ஜுனனின் இந்த வேண்டுகோள், மீண்டும் தமது பல்வேறு உருவங்களையும்பற்றி வர்ணிக்க, கிருஷ்ண பகவானுக்கு மற்ருெரு சந்தர்ப்பத்தை அளிக்கிறது. கிருஷ்ணன் சொல்லுகிருர்: "எல்லாவற்றிற்கும் ஆதியும், இடைக்காலமும், இறுதியும் நான் தான். மனிதனின் கண்ணும், மனமும், கற்பனையும் எதை எல்லாவற்றையும் விட உயர்ந்ததாக, எல்லாவற்றையும் விடச் சிறந்ததாகக் கருதுகின்றனவோ அது நான்தான். உண்மையான அல்லது கற்பனையான சிருஷ்டிகள் எல்லாவற்றிலும், சொர்க்கத்திலோ அல்லது பூமியிலோ உள்ள எல்லாவற்றிலும், உலகத்திலோ அல்லது மனிதனின் மனத்திலோ உள்ள எல்லாவற்றிலும் எது சிறந்ததோ, எது மேலானதோ அது நான்தான். எல்லாவற்றிற்கும் விதை நானே. இந்த உலகில் செழுமையும் வளமையும் வாய்ந்தது எதுவாயினும், அழகு வாய்ந்தது எதுவாயினும், மகத்துவம் வாய்ந்தது எதுவாயினும், அவையெல்லாம் என்னுடைய மகிமையின் ஓர் அணுவிலிருந்து உண்டானவையே. என்னுடைய ஒரு சிறு அம்சமே உலகம் முழுவதையும் தாங்கி நிற்கின்றது" (அத்தியாயம்-10, சுலோகங்கள்-12-42).

பகவான் மேலும் தம்மைத் தாமே வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அர்ஜுனன் விரும்புகிருன். காதால் கேட்பதைக் காட்டிலும் கண்ணுல் பார்ப்பது இன்னும் அதிக உண்மையானதாக இருக்கும் அல்லவா? கண்ணுல் கண்டால்தான் நம்பிக்கை உண்டாகும். கடவுளின் தோற்றத்தைக் காணும் பாக்கியம் தனக்குக் கிடைக்குமா என்று அவன் ஏங்குகிருன். பகவானும் அவனது விருப்பத்திற்கு இணங்குகிருர். அதன் பலனுக, அவன் முன் உள்ள உலகத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. ஆனுல், அவனது பார்வையில்தான் மாறுதல் ஏற்படுகிறது. அதாவது, அவனது பார்வைக்கு தெய்விகமான சக்தி ஏற்படுகிறது. அதன் பலனுக அவன், தன்னுடைய ஞானக் கண்ணுல் அதற்குமுன் எக்காலத்திலும் கண்டிராத காட்சிகளையெல்லாம் காண்கிருன். பகவான் யாதொரு மாறுதலுமின்றி

அங்கே இருக்கிறார். அவரது உருவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. ஆனால், அர்ஜுனனின் நிலையில்தான் மாறுதல் உண்டாகின்றது. ஞானக் கண்ணால் அவன் ஆதி அந்தமற்ற, நிரந்தரமான பரம் பொருளை ஒரு விநாடியில் காண்கிறான். "ஒரு சிறிய இட..த்தில் இயற்கையின் எல்லாப் பொக்கிஷங்களையும் காண்கிறான்." ஒரே இடத்தில் உலகம் முழுவதையும் பார்க்கிறான். ஒருவரிடத்தில், பல்வேறு வகையான, பதினாயிரக் கணக்கான உருவங்களை ஒரே உருவமாகக் காண்கிறான்!

யுத்த வரலாற்றை, அந்தகனான திருதராஷ்டிரனிடம் விவரித்துக் கூறும் கடமையை மேற்கொண்டுள்ள சஞ்சயன், இதையெல்லாம் பக்கத்தில் நின்று கொண்டு பார்க்கிறான். இந்த இடத்தில் சஞ்சயன் குறுக்கிட்டு, அந்த தெய்விகமான நாடகத்திற்கு அதிக அழகையும் வண்ண ஒளியையும் வழங்குகிறான். ஏனெனில், பகவானின் தோற்றம், அர்ஜுனனைப்போல் சஞ்சயனையும் திக்பிரமை கொள்ளும்படி செய்கிறது. எனவே, இந்த இடத்தில் அவன் வரலாற்றை நிறுத்திவிட்டு, பகவானின் தோற்றத்தைக் கண்டு தனக்கு உண்டான ஆச்சரியத்தை திருதராஷ்டிரனிடம் கூறுகிறான். ஈடுஇணையே இல்லாத அந்த அற்புதமான தோற்றத்தை, கண்ணில்லாத மன்னன் எவ்விதம் உணர்ந்துகொள்ளும்படி செய்வது? ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியன்கள் சேர்ந்து அற்புதமாகப் பிரகாசிப்பதை ஒருவர் கற்பனை செய்துகொள்ள முடியுமாயின், மிகவும் அதிசயமான அந்தத் தோற்றத்தைப்பற்றி, சிறிதளவு அறிந்து கொள்ளலாம் என்று சஞ்சயன் கூறிவிட்டு, அந்தத் தோற்றத்தைக் கண்டு அர்ஜுனன் மெய்சிலிர்த்துக் கூறியதைச் சொல்லத் தொடங்குகிறான்.

அர்ஜுனனின் ஞானக் கண்கூட, அவனது அத்தோற்றத்தின் பேரொளியையும், பயங்கரத்தையும் தாங்க முடியவில்லை. எனவே, அவன் வாயிலிருந்து பேச்சு பீறிட்டுக் கிளம்புகிறது. பின்னர் அவனால் பேசவும் முடியவில்லை. பேச முடியாதபோது அவனது கண்கள் பகவானின் அற்புதமான தோற்றத்தில் லயித்து விடுகின்றன. உலகம் முழுவதும் பரந்துள்ள, எல்லையற்ற, எங்கும் வியாபித்துள்ள, எல்லாம் வல்ல உருவத்தை அர்ஜுனன் கண்டு மாறி மாறி அதிசயத்தில் ஆழ்ந்து விடுகிறான், பயத்தினால் நடுங்குகிறான். அந்த உருவத்தில் சாந்தமான அம்சமும் இருக்கிறது, பயங்கரமான அம்சமும் இருக்கிறது. கண்களுக்குக் குளிர்ச்சியையும், மனத்திற்கு ஆறுதலையும் அளிக்கும் சந்திரன், பகவானின் கண்களில் ஒன்றாகக் காட்சி அளிக்கிறான். கண்களைப் பறிக்கும் பிரகாசம் உள்ள சூரியன் மற்றொரு கண்ணாகத் தென்படுகிறான். உயிரையும் உற்சாகத்தையும் அளிக்கும் சூரியனும் அங்கே இலங்குகிறான். வரண்டு போகும்படி செய்யவும், எரிக்கவும் சக்திவாய்ந்த சூரியனும் அங்கே ஒளி வீசுகிறான். பதினாயிரக்கணக்கான உருவங்கள் பகவானை பூஜைசெய்து

கொண்டிருக்கின்றன. பதினுயிரக் கணக்கான உருவங்கள் அவரது எரிமலை ஜ்வாலையினுல் விழுங்கப்பட்டுவருகின்றன. மாபெரும் யுத்த வீரர்கள், விளக்கில் விழும் விட்டில் பூச்சிகளைப்போல் அந்த தெய்விகமான ஊழித் தீக்குள் அதிவேகமாகப் பிரவேசித்து அழிவது தெரிகின்றது.

பகவான், பயங்கரமே அவதாரம் எடுத்தவராக இருக்க முடியுமா? அந்தக் கேள்விக்கு பகவானே பதில் கூறுகிருர்: "நான் பயங்கரமே உருவான மூர்த்தி மாத்திரமல்ல, எல்லோரையும் அழிக்கவல்ல ஊழிக்காலம் நானே. இந்தக் காரியத்திற்காகவே நான் அவதாரம் எடுத்திருக்கிறேன். இந்தப் போர் வீரர்களின் மரணத்தைக் குறித்தே நீ கலக்கமும் பீதியும் அடைந்தாய். உன்னுடைய பீதியே உன்னை வாய்விட்டுப் புலம்பும்படி செய்தது. ஆனுல், அவர்கள் யாவரும் ஏற்கனவேயே என்னுல் பட்சிக்கப்பட்டுவிட்டார்கள். இப்போது நீ வெறும் கருவியாக இருந்து அவர்களைக் கொல்லுவாயாக."

முதன் முதலாக, இரண்டாவது அத்தியாயத்தில் அர்ஜுனனின் மனத்தைச் சூழ்ந்துகொண்டிருந்த அந்தகாரம் மின்னெளியால் அகன்று, அழிவற்ற ஆன்மாவைப்பற்றி அவன் அறிந்து கொண்டான். இப்போது இரண்டாவது மின்னெளி அவன் மன இருளை அறவே அகற்றிவிடுகிறது. "நீ அல்ல, நான்தான் எல்லாவற்றிற்கும் காரணம். நீ இதுவரையில் அந்த உண்மையை அறிந்து கொள்ள முடியாவிடில், இப்போது உன்னுடைய கண்களாலேயே அதைப் பார். உன் செயல்களின் பலாபலன்களை என்மீது போட்டு விட்டு, நீ யுத்தம் செய்" என்று கிருஷ்ண பகவான் கூறுகிருர்.

ஜ்வாலைபோல் ஒளிவீசும் பகவானின் விசுவரூபத்தை நேரில் கண்டதால், அர்ஜுனனின் மனத்தில் உறுதி ஏற்படுகிறது. அந்த இடத்திலேயே அவன் பகவானைத் தோத்திரம் செய்து பிரார்த்திக்கிருன். "நீங்கள் பிறவாதவர் வயது அற்றவர், இருப்பவர், இராதவர், எல்லையுள்ளவர், எல்லையில்லாதவர், எல்லாவற்றிற்கும் மூலாதாரமான பஞ்ச பூதங்களும், மற்ற எல்லாமும் தாங்களே! தங்களிடத்தில் எல்லாவற்றையும் காண்கிறேன். தாங்கள் முன்புறத்திலும் பின்புறத்திலும், மேலேயும் கீழேயும், எல்லா இடங்களிலும் இருக்கிறீர்கள். எந்த இடத்திலிருந்து உங்களுக்கு நமஸ்காரம் செய்வது? முதலிலும், கடைசியிலும், மத்தியிலும் முடிவின்றியும்* உங்களை எல்லோரும் பிரார்த்திக்க வேண்டும்" என்றெல்லாம் அர்ஜுனன் தோத்திரம் செய்கிருன்.

---

*"நான் சொர்க்கத்திற்குச் சென்ருல் நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். நான் நரகத்தில் என் படுக்கையை விரித்தால், அங்கேயும் நீங்கள் இருக்கிறீர்கள். எனக்கு இறக்கைகள் முளைத்து, நான் மகாசமுத்திரத்தைத் தாண்டிச் சென்று வாழ்ந்தாலும்கூட அங்கேயும் உங்களுடைய கைதான் எனக்கு வழிகாட்டியாக இருக்கும்; என்னைக் காப்பாற்ற உங்களுடைய வலது கை என்னைப் பிடித்துக்கொண்டிருக்கும்."

—பைபிள், கீதம் 139. 8–10.

பக்திப் பெருக்கினல் அவனுக்கு மூச்சே நின்றுவிடும் போல் இருக்கிறது. எல்லாமாக இருக்கும், எல்லாவற்றையும் தாங்கும் பகவானை மீண்டும் பயபக்தியுடன் தோத்திரம் செய்கிருன்:

“என்னுடைய கண்மூடித்தனம் மன்னிக்க முடியாதது. கண் மூடித்தனத்திஞல் தங்களை நண்பன் என்றும், தோழன் என்றும் ஓர் எல்லைக்கு உட்படுத்திவிட்டேன். தங்களை ஏளனம் செய்தேன்; அவமதித்துக் கூட இருக்கிறேன். ஒரு தந்தை தன் புதல்வனையும், ஒரு நண்பன் தன் நண்பனையும், ஒரு காதலன் தன் காதலியையும் மன்னிப்பது போல் என்னை மன்னிப்பீர்களா?”

அர்ஜுனனின் நன்றிக்கும், பக்திக்கும், ஆனந்தத்திற்கும் எல்லையே இல்லை. அதே சமயம் அவனை பயமும் பற்றிக்கொள்ளுகிறது. “அருள் சுரக்கும் தங்களுடைய முந்திய வடிவத்தையே மீண்டும் எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் எப்படி இருந்தீர்களோ, அதுபோலவே மீண்டும் இருங்கள்” என்று அர்ஜுனன் பிரார்த்திக்கிருன் (அத்தியாயம்-*11*, சுலோகங்கள் *1-47*).

பக்தனுக்கு, எத்தகைய அற்புதமான தோற்றத்தை இறைவன் காட்டுகிருர்! பகவானை, சிருஷ்டி கர்த்தாவாகவும், நன்மைகளை அளிக்கும் தந்தையாகவும் *9*-ஆவது அத்தியாயத்தில் அர்ஜுனனைப் போல் ஒரு பக்தன் காணலாம். அவரை, எல்லாவற்றையும் ரட்சிப்பவராகவும், எல்லாவற்றையும் தாங்குபவராகவும் *10*-ஆவது அத்தியாயத்தில் இருப்பது போல் காணலாம். எல்லாவற்றையும் அழிப்பவராக *11*-ஆவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைப் போல் பக்தன் காணலாம். அந்த பக்தன் அர்ஜுனனைப் போல் இருந்தால், உலகம் முழுவதும் வியாபித்துள்ள, பேரானந்தத்தை உண்டாக்கும் கடவுளின் தோற்றத்தைப் பார்க்கலாம். அத்தகைய தோற்றத்தைக் காணும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், அவன் கண்களைத் திறந்துகொண்டு நடந்தால், கடவுளைக் காண்பான். எல்லாப் பொருட்களிலும், எல்லாப் படைப்புகளிலும், தெளிவான நீல வானத்தில் உள்ள நட்சத்திரங்கள், நிலையற்ற மேகங்கள், புஷ்பங்கள், மரங்கள் ஆகியவற்றிலும், ஓடைகளின் அடித்தளத்தில் இருக்கும் ஒவ்வொரு சிறிய கூழாங்கல்லிலும், உறுதியாக நிற்கும் பாறைகளிலும், ஓடும் தண்ணீரிலும், கண்ணுக்குத் தெரியாத காற்றிலும் பகவான் ஒளிவீசிக்கொண்டிருப்பதை அவன் காண்பான். “நிலையற்ற இந்த பூமியின் மடியில் தவழ்ந்துகொண்டிருக்கும் நாங்கள் உங்களுடைய (இறைவனுடைய) முகத்தின் தெளிவற்ற பிரதிபிம்பங்களை மாத்திரம் பார்க்க அனுமதிக்கப்படுகிறோம். அப்படியிருந்தும்கூட அதைக் கண்டு நாங்கள் பேரானந்தம் அடைகிறோம்; எங்களுடைய ஆன்மா பூரிப்படைகின்றது!” என்று பணிவுடனும் பயபக்தியுடனும் அந்த பக்தன் பரவசம் அடைகிருன்.

இறைவனின் மகிமையை இடைவிடாது கானம் செய்து கொண்டும், உறுதியான பக்தியுடன் அவரிடத்தில் கட்டுண்டும் பக்தர்கள் அவரைக் கைகூப்பி வணங்கி, பூஜை செய்கின்றனர். அவர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இறைவனைத் தொடர்ந்து செல்லுகின்றனர். ஏனெனில், அவர்களுக்கு எல்லாமே கடவுள்தான். அவர்களுடைய தேவைகளையெல்லாம் பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. அவர்களுடைய தேவைகளையெல்லாம் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பை கடவுள் ஏற்றுக்கொள்ளுகிறார் (அத்தியாயம் 9, சுலோகம் 22). அவர்களுடைய சிந்தனைகளும், வாழ்க்கையும் அவரிடமே லயித்துவிடுகின்றன. அவர்கள் இறைவனைப் பற்றியே பேசுகின்றனர். அவரைத் தோத்திரம் செய்வதிலேயே அவர்கள் பேரானந்தமும் திருப்தியும் அடைகின்றனர். தருமமாகச் செயல்புரியும் சக்தியை, இறைவன் அவர்களுக்கு அருள்கின்றார்; அவர்களுடைய அறியாமையை என்றென்றும் போக்குவதற்கான ஞானக் கண்ணையும் அவர்களுக்கு வழங்குகின்றார் (அத்தியாயம்-10, சுலோகங்கள் 9-11). ஊமை பேசும்படியும், நொண்டி மலையைத் தாண்டும்படியும் இறைவன் செய்கின்றார். "என்னுடைய கண்ணால் உனக்கு நான் வழிகாட்டுகிறேன்" என்று இறைவன் மற்றொரு வேத நூலில் கூறியிருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

ஆனால், பக்தன் சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும். உண்மைத் தத்துவத்தில் அவனுக்கு உள்ள பிடியை அவன் தளர்த்திவிடக் கூடாது. அவனுக்கு விருப்பமான ஒரு தெய்வத்தை அவன் உபாசனை செய்யலாம். எனினும், அந்த உருவத்துடன் கடவுளுக்கு அவன் எல்லைகட்டிவிடக் கூடாது. அது, எல்லாவற்றிற்கும் மேலான பகவானின் ஒரு சின்னமே என்பதை அவன் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். (அத்தியாயம் 9, சுலோகங்கள்-11, 23 24). அவன் குறுகிய நோக்கம் கொண்டு வீண் நம்பிக்கையுடையவனாகவும், வீணான செயலில் ஈடுபடுபவனாகவும், குதர்க்க புத்தியுடையவனாகவும் இருக்கக்கூடாது (அத்தியாயம்-9, சுலோகம்-12).

"இறைவனைத் தோத்திரம் செய்வோர், மனப்பூர்வமாகவும் உண்மையுடனும் தோத்திரம் செய்ய வேண்டும்."* கடவுளைப் பூஜை செய்பவன் கடவுளையும், கல்லைப் பூஜை செய்பவன் கல்லையும் அடைகிறான் என்பதை பக்தன் அறிந்து கொள்ளவேண்டும் (அத்தியாயம்-9, சுலோகம் 25). பக்தன் உறுதியான நம்பிக்கையுடன் உண்மைத் தத்துவத்தைப் பற்றிக்கொண்டுவிடுவானாயின், அவனிடமிருந்து கடவுள் எதையும் எதிர்பார்ப்பதில்லை. அவன் என்ன செய்தாலும், அவன் வேலை செய்தாலும், சாப்பிட்டாலும், யாகம் செய்தாலும், தவம் செய்தாலும், கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால் போதும். எவ்வளவு அற்பமான பொருளா

*இது பைபிளில் (ஜான் - 4. 24) உள்ள ஒரு வாக்கியமாகும்.

யினும், மனப்பூர்வமான பக்தியுடன் அளித்தால் கடவுள் அதை திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளுகிறார். தீண்டத்தகாத வகுப்பைச் சேர்ந்த சபரி, *காட்டுப் பழம் புளிக்காமல் ருசியாக இருக்கிறதா என்பதைக் கடித்து சோதனை செய்து பார்த்துவிட்டு இறைவனிடம் கொடுத்தாள். அவளுடைய பக்தி காரணமாக, பகவான் அந்தப் பழத்தை மிகவும் உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் சாப்பிட்டார். எனவே, பகவானைப் போல் சபரியையும் எல்லோரும் நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்விதம் தன்னையே மறந்த ஒரு பக்தன், ஒரே சமயத்தில் சந்நியாசியாகவும் யோகியாகவும் மாறி இறைவனை அடைகின்றான். பகவான் யாருக்கும் சலுகை காட்டுவதில்லை, யாருக்கும் சலுகை காட்டாமலும் இருப்பதில்லை. பகவானுக்கு யார் சொந்தமாகி விடுகிறார்களோ, அவர்களுக்கு பகவான் சொந்தமாகிவிடுகிறார். ஆயுள் முழுவதும் பாவம் செய்தவன்கூட, பகவானை அடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் இறப்பானாயின், அவன் 'முனிவன்' என்ற பட்டத்துக்கு உரியவனாகலாம். அவன் மனம்போன படி வாழ்ந்து தனது செல்வத்தையெல்லாம் வீணாக்கியிருந்தாலும்கூட, அவன், தந்தையின் தூதர்களில் ஒருவனாகத் திரும்பி வருகின்றான். "அவன் இறந்தான், மீண்டும் உயிர் பெற்றிருக்கிறான். அவன் காணாமற்போனான், மீண்டும் திரும்பிவந்திருக்கிறான்."† எனவே, யாதொரு ஆட்சேபணையுமின்றி அவன் முனிவனாகக்கூட அங்கீகரிக்கப்படுகிறான்.

"அர்ஜுனா, என்னுடைய பக்தன் எக்காலத்திலும் அழிவதில்லை என்பதை உறுதியாக அறிந்துகொள்" என்று கிருஷ்ண பகவான் கூறுகிறார். பக்தியின் மூலம் அடையும் மகோன்னதமான லட்சியம், குறிப்பிட்ட சாதி, மதம், பால், கொள்கை, இனம், அந்தஸ்து ஆகியவற்றின் ஏகபோக பாத்தியமல்ல. படிக்கத் தெரியாத பெண், அற்பமான பொருட்களை விற்கும் அங்காடிக் கடைக்காரர், அன்றாட உணவுக்காக அன்றாடம் உழைக்கும் தொழிலாளி ஆகியோர் மாத்திரம் அல்ல, இழிவான பிறவி எடுத்தவர் என்று வெறுக்கப்பட்டு நிந்திக்கப்படுவோர் கூட, பக்தியின் மூலம் சொர்க்கத்தின் வாயிலையே தாக்கி, அதன் கதவுகளைத் தங்களுக்குத் திறந்துவிடும்படி செய்ய முடியும். ஆனால், அவர்கள் செய்யவேண்டியது ஒன்றுதான். அதாவது தங்களுடைய பூஜை, வேள்வி, மனம், பற்றுதல்கள் எல்லாவற்

---

* ஸ்ரீ ராமனையும் லக்ஷ்மணனையும் களங்கமற்ற பக்தியுடன் உபசரித்து சொர்க்கத்தை அடைந்த சபரி என்ற கிழவியின் வரலாறு, ராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அதையே ஸ்ரீ மகாதேவ தேசாய் மேலே குறிப்பிட்டுள்ளார்.

† பைபிளில் உள்ள ஒரு வாக்கியமே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது. தொண்ணூற்றொன்பது புண்ணியசாலிகளைக் காட்டிலும், ஒரு பாவி மனம் மாறி நல்ல வழியில் திரும்புவானாயின், அதைக் குறித்து பரலோகத்தில் எல்லோரும் மிகவும் மகிழ்ச்சி அடைவதாக பைபிள் கூறுகிறது.

றையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிடவேண்டும் (அத்தியாயம்-9, சுலோகங்கள் 26-34).

வேதங்களாலும், தவங்களாலும், விலையுயர்ந்த காணிக்கைகளாலும், வேள்விகளாலும் யாதொரு பலனும் இல்லை. கலப்பற்ற, உறுதியான பக்தியினால் மாத்திரமே கடவுளைப் பற்றிய ஞானத்தை அடைய இயலும். ''எனக்காக செயல் புரிகிறவனும், என்னையே தன்னுடைய லட்சியமாகக் கொண்டவனும், என்னுடைய பக்தனும், எல்லாப் பற்றுதல்களையும் ஒழித்தவனும், துவேஷ புத்தியை அறவே கைவிட்டவனும் என்னை வந்து அடைகிறான்'' (அத்தியாயம்-11, சுலோகங்கள்-53-55).

கடவுள் கட்டளையின்படி நடப்பதையும், எப்போதும் அவரையே எண்ணிக்கொண்டு வாழ்வதையும் தவிர பக்தன் வேறு எதையும் அறியான். ''எனக்கு ஏசுநாதரே உயிர்'' என்று செயிண்ட் பால் பக்தியின் சாரத்தை ஒரே வாக்கியத்தில் அடக்கி விட்டார். பக்தியே அவருக்கு உயிராகவும், உணவாகவும் இருந்தது.

## தியான யோகமும் பக்தி யோகமும்

(அத்தியாயம்-12)

இரண்டு வகையான யோகிகளில் யார் சிறந்தவன்? உருவமற்ற கடவுளை தியானம் செய்பவனா? அல்லது தனக்கு எல்லாம் கிருஷ்ணன் தான் என்று கிருஷ்ணனையே பூஜிப்பவனா? இந்த இரண்டு வகையான பக்தியையும் பற்றி இந்த அத்தியாயத்தில் கிருஷ்ணன் சுருக்கமாகக் கூறுகிறார். 5–ஆவது அத்தியாயத்தில், எந்தக் காரணத்திற்காக ஞான யோகத்தைக் காட்டிலும் கர்ம யோகம் சிறந்தது என்று கிருஷ்ணன் கூறுகிறாரோ அதே காரணத்திற்காக, உருவமற்ற கடவுளைவிட உருவம் உள்ள கடவுளைப் பூஜிப்பதே சிறந்தது என்று கூறுகிறார்.

கர்ம யோகத்தின் பலனும் ஞான யோகத்தின் பலனும் ஒன்றுதான் என்பதை ஏற்கனவே பார்த்தோம். அதுபோலவே, தியான யோகம், பக்தி யோகம் ஆகிய இரண்டின் பலனும் ஒன்றுதான். தியான யோகி, பக்தி யோகி அதாவது பக்தன் இருவரும் இறைவனிடம் வந்து சேருகின்றனர். 5–ஆவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைப் போலவே, தியான யோகியின் வழி மிகவும் கடினமானது; கடுமையான உழைப்பையும் முயற்சியையும் முக்கியமாகக் கொண்டது. ஆனால், அதைக் காட்டிலும் பக்தி யோகியின் வழி எளிதாகும். எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளிடம் மனத்தைச் செலுத்தும் தியான யோகி, பல்வேறு மயக்கங்களிலிருந்தும் விடுதலை அடைந்தவனாக இருக்கிறான். அதன் பலனாக அவன், எந்த இடத்திலும் தன்னையே காண்கிறான், எல்லோருடைய நலனிலும் அவனது

மனம் முற்றிலும் லயித்துவிடுகிறது. எனினும், அவன் பரம் பொருளையே தியானிப்பதால், தன்னுடைய சொந்த ஆன்மிக சக்திகளையும் ஒழுக்கத்தையுமே அவன் நம்பவேண்டியிருக் கிறது. அவனது தூய்மையானது, எள்ளளவும் அப்பழுக் கற்ற உச்ச நிலையை அடைந்தாலொழிய, அவனுடைய முயற் சிக்கு முடிவே இல்லாமற் போகலாம். ஆனல், மனத்தில் வேறு எவ்வித சிந்தனையுமின்றி கடவுளையே உபாசனை செய்யும் பக்தன், அவரிடம் தன்னையே அர்ப்பணம் செய்து கொண்டு விடுகிறுன். எனவே, அவனிடம் எத்தனை பலவீனங்கள், குற்றம் குறைகள் இருந்தாலும் அவற்றையெல்லாம் கடவுள் பொறுத்துக் கொண்டு, அவன் படுபாதாளத்தில் வீழ்ச்சியடைந்திருந்தாலும் கூட அவனைத் தாமதமின்றி கைதூக்கி விடுகிருர். (அத்தியாயம்-12, சுலோகங்கள்-1-7).

உருவம் உள்ள கடவுளை பக்தியுடன் பூஜிப்பதன் பலனுகவே, உருவம் அற்ற பரம்பொருளை தியானம் செய்யும் பக்தி உண்டா கிறது. இதைத் தவிர, தியான யோகத்திற்கும் பக்தி யோகத் திற்கும் வேற்றுமை இல்லை. உலகத் தந்தையான கடவுளின் பல்வேறு மாளிகைகளிலும், விக்கிரக வழிபாட்டை வெறுத்த வரும், தியான யோகியுமான கபீருக்கும் இடம் உண்டு; விக்கிரக வழிபாட்டையே உயிராகக் கருதிய துகாராமுக்கும் இடம் உண்டு. "தாங்கள் உருவமில்லாமல் இருக்கவேண்டும் என்று யார் விரும்புகிருர்களோ அவர்களுக்கு, தாங்கள் உருவம் அற்ற வராக இருங்கள். ஆனல் எனக்காக, தாங்கள் ஓர் உருவத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய பெயரிலும் உருவத் திலும் நான் காதல் கொண்டுள்ளேன்" என்று துகாராம் பாடி யுள்ளார்.

கடவுளின் மாளிகைகளில் அகோவைப் போன்ற ஞான யோகிக்கும் இடம் உண்டு; நரசிம்ம மேத்தாவைப் போன்ற பக்த ருக்கும் இடம் உண்டு. பிறப்பு, இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெறுவதைத் தாம் விரும்பவில்லை என்றும், பரவசத்துடன் நந்த குமாரனை (கிருஷ்ணனை) பூஜை செய்வதற்காக தாம் அடிக்கடி ஜன்மம் எடுப்பதையே விரும்புவதாகவும் நரசிம்ம மேத்தா பாடி யுள்ளார். வேற்றுமைகளையெல்லாம் கடந்த, கடவுளையும் கடந்த ஒரு நிலைக்கு தம்மை உயர்த்தவேண்டும் என்று ஜெர்மன் ஞானி யான எக்கார்ட் மெய்ம்மறந்து கூறினர். சிலுவையில் ஏசுநாதரின் உருவத்தைக் கண்டபோதெல்லாம் செயின்ட் பிரான்ஸிஸ் தம்மை யும், உலகத்தையும் மறந்தார். மீராபாய்க்கு, உலகம் முழுவதும் கிரிதர கோபாலனுகவே (கிருஷ்ணனுகவே) தோன்றியது. கிருஷ்ணன் என்ற பெயரைக் கேட்டதுமே சைதன்யர் உலகத் தையே மறந்து பரவசம் அடைந்தார். காளியின் தோற்றம், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரை எல்லாவற்றையும் மறந்து, ஆனந்த பரவசமாகி சமாதி நிலையை அடையும்படி செய்தது.

உண்மைப் பரம்பொருளை இறுகப் பற்றிக் கொண்டவன், பெயர்களையும், உருவங்களையும், சின்னங்களையும் பற்றிக் கவலைப் பட வேண்டிய அவசியம் இல்லை. உருவம் உள்ள கடவுளை வணங்குவதை, ''மூடத்தனமான விக்கிரக ஆராதனை'' என்று வர்ணிப்பது சகிப்புத்தன்மையற்ற படுமோசமான மன நிலையே யாகும். வாக்கியங்களின் உட்பொருளைக் கவனியாமல் எழுத்துக் களுக்கும், புலன்களின் ஆசைகளுக்கும் அடிமையாக இருப்ப தைக் காட்டிலும் மோசமான விக்கிரக வழிபாடு வேறு எதுவும் இருக்க முடியாது. உண்மையான பக்தன், உண்மைத் தத்து வத்தை ஒரு நிமிடமும் மறக்கமாட்டான். துகாராமின் அழகான 'அபங்கம்' ஒன்றை வாசுதேவ கீர்த்திகர் 'வேதாந்த ஆராய்ச்சி கள்' என்ற அவரது நூலில் மேற்கோளாகக் கொடுத்துள்ளார். கவியும் ஞானியுமான துகாராம்* பாடுகிறார்:

''நான் சிவனைப் போல மண்ணினால் ஓர் உருவம் செய்தேன். ஆனால், அந்த மண் சிவன் அல்ல. மண் உருவத்திற்கு நான் செய்யும் பூஜை சிவனிடம் போய்ச் சேருகின்றது. ஆனால், அந்த மண் மண்ணாகவே இருக்கிறது. நான், கல்லில் ஒரு விஷ்ணு உருவம் செய்தேன். ஆனால், அந்தக் கல் விஷ்ணு அல்ல. எனினும் நான் செய்யும் பூஜை விஷ்ணுவை அடைகின்றது. அந்தக் கல் மாத்திரம் கல்லாகவே இருந்து வருகிறது. கல் ஈயத்தினால் நான் அம்பாள் உருவம் ஒன்றைச் செய்தேன். எனினும், கல் ஈயம் அம்பாள் அல்ல. கல் ஈயம், கல் ஈயமாகவே இருந்தாலும், நான் செய்யும் பூஜையை அம்பாள் ஏற்றுக்கொள் ளுகிறாள். அதுபோலவே, ஞானிகளான முனிவர்களும் பூஜிக்கப் படுகிறார்கள். அந்தப் பூஜை கடவுளையே அடைகின்றது. முனிவர் வேறு யாரும் அல்ல, கடவுளின் வேலைக்காரரே; கடவுளின் ஒரு கருவியே.''

---

*மகாராஷ்டிரப் பிராந்தியத்தில் 1600-ஆம் ஆண்டில் பிறந்த துகாராம் சிறந்த பக்தராகவும் ஞானியாகவும் திகழ்ந்தார். தெய்வ பக்தியே அவரது மதமாக இருந்தது. தூய்மையான மனத்துடன் கடவுளை வணங்குவதன் மூலமும், எல்லோரிடத்திலும் அன்பு காட்டுவதன் மூலமும் ஒருவர் சொர்க்கத்தை அடையலாம் என்பதே அவரது உபதேசமாகும். சாதி, சமய பேதம் எதுவுமின்றி துன்பத்திற்கு இலக்கானவர்களுக்கு உதவி புரிவதாலும், தன் சொந்தக் குழந்தைகளைப் போல் தன்னிடம் வேலை செய்யும் ஊழியர்களிடம் அன்பு காட்டுவதாலும் ஒருவர் கடவுளின் அருளைப் பெறலாம் என்பதும் அவரது பூரணமான நம்பிக்கை. அவர் இயற்றிய 'அபங்கங்கள்' அதாவது 'இடையறாத பாடல்கள்' மகாராஷ்டிரர்களிடையே இன்றும் மிக்க செல்வாக்குடன் விளங்கிவரு கின்றன. கடவுளின் பக்தர்களிடையே சாதி, மத வேற்றுமை எதுவுமே இல்லை என்பதையும், யாதொரு வேற்றுமையுமின்றி எல்லோரிடமும் அன்புகாட்டுவதன் மூலம் மோட்சத்தை அடையலாம் என்பதையும் அவரது பாடல்கள் வற்புறுத்துகின்றன. கடவுளை பூஜை செய்வதன் மூலம் பாவிகளும் பாவத்திலிருந்து விடுதலை பெறுகிறார்கள் என்றும் துகாராம் பாடியுள்ளார். துகாராமை, கீதை குறிப்பிடும் பக்தி யோகி என லாம். அவரது பக்திப் பாடல்கள் எவரது மனத்தையும் உருக்கும் சக்தி வாய்ந்தவை. துகாராம் மகாராஷ்டிர வீரரான சிவாஜியின் காலத்தில் இருந்தவர் என்றும், சிவாஜி அடிக்கடி துகாராமைச் சந்தித்துப் பேசுவது உண்டு என்றும் கூறப்படுகிறது.

பக்தி யோக மார்க்கத்தில் உள்ள எளிதான கட்டங்கள் இப்போது கூறப்படுகின்றன. வேறு சிந்தனையின்றி, கடவுளுக்காக கைங்கரியம் செய்வதில் முழுமனத்தையும் செலுத்த வேண்டும். அதுவும் கூட இயலாவிடில், எல்லாச் செயல்களின் பலனையும் துறந்துவிட வேண்டும். கடைசியாகக் கூறப்பட்டுள்ள இந்த வழி, மிகவும் எளிதாகவும் வசதியாகவும் இருக்கிறது. யந்திரத்தைப் போல் பலனையெல்லாம் துறக்க முற்பட்டால் கூட, அது ஒரு மனிதனைக் குற்றம் குறையற்ற பூரணமான துறவு நிலைக்கு உயர்த்திவிடுகிறது. அவ்விதம் பலனைத் துறப்பதென்ற வெறும் பழக்கமே, அதன் சாரத்தைப் பற்றிய ஞானம் உண்டாகும்படி செய்கிறது. இந்த ஞானம், ஒருவர் தமது சக்திகள் முழுவதையும் பலனைத் துறக்கும் விஷயத்தில் உபயோகிக்குமாறு தூண்டுகிறது. அதன் பலனாக, பலனை அறவே துறப்பதென்ற அப்பழுக்கற்ற பூரண நிலை உருவாகின்றது. அந்த நிலை நிரந்தரமான அமைதியைக் கொடுக்கின்றது. (அத்தியாயம்-12, சுலோகங்கள் 8-12).

பக்தி யோகத்தின் மூலாதாரமான சாரம், இறுதியாக உள்ள எட்டு சுலோகங்களில் அடங்கி யிருக்கிறது. 9-லிருந்து 12 வரையில் உள்ள நான்கு அத்தியாயங்களின் சுருக்கமும் அதுதான்.

பக்தி, வெறும் உணர்ச்சிப் பெருக்கினால் ஏற்படும் பரவசமான ஒரு நிலை மாத்திரமல்ல; பணிவே உருவான பூரண நிலையும், உயிர் வாழும் எல்லாவற்றிற்கும் தொண்டு செய்வதும், தனக்குப் புறம்பாக உள்ள மற்றவை என்ற வேற்றுமை உணர்ச்சியையும் துவேஷத்தையும் ஒழிப்பதும், கடவுளிடம் மனப்பூர்வமாக சரண் அடைந்து விடுவதில் திருப்தியும் ஆனந்தமும் ஏற்படுவதும், துக்கத்திலிருந்தும் ஆனந்தத்திலிருந்தும் விடுபட்டிருப்பதும், மன அமைதியைக் கெடுக்கும் எல்லாக் கவலைகளிலிருந்தும் விடுதலை அடைவதும்தான் பக்தியாகும். பக்தனின் வாழ்க்கை, உலகத்துடன் எவ்விதத் தகராறுமின்றி சுமுகமாக நடைபெறுகின்றது. உலகமும், யாதொரு தகராறுமின்றி அவனுடன் பழகுகின்றது. பக்தனுக்குப் பெருமகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயம், கடவுளின் கட்டளைப்படி நடப்பதே. தமது கட்டளைகளை நிறைவேற்றுபவனே, தம்முடைய அன்புக்குப் பாத்திரமான பக்தன் என்று பகவான் கூறுகிறார். அதுதான், பக்தியின் சாரமும், தருமத்தின் ஆணிவேரும் ஆகும். உருவம் உள்ள கடவுளைப் பூஜை செய்தாலும் சரி, தியானயோகத்தின் மூலம் உருவமற்ற கடவுளை வணங்கினாலும் சரி, அத்தகைய பக்தியை அடிப்படையாகக் கொண்டு யார் தனது வாழ்க்கையை நடத்துகிறானோ, அவன் தான் கடவுளின் பேரன்புக்குப் பாத்திரமாகின்றான் (அத்தியாயம்-12, சுலோகங்கள் 13-20).

# உலகமும் உண்மைத் தத்துவமும்

## (அத்தியாயங்கள்-13, 14)

## புருஷன், பிரகிருதி, ஞானம்

இந்த ஆராய்ச்சியின் முன்னுரையில் *13, 14*-ஆவது அத்தியாயங்களைப்பற்றி நாம் சாரமாகக் குறிப்பிட்டுள்ளோம். எனவே, அவற்றில் அடங்கியுள்ள விஷயங்களை இங்கே சுருக்கமாகக் குறிப்பிடுவதே போதுமானது. உலகத்தையும் உண்மைத் தத்துவத்தையும்பற்றி மற்ற அத்தியாயங்களிலெல்லாம் சிதறிக்கிடக்கும் உபதேசங்களை, *13*-ஆவது அத்தியாயம் ஒன்றுசேர்த்துக் கொடுக்கின்றது. மனிதனின் நடவடிக்கைகளுக்குக் காரணமாக இருக்கும் இடத்தையும் (உடல்), அந்த இடத்தை அறிபவனையும் பற்றி முதல் ஆறு சுலோகங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பின்னர், பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட பெயர்களால் அவை வர்ணிக்கப்படுகின்றன. அதாவது பிரகிருதி, புருஷன், எல்லாவற்றையும் வியாபித்துள்ள, எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ள புருஷோத்தமன் ஆகிய பெயர்களைப்பற்றியே வர்ணிக்கப்படுகின்றன. இந்த இரண்டுவிதமான வர்ணனைகளுக்கிடையே, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளைப்பற்றி புதிர்போல் வர்ணிக்கப்பட்டுளது. அதாவது, க்ஷேத்திரம் என்று கூறப்படும் இந்த உடலை அறிந்தவராக ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் விற்றிருக்கும் பரம்பொருளைப்பற்றி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. உருவம் அற்ற பரம் பொருள் என்ற முறையில், எதிர் மறையான எல்லாக் குணங்களும் அவருக்கு இருக்கின்றன. யாதொரு குணமும் இல்லாதது என்ற மகோன்னதமான குணமும் அவருக்கு உண்டு. உலகத்தில் உருவத்துடன் இருக்கும் கடவுள் என்ற முறையில் பிரத்தியட்ச உலகத்தின் எல்லாக் குணங்களும்கூட அவருக்கு இருக்கின்றன. (அத்தியாயம்-*13*, சுலோகங்கள்-*12-17*).

இந்த உண்மைத் தத்துவத்தைப் பற்றிய ஞானமே இறுதி லட்சியம் என்றும், எல்லாவற்றையும் விட மேலான நன்மை பயக்கக் கூடியது என்றும், அந்த லட்சியமே பிறப்பு இறப்பற்ற நிலையை அடையச் செய்கிறது என்றும் அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் கூறியுள்ளார். எனினும், அது அறிவை அடிப்படையாகக் கொண்ட ஒரு நடவடிக்கை என்ற மன மயக்கம் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக, கீதை, ஞானத்தைப்பற்றி விவரமாக விளக்க முற்படுகிறது. அந்த விளக்கத்தில் லட்சியத்தை அடைவதற்கான வழிகளும் கூறப்படுகின்றன. வழிகளை அறிந்து கொள்ளாமலும், பயிற்சி செய்து கொள்ளாமலும் திடீரென்று ஞானத்தில் குதித்துவிட்டதாக ஒருவர் கூறிக்கொள்ளுவாராயின், அது வெறும் கேலிக் கூத்தேயாகும். இறைவனிடத்தில் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற மனப்பூர்வமான லட்சியத்துடன் அதற்கான முறைகளை மேற்கொள்ள முற்படுவோர், முதலில் விவேகம்

உள்ளவராக இருக்க வேண்டும். கடவுளுடன் ஐக்கியம் அடைவது இறுதியான விடுதலையைக் குறிப்பதால், மனிதனின் பகுத்தறிவையும் மனத்தையும் கெடுக்கும் சில்லறைத் தீமைகளிலிருந்து முதலில் விடுதலை பெறவேண்டும். இதிலிருந்துதான் மேற்கண்ட விளக்கம் ஆரம்பமாகிறது. கடவுளுடன் ஐக்கியம் அடைவதற்கான வழிகளில், அகந்தையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்பதற்குத்தான் முதல் இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. காமம், கோபம், பற்றுதல் போன்ற மற்ற எல்லாத் தீய குணங்களும் ஒழிந்தால்கூட, அகந்தை மாத்திரம் ஒழியாமல் இருப்பதற்கு இடம் உண்டு. அகந்தை, சுபாவத்தினால் ஏற்படும் பாவம் என்றும், தூய்மையான ஒழுக்கம் உடையவர்களிடத்தில் கூட அகந்தை இருப்பது உண்டு என்றும் ஹென்ரி டிரம்மண்ட் கூறுவது வழக்கம். அது மனிதனை வீழ்த்தும் சகிக்க முடியாத பளுவாக இருக்கிறது. எனவே, உண்மையான ஞானத்தை அடைய விரும்பும் மனிதன், தன்னிடம் உள்ள அகந்தையை வெறுத்துத் தள்ளவேண்டும். குரு பக்தி, உள்ளும் புறமும் தூய்மை, பிறர் மனத்தைப் புண்படுத்தாமல் இருப்பது, நேர்மை, உலக பந்தங்களில் பற்றின்மை, தனிமையாக இருப்பதில் விருப்பம், ஆன்மிக ஞானத்தின் உண்மையான அர்த்தத்தை அறிந்துகொள்ளுதல் ஆகியவை மேற்கண்ட லட்சியத்தை அடைவதற்கான மற்ற வழிகளாகும். இறைவனிடம் தனித்த, 'விபசார மற்ற' பக்தி அதாவது களங்கமற்ற பக்தி இருக்கவேண்டும் என்று செயின்ட். அகஸ்டின் கூறியுள்ளார். இதையே கீதையிலும் 'அவ்யபிசாரிணி பக்தி' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. "இறைவனைப்பற்றிய சிந்தனையை விட்டுவிட்டு ஆன்மா வேறுவழியில் திரும்புமாயின், அது விபசாரம் செய்ததாகிறது" என்று செயின்ட் அகஸ்டின் கூறியிருப்பது, கீதையில் உள்ள வாக்கியத்திற்கு மொழி பெயர்ப்பாகவே அமைந்திருக்கிறது! இந்தக் கருத்தையே நபிநாயகம் எளிமையாகவும் அழகாகவும் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்; "தனது ஆண்டவனைச் சந்திக்கலாம் என்று நம்புகிறவன் யாராயினும், அவன் நேர்மையான வேலையைச் செய்யவேண்டும். ஆண்டவனுக்கு உரிய தொழுகையில் அவன் வேறு யாருக்கும் பங்கு அளிக்கக் கூடாது" (சுலோகங்கள்-7-11).

13-ஆவது அத்தியாயத்தின் இறுதியில், அது வரையில் செய்யப்பட்டுள்ள உபதேசங்கள் யாவும் தொகுத்து சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

1. ஆன்மாவைப்பற்றிய ஞானத்தை அடைவதற்கான நான்கு முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன: ஞானயோகம், கர்ம யோகம் (அத்தியாயங்கள் 3-5), தியான யோகம், பக்தி யோகம் (அத்தியாயங்கள் 9-12; அத்தியாயம்-12, சுலோகங்கள் - 24-25).

2. புருஷனையும் பிரகிருதியையும் இணைப்பதன் மூலம் உலக சிருஷ்டி (அத்தியாயம்-13, சுலோகம்-26).

3. உண்மையான ஞானத்தையும், உண்மையான பார்வையையும் பற்றிய சுருக்கமான ஒரு விளக்கம்-எல்லாப் பொருட்களிலும் வாழும் பரம்பொருளையும், எல்லாப் பொருளும் அழியும் போது அந்தப் பரம்பொருள் மாத்திரம் அழிவதில்லை என்பதையும் பார்ப்பவனே பார்க்கும் சக்தியுடையவனாக இருக்கிறான் (அத்தியாயம்-13, சுலோகங்கள்-27, 28). செயல் புரிவது பிரகிருதியேயன்றி, ஆன்மா அல்ல என்பதையும் அவன் கண்டு திருப்தியுடனும் கவலையற்றும் உட்கார்ந்திருக்கிறான் (அத்தியாயம்-13, சுலோகம்-29).

4. எல்லா வேற்றுமைகளுக்கும் அடிப்படையாக இருப்பது ஒற்றுமையே. ஒற்றுமையிலிருந்தே வேற்றுமைகள் உண்டாகின்றன.

5. எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளின் இயல்பு-நம்முடைய உடலின் ஒவ்வொரு நரம்பிலும் அது வியாபித்திருக்கிறது. எனினும், எந்த இடைவெளியிலும் வியாபித்துள்ள ஆகாயம் அந்த இடைவெளியுடன் சிறிதும் சம்பந்தப்படாமல் இருப்பது போலவே, பரம்பொருளும் உடலுடன் எவ்வித சம்பந்தமும் அற்றதாக இருக்கிறது. சூரியன், உலகம் முழுவதிலும் பிரகாசிப்பதுபோல், பரம்பொருளும் நமது உடலில் உள்ள ரோம துவாரம் ஒவ்வொன்றின் வழியாகவும் ஊடுருவி ஒளி விசுகின்றது.

6. புருஷனையும் பிரகிருதியையும் பாகுபாடு செய்யும் ஞானம். அவ்விரண்டில் ஒன்றிலிருந்து மற்றொன்று விடுதலை பெறும் ரகசியத்தை அறிவதன் மூலம் ஒருவன் பரம்பொருளை அதாவது பிரம்மத்தை அடைகிறான். (அத்தியாயம்-13, சுலோகம்-34)

உலகத்தில் சாதாரண விஷயங்களில் கூட, வேற்றுமையில் உள்ள இந்த ஒற்றுமையாகிய மின்னொளியை அடிக்கடி காண்கிறோம். ஒரு பூகம்ப நிகழ்ச்சி-பூமியில் ஏற்படும் ஸ்தூலமான பூகம்பமாக இருந்தாலும் சரி, அல்லது அடிக்கடி நிகழும் தார்மிக அல்லது அரசியல் பூகம்பமாக இருந்தாலும் சரி, கோடிக்கணக்கானவர்களைக் கிளர்ந்து எழும்படி செய்கிறது. அப்போது அவர்கள், வேற்றுமையில் ஒற்றுமை இருப்பதை திடீரென்று உணர்கின்றார்கள் அல்லவா? அப்படியிருந்தும், நமது பார்வை மறுபடியும் குறுகிவிடுகிறது. நாம் மீண்டும் குறுகிய நோக்கம் கொண்டவர்களாகி, எல்லாம் வேற்றுமை மயமாக இருப்பதாக நம்புகிறோம். ஆகாயம் எல்லா இடைவெளியிலும் நிரம்பியிருக்கின்றது. சூரியனின் ஒளி உலகம் முழுவதும், ஒவ்வொரு மூலையிலும், முடுக்கிலும், வெடிப்பிலும் கூடப் பரவி பிரகாசிக்கின்றது. அதை நாம் பார்க்கிறோம்; இருந்தாலும் அதன் தத்துவத்தை உணர்ந்து கொள்ளுவதில்லை. அது கடவுளின் சக்தியைக் காட்டுகிறதேயன்றி, நம்முடைய சக்தியை அல்ல. இருந்தாலும், நாம்

இந்த பூமி நமக்குத்தான் சொந்தம் என்று அதை இறுகப்பற்றிக் கொண்டிருக்கிறோம்.

## குணங்கள்

பிரகிருதியின் சேர்க்கைகளை அதாவது குணங்களைப் பற்றி ஏற்கனவே நாம் குறிப்பிட்டுள்ளோம். அவை, 14-ஆவது அத்தியாயத்தில் பூரணமாக விவரிக்கப்பட்டுள்ளன. இதற்கு முன் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்களை மீண்டும் நாம் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. எனினும், முன்பு எடுத்துக் கூறாத சில விவரங்களை இங்கே குறிப்பிடலாம்.

நாம் குணங்களால் கட்டுண்டிருக்கிறோம். அந்த குணங்களிலிருந்து அவற்றின் மூலமே விடுதலை பெற வேண்டியவர்களாக இருக்கிறோம்; ஒரு முள்ளை எடுப்பதற்கு முள்ளையே உபயோகிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். எல்லாச் செயல்களுக்கும், உலகம் முழுவதற்கும் இந்தக் குணங்களின் திருவிளையாடல்களே காரணம்; குணங்களால் கடவுள் பாதிக்கப்படுவதில்லை; அவர் அவற்றிற்கு அப்பால் உள்ளவர் என்ற ஞானமே இறுதியான உண்மையாகும் (அத்தியாயம்-14, சுலோகம்-19). பிறப்பு, இறப்பிலிருந்து விடுபட்ட ஒருவர் அழிவற்ற நிலையை அடைய வேண்டுமாயின், அவர் குணங்களைக் கடந்தவராக இருக்கவேண்டும். குணங்களைக் கடந்து ஆன்மிகச் சிறப்பை அடைந்துள்ள ஒரு யோகியின் குணாதிசயங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. அவரது குணாதிசயங்கள், உறுதியான அறிவுள்ள யோகி (அத்தியாயம்-6 சுலோகங்கள்-54-72), தியான யோகி (அத்தியாயம்-6, சுலோகங்கள்-7-9; 29-32), பக்தன், (அத்தியாயம்-12, சுலோகங்கள்-12-20) ஆகியவர்களின் சிறப்பு அம்சங்கள் போன்றவையே. ஏனெனில், குற்றம் குறையற்றவர்களின் வாழ்க்கை பெரிதும் ஒரே விதமாகவே இருக்கிறது. குணாதீதன் அதாவது குணங்களைக் கடந்தவன், குணங்கள் செயல்படுவதைக் கண்டும் கலங்குவதில்லை; குணங்கள் செயல்படுவது நின்றுவிட்டால் அதைக் குறித்தும் கவலைப்படுவதில்லை. அவன் உடலுடன் இருந்தாலும், கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் ஆகியவற்றிற்கும் அவனுக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதில்லை. உடல் உள்ளவரையில் வாழ்க்கையிலும், செயலிலும், தூக்கத்திலும் ஈடுபட்டுத்தான் தீரவேண்டும். குணாதீதன் அவ்விதமே ஈடுபடுகிறான் என்றாலும், அவற்றால் அவன் பாதிக்கப்படுவதில்லை, குழப்பம் அடைவதில்லை. எனவே, அவன் இன்பத்தையோ, துன்பத்தையோ, மதிப்பையோ, அவமதிப்பையோ பொருட்படுத்துவதில்லை. நண்பனையும் விரோதியையும் அவன் சமமாகவே கருதுவான். தன் விதியின்படி நடப்பதை அவன் வரவேற்பானேயன்றி, ஆகாசக் கோட்டை எதுவும் கட்ட முற்படமாட்டான். இந்த நிலையை அடைவதற்கான ரகசியம் என்னவெனில், இறைவனிடம் பிரத்தியேகமான, "விபசாரமில்லாத" அதாவது களங்கமற்ற பக்தியுடன் இருப்பதுதான். அத்தகைய ஒருவன் குணங்களைக்

கடந்து பிரம்மத்துடன் ஒன்ருகிவிடுகிருன். பிரம்மம், நிரந்தரமான நீதி, முடிவில்லாத பேரானந்தம் ஆகியவற்றின் உருவம் தான் கடவுள்.

முக் குணங்களேயும் கடந்து அப்பால் செல்லுவதே மனிதனின் லட்சியமாகும். தமோ குணத்திலிருந்து மேலே சென்று சத்துவ குணத்தை அடைய முயற்சித்தாலன்றி, குணங்களேக் கடந்த நிலேயை அடைய முடியாது. சாத்துவிகமான எல்லாச் செயல்களும் தன்னலம் அற்றவை என்பதையும், ராஜஸமான செயல்கள் யாவும் தன்னலம் உள்ளவை என்பதையும், தமோ குணச் செயல் யாவும் அறியாமையை அடிப்படையாகக் கொண்டவை, கண்மூடித்தனமானவை என்பதையும், 17, 18-ஆவது அத்தியாயங்களில் நாம் பார்க்கப் போகிருேம். உண்மையை நாடும் ஒவ்வொருவனும், செயலற்ற அல்லது கண்மூடித்தனமான நிலேயிலிருந்து மகோன்னதமான, ஒளிவீசும் தன்னலமற்ற நிலேயை எட்ட வேண்டியவனுக இருக்கிருன். அந்த நிலேக்கும் மேலான ஒரு கட்டம் கூட இருக்கிறது. அதை, கீதை சாதாரணமாகவே குறிப்பிட்டிருக்கிறது. ஆனுல், பின்னர் வந்த விமர்சகர்கள் அதை விவரமாக விளக்கியிருக்கிருர்கள்.

கீதை குறிப்பிட்டிருப்பது போல் சாத்துவிக குணம் உள்ளவன், சாத்துவிக அறிவு, சாத்துவிக ஆனந்தம் என்றும், அது போலவே, ரஜோ குணம் உள்ளவன், ராஜஸ அறிவு, ராஜஸ ஆனந்தம் என்றும், தமோ குணம் உள்ளவன், தாமஸ அறிவு, தாமஸ ஆனந்தம் (அத்தியாயம்-18, சுலோகங்கள்-19-21; 37-39; 26-28) என்றும் விளக்கியிருப்பதுடன் பாகவதம் திருப்தி அடையவில்லே. அந்த மூன்று நிலேகளேயும் கடந்த நான்காவது நிலேயையும் விவரித்திருக்கிறது. அதாவது நிர்குணமானவன், நிர்குண ஞானம், நிர்குண ஆனந்தம் என்று குறிப்பிட்டிருக்கிறது. ஆனுல், நிர்குணமாக இருப்பவர் கடவுள் ஒருவர்தான். ஆதி சங்கராச்சாரியார், அவருக்கே உரித்தான திட்டவட்டமான முறையில், குணங்கள் மூன்று அல்ல என்றும், நான்கே என்றும் குறிப்பிட்டிருக்கிருர். அவரது "விவேக சூடாமணி"யில் மூன்ருவது, நான்காவது குணங்களே முறையே மிச்ர சத்துவம் (கலப்பு சத்துவம்) என்றும், விசுத்த சத்துவம் (தூய்மையான சத்துவம்) என்றும் குறிப்பிட்டிருக்கிருர். ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் பற்றி கீதையில் எப்படி வர்ணிக்கப்பட்டிருக்கின்றதோ அது போலவேயே ஆதி சங்கரரும் வர்ணித்துள்ளார். ஆனுல், கீதையில் குறிப்பிடப்படாத கலப்பு சத்துவத்தையும், தூய்மையான சத்துவத்தையும் ஆதி சங்கரர் விளக்கியுள்ளார். நெஞ்சறிந்து தரும காரியங்களேச் செய்வதும், நெஞ்சறிந்து நம்பிக்கையுடனும், பக்தியுடனும் இருப்பதுமே கலப்பு சத்துவம் என்றும், சாந்தம், ஞான ஒளி, பேரானந்தம், தன்னேத்தானே அறிந்துகொள்ளுதல் ஆகியவை தூய்மையான சத்துவ குணத்தின் அம்சங்கள் என்றும் சங்கரர் கூறியிருக்கிருர்.

அதன் சம்பந்தமான விளக்கத்தின் சாரம் இதுதான்: மூன்று குணங்களும் ஒன்றுக்கொன்று இணைந்தவையாக இருக்கின்றன. சத்துவ குணத்துடன், ரஜோ குணமும் தமோ குணமும் கலந்திருந்தால், சத்துவ குணம் தூய்மையற்றதாகிவிடுகிறது. ரஜோ குணமும் தமோ குணமும் சத்துவ குணத்துடன் மிகமிகக் குறைவாகக் கலந்திருந்தாலும் கூட, சத்துவ குணம் அதன் தூய்மையை இழந்துவிடுகிறது. கலப்படமான ரஜோ குணமும், தமோ குணமும் ஒழிந்தால்தான் சத்துவ குணம் தூய்மையானது என்று கூற முடியும். பரிசுத்தமான தண்ணீர் கூட அதன் இயல்பான நிலையில் இருக்கும்போது, வடிகட்டிய தண்ணீரைப் போல் அவ்வளவு சுத்தமாக இருப்பதில்லை. அதுபோலவே, மனிதன் பூரணமான ஆன்மிகச் சிறப்பை எய்தினாலன்றி, அவனது சத்துவ குணம் சுத்தமாக இருப்பதில்லை. 'தான்' என்ற எண்ணத்தினால் சத்துவ குணம் கலப்படமாகிவிடுகிறது. அவன் கடவுள் தன்மை வாய்ந்த மனிதன் ஆகும் போது, 'தான்' என்ற எண்ணம் ஒழிந்துவிடுகிறது. கீதையில் கூறப்பட்டுள்ள குணாதீதன்தான் கடவுள் தன்மை வாய்ந்தவன் ஆவான். அவனது வாழ்க்கை ஆன்மிகமயமாகிவிடுகிறது. அத்தகைய வாழ்க்கை, மூச்சுவிடுவதையும், ரத்த ஓட்டத்தையும் போல் அவனுக்கு இயற்கையாகிவிடுகிறது.

## அசுவத்த மரமும் புருஷோத்தமனும்

(அத்தியாயம் - 15)

உலகத்தையும், உண்மைத் தத்துவம் அல்லது பரம்பொருளையும் பற்றிய உண்மை, 15-ஆவது அத்தியாயத்தில் மறுபடியும், ஆனால் வேறுவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இந்த உலகம், அசுவத்த மரமாக வர்ணிக்கப்படுகிறது. மேலேயுள்ள சொர்க்கமே அதன் வேர் என்றும், அதற்கு வயதோ அல்லது மாறுதலோ எதுவும் இல்லையென்றும் வர்ணிக்கப்பட்டுளது. பரந்தும் விரிந்தும் கீழே வந்திருக்கும் அதன் கிளைகள் ஸ்தூல உலகமாகவும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. நாம் பெரிதும் மூலாதாரமான வேரை மறந்துவிட்டு, கீழேயுள்ள உலகாயதமான வேர்களைப்பற்றியே சிந்திக்கிறோம். அந்த மரத்தின் கிளைகள் மேலே பரந்து செல்லுகின்றன. மீண்டும் கிளைகளிலிருந்து சல்லி வேர்கள் கீழே வருகின்றன. அந்தச் சல்லி வேர்கள்தான் செயல்கள் ஆகும். அந்தச் செயல்கள் மீண்டும் மேலே பீறிட்டுச் சென்று, அதனால் ஏற்படும் விளைவுகளை அனுபவிக்கின்றன. அந்த மரத்திற்கு உயிர் கொடுப்பது குணங்களேயாகும். மரத்தின் கிளைகள்தான் புலன்களைக் கவரும் சாதனங்களாக இருக்கின்றன. அதன் ஆரம்பத்தையோ, அடிப்படையையோ அல்லது முடிவையோ நாம் உணர்ந்துகொள்ளுவதில்லை. பற்றுதல்தான் உலகத்தைத் தாங்கி நிற்கின்றது. பற்றுதல் காரணமாகவே மனிதன் உலகத்துடன் கட்டுண்டு கிடக்கிறான். விவேகியானவன், பற்றின்மை என்ற உறுதியான கோடரியால், அந்தக்

கட்டுகளை வெட்டித் தள்ளிவிடுகிறான். "என்னுடைய தந்தை பயிரிடாத ஒவ்வொரு மரத்தையும் வேருடன் வெட்டித் தள்ளி விட வேண்டும்."* அதுபோலவே, மனிதன் அழியாத வேரை, அதாவது அழிவற்ற, நிரந்தரமான ஸ்தானத்தைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும். அந்த ஸ்தானத்திற்குச் சென்று யாரும் திரும்பி வருவதில்லை. அங்கே எல்லாம் ஒளி மயமாக இருக்கிறது. அந்த இடத்தை பிரகாசிக்கச் செய்வதற்கு ஒரு சூரியனோ, சந்திரனோ அவசியமில்லை. தான் என்ற எண்ணம், மாயையின் காரணமாக ஏற்பட்ட மயக்கம், தன்னல ஆசைகள் ஆகியவற்றை அடியோடு ஒழித்துவிட்டு பரம்பொருளே கதி என்று இருப்பவர்களும், இருமைகளிலிருந்து விடுதலை பெறுபவர்களும் அழிவற்ற பரம பதத்தை அடைகின்றனர் (அத்தியாயம் - 15, சுலோகங்கள் - 1-6).

பிறப்பு, இறப்புச் சுழல் எவ்வாறு இயங்குகிறது என்பது இப்போது விவரிக்கப்படுகின்றது. மரம் எவ்விதம் நடப்படுகிறது? இறைவனின் ஓர் அம்சம் எவ்வாறு உடலில் ஜீவன் உருவாக இருக்கிறது? அந்த உடலை விட்டுச் செல்லும்போது, ஓர் அம்சமாக இருக்கும் இறைவன் எப்படி ஞானேந்திரியங்களையும், மனத்தின் சூட்சுமமான கருவியையும் எடுத்துச் செல்லுகிறார்? பின்னர் பிறப்பிலிருந்து இறப்பிற்கும், இறப்பிலிருந்து பிறப்பிற்கும் எவ்விதம் மாறுகிறார்? இவையெல்லாம் இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன. அந்தக் கருவியின் சேர்க்கையினாலேயே மனிதன் புலன்களுக்கு இலக்கான சாதனங்களை அனுபவிக்க முடிகின்றது; உடலில் தங்கியிருக்கவும் உடலிலிருந்து வெளியேறவும் முடிகின்றது.

குணங்களினால் தொடுவதற்கு முடியாத, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை, தங்களைத் தூய்மையாக்கிக் கொண்ட யோகிகள் மாத்திரமே அறிவுக் கண்ணால் அல்ல, ஞானக் கண்ணால் பார்க்கின்றனர். அறிவுக் கண்கூட இந்த உடலின் ஓர் அம்சம் தான் அல்லவா? (அத்தியாயம்-15, சுலோகங்கள் 7-11).

எல்லோருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கும் இறைவனின் மகத்துவம் இந்த அத்தியாயத்தில் மறுபடியும் விவரிக்கப்படுகிறது. (அத்தியாயம் - 15, சுலோகங்கள் 12-15). பூஜைக்குரிய ஒரே பரம்பொருள் புருஷோத்தமனே என்று கூறப்படுகிறது. அழியும் தன்மை உள்ளவை, அழியாத் தன்மை வாய்ந்தவை எல்லாவற்றையும் கடந்து, எல்லாவற்றிற்கும் மேலாக இருப்பவரே புருஷோத்தமன். அவற்றையெல்லாம் கடந்து இருப்பினும், அவரே எல்லாவற்றிற்கும் காரண புருஷராகவும், எல்லாவற்றையும் தாங்குபவராகவும் இருக்கிறார். இறைவனின் எல்லா வடிவங்களிலும் அவரை யார் பூஜிக்கிறானோ, அவனே எல்லாம் அறிந்த ஞானி ஆகிறான். அந்த ஞானத்தை அடைபவனே,

---

*மேலே கொடுக்கப்பட்டுள்ள மேற்கோள், பைபிளில் உள்ள ஒரு வாக்கியமாகும்.

பூமியில் மனிதனின் லட்சியத்தை நிறைவேற்றியவன் ஆவான். ஒன்பதாவது அத்தியாயத்தில் ஆரம்பமான மாபெரும் மர்மமான சித்தாந்தத்தைப் பற்றிய விளக்கமானது, உண்மையில் இந்த அத்தியாயத்தில்தான் முற்றுப்பெறுகின்றது. பக்தி மார்க்கத்தைப்பற்றிய விளக்கமானது *12*-ஆவது அத்தியாயத்திலேயே முடிவடைந்துவிட்டது. எனினும், அதன் அடிப்படையும் பின்னணியும் இந்த அத்தியாயத்தில்தான் முடிவுறுகின்றன.

## அற நெறிகள்

**(அத்தியாயங்கள் - 16, 17.)**

முந்திய அத்தியாயங்களிலெல்லாம், இருவிதமான தன்மைகள் உடையோரைப்பற்றி அடிக்கடி குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அறிவுள்ளவர்கள்-அறிவிலிகள் (அத்தியாயம்-*3*, சுலோகங்கள் *25-26* ; அத்தியாயம்-*4*, சுலோகங்கள் - *40 - 41*). கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டவர்கள் - கட்டுதிட்டங்களுக்கு உட்படாதவர்கள் (அத்தியாயம்-*5*, சுலோகம்-*12* ; அத்தியாயம்-*15*, சுலோகம்-*11*), நம்பிக்கை உடையவர்கள்-நம்பிக்கை இல்லாதவர்கள் (அத்தியாயம்-*3*, சுலோகங்கள் - *31-32*, அத்தியாயம்-*4*, சுலோகங்கள் - *40-41*), நல்வினைகளைச் செய்வோர் - தீவினைகளைச் செய்வோர் (அத்தியாயம் - *7*, சுலோகங்கள் - *15 - 16*) ஆகியவர்களைப்பற்றியே குறிப்பிடப்பட்டுள்ளன. கீதையின் ஆசிரியர் இப்போது அவர்களை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றார். நல்லவர்கள் என்றும் கெட்டவர்கள் என்றும், அதாவது தெய்வத்தன்மை வாய்ந்தவர்கள் என்றும், அசுரத் தன்மை வாய்ந்தவர்கள் என்றும் பிரிக்கின்றார். இந்த இடத்தில் கீதை, உபநிடதங்களின் வாக்கியங்களை உபயோகித்துக் கொண்டிருக்கிறது. மனித வர்க்கத்தை இரண்டு பிரிவுகளாக அதாவது ஆரோக்கியம் உள்ளவர்கள் என்றும், ஆரோக்கியம் இல்லாதவர்கள் என்றும் ஜார்ஜ் ஸாண்ட்* பிரித்திருக்கிறார். மனிதனின் உள்ளத்தில் பெரும் அளவுக்கு மிருகமும் ஏதோ ஓர் அளவுக்கு பிசாசும் இருப்பதுபோலவே, அவனிடத்தில் சிறிதளவு தேவனும் சிறிதளவு கடவுளும் இருக்கிறார்கள் என்று காலரிட்ஜ்‡ கூறுகிறார். பரந்த முறையில் அப்பிரிவுகளை மதிப்பிடலாமேயன்றி, யார் யார் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்பதை திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை. நாம் சிற்சில சமயங்களில் நம் உள்ளே இருக்கும் கடவுளின் கட்டளைக்குச் செவிசாய்த்து, கடவுளை நோக்கிச் செல்லுகின்றோம்; எனினும், பெரும்பாலான சமயங்களிலும் பிசாசின் தூண்டுதலுக்கு இணங்கவே காரியங்களைச் செய்கிறோம். உறுதி

*பிரஞ்சு நூலாசிரியரும் நாடகாசிரியருமான ஸ்ரீமதி ஜார்ஜ் ஸாண்ட் (1804–1876) அவரது காலத்தில் பிரான்சிலேயே இணையற்றவராகத் திகழ்ந்தார்.

‡சாமுவேல் டெய்லர் காலரிட்ஜ் (1772–1834) பிரிட்டனில் 19-ஆவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் மிகவும் புகழ்பெற்று விளங்கிய சிறந்த கவிகளில் ஒருவர்.

வாய்ந்த நல்ல மனிதர்கள் இப்புவியில் அத்தி பூத்தாற்போல அபூர்வமாகவே இருக்கிறார்கள். ஆனால் அவர்களைக் கேட்டால், கடவுள் இருக்கும் இடத்திலிருந்து தாங்கள் வெகு தொலைவில் இருப்பதாகவே கூறுவார்கள். எனினும், யாரும் இந்த முத்திரைகளையெல்லாம் சரியாக அறிந்து கொள்ளாமல், இவற்றைத் தவறான முறையில் உபயோகிக்கக்கூடாது. குறிப்பிட்ட உயர்ந்த குணம் நம் உள்ளத்தில் ஆதிக்கம் செலுத்தும்போது, நாம் தெய்வத் தன்மை வாய்ந்தவர்களாக இருக்கிறோம்; அதற்கு நேர்மாறான குணம் ஆதிக்கம் செலுத்தும்போது, அசுரத்தன்மை வாய்ந்தவர்களாகி விடுகிறோம் என்று மாத்திரமே நாம் கூற முடியும்.

நம்முடைய தாயின் கருப்பையிலிருந்து நாம் நிர்வாணமாகவே வெளிவருகிறோம். பூமித் தாயின் கருப்பைக்கு நாம் திரும்பிச் செல்லும்போதும் நிர்வாணமாகவே செல்லவேண்டும். எனினும், இது ஓரளவுதான் உண்மையாகும். சென்ற அத்தியாயத்தில் நாம் பார்த்ததுபோல், நாம் முற்றிலும் நிர்வாணமாக வருவதில்லை. நாம் சிலவற்றைக் கொண்டுவருகிறோம். அதாவது, நமது செயல்களின் முத்திரை, நமது குணம், நமது கர்ம வினை முதலியவற்றைக் கொண்டுவருகிறோம். திரும்பிச் செல்லும் போதும் சிலவற்றை அதாவது கர்மவினைகளைக் கொண்டு செல்லுகிறோம். நம்முடன் நாம் கொண்டுவரும் இந்தச் சொத்து, தெய்வத் தன்மை வாய்ந்ததாகவோ அல்லது தெய்வத் தன்மையற்றதாகவோ இருக்கும். அது தெய்வத்தன்மை வாய்ந்ததாக இருக்குமாயின், உடலுக்கு அடிமைகளாக இருப்பதிலிருந்து அது நம்மை விடுதலை செய்கின்றது. அது தெய்வத்தன்மை யற்றதாக இருக்குமாயின், அடிமைத்தனத்தை அது மேலும் இறுகச் செய்து விடுகின்றது. தெய்வத் தன்மை வாய்ந்த புண்ணியமான சொத்துக்களில் உச்ச ஸ்தானம் வகிப்பது அஞ்சாமையே என்று கீதை கூறுகிறது. அதற்கு, தகுந்த காரணம் இருக்கிறது. ஏனெனில் பயம்தான் மற்றத் தீமைகளுக்கெல்லாம் முதற் காரணமாக இருக்கிறது. கடவுளின் தோற்றமானது, மற்றத் தீமைகளை ஒழிப்பது போல் அச்சத்தையும் ஒழித்துவிடுகிறது. எனவே, அஞ்சாமைதான் நற்குணங்களுக்கெல்லாம் ஆணிவேர் ஆகும். பிறகு மூலாதாரமான குணங்களைப்பற்றி குறிப்பிடப்படுகிறது. சத்தியம், பிறர் மனத்தைப் புண்படுத்தாமல் இருத்தல், தூய்மை, தன்னடக்கம், லட்சியத்தையும் லட்சியத்தை அடைவதற்கான வழிகளையும் அதாவது ஞானத்தையும் யோகத்தையும் உறுதியுடன் கடைப்பிடித்தல், இரக்கம், அன்பு, மனம் சலியாமை போன்ற குணங்களே தெய்விகமானவை. அதற்கு நேர்மாறான குணங்களே, அதாவது வஞ்சகம், பகட்டு, கொடுமை போன்றவை தெய்வத் தன்மை யற்றவை. அவை அசுரகுணங்கள் ஆகும். தெய்வத் தன்மையற்றவர்களின் தீய குணங்களைப்பற்றி கீதை விவரமாக வர்ணித்துக்கொண்டே போகிறது. காமமும், தரும விரோதமாக நடந்துகொள்ளுவதுமே அசுரத்தன்மை வாய்ந்தவர்களுடைய

வாழ்க்கையின் நியதியாக இருக்கும். அவர்கள் செய்யும் காரியங்களெல்லாம் காம இச்சையையும், அதர்மத்தையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கும். பூமியில் எந்தச் சட்டத்தின் ஆட்சியையும், சட்டம் இயற்றியவரையும் அவர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை. தெய்வத்தன்மை வாய்ந்த எத்தகைய துக்கத்தினுலும் அவர்களுக்கு அறிவு உண்டாவதில்லை. அவர்களுடைய வாழ்க்கை ஒளி பெறுவதில்லை. அவர்கள் தங்களுடைய வாழ்க்கை முழுவதும் தெய்வத்தன்மையற்ற துக்கங்களின் சுமையைத் தூக்கிச் சென்றவண்ணம் இருக்கிறார்கள். அந்தச் சுமை இறுதியில் அவர்களைப் பாதாளத்தில் வீழ்த்தி, அவர்களை அழித்தும்விடுகின்றது. அத்தகையோரை, அசுரத் தன்மை வாய்ந்தவர்களின் கருப்பைகளிலும் நரகப் படுகுழிகளிலும் தள்ளுவதாக (அவர்கள் தங்களைத் தாங்களே அவ்விதம் தள்ளிக் கொள்ளுகிறார்கள் அல்லவா?) கிருஷ்ண பகவான் கூறுகிறார். அத்தகையோர் நரகத்தில் வாழ்கின்றார்கள். காமம், கோபம், பேராசை ஆகிய மூன்றுமே நரகத்தின் மூன்று வாயிற்படிகளாக இருக்கின்றன. (அத்தியாயம்-16, சுலோகங்கள் 1-21).

தெய்வ குணங்கள் வாய்க்கப்பெற்றவர்களின் பாதை, போராட்டமே இல்லாதது என்று கூறுவதற்கில்லை. புண்ணியங்களுக்கும் பாவங்களுக்கும் மூன்று குணங்களே காரணம் என்பதை அவர்கள் மறந்துவிடக் கூடாது. அந்தக் குணங்கள் ஒன்றுக்கொன்று இணைந்தே இருக்கின்றன. அவர்களிடம் சத்துவ குணத்தின் ஆதிக்கம் அதிகமாக இருக்கலாம். எனினும், ரஜோ குணமும், தமோ குணமும்கூட அவர்களிடம் செயலற்று இருக்கின்றன. சத்துவ குணம் தனது கண்காணிப்பைத் தளர்த்தினுல், அவை உடனே தலை தூக்கத் தொடங்கிவிடும். எனவே, சத்துவ குணம் உள்ள தெய்விக ஆன்மா, நரக தூதர்களான அந்த இரண்டு குணங்களின் ஆதிக்கம் ஏற்பட்டுவிடாமல் இருப்பதற்காகத் தூங்காமல் கண்காணிப்புடன் இருக்கவேண்டியிருக்கிறது. "வலது கையிலும் இடது கையிலும் நேர்மையாகிய இரும்பு கவசத்துடனே"*[1] அல்லது "கடவுளின் முழு கவசத்துடனே"[2] அக்குணங்களை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது (அத்தியாயம்-16, சுலோகம்-22).

கிருஷ்ண பகவான், தமது உபதேசம் முழுவதையும் சாரமாக இப்போது கொடுக்கிறார்: "சாத்திரத்தையே உனக்கு ஒரே வழிகாட்டியாகக் கொண்டு நடந்து கொள். சாத்திரத்தைப் புறக்கணித்தவன் துக்கத்திற்கு ஆளாகிவிடுகிறான்" (அத்தியாயம்-16, சுலோகங்கள்-23-24). இந்த சாத்திரம், கீதை உபதேசித்துள்ள யோக சாத்திரத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. சுயநலமின்மை அல்லது பற்றின்மையே அந்த சாத்திரமாகும். பக்தியை முக்கியமாகக் கொண்டு பார்ப்போமாயின், எல்லா உயிர்களுக்கும் ஒரே கடவுளாக விளங்குபவரைப் பூஜித்து வணங்குவதே அந்த சாத்திரமாகும்.

*1, 2. பைபிளிலிருந்தே மேற்கண்ட மேற்கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

*17*-ஆவது* அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் கேட்கிறான். ''ஆனால், நீங்கள் விளக்கிய இந்த சாத்திரத்தை எல்லோரும் அறிந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கலாம்; இந்த சாத்திரம் எல்லோரும் ஒப்புக்கொள்ள முடியாததாக இருக்கலாம். அவர்கள் வேத நூல்களில் நம்பிக்கை வைத்து, அந்த நம்பிக்கைக்கு இணங்க தங்களுடைய நடத்தையை உருவாக்கிக் கொள்ளலாமா? தெய்வங்களையும், ஆவிகளையும், பிதுருக்களையும், மற்றவர்களையும் உபாசிக்கும் ஜனங்களைப்பற்றி ஏற்கனவே நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள் (அத்தியாயம்-*9*, சுலோகம்-*25*). வேத நூல்களில் உள்ள நம்பிக்கைக்கு இணங்கவே அவர்கள் அவ்விதம் செய்கிறார்கள். அத்தகையோருடைய நிலை என்ன? அவர்கள் சத்துவ குணம் உள்ளவர்களா? அல்லது ரஜோ குணமோ, தமோ குணமோ உள்ளவர்களா?''

அர்ஜுனனின் கேள்விக்கு கிருஷ்ண பகவான் அளித்துள்ள பதில் முழுவதும் *17*-ஆவது அத்தியாயத்தில் அடங்கியிருக்கிறது. வேத நூல்களில் அவர்களுக்குள்ள நம்பிக்கை, மனம் சம்பந்தமான குணங்களைப் போலவே மூன்று விதமாக இருக்கின்றது. அதாவது சாத்துவிக, ராஜஸ, தாமஸ குணங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது என்று கிருஷ்ண பகவான் கூறுகிறார். மனிதன் அவனுடைய நம்பிக்கையினாலேயே உருவாகிறான். அவனது நம்பிக்கையின் தன்மையைக் கொண்டே அவன் வழிபடும் பொருளும் நிர்ணயிக்கப்படுகின்றது. சாத்துவிக நம்பிக்கை உடையவர்கள் தெய்வங்களை வழிபடுகிறார்கள்; ராஜஸ நம்பிக்கை உடையவர்கள் யக்ஷர்களையும் ராக்ஷசர்களையும் வழிபடுகிறார்கள்; தாமஸ நம்பிக்கையுள்ளவர்கள் இறந்தவர்களின் ஆவிகளையும் பிசாசுகளையும் வழிபடுகிறார்கள். அவர்களுடைய தவங்கள், விரதங்கள் ஆகியவற்றில் கூட அவர்களுடைய நம்பிக்கை பிரதிபலிக்கின்றது. தன்னலமற்ற முறையில் அல்ல, சுயநல நோக்கத்துடன் தவங்கள் செய்வோர், வஞ்சகம், அகந்தை, வெறிக்குணங்கள், ஆசை முதலிய தீயகுணங்கள் காரணமாகவே அவ்விதம் செய்வார்கள். அவர்கள் தங்களுடைய உடலையும் அந்த உடலில் உறையும் என்னையும் சித்திரவதைக்கு உள்ளாக்குவார்கள். அவர்களுடைய நம்பிக்கை பைசாசத் தன்மை வாய்ந்தது (அத்தியாயம்-*17*, சுலோகங்கள்-*2-6*). அவர்களுடைய நம்பிக்கை, அவர்கள் சாப்பிடும் உணவு வகைகளிலும் பிரதிபலிக்கின்றன. (அத்தியாயம்-*17*, சுலோகங்கள்-*8-10*).

---

***கீதையின் 16-ஆம் அத்தியாயத்தில் உள்ள 23, 24-ஆவது சுலோகங்களுக்கும், 17-ஆவது அத்தியாயம் முழுவதற்கும் நான் துணிந்து என் சொந்த முறையில் விளக்கம் கொடுத்துள்ளேன். அந்த விளக்கத்திற்கு ஆதாரமான எனது வாதத்தை அந்த சுலோகங்களுக்குக் கீழே நான் கொடுத்துள்ள குறிப்புகளில் வாசகர்கள் காணலாம். எனினும், மூல சுலோகங்கள் சம்பந்தப்பட்டவரையில், சிறிதும் வழுவின்றி நான் காந்திஜியின் மொழிபெயர்ப்பையே பின்பற்றியிருக்கிறேன்.—மகாதேவ தேசாய்.**

தருமநெறியுள்ள மனிதனின் நடத்தை முழுவதும் மூன்று சிறப்பான குணங்களை முக்கியமாகக் கொண்டிருக்கிறது. அவை யாவன: தியாகம், தவம், தானம். இம் மூன்றும்தான் மனிதனைத் தூய்மையாக்கும் சாதனங்கள் ஆகும் (அத்தியாயம்-18, சுலோகம்-5). தன்னலமின்றியும், பற்றுதலின்றியும் அனுசரிக்காவிடில், அந்த உயர்ந்த நற்செயல்கள் கூட தீச்செயல்கள் ஆகிவிடும். வேத நூல்களில் உள்ள நம்பிக்கை அதிகமாக உதவி அளித்து விடாது. சத்தியம், நீங்கு இழையாமை, இச்சையடக்கம் ஆகியவற்றைப் பயிற்சி செய்துகொள்ளவேண்டும் என்று வேத நூல்கள் கட்டளையிட்டுள்ளன. யக்ஞம் செய்யவேண்டும் என்றும், தானம் செய்ய வேண்டும் என்றும் கூட அந்த நூல்கள் கட்டளையிடுகின்றன. எனினும், அந்தக் கட்டளைகளை மனிதன் எத்தகைய உணர்ச்சியுடன் பின்பற்றுகிறான் என்பதையே எல்லாம் பொறுத்திருக்கின்றன. செயல்கள் மனிதனை மேலும் கட்டுப்படுத்தாமல் அடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பதாக இருக்கவேண்டும். மனிதனுக்கு அத்தகைய விடுதலையைக் கொடுக்கவல்லது, தன்னலமற்ற உணர்ச்சியே. உதாரணமாக, சாத்துவிக யக்ஞம் தான் உண்மையான யக்ஞம் ஆகும். அதாவது, பலனில் ஒரு கண் வைக்காமல், கடமை என எண்ணிச் செய்ய வேண்டும். ராஜஸ யக்ஞம், பகட்டுக்காகச் செய்யும் போலி யக்ஞம் ஆகும். தாமஸ யக்ஞம், 'யக்ஞம்'என்ற பெயருக்கே தகுதியற்றது. இந்த 'யக்ஞ'த்திற்கும் வேதநூல்களில் உள்ள நம்பிக்கைக்கும் கூட யாதொரு சம்பந்தமும் இல்லை. ஏனெனில், யக்ஞம் என்றால் ஏதாவது கொடுக்கவேண்டும்; ஒன்றும் கொடுக்காத, ஒரு தானமும் செய்யாத யக்ஞத்தைப் பற்றி வேதங்கள் எதுவும் குறிப்பிடவில்லை. உடலிலும், சொல்லிலும், மனத்திலும் தவம் என்பது, தூய்மையான நடத்தையே ஆகும். தூய்மையான நடத்தையின் முக்கிய அம்சங்கள் இவைதான்: "பணிவு, இச்சையடக்கம், பிறரது மனம் புண்படும்படி பேசாமல் இருத்தல், உண்மையாகவும், இனிமையாகவும், உதவி அளிக்கக்கூடிய விதத்திலும் பேசுதல், மன அமைதி, மௌனம், உள்ளத் தூய்மை." இவையெல்லாம் சத்துவ குணம் உள்ளவனிடம் இருக்குமாயின், அதனால் மிகுந்த நன்மை ஏற்படும். ரஜோ குணம் உள்ளவனிடம் இருக்குமாயின், அவன் அவற்றை சுயநலத்திற்காக உபயோகித்துக் கொள்ளுவான். தமோ குணம் உள்ளவன், பிறரை அரக்கத்தனமாகக் கொடுமைக்கு உள்ளாக்குவதற்குக் கருவிகளாக அவற்றை உபயோகித்துக் கொள்ளுவான்.

தானமும் அப்படியே. சாத்துவிக உணர்ச்சியுடன் செய்யப்படும் தானமே எல்லாவற்றையும் விடச் சிறந்தது; பகட்டுக்காகவோ அல்லது பலனை எதிர்பார்த்தோ செய்யப்படும் தானம் அல்ல. பலனை எதிர்பார்த்தும், ஆடம்பரமாக விளம்பரம் செய்து கொண்டும் செய்யப்படுவதே ராஜஸ உணர்ச்சியுடன் கூடிய தானம் ஆகும். வீணாகவும், ஊதாரித்தனமாகவும், இழிவான

முறையிலும் செய்யப்படும் தானமே தாமஸ உணர்ச்சியுடன் கூடியது (அத்தியாயம்-18, சுலோகங்கள்-11-22).

எனவே முற்றிலும் இறைவனுக்கே அர்ப்பணம் என்ற உணர்ச்சியுடன் தவம், யக்ஞம், தானம் முதலியவை சம்பந்தமான அலுவல்களைச் செய்ய வேண்டும். அத்தகைய உணர்ச்சியுடன் செய்யும் தவம், யக்ஞம், தானம் ஆகியவைதான் மனிதனுக்கு விடுதலை அளிக்கும் சக்தி வாய்ந்தவை.

பண்டைய காலத்திலிருந்து 'ஓம் தத் ஸத்' என்பதுதான், எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்வதற்கான மந்திரமாக இருக்கிறது. 'ஓம் தத் ஸத்' என்று கூறிய வண்ணமே, யக்ஞம் செய்வோர் தங்களுடைய பூஜையையும் தானத்தையும் அர்ப்பணம் செய்கின்றனர். அந்த மூன்று சொற்களும் பிரம்மத்தின் மூன்று சின்னங்களாக விளங்குகின்றன. எங்கும் நிறைந்துள்ள, எல்லைகளுக்கு உட்படாத, சத்தியமான, அழகான, நன்மையே உருவான பரம்பொருளுக்கு அந்தச் சொற்களைக் கூறிக் கொண்டே எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்கிறார்கள். அது வைதிகமான வெறும் விதி அல்ல. அது, தன்னலமின்றி அர்ப்பணம் செய்யும் விதியாகும்.

ஒருவர் பிரம்மத்தைப் பற்றி என்ன நினைத்தாலும் சரி, அவரை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் சரி, எல்லாச் செயல்களையும் பிரம்மத்திற்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அவ்வாறு அர்ப்பணம் செய்யப்பட்ட செயல்களே 'ஸத்' அதாவது நல்லவை; தன்னலமின்றியும், வேதத்திற்கு முரணாகவும், அர்ப்பணம் செய்யப்படாமலும் இருக்கும் செயல்கள் யாவும் 'அஸத்' அதாவது தீயவையே. அவற்றால் ஒருவனுக்கு இந்த உலகத்திலும் நன்மை இல்லை; பர உலகத்திலும் நன்மை இல்லை (அத்தியாயம்-17, சுலோகங்கள்-23-28).

## மயக்கம் ஒழிந்தது

**(அத்தியாயம் - 18)**

கீதையின் உபதேசம் முழுவதையுமே, 18-ஆவது அத்தியாயம் தொகுத்துக் கொடுக்கின்றது. தியாகத்தையும், சந்நியாசம் அல்லது துறவையும் பற்றி முந்திய அத்தியாயங்களில் அடிக்கடி குறிப்பிடப்பட்டிருப்பதை நாம் பார்த்தோம். அர்ஜுனனின் கேள்விக்குப் பதிலாக கிருஷ்ணன், சாதாரணமாக அவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமையை விளக்குகிறார். அவ்விரண்டின் சாரத்தையும் கவனிப்பவர்களுக்கு, தியாகத்திற்கும் துறவுக்கும் உண்மையில் வேற்றுமை இல்லை என்பது தெரியவரும் என்பதையும் கிருஷ்ணன் எடுத்துக் காட்டுகிறார்.

சந்நியாசம் என்றால், ஆசையிலிருந்து எழும் எல்லாச் செயல்களையும் துறந்துவிடுவதே என்ற நம்பிக்கை சாதாரணமாக நிலவி

வருகிறது. எந்தச் செயலுக்கும் ஆசையே காரணம் என்றும், எனவே, எந்தச் செயலும் அடிப்படையிலேயே களங்கமாகிவிடுவதால் அது மனிதனைக் கட்டுப்படுத்துகிறது என்றும், ஆகையால் எல்லாச் செயல்களையும் துறந்துவிட வேண்டும் என்றும் அத்தகைய நம்பிக்கையுடையவர்கள் கருதுகின்றனர். அவர்களில் சிலர், தூய்மைப்படுத்தும் யக்ஞம், தவம், தானம் ஆகிய மூன்று செயல்களுக்கு மாத்திரம் மேற்கண்ட விதியிலிருந்து விலக்கு அளிக்கின்றனர். எனினும், எல்லாச் செயல்களின் தன்மையையும் தீர்மானிப்பது அவற்றின் வெளிப்படையான தோற்றம் அல்ல, அவை எத்தகைய உணர்ச்சியுடன் செய்யப்படுகின்றன என்பதுதான் என்று கிருஷ்ண பகவான் திட்டவட்டமாகக் கூறுகிறார். எனவே, செயலில் களங்கம் எதுவும் இல்லை என்றும், செயலுக்குப் பின் உள்ள சுயநலமும், பற்றுதலுமே களங்கத்திற்குக் காரணம் என்றும் அவர் கூறுகிறார். அந்தக் கோணத்திலிருந்து நோக்குவோமாயின், சுயநலம் காரணமாகச் செயலைத் துறப்பது கூட களங்கம் உடையதே, ஆட்சேபகரமானதே என்று கீதை கூறுகிறது. மற்ற எல்லாச் செயல்களிலும் இருப்பதுபோல், செயல்களைத் துறப்பதிலும் சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று விதங்கள் இருக்கின்றன. ஆதலால், தூய்மைப்படுத்தும் செயல்களான தவம், யக்ஞம், தானம் ஆகியவை உண்மையாகவே தூய்மையானவையாக இருக்க வேண்டுமாயின், பலனில் ஆசையின்றியும் பற்றுதலின்றியும் அவை செய்யப்பட வேண்டும். இதை, 17-ஆவது அத்தியாயத்தில் ஏற்கனவேயே பார்த்திருக்கிறோம்.

இவற்றைத் தவிர, சமுதாய அமைப்பின் ஓர் உறுப்பினன் என்ற முறையில் ஒருவன் சில அலுவல்களைச் செய்ய வேண்டியது அவசியமான கடமையாக இருக்கிறது. அவற்றைக் கைவிடவும் முடியாது. தாங்கள் சாதாரணமாகச் செய்ய வேண்டிய கடமைகளைக் கடந்துவிட்டதாக எண்ணி, மதி மயக்கம் கொண்டு அவற்றைக் கைவிடுவது கண்மூடித்தனமானது, தமோ குணத்தை அடிப்படையாகக் கொண்டது. தொந்தரவாகவும், கடினமாகவும் இருக்கின்றன என்பதற்காக அக்கடமைகளைக் கைவிடுவது கலப்பற்ற தன்னலமே; அதாவது ரஜோ குணத்தை அடிப்படையாகக் கொண்டதேயாகும். ஒருவர் தாம் செய்து தீர வேண்டிய கடமைகளை, பலனை எதிர்பாராமலும் பற்றுதலின்றியும் செய்வதே சிறந்த தியாகம். அவ்விதம் செய்வதுதான் தூய்மையான தியாகமும், தூய்மையான துறவும் ஆகும். அதை ஒருவர் தமது விருப்பப்படி தியாகம் என்றோ, சந்நியாசம் என்றோ எப்படி வேண்டுமாயினும் கூறலாம்.

சந்நியாசம் என்றால், எல்லாச் செயல்களையும் விட்டுவிடுவது அல்ல. ஒருவர் இந்த உடலைத் தாங்கிவரும் வரையில், அவ்விதம் எல்லாச் செயல்களையும் கைவிடுவது முடியாத காரியம். ஒருவர் செயல்களின் பலனையும், செயல்களில் உள்ள பற்றுதலையும் மாத்திரமே கைவிட முடியும்; பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலையை நாடும் சகலரும், அவ்விதம் பலனையும், பற்றுதலையும்

விட்டுத்தான் தீரவேண்டும். பலனில் உள்ள ஆசையைக் கைவிடாதவர்கள், அதனுல் ஏற்படும் லாப நஷ்டங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது; பல்வேறு இனங்களில் மறுபிறப்பை அடைவதன் மூலம் நல்ல, தீய அல்லது கலப்படமான பலன்களிலிருந்து தப்ப முடியாது. (அத்தியாயம்-18, சுலோகங்கள்-1-12).

அடுத்தபடியாக கீதை, எல்லாச் செயல்களிலும் உள்ள அவசியமான அம்சங்களை விவரிக்கின்றது. உடல், கர்த்தா, பல்வேறு கருவிகள், பல்வேறு முறைகள், ஒரு செயல் பூர்த்தியாகும்படி செய்வதற்கான கண்ணுக்குத் தெரியாத ஒன்று (தெய்வம்) ஆகியவற்றைப்பற்றி கீதை விவரிக்கிறது. இயற்கையின் சிருஷ்டி முழுவதிலும் இந்த அம்சங்கள் ஒன்றையொன்று ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. ஒன்றுக்கொன்று பின்னப்பட்ட எண்ணிக்கையற்ற செயல்களினுலேயே எல்லாம் வாழ்கின்றன. எனவே, எல்லாவற்றிற்கும் தானே கர்த்தா என்று மனிதன் எண்ணுவது வீணுகும். இவ்விதமாக செயலுக்குக் காரணமான பல அம்சங்கள் இருக்கும்போது, செயல்களுக்கெல்லாம் எல்லையற்ற முழுமுதற் பொருளான ஆன்மா காரணமாக இருக்க முடியாது. செயல்களுக்குக் காரணமான அம்சங்கள், குணங்களைத் தவிர வேறு எதுவும் இல்லை என்றும் சுருக்கமாகக் கூறப்படுகிறது. தன்னுடைய வாழ்க்கையில் இந்த உண்மை ஊடுருவும்படி செய்து கொண்டு, அகந்தையை அடியோடு ஒழித்துவிட்ட விவேகியான ஒருவன், உலகங்களையெல்லாம் அழித்துவிட்டாலும் கூட, அவனது செயல் எதற்கும் அவன் பொறுப்பாளியாக மாட்டான் (அத்தியாயம் - 18, சுலோகங்கள் -13-17).

இப்போது மூன்று குணங்களைப் பற்றிய விளக்கம் தொடருகின்றது. எல்லாவற்றிலும், எல்லோரிடத்திலும் அந்த குணங்கள் எவ்விதம் பிரதிபலிக்கின்றன என்பதும் விவரிக்கப்படுகிறது. எல்லோருடைய நடத்தையையும் தூய்மையாக்குவதோ, கலப்படமாக்குவதோ அல்லது தூய்மையற்றதாகச் செய்வதோ குணங்கள் தான். கர்த்தா, செயல், உணர்ச்சி, அறிவு, விருப்பம், சந்தோஷம் ஆகிய எல்லாவற்றிலும் மூன்று விதங்கள் உண்டு என்பது பிறகு விவரிக்கப்படுகின்றது. மனிதன் தன்னுடைய சக்திகளை ஆர்வத்துடனும், வெற்றியா அல்லது தோல்வியா என்ற எண்ணம் இல்லாமலும் உபயோகிப்பதன் மூலம், தூய்மையற்ற நிலையிலிருந்து தூய்மையான நிலைக்கும், சுயநலத்திலிருந்து சுயநலமற்ற நிலைக்கும், இருளிலிருந்து ஒளிக்கும் உயருகிறுன் என்பதைக் காட்டவே மேற்கண்ட விதம் விவரிக்கப்படுகின்றது (அத்தியாயம் - 18 சுலோகம்-26).

"பொய்யான நிலையிலிருந்து உண்மையான நிலைக்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மரணத்திலிருந்து மரணமே இல்லாத நிலைக்கும் எனக்கு வழிகாட்டிச் செல்க."*

மனிதன் தன் மனமாகிற பீடத்தில் பின்வரும் மூன்று விஷயங்களைப் பிரபலமாக எழுதிவைத்துக்கொள்ள வேண்டும்: தூய்மையான செயல் அல்லது தூய்மையான தியாகம்; தூய்மையான அறிவு; தூய்மையான ஆனந்தம்.

ஒருவன், விதி தனக்கு இடப்பட்டுள்ள கடமையை பற்றுதலின்றியும், விருப்பு வெறுப்பு இல்லாமலும், வெகுமதி அல்லது பலன் கிடைக்கும் என்ற எண்ணமின்றியும் செய்ய வேண்டும். அதுவே தூய்மையான செயல்.

எல்லா வேற்றுமையிலும் ஒற்றுமையைக் காண்பதே தூய்மையான அறிவு.

கஷ்டத்தையும் வேதனையையும் கூட துச்சமாக எண்ணி முயற்சிப்பதன் மூலம் நிரந்தரமான ஆனந்தத்தை அடைவதற்குப் பாடுபடுவதே தூய்மையான ஆனந்தம் ஆகும் (அத்தியாயம் – 18, சுலோகங்கள்-18-40).

அவ்விதமாக, இந்த மூன்று குணங்களும் மனிதனின் ஒவ்வொரு நரம்பின் வழியாகவும் பின்னப்பட்டுள்ளன. அக்குணங்களிலிருந்து யாரும், தேவர்கள் கூட விடுபட்டிருக்கவில்லை (சுலோகம்-40).

சமுதாய அமைப்பு, நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. சமுதாயத்திற்குத் தொண்டு புரிவதில் ஒவ்வொரு பிரிவினரும் தங்களுடைய சக்திகளையும் விசேஷத் திறமைகளையும் உபயோகிக்க வேண்டும் என்பதே, அவ்விதம் பிரிக்கப்பட்டிருப்பதன் நோக்கமாகும். சாந்தம், தன்னலமறுப்பு, நீண்ட காலம் துன்பத்தை அனுபவித்தாலும் பொறுமையைக் கைவிடாமல் இருத்தல், ஆன்மிக ஞானம் முதலியவற்றையே அடிப்படையாகக்கொண்டு பிராம்மணன் தொண்டு புரிய வேண்டும். வீர தீர பராக்கிரமம், உற்சாகம், பெருந்தன்மை முதலியவற்றை முக்கியமாகக் கொண்டதே க்ஷத்திரியனின் தருமம். நிலங்களிலிருந்தும், பசுக்களிடமிருந்தும், வர்த்தகத்தின் மூலமும் செல்வம் திரட்டுவதே வைசியனின் தருமம். மேற்கண்ட மூன்று பிரிவினருக்கும் உடல் உழைப்பின் மூலம் உதவிசெய்வதே சூத்திரனின் தருமம் ஆகும். (சுலோகங்கள்-41-44).

---

*பிருஹதாரண்யக உபநிடதத்தில் உள்ள பின்வரும் சுலோகத்தின் பொருளே மேலே கொடுக்கப்பட்டுள்ளது:

असतो मा सद् गमय, तमसो मा ज्योतिर्गमय, मृत्योर्मामृतं गमय।

அத்தியாயம்-1, பிரிவு-3, சுலோகம்-28.

ஒவ்வொருவனும் தனக்கு இடப்பட்டுள்ள கடமையை நேர்மையான உணர்ச்சியுடன் செய்தால், அவன் மோட்சம் அடைவது நிச்சயம். ஆனுல், அவன் செய்யும் தொண்டு கடவுளின் பெயராலும், கடவுளுக்குக் காணிக்கையாகவும் செய்யப்பட வேண்டும். கடவுளுக்கு, அதாவது கடவுளால் படைக்கப்பட்ட எல்லோருக்கும் பற்றற்ற முறையில் தொண்டு செய்வதே உண்மையான கடவுள் வழிபாடாகும். இந்த நிலையில், அவனவன் விருப்பப்படி தொண்டு செய்யலாம் என்ற பேச்சிற்கே இடமில்லை. அவ்விதம் செய்வது, பற்றுதலுடன் செய்யும் தொண்டு ஆகிவிடலாம்.

அருவருக்கத்தக்கதாயினும், ஒருவனுடைய சொந்தக் கடமையே, சுயதருமமே, எளிதாகவும், வசீகரமாகவும் தோன்றும் மற்றவர்களுடைய கடமையைக் காட்டிலும் மேலானது. மற்றவர்களுடைய கடமை எளிதாகத் தோன்றினுலும், இறுதியில் அது வீண் மயக்கமாகவும், சிக்க வைக்கும் ஒரு வலையாகவுமே முடியும்.

பூமியில் ஒரு மனிதனின் பிறப்பு, அவனது கர்ம வினையின் பலனே. எனவே கர்மங்கள் எல்லாம் குற்றம் குறைகள் உள்ளவையாகத்தான் இருக்க முடியும். இந்த உடல் புரியும் செயல்கள் யாவும் இயல்பாகவே ஏதாவது ஒரு விதத்தில் குற்றம் குறைகளுடன்தான் இருக்கும். எனினும், மட்டமான உலோகத்தையும் தங்கமாக மாற்றிவிடும் சக்திவாய்ந்த ரசாயன மருந்தைப் போல், பற்றின்மையாகிற ரசாயன மருந்தின் மூலம் எல்லாக் குற்றம் குறைகளையும் அகற்றி, செயல்களை அப்பழுக்கற்றவையாக மாற்றிவிட முடியும். முற்றிலும் பற்றுதலே இல்லாமல் மனிதன் வாழ்க்கையை நடத்திவரட்டும். அவனது பற்றின்மையே, அவனது செயல்கள் அவனைக் கட்டுப்படுத்தாத அப்பழுக்கற்ற மகோன்னத நிலையை அவன் அடையும்படி செய்துவிடும் (சுலோகங்கள்-45-49).

கட்டுப்படுத்தும் எல்லாச் செயல்களையும் விடுதலை அளிக்கும் செயல்களாக மாற்றும் இந்த ரகசியத்தை அறிந்து செயல் புரிபவன், ஞானத்தின் இறுதியான கட்டத்தில் கடைசியாக எவ்விதம் சாந்தநிலையை அடைகிருன் என்பதை, கீதையின் ஆசிரியர் இப்போது எடுத்துக் காட்ட முற்படுகிருர். இறுதியில், எல்லா யோகங்களும் இங்கே ஒன்று சேருவதை நாம் காண்கிருேம். தன்னலமற்ற இந்தச் செயல், அவனது அறிவைத் தூய்மையாக்குகின்றது. அப்போது அவன் தன் உடல், மனம் எல்லாவற்றையும் தன் விருப்பப்படி செயல்படுமாறு கட்டுப்படுத்துவதில் வெற்றி பெறுவான். புலன்களுக்கான சாதனங்களில் உள்ள விருப்பு வெறுப்புகளை அவன் ஒழித்துவிடுவான். அவ்வாருக, அவன் அப்பழுக்கற்ற கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டும், வெறிக் குணங்களிலிருந்து விடுபட்டும் தியானத்தில் முழு மூச்சுடன் ஈடுபடுவான். 'நான்', 'என்னுடையது' என்ற உணர்ச்சியையே அவன் உதறித் தள்ளிவிட்டு, இயற்கையுடன் ஒன்ருகிவிடத் தன்னைத் தகுதியாக்கிக் கொள்ளுகிருன். இயற்கையுடன் ஐக்கியத் தன்மை ஏற்

பட்ட பிறகு, அவன் உள்ளத்தில் சாந்தி நிலவும்; கடவுளின் படைப்புகள் எல்லாவற்றையும் அவன் சமமாகக் கருதுவான்; கடவுளிடம் அவன் மனத்தில் தூய்மையான பக்தி நிறைந்திருக்கும்; கடவுளின் மகத்துவத்தை அவன் பூரணமாக அறிந்துகொள்ளுவான்; அவரை உண்மையாக அறிந்து அவரிடம் ஐக்கியம் அடைவான் (சுலோகங்கள்-50-55).

இந்த சுலோகங்களை, ரய்ஸ்ப்ரோக் என்ற ஞானியின் பின் கண்ட வாக்கியங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், ஞான மார்க்கங்கள் யாவும் ஒன்றுக்கொன்று எவ்விதம் இணைந்து விளங்குகின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்:

''உள்ளத்தில் உள்ள அன்பினாலும் நிரந்தரமான தொண்டினாலும் மனிதன் கடவுளிடம் செல்லுகிறான். நிரந்தரமான அமைதியைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் அவன் கடவுளிடம் செல்லுகிறான். அவன் கடவுளிடத்திலேயே இருக்கின்றான். இருந்தாலும் அவன் அன்பு மயமான உணர்ச்சியுடன் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லாவற்றினிடத்திலும், தார்மிகச் சிறப்புகளுடனும் நேர்மையான தொண்டுகள் செய்வதற்காகவும் செல்லுகிறான். ஆன்மிக வாழ்க்கையின் மகோன்னதமான சிகரம் இதுதான்.''

கடமை என்ற சித்தாந்தம் முழுவதும் இப்போது சுருக்கமாகக் கூறப்படுகிறது. தனது கடமையை உணர்ந்து விழித்து எழும்படி கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இறுதியாகக் கூறுகிறார்: ''நானே கதி என்று என்னிடம் சரண் அடைவாயாக. ஒவ்வொரு சமயத்திலும் நீ செய்ய வேண்டிய கடமை ஒவ்வொன்றையும் என்னால் தூண்டப்பட்டு செய்வதாக எண்ணிக் கொண்டு செய். அவ்விதம் எனது மகிமையை உணர்ந்து நீ செய்தால், எனது அருளால் நீ மகோன்னதமான லட்சியத்தை அடைவாய். என்னுடைய அருளால் நீ ஒவ்வோர் இடையூறையும் தாண்டிச் செல்லுவாய். ஆனால், உனது கடமையிலிருந்து நீ தப்பித்துக் கொள்ள முடியும் என்று கற்பனை செய்து கொண்டு, நான் சொல்லுவதைக் கேட்காவிட்டால், உனது இயற்கை சுபாவம் மேலோங்கி உன் கடமையைச் செய்யும்படி வற்புறுத்தும். எனது கட்டளையின்படி நீ செய்ய மறுப்பதையே, உனது இயல்பின் கட்டளைக்கு இணங்க நீ செய்யும்படி நேர்ந்து, அழிந்து போவாய். ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் கடவுள் வீற்றிருக்கிறார். அவரிடம் தஞ்சம் அடைந்து அவரது கட்டளையின்படி அவர்கள் நடக்க முடியும். ஆனால், அவர்கள் அவ்விதம் நடந்து கொள்ளாவிடில், ஓர் யந்திரத்தில் அகப்பட்டுக்கொண்டு சுழல்வதுபோல், அவரவர்களுடைய பிரகிருதி இழுத்த இழுப்புக்கு அவர்கள் ஆடும்படி நேரும். எனவே, பகவானையே தஞ்சம் அடைவாயாக. அவரது அருளால் உனக்கு நிரந்தரமான அமைதி ஏற்படும்'' (சுலோகங்கள்-55-62).

கிருஷ்ணன் மீண்டும் அர்ஜுனனுக்குப் பின்வருமாறு உறுதி கூறுகிறார்: "அந்த பகவான் நான்தான். நீ என் அன்புக்குப் பாத்திரமானவன். மகத்தான ரகசியத்தை உனக்கு நான் வெளியிட்டுள்ளேன். அதை தீர்க்காலோசனை செய்து, உன் விருப்பப்படி செய். உனது சிந்தனை, உனது பூஜை, உனது தியாகம், உனது பக்தி எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய். அவ்விதம் செய்தால், நீ என்னையே வந்து அடைவாய் என உனக்கு நான் உறுதி கூறுகிறேன். முரண்பாடான கடமைகளால் உன்னையே நீ கலக்கத்திற்கு உள்ளாக்கிக்கொள்ளாதே. என்னிடம் சரண் அடை. பாவத்திலிருந்து உன்னை நான் விடுவிக்கிறேன். துக்கப்படாதே" (சுலோகங்கள்-63-66).

தகுதியற்றவர்களுக்கு இந்த சித்தாந்தத்தை உபதேசித்து வீணாகும்படி செய்ய வேண்டாம் என்றும் கிருஷ்ணன் இறுதியாக அர்ஜுனனை எச்சரிக்கின்றார். அதாவது, "தன்னடக்கம், பக்தி இல்லாதவர்களுக்கும், இதைக் கேட்க விருப்பமற்றவர்களுக்கும் இதை எடுத்துச் சொல்லாதே" என்று கிருஷ்ணன் எச்சரிக்கை செய்கின்றார். கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையில் அடங்கியுள்ள சித்தாந்தத்தை, தகுதிவாய்ந்தவர்கள் தகுதிவாய்ந்தவர்களுக்கு எடுத்துக் கூறுவார்களாயின், அவர்களுக்கு உண்மையான பக்தி ஏற்படும். கீதையை பயபக்தியுடன் வாசிப்போர், கடவுளுக்கு "ஞான யக்ஞம்" செய்தவர்கள் ஆவர். அதை பயபக்தியுடன் கேட்பவர்கள் மேலான உலகங்களை அடைவர் (சுலோகங்கள்-67-71).

"உன் மனத்தில் அறியாமையால் எழுந்த மயக்கம் இப்போது ஒழிந்ததா?" என்று கடைசியாக கிருஷ்ணன் ஒரு கேள்வி கேட்கிறார். அர்ஜுனனின் இயல்பை நன்கு அறிந்து கிருஷ்ணன் கூறியிருப்பது, கிருஷ்ணனின் மகிமையை வெளிப்படுத்தும் இறுதியான மின்னொளிபோல் இருக்கின்றது. கிருஷ்ணனின் உபதேசத்தினால் அர்ஜுனனின் சந்தேகம் அகன்று, நிச்சய புத்தியினால் ஏற்படும் அமைதியுடனும், தெய்வ நம்பிக்கையினால் ஏற்படும் மன உறுதியுடனும் அவன் கிருஷ்ணனின் இறுதியான கேள்விக்கு பதில் அளிக்கின்றான். தனது சந்தேகங்கள் தீர்ந்துவிட்டன என்றும், உண்மையான ஆன்மாவைப் பற்றிய ஞானம் தனக்கு மீண்டும் ஏற்பட்டுவிட்டதாகவும், கிருஷ்ணனின் கட்டளைப்படி தான் நடந்துகொள்ளுவதாகவும் அவன் கூறுகிறான் (சுலோகங்கள்-72-73).

இத்துடன் சஞ்சயனின் கதை முடிவடைகின்றது. எனினும், சஞ்சயன் கண்ட பரவசத்தைக் கொடுக்கும் தோற்றம் அவன் கண் எதிரில் நின்று கொண்டிருக்கிறது. தெய்விகமான அந்த சம்பாஷணை அவனது மனத்தில் எதிரொலிக்கின்றது. அதையே எண்ணி எண்ணி ஆனந்தம் அடைய அவன் ஆசைப்படுகிறான். அதன் விளைவாக, அந்தகனான மன்னனுக்கு மேலும் அதிக துக்கம் ஏற்படும்படி செய்வதை விடுத்து, சஞ்சயன் தன்

கதையை இவ்விதம் முடிக்கின்ருன்: "இதைக் காட்டிலும் அதிகமாக நான் சொல்ல என்ன இருக்கிறது? யோகேசுவரனுன கிருஷ்ணன் கடமையாகிய சித்தாந்தத்தை எங்கே விளக்கு கிருரோ, அந்த சித்தாந்தத்தை நிறைவேற்றுவதற்குத் தகுதி வாய்ந்த ஒருவன் எங்கே இருக்கிருனே அங்கே நிரந்தரமான தருமமும், எனவே நிச்சயமான வெற்றியும் இருந்தே தீரும்."

சஞ்சயன் அவ்வாறு கூறியது, தவிர்க்க முடியாதது நடந்தே தீரும் என்ற ஒழிவை அந்தகனை மன்னன் மேற்கொள்ளும்படி செய்திருக்கலாம். ஒருவேளை, அதில்தான் எல்லோருடைய நன்மையும் அடங்கியிருக்கிறது என்றும் அந்த மன்னன் எண்ணி யிருக்கலாம்.

## நான்கு வர்ணங்களும் சுயதர்மமும்

நான் கொடுத்துள்ள விளக்கத்தை நன்கு அறிந்துகொள்ளு வதற்கு அவசியமான சில விஷயங்களைப்பற்றி இதுவரை விவா தித்துள்ளேன். கீதையின் உபதேசத்திலிருந்து எழும் சில கேள்விகளை இப்போது பரிசீலனை செய்ய முற்படுகிறேன். அத்தகைய கேள்விகள் அடிக்கடி கேட்கப்படுகின்றன.

கீதையில் உபதேசிக்கப்பட்டுள்ள சுயதர்மத்தை அனு சரிப்பது, அதாவது ஒருவரது கடமை அல்லது தொழிலைச் செய்வது என்ற சித்தாந்தத்தை எதிர்த்து அறியாமையினல் ஏராளமான கண்டனங்கள் எழுகின்றன. அத்தகைய கண்டனங் களுக்குக் காரணங்கள் என்னவெனில், மிகவும் துஷ்பிரயோகம் செய்யப்பட்ட வர்ணுசிரம முறையே ஆகும். 'சாதி முறை'க்குச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ வாதிப்பதற்கு இது இடமில்லை. எனினும், சில விஷயங்களை இங்கே தெளிவாகக் கூறவேண்டியது அவசியமாக இருக்கிறது. சாதி முறைக்கும் கீதையின் சித்தாந்தத்திற்கும் உள்ள சம்பந்தத்தை எடுத்துக் காட்டவேண்டியதும் அவசியம் ஆகும். வெகுகாலத்துக்கு முன் இருந்த அந்த முறை சிதைந்து, இன்று அதன் நிழல் உருவம்தான் இருக்கிறது. கண்டனங்களில் பெரும் பகுதியும் அந்த நிழலையே எதிர்ப்பதாக இருக்கின்றன.

எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்குமுன் அந்த முறை அமலில் இருந்தது. அக்காலத்தில் நிலவிய சமுதாய அமைப்பிற்கு அது அற்புதமான விதத்தில் பொருத்தமாகவும் இருந்தது. அது விறைப்பாகவும் கண்டிப்பாகவும் இராமல், எல்லோரையும் அரவ ணைக்கும் தன்மை வாய்ந்ததாக இருந்ததால், பல்வேறு இனத் தினரும், ஒரே இனத்தைச் சேர்ந்த பல்வேறு கோஷ்டியினரும் அந்நியோன்னியமாகவும் அமைதியுடனும் சேர்ந்து வாழ்வது சாத்தியமாக இருந்தது. ஆனல், இன்று நாம் காண்பது, அந்த முறையின் கேலிக் கூத்தான ஒரு நிலையே ஆகும். பல நூற் ருண்டுகளாக நிலவிவரும் பழக்கவழக்கங்களால் அது மூடி மறைக்கப்பட்டு ஒரு பாறைபோலாகிவிட்டது. எனவே, இன்

றுள்ள அதன் எலும்புக் கூட்டிலிருந்து, அதன் ஆதி உருவத்தைக் கற்பனை செய்து கொள்ளக் கூடாது. அவ்விதம் கற்பனைசெய்து கொண்டு, அருவருக்கத்தக்க ஒரு விஷயத்தை தெய்விகமான கட்டளை என்ற பெயரால் அனுமதிக்க கீதையின் ஆசிரியர் முயற்சித்துள்ளார் என்று கூறக் கூடாது. கீதையில் விவரிக்கப் பட்டுள்ள வர்ணாசிரம முறை வளைந்து கொடுக்காத ஒரு விஷயம் அல்ல. வர்ணாசிரமப் பிரிவினைக்கு கண்டிப்பான எல்லைகள் எதுவும் வகுக்கப்படவில்லை. கீதை, பிரிவினையை அனுமதிக் கிறது எனில், அது தெய்வகுணம் உள்ளவர்கள் என்றும், அசுர குணம் உள்ளவர்கள் என்றும் பாகுபாடு செய்துள்ள பிரிவினை தான் என்பதைப் பார்த்தோம். அதைப் பரிசீலனை செய்வோ மாயின், அதுகூட நிரந்தரமான பிரிவினையாகத் தோன்றுது. ஏனெனில், நாம் எந்த வகுப்பைச் சேர்ந்தவராயினும், எந்த சாதியைச் சேர்ந்தவராயினும், நம் உள்ளே தெய்வத்தன்மைக்கும் அசுரத்தன்மைக்கும் இடையே நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. எனவே, ஒரு மனிதன் மற்றொரு சகோதர மனித னிடம் குற்றம் குறை காண்பதோ, அவனது குணங்களை நிர்ணயிக்க முற்படுவதோ முடியாத காரியம். அவன் தன்னையே சரியாக நிர்ணயிக்க முடியாத நிலையில் இருக்கும்போது, மற்றொரு வனைப்பற்றி அவன் நிர்ணயிக்க முற்படுவது எவ்விதம் சாத்திய மாகும்?

வர்ணாசிரம முறையில் உள்ள முக்கிய அம்சங்களை இப்போது நாம் எடுத்துக்கொள்ளுவோம்:

1. அந்தப் பிரிவினை முற்றிலும் தொழிலை அடிப்படையாகக் கொண்டது. ஒவ்வொருவரும், சமுதாய அமைப்பின் சீரிய நலனுக்கு உகந்தவாறு தொண்டு புரியவேண்டும் என்பதே அதன் கருத்தாகும். தங்களுடைய நடத்தைக்கும் திறமைக்கும் முற்றிலும் உகந்த கடமைகளில் மனிதர் ஈடுபடுவார்களாயின், அவர்களால் சமூகத்திற்குச் சிறந்த தொண்டுபுரிய முடியும். ஒருவருடைய தேவை என்ன என்பது முக்கியமான விஷயம் அல்ல; ஒருவர் சமூகத்திற்கு என்ன கொடுக்க முடியும் என்பதே முக்கியமாகும்.

2. அக்காலத்தில் இருந்த சமூகத்தின் தேவைகளை மனத்திற் கொண்டே அந்தப் பிரிவினை ஏற்பட்டது. பொதுவாக அந்தத் தேவைகளைப் பின்வருமாறு பிரிக்கலாம்: (அ) அறிவு, ஆன்மிக சம்பந்தமானவை, (ஆ) தற்பாதுகாப்பு, (இ) புத்திசாலித்தன மான பொருளாதார முறைகளின் மூலமும், தொழிலாளர்களின் உழைப்பினாலும் செல்வத்தை உற்பத்தி செய்தல்.

ஒவ்வொரு தேவையையும் பூர்த்திசெய்யும் பொறுப்பு, அதை நிறைவேற்றுவதற்கு அவசியமான குறிப்பிட்ட தகுதிகளும் திறமையும் வாய்ந்த ஒவ்வொரு சமூகத்தினரிடம் ஒப்புவிக்கப்பட் டிருந்தது. தனி வகுப்பினரின் தகுதிகளில் ஏற்றத்தாழ்வு இருக்கும் என்பதையும் உணர்ந்திருந்தனர். எனினும், ஒருவரின் விசேஷ

தகுதிகளும் திறமையும், அவரது அந்தஸ்தைக்காட்டிலும் பொறுப்பையே அதிகமாக்குவதாக இருந்தன. உதாரணமாக, சொத்து எதுவும் வைத்துக்கொள்ளாமல் இருப்பதே பிராம்மணனின் விசேஷ அம்சங்களில் ஒன்றாகும். ஆன்மிக சக்தியும், தன்னல மறுப்பும் தான் பிராம்மணனின் செல்வமாக இருந்தன. சமூகத்தின் நலனுக்காக செல்வத்தை உற்பத்தி செய்வதே வைசியனின் இன்றியமையாத கடமையாக இருந்தது. அதுபோலவே, சமூகத்தின் நன்மைக்காக உடல் உழைப்பை உபயோகிப்பதே சூத்திரனின் உரிமையாக இருந்தது.

3. ஆனால், தூய்மையோ அல்லது தருமமோ யாருக்கும் ஏகபோக உரிமையாக இல்லை. ஒருவர் ஒழுங்குடனும் தன்னலமின்றியும் தனது கடமையைச் செய்வதன்மூலம் மோட்சம் அடையலாம். கர்மங்கள் அல்லது செயல்களே பல்வேறு சமூகங்களின் இயல்பான குணங்கள் என்று கீதையில் பொதுவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், பாகவத புராணமோ வெனில், வாழ்க்கையில் தருமம் என்பது எல்லோருக்கும் ஒன்றுதான் என்று கூகிறது. அதாவது, பிறருடைய மனத்தைப் புண்படுத்தாமல் இருத்தல், சத்தியம், திருடாமை, கோபத்திலிருந்தும் பேராசையிலிருந்தும் விடுதலை, மனித வர்க்கத்திற்கு நன்மை செய்யவேண்டும் என்ற ஆசை ஆகியவை தாழ்ந்தவர்கள், உத்தமர்கள் எல்லோருக்கும் பொதுவான தரும விதிகள் ஆகும் என்று பாகவதம் கூறுகிறது.* எனவே, மகத்தான கடமைகளை நிறைவேற்ற வேண்டியிருப்பவர்களுக்குத்தான் மோட்சத்தை அடைவது கஷ்டமாகும். தாழ்மையான கடமைகளைச் செய்வோர் மோட்சத்தை அடைவது எளிது. ஏனெனில், அவர்கள் அதிக அறிவினால் தங்களுடைய மூளையை நிரப்பிக் கொண்டிருக்கவில்லை அல்லவா? ஒரு கசாப்புக் கடைக்காரரோ அல்லது ஒரு தோட்டியோ தங்களுடைய மூதாதையரின் அந்தத் தொழிலை, மன அமைதியுடனும், பற்றுதலின்றியும், கடவுளுக்கு அளிக்கப்படும் காணிக்கையாக எண்ணிக்கொண்டும் செய்வது எளிதாகும். ஆனால், பண்டிதனான ஒரு பிராம்மணன் மிகுந்த பாண்டித்யம் காரணமாக, தன்னுடைய பைசாசத் தன்மையை மறைப்பதற்காக பயபக்தியுடையவனைப் போலத் தோற்றம் அளிக்கலாம்; பயபக்தியுடன் தனது கடமையைச் செய்பவன் போல் பாசாங்கு செய்யலாம்.

மகாத்மாக்களான இந்திய முனிவர்களிடையே, பிராம்மணர்களைக் காட்டிலும் பிராம்மணரல்லாதார்தான் அதிகமாக இருந்

---

वर्णानामाश्रमाणां च जन्मभूम्यनुसारिणी:।
आसन् प्रकृतयो नृणां नीचैर्नीचोत्तमो त्तमा:॥
अहिंसा सत्यमस्तेयं अकामक्रोधलोभता।
भूतप्रियहितेहा च धर्मोऽयं सार्त्ववर्णिक:॥

भागवतं-११, १७, १५, २१

திருக்கிறார்கள். நாம் பக்தியுடன் நினைவுகூரும் முனிவர்களிடையே சேனா ஒரு நாவிதராகவும், சஜனா ஒரு கசாப்புக் கடைக்காரராகவும், கோரா ஒரு குயவராகவும், ரெய்தாஸ் ஒரு சக்கிலியராகவும், சொக்கமேலா தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவராகவும் இருந்தார்கள். சுவாமி துகாராம் வேளாளர் சமூகத்தைச் சேர்ந்தவர். இவர்களில் ஒருவராவது தங்களுடைய தொழிலைப் புறக்கணிக்கவில்லை. அதற்கு மாறாக, பற்றுதலின்றியும், பயபக்தியுடனும் தங்களுடைய தொழிலைச் செய்ததன் மூலமே மோட்சத்திற்கு வழி தேடிக்கொண்டார்கள்.

4. அந்தத் தொழில்கள் எல்லாம் பரம்பரையாக வருபவை. ஏனெனில், பாரம்பரியம்தான் இயற்கையின் நியதி. எனினும், திட்டவட்டமான தனிப் பிரிவுகள் என்று எதுவும் இல்லை என்பதை மகாபாரதத்திலிருந்து நாம் அறிகிறோம். வர்ணங்களிலும் தொழில்களிலும் கலப்பு ஏற்பட்ட பல சம்பவங்கள் மகாபாரதத்தில் உள்ளன.

5. இன்று சமுதாய அமைப்பு சின்னாபின்னமாகிச் சீர் குலைந்துவிட்டது. பழைய வர்ணங்களைப் பற்றிய விளக்கத்திற்கு இணங்க, இன்று நிர்ணயமான வகுப்புகள் எதுவும் இல்லை. ஆனால், இயற்கையின் நியதிக்கு மரியாதை கொடுக்கவேண்டும் என்ற விதி இன்றும் பொருத்தமாகவே இருக்கிறது. ஒழுங்கான முறையில் உருவாகியுள்ள எல்லா சமூகங்களையும் பரிசீலனை செய்வோமாயின், அவை ஏதாவது ஒரு விதமான தொழில் பிரிவினையையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

"ஒருவருடைய தருமத்தைச் செய்வதே மகத்தான கடமையும் ஒழுக்கமும் ஆகும் என்று கருதப்படுகிறது. அப்படியிருக்க, தாறுமாறாகச் சிதைந்துள்ள சாதி முறையினால் தருமத்தை நிர்ணயிக்கும்படி நேரும்போது, ஒருவர் என்ன செய்வது?" இவ்விதம் கேள்வி கேட்கிறார்கள். அக் கேள்விக்கு விடை இதுதான்: தருமம் அல்லது ஒருவரது கடமை அல்லது பிறவித் தொழில் என்பது உட்கருத்து இல்லாத வெறும் சொற்றொடர் அல்ல. குறிப்பிட்ட காலத்தில் அல்லது இடத்தில் பிறந்த ஒருவருடைய கடமை என்பதே அதன் அர்த்தம்.

புதிய சந்தர்ப்பங்கள் புதிய கடமைகளைக் கற்பிக்கின்றன. பண்டைக் காலத்தில் நன்மையாக இருந்ததை, இந்தக் காலமானது மாற்றி அர்த்தமற்றதாகச் செய்துவிடுகிறது. 2500 ஆண்டுகளுக்கு முன் ஒருவருக்கு இடப்பட்டுள்ள கடமையானது யுத்தம் செய்வதாக இருக்கலாம். ஆனால் இன்று, யுத்தங்களையெல்லாம் ஒழிப்பதற்காக ரத்தம் சிந்தாத போரே ஒருவரது கடமையாக இருக்கலாம். அப்போது, ஓர் எதிரியைக் கொல்லுவதே கடமையாக இருந்திருக்கலாம். ஆனால் இன்றோ, ஒரு புனிதமான கொள்கையையோ, நபரையோ அல்லது தேசீய

கௌரவத்தையோ பாதுகாப்பதற்காக தன் உயிரைப் பலி கொடுப்பதே ஒருவரது கடமையாக இருக்கலாம்.

"ஒருவருக்கு இடப்பட்ட கடமை" என்பதற்கு இயல்பான அர்த்தம் உண்டு. அந்த அர்த்தத்தைக் கண்டுபிடிப்பதில் மேனாட்டினரைக் காட்டிலும் இந்தியர்களுக்கு அதிகமான கஷ்டம் இராது. ஒரு நவீன ஆசிரியர்* "தரும நெறி" என்ற அவரது நூலில் தார்மிக விதியைப்பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார்: "உன் முழு உள்ளத்துடனும், உன் முழு ஆன்மாவுடனும், உன் முழு பலத்துடனும், உன் மனப்பூர்வமாகவும் உன்னுடைய குறிப்பிட்ட தொழிலில் நீ உழைக்க வேண்டும்." இதே கருத்தையே கார்லைலும் பின்வருமாறு கூறியுள்ளார்: "உன்னால் என்ன வேலை செய்யமுடியும் என்பதை முதலில் அறிந்துகொள். பிறகு, அதை நீ உன் முழு சக்தியையும் உபயோகித்துச் செய்து முடி."

உலகத்தில் உள்ள வேறு எந்த தரும நெறி முறையையும் காட்டிலும் கீதையே தார்மிக நெறியை மிகவும் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது. அவ்விஷயமாக கீதை கூறுவதன் கருத்து இதுதான்: "நீ உன் முழு பலத்தையும் உபயோகித்து உழைக்க வேண்டும். ஆனால், பலனைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் உன்னுடைய உழைப்பை, பணிவுடன் நீ பூஜைசெய்யும் ஒரு மலராக எண்ணிக் கடவுளின் பாதத்தில் அர்ப்பணம் செய்துவிடு. சிறந்த காரியம்கூட தன்னல நோக்கத்துடன் செய்யப்படுமாயின், அது வெறும் சூன்யமான செயலாகிவிடும்."

கேள்வி கேட்பவர்கள் கூறுவதைப்போல், ஒருவருடைய கடமையைச் செய்வதுதான் மிகச் சிறந்த தருமம் என்று கீதை கூறவில்லை. சிறிதும் பற்றுதலின்றியும் முற்றிலும் தன்னலமின்றியும் ஒருவன் தன் கடமையைச் செய்வதுதான், எல்லாவற்றையும் காட்டிலும் சிறந்த தருமம் ஆகும். எனினும், அவ்விதம் செய்யும் வேலையானது தருமத்திற்கு முரணாக இருக்கக் கூடாது. அதன் தார்மிகச் சிறப்பை நிர்ணயிப்பதற்கான ஒரே வழி, பற்றின்மையும் தன்னலமின்மையும் தான். தருமத்தில் முற்றிலும் தன்னலமின்மையே அடங்கியிருக்கிறது.

"அப்படியாயின், சுயதருமம் என்றும் பரதருமம் என்றும் ஏன் வற்புறுத்திக் கூறவேண்டும்? இதற்கு கீதை, பிறரது கடமையைச் செய்வது ஆபத்தாகும் என்பதைத் தவிர வேறு எத்தகைய பதிலும் அளிக்கவில்லை" என்று ஆட்சேபவாதிகள் கூறுகின்றனர். அதைக் காட்டிலும் சிறந்த பதிலை அவர்கள் ஏன் விரும்புகின்றனர்? சுயதருமம் என்றும் பரதருமம் என்றும் வற்புறுத்துவதற்குக் காரணம் என்னவெனில், ஒருவர் தனக்கு இடப்படாத கடமையை நாடிச் செல்லுவாராயின், அவர் ஒரு

*பிரபல பிரிட்டிஷ் நூலாசிரியரும் பேராசிரியருமான சர் மெக்கென்ஸியையே ஸ்ரீ மகாதேவ தேசாய் மேலே குறிப்பிட்டுள்ளார்.

படுகுழியில் வீழ்கின்றார் என்பதே மகான்களின் அனுபவம் ஆகும். யார் பயபக்தியுடன் காத்திருக்கிறார்களோ அவர்களைக் கடமைகள் நாடி வருகின்றனவேயன்றி, கடமைகளை விரட்டிச் செல்லுவோரிடம் அவை வருவதில்லை. கார்டினல் நியூமென் * அழகாகக் கூறியிருப்பதுபோல, "நாம் கோருவதுபோல் தொண்டு செய்யும் வாய்ப்பு நமக்குக் கிடைப்பதில்லை; உலகத்தின் நலனுக்காக நமது தகுதிகளே நமது கடமையையும் உழைப்பையும் நிர்ணயிக்கின்றன. எல்லாம் வல்ல இறைவனால் அவ்விதமாக எல்லாமே இயங்குகின்றன."

## ஞானம் ஒரு பாதுகாப்பாக இருக்க முடியுமா ?

ஹியூம்† பின்வருமாறு கூறுகிறார்: "உபநிடதங்களிலெல்லாம், தத்துவ ஞானமே மனிதனை உத்தாரணம் செய்யும் மந்திரமாகவும், பாவங்களிலிருந்து அவனுக்குப் பாதுகாப்பு அளிக்கும் ரட்சையாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. தத்துவ ஞானம் யாருக்கு இருக்கிறதோ, அவர் செய்த பழைய பாவங்களையெல்லாம் அது ரத்து செய்து விடுகிறது, அது மாத்திரமல்ல; அந்த ஞானத்தைப் பெற்றவர், கூச்சமின்றித் தீய வழிகளில் தொடர்ந்து செல்லவும் கூட அது அனுமதிக்கிறது. அவரது செயல்கள் கொடிய குற்றங்களாக இருந்தால்கூட, அவற்றின் விளைவாக அவர் யாதொரு தண்டனைக்கும் உள்ளாகும்படி நேருவதில்லை. ஆனால் அவ்வித ஞானம் இராதவர்கள் அத்தகைய குற்றங்களைச் செய்தால், அவை அவர்களுக்கு பேராபத்தையே விளைவிக்கின்றன."

பிறகு, ஹியூம் பல காரணங்களைக் கூறி தமது தீவிர நிலையிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள முற்பட்டுள்ளார். அவர் அவ்விதம் தமது தீவிரமான கருத்தை மாற்றிக்கொள்ளும்படி உபநிடதங்களே அவரை வற்புறுத்தியுள்ளன. எனினும், இறுதியில் அவர் மறுபடியும் பழைய குற்றச் சாட்டையே வற்புறுத்துகிறார். அதாவது, தத்துவ ஞானம் உள்ளவனுக்கு தார்மிகமான வேற்றுமைகளே இருப்பதற்கில்லை என்று அவர் கூறுகிறார். ஹியூம் ஒரு சிறந்த பண்டிதர். அவர் உபநிடதங்களின்

---

*கார்டினல் ஜான் ஹென்றி நியூமென் (1801–1891) ஆக்ஸ்போர்டில் கல்வி பயின்று, கிறிஸ்தவ சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் தமது வாழ்நாள் முழுவதையும் கிறிஸ்தவ மடாலயத்தில் கழித்தார். அவர், பல அரிய சமய நூல்களை எழுதியுள்ளார். அவர் இயற்றிய தோத்திர கீதங்களை காந்திஜி அடிக்கடி மேற்கோளாக எடுத்துக் காட்டுவது உண்டு.

†டேவிட் ஹியூம் (1711–1776) இங்கிலாந்தில் பிரபல சரித்திராசிரியராகவும், தத்துவ சாத்திர நிபுணராகவும் திகழ்ந்தார். அவர் எழுதிய "இங்கிலாந்தின் சரித்திரம்" என்ற நூல் வெகு காலம் வரையில் ஆங்கில சரித்திர இலக்கியத்திற்கே சிகரமாக விளங்கி வந்தது. ஹியூம் இயற்றிய தத்துவ சாத்திர சம்பந்தமான நூல்களும் மிகவும் புகழ்பெற்றவை.

பக்தர் என்றும் தோன்றுகிறது. அத்தகைய ஓர் அறிஞரின் மேற்கண்ட அதிசயமான கூற்றைப் பரிசீலனை செய்வதற்கு இது இடமில்லை.

எனினும், கீதைக்கு எதிராகவும் அதே குற்றச்சாட்டை அவர் கொண்டுவந்திருப்பதால், அவரது கூற்றைப்பற்றிக் குறிப்பிட வேண்டியது அவசியமாகியிருக்கிறது. உபநிடதங்களின் நிலையையே கீதையும் மேற்கொண்டிருப்பதாக அவர் கூறுகிறார். தமக்குச் சாதகமாக அவர் கடோபநிடதத்திலிருந்து* மேற்கோள் காட்டியிருக்கிறார். அதையே, கீதையின் 2-ஆவது அத்தியாயம், 19-ஆம் சுலோகம் திரும்பக் கூறியிருப்பதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார். "விரோதிகளைக் கொலை செய்யும் விஷயமாக அர்ஜுனனின் மனத்தில் ஏற்பட்ட சந்தேகத்தையும் துக்கத்தையும் போக்குவதற்காக தெய்வ அவதாரமான கிருஷ்ணன், இந்த ஆன்மா கொல்லுவதில்லை, கொல்லப்படுவதும் இல்லை என்று கூறுகிறார்." இவ்வாறு ஹியூம் குறிப்பிட்டிருக்கிறார்.

குற்றங்கள் இழைக்கப்படுவதை தத்துவஞானம் அனுமதிப்பதாக கீதை கூறுகிறதா என்பதை முதலில் நாம் கவனிக்கவேண்டும். உபநிடதங்களின் நிலை அதுதான் என்ற கூற்றை நுணுக்கமாக ஆராய்வதற்கு முன், ஒன்றிரண்டு விஷயங்களைக் குறிப்பிடலாம். ஞானம் சிறந்த தார்மிக அம்சம் மாத்திரம் அல்ல, அதுதான் மோட்சத்திற்கு வழிகாட்டுகிறது, வேறு எதுவும் அல்ல என்ற சித்தாந்தம் பின்வரும் பிரபல வேத மந்திரத்திலிருந்தே உருவாகியுள்ளது: "அந்தப் பரம் பொருளை அறியாத ஒருவன், வேதத்தில் உள்ள மூல மந்திரங்களை அறிந்து கொண்டதால் மாத்திரம் என்ன செய்யமுடியும்?"

---

हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतं ।
उभौ तौ न विजानीत: नायं हन्ति न हन्यते ॥

*ஹந்தா சேன்மன்யதே ஹந்தும் ஹதச்சேன் மன்யதே ஹதம்|
உபௌ தௌ ந விஜாநீத: நாயம் ஹந்தி ந ஹன்யதே||

—கடோபநிடதம், 1, 2, 19.

கீதையில் உள்ள பின்வரும் சுலோகத்தில் இதே கருத்துதான் அடங்கியிருக்கிறது:

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतं ।
उभौ तौ न विजानीत: नायं हन्ति न हन्यते ॥

ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யச்சைனம் மன்யதே ஹதம்|
உபௌ தௌ ந விஜாநீத: நாயம் ஹந்தி நஹன்யதே||

—கீதை, அத்தியாயம்-2, சுலோகம்-19.

இதன் கருத்து: இந்த ஆன்மா கொல்லுவதாகவும் கொல்லப்படுவதாகவும் யார் எண்ணுகிறார்களோ அவர்கள் உண்மையை உணர்ந்தவர்கள் அல்ல. ஆன்மா கொல்லுவதில்லை, கொல்லப்படுவதும் இல்லை.

வரண்ட பாண்டித்தியத்திற்கும் தத்துவ ஞானத்திற்கும் உள்ள வேற்றுமையையே, அந்த வேத மந்திரம் வற்புறுத்துகிறது என்று என் மனத்திற்குத் தோன்றுகிறது. ஒருவரின் ஒவ்வொரு ரோம துவாரத்திலும் தத்துவ ஞானம் பரவி வியாபித்துளது. அந்த உலைக்களத் தீ, எல்லா இரும்பையும் தீ மயமாக மாற்றிவிடுகின்றது. உபநிடதங்களும் இந்த வேற்றுமையை ஒருபோதும் மறந்துவிடவில்லை. ஆனால் துரதிருஷ்டவசமாக, 'Knowledge' (அறிவு அல்லது ஞானம்) என்ற ஆங்கிலச் சொல்லே இவ்வளவு தொல்லைக்கும் காரணம் ஆகும். 'ஞானம்' என்ற சொல்லில் என்னென்ன அடங்கியிருக்கிறதோ, அதையெல்லாம் 'Knowledge' என்ற சொல் குறிக்கவில்லை. ஞானம் என்பது வெறும் தத்துவ ஞானத்தை மாத்திரம் குறிக்கவில்லை. ஒரு புதிய பார்வையை, ஒரு புதிய வாழ்வை, ஒரு மறுபிறப்பை அது குறிக்கிறது. ஆனால், 'Gnosis' என்ற கிரேக்க மொழிச் சொல் 'ஞானம்' என்ற சொல்லின் முழுப் பொருளையும் பிரதிபலிக்கின்றது. பேராசிரியர் நிகல்சன் கூறுகிறார்: "ஒன்றே என்பதன் பக்கத்தில் மற்றொன்றின் தோற்றமானது போலியும் மனத்தை மயக்கும் கனவுமேயாகும் என்ற உண்மையை பூரணமாக அறிந்துகொள்ளுவதே, உலகம் முழுவதும் பரந்துள்ள ஆன்மாவுடன் முற்றிலும் ஐக்கியம் அடைவதாகும். இந்த ஞானமே (Gnosis), விவேகமற்றவர்களை ஆயுட் காலம் முழுவதும் ஆட்டிவைத்து வரும், அவர்களுக்கும் கடவுளுக்கும் இடையே கார் இருளாகிய சுவரை எழுப்பிவரும் அத்தகைய பிரமையைத் தகர்த்து உண்மை ஒளியைக் காட்டுகின்றது."

ஞானம் என்பதன் அர்த்தத்தை, யாதொரு தப்பெண்ணத்திற்கும் இடமின்றி உபநிடதங்கள் தெளிவாக விளக்குகின்றன. எனினும், இப்போது கீதையை மாத்திரமே பரிசீலனை செய்வதுடன் நாம் திருப்தி அடைவோம். கீதையின் வியாக்கியான கர்த்தாக்கள், ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் ஏகமனதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, ஞானத்தில் அடங்கியுள்ள அம்சங்களையும், ஞானத்தின் நிபந்தனைகளையும் குறித்து அவர்களிடையே எவ்வித அபிப்பிராய பேதமும் இல்லை. 13-ஆவது அத்தியாயம் 7-11 சுலோகங்களில் கொடுக்கப்பட்டுள்ள ஞானத்தைப்பற்றிய விளக்கத்தைக் காட்டிலும் அதிக விரிவான விளக்கம் கொடுப்பது சாத்தியமா? இதை விவரமாக ஏற்கனவே பரிசீலனை செய்துள்ளோம். உள்ளத்தின் உள்ளே உறையும் இறைவனை, தற்காலிகமாக அல்ல, நிரந்தரமாகவே காண்பதற்கு வழிகாட்டும் தார்மிக வாழ்க்கையை அது விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறது. இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள 19 சுலோகங்கள் ஞானியின் புதிய வாழ்க்கையைப்பற்றி விவரிக்கின்றன (அத்தியாயம் - 2, சுலோகங்கள் 54-72). ஒவ்வொரு கட்டத்திலும் அந்த வாழ்க்கையின் சாரம் திரும்பத் திரும்பக் கூறப்பட்டிருக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளைப் பற்றிக்கொள்ளுவதன் மூலம், மனிதனின் ஆன்மிக

விரோதியைக் கொல்ல வேண்டும் என்ற உபதேசத்துடன் மூன்ருவது அத்தியாயம் முடிவடைகின்றது. (அத்தியாயம்-3, சுலோகம்-43). நான்காவது அத்தியாயம், மீண்டும் ஞானத்தைப் பற்றி விளக்குகிறது. ஞானம் உள்ளவன் எத்தகைய தீச்செயலி லும் ஈடுபடலாம் என்று அந்த அத்தியாயம் கூறவில்லை; தூய் மைப்படுத்தும் ஞானத்தின் விசேஷ சக்தியையே அது பிரகட னம் செய்திருக்கிறது (அத்தியாயம் - 4, சுலோகம்-38). ஒருவன் தன்னிடத்திலும் கடவுளிடத்திலும் எல்லாச் சிருஷ்டிகளையும் கண்டாலொழிய, அவனை ஞானி என்று கூறமுடியாது. (அத்தி யாயம்-4, சுலோகம்-35). ஞானத்தை அடைந்தவனின் வாழ்க் கையை, ஐந்தாவது அத்தியாயம் வெகுவாகப் புகழ்ந்திருக்கிறது. அத்தகைய ஞானியின் மனமும், உள்ளமும், ஆன்மாவும் எல்லா அழுக்குகளும் களையப்பட்டுத் தூய்மையாகிவிடுகின்றன; கடவுள் நிரந்தரமாக வாசம் செய்வதற்குத் தகுதியான இடமாகவும் மாறிவிடுகின்றன (அத்தியாயம் - 5, சுலோகம்-17) ஞானி தன் அகக்கண்ணுல் பார்க்கும் அற்புதக் காட்சிகளை ஆருவது அத்தி யாயம் மறக்க முடியாத வார்த்தைகளால் மீண்டும் விவரிக் கின்றது (அத்தியாயம்-6, சுலோகங்கள் - 29-32).

ஆனுல், இவ்விதமே நாம் சொல்லிக் கொண்டுபோக வேண் டிய அவசியம் இல்லை. அவ்விதம் செய்ய முற்பட்டால், நாம் கீதை முழுவதையுமே சுருக்கமாக மீண்டும் கூறவேண்டி யிருக்கும். உண்மையான ஞானத்தின் லட்சணங்கள் எல்லாம் கீதையின் ஒவ்வொரு பக்கத்திலும் பிரபலமாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன (அத்தியாயம்-2, சுலோகங்கள்-54-72; அத்தியாயம்-12, சுலோகங்கள்-13-20; அத்தியாயம்-14, சுலோகங்கள்-22, 26; அத்தியாயம்-15, சுலோகம்-5; அத்தியாயம்-15, சுலோகம்-11; 16-ஆவது அத்தியாயம் முழுவதும்; அத்தியாயம்-18, சுலோகங் கள் - 51-55).

இறைவனை யாரும் ஊனக் கண்ணுல் பார்க்க முடியாது, ஞானக் கண்ணுல்தான் பார்க்க முடியும். இந்த உண்மையை ஞானத்தை விளக்கும் ஒவ்வொரு சுலோகத்திலும் காண்கிருேம். உபநிடதங்களில் கோர்வையாக இருக்கும் வாக்கியங்களை ஹியூம் தமது விருப்பப்படி தனித்தனியாகப் பிய்த்து எடுத்துக் கொண்டிருப்பதுபோல, கீதையில் உள்ள சுலோகங்களையும் இங்கிருந்து ஒன்றும் அங்கிருந்து ஒன்றுமாக எடுத்துக்கொண்டு, எல்லாத் தீமைகளையும் போக்குவதற்குற்ற அருமருந்து ஞானம் தான் என்று கூறலாம். அத்தகைய சுலோகங்களை நாம் எடுத் துக் காட்ட முடியும். அவையாவன- அத்தியாயம்-4, சுலோகம்-9; அ-4, சு-14; அ-4, சு-32; அ-5, சு-29; அ-9, சு-1; அ-10, சு-3; அ-13, சு-18; அ-13, சு-23; அ-14, சு-1; அ-14, சு-19. மற்றும் பல சுலோகங்களையும் அதற்கு உதாரணமாகக் கூறலாம். எனினும், மேற்கண்ட சுலோகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஞானம், கீதையில் பொதுவாக எல்லா இடங்களிலும் குறிப்பிடப்பட்

டுள்ள ஞானத்தைக் காட்டிலும் குறுகியதென்றோ, தரக் குறைவானது என்றோ கூறும் துணிச்சல் எவருக்காவது உண்டா? ஞானத்தின் தரத்தைக் குறித்து, கீதையின் விரோதி கூடத் தப்பெண்ணம் கொள்ள முடியாது. ''ஆண்டவனிடத்தில் வாசம் செய்பவர்கள் யாராயினும், அவர்கள் பாவம் செய்வதில்லை'' என்று செயின்ட் ஜான் கூறியுள்ளார். புகழ்பெற்ற அந்த வாக்கியத்திற்கு யார்தான் தவருக அர்த்தம் செய்து கொள்ள முடியும்? கடவுளிடத்தில் வசிப்பவர்கள் மற்ற எந்த இடத்திலும் மூச்சு விடுவதைக் கூட சகிக்கமாட்டார்கள் என்பது, அற்ப அறிவு படைத்தவர்களுக்குக் கூட புலனாகும். ஞானம் என்பது உண்மையில் இறைவனைப்பற்றிய அறிவே, இறைவனை அடைவதே, இறைவனிடத்தில் வாசம் செய்வதே (அத்தியாயம்-*11*, சுலோகம்-*54*; அத்தியாயம்-*18*, சுலோகம்-*55*). அது அறிவு அல்லது ஆன்ம சம்பந்தமான செப்பிடுவித்தை அல்ல; ஆன்மா கட்டுதிட்டமாகிய உலைக்களத் தீயினூடே சென்று தூய்மை அடைகின்றது என்பதேயாகும்.

தத்துவ ஞானம் அவசியமே. எனினும், அது ஆரம்பமேயன்றி முடிவு அல்ல. அவ்விஷயமாக டாக்டர் ராதாகிருஷ்ணன் பின்வருமாறு கூறுகிறார்: ''உள் அறிவு ஏற்பட்ட அந்த விநாடியிலிருந்தே, வாழ்க்கை வேறு விதமாகிவிடுகிறது. உள்ளே இறைவனின் தோற்றம்தான், மனமாற்ற நடவடிக்கையின் ஆரம்பமாகும். ஆன்மா பார்க்கின்றது; மனம் அதற்கு இணங்கவேண்டும்; உள்ளம் அதை ஆதரிக்க வேண்டும். நமது உடல், ஆன்மா எல்லாம் புதிய அனுபவத்தின் கட்டுப்பாட்டிற்குள் வரவேண்டும். சத்தியம் என்ற சொல் உருப்பெற்று விளங்க வேண்டும்.''

ஒரு ஞானியைப் பாவம் தொடுவதில்லை என்றால், பாவம் அவரை அணுகுவதற்குத் துணிவதில்லை என்றே பொருள். அல்லது, ஞானம் எல்லாப் பாவங்களையும் சாம்பலாக்கிவிடுகிறது எனில், பாவங்களோ அல்லது இன்னும் சரியாகச் சொல்லுவதாயின், பழைய கர்மவினைகளோ அமலுக்கு வருவதில்லை. கருகிய விதைகள் எவ்விதம் முளைவிடுவதில்லையோ அது போலவே, பாவங்களோ அல்லது கர்ம வினைகளோ ஞானியைப் பாதிப்பதில்லை. இந்தக் கருத்திற்கே மெயித்ரி உபநிடதம் பின்வருமாறு அழகான உருவம் கொடுத்திருக்கிறது:

''மான்களும், பறவைகளும், தீப் பிடித்து ஜ்வாலை விட்டு எரியும் மலையைப் புகலிடமாகக் கொள்ளுவதில்லை. அது போலவே, பிரம்மத்தை அறிந்தவர்களைக் குற்றங்கள் ஒரு காலத்திலும் அடைக்கலமாகக் கொள்ளுவதில்லை.''*

---

* यथा पर्वतमादीप्तं नाश्रयन्ति मृगद्विजाः ।
तद्वद् ब्रह्मविदो दोषा नाश्रयन्ति कदाचन ॥

நம்பிக்கைதான் முக்கியமேயன்றி, தார்மிக விதி முக்கிய மல்ல என்ற கருத்துள்ள சுலோகங்கள் கீதையில் இல்லையா? அவ்விதம் இரண்டு மூன்று சுலோகங்கள் இருக்கின்றன (அத்தி யாயம்-6, சுலோகம்-31, அத்தியாயம்-13, சுலோகம்-23, அத்தி யாயம்-18, சுலோகம்-17.) எனினும், முதலில் அதற்கான நிபந் தனை சந்தேகத்திற்கு இடமின்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது, அதாவது. ஞானம் என்ருல், எங்கும் எல்லாவற்றிலும் கடவுளைக் காணும் ஞானமேயாகும். அந்த நிலைக்குக் குறைந்த எதையும் ஞானம் என்று சொல்ல முடியாது. "எல்லாம் ஒன்றே என்ற உறுதியான மன நிலை உடையவனும், எல்லாவற்றிலும் நான் இருப்பதாக எண்ணி என்னை வணங்குபவனுமே ஞானி" என்று கிருஷ்ணபகவான் கூறியிருப்பதற்கு வேறு என்ன அர்த்தம் இருக்க முடியும்? மேலே குறிப்பிட்டுள்ள இரண்டாவது சுலோ கத்தை, கீதை உபதேசம் முழுவதையும் மனத்திற்கொண்டு வாசிக்க வேண்டும். மூன்ருவது சுலோகம் (அத்தியாயம்-18, சுலோ கம்-17) தர்மத்தைக் காட்டிலும் நம்பிக்கையே முக்கியம் என்று கூறுவதுபோல் தோன்றுகிறது. இதைப் போல், தர்மத்தைக் காட் டிலும் நம்பிக்கையே முக்கியம் என்று கூறும் ஒன்றிரண்டு சுலோ கங்கள் உபநிடதங்களிலும் இருக்கின்றன. ஒரு கத்தோலிக்கப் பாதிரியார் கொலையை ஆதரித்துப் பின்வருமாறு கூறியிருப்பதை, பிரபல பிரஞ்சு தத்துவ சாத்திர நிபுணரும் கணித மேதையுமான பாஸ்கல் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார். "விலக்கப் பட்ட செயல்களைத் தவிர்க்க நாம் சக்திக்கு இயன்றவரையில் முயற்சிக்கிருேம். ஆனல், அத்தகைய செயல்களை நாம் தடுக்க முடியாவிடில், அத்தகைய செயல்களைப் புரியும் நமது நோக் கத்தையாவது தூய்மையாக்கிக் கொள்ள நாம் முற்படுகிருேம். அவ்விதமாக லட்சியத்தின் தூய்மையினல், அதை அடைவதற் கான முறைகளின் தீமையைச் சீர்திருத்திக்கொள்ள முயற்சிக் கிருேம். அதனல்தான், கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளு வதற்காக பலாத்காரச் செயல்களில் ஈடுபடுவதை நமது பாதிரி மார் அனுமதித்து வந்திருக்கிருர்கள். வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற நோக்கம்தான் குற்றமாகும். ஒருவருடைய மானத்தைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக பலாத்காரத்தில் ஈடுபடும் நோக்கம் சட்டபூர்வமானதே."

கீதையிலுள்ள சுலோகமும் (அத்தியாயம்-18, சுலோகம்-17), பாஸ்கல் எடுத்துக் காட்டியுள்ள இந்த மேற்கோளும் ஒரே விதமான பொருள் உள்ளவையா? God (கடவுள்) என்ற சொல் லுக்கும் Dog (நாய்) என்ற சொல்லுக்கும் எவ்வளவு வேற்றுமை உண்டோ அவ்வளவு வேற்றுமை அவ்விரண்டிற்கும் இருக்கிறது. அந்த இரண்டு சொற்களிலும் உள்ள எழுத்துக்கள் ஒன்றே ஆயினும், அர்த்தம் முற்றிலும் வெவ்வேருகும் அல்லவா?

'நான்' என்ற உணர்ச்சியை அறவே விட்டுவிட்டவனிடம், 'தான்' செய்த காரியத்திற்குத் தகுந்த காரணம் கூறி, சப்பைக்

கட்டு கட்ட வேண்டும் என்ற எண்ணமே ஏற்படாது. தன் சார்பில் வாதாட வேண்டும் என்ற ஆர்வமே, அவனுக்குத் தீங்கை உண்டாக்குவதாகும். அகந்தையிலிருந்து தான் விடுபட்டிருப்பதாகவும், தனது நோக்கம் தூய்மையானது என்றும் அவன் கூறிக் கொள்வதை, அவனது ஆர்வம் ஒரு கேலிக்கூத்தாகச் செய்துவிடும். கீதையில் அர்ஜுனன் அவ்விதம் கூறவில்லை. கிருஷ்ணனே, குற்றம் குறையற்ற ஞானத்தைப்பற்றி அடிக்கடி பல்வேறு விதமாக அர்ஜுனனுக்கு எடுத்துக் கூறுகிறார். "நீ உனக்காகப் போராட வேண்டாம். எனக்காக, என் பெயரால் போராடு" என்று அர்ஜுனனிடம் கூறுகிறார். 18 ஆவது அத்தியாயத்தில் உள்ள 17-ஆம் சுலோகத்திற்கு காந்திஜி கொடுத்துள்ள குறிப்பில், அந்த சுலோகம் கடவுளின் அல்லது கடவுள் தன்மை வாய்ந்த மனிதனின் நிலையை விவரிக்கிறது, அதாவது ஒரு குணாதீதனைப் பற்றி விவரிக்கிறது என்று கூறியுள்ளார். உலகங்கள் எல்லாவற்றையும் கடவுள் ஒருவரால்தான் கொல்ல முடியும்; மனிதனால் கொல்ல முடியாது.

இப்போது நாம் ஹியூமின் இரண்டாவது குற்றச்சாட்டிற்கு வருகிறோம். இதற்கும், ஏற்கனவே ஓரளவு விடை அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும், "பகைவர்களைக் கொல்லும் விஷயத்தில் அர்ஜுனனுக்கிருந்த மனக் கஷ்டங்களையெல்லாம் கடவுளின் அவதாரமான கிருஷ்ணன் ஆன்மிக சம்பந்தமான உபதேசத்தின் மூலம் தீர்க்கிறார்" என்று அவர் சொல்லுவதில் உள்ள மூன்று தவறான கூற்றுகளை எடுத்துக் காட்டுவது மாத்திரம் போதுமானது. அவற்றைச் சுருக்கமாக எடுத்துக் கூற முயற்சிக்கிறேன்:

1. தத்துவ சம்பந்தமான உண்மை, அர்ஜுனனின் சந்தேகத்தைக் தீர்த்துவிடவில்லை. அவ்விதம் தீர்த்திருக்குமாயின், இரண்டாம் அத்தியாயம் 19-ஆவது சுலோகத்துடன் கீதை முற்றுப் பெற்றிருக்கும். ஆனால், அதில் ஆரம்பமான கிருஷ்ணனின் உபதேசம், 18-ம் அத்தியாயத்தில் தான் முடிவடைகின்றது. அர்ஜுனனுடைய பிரலாபம் அர்த்தமற்றது என்பதை அவனுக்கு வற்புறுத்திக் கூறவே, தத்துவ சம்பந்தமான உண்மை குறிப்பிடப்பட்டிருக்கிறது. தத்துவ ஞானத்தையோ அல்லது ஆன்மிக ஞானத்தையோ அர்ஜுனன் கிரகித்துக் கொண்டதாக கீதையில் உள்ள ஓரிடத்திலும் கூறப்படவில்லை. கடமைகளின் முரண்பாட்டையெல்லாம் விட்டுவிட்டு அவன் கடவுளைப் பின்பற்றினால், தன் மனத்திற்கு நியாயமாகத் தோன்றுவதற்கு இணங்க நடந்து கொள்ளாமல், இறைவனின் கட்டளைப்படி நடந்து கொண்டால் அவனுக்குப் பாவம் எதுவும் ஏற்படாது என்றும், அவ்விதம் தனது கடமையை இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்வதுதான் உண்மையான ஞானத்தை அடைவதற்கான வழி என்றும் அவனுக்கு கிருஷ்ணன் உறுதி கூறுகிறார். அந்த உறுதியில் அவனுக்குத் திருப்தியும் நம்பிக்கையும் ஏற்படுகின்றன. அவனும் கிருஷ்ணனின் கட்டளைப்படி நடந்து கொள்கிறான்.

2. தன்னுடைய விரோதிகளை எதிர்த்து யுத்தம் செய்வதில் அர்ஜுனனுக்கு எவ்விதமான மனக் கஷ்டமும் இல்லை. அவனது மன வேதனைக்கெல்லாம் காரணம், உறவினர்களைப் படுகொலை செய்ய வேண்டியிருக்கிறதே என்பதுதான்.

3. யுத்தத்திற்கு எவ்விதத் தடையும் இராத காலத்தில் அர்ஜுனன் வாழ்ந்து வந்தான். இன்றுள்ள நாம் கூட, யுத்தத்திற்குத் தடை விதிக்கும் பொன் யுகத்திற்கு வெகு தொலைவில் இருக்கிறோம். யுத்தத்தில் விரோதிகளைக் கொல்லுவதை "கொலை" என்று அவன் நினைக்கவே இல்லை. கீதையின் ஆரம்பத்தில் கூறப்படும் முதலாவது வாதம், அதாவது தத்துவத்தைப் பற்றிய உண்மை, சிந்தனை செய்யும்படி அவனைத் தூண்டுகிறது. இரண்டாவது வாதம், அவன் வெறும் ஒரு கருவியே என்பதை அவனுக்கு உணர்த்துகிறது. வஞ்சம் தீர்ப்பது அவனது உரிமை அல்ல, கடவுளின் உரிமை என்பதையும் அவன் உணர்ந்துகொள்ளுகிறான். "வஞ்சம் தீர்ப்பது என்னைச் சேர்ந்ததாகும். நான் முன்பே வஞ்சம் தீர்த்து விட்டேன்" என்று பகவான் கூறுகிறார் (அத்தியாயம் -11, சுலோகம் – 33). மதி மயக்கத்தினால் அர்ஜுனன் பகவானின் கட்டளைக்கு இணங்க நடந்து கொள்ளாவிடில், அவனது இயல்பானது இறுதியில் அவ்விதமே செய்யும்படி அவனை வற்புறுத்திவிடும் என்பதுதான் மூன்றாவதும் கடைசியுமான வாதமாகும். இந்த வாதம், அர்ஜுனனின் மயக்கத்தையும் சந்தேகத்தையும் முற்றிலும் தீர்த்துவிடுகின்றது. தன்னைத் தான் அறிந்துகொண்டிருப்பதைக் காட்டிலும், தன்னை கிருஷ்ணன் நன்கு அறிவார் என்பதை அர்ஜுனன் தெளிவாகக் காண்கிறான். எந்த அம்சங்கள், எந்தக் குணங்கள் சேர்ந்து அவன் உருவாகியிருக்கிறான் என்பதும் கிருஷ்ணனுக்குத் தெரியும் என்பதையும் அர்ஜுனன் அறிந்துகொள்ளுகிறான்.

எந்த மனிதனும், தான் கடவுள் ஆட்டிவைக்கும் ஒரு கருவியே என்று கூறிக்கொண்டு, எல்லாவிதமான அக்கிரமங்களையும் செய்யலாம் என்று கூறுவதற்கு இடம் உண்டு. எனினும், அவ்விதம் கூற இதுவரையில் யாரும் முன்வந்ததில்லை. அப்படியே முன்வந்தாலும் அவனை உலகம் நம்பாது. அறியாமையாகிய மயக்கத்திற்கு ஆளாகாமல் போர் புரிய வேண்டும் என்றும் (அத்தியாயம் - 3, சுலோகம் - 30), கடவுளின் கருவியாக இருக்கும்படியும் (அத்தியாயம் - 11, சுலோகம் - 33) அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் உபதேசம் செய்கிறார். ராஜ்யத்திலும், வாழ்க்கையில் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்பதிலும் உள்ள ஆசையை அர்ஜுனன் ஏற்கனவே துறந்து தன்னைத் தூய்மையாக்கிக் கொண்டிருக்கிறான் (அத்தியாயம் - 1, சுலோகம் - 32). போர் புரிவதிலும் அவனுக்கு அக்கறை இல்லை. அதனால்தான் பலனில், வெகுமதியில் ஆசை வைக்காமலும், 'நான்' என்ற உணர்ச்சி இல்லாமலும் போர் புரியும் தகுதி வாய்ந்தவனாக அவன் இருக்கிறான். துரியோதனனுக்கோ, கர்ணனுக்கோ அல்லது பீமனுக்கோ தெய்விகமான கீதையின் உபதேசம் செய்யப்பட்டிருந்தால், அது

யாதொரு பலனுமின்றி வீணுகியிருக்கும். ஏனெனில், 'நான்' என்ற சிந்தனையின்றியும், வெற்றி அல்லது தோல்வியைப் பற்றிய எண்ணமின்றியும், துவேஷமோ அல்லது வஞ்ச உணர்ச்சியோ இல்லாமலும் அவர்களால் யுத்தம் செய்திருக்க முடியாது.

கடவுள் தமது கட்டளையை நிறைவேற்றுவதற்காக, அவ்விதம் கோடியில் ஒருவரைத்தான் தேர்ந்து எடுக்கிறுர். மற்றவர்கள் கடவுளின் கட்டளையும் விருப்பமும் என்ன என்பதை அறிந்து கொள்ளுவதற்காக அவஸ்தைப்பட்டுக்கொண்டே ஒன்றன்பின் ஒன்ருக ஜன்மம் எடுத்து வருகிருர்கள். மேலே குறிப்பிட்ட அபூர்வமான பாக்கியம் அர்ஜுனனுக்குக் கிடைத்தது. தமது விருப்பத்தை அறிந்து, அதை நிறைவேற்றுவதற்காக கடவுள் அவனைத் தேர்ந்து எடுத்தார். தன்னுடைய நடத்தை தரும நியாயமானது என்று அர்ஜுனன் கூறவில்லை; அவன் செய்வது நியாயமானது என்று பகவான் கூறுவதாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

கீதையின் உபதேசத்திற்கு எத்தகைய விளக்கம் கொடுத்தாலும், அந்த உபதேசம் மக்களின் மனத்தில் தவருன எண்ணத்தையே உண்டாக்குவதாக இருக்கிறது என்று கிறிஸ்தவ நண்பர்கள் முடிவுகட்டிவிட வேண்டாம். கொலையை நியாயம் என்று ஸ்தாபிக்க கீதை உபயோகிக்கப்படலாம் என்ற அச்சம் இருந்து வருவது உண்மையே. இருந்தாலும், கடவுளின் பெயரால் கொலை செய்வதாகக் கூறுபவனின் உண்மையான தன்மையை உணர்ந்து கொள்ளும் கரடுமுரடான வழி, அதிருஷ்டவசமாக உலகத்திற்குத் தெரியும். இன்று யூதர் இனத்தின் மீதே ஹிட்லர் கோபாவேசமும் துவேஷமும் கொண்டிருப்பதை உலகம் அறிந்திருக்கிறது. யூதர்கள் மீது தமக்குள்ள ஆத்திரத்தையும் துவேஷத்தையும் ஹிட்லர் மறைத்து வைக்கவும் இல்லை. யூதர்கள் மீது வஞ்சம் தீர்க்க அவர் விரதம் பூண்டிருக்கிறுர். "யூதர்களை எதிர்த்துப் போராடுவதன் மூலம் நான் கடவுளின் வேலையையே செய்து வருகிறேன்" என்றும் அவர் பிரகடனம் செய்து வருகிருர். எனினும், அவர் கடவுளின் வேலையைச் செய்துவருவதாக உலகம் நம்பவில்லை. கீதையின் பக்தர் ஒருவர் அவ்விதம் கூறினுல்கூட, அந்தக் கூற்றை உலக மக்கள் நம்ப மாட்டார்கள். தவிர, பண்டைய காலத்திலிருந்து பரம்பரையாக வந்துள்ள ஒரு சிறந்த உதாரணத்தை ஹிந்துக்கள் அறிந்துள்ளனர். அது ததீசி முனிவர் காட்டிய உதாரணமேயாகும்.* தமது உடலில் உள்ள எலும்பிலிருந்து

---

*ஸ்ரீ மகாதேவ தேசாய் மேலே குறிப்பிட்டுள்ள உதாரணம் எவரையும் மெய் சிலிர்க்க வைக்கும் என்பதில் ஐயம் இல்லை. "ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம்" என்று கீதையில் கிருஷ்ணபகவான் கூறுகிருர். மகாவிஷ்ணுவின் ஆயுதங்களாகிய கதையும் சக்கரமும் அவருடனேயே இருப்பவை. அவரைப்போல் அந்த ஆயுதங்களுக்கும் ஆதியும் அந்தமும் இல்லை. ஆனுல், வஜ்ராயுதம் பின்னர் உருவாக்கப்பட்டதாகும். ஆயுதங்களிலேயே இந்திரன் கையாளும் வஜ்ராயுதம் தான் உலகத்தில் உள்ள எல்லா ஆயுதங்களையும் விட அதிக வலிமை வாய்ந்தது. விருத்திராசுரன் என்ற ஈடு இணையற்ற சக்தி

வஜ்ராயுதத்தைச் செய்வதற்காக, அவர் தமது உயிரையே தியாகம் செய்தார். அசுரர்களைக் கொல்லுவதற்காக தமது எலும்புகளைக் கொடுத்தார். அந்த எலும்புகளைக் கொண்டே வஜ்ராயுதம் உருவாயிற்று. ஒரு புறாவின் உயிரைக் காப்பாற்றுவதற்காக சிபி சக்கரவர்த்தி தமது உயிரையே கொடுக்க முன்வந்தார். பிரஹ்லாதனும், சுதன்வாவும் இறைவனுக்காக சகிக்க முடியாத எத்தனையோ சோதனைகளுக்கு உள்ளாயினர். எனவே, ஒரு காரியத்தைச் செய்தவர், அதை எதற்காகச் செய்தார் என்று அவர் கூறுவதைக் கொண்டு நிர்ணயிக்கப்படுவதில்லை. உலகம் அவரைப் பற்றி என்ன முடிவு செய்கிறது என்பதே, அவரை நிர்ணயிப்பதற்குரிய உண்மையான சோதனையாகும்.

## கர்மமும் சுயேச்சையான மனப்போக்கும்

கர்மா, மறுபிறப்பு என்ற சித்தாந்தங்களைப்பற்றி ஏற்கனவே நாம் விவாதித்துள்ளோம். ஒரு மூச்சில் கர்மா என்ற சித்தாந்தத்தையும், மற்றொரு மூச்சில் கடவுளின் அருள் என்ற சித்தாந்தத்தையும் கீதையின் ஆசிரியர் வற்புறுத்துவது முன்னுக்குப் பின் முரணாக இருப்பதாக ஓர் ஆட்சேபவாதி கூறுகிறார் (அத்தியாயம் - *9*, சுலோகங்கள்-*27-28* ; அத்தியாயம்-*18*, சுலோகங்கள்-*56*, *58*, *66*). கீதையில் மனிதனின் சுயேச்சையான மனப்போக்கிற்கே இடமில்லை என்றும், அவன் ஓர் யந்திரத்தைப் போலவே நடந்து கொள்ளவேண்டியிருக்கிறது என்றும், அவன் ஒரு வெறும் கருவியாக மட்டிலுமே இருக்கும்படி கட்டளையிடப்படுகிறான் என்றும் மற்றொரு ஆட்சேபவாதி கூறுகிறார். (அத்தியாயம்-*18*, சுலோகம்-*59*; அத்தியாயம்-*11*, சுலோகம்-*33*).

முதலாவது ஆட்சேபணை, கர்மா என்ற சித்தாந்தத்தைப் பற்றிய அவரது அறியாமையையே காட்டுகிறது. எனவே, அதற்கு ஒரு சில வாக்கியங்களில் பதில் அளித்துவிடலாம். கர்மா என்ற சித்தாந்தத்தில் அல்லது தார்மிக விதியில் அருள் சித்தாந்தமும் அடங்கியிருக்கிறது. நாம் எதை விதைக்கிறோமோ அதையே அறுவடை செய்வோம் என்று எந்தச் சட்டம் நமக்குக் கூறுகிறதோ அதே சட்டம்தான், நாம் செய்ததைக் குறித்து மனம் உருகி பச்சாத்தாப உணர்ச்சியுடன் கடவுளின் பாதங்களில் விழுந்து விடுவோமாயின், அதன் பலனாக நமது பச்சாத்தாபமானது,

---

வாய்ந்த ஓர் அசுரனைக் கொல்லுவதற்கென்றே வஜ்ராயுதம் செய்யப்பட்டது. ததீசி என்ற மாமுனிவரின் எலும்பிலிருந்தே அதை உண்டாக்கினார்கள். அந்த முனிவரின் பிரம்மச்சரியமும், தவமும், அவருக்கிருந்த இறைவன் அருளும் அவரது எலும்புக்கு வேறு ஒன்றுக்கும் இராத விசேஷ சக்தியைக் கொடுத்தன. விருத்திராசுரனைக் கொல்லுவதற்கு அவரது எலும்பு தேவையாக இருக்கிறது என்று அந்த முனிவரை தேவர்கள் வேண்டிக்கொண்டனர். உடனே ததீசி முனிவர் அதற்கு இணங்கி, உலக நன்மைக்காக தமது எலும்பைக் கொடுக்க முன்வந்து மகிழ்ச்சியுடன் உயிரைத் தியாகம் செய்தார். அவரது எலும்பிலிருந்து செய்யப்பட்ட வஜ்ராயுதத்தினால் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று பேராபத்தைத் தவிர்த்ததாக, புராணக் கதை கூறுகிறது.

இறைவனின் அருளால் நமது மறு பிறப்பிற்குக் காரணமாகிவிடும் என்றும் கூறுகிறது. கருணையும் அருளும், தெய்வ நீதியின் கட்டங்களேயாகும். உண்மையில், அவரது நீதியில் எப்போதும் கருணை மறைந்திருக்கிறது. நாம் ஊன்றிக் கவனிப்போமாயின், அது நமக்குப் புலப்படும். கடவுளின் அருள், மனிதனுக்கு வெளியே எங்கிருந்தோ வருவதாக வைதிக கிறிஸ்தவர்கள் நம்புகின்றனர். மேற்கண்ட ஆட்சேபணைக்கு முற்றிலும் அந்த நம்பிக்கைதான் காரணம். ஆனால், "கடவுளிடம் சரண் அடைவதென்பது, உண்மையில் நம் உள்ளே இருக்கும் சத்தியமான ஆன்மாவிடம் சரண் அடைவதேயாகும்" என்று பேராசிரியர் கெயர்ட் கூறுகிறார். மனிதனின் உள்ளத்தில் உள்ள கடவுளையே அவர் அவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்.

சுயேச்சையான மனப்போக்கிற்கே கீதை இடம் கொடுக்கவில்லை என்ற ஆட்சேபணையை, விவரமாகப் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும். இந்த ஆட்சேபணைக்கும், வைதிக கிறிஸ்தவர்களின் நம்பிக்கையே காரணம். மனிதனின் பிரகிருதி, அதாவது அவனது பிறவியில் உள்ள இயல்பான அம்சங்கள் முன் ஜன்ம வினைகளின் பலனே என்பதை நாம் கணக்கில் எடுத்துக்கொண்டுதான் தீரவேண்டும். லட்சியத்தை அடைவதற்குக் குறுக்கு வழி எதுவும் இல்லை. பல தடைகளையும் இடையூறுகளையும் தாண்டித்தான் செல்லவேண்டும். லட்சியத்தை அடைவதற்கான பந்தயத்தில் அவையெல்லாம் அத்தியாவசியமான நிபந்தனைகள் ஆகும். அந்தப் பந்தயத்தையும், அந்த நிபந்தனைகளையும் நிர்ணயித்துள்ள இறைவன், அவற்றைச் சமாளிப்பதற்கான திறமையையும் மனிதனுக்கு அளித்துள்ளார். ஊமையாகவும் குருடாகவும் பிறந்த மனிதன் பேசவோ, பார்க்கவோ முடியாது. ஆனால் ஊமையாகவும் குருடாகவும் பிறந்த ஹேலன் கெல்லர்* பேசவும் பார்க்கவும் சக்திவாய்ந்தவராக இருக்கிறார். வாயால் பேசும், கண்ணால் பார்க்கும் கோடிக்கணக்கானவர்கள் உண்மையில் பேசுவதுமில்லை, பார்ப்பதுமில்லை! அத்தகைய கோடிக்கணக்கானவர்களைக் காட்டிலும் ஹேலன் கெல்லர் எவ்வளவோ மேலானவர். "உன்னை நீயேதான் விடுதலைசெய்து கொள்ளவேண்டும். ஏனெனில், ஒருவன் தனக்குத்தானே நண்பனாகவும், விரோதியாகவும் இருக்கிறான்" (அத்தியாயம்-6, சுலோகங்கள்-5-6).

நமக்குச் சாதனங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நாம் அந்தச் சாதனங்களைத் தவிர வேறு எதையும் உபயோகித்துக்கொள்ளக்

---

*அமெரிக்காவில் பிறந்த ஸ்ரீமதி ஆடம்ஸ் ஹேலன் கெல்லர் 19 மாதக் குழந்தையாக இருந்தபோது நோய்வாய்ப்பட்டு ஊமையாகவும், குருடாகவும் ஆனார். எனினும் வயது வந்தபின் அவருக்கு படிக்கவும், எழுதவும், பேசவும் கற்றுக்கொடுத்தார்கள். பின்னர் அவர் வாயால் பேசமுடியாத, கண் தெரியாத நிலையிலேயே கல்லூரியில் தேர்ச்சி பெற்று எம். ஏ. பட்டம் பெற்றதுடன், பல அரிய நூல்களும் எழுதிப் புகழ் பெற்றார்!

கூடாது. எனினும், நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள சாதனங்களை நமது விருப்பப்படி எப்படி வேண்டுமாயினும் உபயோகித்துக் கொள்ள நமக்கு சுதந்திரம் உண்டு. இவ்விஷயமாக, டாக்டர் ராதாகிருஷ்ணன் ஓர் அழகான உவமை கொடுத்துள்ளார்: "இந்த வாழ்க்கை, 'பிரிட்ஜ்' என்ற சீட்டாட்டத்தைப் போன்றது. அந்த ஆட்டத்தில சீட்டுகள் நம்மிடம் கொடுக் கப்பட்டுவிடுகின்றன. நாம் அவற்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்வதில்லை. அவை முன் ஜன்மவினைகளைப் போன்றவை. எனினும், நமக்குக் கொடுக்கப்படும் சீட்டுகளைக் கொண்டு நாம் நமது விருப்பப்படி விளையாடலாம். ஆட்டத்தின் விதிகளுக்கு மாத்திரம் நாம் உட்பட்டிருக்க வேண்டும். விளையாட்டின் ஆரம் பத்தில் நமக்கு அதிக சுதந்திரம் இருக்கிறது. ஆனால் போகப் போக, நமது சுதந்திரம் கட்டுப்பாட்டிற்கு உள்ளாக வேண்டி யிருக்கிறது. இருந்தாலும் கடைசிவரையில் நம் விருப்பப்படி சீட்டைப் போடலாம். நன்கு ஆடத்தெரியாதவருக்குத் தோன்றாத பல யுக்திகள் ஒரு நல்ல ஆட்டக்காரருக்குத் தோன்றும். சீட்டு ஆடுபவரின் திறமை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அவருக்கு மாற்று யுத்திகள் தோன்றும். நல்ல சீட்டுகள் வந்தால்கூட திறமையற்ற ஆட்டத்தினால் குட்டிச்சுவராகிவிடுவது உண்டு. எனவே கெட்ட ஆட்டத்திற்கு துரதிருஷ்டம்தான் காரணம் என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. சீட்டுகளைக் கலைத்துப் போடும்விதம் நமக்கு திருப்தியளிக்காவிட்டால்கூட, நாம் ஆட்டத்தை விரும்புகிறோம், ஆடவும் ஆசைப்படுகிறோம்."

மேற்கண்ட உவமையைத் தொடர்ந்து நான் ஒரே ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன்: உண்மையில் சீட்டுகளை நாமே தேர்ந்து எடுத்துக் கொள்ளுகிறோம் என்றாலும், சீட்டுகள் நம்மைச் சேர்ந்தவையே என்றாலும், அவை நமக்குக் கொடுக்கப் பட்டவைபோல் தோன்றுகின்றன. கர்ம வினையானது வெளியி லிருந்து இயங்குவதில்லை; நம் உள்ளேயே, நம் மூலமாகவே இயங்குகின்றது.

சுயேச்சையான மனப்போக்கு என்றால் என்ன என்பதையே, எல்லாம் பொறுத்திருக்கின்றன. ஒரு விதிக்கும் கட்டுப்படாமல் சுயேச்சையாகச் செல்ல விரும்புவதாயின், அவ்விதம் விரும்ப மனிதனுக்கு உரிமை இல்லை. அவன் யாதொரு கட்டுப்பாடு மின்றித் தன் விருப்பப்படி செல்ல விரும்புவானாயின், அவன் அழிந்து போக வேண்டியதுதான். உண்மை என்னவெனில், நாம் பல விஷயங்களைத் தவறாக ஆன்மாவுடன் இணைத்துவிடு கிறோம். நம்மில் மிகவும் துரதிருஷ்டசாலியான ஒருவர் கூட, ஆன்மாவைப் பற்றிய அறிவு படைத்தவராகவே இருக்கிறார். தன்னிடத்தில் உள்ள இறைவனை ஒருவன் எவ்வளவுக்கு அறிந் திருக்கிறானோ அவ்வளவுக்கு, அவனது நடத்தை களங்கமற்றதாக இருக்கும். "உனக்கு நீ உண்மையாக நடந்துகொள். பின்னர்,

இரவைப் பகல் தொடருவதுபோல் நீ எந்த மனிதனிடமும் வஞ்சகமாக நடந்து கொள்ள முடியாது'' என்பது ஷேக்ஸ்பியரின் சிரஞ்சீவித் தன்மைவாய்ந்த பொன் மொழியாகும். நம்மிடம் நாம் உண்மையாக நடந்துகொள்ளவேண்டும். பிறகு உண்மையானது, நமக்கு விடுதலை அளிக்கும்.

கடவுள் நமக்கு வெளியில் இல்லை. அவர் நம் எல்லோருடைய உள்ளத்திலும் இருக்கிறார். நாம் எப்போதும் அவரைச் சுற்றியே வருகிறோம். இதில் துரதிருஷ்டவசமான விஷயம் என்னவெனில், நாம் அவரைச் சுற்றிவருகிறோம் என்பதை நம்மில் பெரும்பாலோரும் மறந்துவிடுகிறோம். வேறு ஏதோ ஒரு மையத்தை, அதாவது குறுகிய நம்மையே சுற்றிவருவதாகக் கருதுகிறோம். அந்த மையம் நம் உள்ளே இருக்கிறது. ஆனால், நமக்கு வெளியில் உள்ள ஒரு மையத்தை நாம் வட்டமிட்டு வருகிறோம். நாம் அத்தகைய மன மயக்கத்தில் இருக்கும்வரையில், யந்திரங்களைக் காட்டிலும் சிறந்த நிலையில் நாம் இருக்க முடியாது. ஆனால், நம் உள் இருக்கும் இறைவனை உணர்ந்து நாம் உலகில் இருக்கவும், வாழவும், நடமாடவும் முற்படும்போது, முஸ்லிம் மகானான சுபியைப்போல் நாமும் பேரானந்தம் அடைவோம். "யாருடைய மகத்துவம் வாய்ந்த விருப்பத்தினால் உலகமானது சுற்றுகிறதோ, மழை பெய்கிறதோ, நதிகள் ஓடுகின்றனவோ, கிரகங்கள் தவறாது இயங்குகின்றனவோ, அவரது நிலையில் நானும் இருப்பதுபோல் தோன்றுகிறது'' என்று சுபி பரவசம் அடைந்து பாடியுள்ளார். அவரால்தான் அவ்விதம் பாடமுடியும். ஏனெனில், அவரது விருப்பம் கடவுளின் விருப்பத்திற்குப் பொருத்தமாக இருக்கிறது.

"நாம் யாருக்கும் தெரியாத ஒரு சக்தியின் ஆதிக்கத்தில் இருந்து கொண்டு, கண்டிப்பான பாதையில் செல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம். நம் விருப்பப்படி நாம் போகங்களை அனுபவிக்க முடியாது; நம் விருப்பப்படி அவற்றைத் துறந்துவிடவும் முடியாது'' என்று மெத்யூ அர்னால்டு பாடுகிறார். அந்த கீதத்தின் மூலம் அவர் (மெத்யூ அர்னால்டு) உண்மையின் ஓர் அம்சத்தைத் தான் குறிப்பிட்டிருக்கிறார். நாம் அனுபவிக்கவும் முடியாது, துறக்கவும் முடியாது. ஏனென்றால், அனுபவிக்கத் தகாதபோது நாம் அனுபவிக்கவும், துறக்கத் தகாதபோது துறக்கவும் விரும்புகிறோம். எல்லாம் வல்ல சக்திக்கு எல்லாம் தெரியும். எனவே, நாம் செய்யக்கூடாததைச் செய்ய அந்த சக்தி நம்மை அனுமதிக்காது. அந்த சக்தியின் தத்துவத்தை நாம் அறிந்து கொண்டுவிட்டால், நாம் இருக்கும் சிறையை எதிர்த்து அலட்டிக்கொள்ள மாட்டோம். அதற்கு மாறாக, "உன் அருள் எனக்கு இருக்கும்வரையில், அது எனக்கு நிச்சயமாக வழி காட்டிச் செல்லும்'' என்று நியூமெனுடன் சேர்ந்து நாமும் பாடுவோம்.

நமது விருப்பம், இறைவனுடைய விருப்பத்திற்கு இசைந்ததாக இருக்கும்படி நாம் நடந்து கொண்டாலொழிய, நமக்கு சுதந்திரமோ அல்லது மன அமைதியோ இருக்க முடியாது. இறைவனின் கையில் வெறும் கருவிகளாக இருக்கும்படி கீதை நமக்குக் கட்டளையிடுகிறது. ஆனால், நமக்கு வெளியில் உள்ள எந்த எஜமானரிடமும் அல்ல, நம் உள்ளே இருக்கும் எஜமானரிடம் கீழ்ப்படிந்து நடந்துகொள்ள வேண்டும் என்றே அது கோருகிறது. எஜமானர்களுக்குள்ளேயே மகோன்னதமான தகுதிவாய்ந்த எஜமானரான இறைவனிடம் தஞ்சம் அடைய நமக்கு சுதந்திரம் இருக்கிறது. ஆனால், தகுதியற்ற எஜமானர்களைத் திருப்தி செய்வதில்தான் நாம் பேரானந்தம் அடைகிறோம். கட்டுப்பாடு இல்லாத, உறுதியற்ற, சுயேச்சையான போக்கையே நாம் ஏக்கத்துடன் நாடுகிறோம். ஆனால், அத்தகைய போக்கு, கானல் நீர் போன்றது. நமது விருப்பம் என்று எதுவும் இல்லை. இறைவனின் விருப்பப்படி நடந்துகொள்ள நாம் விரும்புவதே, நமது விருப்பமாக இருக்கவேண்டும்.

எல்லோருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கும் இறைவன், எல்லா ஜீவன்களும் "யந்திரத்தில் ஏற்றி ஆட்டி வைக்கப்படுவதை" பார்த்துக் கொண்டிருக்கிறார் (அத்தியாயம் - *18*, சுலோகம்-*61*). "இறைவனிடம் போய் தஞ்சம் அடைவாயாக. அவனது அருளால், நீ யந்திரத்தில் ஆட்டிவைக்கப்படமாட்டாய்; ஆனால், நிரந்தரமான சாந்தி நிலவும் ஸ்தானத்தில் நிலைத்திருப்பாய்" என்றும் கீதையில் கூறப்படுகிறது (அத்தியாயம்-*18*, சுலோகம்-*62*).

## சில வாக்குவாதங்கள்

மேநாட்டினர் எழுப்பிய கேள்விகளுக்கும் வாக்குவாதங்களுக்கும் பதில் அளிக்கவே, நான் அனாவசியமாக நீண்ட நேரத்தைச் செலவு செய்திருக்கிறேன் என்றும், இங்கே நம்மிடையே கொந்தளித்துக் கொண்டிருக்கும் ஆட்சேபணைகளைப் பொருட்படுத்தவே இல்லை என்றும் என்மீது குற்றம் சாட்டப்படலாம் என அஞ்சுகிறேன். தற்போதைய நிலையில் நான் மேநாட்டினரை அசட்டை செய்துவிட முடியாது. ஏனெனில், இந்த நூலை வாசிப்போர் இங்கே உள்ளவர்களைவிட மேநாட்டினருடன் அதிகமான பழக்கம் உடையவர்களாக இருப்பார்கள். இங்கே உள்ளவர்களைப் பொறுத்தமட்டில், கீதோபதேசத்துடன் நெருங்கிய தொடர்புள்ள சில பரந்த அம்சங்களை மாத்திரம் இங்கே குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். பண்டைக் காலத்தில் நடந்த தத்துவ சம்பந்தமான வாக்குவாதங்களில் இப்போது நாம் பிரவேசிக்க வேண்டிய அவசியம் இல்லை. அவ்விதம் பிரவேசிப்பதால் உருவான பலன் எதுவும் இன்று ஏற்படாது. எனினும், சங்கராச்சாரியாருக்கும், லோகமான்ய திலகருக்கும் இடையே உள்ள கருத்து வேற்றுமையைப்பற்றி மாத்திரம் குறிப்பிட

வேண்டியது அவசியமாகும். தத்துவ சம்பந்தமாக சங்கராச்சாரியாரின் நிலையை திலகர் முற்றிலும் ஒப்புக்கொண்டுள்ளார். ஆனால், சங்கராச்சாரியார் ஞானத்தை எல்லைமீறி வற்புறுத்தியிருப்பதற்காக அவர்மீது திலகர் குறை கூறியுள்ளார். ஞானம் அடைந்தவன் செயல் புரியவேண்டிய அவசியம் இல்லை என்று சங்கராச்சாரியார் நுணுக்கமாக வாதித்துள்ளார் என்றாலும், அதில் அவர் வெற்றிபெறவில்லை என்றும் திலகர் கூறுகிறார்.

உலக பந்தத்தின் ஆணிவேர் கர்மம், அதாவது செயல்தான் என்று சங்கராச்சாரியார் அடிக்கடி கண்டித்திருக்கிறார் என்பது உண்மையே. எனினும், வேதச் சடங்குகளைத்தான் அவர் கண்டித்திருக்கிறாரேயன்றி, எல்லாச் செயல்களையும் கண்டிக்கவில்லை. அதற்கு மாறாக அவர், செயல்களின் அவசியத்தை பல இடங்களிலும் ஒப்புக்கொண்டுள்ளார். ஞானியின் நடவடிக்கைகள் எவையாயினும், அவையெல்லாம் உலகத்தின் நன்மைக்காகவே இருக்க வேண்டும் என்று கூறியுள்ளார். ஆனால், இன்று தங்களைத் தாங்களே ஞானிகள் என்று சொல்லிக்கொள்ளுவோர் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய அறிவைக்கொண்டு செப்பிடுவித்தை செய்வதில் ஆனந்தம் அடைகிறார்கள்; அவர்கள் யாதொரு செயலிலும் ஈடுபடுவதில்லை. தங்களுடைய சோம்பேறித்தனத்திற்கு ஆதாரமாக அவர்கள் சங்கராச்சாரியாரின் பெயரை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஞானம் அடைந்த ஒருவன் யாதொரு செயலிலும் ஈடுபடக்கூடாது என்று சங்கராச்சாரியார் வற்புறுத்தியதை, அவர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். தன்னைத் தான் முற்றிலும் உணர்ந்து நிறை மனிதனாக விளங்கும் ஞானியை மனத்திற் கொண்டே சங்கராச்சாரியார் அவ்விதம் கூறியுள்ளார். லோகமான்யர் கண்டித்துள்ள "ஞானி"யைப் பற்றி சங்கராச்சாரியார் அவ்விதம் கூறவில்லை. எல்லா நடவடிக்கைகளையும் சங்கராச்சாரியார் தடுக்கவில்லை; எல்லா சுயநல நடவடிக்கைகளுக்கும், மனிதனைக் கட்டுப்படுத்தும் எல்லா நடவடிக்கைகளுக்குமே அவர் தடை விதித்துள்ளார். இதற்கு, இடைவிடாது மும்முரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த சங்கராச்சாரியாரின் சொந்த வாழ்க்கையே சிறந்த சான்றாகும்.

இவ்விதமாக, இரண்டு மகாபுருஷர்களிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. எனினும் இறுதியாக யோசித்துப் பார்ப்போமாயின், அந்த வாக்குவாதமே அனாவசியமானது என்று தோன்றும். ஒருவேளை, நிறைமனிதன் அல்லது கடவுள் தன்மை வாய்ந்தவனைப் பற்றிய அவர்களுடைய கற்பனையில் வேற்றுமை இருக்கலாம். சங்கராச்சாரியாரும், லோகமான்ய திலகரும் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. காலத்திற்கேற்ப குணங்களில் உள்ள வேற்றுமையும் மன நிலைமையும் அதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால், அவர்களிடையே இத்தகைய வேற்றுமை இருப்பினும், கீதை நமக்கு எடுத்துக் காட்டும் இறுதியான லட்சியத்தைக் குறித்து அவர்களி

டையே வேற்றுமை இருப்பதாக நான் கற்பனே செய்து கொள் வது முடியாத காரியம்.

மற்றெரு வாக்குவாதம், தன்னலமற்ற செயலின் சக்தியைப் பற்றியதாகும். தன்னலமற்ற செயல்கூட விடுதலேக்கு வழி காட் டியாக இருக்க முடியாது என்றும், சுயத் தூய்மையை அடைவ தற்கு மாத்திரமே அது வழிகாட்டுகிறது என்றும், ஞானம் ஒன்றி ஞல்தான் விடுதலே அல்லது மோட்சம் பெற முடியும் என்றும் சங் கராச்சாரியாரின் சீடர்கள் வாதிக்கிருர்கள். மற்றெரு புறம் திலக ரின் சீடர்களோவெனில், தன்னலமற்ற செயலே நேரடியாக விடு தலேக்கு வழி காட்டுகிறது என்று வாதிக்கிருர்கள். இந்த வாக்கு வாதமும் பலனற்றது. ஏனெனில், ஒரு சாரார், இறுதியான லட்சியத்திற்கு இட்டுச் செல்லும் இடைக்கால முறை களே மனத்திற் கொண்டு பேசுகிருர்கள். மற்றெரு சாரார், இடைக்கால முறைகளே விட்டுவிட்டு இறுதி லட்சியத் தைப் பற்றி மாத்திரமே சிந்திக்கிருர்கள். உறுதிவாய்ந்த ஒரு பக்தன், லட்சியத்தை அடைவதற்காக தன் சக்தி முழுவதையும் உபயோகிப்பான்; லட்சியத்தைப் பற்றிக் கூட சிந்திக்காமல் அதை அடைவதற்கான வழிகளிலேயே முழு கவனத் தையும் செலுத்துவான். அதன் உயர்ந்த அர்த்தத் தில், சுயத் தூய்மை என்பது என்ன? ஞானமும் விடுதலே யும் அதுதான் என்று கூற முடியாவிட்டாலும், ஞானத்தையும் விடுதலேயையும் அடைவதற்கான கடைசிப் படி அதுதான். அப் பழுக்கற்ற தூய்மையில் நிலேத்து நிற்கும்படி கீதை அடிக்கடி கேட் டுக்கொள்கின்றது. அது என்ன என்பதை நாம் பார்க்கலாம். எக்கார்ட் அதை விளக்கிக் கூறியிருக்கிருர். அதைக் காட்டிலும் தெளிவாக யாரும் கூறுவது இயலாத காரியம். "தூய்மை என்ருல் என்ன?" இவ்விதம் எக்கார்ட் கேட்டுவிட்டு அதற்குப் பின் வரு மாறு பதில் கூறுகிருர்: "தூய்மையுள்ள ஒரு மனிதன் எல்லா ஜீவன்களிடத்திலிருந்தும் அப்பால் சென்றவனுக இருக்கவேண் டும். தூய்மையான நலனில், அவன் உள்ளம் முற்றிலும் லயித் திருப்பதால், எந்த ஜீவனும் அவனுக்கு ஆறுதல் அளிக்க முடி யாது. தூய்மையான நலன் என்பது கடவுளே. எனவே, கடவுள் சம்பந்தமானவற்றைத் தவிர வேறு எதிலும் அவனுக்கு ஆசை இருக்க முடியாது." கடவுளிடத்தில் நிலேத்திருப்பதே, கடவுளும் தானும் ஒன்று என்று கருதுவதே மகோன்னதமான தூய்மை நிலே யாகும். இந்த நிலேயை ஒருவன் அடைந்துவிட்டால், தன்னலமற்ற செயல் சுயத் தூய்மையில் கொண்டு போய் விடுகிறது என்று நீங் கள் சொன்னுலும் அல்லது தன்னமைற்ற செயல் தன்னேத் தானே அறிந்து கொள்ளுவதற்கோ அல்லது விடுதலேக்கோ வழிகாட்டு கிறது என்று நீங்கள் சொன்னுலும், எல்லாம் ஒன்று தான்!

## முடிவுரை

இப்போது நான் கீதையின் உபதேசத்தைச் சுருக்கமாகக் கூறி இதை முடிக்கிறேன். வாக்குவாதங்களாகிய தூசி தும்பட்டைக்கும் சந்தடிக்கும் அப்பால் கீதை கம்பீரமாக நிற்கின்றது. கீதையானது, கைலாச சிகரத்தின் மின் தோற்றத்தை நமக்குக் காட்டுகின்றது. அதுதான் சிவபிரானின் ஸ்தானமாகும். நாம் அந்த இடத்தைக் குறித்து தள்ளாடிச் சென்று கொண்டிருக்கும் போதுகூட, அது எப்போதும் நமது பார்வைக்குப் புலனுகும்படி கீதை செய்கின்றது ஆனல், அது எத்தனையோ மைல்களுக்கு அப்பால், எத்தனை எத்தனையோ யுகங்களுக்கு அப்பால் இருக்கிறது. உலகங்களுக்கெல்லாம் இறைவனை சிவபிரான் வாழும் மகோன்னதமான சிகரத்திற்குச் செல்லும் போது, மலைகளையெல்லாம் நாம் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது என்று கீதை சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி கூறுகிறது. அது மாத்திரமல்ல. அந்தச் சிகரத்தை நாம் அடைவதுடன், உண்மையில் அதுதான் நமது வீடு, அதிலிருந்து நாம் வீழ்ச்சி அடைந்துவிட்டோம், அச்சிகரத்தில் உள்ள சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் இறைவன் நம் உள்ளே இருக்கும் இறைவனைத் தவிர வேறு யாரும் அல்ல, ஒரே வார்த்தையில் கூறுவதாயின், நம் உள்ளே இருக்கும் ஜீவன்தான் சிவன், அதாவது நமது ஆன்மாதான் உலகம் முழுவதும் வியாபித்துள்ள ஆன்மா என்பதையெல்லாம் உணர்ந்து கொள்ள வேண்டும். மலைகளையெல்லாம் தாண்டி அந்த அற்புதத் தோற்றத்தைக் காண்பதில் வெற்றி பெற்ற ஆன்மாக்களை, கீதை அடிக்கடி மின்னொளி போல் நமக்குக் காட்டுகின்றது. அத்தகைய ஆன்மாக்கள் இயற்கையுடன் ஒன்றுகியிருக்கிருர்கள், பிரம்மபூதர்களாகியிருக்கிருர்கள் (அத்தியாயம்-5, சுலோகம்-24; அத்தியாயம் - 14, சுலோகம் - 26; அத்தியாயம் - 18, சுலோகம் -54). கடவுளைப் போல் அவர்களும் தாங்கள் புரியும் எல்லாச் செயல்களிலும் அக்கறையும் பற்றுதலும் இராதவர்களைப் போல் உட்கார்ந்திருக்கிருர்கள் (அத்தியாயம் - 9, சுலோகம் - 9; அத்தியாயம் - 14, சுலோகம் - 23). கடவுளைப் போல் அவர்களும் தூங்காமல் செயல் புரிகின்ருர்கள். கடவுள் மகோன்னத நிலையில் இருந்தாலும் உலகத்தின் உழைப்பில் பங்கு எடுத்துக் கொள்கிருர்; அவர் எண்ணிக்கையற்ற கடமைகளைச் செய்ய வேண்டியிருந்தாலும், அவற்றைச் செய்வதால் ஏற்படக் கூடிய தூசியும், சேறும், சகதியும் அவரை அணுகுவதில்லை. யோகிகளின் நிலையும் அப்படித்தான். அவர்கள் எவ்விதமாக வாழ்ந்தாலும், எவ்விதமாக நடந்து கொண்டாலும் கடவுளிடத்திலேயே வாழ்பவர்களாகவும், நடமாடுபவர்களாகவும் இருக்கிருர்கள். அவர்கள் செயலற்றிருப்பதுபோல் தோன்றும் நிலைதான், அவர்கள் தீவிரமாக செயலில் ஈடுபட்டிருப்பதைக் காட்டுகின்றது. செயலில் ஈடுபட்டுள்ள அவர்களுடைய நிலை தான், தூய்மையான சாந்த நிலையாகும். அவர்களுடைய இதயத் துடிப்புதான், மனித வர்க்கத்தின் இதயத் துடிப்பாகும். அவர்களு

டைய வாழ்க்கைதான் தெய்விக தருமத்தை அனுசரித்த வாழ்க்கையாகும்.

நாம் அடைய வேண்டிய லட்சியமும் அதுதான். கீதை, அதை ஒரே வாக்கியத்தில் இவ்விதம் கூறியிருக்கிறது: "நீங்கள் கடவுளுடன் ஒன்ருக இருக்க விரும்புவீர்களாயின், மனிதரைப் போல் உங்களுடைய கடமைகளைச் செய்யுங்கள்." அவ்வாறு கடமைகளைச் செய்வதன் மூலமே நாம் கடவுள் தன்மையை அடைய முடியும். அதற்கு வேறு ஒரு வழியும் இல்லை. நம்மை அடிமைப்படுத்தும் செயலும் இருக்கிறது; நமக்கு விடுதலை அளிக்கும் செயலும் இருக்கிறது.

மனிதரின் விதி சிறிதும் தயவு தாட்சண்யமின்றி எழுதப்பட்டு வருகிறது. எனினும், கடவுளிடம் சரண் அடைவதன் மூலம் அவ்விதம் எழுதப்பட்டதையெல்லாம் ரத்து செய்துவிட முடியும். மனிதன் பிறந்ததிலிருந்து இறக்கும் வரையில் அவன் செய்ய வேண்டிய வேலை, ஈயத்தினலான, பளுவான ஓர் அடிமைச் சங்கிலியாக இருக்கிறது. ஆனல் அதை, விடுதலைக்கு வழி காட்டும் பொன் ஏணியாக மாற்ற உங்களால் முடியும் என்றும், அதற்கு தன்னலமின்மை, பற்றின்மை, தியாகம் ஆகிய சிறந்த ரசவாத முறையைக் கைக்கொள்ள வேண்டும் என்றும் கீதை கூறுகிறது. தீ, விறகுகளைச் சாம்பலாக்கிவிடுவதைப் போல, ஞானம் எல்லாச் செயல்களையும் சாம்பலாக்கிவிடுகிறது. எரிபொருள் எல்லாவற்றினுள்ளும் நெருப்பு இருப்பதைப் போலவே, பற்றற்ற எல்லாச் செயல்களின் உள்ளேயும் தூய்மையாக்கும், விடுதலை அளிக்கும் ஞானம் அடங்கியிருக்கிறது. சுய தியாகம் அல்லது பிறருடைய நலனுக்காக அர்ப்பணம் செய்யும் நடவடிக்கைகளின் விதி அதுதான். எல்லா விதிகளையும், எல்லாச் சட்டங்களையும் கடந்த நிலையை நாம் எட்ட வேண்டுமாயின், அதற்கு அந்த விதியை நிறைவேற்றித் தீர வேண்டும். "எல்லாச் சிருஷ்டிகளிலும் தன்னையும், தன்னிடத்தில் எல்லாச் சிருஷ்டிகளையும் கண்டு தன்னையே தியாகம் செய்யும் ஒருவன் சுயராஜ்யத்தை (மோட்சத்தை) அடைகிருன்" என்று மனுஸ்மிருதி கூறுகிறது. கீதை காட்டும் ராஜபாட்டையின் சுருக்கம் அதுதான். கீதையின் முக்கியமான உபதேசமும் அதுதான். அதனுல்தான் அது உலகம் முழுவதும் எல்லோரையும் கவர்ந்திருக்கிறது. எனினும்,அந்ததந்த பிராந்தியத்தையொட்டி அதற்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கம், அந்தந்த இடம், காலம், நபர் முதலிய அம்சங்களைப் பொறுத்ததாக இருக்கிறது. ஆனல் மற்றவையெல்லாம் அதாவது கர்மம், மறு பிறப்பு ஆகியவையும், வர்ணம், அவதாரத்தில் உள்ள நம்பிக்கையும் கூட, கட்டிட நிர்மாணத்திற்காக சாரம் கட்டுவதைப் போல முக்கியமல்லாத விஷயங்களேயாகும். அவை, உலக தருமத்தைத் தொடவில்லை. எல்லாப் பிரதேசங்களிலும், எல்லாக் காலங்களிலும், மேற்கண்ட முக்கியமல்லாத விஷயங்களில் நம்பிக்கை உடையவர்களாக இருந்தாலும் சரி, நம்பிக்கை இல்லாதவர்களாக இருந்தாலும் சரி, எல்லோராலும் அனுசரிக்கப்பட்ட

உலக தருமத்திற்கும் மேற்கண்ட அம்சங்களுக்கும் தொடர்பு இல்லை. முக்கியமான அந்த உலக தருமத்திற்கு இணங்கவே எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் எல்லோரும் வாழ்ந்தார்கள், எல்லோரும் நடந்து கொண்டார்கள். அவர் களில் சிலருடைய பெயர்களைக் குறிப்பிடுவது உற்சாகமும் மனத் திற்கு ஆறுதலும் அளிப்பதாக இருக்கின்றது. பல்வேறு சமயங் களையும் ஸ்தாபித்த மகாபுருஷர்களின் வாழ்க்கை வரலாறுகள் ஒருபுறம் இருக்க, தங்களையே சூன்யமாக்கிக் கொண்ட, லட்சியத் திற்காகத் தங்களுடைய ஆயுட்காலம் முழுவதும் உழைத்த, தங்களையே அர்ப்பணம் செய்துகொண்ட பல்வேறு நாடுகளையும் சேர்ந்த உயர்ந்த ஆன்மாக்களைப் பற்றி என்ன சொல்லுவது? ஜாப், ஹரிச்சந்திரன், ஜனகன், மார்க்கஸ் ஆரிலியஸ், ஜலா லுதீன் ருமி, ப்ளோடினஸ், எபிக்டெடஸ், செயின்ட் பால், செயின்ட் அகஸ்டின், செயின்ட் இக்னேஷியஸ், வித்தியாரண் யர், சங்கராச்சாரியார், எக்கார்ட், செயின்ட் ஜான், சைதன்யர், கபீர், துளசிதாஸ், ஞானேசுவரர், ராமதாஸ், துகாராம், மீராபாய். ஆண்டாள், அக்கோ, நரசிம்ம மேத்தா, ஸ்பிநோஸா, லெஸ்ஸிங், பாஸ்கல், பினலான், பன்யன், வெஸ்லி, பாக்ஸ், ஹாவார்ட், பாஸ் டியர், ஸ்ரீமதி குரி, டேமியன் பாதிரியார். கார்டினல் நியூமென், லிங்கன், ஜெனரல் கார்டன் ஆகியவர்களைத் தவிர நமது காலத் தில் வாழ்ந்து வரும் பலரையும் அந்தப் பெயர்களுடன் சேர்க்க லாம்.

லிங்கன், கார்டன், பாஸ்டியர் முதலியோரையும் மேற்கண்ட வர்களுடன் நான் சேர்த்திருப்பதை, வாசகர்கள் கவனிக்கத் தவற மாட்டார்கள். லிங்கன், சரித்திரத்திலேயே கண்டிராத பயங்கர மான உள்நாட்டு யுத்தத்தை நடத்தினர். கார்டனின் வாழ்க்கை யில் பெரும்பகுதியும், அவர் உதிரம் வழியும் கைகளுடன் விளங்கி னர். பாஸ்டியர், மனித வர்க்கத்திற்காகச் செய்த தொண்டில் பெரும்பகுதியும், மிருகங்களை வெட்டிப் பரிசோதனை செய்வதி லேயே கழிந்தது. இந்த மூவரையும் மேலே குறிப்பிட்டவர் களுடன் சேர்த்திருப்பதன் மூலம், நான் காந்திஜியின் கருத்தை மறந்துவிடவில்லை. சத்தியத்தையும் அகிம்சையையும் எள்ளளவும் குற்றம் குறையின்றி மேற்கொண்டாலொழிய, அப்பழுக்கற்ற துறவோ அல்லது யோகமோ இயலாத காரியம் என்பதே காந்தி ஜியின் கருத்து. "யாரிடத்திலும் எவ்வித துவேஷமும் இல்லாம லும், எல்லோரிடத்திலும் அன்புடனும், கடவுள் கொடுத்த அறி வின் மூலம் நீதி என்று நாம் நினைப்பதை நிறைவேற்றும் உறுதி யுடனும்" யுத்தம் செய்தார் என்று உண்மையில் ஒருவரைப்பற்றி நாம் கூற முடியுமாயின், லிங்கனைப்பற்றியே அவ்விதம் கூறுவது சாத்தியமாகும். அவர் தமது ஆயுட்காலம் முழுவதையும் சமூகத்திற்கு அப்பழுக்கற்ற முறையில் தொண்டு செய்யவே அர்ப்பணம் செய்தார். சொந்த வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும், அவர் புரிந்த ஒவ்வொரு செயலும் சத்தியத்திலும் அகிம்சையிலும் அவருக்கு இருந்த ஈடு

பாட்டை வெளிப்படுத்தியது. "நான் மரத்தை வெட்டும் ஓர் உளியைப் போன்றவன். தச்சனின் விருப்பப்படி நான் வேலை செய்கிறேன். என் முனை மழுங்கி விட்டால், அதை இறைவன் கூராக்க வேண்டும். இறைவன் என்னை அப்பால் வைத்துவிட்டு வேறொரு உளியை எடுத்துக்கொண்டால், அது அவரது அருள் சித்தமாகும்'' என்று கார்டன் கூறினார். கார்டனின் கண்ணாடி போன்ற வாழ்க்கையில் அவர் கூறும் உண்மையை நாம் காண முடியும். காலஞ்சென்ற ஸ்ரீமதி குரியைப் போலவே பாஸ்டியரின் வாழ்க்கையும், மனித குலத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற வெறியாகிய தூய்மையான ஜ்வாலையாகத் திகழ்ந்தது.

"ஹிட்லரைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்? 'யூதர்களை எதிர்த்து நான் போராடுவதன் மூலம், கடவுளின் வேலையையே நான் செய்து கொண்டிருக்கிறேன்' என்று ஹிட்லர் பிரகடனம் செய்கிறார் அல்லவா?'' என்று யாராவது என்னைக் கேட்கலாம். யூதர்களை அவர் வேட்டையாடுவதற்கு அவர்கள் மீதுள்ள அடக்க முடியாத துவேஷமே காரணம் என்ற உண்மையை அவர் மறைக்கவில்லை என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அது எப்படியாயினும், அவ்விஷயமாகத் தீர்ப்புக் கூற எனக்கு உரிமையில்லை; சரித்திரம் தீர்ப்புக் கூறும்; சரியான காலம் வரும்போது மற்றும் பலரும் தீர்ப்புக் கூறுவார்கள். எனினும், பற்றின்மை ஒன்றினால் மாத்திரமே செயலுக்கு உயிர் கொடுக்க முடியும் என்பது, எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது.

ஆஸ்குவித்* கூட ஒரு சமயம் லாயிட் ஜார்ஜைப்† பாராட்டிப் பேசிய போது பின்வருமாறு குறிப்பிட்டார்: "உங்களுடைய பக்தியும், சிரத்தையும், தன்னலமின்மையும், யுக்தியும், திறமையும், எல்லாவற்றையும்விட மேலாக சுயநலனை மறந்து செயல்கள் புரிவதும் மிகவும் புகழத்தக்கவை. இவற்றையும், உங்களுடைய மனப்பூர்வமான ஒத்துழைப்பையும் குறித்து உங்களைப் பாராட்டுகிறேன். இவையெல்லாம் அபூர்வமான அம்சங்களாகும். இவை தான் கடும் உழைப்பும், சகதியும் நிறைந்த அரசியலை சகிக்கத்தக்கதாகச் செய்வதுடன், சுவையற்ற அதன் மந்தமான போக்கிற்கு மின்னொளி போன்ற ஒரு மகத்துவத்தைக் கொடுக்கின்றன.'' எனினும், அத்தகைய பற்றின்மையின் தூய்மைக்கும் சிறப்பிற்

---

*ஹர்பர்ட் ஹென்ரி ஆஸ்குவித் (1852–1828) பிரிட்டிஷ் மந்திரி சபையில் பல பதவிகள் வகித்ததுடன், 1908-லிருந்து 1916-ஆம் வருடம் வரையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாகவும் இருந்தார்.

†லாயிட் ஜார்ஜும் (1863–1945) பிரிட்டிஷ் மந்திரி சபையில் யுத்த மந்திரி உள்பட பல மந்திரி பதவிகளை வகித்ததுடன், முதலாவது மகா யுத்தத்தின்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாகவும் இருந்து ஜெர்மனியின் தோல்விக்கு முக்கிய கர்த்தாவாக விளங்கினார். அந்த யுத்தம் முடிந்த பின் நடந்த சமாதான மகாநாட்டிலும் அவர் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டார்.

கும், கொள்கைக்காக வாழ்க்கையை அர்ப்பணம் செய்வதே சரியான சோதனையாகும். அதாவது, கடவுளுக்குத் தொண்டு புரிய வேண்டும். மனித வர்க்கத்தின் நலனுக்காகத் தொண்டு செய்வதிலேயே கடவுளுக்குச் செய்யும் தொண்டு அடங்கியிருக்கிறது.

யோகியையே, அப்பழுக்கற்ற சிறந்த மனிதனாக கீதை கருதுகிறது. "யாருடைய பாவங்கள் களையப்படுகின்றனவோ, யாருடைய சந்தேகங்கள் தீருகின்றனவோ, யார் தன்னைத்தானே அடக்கி ஆளும் சக்தியைப் பெறுகின்றானோ, யார் எல்லா உயிர்களுடைய நலன்களிலும் தன் முழு கவனத்தையும் செலுத்துகின்றானோ, அவன் தான் யோகியாவான்'' (அத்தியாயம்-5, சுலோகம்-25).

மகோன்னதமான இந்தச் சோதனையை அடிப்படையாகக் கொண்டு தீர்ப்புக்கூறுவதாயின், நான் மேலே குறிப்பிட்டவர்கள் யோகிகள் அல்லவெனில், அவர்கள் யோகத்தின் நிச்சயமான பாதையில் செல்லுபவர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களில் சிலர் பக்தியை முக்கியமாகக் கொண்ட யோகிகள்; அவர்களில் மற்றும் சில ஆடவர்களும் பெண்மணிகளும் செயல்களை முக்கியமாகக்கொண்ட யோகிகள். செயல் புரிகிறவனே சிறந்த யோகி என்று கீதை அடிக்கடி குறிப்பிடுகிறது. ''ஆகையால், நீ ஒரு யோகியாக இரு'' என்று கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறுகிறார் (அத்தியாயம்-6, சுலோகம்-45; அத்தியாயம்-8, சுலோகம்-27). ''எப்போதும் என்னையே நினைத்துக் கொண்டு போர் புரிவாயாக'' என்றும் கிருஷ்ணன் கூறுகிறார் (அத்தியாயம்-8, சுலோகம்-7).

அவ்விதமே ஏசுநாதரும் கூறினார்: ''எனக்குப் பின்னர் வருபவர் யாராக இருந்தாலும், அவர் தனது நலன்களையெல்லாம் துறந்துவிட்டு, தினந்தோறும் சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைப் பின்பற்றுவாராக." "யோகி செயல் புரிபவனாகவும் இருக்கிறான். செயல் புரியும் யோகி மகத்தான சக்தியுடையவன். யாராலும் தாக்கமுடியாத மந்திர கவசம் தரித்த ஒரு வீரனைப் போல் அவன் இருக்கிறான்'' என்று டீன் இஞ்ச்* கூறுகிறார். நாம் எந்த அந்தஸ்தில் இருந்தாலும், போராட்டமே நம் ஒவ்வொருவருடைய விதியாகவும் இருக்கிறது. அர்ஜுனனை கிருஷ்ணன் கேட்டுக் கொண்டதுபோல், ஒவ்வொருவரும் போராடித் தீரவேண்டியிருக்கிறது. அர்ஜுனனைப்போல் மேற்கண்ட யோகிகள் யாவரும், நம் உள்ளேயும் வெளியிலும் உள்ள அந்தகார சக்திகளையும் அந்தகார ஆதிக்கத்தையும் எதிர்த்துப் போராடினார்கள். 'மந்திர கவச'த்தை தரித்துக் கொண்டு போராடுவதிலேயே வெற்றி இருக்கிறது. ஆகையால்தான், ''எப்

*பிரபல பிரிட்டிஷ் பாதிரியாராக விளங்கிய டீன் இஞ்ச் (1860–1954) யோகக் கலையைப் பற்றி பல நூல்கள் எழுதியுள்ளார்.

போதும் என்னை நினைத்துக் கொண்டு போர் புரிவாயாக" என்று கிருஷ்ணன் கூறுகிறார்.

எந்தக் காலத்திலும் யோகிகள் மந்திர கவசத்தை தரித்துக் கொண்டே போரிட்டார்கள். குறுகிய நோக்கத்துடன் தங்கடைய சொந்த நலன்களுக்காக அவர்கள் போராடவில்லை; தங்களுடைய நலன்களை முற்றிலும் துறந்தே போராடினார்கள்; மனிதவர்க்கத்தின் நலன்களுக்காகப் போராடினார்கள். அவ்விதம் எள்ளளவும் தன்னலமின்றி அவர்கள் போராடியதன் மூலம், மனித குலம் அதிகமான தூய்மையையும், அதிகமான புனிதத் தன்மையையும், அதிக சக்தியையும் அடைந்தது. அவர்கள்தான் பூமியிலேயே சிறந்தவர்கள் ஆவர். அவர்கள், மிகப் பரந்த அரங்கத்தில் அவர்களுடைய பாத்திரங்களை நடிக்க வேண்டியிருந்தது. ஆனால், நாம் மிகமிகக் குறுகிய மேடையில் நடிக்க வேண்டியிருக்கலாம். எனினும், எல்லோரையும் ஆட்டிவைக்கும் எஜமானர் ஒருவரே தான். அவர்கள் நடமாடிய பிரதேசம் அதிகப் பரப்பு உடையதாகும். நாம் நடமாடும் பிரதேசம் மிகவும் சிறியதாக இருக்கலாம். எனினும், ஒரு மையத்தைச் சுற்றி நாம் ஆட வேண்டியிருக்கும் தெய்விக நடனம் ஒன்றுதான். நம்மில் ஒவ்வொருவரும் அற்பமான, குறுகிய, சிறிய எல்லைக்கு உட்பட்ட நமது நலன்களை, உலக ஆன்மாவுடன் ஒன்றாகத் திகழ்வதற்காகத் தியாகம் செய்யவேண்டும். ஒவ்வொரு ஆடவரும், ஒவ்வொரு பெண்மணியும் தங்கள் தங்கள் அந்தஸ்துக்கும் எல்லைக்கும் உட்பட்டு மனப்பூர்வமாகவும், விருப்பத்துடனும், மகிழ்ச்சியுடனும் தங்களை அறவே தியாகம் செய்துகொள்ள வேண்டும். நமது திரிகள் மெல்லியவையாக இருக்கலாம்; எண்ணெயும் மிகவும் சொற்பமாக இருக்கலாம்; நமது ஜ்வாலையும் நமது குறுகிய பாதைக்கு மாத்திரம் வெளிச்சம் காட்டும் அளவுக்கு மங்கலாக இருக்கலாம். எனினும் இறுதியில், மங்கலான நமது தீபங்கள் உலகம் முழுவதும் வியாபித்துள்ள ஜ்வாலையுடன் ஒன்றாகக் கலந்துவிடும். எல்லாத் தியாகங்களும், எவ்வளவு சிறியவையாக இருப்பினும் பெரியவையாக இருப்பினும், அவை தூய்மையானவையாக இருக்குமாயின் இறைவனை அடைந்துவிடும். அவையெல்லாம் இறைவனுக்கு ஒன்றுதான். தியாகங்களில், கடைசியானது என்றும் முதன்மையானது என்றும் எதுவும் இல்லை.

பகுதி ஆறு

# பகவத் கீதை

## மொழிபெயர்ப்பைப் பற்றிய குறிப்பு

மேற்கண்ட தலைப்பின் கீழ் ஸ்ரீ மகாதேவ தேசாய் பின்வருமாறு எழுதியுள்ளார் :

காந்திஜியின் கீதை மொழிபெயர்ப்பை ஒட்டியே, எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு நான் எனது குறிப்புகளைக் கொடுக்க முயற்சித்திருக்கிறேன். எனினும், பல்வேறு கருத்துகளையும், இடத்திற்குத் தகுந்தாற்போல் மாறுதலான அர்த்தங்களையும் கொடுக்கும் 'புத்தி' போன்ற எண்ணிக்கையற்ற சொற்களையும் நான் மொழி பெயர்த்திருப்பதற்கு, அவர் எவ்விதத்திலும் பொறுப்பாளி அல்ல. அந்தச் சொல்லை எந்த இந்திய மொழியில் உபயோகித்தாலும், எந்தச் சந்தர்ப்பத்தில் உபயோகித்தாலும், அதையொட்டி யாரும் தவறான அர்த்தம் செய்து கொள்ள மாட்டார்கள். ஆனால், அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் போது, ஒரு சொல்லுக்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சற்றேறக் குறைய அதே அர்த்தத்தைக் கொடுக்கக் கூடிய அதற்குச் சமமான ஓர் ஆங்கில வார்த்தையை உபயோகிக்க வேண்டியது முற்றிலும் அவசியமாகும்.

முற்றிலும் சாத்திரீயமான சில சொற்களை மாத்திரம், அப்படியே அதாவது வடமொழியிலேயே வற்புறுத்திக் கொடுத்திருப்பதைக் குறித்து மேனாட்டு வாசகர்கள் என்னை மன்னிப்பார்கள். 'எனது சமர்ப்பண'த்தில் அந்தச் சொற்களை அவற்றின் பல்வேறு கோணத்திலும் விவரித்திருக்கிறேன். அவற்றிற்குச் சமமான பல்வேறு வார்த்தைகளையும் உபயோகித்திருப்பதன் மூலம், ஆங்கில வாசகர்களுக்கு அவற்றை நன்கு அறிமுகம் செய்துவைக்கவும் முயற்சித்திருக்கிறேன். அந்தச் சொற்கள் இவைதான்: ஆன்மா, பிரம்மம், பிரகிருதி, குணம், சத்துவம், ரஜஸ், தமஸ் (அவற்றின் பண்புச் சொற்களான சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் ஆகியவை), யோகம், யோகி.

இவற்றைத் தவிர ஞானம், யக்ஞம், பக்தன், பக்தி, தபஸ் (தவம்) போன்ற சொற்களும் இருக்கின்றன. அவற்றிற்குச் சமமான ஆங்கிலச் சொற்கள் இருக்கின்றன. எனினும், மேற்கண்ட சொற்கள், அவற்றிற்குச் சமமான ஆங்கிலச் சொற்களைக் காட்டிலும் அதிக ஆழ்ந்த அர்த்தம் உள்ளவை. அவற்றிற்குச் சமமான ஆங்கிலச் சொற்களுடன் மேற்கண்ட சொற்களை

அடைப்புக் குறிகளுக்குள் கொடுத்திருக்கிறேன். மூலச்சொல்லுக்கு சமமான ஆங்கிலச் சொற்களை உபயோகித்தாலும், மூலச் சொல்லுக்கு அதிகமான ஆழ்ந்த அர்த்தம் இருக்கிறது என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும் என்பதற்காகவே அந்தச் சொற்களைக் கொடுத்துள்ளேன். ஒரே சந்தர்ப்பத்தில் இந்தச் சொற்கள் அடிக்கடி வரும் இடங்களில், முதன் முதலாக மாத்திரமே வடமொழிச் சொல் கொடுக்கப்பட்டுளது.

இந்தச் சொற்களால் ஆங்கில அகராதி இன்னும் அதிகச் சிறப்புடனேயே விளங்கும். அந்தச் சொற்களைப் பற்றிய விமர்சனம் விவரமாக வரும் இடங்களிலெல்லாம், அவற்றிற்கு பூரண விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, வாசகர்களின் ஞாபக சக்திக்கு அதிகப் பிரயாசை எதுவும் இருக்க இடம் இல்லை.

யோகம் என்ற சொல் பல்வேறு அர்த்தங்களில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அது சாத்திரீயமான முறையில் உபயோகிக்கப்படாத இடங்களிலெல்லாம், அதற்குப் பொருத்தமான ஆங்கிலச் சொற்களைக் கொடுத்திருக்கிறேன்.

கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏராளமான பெயர்கள் இருக்கின்றன. அவற்றில் சில, அவர்களுடைய உண்மையான பெயர்களாகும். மற்றும் சில, அவர்களுடைய லட்சணங்களையும் குணங்களையும் விளக்கும் பெயர்கள். பண்டைய வியாக்கியான கர்த்தாக்கள், அவர்களின் உண்மையான பெயர்களுக்குக் கூட விளக்கம் கொடுத்திருக்கிறார்கள். அது மாத்திரமல்ல. அவர்களுடைய லட்சணப் பெயரும், காரணப் பெயரும் அந்தந்தச் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாக இருக்கும்படி கீதையின் ஆசிரியரால் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளன என்றும் அந்த வியாக்கியான கர்த்தாக்கள் கூறியுள்ளனர். எனினும், இலக்கணத்திற்கு இணங்க, அவர்கள் ஒவ்வொரு பெயருக்கும் விளக்கம் கொடுக்க முற்பட்டிருப்பது, கற்பனையாகவும் இயற்கைக்கு முரணாகவும் இருக்கிறது. சில இடங்களில் சுலோகங்களின் சந்தம் சரியாக வருவதற்காக, ஆசிரியர் சில பெயர்களைக் குறிப்பிட்டிருக்கிறார் என்பது தெளிவாகத் தெரிகின்றது. இந்தச் சொற்களின் அர்த்தங்களைப்பற்றி வாசகர்கள் தங்களை அலட்டிக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. தேட வேண்டிய அவசியம் இல்லாமல் இருப்பதற்காக, கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் கொடுக்கப்பட்டுள்ள பல்வேறு பெயர்களையும் தொகுத்து இங்கே கொடுத்துள்ளேன். தெளிவாகவும், வாதத்திற்கு இடமில்லாமலும் இருக்கும் இடங்களில் அவற்றின் அர்த்தங்களையும் கொடுத்திருக்கிறேன்.

**கிருஷ்ணனின் பெயர்கள்**

1. அச்சுதன்
2. கேசவன்
3. கோவிந்தன்
4. ஜனார்த்தனன்
5. மதுசூதனன் (மது என்ற அரக்கனைக் கொன்றவர்)
6. அரிசூதனன் (சத்துருக்களைக் கொல்லுபவர்)
7. கேசிநிஷூதனன் (கேசி என்ற அசுரனைக் கொன்றவர்.)
8. மாதவன்
9. புருஷோத்தமன் (மகோன்னதமானவர்)
10. வாசுதேவன் (வசுதேவரின் புதல்வர், எங்கும் வியாபித்தவர்)
11. விஷ்ணு (எங்கும் வியாபித்தவர்)
12. ஹரி
13. வார்ஷ்ணேயன் (விருஷ்ணியின் வம்சத்தில் உதித்தவர்)
14. யாதவன் (யதுவின் குலத்தில் பிறந்தவர்)

**அர்ஜுனனின் பெயர்கள்**

1. கௌந்தேயன் (குந்தியின் மகன்)
2. பாண்டவன் (பாண்டுவின் புதல்வன்)
3. பார்த்தன் (பிருதன் அல்லது குந்தியின் குமாரன்)
4. பாரதன் (பரதனின் வம்சத்தில் பிறந்தவன்)
5. குடாகேசன்
6. தனஞ்செயன்
7. குருநந்தனன் (குரு வம்சத்தில் உதித்தவன்)
8. குருசிரேஷ்டன் (குரு வம்சத்தில் பிறந்த உத்தமன்)
9. குருசத்தமன் ( ,, ,, )
10. பரதர்ஷபன் (பரத வம்சத்தில் வந்தவர்களுள் சிறந்தவன்)
11. பரதசிரேஷ்டன் ( ,, ,, )
12. பரத சத்தமன் ( ,, ,, )
13. பரந்தபன் (சத்துருக்களைத் துன்புறுத்துபவன்)

மூலத்தில் உள்ள இந்தப் பெயர்களை யெல்லாம் நான் மாற்றவில்லை. ஆனால் லட்சணத்தையும் காரணத்தையும் அடிப்படையாகக் கொண்ட பெயர்களை நான் மொழி பெயர்த்திருக்கிறேன். இதற்கும் ஒரு விலக்கு இருக்கிறது. 11-ஆவது அத்தியாயத்தில் உள்ள லட்சணப் பெயர்களைக் கூட நான் மொழி பெயர்க்காமல் மூலத்தில் உள்ளவாறே உபயோகித்திருக்கிறேன். (அவற்றின் அர்த்தங்களைக் குறிப்புகளில் கொடுத்துள்ளேன்). இன்னிசையைப் போல மிகவும் இனிமையாக இருக்கும் அந்த அத்தியாயத்

தில் உள்ள சந்தத்திற்கு வசன நடையில் கூட குந்தகம் விளை விக்க நான் விரும்பவில்லை. கிருஷ்ணன், அர்ஜுனனை அடிக்கடி மகாபாகு (மிகுந்த பலம் பொருந்திய கைகளை உடையவன்) என்ற அழைக்கிறார். ஒன்றிரண்டு இடங்களில் அர்ஜுன னும் கிருஷ்ணனை 'மகாபாகு' என்று அழைக்கிறான். அந்த இடங் களில் மேற்கண்ட வடமொழிச் சொல்லையே உபயோகித் திருக்கிறேன்.

ஒரு சில இடங்களில் ஆங்கில வாக்கியங்களின் அமைப்பைப் பூர்த்தி செய்வதற்காகவோ அல்லது செம்மைப்படுத்துவதற் காகவோ அடைப்புக் குறிகளுக்குள் வார்த்தைகளைச் சேர்த் திருக்கிறேன்.

# அர்ஜுனனின் மனக்குழப்பம்

## முதல் அத்தியாயம்

விருப்பத்துடன் பெரு முயற்சி செய்யாமல் ஞானத்தைப் பெற முடியாது. உழைத்துப் பாடுபடாமல் அமைதியை நாட முடியாது. துன்பத்தின் மூலம்தான் இன்பத்தை அடைய முடியும். ஞானத்தை நாடும் ஒவ்வொருவரும், வாழ்க்கையில் எப்போதாவது முரண்பாடான கடமைகளினுலும், உள்ளத்தைக் கிளறும் அனுபவங்களினுலும் அவதிக்கு உள்ளாகியே தீர வேண்டியிருக்கும்.

धृतराष्ट्र उवाच

**धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सव : ।**
**मामका : पाण्डवाश्चैव किमकुर्वत संजय ॥ १ ॥**

திருதராஷ்டிர உவாச

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:|
மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்சய|| – 1

திருதராஷ்டிரன் சொன்னுன்

*1.* ஸஞ்சயா! என் குமாரர்களும் பாண்டுவின் குமாரர்களும் யுத்தம் செய்ய முனைந்தவர்களாக, கடமையைச் செய்ய வேண்டிய இடமாகிய குருக்ஷேத்திரத்தில் என்ன செய்தார்கள் என்பதை எனக்குச் சொல்லுவாயாக.

மனித உடல் ஒரு போர்க்களமே யாகும். அந்த உடலில் தருமத்திற்கும் அதருமத்திற்கும் நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. எனவே உடலை, விடுதலைக்கு அதாவது மோட்சத்திற்கு வாயிற்படியாக மாற்றிக் கொள்ள முடியும். உடல், பாவம் காரணமாகவே பிறப்பதால், அது பாவத்தின் நாற்றங்காலாகிவிடுகிறது. அதனுல்தான் அது குருவின் பிரதேசம் என்று கூறப்படுகிறது. கௌரவர்கள் தீய சக்திகளின் பிரதிநிதிகளாகவும், பாண்டவர்கள் நல்ல சக்திகளின் பிரதிநிதிகளாகவும் இருக்

கிறார்கள். தினந்தோறும் தமது உள்ளத்தில் தீய சக்திகளுக்கும் நல்ல சக்திகளுக்கும் நடந்துவரும் போராட்டத்தை அனுபவிக்காதவர் உலகத்தில் யாராவது உண்டா?

*[குருக்ஷேத்திரம் (குரு மன்னனின் பிரதேசம்), இன்றைய டில்லிக்கும், பண்டைய ஹஸ்தினபுரத்திற்கும் அருகில் உள்ள பரந்த ஓர் இடமாகும். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையே யுத்தம் நடந்த இடம் அதுதான். கௌரவர்கள், பாண்டவர்கள் இரு பிரிவினரும் ஒரே குடும்பத்தின் கிளைகளேயாவர். அக்குடும்பத்தின் மூதாதையரே குரு. அவர் அந்த இடத்தில் தான் வாழ்ந்து வந்தார். அவர் உழுது பயிரிட்ட இடம் அதுவேயாதலின், அதற்கு அவரது பெயர் கொடுக்கப்பட்டது. க்ஷேத்திரம் என்றால் வயல், தொழில் செய்யும் இடம், ஒரு புனித ஸ்தலம் என்றெல்லாம் கூறலாம். அந்த இடம் பண்டைய காலத்திலிருந்தே புனித ஸ்தலமாகக் கருதப்பட்டுவந்தது. அங்கே பல யாகங்களும் நடந்தன. மகாபாரதத்தில் அந்த இடம் 'தவ க்ஷேத்திரம்' என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தவங்கள் செய்வதற்காக அர்ப்பணம் செய்யப்பட்ட இடம் என்பதே இதன் பொருளாகும்.

திருதராஷ்டிரனையும், சஞ்சயனையும்பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். கௌரவர்கள் என்றால் குருவின் புதல்வர்கள். பாண்டவர்கள் என்றால் பாண்டுவின் புதல்வர்கள். எனினும் குரு எல்லோருக்கும் மூதாதையராதலின், கௌரவர்கள் என்றால் துரியோதனாதியர், பாண்டவர்கள் எல்லோரும் உள்ளிட்டவர்களே எனலாம். இருந்தாலும் பொதுவாக 'கௌரவர்கள்' என்ற சொல் திருதராஷ்டிரனின் புதல்வர்களையே குறிக்கிறது. திருதராஷ்டிரனுக்கு ஏராளமான புதல்வர்கள்† உண்டு. அவர்களில்

---

* இந்த அத்தியாயத்திலிருந்து பகவத் கீதையின் இறுதி அத்தியாயம் வரையில் [ ] என்ற அடைப்புக் குறிகளுக்கு உள்ளே இருப்பது ஸ்ரீ மகாதேவ தேசாயின் சொந்தக் குறிப்புகள். மற்றவை யெல்லாம் காந்திஜியின் மொழி பெயர்ப்பும் விளக்கமும் ஆகும்.

காந்திஜி எழுதியுள்ள முன்னுரையில், கீதைக்கு திலகர் எழுதியுள்ள அற்புதமான வியாக்கியானத்தைப் பற்றியும், ஸ்ரீ மகாதேவ தேசாயின் முன்னுரையில் ஆதி சங்கராச்சாரியாரின் வியாக்கியானத்தைப் பற்றியும் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார்கள். எனவே, முக்கியமான இடங்களில் அவ்விரண்டு மகான்களின் விளக்கங்களும், அவற்றிற்குப் பொருத்தமான திருக்குறள் பாக்களும் அடிக்குறிப்புகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

† திருதராஷ்டிரனுக்கு நூறு புதல்வர்களும், துச்சலா என்ற ஒரு புதல்வியும் இருந்ததாக பாரதம் கூறுகிறது. பாரதம் முதல் பாகம் 116-ம் அத்தியாயத்தில் அப் புதல்வர்களுடைய பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. துரியோதனன், துச்சாஸனன், விகர்ணன், துர்தர்ஷன், துஸ்ஸஹன், துஷ்கர்ணன், துர்மர்ஷணன், துர்முகன், துர்விகாஹன், துர்மதன், சித்ராயுதன், பலவர்த்தனன், உக்ராயுதன் ஆகிய மற்ற எல்லாப் புதல்வர்களுடைய பெயர்களும் மேற்கண்ட அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

துரியோதனனே மூத்தவன். பாண்டுவின் ஐந்து புதல்வர்களில் அர்ஜுனன்தான் மிகவும் புகழ் பெற்று விளங்கினன். கிருஷ்ணன் அர்ஜுனனை குருநந்தனன் (குருவின் புதல்வன்) என்றும், குரு ஸத்தமன் (குரு வம்சத்தினரில் மிகச் சிறந்தவன்) என்றும், குருப்ரவீரன் (குருவம்சத்தினருள் வீரன்) என்றும் அடிக்கடி குறிப்பிடுகிருர்.

கீதையைப்பற்றி காந்திஜி மற்ரெரு சந்தர்ப்பத்தில் பின் வருமாறு கூறியிருக்கிருர்: "கீதை சரித்திர பூர்வமான ஒரு சம்பாஷணை அல்ல. ஆன்மிக சம்பந்தமான ஓர் உண்மையைத் தெளிவாக விளக்குவதற்கு, லௌகிகமான ஓர் உதாரணம் அவசிய மாகும். அது ஒன்றுவிட்ட சகோதரர்களுக்குள் நடந்த யுத்தத் தைப்பற்றிய வர்ணனை அல்ல. நம்மிடத்தில் உள்ள இரண்டு இயல்புகளுக்கு இடையே, நல்ல இயல்புக்கும் தீய இயல்புக்கும் இடையே நடந்துவரும் போராட்டமேயாகும். துரியோதனனையும் அவனது கோஷ்டியினரையும் மனிதனிடத்தில் உள்ள இழிவான உணர்ச்சிகள் என்றும், அர்ஜுனனையும் அவனது கோஷ்டியின ரையும் மனிதனிடத்தில் உள்ள உயர்ந்த உணர்ச்சிகள் என்றும் நான் கருதுகிறேன். போர்க்களம் நமது சொந்த உடலே. அந்த இரண்டு இயல்புகளுக்கும் நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. கீதையின் ஆசிரியர், அந்தப் போராட்டத்தை அற்புத மாக வர்ணித்துள்ளார். நம் உள்ளே இருப்பவர்தான் கிருஷ்ணன். அவர் எப்போதும் தூய உள்ளம் படைத்தவர்களுக்கு மெதுவாக எச்சரிக்கை செய்கிருர்."

संजय उवाच

**दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।**

**आचार्यमुपसङ्गम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥**

ஸஞ்சய உவாச

**த்ருஷ்ட்வாது பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதனஸ் ததா।**

**ஆசார்ய முபஸங்கம்ய ராஜா வசன மப்ரவீத்॥ 2**

ஸஞ்சயன் கூறினன்.

2. பாண்டவர்களின் படைகள் போருக்குத் தயாராக அணி வகுத்து நிற்பதைப் பார்த்த துரியோதன மன்னன் தங்களுடைய குருவான துரோணரை அணுகி, இவ்விதம் கூறலானன்.

[அந்தகனுன திருதராஷ்டிரனின் மூத்த குமாரனுன துரியோ தனன், பாண்டவர்கள் காட்டில் அஞ்ஞாத வாசம் செய்தபோது மன்னனுக இருந்தான். ஏற்கனவே அவர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி பாண்டவர்கள் அஞ்ஞாத வாசத்திலிருந்து

திரும்பி வந்ததும் ராஜ்யத்தில் அவர்களுக்குச் சேரவேண்டிய பகுதியை அவர்கள் கேட்டனர். அவ்விதம் திருப்பிக்கொடுக்க துரியோதனன் இணங்கவில்லை. சம்பந்தப்பட்ட யாவரும் சமரசம் செய்துவைக்க முயற்சித்தார்கள். ஆனால், அவர்களுடைய முயற்சிகள் தோல்வியுற்றன. எனவே, பாண்டவர்கள் யுத்தம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.]

**पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।**
**व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥**

**பச்யைதாம் பாண்டு புத்ராணும் ஆசார்ய மஹதீம் சமூம்*।**
**வ்யூடாம் த்ருபத புத்ரேண தவ சிஷ்யேண தீமதா॥ 3**

*3.* குருவே, துருபதனின் புதல்வனும் மேதாவியுமான தங்களுடைய சீடனால் அணிவகுத்து நிறுத்தப்பட்டுள்ள பாண்டவர்களின் வல்லமை வாய்ந்த பெரும் படையைப் பாருங்கள்.

[துரோணர் பிராம்மணராக இருந்தாலும் கூட, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் குருவாக இருந்து அவர்களுக்கு யுத்தக் கலையை, குறிப்பாக வில் வித்தையைக் கற்றுக்கொடுத்தார். துருபதன்,† திரௌபதியின் தந்தை, பாண்டவர்களின்

* 3645 காலாட்படைகள், 2187 குதிரைகள், 729 யானைகள், 729 ரதங்கள் அடங்கிய சேனையையே 3–ஆவது சுலோகத்தில் உள்ள சமூ என்ற சொல் குறிப்பிடுகிறது. எனினும் பொதுவாக, பெரும் படை என்பதே அதன் அர்த்தமாகும்.

† பரத்வாஜ மகரிஷியின் புதல்வரான துரோணருடன் பாஞ்சால மன்னனின் குமாரனான துருபதனும் வேத, வேதாந்தங்களும், வில்வித்தையும் கற்றுக்கொண்டிருந்தான். இருவரும் சக மாணவர்களாதலால், நெருங்கிய நண்பர்களாக இருந்தனர். மாணவனாக இருந்தபோது துருபதன், தான் சிம்மாசனம் ஏறினால் துரோணருக்குப் பாதி ராஜ்யத்தைக் கொடுப்பதாகக் கூறியிருந்தான். கல்வியில் பூரண தேர்ச்சி பெற்ற பின் துருபதன் பாஞ்சாலத்திற்குச் சென்றுவிட்டான். பின்னர் துரோணர் கிருபாச்சாரியாரின் சகோதரியை விவாகம் செய்துகொண்டார். துரோணர் தம்பதிகளுக்கு அசுவத்தாமன் என்ற குமாரன் பிறந்தான். பிள்ளை பிறந்த பின் துரோணருக்கு சொத்து வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. அவர் பரசுராமரிடம் சென்றார். பரசுராமர் அப்போது தமது செல்வத்தை யெல்லாம் ஏழைகளுக்குத் தானம் கொடுத்து வந்தார். துரோணர் சென்றபோது பரசுராமரிடம் எதுவுமே இல்லை. ''எல்லா சொத்துக்களையும் தானம் கொடுத்துவிட்டேன். இப்போது என்னிடம் மீதியிருப்பது என் உடலும், பல்வேறு அஸ்திர சஸ்திரங்களும்தான். இவற்றைத்தான் உங்களுக்கு இப்போது நான் தர முடியும்" என்றார் பரசுராமர். அவரிடமிருந்து துரோணர் அஸ்திர, சஸ்திர ரகசியங்களை யெல்லாம் தெரிந்துகொண்டார்.

பிறகு துரோணருக்கு, பால்ய நண்பனான துருபதனின் நினைவு வந்தது. துருபதனின் தந்தை இறந்த பின், துருபதனே ,பாஞ்சால மன்னனாக இருந்தான். எனவே, துரோணர் அவனிடம் சென்று, சிறு வயதில் தாம் இருவரும் நண்பர்களாக இருந்ததைத் தெரிவித்தார். ''ஒரு மன்னனுக்கும் பிச்சைக்காரனுக்கும், வீரனுக்கும் கோழைக்கும், மகா பண்டிதனுக்கும் அறிவிலிக்கும் எவ்வாறு நட்பு இருக்க முடியும்'' என்று கூறி,

மாமனர். அவனது புதல்வனுன திருஷ்டத்யும்னனே பாண்டவர் படைகளுக்கு பிரதம தளபதியாக இருந்தான்.]

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथ : ॥ ४ ॥

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன ஸமா யுதி|
யுயுதான: விராடச்ச த்ருபதச்ச மஹாரத:|| 4

4. இந்த சேனையில் வில் யுத்தத்தில் மகா நிபுணர்களும், போர் புரிவதில் பீமனுக்கும், அர்ஜுனனுக்கும் சமமானவர்களுமான யுயுதானன்*, விராடன், மகாரதனுன துருபதன் ஆகியோர் இருக்கின்றனர்.

---

துருபதன் துரோணரை அவமதித்து வெறும் கையுடன் திருப்பி அனுப்பிவிட்டான், அதனுல் பேராத்திரமும் மனக்கொதிப்பும் அடைந்த துரோணர் ஹஸ்தினுபுரத்திற்குச் சென்று கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் குருவாக அமர்ந்து வில்வித்தை கற்றுக் கொடுத்தார்.

அவர்கள் வில்வித்தையில் தேர்ச்சி பெற்ற பின், துரோணரின் கட்டளைக்கு இணங்க அர்ஜுனன் புறப்பட்டுச் சென்று துருபதனுடன் போர்புரிந்து வெற்றியடைந்தான்; துருபதனையும் அவனது மந்திரியையும் கைது செய்து துரோணரின் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தினுன். அவனைப் பார்த்து துரோணர் புன்முறுவலுடன் இவ்விதம் சொன்னுர்: ''துருபத மன்னனே, நீ உன் உயிருக்காக பயப்பட வேண்டாம். சிறு வயதில் நம்மிடையே இருந்த நட்பை நீ மறந்து, மன்னன் என்ற இறுமாப்பினுல் என்னை அவமதித்தாய். ஒரு மன்னன்தான் மற்றொரு மன்னனின் நண்பனுக இருக்க முடியும் என்று வீறுப்பு பேசினுய். இப்போது நான் உன் ராஜ்யத்தின் மன்னன். நீ ராஜ்யத்தை இழந்து என் முன் நிற்கிருய். இருந்தாலும், இன்னும்கூட உன் நட்பை நான் நாடுகிறேன். நான் வெற்றி பெற்ற ராஜ்யத்தில் பாதியை உனக்குக் கொடுக்கிறேன்.''

துரோணர் இவ்வாறு கூறி, தகுந்த ராஜ மரியாதைகள் செய்து துருபதனைத் திருப்பி அனுப்பிவிட்டார். இருந்தாலும் துரோணர் மீது வஞ்சம் தீர்க்கவேண்டும் என்று மனம் துடித்த துருபதன், உக்ரமான தவம் புரிந்தான், உண்ணுவிரதங்கள் இருந்தான், யாகங்கள் செய்தான். அவற்றின் பலனுக, யாராலும் வெற்றிபெற முடியாத துரோணரைக் கொல்லும் சக்தி வாய்ந்த திருஷ்டத்யும்னன் என்ற ஒரு புதல்வனையும், அர்ஜுனனை விவாகம் செய்து கொள்வதற்காக திரௌபதி என்ற புதல்வியையும் அடைந்தான். இந்தச் சுருக்கமான வரலாறு பாரதத்தில் பல அத்தியாயங்களில் விரிவாகவும், சுவை ததும்பவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பாரத யுத்தத்தில் பாண்டவர் படைகளின் பிரதம தளபதியாக இருந்த அந்த திருஷ்டத்யும்னனையே மேலே துரியோதனன் குறிப்பிட்டுள்ளான். துரோணருக்கு ஆத்திரம் ஏற்பட்டு, அவர் உக்ரமாகப் போர்புரிய வேண்டும் என்பதற்காகவே துரியோதனன் அவ்விதம் துருபதனின் புதல்வனுன திருஷ்டத்யும்னனைக் குறிப்பிட்டதாக சில விமர்சகர்கள் கூறியுள்ளனர்.

* யுயுதானன் அல்லது ஸாத்யகி யாதவ குலத்தைச் சேர்ந்த ஒரு சிற்றரசன். சினியின் புதல்வன். அர்ஜுனனிடம் சீடனுக இருந்து வில் யுத்தப் பயிற்சி பெற்றவன்.

(விராடன் மத்ஸ்ய நாட்டு மன்னன். பாண்டவர்கள் யாருக்கும் தெரியாமல் மாறுவேடம் பூண்டு அஞ்ஞாதவாசம் செய்தபோது, அவர்களுக்கு அடைக்கலம் அளித்தவன் விராட மன்னனே. 'மகாரதன்'† என்பது மிகவும் உயர்ந்த ராணுவப் பட்டமாகும். ஒரே சமயத்தில் 10,000 வில்லாளிகளை எதிர்த்துப் போர்புரியும் வல்லமை வாய்ந்தவனே 'மகாரதன்' என்று அழைக்கப்படுகிறான்.)

धृष्टकेतुश्चेकितान : काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गव : ॥ ५ ॥

த்ருஷ்டகேதுச் சேகிதான: காசி ராஜச்ச வீர்யவான்।
புருஜித் குந்தி போஜச்ச சைப்யச்ச நரபுங்கவ: ॥ 5

5. மேலும் திருஷ்டகேது, சேகிதானன், பராக்கிரமசாலியான காசிராஜன், புருஜித் (குந்திபோஜன்), மனிதர்களுள் சிறந்தவனான சைப்யன்;

[திருஷ்டகேது சேதி நாட்டரசன் ஆவான். குந்தி போஜன் என்பது புருஜித்தின் குடும்பப் பெயர். யுதிஷ்டிரர், பீமன், அர்ஜுனன் ஆகிய மூவரின் தாயான குந்தியை புருஜித் சுவீகாரம் செய்து கொண்டான். சைப்யன் சிபி வகுப்பினரின் தலைவன் என்பதுடன், சிபி நாட்டு மன்னனும் ஆவான்.]

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथा : ॥ ६ ॥

யுதாமன்யுச்ச விக்ராந்த உத்தமௌஜாச்ச வீர்யவான்।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாச்ச ஸர்வ ஏவ மகாரதா: ॥ 6

---

†வில் யுத்த நிபுணர்களான 11,000 பேரை ஏககாலத்தில் எதிர்த்துப் போர்புரியும் வல்லமை வாய்ந்தவனும், ஆயுதக் கலையில் தேர்ச்சி பெற்றவனும் 'மகாரதன்' என்ற பட்டத்துக்கு உரியவன். எண்ணிக்கையற்ற பகைவர்களை எதிர்த்து நிற்கும் ஆற்றல் படைத்தவன் 'அதிரதன்' என்ற பட்டத்துக்கு உரியவன் என்று ஸ்ரீ சங்கராச்சாரியார் கீதைக்குத் தாம் எழுதியுள்ள பாஷ்யத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

மேற்கண்ட பெயர்களைப் பற்றிய மற்றும் சில விவரங்கள் பின்வருமாறு: திருஷ்டகேது சிசுபாலனுடைய குமாரன். சேகிதானன், பாண்டவர் சேனையில் இருந்த ஏழு முக்கிய தளபதிகளுள் ஒருவன்.

6. தைரியசாலியான யுதாமன்யு, பராக்கிரமசாலியான உத்தமௌஜன், சுபத்ரையின் புதல்வன், திரௌபதியின் குமாரர்கள்-இவர்கள் யாவரும் மகாரதர்கள் ஆவர்.

[யுதாமன்யுவும் உத்தமௌஜனும் பாண்டவர்களை ஆதரிக்கும் சிற்றரசர்கள். அர்ஜுனனின் இரண்டாவது மனைவி சுபத்ரையின் புதல்வன் அபிமன்யு. பஞ்ச பாண்டவர்கள் ஒவ்வொருவரிட மிருந்தும் திரௌபதிக்கு ஒரு புதல்வர் உண்டு.]

**अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।**

**नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥**

அஸ்மாகம் து விசிஷ்டா யே தான் நிபோத த்விஜோத்தம|

நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்க்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே|| 7

7. பிராம்மணோத்தமரே, நம்மிடையே உள்ள சிறந்த வீரர்களைப்பற்றியும் தெரிந்துகொள்ளுங்கள். என் படைத்தலைவர்களைப்பற்றியும் உங்களுக்குத் தகவல் கொடுக்கவேண்டும் என்பதற்காக அவர்களுடைய பெயர்களைக் கூறுகிறேன்.

**भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।**

**अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥ ८ ॥**

பவான் பீஷ்மச்ச கர்ணச்ச க்ருபச்ச ஸமிதிஞ்ஜய:|

அச்வத்தாமா விகர்ணச்ச ஸௌமதத்திஸ் ததைவச||* 8

8. பெரியாரான தாங்கள், பீஷ்மர், கர்ணன், யுத்தத்தில் வெற்றியே பெறும் கிருபாச்சாரியார், அசுவத்தாமா, விகர்ணன், ஸோமதத்தனின் மகன்;

[பீஷ்மர் என்றால் பயங்கரமானவர் என்றே பொருள். ஏனெனில், ஆயுள் முழுவதும் பிரம்மச்சாரியாக இருப்பதாக பயங்கரமான சபதம் செய்தார் அல்லவா? பீஷ்மர்தான் அவரது ஒன்று விட்ட சகோதரரின் குமாரர்களையும், அவர்களின் குமாரர்களான பாண்டவர்களையும் கௌரவர்களையும் வளர்த்துவந்தார். எனவே,

---

*சுலோகத்தில் 'ஸௌமதத்திர் ஜயத்ரத:' என்றும் பாடம் உண்டு. ஸௌமதத்தி என்பவன் பாஹ்லிக நாட்டு மன்னன், ஸோமதத்தனின் மகன். ஜயத்ரதன், திருதராஷ்டிரனின் மாப்பிள்ளை, திருதராஷ்டிரனின் ஒரே புதல்வியான துச்சலையின் கணவன்.

அவர்கள் எல்லோருக்கும் பீஷ்மர் தான் பாட்டனார். கர்ணன் குந்தியின் மகன். குந்திக்கு விவாகம் நடப்பதற்கு முன் பிறந்தவன்; யுதிஷ்டிரர், பீமன், அர்ஜுனாதியர்களுக்கு சகோதரன். அவன் துரியோதனின் பக்கத்தில் இருந்தான். கிருபாச்சாரியார் துரோணரின் மைத்துனர். அசுவத்தாமா துரோணரின் மகன். விகர்ணன் துரியோதனின் சகோதரர்களில் ஒருவன். ஸௌமதத்தன் பாஹ்லிக நாட்டு அரசன்.

அது சகோதரர்களுக்கு இடையே நடந்த கொடிய யுத்தம் என்பதைக் காட்டவே இந்தப் பெயர்களெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளன. அது மாத்திரமல்ல. அது அகில இந்திய யுத்தம் என்பதைக் காட்டுவதற்காகவும் அந்தப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஏனெனில், நர்மதை நதிக்கு வடக்கேயிருந்து பஞ்சாப் எல்லை வரையில் பல ராஜ்யங்களிலிருந்தும், இந்தக் கட்சியின் சார்பிலோ அல்லது அந்தக் கட்சியின் சார்பிலோ போராடுவதற்காக மன்னர்களும், படைகளும் வந்திருந்தனர்.]

अन्ये च बहव : शूरा मदर्थे त्यक्तजीविता : ।
नानाशस्त्रप्रहरणा : सर्वे युद्धविशारदा : ॥ ९ ॥

அன்யே ச பஹவ: சூரா மதர்த்தே த்யக்த ஜீவிதா:।
நாநாசஸ்த்ர ப்ரஹரணா: ஸர்வே யுத்த விசாரதா:॥ 9

*9.* இன்னும் பல சூரர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் பல்வேறு ஆயுதங்களையும் பிரயோகிப்பதில் கைதேர்ந்தவர்கள். எனக்காக உயிரையும் கொடுப்பதாகச் சபதம் செய்திருக்கிறார்கள். அவர்கள் யாவரும் யுத்தத்திலும் நிபுணர்கள்.

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம்*[1]।
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம்॥ 10

*10.* பீஷ்மரின் தலைமையில் உள்ள நமது இந்தப் படை போதிய பலம் வாய்ந்ததாக இல்லை; பீமனின் தலைமையில் உள்ள அவர்களுடைய படை முற்றிலும் போதிய பலம் வாய்ந்ததாக இருக்கிறது.

['அபர்யாப்தம்', 'பர்யாப்தம்' ஆகிய இரண்டு வட மொழிச் சொற்களையும் முறையே 'போதாத' என்றும், 'போதுமான' என்றும் காந்திஜி மொழிபெயர்த்திருக்கிறார். ஆனால் மற்றவர்களோ, அவ்விரண்டு சொற்களுக்கும் நேர் மாறாக அர்த்தம் கூறியிருக்கிறார்கள். அவ்வித அர்த்தம் கூறுவதற்கும் இடம் இருக்கிறது. அந்த அர்த்தம் உண்மைக்கு அதிகப் பொருத்தமானதாகவும் இருக்கிறது. ஏனெனில், கௌரவர்களுடைய படைகள், பாண்டவர்களின் படைகளைக் காட்டிலும் மிகவும் அதிக சக்தி வாய்ந்தவை. எனினும், அவ்விதம் மாறான அர்த்தம் கூறுவது, துரியோதனனின் தற்பெருமையைக் காட்டுவதாக இருக்கிறது. அதற்கு அடுத்த சுலோகத்தைக் கவனிக்கும்போது, மாறான அர்த்தம் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. ஏனெனில், பீஷ்மரை ஒவ்வொருவரும் பாதுகாக்க வேண்டும் என்று துரியோதனன் எச்சரிக்கை செய்கிறான். அது எப்படியாயினும், இந்த வாக்குவாதம் சாரமற்றது. அந்தச் சொற்களை எப்படி வேண்டுமாயினும், அர்த்தம் செய்து கொள்ளலாம்]

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥

அயனேஷு ச ஸர்வேஷு யதா பாக மவஸ்திதா:|
பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி|| 11

*11. ஆகையால் உங்களில் ஒவ்வொருவரும், சேனையின் அணி வகுப்பில் அவரவருக்கு நியமிக்கப்பட்டுள்ள ஸ்தானங்களில் நின்று கொண்டு பீஷ்மரையே பாதுகாக்க வேண்டும்.*[*2]

---

1, 2 *பீஷ்மர் ஈடு இணையில்லாத போர் வீரராக இருந்தாலும், யுத்தத்தில் தன் பேரன்களான பாண்டவர்களைத் தாம் கொல்லப்போவதில்லை என்று சபதம் செய்திருந்தார்; சிகண்டியுடன் யுத்தம் செய்யப்போவதில்லை என்றும் சபதம் செய்திருந்தார். காசிராஜனின் புதல்வியான அம்பா என்ற பெண்ணே தவம்புரிந்து, இறைவனின் வரப் பிரசாதத்தினால் சிகண்டி என்ற வீரனாக மாறிவிட்டாள். அம்பாவின் சுவையான வரலாறு பாரதத்தில் விவரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவளுடைய வரலாற்றை நன்கு அறிந்த பீஷ்மர் 'ஒரு பெண்ணுடன் போர் புரியமாட்டேன்' என்று சபதம் செய்திருந்தார். அதனாலேயே சிகண்டியின் மூலம் பீஷ்மருக்கு ஆபத்து நேரலாம் என்று எண்ணிய துரியோதனன், பீஷ்மரைப் பாதுகாக்க வேண்டும் என்று தமது படைத்தலைவர்களுக்குக் கட்டளையிட்டான். ''மகாவல்லமை பொருந்திய சிங்கத்தை நாம் பாதுகாக்காவிட்டால், ஓர் ஓநாய் கூட அதைக் கொன்றுவிடும். ஆகையால், சிகண்டியைப் போன்ற ஒரு நரி, சிங்கத்தைக் கொல்லுவதற்கு நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது'' என்று துரியோதனன் படைத்தலைவர்களுக்கு எச்சரிக்கை செய்ததாக பாரதம் கூறுகிறது.—திலகர்.

तस्य संजनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शंखं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ:।
சிம்ஹ நாதம் வினத்யோச்சை: சங்கம் தத்மௌ ப்ரதாபவான்॥ 12

*12.* துரியோதனன் அவ்விதம் கூறியதைக் கேட்டதும் அவனை உற்சாகப்படுத்துவதற்காக, பராக்கிரமசாலியும், குருவம்சத்தைச் சேர்ந்த பெரிய கிழவருமான பீஷ்மர், சிங்கத்தைப் போல் உரத்த குரலில் கர்ஜனை செய்ததுடன், தமது சங்கத்தையும் எடுத்து சங்கநாதம் செய்தார்.

ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥

தத: சங்காச்ச பேர்யச்ச பணவானக கோமுகா:।
ஸஹஸைவாப்ய ஹன்யந்த ஸ சப்தஸ் துமுலோ (அ) பவத்।। 13

*13.* அதன் பின் திடீரென்று சங்கங்களும், பேரிகைகளும், ஜாலராக்களும், தாரை வாத்தியங்களும் முழங்கலாயின. அவற்ருல் உண்டான சப்தம் பயங்கரமாக இருந்தது.

ततः श्वेतैर्हयैर्युक्ते महतिस्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

தத: ச்வேதைர் ஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ।
மாதவ: பாண்டவச்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது:॥ 14

*14.* பின்னர் மாதவனும் பாண்டவனும்*, வெள்ளைக் குதிரைகள்† பூட்டிய அவர்களுடைய மகத்தான ரதத்தில் நின்றுகொண்டு தெய்விகமான சங்குகளை முழங்கினர்.

---

* மாதவன் என்பது கிருஷ்ணனுடைய எத்தனையோ பெயர்களில் ஒன்று. லக்ஷ்மியின் பதி என்பதே அதன் பொருள். பாண்டவன் என்று பாண்டவர் ஐவரில் யாரை வேண்டுமானுலும் குறிப்பிடலாம் என்ருலும், மேலே அந்தச் சொல் அர்ஜுனனையே குறிக்கின்றது.

† வெள்ளைக் குதிரைகள், கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட ஐந்து புலன்களையும், ரதம் மனித உடலையும் குறிக்கின்றன. உடலுக்கு உரியவன் ஜீவாத்மா. உள்ளத்தூய்மை

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேச: தேவதத்தம் தனஞ்ஜய:।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதர:॥ 15

*15.* ஹ்ருஷீகேசன்* பாஞ்சஜன்யம் என்னும் சங்கையும், தனஞ்ஜயன் தேவதத்தம் என்னும் சங்கையும், பயங்கரமான செயல்களைப் புரியும் வல்லமை வாய்ந்தவனும், ஓநாயைப் போன்ற வயிறு உள்ளவனுமான பீமன்* பௌண்ட்ரம் என்னும் மகத்தான சங்கையும் முழங்கினார்கள்.

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

அனந்த விஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர:।
நகுல: ஸஹதேவச்ச ஸுகோஷ மணிபுஷ்பகௌ॥ 16

*16.* குந்தியின் புதல்வரான யுதிஷ்டிரர் அனந்த விஜயம் என்ற சங்கையும், நகுலனும் சகாதேவனும் முறையே ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்ற சங்குகளையும் ஊதினார்கள்.

[பாண்டவர்களின் விவரம்: *1.* யுதிஷ்டிரர், *2,* பீமன், *3.* அர்ஜுனன்-இந்த மூவரும் பாண்டுவின் முதல் மனைவியான குந்தியின் புதல்வர்கள். *4.* நகுலன், *5.* சகாதேவன்-இந்த இருவரும் பாண்டுவின் இரண்டாவது மனைவி மாத்ரியின் புதல்வர்கள்.]

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥

காச்யச்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மகாரத:।
த்ருஷ்டத்யும்னோ விராடச்ச ஸாத்யகிச் சாபராஜித:॥ 17

---

வாய்ந்தவனை, பரமாத்மா சாரதியாக இருந்து நடத்துகிறார். உள்ளத்தில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணைபிரியாமல் இருந்துகொண்டு, உடலாகிய ரதத்தை நடத்துகிறார்கள் என்பது சிலருடைய வியாக்கியானம் ஆகும்.

* ஹ்ருஷீகேசன் என்பது கிருஷ்ணனுடைய பெயர்களில் ஒன்று. அந்தச் சொல்லுக்குப் புலன்களை அடக்கி ஆள்பவன் என்று பொருள். 'வ்ருகோதரன்' என்றால்

*17.* வில் யுத்தத்தில் மகா நிபுணனான காசி ராஜனும், மகா ரதனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராடனும், பிறரால் ஜயிக்க முடியாத ஸாத்யகியும்;

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥

த்ருபதோ த்ரௌபதேயாச்ச ஸர்வச: ப்ருதிவீபதே।
ஸௌபத்ரச்ச மஹாபாஹு: சங்கான் தத்மு: ப்ருதக் ப்ருதக்॥ 18

*18.* மகாராஜா! துருபதன், திரௌபதியின் புதல்வர்கள், வல்லமை பொருந்திய சுபத்ரையின் மகன் முதலிய யாவரும், தனித்தனியாக சங்கநாதம் செய்தனர்.

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத்।
நபச்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யனுநாதயன்॥ 19

*19.* பயங்கரமான அந்தச் சந்தடி, பூமியையும் ஆகாயத்தையும் எதிரொலிக்கும்படி செய்ததுடன், திருதராஷ்டிரனுடைய புதல்வர்களின் இதயங்களையும் பிளந்தது.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥
हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

अर्जुन उवाच

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

---

ஓநாய் போன்ற ஒடுங்கிய வயிறு உடையவன் என்பதாகும். பீமன் எவ்வளவு சாப்பிட்டாலும் வயிறு ஒடுங்கியே இருக்கும். அது அவனுடைய ஜீரண சக்தியையும், உடல் பலத்தையும் குறிப்பிடுகிறது.

அதவ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே சஸ்த்ர ஸம்பாதே தனுருத்யம்ய பாண்டவ:।। 20
ஹ்ருஷீகேசம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே।

அர்ஜுன உவாச

ஸேனயோ ருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே(அ)ச்யுத।। 21

*20-21.* மகாராஜா! அதன் பிறகு, வானரக் கொடியோனுன அர்ஜுனன் எதிரே அணிவகுத்து நின்ற திருதராஷ்டிரனின் புதல்வர்களைப் பார்த்து, பாணங்கள் பறக்கும் தருணம் வந்ததும் தன்னுடைய வில்லை எடுத்துக்கொண்டு, கிருஷ்ணனைப் பார்த்து இவ்விதம் கூறினன் :

அச்சுதா! என்னுடைய தேரை இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் கொண்டுபோய் நிறுத்துங்கள்.

[அர்ஜுனனின் கொடியில் அப்பழுக்கற்ற தொண்டும், தூய்மையும், வீரமும் உருவானவரும் பக்த சிரேஷ்டருமான ஹனுமானின் உருவம்* பொறிக்கப்பட்டிருந்தது.]

**यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।**
**कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥**

யாவதேதான் நிரீக்ஷேஹம் யோத்துகாமானவஸ்திதான்।
கைர்மயா ஸஹ யோத்தவ்யம் அஸ்மின் ரண ஸமுத்யமே।। 22

*22.* யுத்தம் செய்ய வேண்டும் என்ற ஆர்வத்துடன் அணிவகுத்து நிற்கும் இவர்களை நான் எங்கே இருந்தால் நன்ருகப் பார்க்க முடியுமோ, இந்த பயங்கரமான யுத்தத்தில் யாருடன் போர் செய்ய வேண்டும் என்பதை நான் அறிந்து கொள்ள முடியுமோ,

---

* பாண்டவர்கள் காட்டில் அஞ்ஞாத வாசம் செய்தபோது காற்று அடித்ததில் ஓர் அழகான மலர் திரௌபதிக்கு அருகில் வந்து விழுந்தது. அந்த மலரின் அழகையும், வாசனையையும் கண்டு திரௌபதி பரவசம் அடைந்தாள். அந்த மலர்களைக் கொண்டுவரும்படியும் கூறினுள். அத்தகைய மலர்களைப் பறித்துவருவதற்காக பீமன் காட்டிற்குள் சென்றபோது, வழியில் ஹனுமாரைச் சந்தித்தான். குந்தியிடம் வாயு பகவானுக்கு பீமன் பிறந்தவனுதலால், தன் மூத்த சகோதரரான அனுமாரை நேரில் காணும் பாக்கியம் பெற்றதைக் குறித்து அவன் ஆனந்தம் அடைந்தான். அப்போது அனுமார் பீமனுக்கு ஆசி கூறி, பின்வருமாறு வரம் அளித்தார் : "போர்க்களத்தில் நீ கர்ஜனை செய்தால், நானும் மறைந்திருந்து உன்னுடன் சேர்ந்து கர்ஜனை செய்வேன். அதைக் கண்டு பகைவர்கள் நடுநடுங்கிவிடுவார்கள். உன் சகோதரனுன அர்ஜுனனுடைய ரதத்தின் கொடியில் நானே நேரில் யாருக்கும் தெரியாமல் இருந்துவருவேன். எனவே, போர்களில் எல்லாம் நிச்சயமாக நீங்கள்தான் வெற்றியடைவீர்கள்."

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

யோத்ஸ்யமாணு னவேக்ஷேஹம் ய ஏதேத்ர ஸமாகதா:।
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்ப்புத்தேர் யுத்தே ப்ரியசிகீர்ஷவ:॥ 23

23. யுத்தத்தில், வக்கிர புத்தியுள்ள துரியோதனின் ஆசையை நிறைவேற்றுவதில் அக்கறை கொண்டு இங்கே கூடியுள்ளவர்களையும் நான் எங்கே இருந்து கண்ணேட்டம் செய்ய முடியுமோ, அந்த இடத்தில் இரு சேனைகளுக்கும் மத்தியில் ரதத்தை நிறுத்துங்கள்.

संजय उवाच

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

ஸஞ்ஜய உவாச

ஏவ முக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேன பாரத।
ஸேனயோ ருபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம்॥ 24

பீஷ்ம த்ரோணப்ரமுகத: ஸர்வேஷாம் ச மஹீ க்ஷிதாம்।
உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குரூனிதி॥ 25

*சஞ்சயன் கூறினுன்:*

*24-25* மகாராஜா! குடாகேசன்* (அர்ஜுனன்) அவ்விதம் கூறியதும் ஹ்ருஷீகேசன் அற்புதமான ரதத்தை இரண்டு சேனைகளுக்கு மத்தியில், பீஷ்மர், துரோணர் முதலியோருக்கும் மற்ற எல்லா மன்னர்களுக்கும் எதிரில் கொண்டுபோய் நிறுத்தி பின் வருமாறு கூறினர்: "அர்ஜுன, அதோ கூடியிருக்கும் கௌரவர்களைப் பார்."

---

* குடாகேசன் என்ருல் சோம்பேறித்தனத்தையும் தூக்கத்தையும் வென்றவன் என்று பொருள்.

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६ ॥
श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७ ॥
कृपया परयाऽऽविष्टो विषीदन्निदमब्रवीत् ।

தத்ராபச்யத் ஸ்திதான் பார்த்த: பித்ரூனத பிதாமஹான்।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான் பௌத்ரான் ஸகீம் ஸ்ததா॥26
ச்வசுரான் ஸுஹ்ருதச்சைவ ஸேனயோ ருபயோரபி।
தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வான் பந்தூனவஸ்திதான்॥ 27
க்ருபயா பரயா(ஆ) விஷ்டோ விஷீதன் னிதமப்ரவீத்।

*26-28.* பிறகு பார்த்தன் இரு சேனைகளிலும் நின்று கொண்டிருந்த தகப்பன்மார், பாட்டன்மார், குருமார், மாமன்மார், சகோதரர்கள், புதல்வர்கள், பேரன்மார், தோழர்கள், மாமனர்கள், நெருங்கிய நண்பர்கள் எல்லோரையும் பார்த்தான். தன் முன் நின்று கொண்டிருந்த அந்த எல்லா உறவினர்களையும் பார்த்த குந்தியின் புதல்வனை அர்ஜுனன் மிகுந்த இரக்கம் கொண்டு மன வேதனையினுல் இவ்விதம் கூறினன்.

अर्जुन उवाच

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८ ॥
सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

அர்ஜுன உவாச
த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் கிருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம்॥ 28
ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிசுஷ்யதி।
வேபதுச்ச சரீரே மே ரோமஹர்ஷச்ச ஜாயதே॥ 29

*அர்ஜுனன் சொன்னன்:*

*28-29.* போர் புரிய வேண்டும் என்ற ஆர்வத்துடன் இங்கே கூடியிருக்கும் இந்த உறவினர்களை நான் பார்க்கும் போது, என் அவயவங்கள் சோர்வடைகின்றன, என் வாய் உலர்கின்றது, என் உடல் நடுங்குகிறது, மயிர்க்கூச்செறிகின்றது.

**गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।**
**न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३० ॥**

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே।
நச சக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மன:॥ 30

*30.* கையிலிருந்து காண்டீவம் நழுவுகின்றது; உடம்பின் மேற்புறமெல்லாம் எரிகின்றது; நிற்பதற்கும் என்னால் முடியவில்லை; என் மனம் தடுமாறுகின்றது.

[அர்ஜுனனின் வில்லுக்கு காண்டீவம் என்று பெயர். அது, அவனுக்கு இந்திரனால் பரிசளிக்கப்பட்டதாகும்.]

**निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।**
**न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥**

நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ।
ந ச ச்ரேயோ(அ)னுபச்யாமி ஹத்வா ஸ்வஜன மாஹவே॥ 31

*31.* கேசவா, துக்ககரமான அபசகுனங்களும் எனக்குத் தென்படுகின்றன. யுத்தத்தில் உறவினர்களைக் கொல்லுவதன் மூலம் யாதொரு நன்மையையும் நான் காணவில்லை.

**न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।**
**किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥**

ந காங்க்ஷே விஜயம் கிருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச।
கின்னோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா॥ 32

*32.* நான் வெற்றியையோ, ராஜ்ய அதிகாரத்தையோ, உலக போகங்களையோ விரும்பவில்லை. கோவிந்தா, ராஜ்யத்தினாலோ, உலக சுகங்களாலோ, அல்லது ஜீவித்திருப்பதாலோ கூட நமக்கு என்ன நன்மை?

**येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।**
**त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥**

யேஷா மர்த்தே காங்க்ஷிதன் ஞே ராஜ்யம் போகா: ஸுகானிச|
த இமே (அ)வஸ்திதா யுத்தே ப்ராணும்ஸ் த்யக்த்வா தனுனி ச||33

*33.* யாருக்காக நாம் ராஜ்யத்தையும், உலக சுகங்களையும், போகங்களையும் விரும்புகிறோமோ அவர்களே உயிரையும், செல்வத்தையும் துறந்து இங்கே யுத்தத்தில் அணிவகுத்து நிற்கிறார்கள்.

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः सम्बन्धिनस्तथा ॥ ३४ ॥

ஆசார்யா: பிதர: புத்ராஸ் ததைவ ச பிதாமஹா:|
மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ச்யாலா: ஸம்பந்தினஸ் ததா|| 34

*34.* குருமார், தகப்பன்மார், புதல்வர்கள், அவ்விதமே பாட்டன்மார், பேரப்பிள்ளைகள். அதுபோலவே மாமன்மார், மாமனார்கள், மைத்துனர்கள், சம்பந்திமார் கூட. (யுத்தத்தில் அணிவகுத்து நிற்கின்றார்கள்.)

एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥

ஏதான் நஹந்து மிச்சாமி க்னதோபி மதுஸூதன|
அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோ: கின் னு மஹீக்ருதே|| 35

*35.* மதுசூதனா, இவர்கள் என்னைக் கொல்லுபவர்கள் என்றாலும், மூன்று உலகங்களையும் ஆளும் மன்னர் பதவி கிடைப்பதாக இருந்தால் கூட நான் இவர்களைக் கொல்லமாட்டேன். அப்படியிருக்க, இந்த உலகத்தில் உள்ள ஒரு ராஜ்யத்திற்காக இவர்களைக் கொல்லுவதென்ற பேச்சிற்கே இடமில்லை.

[பூமி, சொர்க்கம், பாதாளம் ஆகியவையே மூன்று உலகங்கள் என்று கூறப்படுகின்றன. அவை முறையே மனிதர்களும், தெய்விகமானவர்களும், தேவர்களும் வாழும் இடங்கள் என்று குறிப்பிடப்படுகின்றன.]

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥

நிஹத்ய தார்த்தராஷ்ட்ரான் ந: கா ப்ரீதி: ஸ்யாஜ் ஜனார்த்தன|
பாபமேவாச்ரயே தஸ்மான் ஹத்வைதா னுததாயின:|| 36

*36.* ஜனார்த்தனா, திருதராஷ்டிரரின் புதல்வர்களான இவர்களைக் கொல்லுவதால், நமக்கு என்ன இன்பம் ஏற்பட முடியும்? இவர்கள் பிறரது சொத்துக்களை அநீதியாக ஆக்கிரமிப்பவர்களாயினும், இவர்களைக் கொல்லுவதால் நாம் பாவத்திற்கே ஆளாவோம்.

[மேற்கண்ட சுலோகத்தில் உள்ள 'ஆததாயின:' என்ற சொல், மிகக் கொடிய குற்றங்கள் செய்தவர்களையே குறிப்பிடுவதாகும்: தீ வைப்பவர்கள், விஷம் வைத்துக் கொல்லுபவர்கள், கொலைகாரர்கள், கொள்ளைக்காரர்கள், நிலத்தை அபகரிப்பவர்கள், கற்பழிப்பவர்கள்.* கௌரவர்கள், பாண்டவர்களின் ராஜ்யத்தை அநீதியாக அபகரித்தவர்களாதலால், அவர்களை 'ஆததாயின:' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

**தஸ்மான் நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான்।**
**ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின: ஸ்யாம மாதவ॥ 37**

*37.* ஆகையால் நமது உறவினர்களும், திருதராஷ்டிரரின் குமாரர்களுமான இவர்களைக் கொல்லுவது நமக்கு ஏற்றதல்ல. மாதவ, நம் சொந்த உறவினர்களைக் கொல்லுவதன் மூலம் நாம் எப்படி சந்தோஷமாக இருக்க முடியும்?

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

**யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹத சேதஸ:।**
**குல க்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம்॥ 38**

*38.* இவர்களுடைய புத்தி பேராசையால் ஆட்கொள்ளப்பட்டு குலத்தையே அழிப்பதில் உள்ள பாதகத்தையோ, தோழர்களுக்கு துரோகம் செய்யும் பாவத்தையோ இவர்கள் காணவில்லை என்றாலும் கூட,

---

* ஒருவன் மேலே குறிப்பிட்ட குற்றங்களில் எதைச் செய்தாலும், அத்தகைய துஷ்டனைக் கொன்றுவிடலாம் என்றும், அவ்விதம் கொல்லுவது பாவமாகாது என்றும் மனுஸ்மிருதி (8, 350, 351) கூறுகிறது.

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोष प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

கதம் ந க்ஞேய மஸ்மாபி: பாபா தஸ்மான் நிவர்த்திதும்|
குலக்ஷய க்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜனார்த்தன|| 39

*39.* ஜனார்த்தனா, குல நாசத்தால் விளையும் கேட்டை தெளிவாகக் காணும் நாம், இந்தப் பாவத்திலிருந்து விலகிப் பின்வாங்காமல் எப்படி இருக்க முடியும்?

[சகோதரர்களைப் படுகொலை செய்யும் யுத்தத்தின் விளைவாக ஒரு குடும்பமோ அல்லது பல குடும்பங்களோ நாசமாவதைக் குறித்து அர்ஜுனன் துக்கப்படவில்லை. ஆனால், குடும்ப தருமம் அதாவது குல தருமம் அழிவதைக் குறித்தே புலம்புகிறான்.

ஹென்றி டிரம்மண்ட் இவ்விதம் கூறுகிறார்: ''ஸ்தூலமாகவும், மன தத்துவ ரீதியாகவும், அறநெறியை அடிப்படையாகக் கொண்டும் குடும்பம்தான் பரிணாம தத்துவத்தின் சிகரமாகும். சக்திகளை உண்டாக்குவதும், சக்திகளுக்குக் களஞ்சியமாக விளங்குவதும் குடும்பமே. அந்த சக்திகளால் மாத்திரமே உலகத்தின் தார்மிக முன்னேற்றத்தையும் சமுதாய முன்னேற்றத்தையும் உருவாக்க முடியும். ஒரு புனித குடும்பத்தை இயற்கை உற்பத்தி செய்திருக்கிறது. பல நூற்றாண்டுகளாக அல்ல, பல்லாயிரம் ஆண்டுகளாக குடும்ப தத்துவம் அழியாமல் இருந்து வந்திருக்கிறது. காலம் அதற்கு எவ்விதவான களங்கத்தையும் உண்டாக்கவில்லை; நவீனக் கலைகளால் அதற்குப் புதிய சிறப்பு எதுவும் ஏற்பட்டுவிடவில்லை; அதைக் காட்டிலும் அதிக இன்பமும் அழகும் வாய்ந்த ஒரு முறையை எந்த மேதாவியும் கண்டுபிடித்து விடவுமில்லை; அதைக் காட்டிலும் தெய்விகமான ஒரு தத்துவத்தை எந்த மதமும் உருவாக்கவுமில்லை.''

குடும்பத்திற்கு மேற்கண்ட சிறப்புகள் எல்லாம் உண்டு என்பதே கீதையின் ஆசிரியருடைய கருத்தாக இருக்கலாம்.]

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸனாதனா:|
தர்மே நஷ்டே குலம் க்ருதஸ்ன மதர்மோ (அ)பிபவத்யுத|| 40

*40.* குலம் நாசம் அடையும் போது தொன்றுதொட்டு நிரந்தரமாக வந்துள்ள குலதருமங்களும் அழிகின்றன. இந்த தருமங்கள் அழியும் போது, குலம் முழுவதையும் அதர்மம் பற்றிக் கொள்கின்றது.

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

அதர்மாபி பவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய:||
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ண ஸங்கர:|| 41

*41.* கிருஷ்ண, அதர்மம் ஓங்கும் போது குடும்பப் பெண்கள் கற்பை இழக்கின்றனர். வார்ஷ்ணேயா,* பெண்கள் கற்பை இழந்தால், வர்ணங்களிடையே குழப்பமும் ஒழுங்கீனமும் ஏற்படுகின்றன.

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்னானும் குலஸ்ய ச|
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த பிண்டோதக க்ரியா:|| 42

*42.* இந்தக் குழப்பமானது, குலத்தை நாசம் செய்தவனையும், குலத்தையும் கூட நிச்சயமாக நரகத்தில் வீழ்த்திவிடுகின்றது. இவர்களுடைய பிதுருக்களும் பிண்டம், தர்ப்பணம் முதலிய சடங்குகளின்றி சொர்க்கத்திலிருந்து வீழ்ச்சி அடைகின்றார்கள்.

[காலஞ்சென்ற பிதுருக்களுக்கு பிண்டங்கள் போடுவதும், தர்ப்பணம் செய்வதும் அடங்கிய சிரார்த்தச் சடங்கைப் பற்றியே இந்த சுலோகத்தில் கீதையின் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். வழக்கத்தில் உள்ள ஒரு முறையைப் பற்றியே அவர் குறிப்பிட்டிருக்கிறார். எனவே, அந்தச் சடங்கை அவசியமானதாக ஆசிரியர் கருதினர் என்பது அதன் அர்த்தமல்ல. உண்மையில் அந்தச்

---

* விருஷ்ணி என்பவர் யாதவ குலத்தில் உதித்த மதுவின் குமாரர்; கிருஷ்ணனின் மூதாதையர்களில் ஒருவர். விருஷ்ணியின் குலத்தில் பிறந்ததால், கிருஷ்ணனுக்கு வார்ஷ்ணேயர் என்ற பெயர் வழங்குகிறது.

அக்காலத்தில் ஓர் அரக்கனுக்கும் மது என்ற பெயர் உண்டு. அந்த அரக்கனை கிருஷ்ணன் கொன்றதால், மதுசூதனன் என்றும் கிருஷ்ணனுக்கு ஒரு பெயர் வழங்குகிறது.

சடங்கைப் பற்றி கீதையில் இரண்டாவது தடவையாக ஓரிடத்திலும் குறிப்பிடப்படவில்லை.]

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

தோஷை ரேதை: குலக்னுனும் வர்ணஸங்கர காரகை:।
உத்ஸாத்யந்தே ஜாதி தர்மா: குலதர்மாச்ச சாச்வதா:॥ 43

*43.* குலத்தை நாசம் செய்யும் இவர்கள் செய்யும் பாவங்களால் வர்ணங்களிடையே குழப்பம் ஏற்பட்டு, தொன்றுதொட்டு வந்துள்ள சாதி தருமங்களும் குல தருமங்களும் பாழாகின்றன.

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरकेनियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

உத்ஸன்ன குலதர்மாணும் மனுஷ்யாணும் ஜனர்த்தன।
நரகே நியதம் வாஸோ பவதீத் யனுசுச்ரும॥ 44

*44.* ஜனர்த்தன, யாருடைய குல தருமங்கள் அழிக்கப்படுகின்றனவோ, அவர்கள் நரகத்தில் வாழும் தண்டனையை அனுபவித்துத் தீரவேண்டியவர்களாக இருக்கிருர்கள் என்று வாழையடி வாழையாகப் பெரியோர் சொல்லக் கேட்டுவந்திருக்கிறோம்.

अहो वत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

அஹோ பத மஹத் பாபம் கர்த்தும் வயவஸிதா வயம்।
யத் ராஜ்ய ஸுகலோபேன ஹந்தும் ஸ்வஜன முத்யதா:॥ 45

*45.* ஐயோ, ராஜ்யாதிகார இன்பத்தில் பேராசை கொண்டு நாம் உற்ருர் உறவினரைக் கொல்ல ஆயத்தமாக இருப்பதன் மூலம், எத்தகைய கொடிய பாவத்தைச் செய்ய நாம் முன் வந்திருக்கிறோம்!

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

யதி மாமப்ரதீகாரம் அசஸ்த்ரம் சஸ்த்ர பாணய:।
தார்த்தராஷ்ட்ரா ரணே ஹன்யு: தன் மே க்ஷேமதரம் பவேத்॥ 46

46. கையில் ஆயுதங்களுடன் இருக்கும் திருதராஷ்டிரரின் குமாரர்கள், போர்க்களத்தில் எதிர்க்காமலும் ஆயுதமின்றியும் இருக்கும் என்னை அடித்து வீழ்த்தினால் எனக்கு எவ்வளவோ ஆனந்தமாக இருக்கும்.

संजय उवाच

एवमुक्त्वाऽर्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥

ஸஞ்சய உவாச :

ஏவமுக்த்வார்ஜுன : ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத்।
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்ன மானஸ:॥ 47

ஸஞ்சயன் சொன்னான் :

47. போர்க்களத்தில் அர்ஜுனன் இவ்வாறு கூறி அவனுடைய வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, துக்கம் தாங்க முடியாமல் ரதத்திலுள்ள அவனது ஆசனத்தின் மீது சோர்ந்து உட்கார்ந்துவிட்டான்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे अर्जुनविषादयोगो
नाम प्रथमोऽध्यायः ॥ १ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபனிஷத்ஸு ப்ரம்ம வித்யாயாம்
யோக சாஸ்த்ரே ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
அர்ஜுன விஷாதயோகோ நாம
ப்ரதமோ(அ)த்யாய: || 1

பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்
தின் ஓர் அம்சமான யோக சாத்திரத்தைப் பற்றி
கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'அர்ஜுன விஷாத
யோகம்' என்ற முதலாவது அத்தி
யாயம் இவ்வாறாக முடிவுறு
கின்றது.*

* ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் கொடுக்கப்பட்டுள்ள முத்திரையைப் பற்றிய எனது விளக்கத்தை 178, 179–ஆம் பக்கங்களில் பார்க்கவும்.

# சாங்கிய யோகம்

## இரண்டாம் அத்தியாயம்

மனிதன், மதிமயக்கம் காரணமாக அதருமத்தை தருமம் என்று கருதுகிருன். உறவினர்களுக்கும் உறவினர் அல்லாதாருக்கும் இடையே அர்ஜுனன் வேற்றுமை பாராட்டும்படி செய்ததற்கு அவனது மதிமயக்கமே காரணமாகும். அத்தகைய வேற்றுமை ஆதாரமற்றது என்பதை நிருபிப்பதற்காக கிருஷ்ணன் உடலுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள வேற்றுமையை விளக்குகிருர். உடல்கள் பலவாகவும் நிலையற்றவையாகவும் இருக்கின்றன ; ஆனுல் ஆன்மா ஒன்றே என்பதுடன், அது அழியாதது, நிரந்தரமானது என்பதை கிருஷ்ணன் எடுத்துக் காட்டுகிருர். முயற்சிதான், மனிதனின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கிறது ; அதன் பலன் அவனது கட்டுப்பாட்டில் இல்லை. எனவே, அவன் செய்யவேண்டியதெல்லாம், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவனது நடவடிக்கை முறையையோ அல்லது கடமையையோ தீர்மானம் செய்து கொண்டு பலனைப்பற்றிக் கவலைப்படாமல் உறுதியுடன் நிற்பதுதான் ; பற்றுதல் இன்றியும், தன்னலமற்றும் மனிதன் தனது கடமையை நிறைவேற்றுவதன் மூலம் மோட்சம் அடைகிருன்.

संजय उवाच

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

**ஸஞ்சய உவாச :**

**தம் ததா க்ருபயா விஷ்டம் அச்ருபூர்ண குலக்ஷணம்।**
**விஷீதந்தமிதம் வாக்யம் உவாச மதுஸூதன:॥**

*ஸஞ்சயன் கூறினுன் :*

1. இவ்வாறாக இரக்கத்தினால் மனம் உருக, வழியும் கண்ணீர் கண்களை மறைக்க, துக்கம் பொங்கும் அர்ஜுனனைப் பார்த்து மதுசூதனன் பின்வருமாறு கூறினார்.

श्रीभगवानुवाच

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।

अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

ஸ்ரீ பகவான் உவாச :

குதஸ்த்வா கச்மல மிதம் விஷமே ஸமுபஸ்திதம்|

அனார்யஜுஷ்ட மஸ்வர்க்யம் அகீர்த்திகர மர்ஜுன|| 2

ஸ்ரீ பகவான் கூறினார் :

2. உத்தமர்களுக்குத் தகாததும், சொர்க்கத்தையோ அல்லது புகழையோ அடைவதற்கு இடம் இல்லாததுமான இந்த மதிமயக்கம் இந்த நெருக்கடியான நேரத்தில் உன்னை எப்படி ஆட்கொண்டது?

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।

क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த்த நைதத் த்வய் யுபபத்யதே|

க்ஷுத்ரம் ஹிருதய தௌர்ப்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப|| 3

3. பார்த்தா, பேடித்தனத்திற்கு இடம் கொடுக்காதே. உனக்கு இது தகுதியல்ல. பரந்தபா,* இழிவான இந்தக் கோழைத்தனத்தை உதறித்தள்ளிவிட்டு எழுந்திரு.

---

* 'பரந்தபா' என்ற சொல் அர்ஜுனனைக் குறிக்கிறது. 'பரந்தபன்' என்றால் 'பகைவரைத் தவிக்கச் செய்பவன்' என்று பொருள். கீதையில் கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இவ்விதம் ஏராளமான பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பெயரிலும் அந்தந்த இடத்துக்குப் பொருத்தமான ரகசிய அர்த்தங்கள் இருப்பதாக சில வியாக்கியான கர்த்தாக்கள் கூறியுள்ளனர். எனினும் அந்தக் கருத்தைத் தாம் ஆதரிக்கவில்லை என்றும், யாப்பிலக்கண வசதிக்காக அப்பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி, அவற்றில் விசேஷமான ரகசிய அர்த்தம் எதுவும் இல்லை என்றும் லோகமான்ய திலகர் தாம் எழுதியுள்ள 'கீதா ரகசிய'த்தில் கூறியுள்ளார். எனவே, கீதைக்கு அவர் எழுதியுள்ள வியாக்கியானத்தில் அந்தப் பெயர்களையெல்லாம் குறிப்பிடாமல் பொதுவாக அர்ஜுனன் என்றும் கிருஷ்ணன் என்றுமே குறிப்பிட்டிருக்கிறார்.

अर्जुन उवाच

**कथ भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन।**

**इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन॥ ४॥**

அர்ஜுன உவாச :

கதம் பீஷ்ம மஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதன|

இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதன ||4

*அர்ஜுனன் சொன்னான் :*

*4.* மதுசூதனா, அரிசூதனா, பூஜை செய்வதற்குத் தகுதிவாய்ந் தவர்களான பீஷ்மரையும் துரோணரையும் யுத்தத்தில் அம்புக ளால் எதிர்த்து, நான் எப்படிப் போர் புரிவேன்? *

**गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके।**

**हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान्॥ ५॥**

குருனஹத்வா ஹி மஹானுபாவான்

ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே|

ஹத்வார்த்த காமாம்ஸ்து குருனிஹைவ

புஞ்ஜீய போகான் ருதிர ப்ரதிக்தான்|| 5

*5.* வணக்கத்திற்கு உரிய இந்தப் பெரியோர்களைக் கொல்லு வதைக் காட்டிலும் இந்த உலகில் பிச்சையெடுத்துப் பிழைப்பதே மிகச் சிறந்ததாகும். அவர்களைக் கொன்ற பின், நான் ரத்தக் கறை படிந்த போகங்களையே அனுபவிக்க வேண்டியிருக்கும்.

**न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः।**

**यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः॥ ६**

நசைதத் வித்ம: கதரன்னோ கரீயோ

யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு:|

* "'பூஜிக்கத் தகுந்தவர்களான பீஷ்மரையும் துரோணரையும் எதிர்த்து யுத்தம் செய்வேன்' என்று வாயால் கூறுவதும் பாவம். அப்படியிருக்க, மதுசூதனா, அவர்களை நான் எப்படி பாணங்களால் அடிப்பேன்?''— *சங்கரர்.*

யானேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்

தே (அ) வஸ்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா:॥ 6

6. நாம் அவர்களை ஜயிக்கலாம் அல்லது அவர்கள் நம்மை ஜயிக்கலாம். இதில் நமக்கு எது சிறந்தது என்பது தெரியவில்லை. யாரைக் கொன்று நாம் உயிர்வாழ விரும்பமாட்டோமோ, திருதராஷ்டிரரின் குமாரர்களான அவர்கள் இங்கே நம் எதிரில் நிற்கின்றார்கள்.

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसम्मूढचेताः ।

यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥७॥

கார்ப்பண்ய தோஷோபஹத ஸ்வபாவ:

ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா:।

யச்ரேய: ஸ்யான்னிச்சிதம் ப்ரூஹி தன்மே

சிஷ்யஸ்தே(அ)ஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்॥ 7

7. கோழைத்தனத்தினால் நான் உணர்ச்சியற்றுப் போயிருக்கிறேன். என் கடமை என்ன என்பதை என் மனம் பகுத்துணர முடியவில்லை. ஆகையால் நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். எவ்விதம் செய்தால் எனக்கு நன்மை ஏற்படுமோ, அதைச் சந்தேகத்துக்கு இடமின்றி தெளிவாகக் கூறும்படி வேண்டிக்கொள்கிறேன். நான் உங்களுடைய சீடன். எனக்கு வழிகாட்டுங்கள். உங்களை நான் சரண் அடைகிறேன்.

न हि प्रपश्यामि ममापनुद्याद् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।

अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

ந ஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்

யச் சோக முச்சோஷண மிந்த்ரியாணும்।

அவாப்ய பூமாவஸபத்ன ம்ருத்தம்

ராஜ்யம் ஸுராணுமபி சாதிபத்யம்॥ 8

8. இந்த பூமியில் எதிர்ப்பே இல்லாத ஒரு சுபிட்சமான ராஜ்யத்தை ஆட்சி புரியும் மன்னர் பதவியோ அல்லது தேவர்

களை ஆட்சி புரியும் தேவேந்திர பதவியோ எனக்குக் கிடைத்தாலும் கூட, எனது புலன்களை வாட்டி வருத்தும் வேதனை தீருவதற்கான வழியை நான் காணவில்லை.

संजय उवाच

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतप।
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥९॥

ஸஞ்சய உவாச :

ஏவ முக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப|
யோத்ஸ்ய இதி கோவிந்தம் உக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ|| 9

ஸஞ்சயன் கூறினன்:

*9.* குடாகேசனும்* பரந்தபனுமான அர்ஜுனன் இவ்விதம் ஹ்ருஷீகேசனிடம் (கிருஷ்ணனிடம்) கூறிவிட்டு, "நான் யுத்தம் செய்ய மாட்டேன்" என்று சொல்லி மௌனமாக இருந்தான்.

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १० ॥

தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸன்னிவ பாரத|
ஸேனயோ ருபயோர் மத்யே விஷீதந்தமிதம் வச: || 10

*10.* பரதகுல மன்னனே! இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் வேதனையால்† அவ்விதம் மனம் நொந்திருந்த அர்ஜுனனைப் பார்த்து ஹ்ருஷீகேசன் ஏளனமாகக் கூறுவதுபோல் பின்வருமாறு சொல்லலானர் :

---

* குடாகேசன் என்பதற்கு தமோகுணத்தை வென்றவன் என்று ஸ்ரீ சங்கரர் தமது வியாக்கியானத்தில் குறிப்பிட்டுள்ளார்.

† மனிதன் பூமியில் மறுபிறப்பை அடைவதற்கு இரண்டு வித்துக்களே காரணம். முதலாவதாக, துக்கம். இரண்டாவது மன அந்தகாரம். அகங்காரம் காரணமாகவே அவை ஏற்படுகின்றன. அகங்காரத்திற்குக் காரணம் அவித்யை அதாவது ஞானமின்மையே. அவித்யையாகிய இருள், நிரந்தரமான ஒளியான ஞானத்தை மறைத்து, பொய்த் தோற்றங்களைக் காட்டுகின்றது. இதையெல்லாம் விளக்கி, அஞ்ஞானத்தை அகற்றி ஞானத்தைப் புகட்டுவதே கீதையின் நோக்கமாகும். —சங்கரர்

श्रीभगवानुवाच

**अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।**

**गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥**

**ஸ்ரீபகவான் உவாச**

**அசோச்யானன்வ சோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதாம்ச்ச பாஷஸே|**

**கதாஸூ நகதாஸூம்ச்ச நானுசோசந்தி பண்டிதா:॥ 11**

**ஸ்ரீபகவான் கூறினர் :**

**11. யாருக்காக துக்கப்படவேண்டாமோ அவர்களைக் குறித்து நீ துக்கப்படுகிருய். கவைக்கு உதவாத ஞான வார்த்தைகளையும் பேசுகிருய். ஆனல் விவேகிகள், உயிருடன் இருப்பவர்களுக்காகவும் துக்கப்படமாட்டார்கள்; இறந்தவர்களுக்காகவும் துக்கப்படமாட்டார்கள்.**

---

11. அருட்கடவுளான கிருஷ்ணன் இப்போது உலகில் ஒருவனது கடமை என்ன என்பது பற்றி அர்ஜுனனுக்கு புத்திமதி கூறத் தொடங்குகிருர். ஒருபுறம் அவன் பரம்பரையான க்ஷத்திரிய தருமத்தை நிறைவேற்ற வேண்டியவனுக இருக்கிருன். மற்றொருபுறம், மூத்தோர்களைக் கொல்லும் பாவத்திற்கும், குடும்பங்களை நாசம் செய்யும் பாவத்திற்கும் ஆளாக வேண்டியிருக்கிறதே என்றும் அஞ்சுகிருன். தான் கொல்லுவதா அல்லது தன்னைக் கொல்லும்படி விட்டுவிடுவதா என்ற சந்தேகத்தினல் தவிக்கிருன். போராட்டத்தை விட்டுவிட்டு, பிச்சைக்காரனைப்போல் வாழ்க்கை நடத்தவும் தயாராக இருக்கிருன். யுத்தத்தைப் போன்ற ஒரு பயங்கரமான நடவடிக்கையால் தனது ஆன்மாவுக்கு எத்தகைய பலனும் ஏற்படாது என்பதே அர்ஜுனனின் ஆட்சேபணையாகும். எனவே, மகான்களான ஆன்மாக்கள் பரபிரம்மத்தை அறிந்து கொண்டதன் மூலம் எவ்விதம் பூரணமான பேரானந்த நிலையை அடைந்தார்கள் என்பதையும், அவர்கள் இந்த உலகில் எப்படி வாழ்கிருர்கள் என்பதையும் விளக்குவதிலிருந்து, கீதையின் உபதேசம் ஆரம்பமாகிறது. பண்டைக் காலத்திலிருந்து, பிரம்ம ஞானத்தை அடைந்தவர்கள் வாழ்க்கையை நடத்துவதில் இரண்டு வழிகளை மேற்கொண்டுள்ளனர் என்று பகவான் கூறுகிருர். சுகரைப் போன்றவர்கள் ஆன்ம ஞானத்தை அடைந்த பின் உலக வாழ்க்கையை உதறித் தள்ளிவிட்டு, சந்நியாசியாக வாழ்ந்தனர். ஜனகரைப் போன்றவர்கள், ஆன்ம ஞானத்தை அடைந்த பின்னரும் தங்களுடைய தருமத்திற்கு வழுவின்றி எல்லா மக்களுக்கும் நன்மை பயக்கும் பல்வேறு உலக நடவடிக்கைகளிலும் ஈடுபட்டிருந்தனர்.

"உயிருடன் இருப்பவர்களுக்காகவோ அல்லது இறந்தவர்களுக்காகவோ விவேகிகள் துக்கப்படமாட்டார்கள்" என்று கூறப்பட்டிருப்பதைக் குறித்து (11-ஆவது சுலோகம்) ஒரு கேள்வி எழுகின்றது. இறந்தவர்களுக்காக துக்கப்படுவது இயற்கை. உயிருடன் இருப்பவர்களுக்காக துக்கப்படு

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனுதிபா:।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம்।। 12

*12. நானே, நீயோ அல்லது இந்த மன்னர்களோ ஒரு காலத்திலும் இராமலிருந்ததில்லை; இனிமேலும் நம்மில் எவரும் இராமலிருக்கப் போவதில்லை.*

---

வது எப்படி என்ற சந்தேகம் எழுகின்றது. மூடர்களும், அறியாமையில் ஆழ்ந்திருப்போரும் உயிர் வாழ்வது துக்கப்பட வேண்டியதே என்று சில வியாக்கியான கர்த்தாக்கள் கூறியுள்ளனர். இதெல்லாம் அனுவசியமான வாதம். இருப்பதும், இறப்பதும் ஞானிகளுக்கு ஒன்றே என்பதுதான் அந்த சுலோகத்தின் கருத்து.—லோகமான்ய திலகர்.

12. "குறிப்பிட்ட ஒரு நபரை நான் எப்படிக் கொல்லுவேன்?" இது தான் அர்ஜுனனின் மனத்தில் எழுந்த ஆழ்ந்த அறியாமையோ அல்லது அச்சமோ ஆகும். அவனது அறியாமையைப் போக்குவதற்காக கிருஷ்ண பகவான் "மரணம் என்ருல் என்ன" என்பதையும், "கொல்லுவது என்ருல் என்ன" என்பதையும் தத்துவ ரீதியாக விளக்குகிருர். உடலும் ஆன்மாவும் சேர்ந்தே மனிதனுகிருன். அவ்விரண்டில் ஆன்மா அழிவற்றது, நிரந்தரமானது. இன்று அது இருக்கிறது, நேற்று அது இருந்தது, நாளைக்கும் அது இருக்கும். எனவே, ஆன்மாவைப் பொறுத்தமட்டில் 'இறப்பது,' 'கொல்லுவது' என்ற சொற்கள் பொருந்தா. ஆதலால் அதன் சம்பந்தமாக துக்கப்படுவதற்குக் காரணம் எதுவும் இல்லை. எனினும், உடல் நிலையற்றது, அழியக் கூடியது; இன்றில்லாவிட்டாலும், நாளை இராவிட்டாலும், நூறு ஆண்டுகள் சென்ற பிறகாவது அது அழிய வேண்டியதுதான். அதில் உள்ள ஆன்மா முன் கர்மவினைக்கு உகந்தவாறு பின்னர் வேருெரு உடலை நிச்சயமாக அடைகின்றது. எனவே, என்றைக்கிருந்தாலும் அழியக் கூடிய உடல் அழிவதைக் குறித்து துக்கப்படுவது மூடத்தனம் என்பதையே பகவான் அர்ஜுனனுக்கு எடுத்துக் கூறுகிருர். —திலகர்

நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. —குறள்

இதன் கருத்து: தோன்றி மறையும் நிலையற்ற பொருட்களை நிரந்தரமானவை என்று கருதுவது, மடத்தனமானது, எல்லாவற்றையும் விட இழிவானது.

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

தேஹினோ(அ)ஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா।
ததா தேஹாந்தர ப்ராப்திர் தீரஸ்தத்ர ந முஹ்யதி।। 13

*13.* உடல் எடுத்த ஆன்மாவுக்கு இந்த உடலில் குழந்தைப் பருவம், இளமைப் பருவம், மூப்பு ஆகியவை எப்படியோ அப்படியே, மற்றொரு உடலை அடைவதும் அதாவது மறு பிறப்பும் ஆகும். விவேகம் உள்ளவன் அதைக் கண்டு மயங்குவதில்லை.

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

மாத்ரா ஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ண ஸுகதுக்கதா:।
ஆகமாபாயினோ(அ)நித்யாஸ் தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத।। 14

*14.* கௌந்தேயா (குந்தியின் புதல்வனை அர்ஜுனா), புலன்கள் அவற்றிற்கான சாதனங்களுடன் தொடர்பு கொள்ளும் போது குளிர், உஷ்ணம், இன்பம், துன்பம் ஆகியவை உண்டாகின்றன. வருவதும் போவதுமாக இருப்பதால், அவை நிலையற்றவை. பாரதா, அவற்றைப் பொறுத்துக்கொள்.

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப।
ஸம துக்க ஸுகம் தீரம் ஸோ(அ)ம்ருதத்வாய கல்பதே।। 15

---

14. பிரம்மமும் ஆன்மாவும் ஒன்றே என்பதை அறிந்துகொள்ளாத மனிதன், வெளி உலகத்துடன் கர்மேந்திரியங்களின் (புலன்களின்) தொடர்பினல் உண்டாகும் இன்பத்தையும் துன்பத்தையும், குளிரையும் உஷ்ணத்தையும் உண்மையானவை என்று கருதுகிருன். ஆன்மாவுக்கும் அவற்றிற்கும் சம்பந்தம் உண்டு என்றும் தவருக எண்ணுகிருன். அதன் காரணமாக அவனுக்கு துக்கம் ஏற்படுகிறது. ஆனல், உணர்ச்சிகள் உடலைச் சேர்ந்தவை என்பதையும், ஆன்மாவுக்கு செயலோ, பற்றுதலோ எதுவும் இல்லை என்பதையும் உணர்ந்தவன், இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்ருகக் கருது

*15.* புருஷ சிரேஷ்டனே, இவற்ருல் (குளிர், உஷ்ணம் ஆகிய வற்ருல்) கலங்காத, இன்பத்தையும் துன்பத்தையும் கண்டு மன உறுதி தளராத விவேகியே அமர நிலையை அடைவதற்குத் தகுதி வாய்ந்தவன்.

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्वदर्शिभिः ॥ १६ ॥

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத :|
உபயோரபி த்ருஷ்டோ(அ)ந்தஸ்த்வனயோஸ் தத்வதர்சிபி:|| 16

*16.* இராதது எக்காலத்திலும் இருந்ததில்லை. இருப்பது எக்காலத்திலும் இராமல் இருந்ததில்லை. இந்த இரு நிலைகளின் ரகசியத்தை, சத்தியத்தை அறிந்த ஞானிகள் கண்டிருக்கிறுர்கள்.

['இருப்பது' என்பது எல்லாவற்றிற்கும் உள்ள அடிப்படை யான அம்சமாகும். இது எப்போதும் நிலைத்திருப்பது. 'வருவது' என்பது நிலையற்றது. இவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமை யையே மேற்கண்ட சுலோகம் வலியுறுத்துகிறது. எது இருக் கிறதோ, இருந்ததோ, இனியும் இருக்கப்போகிறதோ அதைக் குறிக்க 'இருப்பது' என்ற சொல் போதாது என்றும், 'நிலைத் திருப்பது' என்ற சொல்லை உபயோகிக்கவேண்டும் என்றும் பிளவாட்ஸ்கி அம்மையார் கூறியுள்ளார். நிரந்தரமாக நிலைத் திருப்பதிலிருந்தே எல்லாம், எல்லா உயிர்களும் வருகின்றன. "கண்களால் காணும் பொருட்கள் நிலையற்றவை; கண்களால் காணுத பொருட்கள் நிரந்தரமானவை."—பைபிள்]

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम्।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७ ॥

அவிநாசி து தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம்|
விநாசு மவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்து மர்ஹதி|| 17

---

கிறுன். அவ்விதம் இன்ப, துன்பங்களை சமமாகக் கருதி தாங்கிக்கொள்ள வேண்டும் என்று பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறுர்.— திலகர்.

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. —குறள்.

இதன் கருத்து: பற்றுதலை இறுகப் பற்றிக்கொண்டிருப்பவர்களை, பிறவித் துன்பங்கள் இறுகப் பற்றிக்கொண்டுவிடும்.

*17.* எதனால் உலகமெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, அது அழியாத பொருள் என்பதை அறிந்து கொள். மாறுதலின்றி உறுதியாக நிலைத்து நிற்கும் அந்தப் பொருளை அழிக்க யாராலும் முடியாது.

[மேலே 'ததம்' என்ற சமஸ்கிருதச் சொல்லை, 'வியாபிக்கப் பட்டிருக்கிறது' என்றே அநேகமாக எல்லா வியாக்கியான கர்த்தாக்களும் மொழி பெயர்த்திருக்கிறார்கள். 'விஸ்தரிக்கப் பட்டிருக்கிறது' அல்லது 'பரப்பப்பட்டிருக்கிறது' என்றும் அதற்குப் பொருள் கூறலாம்.]

अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद् युध्यस्व भारत ॥ १८ ॥

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண:|
அநாசிநோ(அ)ப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத|| 18

*18.* உடலில் இருக்கும் ஆன்மா நிரந்தரமானது, அழிவற்றது, அளவிடமுடியாதது. ஆனால் உடல்களோவென்றால், எல்லைக்கு உட்பட்டவை, நிலையற்றவை. ஆகையால் பாரதா, போர் புரிவாயாக.*

[எல்லா விதமான மாறுதலுக்கும், எல்லா விதமான அழிவிற்கும் அப்பாற்பட்டது என்பதைக் குறிக்கவே 'நிரந்தரமான', 'அழிவற்ற' என்ற சொற்கள் உபயோகிக்கப்பட்டுள்ளன. 'அப்ரமேய' என்ற சொல்லுக்கு 'அளவிட முடியாதது' என்று அர்த்தம் கொடுக்கப்பட்டுளது. அதற்கு 'நிரூபிக்க முடியாதது' என்ற அர்த்தமும் பொருத்தமாக இருக்கும். அது எல்லாவிதமான ருஜுவுக்கும், அத்தாட்சிக்கும், அளவுக்கும் அப்பாற்

---

18. ஆன்மா அழிவற்றது. ஆகையால், நீ யுத்தம் செய்வாயாக என்று பகவான் கூறுவதிலிருந்து, ஆன்மா அழிவற்றதாதலின் எல்லோரும் போர்புரிய வேண்டும் என்று அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. அர்ஜுனன் க்ஷத்திரியன். பகைவர்களை எதிர்த்துப் போர்செய்ய வேண்டியது க்ஷத்திரியனின் கடமையாகும். தவிர, யுத்தம் செய்வதற்காகப் போர்முனைக்கு வந்த அர்ஜுனன், தன் கடமையைச் செய்ய மறுத்து ஓட்டம் பிடிப்பது கூடாது என்றே கூறுகிறார். யுத்தம் செய்ய அர்ஜுனன் மறுப்பதற்குக் காரணம், அவனது அறியாமையும் துக்கமுமே என்பதையும் எடுத்துக்காட்டுகிறார்.

—சங்கரர்.

18. நிரந்தரமானவைக்கும் நிலையற்றவைக்கும் உள்ள வேற்றுமையை அறிந்து கொண்டுவிட்டால், 'குறிப்பிட்ட நபரை நான் கொல்லுகிறேன்' என்பது பொய்யாகி விடுகிறது. எனவே, எல்லோரையும் தான் கொல்லும்படி நேருவதாக அர்ஜுனன் கூறிய வாதம் தகர்ந்துவிடுகிறது என்பதையே இந்த சுலோகம் காட்டுகிறது.—திலகர்.

பட்டது. 'அளவிடமுடியாதது', 'ருஜுப்பிக்க முடியாதது' என்ற இரண்டு சொற்களுக்கும் சுயமாகவே விளங்கக் கூடியது என்பதே பொருளாகும். ஞானத்திற்கெல்லாம் அதுதான் மூலாதாரமான நிபந்தனையாகும்.]

**य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।**
**उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥**

**न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः ।**
**अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥**

ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யச்சைனம் மன்யதே ஹதம்।
உபௌ தௌ ந விஜானீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதே।। 19

ந ஜாயதேம்ரியதே வா கதாசின்
நாயம் பூத்வா பவிதா வா ந பூய:।
அஜோ நித்ய: சாச்வதோ(அ)யம் புராணோ
ந ஹன்யதே ஹன்யமானே சரீரே।। 20

*19.* எவன் இந்த ஆன்மாவைக் கொல்லுபவனாக எண்ணுகிறானோ, இந்த ஆன்மாவை கொல்லப்படுகிறவனாக யார் நம்புகிறானோ இவ்விருவரும் அறியாமையில் உழல்பவர்கள். இது கொல்லுவதில்லை, கொல்லப்படுவதுமில்லை.

*20.* இந்த ஆன்மா ஒரு போதும் பிறப்பதில்லை, ஒருபோதும் இறப்பதுமில்லை; இல்லாமலிருந்து மறுபடியும் உண்டாவதும் இல்லை. இது பிறப்பு இல்லாதது, நிரந்தரமானது, என்றென்றும் இருப்பது, புராதனமானது. உடல் கொல்லப்பட்டாலும் இது (ஆன்மா) கொல்லப்படுவதில்லை.

[*19-20*-ஆவது சுலோகங்கள் கட உபநிடதத்தில் உள்ள சுலோகங்களை அப்படியே பிரதிபலிப்பவையாக இருக்கின்றன.]

---

20. ஆன்மா எவ்வாறு மாறுதலற்றது என்பது இரண்டாவது மந்திரத்தில் (20-ஆவது சுலோகம்) விளக்கப்படுகிறது. பிறப்பு, இறப்பு போன்ற மாறுதல்கள் ஆன்மாவுக்கு இல்லை. உடல் அழிந்த பின், ஆன்மா வளர்கின்றதேயொழிய அழிவதில்லை. அது நித்தியமானது. சாதாரணமாக ஸ்தூல உலகில் நாம் காணும் ஆறு விதமான மாறுதல்கள் (பிறப்பு, இருப்பு, வளர்தல், மாறுதல், மூப்பு, இறப்பு ஆகிய மாறுதல்கள்) ஆன்மாவுக்கு இல்லை—சங்கரர்.

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥ २१

வேதாவிஞசினம் நித்யம் ய ஏனமஜமவ்யயம்|
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம்||21

21. பார்த்தா, இது அழிவற்றது, நிரந்தரமானது, பிறவாதது, மாறுதலற்றது என்பதை யார் அறிகிருனே அவன் யாரை, எப்படிக் கொல்ல முடியும்? யாரை எப்படிக் கொல்லுவிக்க முடியும்?

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

வாஸாம்ஸி ஜீர்ணுனி யதா விஹாய
நவானி க்ருஹ்ணுதி நரோ(அ)பராணி|
ததா சரீராணி விஹாய ஜீர்ணுன்
யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ||22

22. மனிதன், கரைந்துபோன பழைய உடைகளை அப்பால் எறிந்துவிட்டு வேறு புதிய உடைகளை எடுத்துக் கொள்வது

---

21. ஆன்மா ஆறுவிதமான மாறுதல்கள் இல்லாதது என்பதை அறிந்தவன் மற்ெருருவனை எப்படிக் கொல்ல முடியும்? அல்லது கொல்லும்படி மற்ெருருவனை எவ்வாறு தூண்ட முடியும்? அதற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதற்காகவே இந்த வாக்கியம் கேள்வியாக அமைந்திருக்கிறது. அவ்விதம் ஆன்மா மாறுதல்கள் இல்லாதது என்று அறிந்தவனை, கர்ம வினை அணுகாது என்பதே அதன் கருத்தாகும். கிளைகளும், இலைகளும் இல்லாத ஒரு மொட்டை மரத்தைக் கண்டு ஒருவன் பிசாசு என்று பயப்படுகிருன். அது பிசாசு அல்ல, ஒரு மொட்டை மரமே என்ற உண்மையை உணர்ந்தவனின் உள்ளத்தில் எப்படி பீதி ஏற்படாதோ அது போலவே, அஞ்ஞானம் காரணமாக ஆன்மாவும் உடலும் ஒன்றே என்று எண்ணுதவன் கர்ம வினையைக் கண்டு அஞ்சமாட்டான். அத்தகைய ஒருவனுக்கு சடங்கு எதுவும் தேவையில்லை. அறியாமையில் ஆழ்ந்திருப்பவன்தான் சடங்குகளால். கட்டுண்டு இருப்பான். —சங்கரர்

போலவே, தேகத்தில் உள்ளவனும் (உடலில் உறையும் ஆன்மாவும்) தளர்ந்துபோன உடல்களை விட்டுவிட்டு வேறு புதிய உடல்களை அடைகின்ருன்.

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

நைனம் சிந்தந்தி சஸ்த்ராணி நைனம் தஹதி பாவக:|
ந சைனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத:|| 23

*23.* ஆயுதங்கள் இந்த ஆன்மாவைக் காயப்படுத்தமாட்டா; நெருப்பு இதை எரிக்காது, தண்ணீர் இதை நனைக்காது; காற்று இதை உலர்த்தாது.

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥ २४ ॥

அச்சேத்யோ(அ)ய மதாஹ்யோ(அ)ய மக்லேத்யோ(அ)சோஷ்ய ஏவச|
நித்ய: ஸர்வகத: ஸ்தாணு ரசலோ(அ)யம் ஸனாதன:|| 24

---

22. உடைகளைப் பற்றிய இந்த உவமை சாதாரணமாக வழக்கத்தில் இருந்து வருகிறது. உடலை விட்டு ஆன்மா பிரிவது, மனிதன் ஒரு வீட்டிலிருந்து மற்ருெரு வீட்டை நாடிச் செல்லுவது போலவே ஆகும் என்று மகாபாரதம் சாந்தி பர்வத்தில் (அத்தியாயம்–15, சுலோகம்–60) குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'ஒரு புத்தகத்திற்கு புதிய மேலட்டை போடுவது போல' என்று ஓர் அமெரிக்க எழுத்தாளர் அதே கருத்திற்கு உவமை கூறியுள்ளார். —திலகர்

குடம்பை தனித் தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொ டுயிரிடை நட்பு. —குறள்

இதன் கருத்து: முட்டையிலிருந்து வெளியே பறந்து செல்லும் பறவைக் குஞ்சுக்கும் முட்டையின் ஓட்டிற்கும் எவ்வளவு தொடர்பு உண்டோ, அவ்வளவே தான் ஆன்மாவுக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு.

23. ஆன்மா எவ்விதம் மாறுதலற்றது என்பதை இந்த சுலோகம் விளக்குகிறது. ஆன்மாவுக்கு உருவம் இல்லாததால், அதை ஆயுதங்களால் வெட்டவோ, தீயால் எரித்துச் சாம்பலாக்கவோ, தண்ணீரால் அழுகும்படி செய்யவோ, காற்றினல் உலர்த்தவோ முடியாது. வேதத்தில் உள்ள ஒரு வாக்கியத்தின் கருத்தையே இந்த சுலோகம் விளக்குகிறது. —சங்கரர்

24. வெட்ட முடியாமலும், எரிக்க முடியாமலும், நனைக்க முடியாமலும், உலர்த்த முடியாமலும் இருக்கும் இது, நிரந்தரமானதாகவும், எங்கும் வியாபித்ததாகவும், உறுதியானதாகவும், அசைக்க முடியாததாகவும், என்றும் உளதாகவும் இருக்கிறது.

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

அவ்யக்தோ(அ)ய மசிந்த்யோ(அ)ய மவிகார்யோ(அ)ய முச்யதே|
தஸ்மாதேவம் விதித்வைனம் நானுசோசிது மர்ஹஸி|| 25

25. புலன்களுக்கும் மனத்திற்கும் எட்டாத இந்த ஆன்மா மாறுதலற்றது என்று கூறப்படுகிறது. ஆன்மா அத்தகையது என்பதை அறிந்தபின் நீ துக்கப்படுவது சரியல்ல.

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥ २६ ॥

அத சைனம் நித்ய ஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம்|
ததாபி த்வம் மஹாபாஹோ நைனம் சோசிது மர்ஹஸி|| 26

26. மஹாபாஹு (பராக்கிரமசாலியே), இந்த ஆன்மா எப்போதும் பிறப்பதாயும், எப்போதும் இறப்பதாயும் நீ எண்ணினாலும், அப்போது கூட நீ துக்கப்படுவது சரியல்ல.

---

25. ஆன்மாவைப் பற்றிய உண்மையைப் புரிந்து கொள்வது கஷ்டமாதலால், உலகம் அதைத் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக பகவான் அதை, பல்வேறு வார்த்தைகளால் திரும்பத் திரும்ப விளக்கியிருக்கிறார். அது உருவம் இல்லாதது, புலன்களுக்கு எட்டாதது, மனத்தினால் சிந்திக்க முடியாதது, அதற்கு உருவமோ, அளவோ இல்லாததால் அது மாறுதலற்றது என்றெல்லாம் கூறியிருக்கிறார். —சங்கரர்

26. ஆன்மா அழிவற்றது என்பதை முந்திய சுலோகங்களில் அர்ஜுனனுக்கு தெளிவாக எடுத்துக் காட்டிய பகவான், வாதத்திற்காக மற்றொரு விஷயத்தையும் கூறுகிறார். அதாவது, உடலைப் போலவே ஆன்மாவுக்கு பிறப்பும், வளர்ச்சியும், மரணமும் உண்டு என்றே வைத்துக்கொண்டாலும் கூட அர்ஜுனன் துக்கம் அடைவதற்குக் காரணம் இல்லை என்று கூறுகிறார். ஏனெனில், அவசியம் நிகழ்ந்தே தீரும் என்பதை யாராலும் தவிர்க்க முடியாது அல்லவா? —சங்கரர்

जातस्य हि ध्रुवो मृत्युर् ध्रुवं जन्म मृतस्य च।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருதயுர் த்ருவம் ஜன்ம ம்ருதஸ்யச|
தஸ்மாதபரிஹார்யே(அ)ர்த்தே ந த்வம் சோசிது மர்ஹஸி|| 27

27. பிறந்தவன் இறப்பதும், இறந்தவன் பிறப்பதும் நிச்சயம். ஆகையால், தவிர்க்க முடியாததைக் குறித்து நீ வருந்துவது சரியல்ல.

[இந்த சுலோகம், 'கிங் லியர்' நாடகத்தில்* உள்ள எட்காரின் பின்கண்ட வார்த்தைகளை நினைவூட்டுகிறது.

"இந்த உலகிற்கு வருவதைப் போலவே இந்த உலகை விட்டுப் போவதையும் மனிதர் சகித்துக்கொள்ள வேண்டும்.")

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥

அவ்யக்தாதீனி பூதானி வ்யக்த மத்யானி பாரத|
அவ்யக்த நிதனான்யேவ தத்ர கா பரிதேவனா|| 28

---

27. ஆன்மா நிரந்தரமானதாயினும், அல்லவாயினும், மரணத்தைக் குறித்து துக்கப்படுவதற்கு இடமில்லை. ஆன்மா என்றென்றும் இருப்பது, பிறவாதது, மாறுதல் இல்லாதது, கற்பனைக்கு எட்டாதது, குணங்களைக் கடந்தது என்றெல்லாம் கூறிய பகவான் இப்போது சாங்கிய முறையை அடிப்படையாகக் கொண்டு மற்றொரு விதமாக வாதிக்கிறார். அதாவது, உடல் நிரந்தரமானதல்ல, அழியக்கூடியது; ஆகையால் அழியும் தன்மை வாய்ந்தது, அழிவதைக் குறித்து புலம்பக்கூடாது என்பதேயாகும்.—திலகர்.

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. —குறள்

இதன் கருத்து: மரணம் தூக்கத்தைப் போன்றது. தூக்கத்திற்குப் பின் விழித்துக் கொள்ளும் நிலையைப் போன்றதே பிறப்பு ஆகும்.

* 'கிங் லியர்', ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களில் ஒன்று.

28. இங்கே 'அவ்யக்தம்' என்ற சொல்லுக்கு, புலன்களால் காண முடியாதது என்பதே பொருள். கண்களுக்குப் புலப்படும் உலகம் முழுவதும் கண்களுக்குப் புலப்படாத மூலப்பொருள் ஒன்றிலிருந்தே உருவாகிறது. இறுதியில், அதாவது பிரளய காலத்தில், கண்களுக்குப் புலப்படும் உலகம் முழுவதும் மீண்டும் அந்த மூலப் பொருளுடன் ஐக்கியமாகிவிடுகிறது. எனவே, கண்களுக்குத் தெரியும் எந்த உருவமும் என்றைக்காவது அழிந்தே

28. பாரதா, எல்லா உயிர்களின் நிலையும் பிறப்பதற்கு முன் கண்களுக்குத் தோன்றுவதில்லை. பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே உள்ள மத்திய காலத்தில்தான் அது தோன்றுகிறது. இறந்த பிறகும் அது கண்களுக்குத் தெரிவதில்லை. அப்படியிருக்க, துக்கத்திற்கு இடம் ஏது?

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥ २९ ॥

ஆச்சர்யவத் பச்யதி கச்சிதேனம்
ஆச்சர்யவத் வததி ததைவ சான்ய:|
ஆச்சர்யவச்சைன மன்ய: ச்ருணோதி
ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கச்சித்|| 29

29. ஒருவன் ஓர் அதிசயத்தைக் காண்பதுபோல் இந்த ஆன்மாவைப் பார்க்கிறான். மற்றொருவன் 'இது என்ன அற்புதம்' என்று பேசுகிறான். வேறொருவன் இந்த ஆச்சரியத்தைக் காது கொடுத்துக் கேட்கிறான். அவ்விதம் கேட்டும் கூட இதை எவனும் உண்மையாக அறிந்துகொள்வதில்லை.

[இது கட உபநிடதத்தில் உள்ள சுலோகத்தின்* விளக்கமேயாகும். அந்த சுலோகத்தின் அர்த்தம் இதுதான் :

---

தீரும் என்பது இயற்கை விதியாக இருக்கும் போது, நிச்சயமாக அழியக் கூடிய ஒன்றைக் குறித்து சோகம் அடைவதற்கு இடமேயில்லை. —திலகர்

28. ஆன்மாவைக் குறித்து புலம்புவது அறிவீனம் என்பதைக் காட்டிய பின், உடல்கள் இறப்பதைக் குறித்து துக்கம் அடைவது பலனற்றது என்பதை பகவான் சுட்டிக் காட்டுகிறார். இந்த நண்பர்களும் உறவினர்களும் உடல் ஏற்படுவதற்கு முன் எங்கே இருந்தார்கள்? உடல்கள் அழிந்த பின் எங்கே இருக்கப் போகிறார்கள்? எனவே, அதைக் குறித்து வருந்துவது அர்த்தமற்றது.
—சங்கரர்

மேலே ஸ்ரீ மகாதேவ தேசாய் குறிப்பிட்டிருக்கும் கட உபநிடதத்தில் உள்ள சுலோகம் வருமாறு :

श्रवणायापि बहुभिर्यो न लभ्यः ।
शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः ॥
आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा ।
आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः ॥

कठ. उप. २.७

ச்ரவணாயாபி பஹுபிர்யோ ந லப்ய:|
ச்ருண்வந்தோ(அ)பி பஹவோ யம் ந வித்யு:||
ஆச்சர்யோ வக்தா குசலோ(அ)ஸ்ய லப்தா|
ஆச்சர்யோ க்ஞாதா குசலானுசிஷ்ட:|| கட உபநிடதம்—2.7

"இந்த ஆன்மாவைப்பற்றி பலரும் கேள்விப்பட்டிருக்கக் கூட முடியாது. கேள்விப்பட்டவர்களில் பலர் அதைப்பற்றி அறிந்து கொண்டிருக்க முடியாது. ஆன்மாவைப்பற்றி வர்ணிக்கக் கூடியவர் மிகவும் அபூர்வமாகும். அதைப்பற்றி அறிந்து கொள்வதில் வெற்றி பெற்றவர் மகாமேதாவியாக இருக்க வேண்டும். அத்தகைய ஒருவரால் போதிக்கப்பட்டாலும் கூட அதைப்பற்றி ஒருவர் அறிந்துகொள்வது மிகவும் கடினமாகும்."

கீதையில் உள்ள மேற்கண்ட சுலோகத்தில் வரும் 'ஆச்சரியம்' என்ற சொல் ஆன்மாவையும் குறிக்கும், ஆன்மாவை அறிந்துகொள்ள முயற்சிப்பவனையும் குறிக்கும். கட உபநிடதத்தின் சுலோகத்தை சங்கராச்சாரியார் குறிப்பிடவில்லை யாயினும், அவ்விதம் இரண்டுவிதமான விளக்கங்களும் சாத்தியமே என்பதை அவர் ஒப்புக் கொண்டுள்ளார்.]

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३० ॥

தேஹீ நித்யமவத்யோ(அ)யம் தேஹே ஸர்வஸ்ய பாரத|
தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிது மர்ஹஸி||30

*30.* பாரதா, ஒவ்வொருவருடைய உடலிலும் உள்ள ஆன்மா, என்றும், எத்தகைய துன்பத்துக்கும் அப்பாற்பட்டது. ஆகையால், நீ யாருக்காகவும் துக்கப்பட வேண்டியதில்லை.

---

29. உண்மையான இந்த ஆன்மாவை அறிந்து கொள்வது மிகவும் கடினமாகும். இதை நீ (அர்ஜுனன்) ஒருவன்தான் அறிந்து கொள்ளவில்லை என்று கூறுவதற்கில்லை. பொதுவாக மனித வர்க்கமே இதைப் பற்றி அறிந்து கொள்ளவில்லை. இந்த ஆன்மா ஏதோ விசித்திரமானது என்றும், இதற்கு முன் யாராலும் காணப்படாதது என்றும், கேள்விப்படாதது என்றும் சிலர் ஆச்சரியம் அடைகிறார்கள். சிலர் வியப்புடன் அதைப் பற்றிப் பேசுகிறார்கள். அவ்விதம் பேசுகிறவர்களுக்கு அதைப் பற்றி எதுவுமே தெரியாது. சிலர் ஆச்சரியத்துடன் அதைக் கேட்கிறார்கள். அவ்விதம் கேட்ட பிறகும், பேசிய பிறகும் கூட அவர்கள் அதைப் பற்றி அறிந்து கொள்வதில்லை. அல்லது மேற்கண்ட சுலோகத்திற்கு இப்படியும் அர்த்தம் இருக்கலாம்: ஆன்மாவைக் கண்டவர் அபூர்வமாகவே இருக்க முடியும். அதைப் பற்றிப் பேசுகிறவரும், அதைச் செவி கொடுத்துக் கேட்பவரும் லட்சத்தில் ஒருவர் கூட இருக்க முடியாது. ஆன்மாவின் தன்மையை ஊடுருவிப் பார்ப்பது மிக மிகக் கடினம் என்பதே அந்த சுலோகத்தின் கருத்தாகும். —சங்கரர்

30. ஒருவர் கொன்றாலோ அல்லது கொல்லப்பட்டாலோ, அதைக் குறித்து துக்கம் அடைவதற்குக் காரணம் இல்லை என்பது இதுவரை நிரூபிக்

இதுவரையில் கிருஷ்ணன் முற்றிலும் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டு வாதித்துள்ளார். ஸ்தூல உடல் தோன்றி மறைவது என்பதையும், ஆன்மா என்றென்றும் நிலைத்திருப்பது என்பதையும் நிரூபித்துள்ளார். சிற்சில சந்தர்ப்பங்களில் ஸ்தூல உடலின் அழிவு நியாயமானது என்று கருதப்படுமாயின், கௌரவர்கள் உறவினர் என்பதற்காக அவர்களைக் கொல்லக் கூடாது என்று கற்பனைசெய்து கொள்ளுவது வீண் மதி மயக்கம் ஆகும் என்பதை பகவான் விளக்கிக் காட்டியிருக்கிறார். இப்போது ஒரு க்ஷத்திரியனின் கடமை என்ன என்பதை அவர் அர்ஜுனனுக்கு நினைவூட்டுகிறார்.

---

கப்பட்டுளது. ஏனெனில், தத்துவ ரீதியாக ஆன்மா அழிவற்றது, உடல் எப்போதுமே அழியக் கூடியது. இருந்தாலும் அதற்காக, யார் வேண்டுமாயினும் யாரை வேண்டுமாயினும் கொல்லலாம் என்றும், அதனால் பாவம் இல்லை என்றும் முடிவு செய்வது மாபெரும் தவறாகும். 'இறப்பது', 'கொல்லுவது' என்ற வார்த்தைகளைப் பற்றியே இதுவரையில் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது. மரணத்தையோ அல்லது கொல்லுவதையோ குறித்து ஏற்படும் பயத்தை அகற்ற வேண்டும் என்பதே அந்த விளக்கத்தின் நோக்கமாகும். உடலும் ஆன்மாவும் சேர்ந்தே மனிதன் உருவாகிறான். இவ்விரண்டில் ஆன்மா அழிவற்றது. எனவே, இறப்பது அல்லது கொல்லுவது என்ற சொற்கள் அதற்குப் பொருந்தா. உடல் அழியக் கூடியது. எனவே, உடல் அழிவதைக் குறித்து துக்கப்படுவதற்குக் காரணம் இல்லை. ஒருவர் தற்செயலாக இறந்தாலும் அல்லது கொல்லப்பட்டாலும் அதைக் குறித்து எவரும் துக்கம் அடையக்கூடாது. மகிழ்ச்சி அடையவோ அல்லது வருந்தவோ கூடாது என்ற நிலையை ஒப்புக்கொண்டாலும் கூட, அந்தப் பிரச்னை தீர்ந்துவிடாது. ஒருவர் பயங்கரமான யுத்தத்தில் ஈடுபட்டு மற்றவரின் உடல்களை ஏன் அழிக்க வேண்டும் என்ற கேள்வி எழுகின்றது. உடல் அழியக் கூடியதாயினும், ஆன்மா நற்கதி அடைவதற்கோ அல்லது மோட்சம் அடைவதற்கோ உடல் ஒன்றுதான் சாதனமாக இருக்கிறது. எனவே, தற்கொலையும், பிறரை நியாயமின்றிக் கொல்லுவதும் மகாபாவங்கள் என்று மதம் கருதுகின்றது. ஆகையால், தருமத்தைப் பாதுகாப்பதற்காகப் பிறரைக் கொல்லலாம்; அதருமமாக யாரையும் கொல்லக் கூடாது என்று ஏற்படுகிறது. இந்தத் தத்துவமே கீதையில் விளக்கப்பட்டுள்ளது. யுத்தம் செய்து இறப்பதோ அல்லது கொல்லுவதோ க்ஷத்திரியனின் தருமம் என்று கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறுகிறார்.

—திலகர்

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். —குறள்

இதன் கருத்து: பயிர்கள் வளருவதற்காக உழவன் களைகளைப் பிடுங்கி எறிவதுபோல, கொடியவர்களை ஒழித்துவிட வேண்டியது மன்னனின் கடமையாகும்.

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி|
தர்ம்யாத்தி யுத்தாச் ச்ரேயோ(அ)ன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே|| 31

*31.* மேலும், உன்னுடைய சொந்தக் கடமையைப் பார்க்கும் போதும், அதிலிருந்து பின்வாங்கக் கூடாது. ஏனெனில், ஒரு க்ஷத்திரியனுக்கு தருமமான யுத்தத்தைக் காட்டிலும் சிறந்தது வேறு எதுவும் இல்லை.

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२ ॥

யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்வார மபாவ்ருதம்|
ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம்|| 32

*32.* தேடாமல் வலுவில் வரும் அத்தகைய தரும யுத்தம், சொர்க்கத்தின் வாயில் திறந்திருப்பது போலாகும். பார்த்தா, அதிருஷ்டசாலிகளான க்ஷத்திரியர்களுக்கு மாத்திரமே அத்தகைய வாய்ப்பு கிடைக்கிறது.

---

31. இந்த சுலோகத்தில் கிருஷ்ண பகவான் க்ஷத்திரியனின் தருமத்தை விளக்குகிறார். நீதிக்காகவும் தருமத்திற்காகவும் போராடுவதும், செங்கோல் ஆட்சி புரிவதுமே க்ஷத்திரியனின் தருமம் ஆகும். எனவே, யுத்தத்தில் பகைவர்களைக் கொல்லுவதைப் பாவம் என்று க்ஷத்திரியன் எண்ணுவது தவறு என்பதை பகவான் விளக்கி, அர்ஜுனனின் அறியாமையை அகற்றுகிறார். சுயதருமத்தை அதருமம் என்று கருதக் கூடாது என்றும், கடமையிலிருந்து பின்வாங்கக் கூடாது என்றும் அர்ஜுனனுக்கு வலியுறுத்திக் கூறுகிறார். க்ஷத்திரியன், தரும யுத்தத்தில் ஈடுபட்டுத் தான் தீரவேண்டும் என்பதும், இல்லாவிடில் அவன் மக்களையும் அவர்களுடைய நலன்களையும் பாதுகாக்க முடியாது என்பதுமே இந்த சுலோகத்தின் கருத்தாகும். —சங்கரர்

32. பூஜ்யர்களான மூத்தோர்களையும், நெருங்கிய உறவினர்களையும், நண்பர்களையும் கொல்ல வேண்டியிருக்கும் யுத்தம் தரும யுத்தம் ஆகுமா? இவ்விதம் அர்ஜுனன் நினைக்கக்கூடாது என்பதற்காகவே, யுத்தத்திற்குக் காரணம் அவன் அல்ல என்று பகவான் கூறுகிறார்: "நீ வலுவில் யுத்தத்தைத் தேடிக்கொண்டு செல்லவில்லை. யுத்தம் உன்மீது திணிக்கப்பட்டிருக்கிறது. அது உனக்காக சொர்க்கத்தின் வாயிலைத் திறந்து வைத்திருக்கிறது. உன்னைப்போன்ற க்ஷத்திரியர்களுக்கு அது ஒரு வரப்பிரசாதம் அல்லவா?"

—சங்கரர்

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥

அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி|
தத: ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி|| 33

33. ஆனல், இந்த தரும யுத்தத்தில் ஈடுபட்டு நீ போர் செய்யாவிடில், உன் கடமையை நீ செய்யத் தவறியதுடன், உன்னுடைய கௌரவத்தையும் இழந்து பாவத்திற்கும் ஆளாவாய்.

---

32. அர்ஜுனன் முதலியோர் யுத்தத்தை நாடவில்லை. எனவே, வலுவில் வந்த யுத்தத்தில் பீஷ்மரையும், துரோணரையும் போன்ற வீரர்களை எதிர்த்துப் போராடுவது மிகவும் மகிழ்ச்சியை அளிக்கக்கூடிய விஷயமாகும். ஏனெனில், யுத்தத்தில் வெற்றி பெற்ருல், பெருமையுடன் ராஜ்யமும் கிடைக்கும். தோல்வியடைந்தால் நிச்சயமாக சொர்க்கத்தில் இடம் கிடைக்கும். யக்ஞம் செய்தோ, சூன்யம் வைத்தோ பிறரைக் கொல்லுவதுதான் பாவமேயன்றி, யுத்தத்தில் ஈடுபட்டு பகைவர்களைக் கொல்லுவது பாவம் அல்ல. "யுத்தத்தில் புறமுதுகு காட்டாது தங்களுடைய முழு வல்லமையையும் உபயோகிக்கும் வீரர்கள் நிச்சயமாக சொர்க்கத்தை அடைகிருர்கள்'' என்று மனு ஸ்மிருதி கூறுகிறது. —மதுசூதனர்

33. யுத்தம் செய்வது நியாயமும் தருமமும் ஆகும் என்பதை முன் சுலோகத்தில் எடுத்துக் காட்டியபின், பகவான் மற்ருெரு உண்மையையும் அர்ஜுனனுக்கு எடுத்துக் கூறுகிருர்: ''இந்த தரும நியாயமான காரணத்திற்காக நீ போர் செய்யாவிட்டால், ஒரு க்ஷத்திரியன் செய்ய வேண்டிய கடமையிலிருந்து நீ தவறியவன் ஆவாய். மகாதேவன், மகேந்திரன், அசுரர்கள் முதலியோரை எதிர்த்து யுத்தம் செய்து நீ அடைந்துள்ள மகத்தான கீர்த்தியை இழப்பதுடன், பாவத்தையும் சம்பாதித்துக் கொள்ளுவாய்.''

—சங்கரர்

33. சிவபிரான், இந்திரன் முதலியோருடன் மற்போர் செய்தும், கொடிய அசுரர்களை எதிர்த்து நின்றும் அழியாப் புகழ் பெற்ற அர்ஜுனன், கௌரவர்களின் சவாலை எவ்வாறு ஏற்றுக்கொள்ளாமல் இருக்க முடியும்? அப்படியிருக்க, போர்க்களத்திலிருந்து பின்வாங்கி விடுவதையே தான் விரும்புவதாக அர்ஜுனன் கூறுவது, எவ்வளவு மோசமானது என்பதை பகவான் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். —மதுசூதனர்

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர். —குறள்

இதன் கருத்து: புகழ்கெட்டு வசை மொழிக்கு ஆளாகாமல் வாழ்வோரே வாழ்பவர் ஆவர். பிறர் இழிவாகக் கூறும் விதத்தில் வாழ்வோர் இறந்தவர்களுக்கு ஒப்பாவர்.

अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम्।
संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥

அகீர்த்திம் சாபி பூதானி கதயிஷ்யந்தி தே(அ)வ்யயாம்।
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணததி ரிச்யதே॥ 34

*34.* உனக்கு ஏற்பட்ட அவமானத்தைப் பற்றியே உலக மக்கள் எப்போதும் பேசிக்கொண்டிருப்பர். புகழ் பெற்ற வனுக்கு அவமானமானது மரணத்தையும் காட்டிலும் கொடியது.

भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥

பயாத் ரணா துபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா:।
யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம்।। 35

*35.* பயத்தினாலேயே நீ போர்க்களத்திலிருந்து விலகிச் சென்றுவிட்டாய் என்று மகாரதர்களான வீரர்கள் எண்ணு வார்கள். இதுவரையில் உன்மீது யார் மிகுந்த மதிப்பு வைத் திருந்தார்களோ, அவர்களுடைய மதிப்பை நீ இழந்துவிடுவாய்.

अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः।
निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

அவாச்ய வாதாம்ச்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதா:।
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நு கிம்॥ 36

*36.* உன்னுடைய பகைவர்கள் உன் பராக்கிரமத்தை இகழ்ந்து பேசுவார்கள்; சொல்லத்தகாத பல வார்த்தைகளையும்

---

35. "நீ போர் செய்யாவிட்டால், உனக்கு இன்னும் என்னென்ன நேரும் என்பதைக் கேள். துரியோதனன் முதலிய மற்றும் உள்ள பிரசித்தி பெற்ற வீரர்கள், அவர்கள் மீதுள்ள அன்பினால் நீ போர் செய்யவில்லை என்று நினைக்கமாட்டார்கள். அவர்களுடைய கட்சியில் உள்ள கர்ணனைப் போன்ற தைரியசாலிகளான வீரர்களைக் கண்டு உன் உயிருக்கு பயந்தே நீ போர் செய்யவில்லை என்று எண்ணுவார்கள். உன்னை ஈடு இணையற்ற போர் வீரன் என்று கருதிய துரியோதனனும் மற்றவர்களுமே, உன்னை ஒரு கோழை என்றும், வெறுக்கத்தக்கவன் என்றும் கருதுவார்கள்"— சங்கரர்.

சொல்லுவார்கள். இதைக் காட்டிலும் அதிக வேதனையைக் கொடுப்பது வேறு என்ன இருக்க முடியும்?

**हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।**
**तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥**

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்।
தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருத நிச்சய:॥ 37

*37.* போரில் நீ கொல்லப்பட்டால் சொர்க்கத்தை அடைவாய்; வெற்றி பெற்றாலோ பூமியை ஆட்சி புரிவாய். ஆகையால், கௌந்தேயா, யுத்தம் செய்ய உறுதி கொண்டு எழுந்திரு.

*நிரந்தரமான ஆன்மா அழிவற்றது, ஸ்தூல உடல் தோன்றி மறையும் தன்மை வாய்ந்தது என்ற மகத்தான உண்மையை (சுலோகங்கள் - 11-30) பிரகடனம் செய்த பின், தானாக வலுவில் வரும் யுத்தத்திலிருந்து ஒரு க்ஷத்திரியன் பின்வாங்கக் கூடாது என்பதை அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் நினைவூட்டுகிறார் (சுலோகங்கள் - 31-32). பின்னர் பகவான், மகத்தான உண்மையும், கடமையைச் செய்தலும் எவ்வாறு அர்ஜுனனுடைய நலனுக்கு உகந்ததாக இருக்கின்றன என்பதையும் எடுத்துக் காட்டுகிறார் (சுலோகங்கள் - 33-37). அடுத்தபடியாக அவர், பின் கண்ட சுலோகத்தில் கீதையின் மூலாதாரமான உபதேசத்தை முன்னதாகவே சுட்டிக் காட்டத் தொடங்குகிறார்.*

**सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।**
**ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥**

ஸுக துக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி॥ 38

*38.* சுகம்-துக்கம், லாபம்-நஷ்டம், வெற்றி-தோல்வி ஆகியவற்றை சமமாகக் கருதி நீ யுத்தம் செய்ய முற்படு. அவ்விதம் செய்தால், நீ பாவத்திற்கு ஆளாக மாட்டாய்.

---

37. போரில் ஈடுபட்டுப் பகைவர்களைக் கொல்லுவதால் பாவம் ஏற்படுமா என்ற சந்தேகத்திற்கு இந்த சுலோகத்தில் பகவான் பதில் அளித்திருக்கிறார். இந்த பதில் கர்ம யோக வழியைப் பற்றியதாகும். இந்தச் சித்தாந்தத்திற்கு முன்னுரை இங்கேதான் ஆரம்பமாகிறது.—திலகர்.

38. "அர்ஜுனா, இந்த புத்திமதியைக் கேட்டு, அதன்படி நடந்து கொள். உன்னுடைய சுதருமத்தைக் கைவிடாமல் விருப்பு வெறுப்போ,

**एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।**
**बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥**

**ஏஷா தே(அ)பி ஹிதா ஸாங்க்யே புத்திர் யோகே த்விமாம் ச்ருணு।**
**புத்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி॥ 39**

*39.* இதுவரை நான் உனக்கு ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட நிலையை எடுத்துக் கூறினேன். இப்போது கர்மத்தை அடிப்படையாகக் கொண்ட நிலையைப்பற்றிக் கேள். இந்த நிலையை மேற்கொள்ளுவதால், நீ கர்ம பந்தத்தை ஒழித்து விடுவாய்.

[ஆன்மாவைப்பற்றிய உண்மை இங்கே தெளிவாகக் குறிப்பிடப்பட்டுளது. ஆன்மா அழிவற்றது என்ற ஞானம், மரணத்தைக் குறித்து துக்கம் அடைவது வீண் என்பதை நிரூபித்திருக்கிறது. எல்லாச் செயல்களும், ஞானத்தின் பலனாக தன்னலமற்றவையாகவும் பற்றற்றவையாகவும் இராதவரையில், மனிதனை அடிமைப்படுத்துபவையாகவே இருக்கின்றன. அவை அவனை,

---

துவேஷமோ எதுவுமின்றி யுத்தம் செய். உனது கடமையை அசட்டை செய்வதால் ஏற்படும் பாவத்திற்கு ஆளாகாதே.''—சங்கரர்.

38. இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதவேண்டும் என்றும், தரும யுத்தத்தில் ஈடுபடவேண்டியது க்ஷத்திரியர்களின் கடமை என்றும் பகவான் அர்ஜுனனுக்குக் கூறியபின், விருப்பு வெறுப்பின்றி போர் செய்வதால் பாவம் ஏற்படாது என்றும் கூறுகிறார். ஒவ்வொருவரும் உலகாயதமான வாழ்க்கையை விட்டுவிட்டு, சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ளுவதே மகோன்னதமான கடமை என்பதே சாங்கிய தத்துவமாகும். எனவே, அர்ஜுனன் அப்போது யுத்தத்தைக் கைவிட்டுவிட்டு ஏன் சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ளக்கூடாது? க்ஷத்திரியர்களுக்கான கடமையை அவன் ஏன் பின்பற்றவேண்டும்? இவைபோன்ற கேள்விகளுக்கு பின்வரும் சுலோகத்தில் பகவான் பதில் அளிக்கிறார்.—திலகர்.

39. பகவத்கீதையின் சாரத்தை அறிந்துகொள்ளுவதற்கு இந்த சுலோகம் முக்கியமானது. இங்கே சாங்கியம் என்பதற்கு வேதாந்தம் என்றும், யோகம் என்பதற்கு கர்மயோகம் என்றுமே பொருளாகும். அந்த இரண்டு வழிகளும் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாதவை. எனினும், கீதையில் பகவான் கர்ம யோகத்தையே அதிகமாக வற்புறுத்தியுள்ளார். சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ளாமலும், பற்றுதலின்றியும், விருப்பு வெறுப்பின்றியும் ஆயுள் முழுவதும் செயல் புரிவதிலேயே உண்மையான ஆண்மை அடங்கியிருக்கிறது என்பது கர்ம யோகத்தின் தத்துவமாகும். இதிலிருந்து கீதையின் இறுதி அத்தியாயம் வரையில், செயல் மார்க்கமே வற்புறுத்தப்பட்டிருக்கிறது. எனவே, கர்மயோகத்தையே கீதை ஆதரிக்கிறது என்பதில் சிறிதும் சந்தேகம் இருப்பதற்கு இடம் இல்லை. —திலகர்.

பிறப்பிலிருந்து இறப்பிற்கும் இறப்பிலிருந்து பிறப்பிற்கும் இழுத்துச் செல்லுபவையாக இருக்கின்றன. இப்போது அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் ஆலோசனை கூறியிருக்கிறார். அவனைக் கட்டுப்படுத்தும் அந்த நடவடிக்கையிலிருந்து அவன் எப்படி விடுதலை பெறுவது? எனவே, கட்டுப்படுத்தாத செயலுக்கும் விடுதலை அளிக்கும் ஞானத்திற்கும் திறவுகோல் எது என்பது இப்போது அர்ஜுனனுக்குக் கூறப்படுகிறது. அந்தத் திறவுகோல்தான் யோகம் ஆகும். யோகம் என்பது, பற்றற்ற அல்லது தன்னலமற்ற செயலே.]

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।

स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

நேஹாபிக்ரம நாசோ(அ)ஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே।

ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்|| 40

*40.* இவ்விஷயமாக மேற்கொள்ளப்பட்ட முயற்சி எதுவும் வீணாவதில்லை. அதை மேற்கொள்ளுவதால் ஆபத்து எதுவும் நேருவதில்லை. அந்த தரும முறையை ஒருவன் சிறிதளவு கைக்கொண்டாலும், அது அவனைப் பெரும் பயத்திலிருந்து விடுதலை செய்கிறது.

[இங்கே "பெரும் பயம்" என்பது, பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக் கொள்ளுவதையே குறிப்பிடுவதாக இருக்கலாம்.]

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।

बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

வ்யவஸாயாத்மிகா புத்திர் ஏகேஹ குருநந்தன|

பஹுசாகா ஹ்யனந்தாச்ச புத்தயோ (அ)வ்யவஸாயினாம்|| 41

*41.* குருநந்தனா, இவ்விஷயத்தில் உறுதியான தீர்மானத்திலிருந்து எழும் நிலை ஒன்றேயாகும். ஆனால், உறுதியான தீர்மானம் இராதவர்களின் நிலைகள் பல கிளைகள் உள்ளனவாகவும், முடிவற்றவையாகவும் இருக்கும்.

---

40. ஒருவர் கர்ம யோகத்தில் பூரண பக்குவம் அடையாவிட்டாலும், அதன் சம்பந்தமான அற்ப முயற்சியும் வீணாவதில்லை என்பதையே இந்த சுலோகம் காட்டுகிறது. ஒவ்வொரு ஜன்மத்திலும் செய்யும் சிறிதளவு கர்ம யோகம்கூட ஒருங்கே சேர்ந்து, இறுதியில் உலக பந்தங்களிலிருந்து மனிதனுக்கு விடுதலை அளிக்கின்றது.—திலகர்.

ஒருவனுடைய மன நிலை உறுதியற்றும், பல்வேறுவிதமாகவும் இருக்குமாயின், அது நிலையான விருப்பமின்றி பல்வேறு அபிலாஷைகளாகவோ அல்லது ஆசைகளாகவோ சிதறி விடுகின்றது. அந்த ஆசைகளுக்கிடையே மனிதன் நிலைகொள்ளாமல் அவதிப்படுகிறான்.

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபச்சித:|
வேதவாதரதா: பார்த்த நான்யதஸ்தீதி வாதின:|| 42

कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥

காமாத்மான: ஸ்வர்க்கபரா ஜன்மகர்ம பலப்ரதாம்|
க்ரியாவிசேஷ பஹுளாம் போகைச்வர்யகதிம் ப்ரதி|| 43

भोगैश्वर्यप्रसक्तानां तयाऽपहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४ ॥

போகைச்வர்ய ப்ரஸக்தானாம் தயா(அ)பஹ்ருத சேதஸாம்|
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே|| 44

*42-44.* அறியாமையில் ஆழ்ந்திருப்பவர்கள் வேதங்களின் மேலெழுந்தவாரியான அர்த்தத்தில் ஆனந்தம்கொண்டு, அதைத்

---

41. மனிதனின் பகுத்தறிவு உறுதியின்றியும் நிலையற்றும் இருக்குமாயின், மனம் இடைவிடாமல் பல்வேறு ஆசைகளுக்கும் இலக்காகிவிடும். எனவே, அவன் அவற்றை நாடிச் சென்றவண்ணம் இருப்பான். அதன் விளைவாக, அவன் தனக்கு ஒரு மகன் பிறக்க வேண்டும் என்பதற்காக இன்று ஒன்றைச் செய்வான்; தான் சொர்க்கத்தை அடைய வேண்டும் என்பதற்காக நாளைக்கு மற்றொன்றைச் செய்வான். இவ்விதமே அவனது ஆசைகள் எல்லையின்றிப் போய்க்கொண்டே இருக்கும்.—திலகர்.

42-44. சிந்தனையற்ற அறிவிலிகள், கர்ம காண்டத்தில் உள்ள இனிமையான வார்த்தைகளால் மயங்கிவிடுகிறார்கள். எனவே செல்வத்தையும் சொர்க்கத்தையும் தவிர உயர்ந்தது வேறு எதுவும் இல்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்கள் பல்வேறு ஆசைகளுக்கும் இலக்காகி,

தவிர வேறு ஒன்றுமே இல்லை என்று சாதிக்கின்றனர். சிற்றின்பங்களில் நாட்டம்கொண்ட அவர்கள், சொர்க்கம் ஒன்றையே தங்களுடைய லட்சியமாகக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய செயல்களின் பலனாக பிறப்பைக் கொடுக்கும் மந்திரங்களையே அவர்கள் இறுமாப்புடன் கோஷம் செய்கிறார்கள். அவையெல்லாம் போகத்திற்காகவும் அதிகாரத்திற்காகவும் செய்யப்படும் பல்வேறு சடங்குகளையே குறிக்கின்றன. அவற்றினால் அவர்களுடைய புத்தி மழுங்கிவிடுகின்றது. எனவே, மகோன்னதமான லட்சியத்தில் நிலை நிற்கக்கூடிய உறுதி அவர்களிடம் இராமற் போய்விடுகிறது.

வேதச் சடங்குகளைப்பற்றியே மேற்கண்ட சுலோகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அந்தச் சடங்குகள், கீதையில் குறிப்பிடப்பட்டுள்ள யோக சித்தாந்தத்திற்கு நேர்மாறானவை. புண்ணியத்தையும் சொர்க்கத்தையும் அடைவதற்காக வேதங்களில் எண்ணிக்கையற்ற அனுஷ்டானங்களும் சடங்குகளும் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கும் வேதங்களின் சாரத்திற்கும் சம்பந்தம் இல்லை. வேத சாரத்திலிருந்து வேறுபட்ட அந்தச் சடங்குகளினால் கிடைக்கும் பலன்கள் நீர்க்குமிழி போன்றவை.

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५ ॥

த்ரைகுண்ய விஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன|
நிர்த்வந்த்வோ நித்ய ஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவான்|| 45

45. வேதங்களில் மூன்று குணங்களுக்கு இடம் உள்ளன. அர்ஜுனா, அவற்றைத் தவிர்த்துவிடு. (இன்பம் துன்பம் போன்ற)

---

பலவிதமான சடங்குகளைச் செய்து சொர்க்கத்தை அடைகிறார்கள். பிறகு மறுபடியும் பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக் கொள்கிறார்கள். போகங்களில் ஆசை கொண்ட அவர்களின் மனம் ஆன்மிக விஷயங்களில் ஈடுபடுவதில்லை.

— சங்கரர்

மேற்கண்ட மூன்று சுலோகங்களும், ஞானமின்றி சடங்குகளைச் செய்யும் மூடர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அவர்கள் இன்று ஒரு நோக்கம் நிறைவேறுவதற்காகவும், நாளை ஒரு நோக்கம் நிறைவேறுவதற்காகவும் யாகங்கள் அல்லது யக்ஞங்கள் செய்கின்றனர். இதே கருத்தையே கட, முண்டக, ஈசாவாஸ்ய உபநிடதங்களும் வெளியிட்டுள்ளன. ஈசுவரனைப் பற்றிய ஞானத்தைப் பெறாமல் சடங்குகள் செய்வோர், பல தடவை சொர்க்கத்தை அடைந்தாலும் கூட, இறுதியான மோட்சத்தை அவர்கள் அடைவதே இல்லை. — திலகர்.

இருமைகளிலிருந்து உன்னை நீ விடுவித்துக் கொள். நிரந்தரமான உண்மைப் பொருளில் நிலைபெற்றிரு. ஒரு பொருளை அடைய வேண்டும் அல்லது அவற்றைக் காக்க வேண்டும் என்பதை நீ வெறுத்துவிடு. உன் ஆன்மாவுக்கு நீ எஜமானனாக இரு.

[குணங்களைப்பற்றி எனது 'சமர்ப்பண'த்தில் குறிப்பிட்டிருக்கிறேன். உலகமும் உலகத்தின் ஆசைகளுமே குணங்களுக்கு இருப்பிடமாகும். இந்தக் குணங்கள்தான், ஆன்மாவை உடலுடன் பிணைக்கின்றன (அத்தியாயம்-14, சுலோகம்-5). "உலகத்தின் அழுக்காறுகளால் கறைபடாமல் இருப்பதே தூய்மையான மதமாகும்".(ஜேம்ஸ்-1-27)* "உலகத்தில் உங்களுக்கு கஷ்டங்கள் உண்டு." (ஜான்-16-33)* ஆனால் உலகத்தை ஜெயிக்க வேண்டும்.

'நித்யஸத்வஸ்த: பவ' (नित्य सत्त्वस्थ: भव) என்பதை, "நிரந்தரமான உண்மைப் பொருளில் நிலைபெற்றிரு" என்று காந்திஜி மொழி பெயர்த்திருக்கிறார். அதாவது, உலகாயதமான சாதனங்களை நாடும்படி வேதங்கள் மனிதனுக்குக் கட்டளையிடுகின்றன. எனவே, வேதங்களைத் தவிர்க்கும்படியும், அதன் சாரத்தை கிரகித்துக்கொள்ளும்படியும் கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். மனிதன் தன்னைத்தானே அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும் என்பதே வேதங்களின் சாரமான தத்துவமாகும்.

---

45. "பகுத்தறிவும், உயர்ந்த விவேகமும் இராதவர்களும், பல்வேறு ஆசைகளிலும் மனத்தைச் செலுத்தியவர்களும் வேதங்களில் உள்ள கர்ம காண்டத்திலேயே லயித்துவிடுகிறார்கள். உலக போகங்களை அடைவதற்கான வழியையே கர்ம காண்டம் காட்டுகிறது. ஆனால், அர்ஜுனா, நீ மூன்று குணங்களையும் கடந்தவனாக இரு. ஆசைகளையெல்லாம் அடியோடு விட்டுவிடு. உன்னிடம் இராதவற்றை அடைய வேண்டும் என்ற ஆசையையும், இருப்பதைப் பாதுகாக்கவேண்டும் என்ற கவலையையும் உன் மனத்திலிருந்து முற்றிலும் அகற்றிவிடு. ஆன்மாவைப் பற்றியே சிந்தித்தவண்ணமாக இரு. இதுதான் உனதுகடமை.உன்னுடைய தருமத்தை அனுசரித்து நடந்துகொள்."—சங்கரர்

45. "உலக போகங்களை அடைவதற்கே வேதச்சடங்குகள் ஏற்பட்டிருக்கின்றன. சிலர், ஒரு புதல்வனை அடைய வேண்டும் என்பதற்காக யாகங்களைச் செய்கின்றனர். மற்றும் சிலர், மழை பெய்யவேண்டும் என்பதற்காக யாகங்களைச் செய்கின்றனர். இந்த உலக வாழ்க்கைக்கு, மக்கள் க்ஷேமமாக இருப்பதற்கு இந்தச் சடங்குகளெல்லாம் அவசியமானவையே. எனினும், இந்த உலக பந்தங்களிலிருந்து விடுதலையை விரும்புவோருக்கு, அதாவது மோட்சத்தை நாடுவோருக்கு சடங்குகளெல்லாம் அவசியமல்ல. அவர்கள் அச்சடங்குகளைக் கடந்தவர்களாக இருக்கவேண்டும். சடங்குகளுக்கு மூல காரணமாக இருப்பவை, சாத்விக, ராஜஸ, தாமஸ குணங்களேயாகும். மோட்சத்தை நாடுவோர் குணங்களைக் கடந்து பரபிரம்மத்தினிடம் தங்களுடைய மனம் லயிக்கச் செய்யவேண்டும்."—திலகர்

* 45-வது சுலோகத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தில் காணப்படும் வாக்கியங்கள் பைபிளில் உள்ளவை.

24

"சத்துவ குணத்தில் உறுதியாக நிலைத்திரு" என்றும் மேற்கண்ட சமஸ்கிருத வார்த்தைகளை மொழி பெயர்க்கலாம். எனினும், இவ்விஷயமாக முரண்பாடு எதுவும் எழுவதற்கில்லை. அதே சுலோகத்தில், மூன்று குணங்களையும் தவிர்க்கவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. *14*-ஆவது அத்தியாயத்தில் *19*-லிருந்து *27* சுலோகங்கள் வரையிலும் கூட, மூன்று குணங்களையும் கடந்த நிலை விளக்கப்பட்டிருக்கிறது. சத்துவ குணத்தில் உறுதியுடன் நிலைத்திருப்பவனே, பிறப்பு, மூப்பு, இறப்பு ஆகிய மூன்று விதமான அடிமைத்தனத்தையும் கடந்தவனாக இருக்கிறான்.]

**यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।**
**तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥**

யாவானர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே।
தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராம்மணஸ்ய விஜானத:॥ 46

*46.* நாலா புறங்களிலும் தண்ணீர் வெள்ளமாகச் சூழ்ந்திருக்கும்போது, கிணறு எந்த அளவுக்கு பயன்தரத்தக்கதாக இருக்குமோ, அதே அளவுக்குத்தான் ஞானமுள்ள பிராம்மணனுக்கு வேதங்கள் பலன்தரத்தக்கவையாக இருக்கின்றன.

[இங்கே 'பிராம்மணன்' என்ற சொல் இலக்கணத்திற்கு இணங்க உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அதாவது பிரம்மத்தை அறிந்தவனே அல்லது தன்னைத் தான் அறிந்துகொண்டவனே பிராம்மணன் என்று அர்த்தம்.

இந்த சுலோகம், பகவத்கீதையின் வியாக்கியான கர்த்தாக்களுக்கு வாக்குவாதத்திற்கான பெரும் போர்க்களமாயிருக்கிறது. நாலா புறங்களிலும் தண்ணீர் வெள்ளமாக இருக்கும்போது ஒரு கிணற்றினால் யாதொரு பலனும் இல்லை; அதுபோலவே ஞானத்தை அடைந்தவனுக்கு வேதச் சடங்குகளால் பலனில்லை என்று சிலர் கூறுகின்றனர். நாலா புறங்களிலும் வெள்ளம் சூழ்ந்திருந்தாலும் ஓரளவுக்கு உட்பட்டு கிணற்றினாலும் பலன்கள் உண்டு; அதுபோலவே வேதச் சடங்குகளினாலும் சில பலன்கள் உண்டு என்று மற்றும் சிலர் கருதுகின்றனர். ஆதி சங்கராச்சாரியாரும், இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள கருத்தையே வெளியிட்டிருக்கிறார். திலகரோவெனில், இரண்டு சுலோகங்களை உவமையாகக் கூறி மேற்கண்ட சுலோகத்திற்கு திட்டவட்டமாகப் பொருள் கொடுத்துள்ளார். முதலாவதாக, மகாபாரதம் சாந்தி பர்வத்தில் உள்ள சுலோகத்தை எடுத்துக் காட்டி யிருக்கிறார். அந்த சுலோகத்தின் அர்த்தம் பின்வருமாறு:

யாருக்கு அருகில் "நதி இருக்கிறதோ அவர்கள் கிணற்றை ஏறெடுத்தும் பார்க்கமாட்டார்கள். அதுபோலவே, ஞானிகள் சடங்குகளைப் பெரிதாக மதிப்பதில்லை." (1)

திலகர் எடுத்துக் காட்டியுள்ள இரண்டாவது சுலோகம் ஒரு பௌத்த நூலில் உள்ளது. அதன் பொருள் பின்வருமாறு: "எல்லா இடங்களிலும் தண்ணீர் கிடைக்கும்போது கிணற்றுக்கு அவசியம் ஏது?" (2)

*18*-ஆவது அத்தியாயம், *66*-ஆம் சுலோகத்திற்கு சங்கராச்சாரியார் எழுதியுள்ள வியாக்கியானத்திலும் அதே உவமையை உபயோகித்துள்ளார்: "அருகில் தண்ணீர் எங்கும் வெள்ளமாகப் பரவியிருக்கும்போது, கிணறுகளையும், குளங்களையும் நிர்மாணிப்பது பற்றி யாருமே ஒருபோதும் சிந்திக்க மாட்டார்கள்."

மேலே உள்ள சுலோகத்தில் 'வேதங்கள்' என்ற சொல்லுக்கு வேதச் சடங்குகள் என்ற அர்த்தத்தை ஒப்புக்கொண்டுவிட்டால், அந்த வினாடியே வாக்குவாதத்திற்கு இடம் இராமற்போய்விடும்.]

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥**

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன|
மா கர்ம பல ஹேதுர்ப்பூர் மா தே ஸங்கோ(அ)ஸ்த்வ கர்மணி|| 47

*47*. செயல் புரிவதற்கு மாத்திரமே உனக்கு உரிமை உண்டு; அதனுல் ஏற்படும் பலன்களில் உனக்கு எக்காலத்திலும் உரிமை இல்லை. எனவே, செயலின் மூலம் பலனை அடையவேண்டும் என்ற நோக்கம் உனக்கு இருக்கக்கூடாது. செயல் புரிவதைத் தவிர்க்கும் ஆசையும் உனக்கு ஏற்படக் கூடாது.

[ஒரு கிறிஸ்தவ விமர்சகர் கூறுவதைப்போல், செயல் எவ்வித நோக்கமும் இராததாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை; நிச்சயமாக அது எவ்வித நோக்கமும் இராததும் அல்ல. மனிதன் முன் உள்ள மகோன்னதமான நோக்கம் தன்னைத் தானே அறிந்து கொள்ளுதல் அல்லது மோட்சம். அதை இறுதி

---

(1) न ते (ज्ञानिनः) कर्म प्रशंसन्ति कूपं नद्यां पिबन्निव ॥
—शान्ति पर्व-२४०-१०

(2) किं कयिरा उदपानेन आपा चे सब्बदा सियुम् ।
—पालीग्रन्थ उदान ७.९

லட்சியமாகக் கொண்டே செயலின் பலனையெல்லாம் துறந்து விட வேண்டும். இதே கொள்கை டால்ஸ்டாயின் 'நான் நம்புவது என்ன?' என்ற நூலில் பின்வருமாறு அழகாகவும் வேறுவிதமாகவும் விளக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம்: ''வேலைக்கு ஊதியம் கிடைக்க வேண்டும் என்ற நம்பிக்கை, ஏதோ ஒன்றைப் பெற நமக்கு உரிமை உண்டு என்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஆனால், மனிதனுக்கு எவ்வித உரிமைகளும் இல்லை, எவ்வித உரிமைகளும் இருக்கவும் முடியாது. மனிதனுக்கு அளிக்கப்படும் நலனுக்காக அவன் எப்போதுமே கடன்பட்டவனாக இருக்கிறான். எனவே, அவன் யாரிடத்திலிருந்தும் எவ்வித உரிமைகளும் கோருவதற்கில்லை. இதுதான், மனிதன் தொண்டு செய்வதற்கும், அவனது வாழ்க்கையின் உண்மையான நலனுக்கும் அவசியமான ஒரு நிபந்தனையாகும்.''

மனிதனுக்கு பலனில் கண் இல்லை என்பதற்காக, அவன் யாதொரு பலனையும் அடையமாட்டான் என்று அர்த்தமில்லை. அதற்கு மாறாக, பலனில் உள்ள ஆசையை அவன் துறப்பதால், இறுதியான பலன் அவனுக்குக் கிடைக்கும் என்பது முற்றிலும் நிச்சயமாகிறது. 5-ஆவது அத்தியாயம், 4-ஆவது சுலோகத்தில் யோகத்தின் பலனைப்பற்றி கீதையின் ஆசிரியர் குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கவும்.

இதே சிந்தனைப் போக்கை குரானிலும் அடிக்கடி காண்கிறோம்: ''ஒருவர் நன்மையைச் செய்யும்போது, அதற்கான நோக்கத்தை அவர் அல்லாவிடம் அர்ப்பணம் செய்து விடுவாராயின், அவர் உண்மையில் அல்லாவின் கையை இறுகப்பற்றிக்கொண்டவராவார். எல்லாவற்றின் பலனும் அல்லாவைச் சேர்ந்தவை'' (*31.32*). ''என்னுடைய ஊதியம் அல்லா ஒருவருடைய பொறுப்பேயாகும்'' (*10.72*). ''நம்பிக்கையுள்ள ஓர் ஆடவர் அல்லது நம்பிக்கையுள்ள ஒரு பெண் விஷயமாக அல்லா ஏதாவது தீர்மானம் செய்துவிட்டால், அவ்விஷயமாகத் தாங்கள் ஏதாவது சொல்ல வேண்டும் என்று உரிமை கோருவது அவர்களுக்கு ஏற்றதல்ல'' (*33.36*).

மற்றொரு சந்தர்ப்பத்தில் காந்திஜி இந்த சுலோகத்தைப் பின்வருமாறு விளக்கிக் கூறினார்:

''நம்முடைய செயல்களுக்கு, சுயநல நோக்கம் காரணமாக இருக்கக் கூடாது. செயல்களின் பலன்களில் பற்றற்றிருக்க வேண்டும் எனில், அந்தப் பலன்களை அறிந்திருக்கக் கூடாது என்பதோ, அவற்றை அலட்சியம் செய்ய வேண்டும் என்பதோ, அல்லது அவற்றை மறுத்துவிட வேண்டும் என்பதோ அர்த்தமல்ல. பற்றற்றிருத்தல் என்பதற்கு, நாம் கருதும் பலன் கிடைக்காது என்பதற்காக ஒருபோதும் செயலைத் துறக்கவேண்டும் என்ற அர்த்தம் இல்லை. அதற்கு மாறாக, நாம் உத்தேசித்த பலன்

காலக்கிரமத்தில் நிச்சயமாக ஏற்பட்டே தீரும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கைக்கு அது ருஜுவாகும்.]

योगस्थः कुरु कर्माणि संगं त्यक्त्वा धनंजय।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्त्वं योग उच्यते ॥ ४८ ॥

யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்சய!
ஸித்யஸித்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே!! 48

*48.* தனஞ்சயா, பற்றின்றியும், யோகத்தில் உறுதியுடனும், வெற்றி தோல்விகளை சமமாகக் கருதியும் செயல் புரிவாயாக. யோகம் என்பது அத்தகைய சமத்துவ மன நிலையே.

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनंजय।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய!
புத்தௌ சரணமன்விச்ச க்ருபணா: பலஹேதவ:!! 49

*49.* தனஞ்சயா, செயல், பற்றற்ற செயலைக் காட்டிலும் எவ்வளவோ தாழ்மையானது. ஆகையால், பற்றற்ற நிலையையே தஞ்சமாகக் கொள். பலனை தங்களுடைய நோக்கமாகக்கொண்டிருப்பவர்களின் நிலை பரிதாபகரமானது.

---

48. "ஒரு பலனும் இல்லையெனில், ஒருவன் எந்த வேலையையும் எத்தகைய நோக்கத்துடன் செய்ய வேண்டும்? அத்தகைய வேலை ஒருவனுடைய கடமையாக எப்படி இருக்க முடியும்?" இந்தக் கேள்விகளுக்கு பகவான் பதில் அளிக்கிறார். யாதொரு நோக்கமுமின்றி இறைவனுக்காக மாத்திரமே வேலை செய்யும்படி பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். இதிலிருந்து, பகவானைத் திருப்தி செய்ய ஒருவன் ஆசைப்படவேண்டும் என்று அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது. அவனது செயலின் பலனாக மனத்தூய்மை ஏற்படுமா, உயர்ந்த ஞானம் ஏற்படுமா அல்லது அதற்கு மாறான பலன் ஏற்படுமா என்றெல்லாம் கவலைப்படக்கூடாது. வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கருதி செயல் புரியவேண்டும். எத்தகைய சந்தர்ப்பத்திலும் மன அமைதிக்கோ, எல்லாவற்றையும் சமமாகக் கருதும் நிதான புத்திக்கோ அணுவளவும் இழுக்கு ஏற்படக்கூடாது. — சங்கரர்

49. வெற்றி தோல்வியைப் பொருட்படுத்தாமல் நமது வேலைகளை இறைவனுக்கே அர்ப்பணம் என்று செய்யவேண்டும். வேறு நோக்கத்துடன் செயல்கள் புரிவது இழிவானது. சுயநலத்துடன் செயல்கள் புரிவது மறுபிறப்புக்குக் காரணமாகின்றது. எனவே, அந்த ஆபத்தை நீ கடந்து செல்ல விரும்பினல், யோக புத்தியுடன் செயல்களில் ஈடுபடவேண்டும். — சங்கரர்

[இங்கே, செயல் என்பது சுயநல நோக்கத்துடன் கூடிய பலனில் கண்ணோட்டம் உள்ள செயலையே குறிக்கிறது. அத்தகைய "பரிதாபகரமான" மக்களை மனத்திற்கொண்டே ஸ்பினோஸா பின்வருமாறு கூறியுள்ளார்: "நேர்மையான நடத்தைக்கு வெகுமதியை எதிர்பார்ப்பவர்கள், அந்த நடத்தையின் உண்மையான மதிப்பைச் சிறிதும் அறிந்தவர்கள் அல்ல. நேர்மையான நடத்தையும் கடவுளுக்குத் தொண்டு செய்வதுமே ஆனந்தம் என்பதையும், மகத்தான சுதந்திர உரிமை என்பதையும் அவர்கள் உணர்ந்தவர்கள் அல்ல."]

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே।
தஸ்மாத் யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம்!! 50

*50. இந்த உலகில் பற்றற்ற நிலையை அடையும் அருள் பெற்ற மனிதன், நற்செய்கைகள், தீய செய்கைகள் இரண்டின் பலன்களிலிருந்தும் தப்பித்துக் கொள்ளுகிறான். ஆகையால், நீ யோகத்திற்கு ஆயத்தம் செய்துகொள். திறமையுடன் செயல் புரிவதே யோகம் ஆகும்.*

---

49. இந்த சுலோகத்தில் உள்ள 'புத்தி' என்ற சொல்லுக்கு சமபுத்தி என்று பொருள் கொள்ளவேண்டும். ஒரு செயலின் பெருமையோ அல்லது சிறுமையோ அச்செயலைப் பொறுத்ததல்ல: அதைச் செய்பவரின் நோக்கத்தையே பொறுத்தது. எனவே, புத்தி செயலைக் காட்டிலும் மேலானது. புத்தி உறுதியாகவும், புனிதத் தன்மை வாய்ந்ததாகவும், சமநோக்குடனும், களங்கமற்றும் இருக்கவேண்டும். இதுதான் யோக புத்தி என்று கூறப்படுகிறது. — திலகர்.

50. இந்த உலகில் சமத்துவ புத்தியுடையவனை, புண்ணியமோ அல்லது பாவமோ தீண்டுவதில்லை. ஆகையால் யோகத்தையே பாதுகாப்பாகக் கொள். புண்ணியத்தையோ, பாவத்தையோ தேடிக்கொள்ளாமல் திறம்பட செயல் புரிவதே யோகமாகும், அதாவது கர்மயோகமாகும் என்று கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். இவ்வித சமத்துவ நோக்கத்துடன் செயல் புரிபவன், உலகாயதமான நடவடிக்கைகளை விட்டுவிட வேண்டியதில்லை. அதே சமயத்தில் அவன் மோட்சத்தையும் அடையாமல் இருக்க முடியாது. — திலகர்

50. சமபுத்தியுடன் உன்னுடைய சுயதருமத்தைச் செய்வதால் உனக்கு என்ன நன்மை என்பதைக் கேள். இந்த உலகில் எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவன் புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் அப்பாற்பட்டவனாகிறான். அவனது மனத்தூய்மை காரணமாக, அவனுக்கு இறுதியான ஞானமும் ஏற்படுகிறது. எனவே, இதுவே உன்னுடைய கொள்கையாக இருக்க வேண்டும்.

**कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।**
**जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥ ५१ ॥**

கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மனீஷிண:।
ஜன்ம பந்த வினிர்முக்தா: பதம் கச்சந்த்யனுமயம்॥ 51

*51.* பற்றற்ற நிலையை அடையும் அருள் பெற்ற ஞானிகள், செயலின் பலனைத் துறப்பதன் மூலம் பிறவியாகிற பந்தத்திலிருந்து விடுதலை பெற்று, எல்லாத் துன்பங்களையும் கடந்த நிலையை எய்துகின்றனர்.

**यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।**
**तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२ ॥**

யதா தே மோஹகலிலம் புத்திர் வ்யதி தரிஷ்யதி।
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச॥ 52

**श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।**
**समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३ ॥**

ச்ருதி விப்ரதிபன்ன தே யதா ஸ்தாஸ்யதி நிச்சலா।
ஸமாதாவசலா புத்திஸ்ததா யோக மவாப்ஸ்யஸி॥ 53

*52.* உன்னுடைய புத்தி மாயையாகிய சேற்றைக் கடந்து செல்லும்போது, நீ இதுவரை கேட்டிருப்பதையும், இனி கேட்கப் போவதையும் பொருட்படுத்தமாட்டாய்.

---

சுயதருமமாக உள்ள கர்மங்களைச் செய்ய வேண்டும். அதேசமயத்தில் அவற்றில் பற்றுதல் இருக்கக்கூடாது. அந்தக் கருமங்களைச் செய்யும்போது மனம் பகவானிடமே உறுதியாக நிற்கவேண்டும். வெற்றி தோல்வியைக் கருதாமலும், எல்லாம் சமம் என்ற புத்தியுடனும் இறைவனை நினைத்தவண்ணம் செயல்கள் புரிவதுதான் யோகம் ஆகும்.—சங்கரர்

51. தேவர்களாக இருந்தாலும், மிருகங்களாக இருந்தாலும் உடல்களின் அடிமைத்தனத்திற்கு செயல்களின் பலன்களே காரணமாகும். அந்தப் பலன்களைத் தவிர்த்து சமத்துவ புத்தியுடன் செயல்கள் புரிபவன், இறுதியான ஞானத்தை அடைந்து, விஷ்ணுவின் நிலையை எய்துகிறான். அதன் பலனாக, இந்த ஜன்மத்திலேயே அவன் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டவனாக இருக்கிறான். அந்த நிலை அவனது மோட்சத்திற்கும் காரணமாக இருக்கிறது. — சங்கரர்

53. கேள்வி ஞானத்தினுல் கலக்கமுற்றிருக்கும் உன்னுடைய அறிவு சமாதியில் உறுதியுடனும் அசையாமலும் எப்போது நிலைபெறுமோ, அப்போது நீ யோக நிலையை அடைவாய்.

[52-53. மேற்கண்ட சுலோகங்களில் 'ச்ரோதவ்ய', 'ச்ருத', 'ச்ருதி' (கேட்கப்பட வேண்டியது, கேட்கப்பட்டது, கேட்கப்படுவது) ஆகிய மூன்று சொற்களும் வேதங்களைக் குறிப்பிடுகின்றன என்று சில வியாக்கியான கர்த்தாக்கள் கூறியுள்ளனர். அவ்விதம் குறிப்பிடுவதாக நினைப்பதற்கு இடமில்லை எனலாம். 'கேட்கப்பட்டது', கேட்கப்படுவது' என்பவை, யுத்தம் ஆரம்பமாவதற்கு முன் திருதராஷ்டிர மன்னன் அர்ஜுனனுக்கு திரும்பத் திரும்ப அனுப்பிய செய்திகளையே குறிப்பிடுவதாக இருக்கலாம். குருவம்சத்தினரைப் படுகொலை செய்வது கொடிய பாவம்; பாண்டவர்களின் உயர்ந்த குணத்திற்கு யுத்தம் ஏற்றதல்ல; ரத்தக்கறை படிந்த சுகபோகங்களைக் காட்டிலும் பிச்சையெடுத்து வாழ்வது சிறந்தது; யுத்தத்தின் மூலம் ராஜ்யத்தைப் பெறுவது அதருமமானது; செய்த புண்ணியம் எல்லாம் அதனுல் பாழாகிவிடும்; மூன்று உலகங்களும் கிடைப்பதாக இருந்தால்கூட பாண்டவர்கள் உறவினர்களின் ரத்தத்தினுல் தங்களுடைய லகைகளைக் கறைப்படுத்திக் கொள்ளக் கூடாது; —இவ்விதமெல்லாம் திருதராஷ்டிர மன்னன் அர்ஜுனனுக்குச் செய்திகள் அனுப்பி யிருந்தான் (உத்தியோக பர்வம், அத்தியாயங்கள்-22-27). இதே வாதங்களைத்தான் அர்ஜுனனும் கிருஷ்ணனிடம் திருப்பிக் கூறினுன் (அத்தியாயம்-1, சுலோகங்கள்-32-47; அத்தியாயம்-2, சுலோகங்கள்-3-8). ஆனுல், கிருஷ்ணன் அர்ஜுனனுடைய வாதங்களைக் குறிப்பிடாமலேயே அவற்றையெல்லாம் தவிடுபொடியாகத் தகர்த்துவிட்டார். ஒரு வேளை இந்த சுலோகங்களில், கிருஷ்ணன் அந்த வாதங்களை மேலெழுந்தவாரியாகக் குறிப்பிட்டிருக்கலாம்.]

अर्जुन उवाच

**स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।**
**स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ ५४ ॥**

அர்ஜுன உவாச

**ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ|**
**ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம்|| 54**

*அர்ஜுனன் சொன்னுன் :*

54. கேசவா, உறுதியான புத்தியுடன் கூடிய, சமாதியில் மனம் நிலைத்து நிற்கும் மனிதனின் (ஸ்திதப்ரக்ஞன்) அடையாளம்

என்ன? அவன் எப்படி பேசுகிருன்? எப்படி உட்காருகிருன்? எப்படி நடக்கிருன்?

श्रीभगवानुवाच

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

**ஸ்ரீ பகவான் உவாச**

**ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான்।**
**ஆத்மன்யே வாத்மனு துஷ்ட: ஸ்திதப்ரக்ஞஸ் ததோச்யதே॥ 55**

பகவான் கூறினர்:

55. பார்த்தா, ஒரு மனிதன் மனத்தில் எழும் ஆசைகளை யெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, ஆன்மாவிலிருந்து தனக்குத் தானே ஆனந்தத்தை அடைவானுயின், அவன்தான் உறுதியான புத்தியுடையவன் (ஸ்திதப்ரக்ஞன்) என்று கூறப்படுகிருன்.

ஆன்மாவிலிருந்து ஒருவன் ஆனந்தத்தைக் காண்பது என்ருல், ஆன்மிக ஆனந்தத்தை உள்ளத்திலேயே தேடுவது என்பதே பொருள்; வெளியிலுள்ள சாதனங்களில் தேடுவது என்பது பொருள் அல்ல. இன்பத்தைக் கொடுப்பதுபோல் தோன்றி துன்பத்தைக் கொடுப்பதே வெளிச்சாதனங்களின் இயல்பாகும். ஆன்மிக ஆனந்தம் அல்லது பேரின்பம் வேறு; இன்பம் அல்லது சுகம் வேறு. உதாரணமாக, செல்வத்தினுல் ஏற்படும் இன்பம்

---

54. இந்த சுலோகத்தில், ஜீவன் முக்தனை ஞானியைப் பற்றி விவரிக்கும்படி அர்ஜுனன் கிருஷ்ணனைக் கேட்கிருன். ப்ரம்மத்தை அறிந்தவனின் அடையாளங்களைக் கூறும்படி கேட்கிருன். அவன் சமாதியில் எப்படி இருக்கிருன்? மனத்தை அடக்குவதற்காக அவன் புலன்களை எப்படிக் கட்டுப் படுத்துகிருன்? பிறர் புகழ்ந்தாலோ அல்லது இகழ்ந்தாலோ அவன் எப்படிப் பேசுகிருன்? புலன்களையும் மனத்தையும் கட்டுப்படுத்தும்போது அவன் எப் படி நடக்கிருன்? ஜீவன் முக்தர்களுக்கும் அறியாமையில் ஆழ்ந்துள்ள உலகாயதமான மனிதர்களுக்கும் என்ன வேற்றுமை? — சங்கரர்

54. ஸ்திதப்ரக்ஞனின் வாழ்க்கை, கர்மயோக சித்தாந்தத்தையே அடிப்படையாகக் கொண்டது. எனவே, இதிலிருந்து ஆரம்பமாகும் ஸ்திதப் ரக்ஞனைப் பற்றிய வர்ணனை மிகவும் முக்கியமானது. — திலகர்

55. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும் — குறள்.

இதன் கருத்து: ஆசை இராதவர்களுக்கு துக்கம் இல்லை. ஆசை இருக்குமாயின், துன்பம் மேன்மேலும் வந்து கொண்டே இருக்கும்.

ஏமாற்றத்தைக் கொடுக்கக் கூடியது. வறுமையினாலும் பசியினாலும் துன்பத்திற்கு உள்ளானால் கூட, மனத்தை மயக்கும் ஒவ்வொரு ஆசையையும் துச்சமாக மதித்து நான் உயர்ந்த நிலையை அடைந்தால்தான், உண்மையான ஆன்மிக ஆனந்தத்தையோ அல்லது பேரின்பத்தையோ நான் எட்ட முடியும்.

''பூமியில் உள்ள சாதனங்களில் அல்ல, மேலேயுள்ள சாதனங்களில் ஆசை வையுங்கள்.'' (பைபிள்) ''இறைவன் பக்கத்தில் நில்லுங்கள். நீங்கள் உறுதியாக நிற்க முடியும். இறைவனிடத்தில் சாந்தியை நாடுங்கள். நீங்கள் சாந்தி பெற முடியும்'' (செயின்ட் அகஸ்டின்). ''தூய்மையான நன்மையைத் தவிர வேறு எதுவும் ஆறுதல் அளிக்க முடியாது. தூய்மையான நன்மை என்பது கடவுளே'' என்று எக்கார்ட் கூறியுள்ளார்.]

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

துக்கேஷ் வனுத்விக்னமனா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ:|
வீதராகபயக்ரோத: ஸ்திததீர் முனிருச்யதே|| 56

56. துக்கங்களைக் கண்டு யாருடைய மனம் கலங்கவில்லையோ, யார் இன்பங்களுக்காக ஏங்கவில்லையோ, இச்சை, பயம், கோபம் ஆகியவற்றிலிருந்து யார் விடுபட்டிருக்கிறானோ அவனே, உறுதியான புத்தி படைத்த ஞானி என்று கூறப்படுகிறான்.

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

ய: ஸர்வத்ரானபிஸ்நேஹஸ் தத்தத்ப்ராப்ய சுபாசுபம்|
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா|| 57

57. எவனுக்கு எதிலும் பற்று இல்லையோ, தனக்கு நன்மை ஏற்படும்போது மகிழ்ச்சியோ அல்லது தீமை உண்டாகும்போது கோபமோ இராமல் எவன் இருக்கிறானோ, அவனது புத்தியே உறுதியானது.

---

57. எந்த முனிவருக்கு தன் உடலிலோ அல்லது உயிரிலோ கூட பற்று இல்லையோ, நன்மையைக் கண்டு மகிழ்ச்சியோ அல்லது தீமையைக் கண்டு துக்கமோ ஏற்படவில்லையோ, இன்பமோ துன்பமோ இல்லாத அத்தகைய முனிவரின் புத்தியே உறுதியானது. — சங்கரர்

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்கானீவ ஸர்வச:।
இந்த்ரியாணீந்த்ரி யார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா॥ 58

58. ஆமை எல்லாப் பக்கங்களிலிருந்தும் தன் உறுப்புகளை உள்ளே இழுத்துக் கொள்ளுவதைப் போல, ஒருவன் தனது புலன்களை வெளிப்பொருள்களிலிருந்து உள்ளடக்கிக் கொள்ளும் போது, அவனது புத்தி உறுதியான நிலையை அடைகிறது.

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

விஷயா வினிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின:।
ரஸவர்ஜம் ரஸோ(அ)ப்யஸ்ய பரம் திருஷ்ட்வா நிவர்த்ததே॥ 59

59. ஒரு மனிதன் புலன்களைப் பட்டினி போடும்போது புலன்களுக்கான சாதனங்கள் அவனிடமிருந்து மறைந்து விடுகின்றன. எனினும், அந்தச் சாதனங்களின் மீதுள்ள ஆசை மறைவதில்லை. ஆனால், அவன் பரம்பொருளைக் காணும்போது அந்த ஆசையும் மறைந்து விடுகிறது.

உபவாசம் போன்ற மற்ற தன்னடக்க முறைகளையும் இந்த சுலோகம் தவிர்க்கவில்லை. ஆனால், அவற்றின் எல்லைகளையே குறிப்பிடுகிறது. இந்தக் கட்டுப்பாடுகள், புலன்களுக்கான சாதனங்களில் உள்ள ஆசையை அடக்குவதற்கு அவசியமானவை. எனினும், ஒருவன் பரம்பொருளை அறிந்த பின்னர்தான், அந்த ஆசை அடியோடு ஒழிகின்றது. மகோன்னதமான ஆசையானது, கீழ்த்தரமான ஆசைகளையெல்லாம் வென்றுவிடுகின்றது.

[ப்ளோடினஸ் (கிரேக்க ஞானி) கூறுவதாவது: "நாம் கடவுளைக் காணும்போது நமது ஆசைகளின் இறுதி நிலையை நாம் அடைந்து சாந்தி பெறுகின்றோம். அப்போது நம்மிடத்தில் முரண்பாடுகளும் இருப்பதில்லை. நாம் இறைவனுக்கு அருகில் உண்மையான தெய்விக நடனத்தில் ஈடுபடுகிறோம்."

செயின்ட் ஜானும் பின்வருமாறு கூறியுள்ளார்: "பொருட்கள் இராததைக் குறித்து இங்கே நான் பேசவில்லை. ஆசை இருக்குமாயின், பொருட்கள் இராதது பற்றின்மை ஆகாது. ஆசையையும் அடக்குவதே பற்றின்மையாகும். இந்தப் பற்றின்மையே ஆன்மாவுக்கு விடுதலை அளிக்கின்றது."

இந்த சுலோகத்தில் "புலன்களைப் பட்டினி போடும்போது" என்ற இடத்தில் "உபவாசம் இருக்கும்போது" என்று காந்திஜி குறிப்பிட்டுள்ளார். உபவாசம் உள்பட எல்லாப் புலன்களையும் பட்டினி போடுவது என்று கூறுவதால், இந்த சுலோகத்தின் அர்த்தம் கெட்டுவிடாது என்றே நான் நினைக்கிறேன்.

இந்த சுலோகத்தின் பொருளை விளக்கி, காந்திஜி *22-12-1927* 'எங் இந்தியா'வில் பின்வருமாறு எழுதினர்: "உபவாசமும், அது போன்ற கட்டுதிட்டமும் தன்னடக்கமாகிய லட்சியத்தை அடைவதற்கான முறைகளில் சிலவேயாகும். அவை மாத்திரம் போதா. உடல் உபவாசத்துடன் மன உபவாசமும் சேராவிடில், அது போலி வேடமாகவே முடியும். போலி வேடத்தினல் ஆபத்தே நேரும்."]

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।

इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித:॥

இந்த்ரியாணி ப்ரமாதீனீ ஹரந்தி ப்ரஸபம் மன:॥ 60

*60.* ஏனெனில், விவேகம் உள்ளவன் எவ்வளவோ முயற்சி செய்தாலும் கூட, அடங்காப்பிடாரிகளான புலன்கள் பலாத்காரமாக மனத்தைத் தடுமாறச் செய்து விடுகின்றன.

---

59. உணவினலேயே புலன்களுக்கு பலம் ஏற்படுகின்றது. ஆகையால் ஒருவர் உணவு உட்கொள்ளாமல் உபவாசம் இருந்தால், புலன்கள் பலவீனம் அடைகின்றன. அதன் விளைவாக அவை அவற்றிற்கான சாதனங்களை அனுபவிக்க முடிவதில்லை. எனினும், இவ்விதமாக புலன்களை பலவீனப்படுத்தி போக சாதனங்களை அனுபவிக்காமல் இருப்பது, புற நடவடிக்கையேயாகும். புலன்கள் பலவீனமடைந்தாலும், போக சாதனங்களில் உள்ள ஆசை தணிவதில்லை. அதனல்தான், ஒருவர் பிரம்மத்தைப் பற்றிய ஞானத்தைப் பெற வேண்டும். அத்தகைய ஞானத்தின் மூலம்தான் ஆசையை ஒழிப்பது சாத்தியமாகும். ஒருவர் பிரம்ம ஞானத்தை அடைந்தால், பின்னர் அவரது மனமும், புலன்களும் தாமாகவே அவரது கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகின்றன. பிறகு புலன்களை அடக்க அவர் உபவாசத்தையோ அல்லது வேறு முறையையோ மேற்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. மேற்கண்ட சுலோகத்தின் கருத்து இதுதான். — திலகர்

60. பூரண ஞானத்தைப் பெற விரும்புவோர், முதலாவதாக புலன்களைத் தங்களுடைய கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவர வேண்டும். அப்போதுதான் அவரது மனம் கலக்கமோ, தடுமாற்றமோ அடையாமல் அமைதியாக இருக்கும். இல்லாவிடில், அவர்களுக்கு அபாயம் ஏற்படும். ஏனெனில், மன உறுதியும் பகுத்தறிவும் உள்ள, மோட்சம் அடைவதற்காகப் போராடிக்

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:॥
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா॥ 61

*61.* யோகி, இந்தப் புலன்களை யெல்லாம் அடக்கி, என்னிடம் முழு மனத்தையும் செலுத்தியவனாக உட்கார வேண்டும். யாருடைய புலன்கள் அவனது கட்டுப்பாட்டில் உள்ளனவோ, அவனே உறுதியான புத்தி படைத்தவன் (ஸ்திதப்ரக்ஞன்).

பக்தியும், அதைத் தொடர்ந்து இறைவனின் அருளும் இல்லாவிடில், மனிதனின் முயற்சி யெல்லாம் வீணாகிவிடும் என்பதே இந்த சுலோகத்தின் பொருள்.

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२ ॥

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோ(அ)பிஜாயதே॥ 62

*62.* புலன்களுக்கான சாதனங்களையே நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு, அவற்றில் பற்றுதல் எழுகின்றது; பற்றுதலிலிருந்து ஆசை உண்டாகின்றது; ஆசையிலிருந்து கோபம் பிறக்கின்றது.

---

கொண்டிருக்கும் முனிவர்களைக் கூட, கொந்தளிப்பையும் தடுமாற்றத்தையும் உண்டாக்கும் புலன்கள், போக சாதனங்களில் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு போய் விடுகின்றன. — சங்கரர்

61. அடுத்தபடி என்ன என்பது இந்த சுலோகத்தில் விவரிக்கப்படுகிறது. "புலன்களை முற்றிலும் அடக்கிய ஒரு பக்தனான சந்நியாசி என்னையே நினைத்தவண்ணம் இருக்கிறான். ஒரே ஆன்மா எங்கும் வியாபித்திருக்கிறது என்பதை உணருகிறான். இடைவிடாத பயிற்சியால் இவ்விதம் புலன்களை அடக்கியவனும், என்னையே தியானித்தவண்ணம் என்னிடம் தொடர்பு கொண்டவனுமே அசைக்க முடியாத ஞானத்தை அடைகிறான்."—சங்கரர்

60-61. அடல் வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு — குறள்.

இதன் கருத்து: ஐந்து புலன்களையும் அடக்கி, ஆசைகளையெல்லாம் அறவே துறந்துவிட வேண்டும்.

ஆசைக்கு அளவில்லை, முடிவும் இல்லை. எனவே, ஆசை நிறைவேறாதபோது கோபம் ஏற்படாமல் இருக்க முடியாது.

[பாகவதமும் பின்வருமாறு கூறுகிறது: ''புலன்களுக்கான சாதனங்களையே சிந்தித்துக் கொண்டிருப்பதன் மூலம் மனம் அவற்றை இறுகப் பற்றிக் கொள்ளுகின்றது. இறைவனையே எப்போதும் சிந்திப்பதன் மூலம், அவரது கருணையால் போக சாதனங்களில் உள்ள பற்று ஒழிந்து விடுகிறது.'']

**क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।**

**स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३ ॥**

**க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்ரம:।**

**ஸ்மிருதி ப்ரம்சாத் புத்தி நாச: புத்தி நாசாத் ப்ரணச்யதி।। 63**

*63.* கோபத்தினால் மன மயக்கம் ஏற்படுகிறது; மன மயக்கத்தினால் மறதி ஏற்படுகிறது; மறதியினால் புத்தி பாழாகின்றது; புத்தி பாழானதன் விளைவாக மனிதன் அடியோடு அழிந்து விடுகிறான்.

---

63. எல்லாத் துன்பங்களுக்கும் ஆணிவேர் என்ன என்பது இப்போது விவரிக்கப்படுகிறது. போக சாதனங்களை ஒருவன் எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பதன் மூலம், அவனுக்கு அவற்றில் பற்றுதல் ஏற்படுகிறது. பற்றுதலிலிருந்து, அவற்றை அடைய வேண்டும் என்ற ஆசை எழுகின்றது. அந்த ஆசை நிறைவேறாவிடில், கோபம் உண்டாகின்றது. கோபம் மனச்சாட்சியை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கிறது. அதனால், அவன் நேர்மையான முடிவு செய்யும் சக்தியையும் இழந்துவிடுகிறான். கோபம் கொண்டவன், தன் குருவினிடத்தில் கூட குற்றம் காண்கிறான். கோபத்தினால் அறிவு உணர்ச்சி மழுங்கிவிடுவதால், குருவின் உபதேசங்களையும் சாஸ்திரங்களின் உபதேசங்களையும் கூட அவன் மறந்துவிடுகிறான். அவ்வித மறதியால், எது தருமம், எது அதருமம் என்று பாகுபாடு செய்யும் பகுத்தறிவை இழந்து, நடைப்பிணமாகி விடுகிறான். — சங்கரர்

63. *தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்*
*தன்னையே கொல்லுஞ் சினம்* — குறள்.

*இதன் கருத்து:* உன்னை நீ பாதுகாத்துக் கொள்ள வேண்டுமாயின், கோபத்திற்கு இடம் கொடுக்காதே. கோபத்திற்கு இடம் கொடுத்தால், அது உன்னைக் கொன்றுவிடும்.

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

ராகத்வேஷ வியுக்தைஸ்து விஷயானிந்த்ரியைச் சரன்।
ஆத்ம வச்யைர் விதேயாத்மா ப்ரஸாத மதிகச்சதி॥ 64

*64.* கட்டுதிட்டத்திற்கு உட்பட்ட ஆன்மாவையுடையவன் புலன்களுக்கான சாதனங்களிடையே உலவுகின்றவனுயினும், விருப்பு வெறுப்பு அற்றவனுக இருக்கிருன். எனவே, அவன் ஆன்மாவின் கட்டுப்பாட்டில் புலன்களைக் கொண்டுவந்து, மன அமைதியை எய்துகின்ருன்.

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

ப்ரஸாதே ஸர்வதுக்காளும் ஹானிரஸ்யோபஜாயதே।
ப்ரஸன்ன சேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே॥ 65

*65.* மன அமைதி என்பதற்கு எல்லாத் துன்பங்களும் ஒழிந்துவிட்டன என்பதே பொருள். ஏனெனில், மன அமைதி உள்ளவனின் புத்தி தடுமாற்றமின்றி நிலை பெற்றிருக்கிறது.

---

64. சில சாதனங்களை ஆசைப்படுவதும், சில சாதனங்களை வெறுப்பதுமே புலன்களின் இயல்பு. விருப்பு வெறுப்பின்றி, சாத்திரங்களில் தடுக்கப்படாத சாதனங்களை அனுபவிப்பதன் மூலம், மோட்சத்தை விரும்புகிறவன் மன அமைதியையும் ஆரோக்கியம் அல்லது தூய்மையையும் அடைகிருன்.
— சங்கரர்

65. மன அமைதி பெற்றவனுக்கு என்ன நன்மை ஏற்படுகிறது? அவனது துக்கங்களுக்கெல்லாம் முடிவு ஏற்பட்டு விடுகிறது. தூய்மையான உள்ளமானது உருவமற்ற ஆன்மாவுடன் லயித்துவிடுகிறது. எனவே, விருப்பு வெறுப்பின்றி சாத்திரங்களால் அனுமதிக்கப்பட்ட, அவசியமான புலன்களுக்கான சாதனங்களை அனுபவித்துக் கொண்டிரு. — சங்கரர்

65. ஸ்திதப்ரக்ஞன் (உறுதியான புத்தியை உடையவன்) செயல் புரிவதையோ அல்லது புலன்களுக்கான சாதனங்களையோ விடுவதில்லை. அவற்றுடன் நெருங்கிய உறவையே கைவிடுகிருன். புலன்களுக்கான சாதனங்களிடையே அவன் விருப்பு வெறுப்பின்றி நடமாடுகிருன். செயலைத் துறப்பதன் பலனுக, அவனுக்கு மன அமைதி ஏற்படுவதில்லை; செயலின் பலனில் உள்ள ஆசையைத் துறப்பதன் மூலமே அவனுக்கு மன அமைதி உண்டாகின்றது. இந்த ஒரு விஷயத்தைத் தவிர, இந்த ஸ்திதப்ரக்ஞனுக்கும் துறவு

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥ ६६ ॥

நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா।
ந சாபாவயத: சாந்தி ரசாந்தஸ்ய குத: ஸுகம்।। 66

*66.* கட்டுதிட்டத்திற்கு உட்படாத மனிதனுக்கு பகுத்தறிவோ அல்லது பக்தியோ இரா. பக்தி இல்லாதவனுக்கு மன அமைதி இராது. மன அமைதி இல்லாதவனுக்கு சுகம் எங்கிருந்து வரும்?

[இதே சுலோகத்தில் உள்ள 'பாவனா' என்ற சொல் இங்கே 'பக்தி' என்று மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் டேவீஸ் 'சரியான நிலைமை' என்றும், ஹில் 'சிந்தனை' என்றும், டிலாங் 'ஞானத்தைத் தேடுவதில் விடாமுயற்சி' என்றும் பல்வேறு விதமாக மொழி பெயர்த்திருக்கிறார்கள்.]

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनु विधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥

இந்த்ரியாணாம் ஹி சரதாம் யன்மனோ(அ)னுவிதீயதே।
ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி।। 67

*67.* அலைந்து திரியும் புலன்களில் ஏதாவது ஒன்றின் வழியே மனம் தொடர்ந்து செல்லுமாயின், தண்ணீரின் மேல் உள்ள படகை காற்று அடித்துக்கொண்டு செல்லுவதைப்போல் அவனது அறிவை மனம் அடித்துச் சென்றுவிடுகிறது.

---

மார்க்கத்தை மேற்கொண்ட ஸ்திதப்ரக்ஞனுக்கும் வேறு வேற்றுமை எதுவும் இல்லை. ஆசையின்மையும், மன அமைதியும் அவ்விருவருக்கும் அவசியமானவை. ஆனால், கீதையில் குறிப்பிடப்பட்டுள்ள ஸ்திதப்ரக்ஞன் செயல்களைத் துறந்து விடுவதில்லை; பற்றுதலோ, பலனில் ஆசையோ இல்லாமல் உலக நன்மைக்காக எல்லாச் செயல்களையும் புரிகிறான். — திலகர்

66. இந்த சுலோகத்திலும் மன அமைதியே போற்றப்பட்டிருக்கிறது. மன அமைதி இல்லாதவன் ஆன்மிக ஞானத்தை அடைய முடியாது. ஏனெனில் அவனது மனம், ஆசைகளுக்கும் கோபதாபங்களுக்கும் விளையாடும் இடமாக இருந்துவரும். அத்தகைய ஒருவனுக்கு சிந்திக்கும் சக்தி இராததால், அவன் தன்னைத் தானே ஊடுருவி அறிந்துகொள்ளுவது முடியாத காரியம். தன்னைத்தான் அறிய முடியாதவன், மன அமைதியையோ அல்லது மோட்சமாகிய பேரானந்தத்தையோ அடைய முடியாது. — சங்கரர்

67. மனத்தைக் கட்டுப்படுத்தாதவனுக்கு ஏன் அறிவு இராது என்பது இந்த சுலோகத்தில் விளக்கப்படுகின்றது. புலன்கள் விருப்பப்படி விஷயங்

[தாமஸ் ஏ. கெம்பிஸ் அதே உவமையைக் கையாண்டிருக்கிறார்: "சுக்கான் இல்லாத ஒரு கப்பலை அலைகள் அங்குமிங்கும் இழுத்துச் செல்லுவதைப் போல, தனது உறுதியான தீர்மானத்தைக் கைவிட்ட மனிதனை, ஆசைகள் பலவழிகளிலும் கவர்ந்து செல்லுகின்றன."]

तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வச:|
இந்த்ரியா ணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா|| 68

*68.* மகாபாகு (தோள்வலி படைத்தவனே), யாருடைய புலன்கள் அவை நாடும் சாதனங்களிலிருந்து எல்லாவிதங்களிலும் கட்டுப்படுத்தப்படுகின்றனவோ, அவன்தான் உறுதியான அறிவு படைத்தவன்.

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

யா நிசா ஸர்வ பூதானும் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ|
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே:|| 69

---

களை அனுபவிக்கும்போது, மனமும் அவற்றையே நினைத்தவண்ணம் அவற்றைப் பின் தொடர்ந்து செல்லுவது இயல்பே. அதன் காரணமாக, எது ஆன்மா, எது ஆன்மா அல்ல என்பதைக் பகுத்து உணரும் உயர்ந்த அறிவு மழுங்கிவிடுகிறது. புயல்காற்று படகை சரியான பாதையிலிருந்து தவறான பாதையில் எவ்விதம் கொண்டுபோய் விடுகிறதோ அதுபோலவே, புலன்கள் மனத்தைத் தவறான பாதையில் கொண்டுபோய் விடுகின்றன. — *சங்கரர்*

68. இரண்டாவது அத்தியாயம் 60-ஆவது சுலோகத்தில் ஆரம்பமான உபதேசம் இந்த சுலோகத்துடன் முடிவடைகின்றது. கட்டுப்படுத்தப்படாத புலன்களால் ஏற்படக்கூடிய அபாயம் எடுத்துக் காட்டப்பட்டுளது. எனவே மனத்தையும், புலன்களையும் கட்டுப்படுத்தியவனின் அறிவு உறுதி பெற்றது. இங்கே அறிவு என்பதற்கு ஆன்மாவைப் பற்றிய ஞானம் என்பதே பொருள். நிலைபெற்ற அறிவு என்பது, எல்லாம் வல்ல இறைவனுடன் இடைவிடாது தொடர்பு கொள்ளுவதேயாகும். —*சங்கரர்*

68. சுருங்கக் கூறுவதாயின், புலன்களைக் கட்டுப்படுத்துவதன் மூலம் மனத்தைக் கட்டுப்படுத்துவதுதான், பூரண ஞானத்தை அடைவதற்கு அடிப்படையாகும். புலன்களை அவற்றின் விருப்பத்திற்கு விட்டுவிட்டால், பின்னர்

*69.* மற்ற எல்லா ஜீவன்களுக்கும் இரவாக இருக்கும் போது, கட்டுதிட்டத்திற்கு உட்பட்ட ஆன்மாவையுடைய முனிவன் விழித்துக் கொண்டிருக்கிறான். மற்ற எல்லா ஜீவன் களும் விழித்துக் கொண்டிருக்கும்போது, அதுதான் உண்மை யைக் காணும் முனிவனுக்கு இரவு ஆகும்.

கட்டுதிட்டங்களுக்கு உட்பட்ட முனிவனும், சிற்றின்பத் தில் விருப்பம் உள்ளவனும் வெவ்வேறான பாதைகளில் செல்லு பவர்கள் என்பதை இந்த சுலோகம் குறிப்பிடுகிறது. உலக சம்பந்தமான பொருட்களைப் பொறுத்தமட்டில் முனிவன் இறந்த வனைப் போலாகி விடுகிறான். அவன் இறைவனிடத்தில் உயிர் வாழ்கின்றான். சிற்றின்பப் பிரியனோவென்றால், உலக சம்பந்த மான பொருட்களிலேயே வாழ்கின்றான், ஆன்மிக சம்பந்தமான விஷயங்களில் இறந்தவனாகிவிடுகிறான்.

[ஞானியைப்பற்றி நிகல்சன் பின்வருமாறு வர்ணித்திருக் கிறார்: "இரவில் கைதிகள் தங்களுடைய சிறையை மறந்து விடுகிறார்கள்; இரவில் மன்னர்கள் தங்களுடைய ராஜ்யாதிகா ரத்தை மறந்துவிடுகிறார்கள். அவ்விதம் எல்லோரும் எல்லா வற்றையும் மறந்து தூங்கும்போது துக்கமோ, லாப நஷ்டத்தைப் பற்றிய சிந்தனையோ, இந்த நபரை அல்லது அந்த நபரைப் பற்றிய எண்ணமோ இருப்பதில்லை. ஆனால் விழித்துக்கொண் டிருக்கும்போதும் ஞானியின் நிலை இதுதான். 'அவர்கள் தூங்கும் போது அவர்கள் விழித்துக் கொண்டிருப்பதாகக் கருது' என்று கடவுள் கூறுகிறார். எல்லாவற்றையும் இயக்கும் கடவுளின் கையில் உள்ள கருவியைப்போல அவன் (ஞானி) உலக விஷயங் கள் சம்பந்தப்பட்ட வரையில் இரவும் பகலும் தூங்குகிறான்."]

---

ஆன்ம ஞானத்தைப் பெறவேண்டும் என்ற ஆசை கூட மனிதனுக்கு ஏற்படு வது சாத்தியமல்ல. ஆசை இராவிடில், அந்தத் துறையில் உறுதியான முயற் சிக்கும் இடமில்லை. பிறகு அமைதிக்கோ அல்லது ஆனந்தத்திற்கோ வழி இல்லை. புலன்களை அடக்குவது என்றால், புலன்களையே முற்றிலும் ஒழித்து விட்டு, செயல்களை அறவே கைவிட்டு விடுவது என்று அர்த்தமல்ல. 64–ஆவது சுலோகத்தில் கூறியுள்ளபடி, பலனில் ஆசையின்றி எல்லாச் செயல்களையும் புரியவேண்டும் என்பதே கீதையின் உபதேசமாகும். —திலகர்.

69. புதிர் போன்ற இந்த வர்ணனை, உவமை அலங்காரமாகும். இங்கே 'இரவு' என்பது அறியாமையையும், 'பகல்' என்பது ஞானத்தையும் குறிக் கிறது. அதாவது ஆசையால் தூண்டப்பட்ட செயலை ஞானி வெறுக்கிறான்; ஆனால் அறியாமையில் ஆழ்ந்திருப்பவன் அதை விரும்புகிறான். பற்றற்றசெயலை ஞானி விரும்புகிறான். ஆனால், அதை சாதாரண மக்கள் வெறுக்கின்றனர்.

—திலகர்.

आपूर्यमाणमचलप्रतिष्ठं
समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।
तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे
स शान्तिमाप्नोति न कामकामी ॥ ७० ॥

ஆபூர்யமாண மசல ப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத்।
தத்வத் காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்தி மாப்னோதி ந காம காமீ।। 70

70. நதிகளிலிருந்து எப்போதும் தண்ணீர் வந்து சமுத்திரத்தில் விழுந்தவண்ணம் இருந்தாலும், அது நிரம்பி வழிவதில்லை. அதுபோலவே எல்லா ஆசைகளும் யாரிடத்தில் அடங்கி விடுகின்றனவோ அவன் தான் மனச்சாந்தியை அடைகிறான். ஆசைகளில் ஆசை வைப்பவனுக்கு மனச் சாந்தி ஏற்படுவதில்லை.

विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।
निर्ममो निरहंकारः स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥

விஹாய காமான் ய: ஸர்வான் புமாம்ச்சரதி நிஸ்ப்ருஹ:।
நிர்மமோ நிரஹங்காரः ஸ சாந்தி மதிகச்சதி।। 71

71. யார் எல்லா ஆசைகளையும் உதறித்தள்ளிவிட்டு பற்றின்றியும், 'நான்', 'என்னுடையது' என்ற உணர்ச்சியின்றியும் நடந்துகொள்ளுகிறானோ அவனே சாந்தியை அடைகிறான்.

[ஜெர்மன் சமயநூல் கூறுவதாவது: "இவ்விதமாக நாம் நம்மிடம் உள்ள உடைமைகள் எல்லாவற்றையும் உதறித்தள்ளிவிட வேண்டும். எதையும் நாம் நமக்குச் சொந்தமானது என்று உரிமை கொண்டாடுவதைத் தவிர்க்க வேண்டும். இவ்விதம் நாம் செய்யும்போது, ஒரு மனிதன் அடையக் கூடிய மிகச் சிறந்த, பரிபூரணமான, மிகவும் தெளிவான, மகோன்னதமான

---

70. ஆயிரக்கணக்கான நதிகளிலிருந்து தண்ணீர் வந்து விழுந்தாலும் சமுத்திரம் பொங்கிவழிவதில்லை. அது எப்போதும் போலவே இருக்கிறது. அதுபோலவே ஒருவனுடைய மனத்தில் எத்தனை ஆசைகள் வந்து பிரவேசித்தாலும், அவற்றினால் எவன் நிலைகுலையாமல் இருக்கிறானோ, அந்த ஆசைகளைப் பின் தொடர்ந்து எவன் செல்லாமல் இருக்கிறானோ, அவன்தான் மோட்சமாகிய சாந்தியை அடைகிறான். மனத்தில் ஆசைகளுக்கு இடம் கொடுப்பவன் அத்தகைய சாந்தியை அடைவதில்லை. —சங்கரர்-

ஞானத்தை நாம் அடைவோம். அப்போது நம்முடைய ஆசையும் மிகத் தூய்மையானதாகவும், மிகச் சிறந்ததாகவும் இருக்கும்.'']

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२ ॥

ஏஷா ப்ராஹ்மீஸ்திதி: பார்த்த நைனும் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யா மந்தகாலே (அ)பி ப்ரஹ்ம நிர்வாணம்ருச்சதி ॥ 72 ॥

72. பார்த்தா, பிரம்மத்தில் லயித்தவனின் நிலை இதுதான். அந்த நிலையை அடைந்தவன், பின்னர் மதிமயக்கத்திற்கு இலக்காகமாட்டான். இறக்கும் தறுவாயில் ஒருவன் இந்த நிலையை அடைந்தால் கூட, அவன் பிரம்மத்துடன் ஐக்கியம் அடைகிறுன்.

---

71. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும் —குறள்

இதன் கருத்து: 'நான்', 'என்னுடையது' என்ற இறுமாப்பை விட்டவன் தேவர்களும் அடைய முடியாத உலகத்தை அடைகிறுன்.

72. ஒருவன் தான் உயிர் வாழ்வதற்குப் போதுமான ஆசையை மாத்திரம் வைத்துக் கொண்டு மற்றவைகளையெல்லாம் துறந்துவிட வேண்டும்; உடலிலோ உயிரிலோ பற்றுதல் வைக்கக் கூடாது; உடலுக்கும் உயிருக்கும் சொந்தமான சாதனங்களிலும் பற்றுதல் வைக்கக் கூடாது; தான் பண்டிதன் அல்லது புத்திசாலி என்று அகந்தை கொள்ளக் கூடாது. பிரம்மத்தை அறிந்த அப்படிப்பட்ட விவேகியே நிர்வாண நிலையை அடைகிறுன் அல்லது பிரம்மமாகி விடுகிறுன். —சங்கரர்.

72. பிரம்ம நிர்வாணம் என்பது கர்ம யோகத்தின் இறுதியான நிலையே. இந்த நிலையை அடைந்தவன், அறியாமையிலிருந்து முற்றிலும் விடுபட்டுவிடுகிறுன். எனினும், தற்காலிகமாக அந்த நிலையை அடைந்த ஒருவனுக்கு இறக்கும் தறுவாயில் அந்த மன நிலை இல்லையாயின், அவன் மறுபிறப்பைத் தவிர்க்க முடியாது. அதனுல் தான் ஸ்திதப்ரக்ஞன், இறக்கும் தறுவாயில் கூட அந்த நிலையிலிருந்து பிறழுவதில்லை என்று இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இறக்கும் தறுவாயில் மனம் தூய்மையாக இருக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று உபநிடதங்களிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பல தடவைகளிலும் பிறவி எடுப்பதற்கு ஆசையால் தூண்டப்பட்ட செயலே காரணம். ஆதலின், மரணம் ஏற்படும் போதாவது ஆசையை ஒழித்துவிட வேண்டும் என்பதே இதன் கருத்தாகும், ஒருவன் இறக்கும்போது ஆசையை ஒழிக்க வேண்டுமாயின், அவன் முன்பிருந்தே ஆசையை ஒழிப்பதில் பயிற்சிபெற்று வந்திருக்க வேண்டும். ஆசையை ஒழிப்பது மிகவும் கஷ்டமாகும். கடவுளின் அருள் இருந்தாலன்றி, ஆசையை ஒழிப்பது எவருக்கும் அசாத்தியமான காரியம். இறக்கும் போது ஆசை தூய்மையானதாக இருக்கவேண்டும் என்ற சித்தாந்தம் நமது மதத்தில் மாத்திரமல்ல, மற்ற மதங்களில் கூட ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. —திலகர்.

[“இறைவனிடத்தில் லயித்தவன், என்றென்றும் தகுந்த பாதுகாப்புடன் வாழ்பவனாகிறான்” என்று முஸ்லிம் பெரியாரான ஜலாலுதீன் ருமி கூறியுள்ளார்.

எக்கார்ட் கூறுவதாவது: “பூரண நிலையை அடைந்த ஒருவனிடம், ‘நீ இத்தகைய பூரண நிலையை அடையும்படி செய்தது எது?’ என்று கேட்டபோது, ‘கடவுளுடன் நான் ஒன்றாகிவிட்டதுதான். ஏனெனில், கடவுளுக்குக் குறைந்த எதனுடனும் நான் ஒன்றாக முடியாது’ என்று பதில் அளித்தான்.”

‘பிரம்ம நிர்வாணம்’ என்பது, பிரம்மத்துடன் ஒன்றாவது என்று இங்கே மொழி பெயர்க்கப்பட்டுளது. இதை விளக்கி காந்திஜி ‘எங் இந்தியா’வில் (24-11-1927) எழுதிய கட்டுரை ஒன்றின் விவரம் வருமாறு: “நிர்வாணம் என்பது இருந்த இடம் தெரியாமல் அடியோடு மறைந்து விடுவதல்ல. புத்தருடைய வாழ்க்கையின் சாரமான உண்மையை நான் அறிந்த வரையில், நம்மிடத்தில் உள்ள இழிவான குணங்கள் எல்லாவற்றையும், நம்மிடத்தில் உள்ள தீய குணங்கள் எல்லாவற்றையும், நம்மிடத்தில் உள்ள ஊழல்கள் யாவற்றையும், ஊழல்களுக்கு இடம் கொடுக்கும் தன்மையையும் அடியோடு ஒழித்துவிடுவதே நிர்வாணம் ஆகும். நிர்வாணம், இறந்தவர்களின் சமாதியில் நிலவும் பயங்கரமான அமைதியல்ல. ஆனால் ஜீவசக்தி வாய்ந்த அமைதி, தன்னைத்தானே அறிந்த ஆன்மாவின் ஜீவசக்தி வாய்ந்த ஆனந்தம். நித்தியமான பரம்பொருளின் இதயத்தில் தனது சொந்த ஸ்தானத்தைக் காண்பதே தன்னைத்தானே அறிந்து கொள்வதாகும்.”

பிரம்ம நிர்வாணம் என்பது, நித்தியமான பரம்பொருளின் இதயத்தில் உள்ள இந்த இருப்பிடம் தான்.]

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां**
**योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे सांख्ययोगो**
**नाम द्वितीयोऽध्यायः ॥ २ ॥**

**இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸு உபநிஷத்ஸு**
**ப்ரம்ம வித்யாயாம் யோகசாஸ்த்ரே**
**ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே**
**ஸாங்க்யயோகோ நாம**
**த்விதீயோ(அ) த்யாய:**

*பகவத் கீதை என்ற உபநிடத்தில் பிரம்ம ஞானத்தின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணையில் ‘சாங்கிய யோகம்’ என்ற இரண்டாவது அத்தியாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது.*

# கர்ம யோகம்

## மூன்றும் அத்தியாயம்

கீதையின் சாரத்தை அறிந்துகொள்ளுவதற்கான திறவுகோல் இந்த அத்தியாயம்தான் என்று கூறலாம். சரியான செயலின் இயல்பையும் தத்துவத்தையும் முற்றிலும் தெளிவாக இந்த அத்தியாயம் விவரிக்கிறது. சுயநலமற்ற தொண்டை முக்கியமாகக் கொண்ட செயல்களின் மூலம் உண்மையான ஞானம் மலர வேண்டும் என்பதையும் இந்த அத்தியாயம் எடுத்துக்காட்டுகிறது.

अर्जुन उवाच

**ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।**
**तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥**

**அர்ஜுன உவாச**

**ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்திர் ஜனார்த்தன।**
**தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ॥ 1**

*அர்ஜுனன் கூறினான்:*

*1.* ஜனார்த்தனா, செயலைக் காட்டிலும் பற்றற்ற நிலை உயர்ந்தது என்று நீங்கள் கூறுகிறீர்கள். கேசவா, அப்படியாயின் பயங்கரமான செயலைப் புரியும்படி நீங்கள் என்னை ஏன் வற்புறுத்துகிறீர்கள்?

---

*பீஷ்மர், துரோணர் முதலிய மற்றவர்களை யுத்தத்தில் கொல்லுவதைக் குறித்து அர்ஜுனன் பயந்தது மூடத்தனமானது என்பதை பகவான் நிரூபித்த பின், ஆன்மா அழிவற்றது என்பதையும், எனவே, நிலையற்ற உடல் அழிவதைக் குறித்து துக்கம் அடைய வேண்டாம் என்பதையும் விளக்கினார். பிறகு பகவான், கர்ம யோகத்தை, அதாவது அர்ஜுனன் செய்ய வேண்டிய கடமை என்ன என்பதையும் வற்புறுத்திக் கூறினார். கீதையில் அடங்கியுள்ள முக்கிய விஷயம் இதுதான். கர்ம யோகத்தைப் பற்றிய விளக்கம் இரண்டாவது அத்தியாயத்தில் ஆரம்பமாகியுள்ளது. புண்ணியமோ அல்லது பாவமோ எதுவும் ஏற்படாமல் செயல் புரிவதற்கான வழி அல்லது யோகம், பற்றற்ற*

[அத்தியாயம் - 2, சுலோகம் - 49-ஐ பார்க்கவும்]

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

வ்யாமிச்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே|
ததேகம் வத நிச்சித்ய யேன ச்ரேயோ(அ)ஹ மாப்னுயாம் ॥ 2

2. புதிர் போன்ற பேச்சினுல் தாங்கள் என் அறிவைக் குழப்புவதுபோல் தோன்றுகிறது. ஆகையால், எதைச் செய்தால் எனக்கு கதிமோட்சம் கிடைக்குமோ, அதை மாத்திரம் சந்தேகத்துக்கு இடமின்றி உறுதியாகக் கூறுங்கள்.

அர்ஜுனனுக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. ஒருபுறம் பகவான் அவனது கோழை மனத்தைக் குறித்து அவனைக் கடிந்து கொள்ளுகிறுர். மற்ருெருபுறம் செயலைத் தவிர்க்கும்படி அவனுக்கு பகவான் புத்திமதி கூறுவதுபோல் தோன்றுகிறது (அத்தியாயம்-2. சுலோகங்கள்-49-50). ஆனுல், உண்மை அப்படி அல்ல என்பதை பின்வரும் சுலோகங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

श्रीभगवानुवाच

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

ஸ்ரீ பகவான் உவாச

லோகே(அ)ஸ்மின் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக|
ஞான யோகேன ஸாங்க்யாஞம் கர்மயோகேன யோகிஞம்॥ 3

ஸ்ரீ பகவான் சொன்னுர்:

---

மனத்துடன் அதைச் செய்வதுதான். அந்த அத்தியாயத்தின் இறுதியில் கர்மயோகியான ஸ்திதப்ரக்ஞனைப் பற்றிய விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. எனினும், கர்ம யோகத்தைப் பற்றிய விளக்கம் அத்துடன் முடிந்துவிடவில்லை. விருப்பு வெறுப்பின்றி சம புத்தியுடன் செயல் புரிவதால் பாவம் ஏற்படாது என்பது உண்மையே எனினும், செயலைக் காட்டிலும் பற்றற்ற நிலை உயர்ந்தது எனில், செயல்புரிய வேண்டிய அவசியம் என்ன? அர்ஜுனனுக்கு எழுந்த இந்த சந்தேகத்தை இந்த அத்தியாயத்திலும், அடுத்த அத்தியாயத்திலும் பகவான் தீர்ப்பதுடன், "செயல் புரியத்தான் வேண்டும்" என்று வற்புறுத்துகிறுர்.
—திலகர்

3. பாவமற்ற அர்ஜுன, இந்த உலகில் அடையக் கூடிய இரண்டு நிலைகளைப்பற்றி நான் முன்பு சொல்லியிருக்கிறேன். ஒன்று, சாங்கியர்களின் ஞானயோக நிலை; மற்ருென்று, யோகிகளின் கர்மயோக நிலை.

[இங்கே, 'சாங்கியர்' என்பதற்கு சாங்கியம் அல்லது ஞான மார்க்கத்தைப் பின்பற்றுபவர் என்றும், 'யோகி' என்பதற்கு யோகம் அல்லது சுயநலமற்ற செயலைப் பின்பற்றுபவர் என்றும் பொருள்.]

न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥

ந கர்மணு மனரம்பாத் நைஷ்கர்ம்யம் புருஷோ(அ)ச்னுதே |
ந ச ஸன்யஸனுதேவ ஸித்திம் ஸமதிகச்சதி|| 4

---

3. குடும்பத்தில் இருப்பவனுக்கு கர்மமே சிறந்த மார்க்கம் என்று வேதமும் புராணங்களும் கூறுகின்றன. கிருஷ்ண பகவானும் அவ்விதமே அர்ஜுனனுக்கு எடுத்துக் கூறியிருக்கிருர். அப்படியாயின், "இந்த கோரமான காரியத்தைச் செய்யும்படி ஏன் என்னை வற்புறுத்துகிறீர்கள்" என்று அர்ஜுனன் ஏன் கேட்கிருன்? பகவான் கூறியதைத் தெளிவாக அறிந்து கொள்ளும் சக்தி தனக்கு இல்லை என்றே அர்ஜுனன் கூறுகின்ருன்: "ஒரு மனிதனிடம் ஞானமும், கர்மமும் இருப்பது பொருத்தமல்ல என்று தாங்கள் கருதினுல், நான் எந்த வழியைப் பின்பற்றுவது என்பதைச் சொல்லுங்கள். இவற்றைத் தவிர வேறு வழி இருந்தாலும், அதையும் எனக்கு எடுத்துக் கூறுங்கள். இரண்டு வழிகளையும் நான் மேற்கொள்ளுவது முடியாத காரியம். எனவே, ஏதாவது ஒரு வழியை எனக்குக் காட்டுங்கள்." —சங்கரர்.

3. உலகங்கள் சிருஷ்டிக்கப்பட்டபின், ஜீவராசிகளின் க்ஷேமத்திற்காகவும் விடுதலைக்காகவும் பகவான் வெவ்வேருன இரண்டு வழிகளைக் காட்டினுர். சாங்கியர்களுக்கு ஞானயோகம் விதிக்கப்பட்டது. வேதாந்தத்தை ஆராய்ச்சி செய்து ஆன்மாவுக்கும் உடலுக்கும் உள்ள வேற்றுமையை அறிந்து கொண்ட பின், எல்லாக் கர்மங்களையும், உலக பந்தங்கள் எல்லாவற்றையும் அறவே துறந்தவர்களே சாங்கியர்கள். உலகத்தில் வாழும் யோகிகளுக்காகவே கர்ம யோகம் விதிக்கப்பட்டது. ஏக காலத்தில் ஞானமும் கர்மமும் ஒரே நபரிடத்தில் இருக்கலாம் என்பது பகவானின் உத்தேசமாயின், வெவ்வேருன நபர்களுக்கு அவரவருக்குப் பொருத்தமான இரண்டு வழிகளை அர்ஜுனனுக்கு தெளிவாக ஏன் எடுத்துக் கூறவேண்டும்? ஒருவேளை அர்ஜுனன் இரண்டு வழிகளையும் பின்பற்றட்டும், மற்றவர்கள் இரண்டில் ஏதாவது ஒன்றைப் பின்பற்றட்டும் என்ற பாரபட்சம் பகவானுக்கு இருக்க முடியாது. எனவே ஒருவர் இரண்டு வழிகளையும் பின்பற்ற வேண்டும் என்பது பகவான் கூறியதன் அர்த்தம் அல்ல. —திலகர்.

4. மனிதன் ஒரு செயலையும் மேற்கொள்ளாததால், ஒரு போதும் கர்மத்திலிருந்து விடுபட்ட நிலையை அனுபவிப்பதில்லை. செயலைத் துறப்பதால் மாத்திரம் அவன் மோட்சத்தை அடைவதும் இல்லை.

'செயலிலிருந்து விடுதலை' என்பது செயலின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை என்பதேயாகும். எல்லாச் செயல்களையும் நிறுத்திவிடுவதன் மூலம் இந்த விடுதலையைப் பெற்றுவிட முடியாது. தவிர, செயல்களை நிறுத்துவது முடியாத காரியமும் ஆகும். (பின்வரும் சுலோகத்தைப் பார்க்கவும்) அப்படியாயின் அந்த விடுதலையை எப்படிப் பெறுவது? பின்வரும் சுலோகம் அதை விளக்குகின்றது.

[காந்திஜியின் குறிப்பில் காணப்படும் 'செயலின் கட்டுப்பாடு' என்பது ஸம்ஸார பந்தத்தையே, பிறப்பு இறப்புச் சுழலையே குறிக்கிறது. எல்லாச் செயல்களுக்கும் விளைவுகள் உண்டு. ஒருவிதமான செயல்களின் விளைவு ஸம்ஸார பந்தமாகும்; மற்றொருவிதமான செயல்களின் விளைவு அதிலிருந்து விடுதலை பெறுவதே.]

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

நஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்।
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் குணை:॥ 5

5. எந்த மனிதனும் எக்காலத்திலும் ஒரு விநாடி கூட யாதொரு செயலிலும் ஈடுபடாமல் இருக்க முடியாது. பிரகிருதியின் வழியே வரும் குணங்களால் எல்லோரும் செயலில் ஈடுபட்டுத் தீர வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

---

4. கர்மம், ஞானம் ஆகிய இரண்டும் மோட்சத்திற்கு வழிகாட்டுகின்றன என்றாலும், கர்மத்தின் மூலம்தான் ஞானத்தை அடைய முடியும்; ஞானத்தின் மூலம்தான் மோட்சத்தை அடைய முடியும். யக்ஞம், தவம் போன்ற செயல்களை ஒருவன் இந்த ஜன்மத்திலோ அல்லது முன் ஜன்மத்திலோ புரிந்ததன் பலனாகவே, பாவங்கள் ஒழிந்து அவனது மனம் தூய்மை அடைகின்றது. தூய்மையற்ற மனம் உள்ள ஒருவன் எக்காலத்திலும் ஞானத்தை அடைய முடியாது. —சங்கரர்.

5. எவரும் முற்றிலும் செயலில் ஈடுபடாமல் இருப்பதென்பது முடியாத காரியம். கர்மா என்ற தேள் ஒருபோதும் இறப்பதில்லை. எனவே, அந்தத் தேள் விஷமற்றதாக இருக்கும்படி நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். கீதை உபதேசிக்கும் சித்தாந்தத்தின்படி பற்றுதலை ஒழிப்பதே, அந்தத் தேளின் விஷத்தை அகற்றுவதற்கான வழியாகும். செயலைக் கைவிடுவதனால்

[பிரகிருதி, குணங்கள் ஆகியவற்றைப் பற்றிய விளக்கத்தை 'எனது சமர்ப்பண'த்தில் பார்த்துக் கொள்ளலாம். சிருஷ்டிக்கப்பட்ட எதனிடத்திலும் மூன்று குணங்களும் சமமாக இருப்பதில்லை. எனவே, சிருஷ்டிக்கப்பட்டவை யாவும் ஏதாவதொரு செயலில் ஈடுபட்டுத்தான் தீரவேண்டும்.]

कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन्।
इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்।
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே॥ 6

6. கர்மேந்திரியங்களை அடக்கும் ஒருவன், புலன்களுக்கான சாதனங்களை மனத்தில் சிந்தித்த வண்ணம் இருப்பானாயின், அத்தகைய மூடனை ஒரு மோசக்காரன் என்றே கூறவேண்டும்.

தன் நாக்கை அடக்கிக் கொள்ளும் ஒருவன், மற்றொருவனை மனத்தினால் தூஷிப்பானாயின் அவன் ஒரு மோசக்காரனே. எனினும் மனத்தைக் கட்டுப்படுத்தாத வரையில், கர்மேந்திரியங்களை அவற்றின் விருப்பப்படி விட்டுவிட வேண்டும் என்பது அதன் அர்த்தமல்ல. மனத்தைக் கட்டுப்படுத்துவதற்குப் பூர்வாங்கமாக வெளிப் புலன்களைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியமாகும், ஒருவர் தமக்குத்தாமே புலன்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டுமேயன்றி, மற்றவர்களின் நிர்ப்பந்தம் காரணமாக, அதாவது, பயம் காரணமாக அவற்றைக் கட்டுப்படுத்துவதால் பலனில்லை. எனினும், இங்கே மோசக்காரன் என்று கண்டிக்கப்பட்டுள்ள நபர், தன்னடக்கத்தைப் பணிவுடன் பயிற்சி செய்துகொள்ள முற்படும் நபர் அல்ல. நிர்ப்பந்தம் காரணமாக வேறு வழியின்றி தன் உடலைக் கட்டுப்படுத்தும் ஒருவன், மனத்தை விருப்பப்படி அலைய விடுவான். சாத்தியமாயின், விருப்பப்படி உடல் இன்பங்களையும் அனுபவிப்பான். அப்படிப்பட்ட ஒருவனைப்பற்றியே இந்த சுலோகம் குறிப்பிடுகிறது. அதற்கு நேர்மாறாக இருப்பவனைப்பற்றி அடுத்த சுலோகம் விளக்குகிறது.

---

மாத்திரம் யாரும் மோட்சத்தை அடைய முடியாது. அப்படியாயின், யாதொரு செயலிலும் ஈடுபடாத ஒரு கல்கூட மோட்சத்தை அடைந்துவிடும்! எனவே, ஞானத்தின் மூலமே மோட்சத்தை அடைய முடியும். செயல் புரியாமல் எவரும் இருக்க முடியாதாதலின், பற்றுதலின்றி செயல் புரிய வேண்டியது அத்தியாவசியமாகும். அப்போது தான் கர்ம பந்தத்திலிருந்து விடுபட முடியும். இதுதான் கர்ம யோகம். —திலகர்.

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதே(அ)ர்ஜுன।
கர்மேந்த்ரியை: கர்மயோகம் அஸக்த: ஸ விசிஷ்யதே॥ 7

7. அர்ஜுனா, எவன் எல்லாப் புலன்களையும் மனத்தினால் அடக்கி, பற்றின்றி கர்மயோகத்தில் புலன்களை ஈடுபடுத்துகின்றானோ, அவன்தான் சிறந்தவன்.

உடலும் மனமும் நன்றாக ஒத்திருக்கும்படி செய்ய வேண்டும். மனத்தைக் கட்டுப்படுத்தி வைத்தால் கூட, உடல் ஏதாவதொரு செயலில் ஈடுபட்டுத்தான் தீரும். ஆனால், யார் தன்னுடைய மனத்தை உண்மையாகவே கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கின்றானோ அவன், ஆபாசமான பேச்சை செவிகொடுத்துக் கேட்க மாட்டான்; கடவுள் தோத்திரத்தையோ அல்லது நல்ல மனிதர்களைப்பற்றிய புகழுரைகளையோ தான் விரும்பிக் கேட்பான்; சிற்றின்பங்களில் அவனுக்கு ருசி ஏற்படாது; ஆன்மாவை உயர்த்தும் செயல்களில்தான் ஈடுபடுவான். செயல்முறை அல்லது கர்ம யோகம் என்பது அதுதான். உடலின் பந்தத்திலிருந்து ஆன்மாவை விடுவிக்கும் யோகமே கர்ம யோகம் ஆகும். அதில், விருப்பப்படி போகங்களில் ஈடுபடுவதற்கு இடமே இல்லை.

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:|
சரீரயாத்ரா (அ)பி ச தே நப்ரஸித்யேத கர்மண: ॥ 8

---

6-7 மேற்கண்ட இரண்டு சுலோகங்களும் சென்ற அத்தியாயத்தில் உள்ள விஷயங்களை மேலும் விளக்குகின்றன. கர்ம யோகத்தில் செயலைக் காட்டிலும் விவேகம்தான் மேலானது. மனத்தூய்மை இல்லாத ஒருவன், பயம் காரணமாகவோ அல்லது பிறர் தன்னை நல்லவன் என்று கூறவேண்டும் என்பதற்காகவோ மாத்திரம் புலன்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி வைக்கலாம். ஆனால், அத்தகைய மனிதன் உண்மையில் நல்லவன் அல்ல, ஒரு மோசக்காரனே. கீதையில், பற்றின்றி செயல் புரிவதே கர்மயோகம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்ம யோகம், ஞான யோகத்தைக் காட்டிலும் சிறந்ததல்ல என்பதே இந்த சுலோகத்தின் அர்த்தம் என்று சில வியாக்கியானகர்த்தாக்கள் கூறியுள்ளனர். ஞான மார்க்கத்தைக் காட்டிலும் கர்ம மார்க்கமே சிறந்தது என்பதை கீதையில் உள்ள பல சுலோகங்களும் எடுத்துக் காட்டுகின்றன. அதனால்தான் கர்ம யோகத்தைப் பின்பற்றும்படி பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார்.
—திலகர்.

8. உனக்கு இடப்பட்டுள்ள கடமையை நீ செய். ஏனெனில், செயலற்று இருப்பதைக் காட்டிலும் செயல் மேலானது. செயலற்றிருந்தால், வாழ்க்கைக்கு அவசியமான உணவு அருந்துவது போன்ற சாதாரண அலுவல்களைச் செய்வது கூட அசாத்தியமாகிவிடும்.

['நியதம்' என்பதை 'இடப்பட்டுள்ள கடமை' என்று நான் மொழி பெயர்த்திருக்கிறேன். அதாவது, விதி நமக்கு இடப்பட்டுள்ள கட்டளை என்பதே அதன் அர்த்தமாகும். ஸ்வதருமம் (ஒருவரது சொந்தத் தொழில்) என்ற சொல்லுக்குப் பதிலாகவும் (அத்தியாயம் -18, சுலோகம் - 45), 'ஸ்வதருமம்' (ஒருவரது கடமை) என்ற சொல்லுக்குப் பதிலாகவுமே அது உபயோகிக்கப்பட்டிருக்கிறது. மற்றும் 'ஸ்வபாவநியதம்' (ஒருவரது இயல்புக்குத் தகுந்தவாறு நிர்ணயிக்கப்பட்டுள்ள கடமை) என்பதற்கும் (அத்தியாயம்-18, சுலோகம் - 47), 'ஸஹஜம்' (உடன் பிறந்த தொழில்) என்பதற்கும் பதிலாகவும் அந்தச் சொல் உபயோகிக்கப்படலாம். எனவே, விதிப்படி ஒருவர் செய்ய வேண்டிய கடமை என்பதற்கு, ஒருவர் மீது பிறரால் திணிக்கப்படும் கடமையல்ல, ஒருவரது இயல்புக்கும், மனப் போக்கிற்கும், வாழ்க்கைக்கும் உகந்த தொழில் என்பதே அர்த்தமாகும்.

இந்த சுலோகத்தில் அடங்கியுள்ள உண்மையை வால்டேர்* அவருக்கே உரித்தான முறையில் பின் வருமாறு கூறியுள்ளார்: "யாதொரு தொழிலிலும் ஈடுபடாமல் இருப்பதும், இவ்வுலகிலேயே இராமல் இருப்பதும் ஆகிய இரண்டும் ஒன்றேயாகும். சோம்பேறிகளைத் தவிர மற்ற எல்லோரும் நல்லவர்களே ஆவர்."

மேற்கண்ட சுலோகத்தின் பிற்பகுதி, பாஸ்வெலுக்கு டாக்டர் ஜான்சன் உணர்ச்சி ததும்பக் கூறிய பின்வரும் பதிலையே

---

* வால்டேர் (1694—1778) பிரான்சில் மிகவும் புகழ்பெற்று விளங்கிய தத்துவ நிபுணரும் நூலாசிரியரும் ஆவார். பொதுவாக ஐரோப்பாவிலும், குறிப்பாக பிரான்சிலும் அவர் இணையற்ற புரட்சி எழுத்தாளராகத் திகழ்ந்தார்.

8. யாகச் சடங்குகள் இன்று அநேகமாக நின்றுவிட்டன. எனவே, அவற்றை இன்று யாரும் முக்கியமாகக் கருதுவதில்லை. ஆனால் கீதை உபதேசிக்கப்பட்ட காலத்தில், வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள யாகங்கள் எங்கு பார்த்தாலும் நடந்து கொண்டிருந்தன. அதனால்தான் கீதையில் அவற்றைப் பற்றி அடிக்கடி குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்மம் என்ற சொல்கூட யாகத்தையே குறிக்கிறது. ஆனால் உண்மையில் 'யக்ஞம்' என்ற சொல் எல்லாச் செயல்களையுமே குறிக்கின்றது. பிரம்மா உலகையும் மற்ற ஜீவராசிகளையும் சிருஷ்டித்தபோது அந்தந்த வர்ணத்தினருக்கான செயல்முறைகளையும் வகுத்தார். அந்தச் செயல் முறைகள் அல்லது சடங்குகளையே இந்த சுலோகத்தில் உள்ள 'நியதம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. —திலகர்

நினைவூட்டுகிறது: "வாழ்க்கை முறையை வற்புறுத்தி நடத்திச் செல்வது செயலேயாகும்."]

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥ ९ ॥

யக்ஞார்த்தாத் கர்மணோ (அ) ந்யத்ர லோகோ (அ) யம் கர்ம பந்தன:।
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்த ஸங்க: ஸமாசர ॥ 9

*9.* கௌந்தேயா, யக்ஞத்திற்காகச் செய்யும் கர்மங்களைத் தவிர மற்றச் செயல்கள் யாவும், உலகத்தில் உள்ள மனிதர்களை கட்டுண்டிருக்கும்படி செய்துவிடுகின்றன. ஆகையால், பற்றற்று செயல் புரிவாயாக.

'யக்ஞத்திற்காகச் செய்யும் கர்மம்' என்றால் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட தன்னலமற்ற தொண்டுகள் என்றே அர்த்தம்.

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:।
அனேன பரஸவிஷ்யத்வம் ஏஷ வோ (அ) ஸ்த்விஷ்டகாமதுக்॥-10

*10.* ஆதியில் சிருஷ்டி கர்த்தா யக்ஞத்துடன் மனித வர்க்கத்தைச் சிருஷ்டித்து, "இதனால் நீங்கள் வளர்ச்சி அடைவீர்களாக. இது உங்களுடைய ஆசைகளையெல்லாம் நிறைவேற்றுமாக" என்று கூறினர்.

---

9, ஒரு மனிதன் யக்ஞத்தை தவிர வேறு ஒன்றும் செய்யவில்லையாயின், அவன் பந்தத்திலிருந்து தப்பமுடியுமா? யக்ஞம் என்பதும் ஒரு செயல்தான். யக்ஞம் செய்தால் சொர்க்கத்தை அடையலாம் என்று சாஸ்திரம் கூறுகிறது. எனவே, யக்ஞம் செய்பவன் அந்தப் பலனிலிருந்து தப்ப முடியாது. இந்தப் பலனே இறுதியான மோட்சத்திற்குத் தடையாக இருக்கிறது. எனவே, யக்ஞம் கூட பற்றற்றுச் செய்ய வேண்டும் என்பதே, இந்த சுலோகத்தினுடைய பிற்பகுதியின் அர்த்தமாகும். தவிர, இங்கே யக்ஞம் என்பது குறுகிய அர்த்தத்தில் குறிப்பிடப்படவில்லை. அந்தந்த வர்ணத்தினர் செய்ய வேண்டிய உலகாயதமான கடமைகள் கூட யக்ஞமேயாகும். —திலகர்.

இந்த உலகில், பலனை எதிர்பாராத பற்றற்ற செயலைத் தவிர மற்றவை யாவும் மனிதனை அதிகமாகக் கட்டுப்படுத்தும் அடிமைச் சங்கிலிகளே.

—சங்கரர்.

देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

**தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ:|**
**பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத||-11**

*11.* மேலும் சிருஷ்டிகர்த்தா கூறினர்: "இந்த யக்ஞத்தின் மூலம் நீங்கள் தேவர்களைப் பராமரியுங்கள். தேவர்கள் உங்களைப் பராமரிப்பார்கள். அவ்விதம் ஒருவரையொருவர் பராமரிப்பதன் மூலம் நீங்கள் மகோன்னதமான நன்மையை அடைவீர்கள்."

[குரான் கூறுவதாவது: "ஒவ்வொரு தேசத்திற்கும் நாம் தெய்விகச் சடங்குகளைக் கொடுத்திருக்கிறோம். அவற்றை அவர்கள் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள்" (22.67) "அல்லாவுக்கு நல்ல விதமாகக் கடன் கொடுப்போர் யார் இருக்கிறார்கள்? அவ்விதம் கொடுத்தால், அவர் அதை பல மடங்காகப் பெருக்கித் திருப்பிக் கொடுத்துவிடுவார். அல்லா நேராக்கித் திருத்துகிறார். அபிவிருத்தி செய்கிறார்." (2-245)]

इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२ ॥

**இஷ்டான் போகான் ஹி வோ தேவா தாஸ்யந்தே யக்ஞபாவிதா:||**
**தைர்தத்தானப்ரதாயைப்ய: யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ:||-12**

*12.* "யக்ஞத்தினல் பராமரிக்கப்பட்ட தேவர்கள், நீங்கள் விரும்பும் வரன்களை அளிப்பார்கள்." ஆனல் அவர்களால் அளிக்கப்படுவதை, அவர்களுக்குச் சேரவேண்டியதைக் கொடுக்காமல் உண்பவன் உண்மையில் திருடனேயாவான்.

---

11. யக்ஞங்களைச் செய்வதன்மூலம் நீங்கள் தேவர்களைப் பேணுகின்றீர்கள். அதற்குப் பதிலாக அவர்கள் அமுதம் போன்ற மழையைக் கொடுத்து மனித வர்க்கத்தைப் பராமரிக்கிறார்கள். அவ்விதம் பரஸ்பரம் உதவி செய்வதன் மூலம் நீங்கள் சிறிது சிறிதாக ஞானத்தையோ, சொர்க்கத்தையோ அல்லது மோட்சத்தையோ அடைவீர்கள். —சங்கரர்.

வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று—குறள்

இதன் கருத்து : அடிக்கடி மழை பெய்வதாலேயே உலகம் வாழ முடிகின்றது. எனவே மழையை அமுதமாகவே கருதவேண்டும்.

11, 12-ஆவது சுலோகங்களில் உள்ள 'தேவர்கள்' என்ற வார்த்தைக்கு, 'கடவுளின் சிருஷ்டி முழுவதும்' என்றே அர்த்தம் செய்துகொள்ள வேண்டும். சிருஷ்டிக்கப்பட்ட எல்லா ஜீவன் களுக்கும் தொண்டு செய்வதே தேவர்களுக்குச் செய்யும் தொண்டு ஆகும். அதுதான் யக்ஞம்.

[யக்ஞம் என்பதை விளக்கி காந்திஜி எழுதிய கட்டுரை களின் சாரம் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது:

யக்ஞம் என்ற சொல்லின் பல்வேறு அர்த்தங்களையும் கருத் தையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இம்மையிலோ, மறுமை யிலோ பிரதிபலன் எதையும் எதிர்பாராமல் மற்றவர்களுடைய நன்மைக்காகச் செய்யப்படும் தொண்டிற்கு யக்ஞம் என்று பெயர். இங்கே தொண்டு என்ற சொல்லை அதன் விரிவான பொரு ளில் எடுத்துக்கொள்ள வேண்டும். செய்கையோடு, மனத்தால் நினைப்பது, வாயால் பேசுவது இந்த இரண்டையும் கூடச் சேர்த் துக் கொள்ளவேண்டும். 'மற்றவர்கள்' என்ற சொல், மனிதர்களை மட்டும் குறிப்பிடவில்லை; உயிரினம் யாவையுமே குறிப்பிடுகிறது. மனித வர்க்கத்திற்கு நன்மை செய்யும் நோக்கத்துடன் உயிர்ப் பிராணிகளைப் பலி கொடுப்பது யக்ஞம் ஆகாது. மிருக பலி கொடுக்கலாம் என்று வேதங்களில் கூறப்பட்டிருக்கிறதே என்று யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. சத்தியம், அகிம்சை என்ற அடிப்படையான தத்துவங்களுக்கு மிருகபலி முற்றிலும் முரணா னது என்பதை நாம் உணர்ந்துகொண்டால் போதுமானது. வேதங்களை நான் படித்ததில்லை என்பதை ஒப்புக் கொள்கிறேன். இவ்விஷயங்கள் சம்பந்தப்பட்டவரையில், வேதங்களைப் படிக் காததைக் குறித்து நான் கவலைப்படவில்லை. ஏனெனில், வேத காலத்தில் இருந்த சமூகத்தில் மிருக பலி கொடுக்கும் வழக்கம் இருந்ததாக ருசுப்பிக்கப்பட்டால் கூட, அகிம்சையைப் பின் பற்றுவோருக்கு அது ஒரு வழிகாட்டியாக இருக்க முடியாது.

யக்ஞம் என்பது, பரந்த பிரதேசத்தில் பெருவாரியான மக் களுக்கு அதிகமான நன்மை செய்வதாக இருக்க வேண்டும். அதிகக் கஷ்டமில்லாமல் ஏராளமான ஆடவர்களும் பெண்களும் செய்யக்கூடியதாகவும் இருக்கவேண்டும். உயர்ந்த நன்மை ஏற் படுவதாக இருந்தால்கூட, ஒருவருக்குத் தீங்கு செய்வதோ அல் லது தீங்கு செய்ய நினைப்பதோ யக்ஞம் ஆகாது. யக்ஞம் என்ற விளக்கத்தின் கீழ் வராத எதுவும் பந்தத்தை வளர்க்கிறது என்றே கீதை கூறுகிறது. அனுபவமும் அதை உறுதிப்படுத்து கிறது.

இத்தகைய யக்ஞம் இல்லாமல் உலகம் ஒரு நிமிஷம் கூட இயங்க முடியாது. ஆதலின், கீதையின் இரண்டாவது அத்தியா யத்தில் உண்மையான ஞானத்தைப்பற்றி விளக்கிய பிறகு, மூன் றாவது அத்தியாயத்தில் அதை அடைவதற்கான வழிகள் விவரிக் கப்பட்டிருக்கின்றன. சிருஷ்டியுடன் யக்ஞமும் தோன்றியது

என்று அதில் கூறப்பட்டிருக்கிறது. எனவே, எல்லா சிருஷ்டி களுக்கும் சேவை புரிய வேண்டும் என்பதற்காகவே இந்த உடல் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. யக்ஞம் செய்யாமல் உண்பவன் திருட்டு உணவைச் சாப்பிடுகிருன் என்று கீதை கூறுகிறது. பரிசுத்தமான வாழ்க்கையை நடத்த விரும்புவோரின் ஒவ்வொரு செய்கையும், இந்த யக்ஞத் தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டும். பிறந்ததிலிருந்தே நம்முடன் யக்ஞமும் வந்திருப்பதால், ஆயுள் முழுவதும் நாம் கடன்பட்டவர்களாகவே இருக்கிறோம். ஓர் அடிமை தன்னுடைய எஜமானனிடமிருந்து உணவு, ஆடை முதலியவற்றைப் பெறுவது போலவே, சிருஷ்டி கர்த்தா நமக்கு அளிப்பதை நாம் நன்றியுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

மேலும், யக்ஞம் என்பது நாள் முழுவதும் செய்யவேண்டிய சேவையாகும். ஆசையின்றிச் சேவை செய்வது, மற்றவர்களுக்கு தயவு காட்டுவதாகாது; நமக்கு நாமே தயவு காட்டிக் கொள்ளுவதாகும். கீதையில் பற்றின்மை என்பது, உலகத்தைத் துறந்து காட்டுக்குப் போய்விடவேண்டும் என்ற பொருளில் கூறப்படவில்லை. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் இந்தப் பற்றின்மை ஓங்கி நிற்க வேண்டும். யக்ஞம் ஒரு சுமையாக இருக்கிறது அல்லது தொல்லையாக இருக்கிறது என்று ஒருவர் நினைத்து விட்டால், அது யக்ஞம் ஆகாது. புலன் நுகர்ச்சி அழிவில் கொண்டுபோய்விடுகிறது. பற்றற்று செயல் புரிவது அமர நிலையை அளிக்கின்றது.

யக்ஞம் என்பது அழகும் சக்தியும் நிறைந்த ஒரு செயல் ஆகும். எனவே அறிவு, அனுபவம் ஆகியவற்றின் வளர்ச்சிக்குத் தகுந்தவாறு அவற்றின் அர்த்தமும் வளர்ச்சி அடைவதற்கும் மாறுவதற்கும் இடம் உண்டு. 'யக்ஞம்' என்ற சொல்லுக்கு வழிபாடு என்பதே நேரடியான அர்த்தமாகும். அதாவது, ஏதாவதொரு தியாகச் செயலையோ அல்லது தொண்டையோ யக்ஞம் எனலாம். இந்த அர்த்தத்தில், யக்ஞம் என்பது ஒவ்வொரு காலத்திலும் அந்தந்தக் காலத்திற்குத் தகுந்தவாறு இருக்கும். யக்ஞத்தினுல் அதாவது தியாகத்தினுல்தான் மனிதவர்க்கமே வாழ்கின்றது.

'நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துச் சாப்பிடு' என்று பைபிள் கூறுகிறது. தியாகங்களில் பலவிதம் இருக்கலாம். சாப்பிடுவதற்காக உழைப்பதும் அவற்றில் ஒன்ருகும். எல்லோரும் தங்களுடைய உணவிற்காக உழைக்க முற்படுவார்களாயின், எல்லோருக்கும் போதிய உணவும், போதிய ஓய்வும் இருக்கும். பின்னர், ஜனத்தொகை அதிகமாகிவிட்டது என்ற கூக்குரலுக்கு இடம் இராது. நம்மைச் சுற்றி நாம் காணும் நோய்களுக்கும், துன்பங்களுக்கும் கூட இடம் இராது. அத்தகைய உழைப்புத்தான், மகோன்னதமான தியாகம் ஆகும். உடல்களின் மூலமோ அல்லது மனத்தின் மூலமோ மனிதர் மற்றும் பல தொண்டுகளைச் செய்வார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனல்,

அந்தத் தொண்டுகள் யாவும் பொது மக்களின் நன்மைக்காக அன்பை அடிப்படையாகக் கொண்ட உழைப்பாகவே இருக்கும். உடல் உழைப்பை அல்ல, அறிவை அடிப்படையாகக்கொண்டு மனிதர்கள் தங்களுடைய ஜீவனத்திற்கு சம்பாதித்துக்கொள்ளக் கூடாதா? கூடாது. உடலின் தேவைகளை, உடல் உழைப்பினாலேயே நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். 'சீசருக்குச் சொந்தமானதை சீசரிடம் ஒப்புவித்துவிட வேண்டும்' என்ற பைபிள் வாக்கியமானது இங்கே முற்றிலும் பொருந்தும்.

*12.* ஒருவர் தமக்குச் சொந்தமான எதையும் திருப்பிக் கொடுத்து விடுவதில்லை. தேவர்களுக்கோ அல்லது கடவுளுக்கோ சொந்தமானதையே திருப்பிக் கொடுக்கிறார்கள். இந்த யக்ஞம் தான், நாம் இயற்கைக்கோ அல்லது கடவுளுக்கோ திருப்பிக் கொடுக்கும் கடன் ஆகும்.]

**यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।**

**भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥**

**யக்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை:|**

**புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்ம காரணாத்|| 13**

*13.* யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் தருமவான்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். ஆனால், தமக்கென்றே சமைக்கும் கொடியர்கள் பாவத்தை உண்கின்றனர்.

[பின்வரும் வேத வாக்கியம் ஒன்றையே இது புதிய முறையில் திருப்பிக் கூறுவதாகத் தோன்றுகிறது: "எவன் அதிதிகளை உபசரித்து அவர்களுக்கு உணவு அளிக்காமல் தான் மாத்திரம் சாப்பிடுகிறானோ, அவன் பாவத்தையே உண்கிறான்."] (*1*)

மனுஸ்மிருதியிலும் உள்ள அதுபோன்ற சுலோகம் எல்லோரும் அறிந்ததே: "தனக்கு மாத்திரம் சமைத்துக் கொள்பவன் பாவத்தையே உண்கிறான். யக்ஞம் செய்த பிறகு என்ன மீதியிருக்கிறதோ, அதுவே நல்லவர்கள் அருந்தும் உணவு என்று விதிக்கப்பட்டிருக்கிறது."(*2*)

---

(1) नार्यमणं पुष्यति नो सखायं ।

केवलाघो भवति केवलादी ॥

ऋग्वेद १०.११७.६

(2) अघं स केवलं भुंक्ते यः पचत्यात्मकारणात् ।

यज्ञशिष्टाशनं ह्येतत् सतामन्नं विधीयते ॥

मनुस्मृति ३. ११८

பைபிளும் பின்வருமாறு கூறுகிறது: ''தகாத முறையில் யார் சாப்பிடுகிறுனே, யார் தண்ணீர் அருந்துகிறுனே அவன் தண்டனைக்குரிய பாவத்தையே அருந்தியவனுகிறுன்''

இங்கே 'தகாத முறையில்' என்பதற்கு 'இறைவனை நினைக்காமல்' என்பதே அர்த்தமாகும்.]

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥

அன்னுத் பவந்தி பூதானி பர்ஜன்யா தன்னஸம்பவ:|
யக்ஞாத் பவதி பர்ஜன்ய: யக்ஞ: கர்மஸமுத்பவ:|| 14

14. உணவிலிருந்தே எல்லா உயிர்களும் உண்டாகின்றன. மழையிலிருந்து உணவு உண்டாகின்றது. யக்ஞத்திலிருந்து மழை பெய்கின்றது. செயலின் பலனே யக்ஞம் ஆகும்.

[''இங்கே உடல் உழைப்புக் கொள்கையே விவரிக்கப்பட்டிருக்கிறது. இதையே ஜீவன உழைப்பு என்று டால்ஸ்டாய் கூறியுள்ளார். தன்னலமின்றி மற்றவர்களுக்காக உழைப்பதே யக்ஞம் அல்லது தியாகம் ஆகின்றது. அறிவினுல் அளிக்கப்படும் விருந்துகளால் மழை வருவதில்லை. கலப்பற்ற உடல் உழைப்பினுலேயே மழை பெய்கின்றது. எங்கே காடுகளில் உள்ள மரங்களை வெட்டிவிடுகிறுர்களோ அங்கே மழைபெய்வதில்லை என்பதும், எங்கே மரங்களை வளர்க்கின்றுர்களோ அங்கே மழை பெய்கிறது என்பதும் யாரும் மறுக்க முடியாத விஞ்ஞான ரீதியான உண்மையாகும். எவ்வளவுக்கு மரங்கள் அதிகமாக வளர்க்கப்படுகின்றனவோ அவ்வளவுக்கு அதிக மழையும் பெய்கிறது. உடல் உழைப்பை நிறுத்திவிடுவதன் மூலம் உடலிலும் ஒழுக்க சம்பந்தமாகவும் ஏற்படக் கூடிய விபரீதமான விளைவுகளை யார் அறிவார்?'' -'எராவ்டா மந்திர்']

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम्।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர ஸமுத்பவம்|
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யக்ஞே ப்ரதிஷ்டிதம்|| 15

---

14. மனிதனின் உற்பத்தியையும் அவன் உயிர் வாழ்வதற்கு அவசியமான உணவையும் பற்றி மனுஸ்மிருதியும் அவ்விதமே கூறியிருக்கிறது. யக்ஞத்தில் செய்யப்படும் ஹோமம் சூரியனுக்குப் போய்ச் சேருகின்றது. அவரது கருணையால் மழை பெய்கின்றது. மழையிலிருந்து உணவும் உயிர்களும் உண்டாகின்றன என்று மனு கூறுகிறுர். தைத்திரீய உபநிடதம், மகாபாரதம் ஆகிய நூல்களிலும் அவ்விதமே கூறப்பட்டிருக்கிறது. —திலகர்.

15. செயல் (கர்மம்) பிரம்மத்தினின்றும் உண்டாகிறது; பிரம்மம் அழியாத பரம்பொருளிலிருந்து உண்டாகிறது. எனவே, எங்கும் வியாபித்துள்ள பிரம்மம் எப்போதும் யக்ஞத்தையே உறுதியான அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது.

[14-15. 15-ஆவது சுலோகத்தில் பிரம்மம் என்ற சொல் அனுவசியமாக மிகுந்த சங்கடத்தை உண்டாக்கியிருக்கிறது. முதல் இரண்டு இடங்களில் வரும் பிரம்மம் என்ற சொல்லுக்கு பிரகிருதி என்று பொருள். அதன் பின் இரண்டு இடங்களில் வரும் பிரம்மம்தான் அழிவற்றது, எல்லை இல்லாதது, எல்லாச் சிருஷ்டிகளையும் வியாபித்திருப்பது. சிருஷ்டிக்குக் காரணமும், சிருஷ்டியின் விளைவும் யக்ஞம்தான் என்பதே இதன் கருத்தாகும். மகாபாரதம் சாந்தி பர்வத்திலும் இதே கருத்து இவ்விதம் விவரிக்கப்பட்டிருக்கிறது: ''சிருஷ்டி யாவும் யக்ஞத்தி லிருந்து உண்டாகின்றது; யக்ஞம் சிருஷ்டியிலிருந்து உண்டாகின்றது.''*

இதே கருத்தையே டால்ஸ்டாய் இன்னும் எளிய நடையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: ''உழைப்பினால் உணவு உண்டாகின்றது. உணவினால் உழைப்பு ஏற்படுகிறது. இந்தச் சக்கரத்திற்கு முடிவே இல்லை. இவ்விரண்டில் ஒன்று மற்றொன்றுக்கு ஆதாரமாக இருக்கிறது.'']

**एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।**

**अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥**

**ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய:|**

**அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி|| 16**

---

* अनु यज्ञं जगत् सर्वं यज्ञश्चानुजगत् सदा ।

शान्ति पर्व २६७-३४

*அனுயக்ஞம் ஜகத்ஸர்வம் யக்ஞச்சானு ஜகத் ஸதா|*

சாந்தி பர்வம் 267-34

16. யக்ஞமோ அல்லது நான்கு வர்ணத்தினருக்கும் விதிக்கப்பட்டுள்ள கடமைகளோ, மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டவை அல்ல, பிரம்ம தேவனால் சிருஷ்டிக்கப்பட்டவை என்பது ருசுவாகியிருக்கிறது. ஒருவர் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்வதற்கும், உலகம் இயங்குவதற்கும் அவை அவசியமானவை. எனவே, உலகில் இந்த சக்கரம் இடைவிடாது சுழன்று கொண்டிருக்க வேண்டியது அவசியமாகும். —திலகர்.

*16.* பார்த்தா, அவ்விதம் சுழன்றுவரும் சக்கரத்தைப் பின்பற்ருமல் இந்த உலகில் யார் பாவம் செய்துகொண்டும், புலன்களைத் திருப்தி செய்துகொண்டும் வாழ்கின்ருனே, அவனது வாழ்க்கை வீணுகிவிடுகின்றது.

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्यकार्यं न विद्यते ॥ १७ ॥

யஸத்வாத்ம ரதிரேவ ஸ்யா தாத்மத்ருப்தச்ச மானவ:|
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ் தஸ்யகார்யம் நவித்யதே॥ 17

*17.* ஆன்மாவில் இன்புற்று, ஆன்மாவில் மனத் திருப்தியடைந்து, ஆன்மாவிலேயே மகிழ்ந்திருப்பவனுக்கு, செய்ய வேண்டிய காரியம் எதுவுமே இல்லை.

*[இந்த அற்புதமான சுலோகத்தில் பல்வேறு அர்த்தங்கள் அடங்கி யிருக்கின்றன. அழிவற்ற ஆனந்தத்தை இடைவிடாது கொடுக்கும் ஊற்றை அது குறிப்பிடுகின்றது. முந்திய சுலோகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள சிற்றின்பப் பிரியனுக்கும், ஆன்மிக விஷயங்களில் நாட்டம் கொண்டவனுக்கும் உள்ள வேற்றுமையையும் இந்த சுலோகம் காட்டுகிறது "ஒரு மனிதன் அடையும் ஆனந்தத்தின் தரம், அவன் எங்கிருந்து அதை அடைகிருன் என்பதையே பொறுத்திருக்கிறது" என்று செயின்ட் அகஸ்டின் கூறியுள்ளார்.*

*சிற்றின்பங்களில் மனத்தைப் பறிகொடுத்துள்ள மனிதன், யாதொரு யக்ஞமும் செய்வதில்லை. அவன் புலன்களைத் திருப்தி செய்வதிலேயே ஈடுபட்டு, வாழ்க்கையை வீணுக்கிக் கொள்கிருன். அவனது நடவடிக்கைகள் அவனை மேன்மேலும் பாவத்திலும் பந்தத்திலும் ஆழ்த்திவிடுகின்றன. ஆன்மிக விஷயங்களில் நாட்டம் கொண்ட மனிதனேவெனில், எல்லா ஆனந்தங்களுக்கும் நிரந்தரமான ஊற்ருக இருக்கும் ஆன்மாவைக் குறித்து தன் உள்ளேயே கவனத்தைச் செலுத்துகிருன். அவ்விதம் செய்வதன் மூலம் கர்மாவிலிருந்து அவன் விடுதலை பெறுகிருன்.*

*அவன் எல்லாச் செயல்களையும் விட்டுவிட வேண்டும் என்பது இந்த சுலோகத்தின் அர்த்தமல்ல. கட்டுப்படுத்தும் எல்லாச் செயல்களிலிருந்தும் அவன் விடுதலை அடைகிருன் என்பதே அதன் அர்த்தமாகும் (அத்தியாயம்-4, சுலோகம்-23). அத்தகைய ஒருவன் தன்னைத்தானே அடக்கியாளும் எஜமானனுக இருக்கிருன்; உலகத்துடன் தன்னை ஐக்கியப்படுத்திக்கொண்டிருக்கிருன். தனக்காக அவன் வாழவில்லை; ஆன்மாவிற்காகவே வாழ்கிருன்; அதாவது அவனது ஆன்மாவும் உலகத்தின் ஆன்மா*

வும் ஒன்ருக இருக்கிறது. தன் விருப்பப்படி செயல்புரிய அவனுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. இதன் சம்பந்தமாக உபநிடதங்களில் உள்ள மூல சுலோகங்கள் பின்வருமாறு:

*1.* "உண்மையில் மேலேயும் ஆன்மா, கீழேயும் ஆன்மா, எதிரே ஆன்மா, பின்புறத்திலும் ஆன்மா, வலது புறத்தில் ஆன்மா, இடது புறத்திலும் ஆன்மா. இதைப் பார்த்தும், இதை நம்பியும், இதை உணர்ந்தும் ஆன்மாவில் ஆனந்தம் அடையும், ஆன்மாவுடன் விளையாடும், ஆன்மாவுடன் இன்பத்தை அனுபவிக்கும், ஆன்மாவிலேயே எல்லா இன்பங்களேயும் நாடும் ஒருவன் சுயராஜ்யத்தை அடைகிருன். மூன்று உலகங்களிலும் அவன் தன் விருப்பம்போல் பூரண சுதந்திரத்துடன் நடமாடுகிருன்" -சாந்தோக்ய உபநிடதம் - *7. 25. 2**

*2.* "ஆன்மாவை அறிந்தவன், ஆன்யாவுடன் விளையாடுபவன், ஆன்மாவில் இன்புற்றிருப்பவன்தான் எப்போதும் செயலில் ஈடுபட்டவனுக இருக்கிருன். பிரம்மத்தை அறிந்தவர்களிலெல்லாம் அவன்தான் சிறந்தவன். - முண்டக உபநிடதம் - *3. 1. 4.**

அவனது செயல்கள் எப்படியிருக்கும் என்பதுபற்றி யாரும் கூற முடியாது; எந்த வேத நூலும் நிர்ணயிக்க முடியாது. உடலுடன் கூடிய அவனது வாழ்க்கையே உலகத்தின் நன்மைக்கு உடன்பாடாக இருக்கும் என்பது மாத்திரம் நிச்சயம்.]

**नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।**

**न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥**

**நைவ தஸ்ய க்ருதேனுர்த்தோ நாக்ருதேனேஹ கச்சன।**

**ந சாஸ்ய ஸர்வபூதேஷு கச்சிதர்த்த வ்யபாச்ரய:। 18**

---

* अथात आत्मादेश एवात्मैवाधस्ता दात्मोपरिष्टा दात्मापश्चादात्मा पुरस्ता–दात्मा दक्षिणत आत्मोत्तरत आत्मैवेदं सर्वमिति स वा एष एवं पश्यन्नेवं मन्वान एवं विजान न्नात्मरति रात्मक्रीड आत्ममिथुन आत्मानन्दः स स्वराड् भवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति ।

छान्दोग्य :७.२५.२

विजानन् विद्वान्....आत्म क्रीड आत्मरति :

क्रियावानेष ब्रह्मविदां वरिष्ठ :

मुण्डक : ३.१.४

*18.* எந்தக் காரியமாயினும், அதைச் செய்வதிலோ அல்லது செய்யாதிருப்பதிலோ அவனுக்கு எவ்வித அக்கறையும் இருப்பதில்லை. சுயநலனுக்காக அவன் யாரையும், எதையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியமும் இல்லை.

तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।

असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர।

அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷ:॥ 19

*19.* ஆகையால், நீ செய்து தீரவேண்டிய வேலையை எப்போதும் பற்றில்லாமல் செய். பற்றின்றி செயல் புரிபவன் எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை அடைகிறான்.

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।

लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜனகாதய:।

லோக ஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யன் கர்த்துமர்ஹஸி॥ 20

*20.* ஜனகரும் மற்றவர்களும் செயல்களில் ஈடுபட்டதால் தான் சித்தியடைந்தார்கள். மனித வர்க்கத்திற்கு வழிகாட்டியாக இருப்பதற்கும் நீ செயல் புரிய வேண்டியது அவசியமாகும்.

---

19. இந்த உலகில் தூங்குவது, உட்காருவது, எழுந்திருப்பது ஆகியவை யாவும் செயல்களே. எனவே செயல்களைக் கைவிடுவதன் மூலம் யாரும் மோட்சத்தை அடைந்துவிட முடியாது. ஒருவன் ஞானியாக இருப்பினும், அஞ்ஞானியாக இருப்பினும் அவன் கருமங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது. ஒருவன் பற்றின்றியும் யாருடைய வற்புறுத்தலின்றியும் சாத்திரங்களால் தனக்கு விதிக்கப்பட்டுள்ள கடமையைச் செய்வானாயின், அவன் உலக பந்தங்களிலிருந்து விடுதலை அடைகிறான். —திலகர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் —குறள்.

இதன் கருத்து : இந்த உலகில் குடும்ப வாழ்க்கையை அறநெறி தவறாமல் நடத்துபவன், விண்ணுலகில் தேவர்களிடையே இடம் பெறுவான்.

[மிதிலையின் மன்னரான ஜனகர் ஒரு தத்துவ ஞானி. தன்னைத்தானே பூரணமாக அறிந்துகொண்டு, இடைவிடாமல் செயலில் ஈடுபடும் ஒரு நிலைக்கு இந்தியாவில் எப்போதும் ஜனகரையே உதாரணமாகக் கூறுவார்கள். 'என்னுடையது' என்ற உணர்ச்சி அவரிடம் அறவே இல்லை. ''மிதிலை நகர் தீப் பிடித்து எரிகிறது'' என்று அவரிடம் கூறியபோது, ''மிதிலை தீப் பற்றி எரிந்தால், எனக்குச் சொந்தமானது எதுவும் எரிந்து விடவில்லையே'' என்று ஜனகர் கூறினராம். ஜனகர் அடைந் திருந்த புகழை விளக்குவதற்காக அசுவகோஷன் எழுதிய புத்த சரித்திரத்திலிருந்து லோகமான்ய திலகர் ஒரு சுலோகத்தை மேற் கோளாகக் காட்டியுள்ளார்:

''யோக விதியில் (தன்னலமின்றி செயல்புரிதல்) ஜனகர் ஆச்சாரியரின் (குரு) ஸ்தானத்தை அடைந்திருந்தார். அதற்குமுன் எவரும் எக்காலத்திலும் அந்த நிலையை எட்டியதில்லை.'']

**यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।**
**स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥**

**யத் யதாசரதி ச்ரேஷ்ட: தத் ததேவேதரோ ஜன:|**
**ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்த்ததே|| 21**

*21.* சிறந்த மனிதன் என்ன செய்கிறானோ, அதையேதான் மற்றவர்களும் செய்வார்கள். அவன் காட்டும் உதாரணத்தையே உலகம் பின்பற்றுகிறது.

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥**

**ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன|**
**நானவாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி|| 22**

*22.* பார்த்தா, மூன்று உலகங்களிலும் நான் செய்ய வேண் டிய கடமை எதுவுமே இல்லை. நான் அடையாத ஒன்றை இனி அடைந்தாக வேண்டும் என்பதும் இல்லை. அப்படி இருந்தும் கூட, நான் எப்போதும் செயல் புரிந்தவண்ணம் இருக்கிறேன்.

கடவுள் உருவமற்றவரானதால், அவர் உடலினால் எத்தகைய அலுவலும் செய்வதற்கில்லை என்று சிற்சில சமயங்களில் ஆட்சேபணை எழுகின்றது. வேண்டுமானால், அவர் மனத்தினால்

செயல் புரிவதாக எண்ணலாம் என்றும் கூறப்படுகிறது. இது சரியல்ல. சூரியன், சந்திரன், பூமி ஆகிய மற்றவை இடைவிடாது இயங்கிக் கொண்டே இருக்கின்றன. அவை அவ்விதம் இயங்கு வது கடவுள் செயல் புரிவதையே குறிக்கின்றது. இது, மனம் சம்பந்தமான அலுவல் இல்லை. ஸ்தூலமான அலுவலேயாகும். கடவுளுக்கு உடலோ, உருவமோ இல்லை என்றாலும், உடலும் உருவமும் உள்ளவரைப் போலவே அவர் செயல் புரிகிறார். அவர் எப்போதும் செயல் புரிபவராக இருந்தாலும், அவர் செயலி லிருந்து விடுபட்டவராகவே இருக்கிறார். செயலினால் அவர் பாதிக்கப்படுவதில்லை. இயற்கையின் நடவடிக்கைகள் யாவும் யந்திரத்தைப்போல் இயங்குகின்றன. என்றாலும், தெய்வத் திற்குத் தெரிந்தும் தெய்வ சித்தத்திற்கு இணங்கவுமே அவை இயங்குகின்றன. அதுபோலவே மனிதனும் தன்னுடைய தினசரி நடவடிக்கைகளை யந்திரத்தைப்போல் குறித்த காலத்திலும், இம்மியளவும் தவறின்றி ஒழுங்காகவும் செய்யவேண்டும், விவே கத்துடனும் செய்ய வேண்டும். இந்த நடவடிக்கைகளுக்குப் பின்னணியில், தெய்வத்தின் கட்டளையை அனுசரிப்பதிலேயே மனிதனின் பெருமை அடங்கி யிருக்கிறது. வெறும் யந்திரத்தைப் போல் ஒழுங்காக நடவடிக்கைகளில் ஈடுபடுவது மாத்திரம் போதாது; புத்திசாலித்தனமாகவும் நடந்து கொள்ள வேண்டும். அவன் 'தான்' என்ற எண்ணத்தை விட்டுவிடுவதுடன், எல்லாச் செயல்களிலிருந்தும் கிடைக்கக் கூடிய பலனில் உள்ள பற்று தலையும் துறந்துவிட வேண்டும். அவ்விதமாயின், அவன் யந்திரத் தைப்போல் ஒழுங்காக நடந்து கொள்வதுடன், யந்திரத்தில் ஏற்படக்கூடிய பழுது, தேய்மானம் ஆகியவற்றிற்கும் இலக்கு ஆகிவிடாமல் காப்பாற்றப்படுவான். அவ்விதம் நடந்துகொள்ளும் மனிதன் தன் இறுதிக்காலம் வரையில் இளமையாகவே இருப் பான். நாளாவட்டத்தில் அவனது உடல் அழிந்துவிடும்; ஆனால், அவனது ஆன்மா சுருக்கமோ, கிழட்டுத்தனமோ இல்லாமல் எப்போதும் பசுமையாக இருக்கும்.

[22. "நான் எப்போதும் செயலில் ஈடுபட்டிருக்கிறேன்" என்பதை, "தொண்டிற்காகவே நான் வாழ்கிறேன், நடமாடு கிறேன், உடலை வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்ற பைபிள் வாக்கியத்திற்கு உவமையாகக் கூறலாம். மேற்கண்ட சுலோ கத்தில் உள்ள 'வர்த்தே' என்ற சொல்லில் அந்த உள் அர்த்தங்க ளெல்லாம் அடங்கியிருக்கின்றன.]

**यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।**

**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥**

**யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித:|**

**மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச:||**

23. பார்த்தா, உண்மையில், தூக்கமின்றி நான் எப்போதும் செயலில் ஈடுபடாவிட்டால், மனிதர்கள் ஒவ்வொரு வழியிலும் எனது உதாரணத்தையே பின்பற்றத் தொடங்கிவிடுவார்கள்.

[22-23. பகவானின் பற்றற்ற உழைப்பு மனிதனுக்கு ஒரு படிப்பினையாகும். "என் நுகத்தடியை நீங்கள் வாங்கிக்கொண்டு, என்னிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள். எனது நுகத்தடியைத் தூக்குவது எளிது; என் சுமை பளுவாக இல்லை.* இந்த வாக்கியத்தை கிருஷ்ண பகவானே கூறுவதுபோல் தோன்றுகிறது. பற்றுதல் என்ற கவர்ச்சியிலிருந்து மனிதன் தன்னை விடுவித்துக் கொண்டு விட்டால், உழைப்பாகிய நுகத்தடியை சுமப்பது அவனுக்கு எளிதாகி விடுகிறது; பூமிக்கு ஆகர்ஷண சக்தி இராவிடில், உடலின் பளு எவ்விதம் குறைந்துவிடுமோ, அப்படியே உழைப்பின் பளுவும் குறைந்து விடுகிறது.]

**उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।**
**संकरस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥**

**உத்ஸீதேயு ரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம்।**
**ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹன்யா மிமா: ப்ரஜா:॥ 24**

24. எனது கடமையை நான் செய்யாவிடில், இந்த உலகங்கள் அழிந்துவிடும். பின்னர் குழப்பத்திற்கும், மானிட வர்க்கத்தின் முடிவிற்கும் நானே காரணமாக இருக்க நேரும்.

[அத்தியாயம் 1, சுலோகங்கள் 41-43-இல் அர்ஜுனன் கேட்ட கேள்விக்கும், அவனுக்கு ஏற்பட்ட அச்சத்திற்கும், இந்த சுலோகத்தில் கிருஷ்ணபகவான் பதில் அளிப்பதுபோல் தோன்றுகிறது. பகவான் அவரது கடமையைச் செய்யாவிடில் அதிகமான குழுப்பத்திற்குக் காரணமாகிவிடும். அதுபோலவே அர்ஜுனன், அவனது உண்மையான கடமையைச் செய்வதால் ஏற்படக்கூடிய குழப்பத்தை காட்டிலும், செய்யாமல் இருப்பதால் அதிகக் குழப்பமே ஏற்படும்.]

---

* மேற்கண்ட வாக்கியம் (செயிண்ட் மாத்யூ—11. 29—30) பைபிளிலிருந்து மேற்கோளாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

22, 23, 24. உலக மக்களின் நலன் வெறும் ஏமாற்றுவித்தை அல்ல என்பதை பகவான் இந்த சுலோகங்களில் குறிப்பிடுகிறார். ஞானிக்கு, ஞானத்தை அடைந்தபின் செய்ய வேண்டிய கர்மம் எதுவும் இல்லையாயினும், அவன் கூட அதற்குப் பிறகும் பற்றற்று செயல் புரிய வேண்டியது அவசியமாகும். இறைவனே செயல் புரியும் போது, ஞானிகள் செயல் புரிய வேண்டியது அவசியம் இல்லை என்று கூறுவது அர்த்தமற்றது. —திலகர்.

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।
कुर्याद्विद्वांस्तथाऽसक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

ஸக்தா: கர்மண் யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத|
குர்யாத் வித்வாம்ஸ் ததாஸக்த: சிகீர்ஷுர் லோக ஸங்க்ரஹம்|| 25

25. பாரதா, பாமரன் பற்றுதலுடன் எல்லாச் செயல்களி லும் ஈடுபடுவதைப் போலவே, பண்டிதன் மானிடவர்க்கத்தின் நலனில் ஆசைவைத்து பற்றின்றி செயல் புரிய வேண்டும்.

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

ந புத்திபேதம் ஜனயேத் அக்ஞானும் கர்ம ஸங்கிஞம்|
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வான் யுக்த: ஸமாசரன்|| 26

26. கர்மத்தில் பற்றுள்ள பாமரனின் மனத்தை, பண்டிதன் குழப்பிவிடக் கூடாது. அதற்கு மாருக, பண்டிதன் பற்றின்றி எல்லாக் கர்மங்களையும் செய்ய வேண்டும்; பாமரனையும் அவ்வி தமே பற்றின்றி செயல்கள் புரியுமாறு உற்சாகப்படுத்தவேண்டும்.

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥ २७ ॥

ப்ரக்ருதே: க்ரியமாணனி குணை: கர்மாணி ஸர்வச:|
அகங்கார விமூடாத்மா கர்த்தா (அ)ஹமிதி மன்யதே|| 27

---

25. ஆன்மாவை அறிந்து கொள்ளாதவர்கள், பலன்களிலும் போகங் களிலும் ஆசைவைத்து வேலை செய்வதைப் போல, ஆன்மாவை அறிந்த ஞானிகள் பலன்களில் ஆசையின்றி செயல் புரிய வேண்டும். அவ்விதம் அவர் கள் வேலை செய்யும் நோக்கம் என்ன? மற்றவர்களும் தங்களைப் பின்பற்றி பலன்களில் ஆசை வைக்காமல் உலகத்தின் க்ஷேமத்திற்காகச் செயல் புரிய வேண்டும் என்பதுதான். —சங்கரர்.

26. அஞ்ஞானிகளின் நம்பிக்கையை அல்லது உறுதியை யாரும் தகர்த்து விடக்கூடாது. மக்களை அஞ்ஞானிகளாகவோ, அறிவிலிகளாகவோ வைத்தி ருக்க வேண்டும் என்பது இதன் அர்த்தம் அல்ல. உலகத்தின் நன்மைக்காக ஞானிகள் செயலில் ஈடுபடவேண்டும் என்பதற்கு, மக்களின் மனத்தில் உள்ள அஞ்ஞானத்தை அகற்ற வேண்டும் என்பதே அர்த்தமாகும். —திலகர்.

27. இயற்கையின் குணங்களாலேயே எல்லாக் கர்மங்களும் செய்யப்படுகின்றன. எனினும் 'நான்' என்ற அகங்காரத்தில் மதி மயங்கியுள்ள மனிதன், ''நான் தான் செய்பவன்'' என்று எண்ணுகிருன்.

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥

தத்துவவித் து மஹாபாஹோ குண கர்ம விபாகயோ:|
குணு குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே|| 28

28. தோள்வலி படைத்த அர்ஜுன, பல்வேறு குணங்களைப் பற்றிய உண்மையையும், அவற்றின் பல்வேறு நடவடிக்கைகளையும் அறிந்தவன், குணங்களால் குணங்கள் இயங்குகின்றன என்பதை உணருகிருன். தானே செயல் புரிபவன் என்று கூறிக் கொள்ளுவதில்லை.

மூச்சுவிடுதல், இமைகொட்டுதல் போன்ற மற்ற நடவடிக்கைகள் மனிதனின் முயற்சியின்றியே நடைபெறுகின்றன. அந்த நடவடிக்கைகளுக்கு, தான் பொறுப்பாளி என்று மனிதன் கூறுவதில்லை. நோயினுலோ அல்லது வேறு காரணத்தினுலோ அந்த நடவடிக்கைகள் தடைப்படும்போது மாத்திரமே அவன் அதை உணருகிருன். அதைப்போலவே, மனிதனின் நடவடிக்கைகள் யாவும் தாமாக இயங்க வேண்டும். அவற்றிற்குத் தானே பொறுப்பாளி என்று அவன் அகந்தை கொள்ளக்கூடாது. தானம் செய்யும் ஒரு மனிதனுக்கு, தான் தானம் செய்வதுகூடத் தெரிவதில்லை. ஏனெனில், அது அவனது இயற்கையாகிவிடுகிறது. எனவே, அவன் தானம் செய்யாமல் இருப்பதென்பது முடியாத காரியம். சலியாத முயற்சியினுலும், கடவுளின் அருளினுலும் மாத்திரமே அத்தகைய பற்றின்மை ஏற்படமுடியும்.

(பிரகிருதி, குணங்கள் ஆகியவற்றைப் பற்றிய விளக்கத்தை 'எனது சமர்ப்பண'த்தில் காணலாம்.)

प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

ப்ரக்ருதேர் குண ஸம்மூடா: ஸஜ்ஜந்தே குண கர்மஸு|
தானக்ருத்ஸ்னவிதோ மந்தான் க்ருத்ஸ்னவின்ன விசாலயேத்|| 29

29. பிரகிருதியின் குணங்களால் மதிமயக்கம் கொண்டவர்கள், குணங்களின் நடவடிக்கைகளில் பற்றுள்ளவர் ஆகிருர்கள். பொருட்களின் உண்மையை அறிந்தவன், அத்தகைய அறிவு இல்லாத மந்த புத்தியுடையவர்களின் மனத்தைக் குழப்பக் கூடாது.

[26, 29. இந்த சுலோகங்கள் உண்மைக்கு ஊறு விளைவிப்பதாக யாரும் எண்ணக்கூடாது. அறிவுள்ளவன், உண்மைக்கு ஊறு விளைவிக்கும் காரியம் எதையும் செய்யமாட்டான்; அவன் உண்மையை மறைக்கவும் மாட்டான். அதற்கு மாருக, அவன் அறிவற்றவனின் நிலைக்கு இறங்கி வந்து அறிவில்லாதவனையும் உண்மை நிலையை உணரும்படி செய்வதற்கு முயற்சிக்கிருன். அறிவு உள்ளவனுக்கு செயலின்மையே செயலாக இருக்கலாம்; அறிவிலிக்கோ செயலின்மை சோம்பேறித்தனத்திற்கு அடையாளமாக இருக்கலாம். எனவே, தன்னலமான நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள அவனை தன்னலமற்ற நடவடிக்கைகளில் ஈடுபடும்படி உயர்த்த வேண்டும். "உங்களுக்குக் கிடைத்துள்ள இந்த சுதந்திரம் பலவீனர்களுக்கு முட்டுக்கட்டையாகி விடாமல் பார்த்துக்கொள்ளுங்கள்."—பைபிள்]

**मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।**
**निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३० ॥**

**மயி ஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்யாத்யாத்ம சேதஸா।**
**நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர:॥ 30**

30. உள்ளே இருக்கும் ஆன்மாவினிடம் மனத்தை நிலை நிறுத்தி உன்னுடைய எல்லாச் செயல்களையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு. பலனைப் பற்றிய சிந்தனையே இல்லாமலும், 'என்னுடையது' என்ற உணர்வின்றியும் மனவேதனையை உதறித் தள்ளிவிட்டு யுத்தம் செய்!

விசுவாசம் உள்ள ஒரு வேலைக்காரன், தன்னை எஜமானின் நிழலைப் போல நினைத்துக்கொண்டு செயல்கள் புரிகிருன். தான் செய்வதையெல்லாம் எஜமானனுக்கே அர்ப்பணம் செய்து விடு

30. மோட்சத்தை விரும்பும் ஒருவன் எவ்விதம் தனது கடமைகளைச் செய்ய வேண்டும் என்பது இந்த சுலோகத்தில் விளக்கப்பட்டுள்ளது. "செயலைப் பற்றிச் சிந்திப்பது, கவலைப்படுவது போன்ற எல்லாவற்றையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, நீ எஜமானரான கடவுளின் வேலைக்காரன் என்ற எண்ணத்துடன், நம்பிக்கை, ஆசை, விருப்பம் எல்லாவற்றையும் ஒழித்துவிட்டு எல்லாக் கர்மங்களையும் செய்ய வேண்டும். ஆகையால், துக்கத்தையும் மனவேதனையையும் விட்டுவிட்டுப் போர் செய்வாயாக."
—சங்கரர்.

கிறான். அதுபோலவே, உடலில் இருக்கும் ஆன்மாவை யார் அறிகிறானோ, அந்த ஆன்மா பரம்பொருளான ஆன்மாவின் ஓர் அம்சமே என்பதை யார் உணருகிறானோ, அவன் எல்லாவற்றையும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்துவிடுவான். ஏனெனில், செய்கிறவன் உண்மையில் எஜமானனே; வேலைக்காரன் ஒரு கருவியாகவே இருக்கிறான்.

["உங்களுடைய கவலைகளையெல்லாம் இறைவனிடம் அர்ப்பணம் செய்துவிடுங்கள். ஏனெனில், உங்களுக்காக அவர் கவலைப்படுகிறார்". — பைபிள்]

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

யே மே மதமிதம் நித்யம் அனுதிஷ்டந்தி மானவா:।
ச்ரத்தாவந்தோ(அ)னஸூயந்தோ முச்யந்தே தே(அ)பி கர்மபி: ॥ 31

*31.* இங்கே நான் விதித்துள்ள கோட்பாட்டை அனுசரித்து யார் நம்பிக்கையுடனும் குற்றம் குறை கூறாமலும் நடந்துகொள்கிறார்களோ, அவர்களும் கூட அவர்களுடைய செயல்களின் பந்தத்திலிருந்து விடுதலை அடைகிறார்கள்.

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

யே த்வேததப்யஸூயந்த: நானுதிஷ்டந்தி மே மதம்।
ஸர்வக்ஞான விமூடாம்ஸ்தான் வித்தி நஷ்டானசேதஸ: ॥ 32

*32.* ஆனால், அந்த விதியில் குற்றம் குறை கூறிக்கொண்டு, அதற்கிணங்க நடக்க மறுப்போர் மூடர்கள் ஆவர். அறிவுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமே இல்லை. அத்தகையோர் நாசமடைவார்கள் என்பதை அறிந்து கொள்.

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३ ॥

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஞானவானபி।
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ॥ 33

*33.* ஞானியும் கூட அவனது இயல்புக்கு இணங்கவே செயல் புரிகிறுன். எல்லா உயிர்களும் அவற்றின் இயல்பான குணங்களேயே பின்பற்றுகின்றன. அப்படியிருக்க, நிர்ப்பந்தப் படுத்துவதால் என்ன பலன்?

இரண்டாவது அத்தியாயத்தின் *61*, *68*-ஆவது சுலோகங்களில் உள்ள உபதேசத்திற்கு இந்த சுலோகம் முரணுக இருக்கவில்லே. தன்னடக்கம், மோட்சத்தை அடைவதற்கான வழியே ஆகும். (அத்தியம் - *6*, சுலோகம் - *35*; அத்தியாயம் - *13*, சுலோகம் 7) தன்னடக்கத்தை மேற்கொள்ளுவதில் பூரண வெற்றி பெறுவதற்காக மனிதன் தன்னுடைய இறுதிக் காலம் வரை தன் சக்திகளே உபயோகிக்க வேண்டும். ஆனல் அவன் வெற்றி பெருவிடில், நிர்ப்பந்தம் அவனுக்கு எவ்விதத்திலும் உதவியாக இராது. இந்த சுலோகம், நிர்ப்பந்தத்தைத் தவிர்க்கவில்லே; இயற்கையே மேலோங்கி நிற்கிறது என்பதை விளக்குகிறது. இந்த சுலோகத்தைப் புரிந்து கொள்ளாதவனே, ''இதை என்ஞல் செய்யமுடியாது. இது எனது இயற்கை சுபாவம் அல்ல'' என்று கூறி, தனது நிலே நியாயமானது என்று ஸ்தாபிக்க முற்படுவான். நம்முடைய இயல்பை நாம் அறியோம் என்பது உண்மையே. எனினும், பழக்கம் இயற்கை சுபாவம் அல்ல. ஆன்மாவின் இயல்பு முன்னேற்றம் அடைவதேயன்றி வீழ்ச்சியடைவது அல்ல; ஏற்றமேயன்றி இறக்கம் அல்ல. எனவே, ஒவ்வொரு தடவையும் ஏற்படக்கூடிய வீழ்ச்சியையோ, அல்லது இறக்கத்தையோ எதிர்த்து நிற்கவேண்டியது அவசியம் ஆகும். அடுத்த சுலோகம் இதை மிகத் தெளிவாக விளக்குகின்றது.

[*33.* ''இயல்பான குணம் பெரிதும் மறைந்துகிடக்கிறது; சிற்சில சமயங்களில் ஜயிக்கப்படுகின்றது; ஆனல் ஒரு போதும் அதை அடியோடு ஒழித்துவிட முடிவதில்லே. அதை ஒழிக்க பலாத்காரத்தை உபயோகித்தால், அந்தக் குணம் மேலும் வலுவடைகின்றது'' என்று பேகன் கூறியுள்ளார்.]

மனிதனின் இயல்பானது, பிறப்பிற்கு முந்திய காரணங்களாலும் (முன் கர்ம விஃனகளும் பரம்பரை வழக்கமும்), ஸ்தூலமான, கலாச்சார சூழ்நிலே உட்பட பிறப்புக்குப் பிறகு ஏற்படும் காரணங்களாலும் நிர்ணயிக்கப்படுகின்றது. மனிதனின் இயல்பை உருவாக்கும் இத்தகைய நிலே ஓரளவு தவிர்க்க முடியாதது; தடுக்கவும் முடியாதது. எனினும், அந்த நிலே பெரும் அளவுக்கு கட்டுப்பாட்டிற்கு உட்படக் கூடியதே (சுலோகங்கள் *34*, *37*, *43*). மனிதன் தன்னேத்தானே துருவிப்பார்க்க முயற்சிக்க வேண்டும்; தவிர்க்க முடியாத அம்சம் எது என்பதையும் திருத்திக்கொள்ளக் கூடிய அம்சம் எது என்பதையும் கண்டு கொள்ள வேண்டும். எபிக்டிடஸ்* கூறியிருப்பதைப் போல், தன் சக்திக்கு

* எபிக்டிடஸ், கிறிஸ்தவ சகாப்தம் முதலாவது நூற்ருண்டில் புகழ் பெற்று விளங்கிய கிரேக்க ஞானி.

உட்பட்டவற்றையும், தன் சக்திக்கு உட்படாதவற்றையும் மனிதன் அறிந்து கொள்ள வேண்டும்.]

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।**

**तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥**

**இந்த்ரிய ஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ।**

**தயோர்ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்தினௌ॥ 34**

*34.* ஒவ்வொரு புலனுக்கும், அதற்கான சாதனங்களிடம் நிர்ணயமான விருப்பு வெறுப்புகள் உண்டு. மனிதன் அவற்றின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு விடக்கூடாது. ஏனெனில், அவை அவனுக்குக் கேடுவிளைவிப்பவை.

உதாரணமாக, கேட்பது காதுகளின் வேலையாகும். காதுகள் சில விஷயங்களைக் கேட்க விரும்புகின்றன; சிலவற்றைக் கேட்க விரும்புவதில்லை. இத்தகைய விருப்பு வெறுப்புகள் தன்னை ஆட்கொள்ள மனிதன் விட்டுவிடக்கூடாது. தனது வளர்ச்சிக்கும், ஆனந்தத்தையும் துன்பத்தையும் கடந்த நிலையை அடையும் தனது இறுதி லட்சியத்திற்கும் உகந்தது எது என்பதை அவன் தனக்குத்தானே தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

---

33, 34. புலன்களை நிர்ப்பந்தமின்றி நியாயமான முறையில் கட்டுப்படுத்த வேண்டும் என்பதே கீதையின் உபதேசமாகும். பலாத்காரத்தினலோ, நிர்ப்பந்தத்தினலோ புலன்களின் இயற்கையான தன்மையை முற்றிலும் ஒழித்துவிடுவது முடியாத காரியம். உதாரணமாக, ஒருவன் எவ்வளவு ஞானியாக இருந்தாலும், புத்திசாலியாக இருந்தாலும் இந்த உடல் இருக்கும்வரையில் பசி ஏற்படும் போது வெளியில் சென்று யாசகம் செய்துதான் தீரவேண்டும். ஏனெனில், பசி, தாகம் முதலியவை இயற்கையான அவஸ்தைகள். எனவே அவற்றைக் கட்டுப்படுத்த முயற்சிக்க வேண்டுமேயன்றி, பலாத்காரமாக அடியோடு ஒழித்துவிட முற்படக் கூடாது என்பதே இந்த சுலோகத்தின் அர்த்தமாகும். இந்த உலகில் பற்பல சமயங்களிலும் நாம் செய்ய விரும்பாத காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. அவற்றைச் செய்ய மறுப்பதும் நம்மால் முடியாத காரியம். அத்தகைய சந்தர்ப்பங்களில் ஞானிகள். ஆசையின்றியும், பற்றுதலின்றியும் கடமை என்ற உணர்ச்சியுடனும் செயல்களில் ஈடுபடுகின்றனர். எனவே, அச்செயல்களின் மூலம் ஏற்படும் புண்ணியமோ, பாவமோ அவர்களைத் தீண்டுவதில்லை. அஞ்ஞானிகளோவெனில், பற்றுதலுடனும் ஆசையுடனும் செயல்புரிந்து துன்பத்திற்கு இலக்காகின்றனர். ஞானிகளுக்கும் அஞ்ஞானிகளுக்கும் உள்ள பெரிய வேற்றுமை இதுதான். ஞானிகள் பற்றுதலின்றி செயல்கள் புரிகின்றுர்கள் என்றுல், அவர்கள் யுத்தம் போன்ற பயங்கரமான, நாசகரமான செயல்களில் ஈடுபடாமல், விவசாயம், வர்த்தகம் பிச்சையெடுத்தல் போன்ற சாத்விகமான செயல்களை ஏன் மேற்கொள்ளக் கூடாது என்று கேட்கலாம். இந்தக் கேள்விக்கு பகவான் அடுத்த சுலோகத்தில் விடை அளிக்கிருர். —திலகர்.

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத்|
ஸ்வதர்மே நிதனம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ:|| 35

*35.* பிறருடைய கடமையைச் சிறந்த முறையில் செய்வதைக் காட்டிலும், தன்னுடைய சொந்தக் கடமையை குற்றம் குறைகளுடன் செய்வதே மேலானது. ஒருவன் தன் கடமையைச் செய்வதில் மரணம் ஏற்பட்டால் கூட அதுவே சிறந்தது. பிறருடைய கடமை அபாயத்தை விளைவிப்பதாகும்.

ஒரு மனிதனின் கடமை, தோட்டியாக வேலை செய்வதன் மூலம் சமூகத்திற்குத் தொண்டு செய்வதாக இருக்கலாம். கணக்கு எழுதுவது மற்றொருவருடைய கடமையாக இருக்கலாம். கணக்கு எழுதும் வேலை அதிகக் கவர்ச்சியாக இருக்கலாம். அதற்காக, தோட்டி தன் கடமையை விட்டுவிட்டு கணக்கு எழுதும் வேலைக்கு வந்துவிடக்கூடாது. அவ்விதம் வந்தால், அவருக்கு நஷ்டம் என்பதுடன், சமூகத்திற்கும் அபாயம் விளைவித்தவர் ஆவார். பல்வேறு வேலைகளின் தன்மையில் யாதொரு வேற்றுமையும் இல்லை. ஒருவருடைய வேலையின் தன்மை, அவர் எந்த உணர்ச்சியுடன் வேலை செய்கிறார் என்பதையே பொறுத்தது. அதை அடிப்படையாகக் கொண்டே அவரது வேலை கடவுளின் முன்னிலையில் நிர்ணயிக்கப்படும். தியாக புத்தியுடன் யார் செயல் புரிந்தாலும், அவர் மோட்சத்திற்குத் தகுதி வாய்ந்தவராகிறார்.

[எபிக்டிடஸ் ஓர் அடிமையாக இருந்தாலும், அவர் கடவுளின் அடிமையாகியதன் மூலம் தமது அடிமைத்தனத்தை வென்றார். அவர் கூறியதாவது: “நாடகத்தில் நீ ஒரு நடிகன் என்பதை நினைவில் வைத்துக்கொள். அந்த நாடகத்தின் கர்த்தாவான கடவுள், தமது விருப்பம்போல் அந்த நாடகத்தைச் சுருக்கிவிடலாம் அல்லது நீண்ட நாடகமாகவும் அமைக்கலாம். நீ ஓர் ஏழையாகவோ, முடவனாகவோ, மன்னனாகவோ அல்லது சாதாரண நபராகவோ இருக்க வேண்டும் என்பது ஆண்டவனின் சித்தமாயின், நீ அந்தந்தப் பாத்திரத்தை இயற்கையாக நடிக்க வேண்டும். அவ்விதம் நடிக்க வேண்டியதே உனது வேலையாகும். உனக்குக் கொடுக்கப்பட்ட பாத்திரத்தை நீ நன்றாக நடிக்க வேண்டும். நீ எந்தப் பாத்திரத்தை நடிக்க வேண்டும் என்பதை நிர்ணயிப்பது, இறைவனின் விருப்பமேயன்றி உன் விருப்பம் அல்ல.”

“உனக்கு நன்மையாக இருப்பதை நீ வெறுக்கலாம். உனக்குத் தீமையாக இருப்பதை நீ விரும்பலாம். உனக்கு எது

நல்லது, எது கெட்டது என்பதை அல்லாவே அறிவார்; நீ அறிய மாட்டாய்.'' -குரான் 2-216

இந்த சுலோகத்தையே காந்திஜி தமது சுதேசிக் கொள் கைக்கு அடிப்படையாகக் கொண்டிருக்கிறார்.

*18—6—1931* 'எங் இந்தியா'வில் காந்திஜி பின்வருமாறு எழுதியுள்ளார்:

''ஒருவர் தம்மைச் சுற்றியுள்ளவர்களுக்குச் செய்யும் தூய்மை யான தொண்டு, தொலைவில் உள்ளவர்களுக்குத் தீமையை விளை விப்பதாக இருக்க முடியாது; அதற்கு மாறாக, நன்மை விளைவிப் பதாகவே இருக்கும். தூரத்தில் உள்ள காட்சியால் கவரப்பட்டு ஓடும் ஒருவரது ஆசை வீணாவதுடன், தம்மைச் சுற்றியுள்ளவர் களுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமையிலும் அவர் தவறியவர் ஆவார். கீதையில் உள்ள இந்த சுலோகத்தின் கருத்து அது தான் என்று எனக்குத் தோன்றுகிறது. ஸ்தூலமான சூழ்நிலையை முக்கியமாகக் கொண்டு பார்க்கும் போது, சுதேசிக் கொள்கையே அத்தகைய கடமையாகிறது. தம்மை அடுத்துள்ளவர்களுக்கு உதவி புரிவதே சுதேசிக் கொள்கையாகும். சுதேசியே சுய தர்மம்.]

अर्जुन उवाच

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।**

**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥**

அர்ஜுன உவாச

அத கேன ப்ரயுக்தோ(அ)யம் பாபம் சரதி பூருஷ:|

அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித:॥ 36

அர்ஜுனன் சொன்னான்:

*36.* வார்ஷ்ணேயா (கிருஷ்ணா), அப்படியாயின், தனக்கு விருப்பம் இல்லாவிட்டால் கூட, பலாத்காரமாகத் தூண்டப்பட் டவன்போல் மனிதன் பாவம் செய்யும்படி ஏவுவது எது?

---

36. தன் வாழ்க்கை முழுவதும் ராணுவத்தில் இருந்த ஒருவனை, சந்தர்ப்பம் ஏற்படும் போது போரிடும்படி செய்ய வேண்டுமேயன்றி, ஒரு தையற்காரனாக வேலை பார்க்கும்படி செய்யக் கூடாது. இந்த வாதமே, நான்கு வர்ணத்தினரின் கடமைகள் விஷயத்திலும் பொருந்தும். நான்கு வர்ணங்களாக பிரிக்கப்பட்டிருப்பது நன்மையா அல்லது தீமையா என்ற பிரச்னை இங்கே எழவில்லை. சமூகத்தின் நலனுக்கும் பாதுகாப்பிற்கும் விவ சாயத்தைப் போல் மற்றும் பல தொழில்கள் இருக்கின்றன. ஒருவர் வர்ண தருமத்தை அனுசரித்தோ அல்லது தம்முடைய விருப்பப்படியோ மேற் கொண்ட தொழிலைச் சரிவரச்செய்ய வேண்டும். ஒரு தடவை ஏற்றுக் கொண்ட கடமையை பின்னர் உதறித் தள்ளிவிடக் கூடாது என்பதே இந்த சுலோகத் தின் அர்த்தமாகும். ஒருவர் தமது கடமையைச் செய்வதில் மரணம் நேருவ தாக இருப்பினும், அதைப் பொருட்படுத்தக் கூடாது. —திலகர்.

श्रीभगवानुवाच

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥

ஸ்ரீ பகவான் உவாச

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ:|
மஹாசனே மஹாபாப்மா வித்யேன மிஹ வைரிணம்|| 37

ஸ்ரீ பகவான் கூறினர்:

37. அதுதான் காமம், அதுதான் கோபம். அது ரஜோ குணத்திலிருந்து பிறந்தது. அது எல்லாவற்றையும் கபளீகரம் செய்யக் கூடியது; கொடிய பாவத்திற்குக் காரணமானது. எனவே, இந்த உலகில் அதுதான் மனிதனின் பரம விரோதி என் பதை அறிந்து கொள்.

धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

தூமேனுவ்ரியதே வன்ஹிர் யதா தர்சோ மலேன ச|
யதோல் பேனுவ்ருதோ கர்ப்பஸ் ததா தேனேத மாவ்ருதம்|| 38

38. புகையினல் நெருப்பும், அழுக்கினல் கண்ணுடியும், ஜவ்வினல் கருவும் மறைக்கப்பட்டிருப்பதைப் போல், இந்த காமத்தினல் ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

[கரு மெல்லிய தோல் போன்ற ஜவ்வினல் மறைக்கப்பட்டி ருக்கிறது. குழந்தை பிறந்த பிறகு அந்த ஜவ்வு கிழிந்து வீணுகி விடுகிறது. ஆனல், கீதையை மொழிபெயர்த்துள்ள ஆங்கிலேயர் களில் அநேகமாக எல்லோருமே 'கருவை கருப்பை மறைப்பது

---

37. எல்லோரையும் எதிர்த்து வெற்றிபெறுவது ஆசைதான். எனவே, அதுதான் எல்லோருக்கும் ஜன்ம விரோதி. ஆகையினல் தான் எல்லோருக்கும் எல்லாவிதமான தீங்குகளும் நேருகின்றன. இந்த ஆசைக்குத் தடை ஏற்படும் போது, இது கோபமாக மாறுகிறது. ஆசையைத் திருப்தி செய்வது முடியாத காரியம். எல்லாப் பாவங்களும் ஆசையிலிருந்துதான் ஏற்படுகின்றன. அதனல் தான் அதை மனிதனின் விரோதி என்று பகவான் கூறுகிறர். —சங்கரர்.

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்தின்
பகையு முளவோ பிற? —குறள்

இதன் கருத்து : புன்சிரிப்பையும், மகிழ்ச்சியையும் கொல்லும் கோபத்தைவிட வேறு கொடிய விரோதிகள் உண்டா?

போல' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த சுலோகத்தில் உள்ள 'உல்ப' என்ற சொல்லுக்கு கருப்பை என்று அர்த்தமல்ல. கருவை மறைத்துள்ள ஜவ்வு என்றே அர்த்தமாகும். கருவை மறைத்திருப்பது அந்த ஜவ்வேயன்றி, கருப்பை அல்ல. கருப்பை கருவைக் காப்பாற்றுகிறது. குழந்தை பிறந்த பிறகு ஜவ் அழி கின்றதேயன்றி கருப்பை அல்ல.]

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

ஆவ்ருதம் ஞான மேதேன ஞானினோ நித்யவைரிணா|
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணா னலேன ச|| 39

*39.* கௌந்தேயா, விவேகம் உள்ள மனிதனின் ஞானம் காம உருவத்தில் உள்ள இந்த நிரந்தரமான விரோதியால் மறைக்கப்படுகிறது. காமம், திருப்தி செய்ய முடியாத தீயாகும்.

['காமரூப' என்ற சொல் 'காம உருவத்தில்' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஹில் மொழி பெயர்த்துள்ளபடி அந்தச் சொல்லுக்கு 'விருப்பப்படி உருவத்தை மாற்றிக் கொள்வது' என்றும் பொருள் கூறலாம்.

"காமத்தைப் போன்ற தீ இல்லை; துவேஷத்தைப் போன்ற அரக்கன் இல்லை; மூடத்தனத்தைப் போன்ற வலை இல்லை; பேராசையைப் போன்ற பயங்கர வெள்ளம் இல்லை."

—தம்மபதம் (*251*)*]

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

இந்திரியாணி மனோ புத்தி: அஸ்யாதிஷ்டான முச்யதே|
ஏதைர்விமோஹயத்யேஷ: ஞானமாவ்ருத்ய தேஹினம்|| 40

*40.* புலன்கள், மனம், அறிவு ஆகியவையே காமத்திற்கு இருப்பிடம் என்று கூறப்படுகின்றன. அது ஞானத்தை மறைத்து, மனிதனை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கின்றது.

காமம் புலன்களைப் பற்றிக் கொள்ளும்போது, மனம் விகாரமடைகின்றது, பகுத்தறிவு மறைக்கப்படுகின்றது, புத்தி பாழாகி

---

* தம்மபதம், பௌத்த மத நூலாகும்.

விடுகின்றது. 2-ஆவது அத்தியாயம் 62-64 சுலோகங்களைப் பார்க்கவும்.

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

தஸ்மாத் த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப]
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞான விஞ்ஞான நாசனம்॥ 41

41. ஆகையால் பரத வம்சத்தில் சிறந்தவனை அர்ஜுனா, முதலில் புலன்களைக் கட்டுப்படுத்து; பின்னர், ஞானத்தையும் பகுத்தறிவையும் அழிக்கும் இந்தப் பாவியை (காமத்தை) ஒழித்து விடு.

[ஞானம், விஞ்ஞானம் என்றால் முறையே ஞானமும், பகுத்தறிவுடன் கூடிய ஞானமும் எனலாம். அத்தியாயம் 5, சுலோகம் 2-க்கு நான் எழுதியுள்ள குறிப்பைப் பார்க்கவும்.]

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

இந்த்ரியாணி பராண்யாஹுரு: இந்த்ரியேப்ய: பரம் மன:।
மனஸஸ்து பரா புத்தி: யோ புத்தே: பரதஸ்து ஸ:॥ 42

42. புலன்கள் நுட்பமானவை என்று கூறுகிறார்கள்; புலன்களைக் காட்டிலும் மனம் அதிக நுட்பமானது; மனத்தைக் காட்டிலும் அறிவு அதிக நுட்பமானது: ஆனால், அறிவைக் காட்டிலும் கூட ஆன்மா அதிக நுட்பமானது.

[அதிக நுட்பமல்லாத, எனவே, கட்டுப்படுத்தக் கூடிய புலன்களிலிருந்து மனிதன் ஆரம்பிக்க வேண்டியவனாக இருக்கிறான். பின்னர், அதிலிருந்து அவன் படிப்படியாக உயர்ந்து ஆன்மாவினால் எல்லாவற்றையும் கட்டுப்படுத்த வேண்டும். அவன் தன்னுள் உறையும் ஆன்மாவை உணர்ந்து கொள்ளும் வரையில், முதலில் புலன்களுடனும், பின்னர் மனத்துடனும், அதன் பின் அறிவுடனும் தனக்குள்ள தொடர்பைக் கத்தரித்துக் கொள்ளவேண்டும்.

இங்கே கட உபநிடதத்தில் உள்ள சில வாக்கியங்களை கீதை எடுத்துக் கொண்டிருக்கிறது. கட உபநிடதம் கூறுவதாவது: ''புலன்களைக் காட்டிலும் அவற்றிற்கான சாதனங்கள் மேலானவை; அவற்றைக் காட்டிலும் மனம் மேலானது; மனத்தை விட அறிவு மேலானது; அறிவைக் காட்டிலும் மகத்தான ஆன்மா மேலானது; ஆன்மாவைக் காட்டிலும் கண்களுக்குத் தெரியாத

மூலப்ரகிருதி மேலானது. இவை எல்லாவற்றையும் விட மேலானது பரம்பொருளே. அதைக்காட்டிலும் மேலானது வேறு எதுவும் இல்லை. அதுதான் இறுதியாக எட்ட வேண்டிய பொருளாகும். அதுதான் மகோன்னதமான லட்சியமாகும்." (கட உப நிடதம் - *1. 3, 10-11*)*

*42*-ஆவது சுலோகத்தில் கடைசியாக உள்ள 'ஸ:' (அவன்) என்ற சொல்லின் அர்த்தத்தைக் குறித்து மிகுந்த கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. 'அவன்' என்பது காமத்தையே குறிக்கிறது என்று பல வியாக்கியான கர்த்தாக்களும் கூறியுள்ளனர். ஆனால், அந்தச் சொல் பரப்ரம்மத்தைக் குறிக்கிறதேயன்றி காமத்தைக் குறிக்கவில்லை என்பதை கட உபநிடதத்தில் உள்ள வாக்கியங்களிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அந்த வாக்கியத்தில் உள்ள மகத்தான ஆன்மா என்பது பரப்ரம்மத்தைக் குறிக்கவில்லை என்றும், அகங்காரத்தையே குறிக்கிறது என்றும், அதுதான் காமத்திற்கு இருப்பிடம் என்றும் அந்த வியாக்கியானகர்த்தாக்கள் கூறுகின்றனர். எனினும், கீதையில் உள்ள 'ஸ:' என்ற சொல் கட உபநிடதத்தில் உள்ள மகத்தான ஆன்மா என்பதற்குப் பொருத்தமாக இல்லை; பரப்ரம்மம் என்பதற்குத் தான் பொருத்தமாக இருக்கிறது. 'ஸ:' என்ற சொல் பரப்ரம்மத்தையே குறிப்பதாக வைத்துக் கொண்டு *42*, *43*-ஆவது சுலோகங்களின் வியாக்கியானத்தைக் கவனிப்போமாயின், அது கீதை, உபநிடதங்களின் மூலாதாரமான சித்தாந்தத்திற்குப் பொருத்தமாக இருக்கிறது. ஒருவருக்கு பரம்பொருளைக் கண்டபின் எல்லா ஆசைகளும் ஒழிந்துவிடுகின்றன என்று 2-ஆவது அத்தியாயம், *59*-ஆம் சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.]

**एवं बुद्धेः परं बुध्वा संस्तभ्यात्मानमात्मना ।**
**जहि शत्रुं महाबहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥**

**ஏவம் புத்தே: பரம் புத்வா ஸம்ஸ்தப்யாத்மான மாத்மனா|**
**ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம்|| 43**

*43*. தோள்வலிமை வாய்ந்தவனே, அறிவையும் காட்டிலும் மிகவும் நுட்பமான பரம்பொருளை உணர்ந்து, ஆன்மாவினால் இந்

---

*इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः ॥
महतः परमव्यक्तं अव्यक्तात् पुरुषः परः ।
पुरुषान्न परं किंचित् सा काष्ठा सा परा गतिः॥
कठ. १.३.१०.११

திரியங்களை அடக்கி, எதிர்த்து வெற்றி பெறுவது மிகக் கடின மாக இருக்கும் காமம் என்ற இந்த விரோதியை நாசம் செய்து விடு.

ஒரு மனிதன் கடவுளை அறிந்துகொள்ளும்போது, அவனது மனம் கடவுளின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கிறது. எனவே, அவ னது புலன்களின் விருப்பப்படி அவன் ஆடுவதில்லை. மனத்தை ஜயித்துவிட்டால், பின்னர் காமத்திற்கு சக்தி ஏது? காமம் மிகவும் தந்திரமான ஒரு விரோதியே. இருந்தாலும், புலன்கள், மனம், அறிவு ஆகியவை மிகவும் நுட்பமான ஆன்மாவின் கட்டுப்பாட் டிற்குள் வந்துவிட்டால், காமம் அழிக்கப்பட்டுவிடுகின்றது.

[*36-43*. ரோமியர்களுக்கு செயின்ட் பால் எழுதிய கடிதத்தில், இந்த சுலோகங்களில் காணப்படும் அர்ஜுனனின் கேள்வியையும், அதற்கு கிருஷ்ண பகவான் அளித்துள்ள பதிலையும் போன்ற விஷ யங்கள் அடங்கியிருக்கின்றன. செயின்ட் பால் கூறுகிருர்: "நான் எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்வதில்லை; எதை நான் வெறுக்கிறேனே அதை நான் செய்கிறேன். செய்ய வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இருக்கிறது. நன்மையாக இருப்பதை எப்படிச் செய்வது என்பதை என்னல் கண்டு கொள்ள முடிய வில்லை.''

இதற்கு அவரே பதிலும் கூறுகிருர். ''நான் செய்யக் கூடாததை நான் செய்வேனுயின், அதற்குக் காரணம் நான் அல்ல; என்னுள் இருக்கும் பாவமே அதைச் செய்யும்படி என் னைத் தூண்டுகிறது. அந்தப் பாவமே எனது உறுப்புகளை ஆட்டி வைக்கிறது; என் மனத்தின் கட்டளையை எதிர்த்துப் போராடு கிறது."

புலன்கள், மனம், அறிவு என்று கீதை குறிப்பிட்டிருப் பதையே, ''எனது உறுப்புகள்'' என்று செயின்ட் பால் கூறியுள் ளார். ''ஆன்மாவினுல் இந்திரியங்களைக் கட்டுப்படுத்த வேண் டும்'' என்று கீதை கூறுவதையே, ''என்னுடைய மனத்தின் கட் டளை'' என்று செயின்ட் பால் கூறுகிருர். இறக்கும் தன்மை வாய்ந்த இந்த உடலிலிருந்து விடுதலை அளிக்கும்படி செயின்ட் பால் கதறுகிருர். இறுதியாக அவர் ஏசுநாதரின் மூலம் கடவுளி டம் தஞ்சம் அடைகிருர். ''அப்படியாயின், கடவுளின் சட்டத் திற்கு இணங்க நான் முழு மனத்துடனும் தொண்டு செய் கிறேன்'' என்று கூறுகிருர்.

இதற்கு, சுபிகளின் (முஸ்லிம்களின்) கீழ்க்கண்ட தரும சித் தாந்தத்திலும் நெருங்கிய உவமை இருக்கிறது: ''மனிதனிடத்தில் தீமையின் ஓர் அம்சமும் இருக்கிறது. அதுவே கீழ்த்தரமான, ஆசைக்கு இலக்கான ஆன்மா. அதுவே வெறிக் குணத்திற்கும், காமத்திற்கும் இருப்பிடமாக இருக்கிறது. கடவுளுடன் தொடர்பு கொள்ள அதுவே பெரும் முட்டுக்கட்டையாக இருக்கிறது."]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे कर्मयोगो
नाम तृतीयोऽध्यायः ॥ ३ ॥

**இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு உபநிஷத்ஸு**
**ப்ரம்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே**
**ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே**
**கர்ம யோகோ நாம த்ருதீயோ(அ)த்யாய :॥ 3**

பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாத்திரத்தைப் பற்றி
கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'கர்ம யோகம்'
என்ற மூன்றாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

# ஞான யோகம்

## நான்காம் அத்தியாயம்

மூன்ருவது அத்தியாயத்தில் உள்ள முக்கிய விஷயத்தை இந்த அத்தியாயம் மேற்கொண்டு விளக்குவதுடன், பல்வேறு யக்ஞங்களேயும் விவரிக்கின்றது.

श्रीभगवानुवाच

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।

विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவானஹ மவ்யயம்|

விவஸ்வான் மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவே (அ)ப்ரவீத்|| 1

एवंपरम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः ।

स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २ ॥

ஏவம் பரம்பரா ப்ராப்தம் இமம் ராஜர்ஷயோ விது:|

ஸ காலேனேஹ மஹதா யோகோநஷ்ட: பரந்தப|| 2

ஸ்ரீ பகவான் கூறினர் :

1. அழிவற்ற இந்த யோகத்தை நான் விவஸ்வானுக்கு, உபதேசித்தேன். விவஸ்வான் அதை மனுவுக்கும், மனு அதை இக்ஷ்வாகுவிற்கும் உபதேசித்தார்கள்.*

2. அவ்வாறு பரம்பரையாக வந்த அந்த யோகத்தை பின்னர் ராஜரிஷிகள் கற்றுக் கொண்டனர். பரந்தபா (பகைவர்களைத் தவிக்கச் செய்யும் அர்ஜுன), பின்னர் அது இந்த உலகில் நீண்ட காலத்திற்குப் பிறகு மறைந்து போயிற்று.

---

*விவஸ்வான் என்பது சூரியனின் பல பெயர்களில் ஒன்று. சூரியனுடைய புதல்வரே வைவஸ்த மனு. தரும சாஸ்திரமான மனுஸ்மிருதியை எழுதியவர் இவர்தான். இக்ஷ்வாகு, மனுவின் புதல்வரும், சூரியனின் பேரனும் ஆவார். த்ரேதா யுகத்தில் அயோத்தியை ஆட்சிபுரிந்த முதல் மன்னர் அவர்தான். ரகு, தசரதன், ஸ்ரீராமபிரான் ஆகிய தெய்விக மன்னர்கள் இக்ஷ்வாகுவின் வம்சத்தைச் சேர்ந்தவர்களே.

[1–2. மகாபாரதத்தில் உள்ள நாராயணீயப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள கர்மயோகத்தின் நீண்ட வம்சாவளி இந்த சுலோகங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதன் ஆதி வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசிய மாகும். பிராம்மண ரிஷிகளும், க்ஷத்திரிய ரிஷிகளும் கர்மயோகத் தைப் பரம்பரையாகக் கற்றுக் கொடுத்து வந்திருக்கிறார்கள் என்று அப்பகுதியில் கூறப்பட்டுள்ளது. அந்த யோகத்தைப் பற்றியே இங்கேயும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரம்மாவின் ஏழு பிறப்புகளிலும், நாராயணனால் பிரம்மாவுக்கு முதன் முத லாகக் கர்ம யோகம் கற்பிக்கப்பட்டது என்றும், அவரிடமிருந்து அது வைகானஸர், வாலகில்யர் போன்ற ரிஷிகளின் பரம்பரை யில் வந்தது என்றும், பிறகு தக்ஷ மன்னன் விவஸ்வானுக்கும், விவஸ்வான் தமது புதல்வரான மனுவுக்கும், மனு தமது புதல்வ ரான இக்ஷ்வாகுவிற்கும் அதைக் கற்பித்ததாகவும் மகாபாரதம் கூறுகிறது. மக்களின் நலனுக்காகவே அது வாழையடி வாழை யாக உபதேசிக்கப்பட்டு வந்துள்ளது. இந்தப் புராதன சித்தாந் தம் க்ஷத்திரியர்களிடம் ஒப்புவிக்கப்பட்டதாகக் கருதுவது தவ றாகும். பல பிரம்மரிஷிகளும் கர்ம யோகத்தைக் கற்று, மற்றவர் களுக்கும் உபதேசித்திருக்கிறார்கள்.

அது மிகப் புராதனமான சித்தாந்தமே. அர்ஜுனன் சமாளிக்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டபோது, அது புதிதாக உபதேசிக்கப்பட்டதல்ல. மக்களின் நலனுக்காக, அது யுகம் யுகமாக அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது என்பதே இதன் கருத்தாகும்.]

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

ஸ ஏவாயம் மயா தே(அ)த்ய யோக: ப்ரோக்த: புராதன:|
பக்தோ(அ)ஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேத துத்தமம்|| 3

3. அதே புராதனமான யோகத்தைத்தான் இன்று நான் உனக்கு உபதேசித்திருக்கிறேன். ஏனெனில், நீ எனது பக்த னாகவும் எனது நண்பனாகவும் இருக்கிறாய். இந்த யோகம் மிக வும் உத்தமமான ரகசியம்.

---

3. புலன்களை அடக்க முடியாத பலவீனர்களுக்கு இதை உபதேசிப்ப தால், இந்த யோகம் வீணாகிவிடும். எனவே, பக்தனும் நண்பனுமான உனக்கு இந்தப் பழமையான யோக முறையை உபதேசித்தேன். இதைக் கற்றுக் கொண்டு அனுசரிப்பதற்கு நீ தகுதி வாய்ந்தவனே. —சங்கரர்.

अर्जुन उवाच

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः।

कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

அர்ஜுன உவாச

அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத:।

கதமேதத் விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி॥ 4

அர்ஜுனன் கூறினன்.

4. பகவானே, நீங்கள் பிறகுதான் பிறந்தீர்கள். விவஸ்வான் முன்பே பிறந்தவர். அப்படியிருக்க, முதலில் நீங்கள் அதை உபதேசித்ததாகக் கூறுகிறீர்கள். இதை நான் எப்படிப் புரிந்து கொள்ளுவது?

श्रीभगवानुवाच

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन।

तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५ ॥

பகவான் உவாச

ப ஹூனிமே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன।

தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப॥ 5

பகவான் கூறினர்:

5. அர்ஜுன, நீயும் நானும் பல பிறப்புகளைக் கடந்து வந்திருக்கிறோம். பரந்தபா, அவற்றையெல்லாம் நான் அறிவேன்; நீ அறியமாட்டாய்.

---

4. பகவான் முன்னுக்குப்பின் முரணுகப் பேசுகிறார் என்று யாரும் எண்ணி விடாமல் இருப்பதற்காக, அர்ஜுனன் அவரை இந்தக் கேள்வி கேட்கிறான். விவஸ்வான் பிறந்து எவ்வளவோ காலமாகிவிட்டது. அவர் சிருஷ்டியின் ஆரம்பத்தில் பிறந்தவர். கிருஷ்ணனே சமீபத்தில் வசுதேவருக்குப் பிள்ளையாகப் பிறந்தவர். அப்படியிருக்க, 'நான் முதல் முதலாக இதை விவஸ்வானுக்கு உபதேசித்தேன்' என்ற முரண்பாடான வார்த்தைகளை, தான் எப்படிப் புரிந்து கொள்ளுவது என்று அர்ஜுனன் கேட்கிறான். —சங்கரர்.

5. கிருஷ்ணன் கடவுள் என்பதையும், அவர் எல்லாம் அறிந்தவர் என்பதையும் அறியாத மூடர்களின் சந்தேகத்தைத் தீர்க்கவேண்டும் என்பதற்காக அக் கேள்விக்கு கிருஷ்ணன் பதில் அளித்தார். அர்ஜுனன் கேள்விகேட்ட நோக்கமும் அதுதான். "உன்னுடைய முந்திய பிறப்புகளைப் பற்றி உனக்குத்

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥

அஜோ(அ)பி ஸன்னவ்ய யாத்மா பூதானுமீச்வரோ(அ)பி ஸன்[
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்ம மாயயா|| 6

6. நான் பிறப்பற்றவனுகவும், எல்லையற்றவனுகவும் இருந்தும், எல்லா உயிர்களுக்கும் ஈசனுக இருந்தும் கூட, என்னுடைய இயல்பைக் கட்டுப்படுத்திக் கொண்டு நான் என்னுடைய மாயா சக்தியினுல் பிறவி எடுக்கிறேன்.

[''என்னுடைய இயல்பின் காரணமாக'' என்று இங்கே காந்திஜி மொழி பெயர்த்துள்ளார். இங்கே 'ப்ரகிருதி' என்பது இயல்பையே குறிக்கின்றது. பகவான் அவரது மர்மமான சக்தியினுல் அதாவது மாயையினுல் ப்ரகிருதியின் உருவத்தை அடைந்து, பிறவி எடுப்பவரைப் போல் தோன்றுகிருர்.]

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத|
அப்யுத்தான மதர்மஸ்ய ததா(ஆ)த்மானம் ஸ்ருஜாம்யஹம்|| 7

---

தெரியாது. ஏனெனில், நல்லது, கெட்டது என்ற இருமைகளால் உன்னுடைய ஞானக் கண் மறைக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் அந்தப் பிறப்புகளையெல்லாம் நான் அறிவேன். நான் என்றென்றும் நிலைத்திருப்பவன், தூய்மையானவன், எல்லாம் அறிந்தவன், விடுதலை அளிப்பவன், சத்தியமானவன். எனவே எனது ஞானம் எதனுலும் மறைக்கப்படுவதில்லை." —சங்கரர்.

6. பகவான் பிறப்பு இல்லாதவர், நிரந்தரமாக இருப்பவர், புண்ணியத்திலிருந்தும் பாவத்திலிருந்தும் விடுபட்டவர். அப்படியிருக்க அவர் எப்படி பிறக்க முடியும்? இந்தக் கேள்விக்கு பகவான் பதில் அளிக்கிருர்:

"நான் பிறப்பு இல்லாதவனுக இருக்கிறேன். எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் என் சக்தி எள்ளளவும் குன்றுவதில்லை. மகோன்னதமாக விளங்கும் பிரம்மாவிலிருந்து தூண், துரும்பு வரையில் எல்லாவற்றிற்கும் ஈசனுக இருந்தும் கூட, நான் என்னுடைய பிரகிருதியைக் கட்டுப்படுத்திக் கொண்டு எனது சக்தியினுல் என் விருப்பப்படி உடலுடன் பிறக்கிறேன். மக்கள் கர்ம வினைகளால் வேறு வழியின்றி பிறந்து தீரவேண்டியவர்களாக இருக்கிருர்கள். நானே, என் விருப்பப்படி பிறவி எடுப்பது போல் தோற்றம் அளிக்கிறேன்!''

—சங்கரர்,

7. பாரதா, ஏனெனில், தருமம் குன்றி அதருமம் மேலோங்கும் போதெல்லாம், நான் பிறவி எடுக்கிறேன்.

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

பரித்ராணய ஸாதூனம் விஞசாயச துஷ்க்ருதாம்[
தர்ம ஸம்ஸ்தாபனர்த்தாய ஸம்பவாமி யுகே யுகே|| 8

8. தரும மார்க்கத்தில் நடப்பவர்களைக் காப்பதற்காகவும், கொடியவர்களை அழித்து மீண்டும் தருமத்தை ஸ்தாபிப்பதற்காகவும், நான் ஒவ்வொரு யுகத்திலும் பிறக்கிறேன்.

கடவுளிடம் நம்பிக்கையுள்ளவர்களுக்கு இந்த சுலோகம் ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது. எப்போதும் நீதியே வெற்றி பெறுகிறது என்ற உண்மையையும் இந்த சுலோகம் உறுதிப்படுத்துகிறது. நீதிக்கும் அநீதிக்கும் இடையே நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. சிற்சில சமயங்களில் அநீதியின் கை ஓங்குவது போல் தோன்றுகிறது. எனினும், இறுதியில் நீதியே, தருமமே வெற்றிபெறுகிறது. நல்லவர்கள் ஒரு காலத்திலும் அழிவதில்லை. ஏனெனில், தருமம் அதாவது சத்தியம் அழிய முடியாது. கொடியவர்கள் அழிக்கப்பட்டுவிடுகிறார்கள். ஏனெனில், அதருமத்திற்கு வாழ்வே இல்லை. மனிதன் இதை அறிந்து, தான் கர்த்தா என்ற அகந்தையை விட்டு ஒழிக்க வேண்டும்; அசத்தியம், பலாத்காரம், தீமை ஆகியவற்றையும் தவிர்க்க வேண்டும். அறிவுக்கு எட்டாத இறைவனின் இணையற்ற அற்புத சக்தி எப்போதும் இயங்கிக் கொண்டிருக்கிறது. உண்மையில், இதுதான் அவதாரமாகும். இதைத் தவிர, கடவுளுக்கு பிறப்பு என்பதே இருக்க முடியாது.

["கொடியவர்களை அழிக்க வேண்டும் என்று கிருஷ்ணன் சொல்லுவதால், அவர் ஐரோப்பியரைப் போலாகிவிட்டார் என்று தாங்கள் கூறுவீர்களா?"

---

7. "தருமம் அழிந்து அதருமம் வளர்ச்சிபெறும் போதெல்லாம் என்னுடைய மாயா சக்தியினல் என்னை நானே சிருஷ்டித்துக் கொள்ளுகிறேன்."
—சங்கரர்.

8. அநீதி, துன்மார்க்கம், கொடுமை, கொடுங்கோன்மை முதலியவை உலகில் அதிகமாகி தருமவான்கள் துன்பத்திற்கு உள்ளாகும் போதும், தரும விரோதிகளின் ஆதிக்கம் அதிகமாகும் போதும் கருணை வள்ளலான பகவான் சக்திவாய்ந்த ஒரு மனிதனின் உருவத்தில் வந்து உலகில் ஒழுங்கை ஸ்தாபித்து மக்களும் நல்வாழ்வு பெறும்படி செய்கிறார்.
—திலகர்.

இவ்விதம் ஒருவர் கேட்டிருந்த கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "இந்தக் கேள்வி கேட்டிருப்பவரைக் காட்டிலும் எனக்கு கிருஷ்ணனிடம் அதிக நம்பிக்கை உண்டு. என்னுடைய கிருஷ்ணன் உலகத்திற்கே ஆண்டவன். அவர் சிருஷ்டிப்பவர், பாதுகாப்பவர், அழிப்பவர். அவர் அழிக்கலாம்; ஏனெனில், அவர் சிருஷ்டிக்கிருர் அல்லவா?" ('எங் இந்தியா' *9—4—1925*).

மேலும் அதைப் பற்றி காந்திஜி கூறியதாவது: "ஸ்தூல யுத்தத்தில் ஈடுபடும்படி இந்த சுலோகம் உபதேசிப்பதாக நான் கருதவில்லை. இங்க சுலோகத்தின்படி, எல்லாம் அறிந்த கடவுள் துஷ்டர்களைத் தண்டிப்பதற்காக இந்த பூமிக்கு இறங்கி வருகிருர். 'துஷ்டர்களை'த் தண்டிப்பதாகக் கூறும் ஒவ்வொரு புரட்சிக்காரரையும் எல்லாம் அறிந்த கடவுள் என்ருே அல்லது ஓர் அவதாரம் என்ருே கருத நான் மறுப்பேனுயின், நான் மன்னிக்கப்படலாம்."]

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

ஜன்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத:|
த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதிமாமேதி ஸோ(அ)ர்ஜுன|| 9

*9.* அர்ஜுன, என்னுடைய தெய்விகமான பிறப்பு, செயல் ஆகியவற்றின் ரகசியத்தை யார் அறிகிருனே, அவன் இந்த உடலை விட்டபின் மீண்டும் பிறப்பதில்லை. அவன் என்னை வந்தடைகிருன்.

எப்போதும் தருமமே வெற்றி பெறுகிறது என்ற நம்பிக்கை ஒருவனுக்கு உறுதியாக இருக்குமாயின், என்ன நேர்ந்தாலும், எத்தனை இடையூறுகள் ஏற்பட்டாலும் அவன் ஒரு போதும் தருமத்திலிருந்து வழுவுவதில்லை. அவனது முயற்சியின் ஓர் அம்சம் கூட அவனது அகந்தையிலிருந்து எழுவதில்லை. அவன் எல்லாவற்றையும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்துவிடுகிருன். அவன் எப்போதும் கடவுளுடன் ஒன்ருகிவிடுவதால், பிறப்பிலிருந்தும் இறப்பிலிருந்தும் விடுதலை அடைகிருன்.

---

9. *பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தார்*
*இறைவ னடிசேரா தார்* —குறள்

*இதன் கருத்து:* *இறைவனின் பாதங்களில் சரணம் அடைவோரே, பிறவியாகிய பெரும் கடலைத் தாண்டிப் பேரின்பம் பெறுவர். அவரது பாதங்களை நினையாதவர்கள் அந்தக் கடலைத் தாண்ட முடியாமல் தவிப்பர்.*

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥

வீதராக பயக்ரோதா மன்மயா மாமுபாச்ரிதா:|
பஹவோ ஞான தபஸா பூதா மத்பாவமாகதா:|| 10

*10.* காமம், பயம், கோபம் ஆகியவற்றிலிருந்து விடுதலையடைந்தவர்களும், என்னிடத்தில் லயித்தவர்களும், என்னையே கதியாகக் கொண்டிருப்பவர்களும், ஞானமாகிய அக்னிப் பரீட்சையால் பரிசுத்தமானவர்களுமான பலர் என்னுடன் ஒன்ருகி ஐக்கியம் அடைந்திருக்கிருர்கள்.

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம் யஹம்|
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: யார்த்த ஸர்வச:|| 11

*11.* மனிதர்கள் எந்தவழியில் என்னை நாடினலும், அதே வழியில் அவர்களுக்கு நான் அருள் புரிகின்றேன். பார்த்தா, ஒவ்வொரு விதத்திலும் மனிதர்கள் பின்பற்றும் வழி என்னுடையதே ஆகும்.

அதாவது, உலகம் முழுவதும் கடவுளின் கட்டளைக்கு உட்பட்டே இருக்கிறது. கடவுளின் சட்டத்தை மீறுவோர் எவரும் தண்டனையிலிருந்து தப்ப முடியாது. நாம் எதை விதைக்கிருேமோ அதையே அறுவடை செய்வோம். அச்சமோ அல்லது சலுகையோ எதுவுமின்றி, இந்தச் சட்டம் தயவு தாட்சண்யமின்றி இயங்கிவருகிறது.

[காந்திஜியின் மேற்கண்ட குறிப்பு பைபிளின் பின்வரும் வாக்கியங்களை நினைவூட்டுகின்றது: ''தேவன், ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவனுடைய செய்கைகளுக்குத் தக்கவாறு பலன் அளிப்பார். ஒரு மனிதன் எதை விதைக்கிருனே, அதையே அவன் அறுவடை செய்வான்.''

எனினும், இங்கே கடவுளின் கட்டளையைப் பற்றி முக்கியமாகக் குறிப்பிடப்படவில்லை. கடவுளை நாடுவோன் எதை விரும்புகிருனே, அதை அவர் கொடுக்கத் தயாராக இருக்கிருர் என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இறைவனை நாடுவோனின் நம்பிக்கையையும் உணர்ச்சியையுமே எல்லாம் பொறுத்திருக்கின்றன.

ஒருவேளை பைபிளில் உள்ள பின்வரும் வாக்கியங்களை, மேற்கண்ட சுலோகத்திற்கு நெருங்கிய உவமையாகக் கூறலாம்: ''சிறுக விதைத்தவன் சிறுகவே அறுவடை செய்வான்; ஏராளமாக விதைத்தவன் ஏராளமாக அறுவடை செய்வான்.''

இவ்விஷயத்தை ஸ்ரீ சங்கராச்சாரியார் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்:

''மனிதர்கள் எந்த லட்சியத்தை உத்தேசித்தோ அல்லது எந்த பலனை உத்தேசித்தோ என்னை நாடினாலும், அவர்களுக்கு அதை நான் அளிக்கின்றேன். ஞானத்தை யார் விரும்புகிறார்களோ அவர்களுக்கு ஞானத்தை அளிக்கிறேன்; மோட்சத்தை யார் விரும்புகிறார்களோ அவர்களுக்கு மோட்சத்தை அளிக்கின்றேன்; துன்பம் நீங்கவேண்டும் என்போருக்கு துன்பத்தை அகற்றுகின்றேன்.''

இந்த சுலோகத்தின் இரண்டாவது பகுதி, மூன்றாவது அத்தியாயம், 23-ஆம் சுலோகத்தின் இரண்டாவது பகுதியைப் போன்றதே. அதற்கும் இதற்கும் அர்த்தத்தில் அதிக வேற்றுமை இல்லை. அத்தியாயம் - 9, 23 - 24 சுலோகங்களைப் போல் கருத்து ஒன்றாகவே தோன்றுகிறது. அதாவது, ''வழிபடுவோர் யாவரும் எந்த தெய்வத்தை வணங்கினாலும் இறுதியில் என்னையே வந்தடைகிறார்கள்'' என்று பகவான் கூறுகிறார்.

''விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், காலை நேரத்திலும் மாலை நேரத்திலும் நிழல்கள் விழுவதைப் போல, சொர்க்கத்திலும் பூமியிலும் என்ன இருப்பினும் அல்லாவிடம் விழுந்து வணங்க வேண்டும்'' —குரான்

இந்த சுலோகத்திற்கான விளக்கத்தைக் குறித்து காந்திஜிக்கும் லோக மான்ய திலகருக்கும் ஒரு சமயம் ருசிகரமான வாக்குவாதம் நடந்தது. இந்த சுலோகத்தை அடிப்படையாகக் கொண்டு, பரஸ்பர ஒத்துழைப்பு முறையைக் கைக்கொள்வது நியாயமே என்று திலகர் கூறினார். அவருக்கு காந்திஜி பின்வருமாறு பதில் அளித்தார்: '''அக்கோதேன ஜினே கோதம்'* என்ற பௌத்த மத நூலில் உள்ள சுலோகம் கீதையில் உள்ள இந்த சுலோகத்திற்கு முரண்பட்டதாக இல்லை. பௌத்த நூலில் உள்ள சுலோகம், நிரந்தரமான ஒரு கொள்கையை விதிக்கின்றது. பகவத் கீதையில் உள்ள சுலோகம் அன்பினால் துவேஷத்தையும், சத்தியத்தினால் அசத்தியத்தையும் ஜயிக்கும் கொள்கையை எப்படி நடைமுறையில் அனுசரிக்க முடியும் என்பதையும், அனுசரிக்க வேண்டும் என்பதையும் காட்டுகிறது. நாம் மற்றவர்களிடம் எப்படி நடந்துகொள்கிறோமோ, அவ்விதமே கடவுள் நமக்

---

''கோபத்தை கோபமின்மையால் (அன்பினால்) ஜயிக்க வேண்டும்'' என்பதே 'தம்மபதம்' என்ற பௌத்த மத நூலில் உள்ள மேற்கண்ட வாக்கியத்தின் அர்த்தமாகும்.

குப் படி அளக்கிருர் என்பது உண்மையாயின், நாம் கடவுளின் தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமாயின், நாம் கோபத்திற்கு எதிராகக் கோபத்தைப் பிரயோகிக்கக் கூடாது, கோபத்திற்கு எதிராகப் பொறுமையையே மேற்கொள்ள வேண்டும் என்று ஏற்படுகிறது. இந்த விதி, உலகத்தைத் துறந்தவர்களுக்காக அல்ல, முக்கியமாக உலகத்துடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர்களுக்காகவே ஏற்பட்டதாகும்.''

இந்த சுலோகத்திலிருந்து மேற்கண்ட வாக்குவாதம் ஏற்பட்டிருக்கவே வேண்டாம். இதை நான் பணிவுடனும், அந்த இரண்டு மகாபுருஷர்களுக்கும் உரிய மரியாதையுடனும் தெரிவித்துக் கொள்கிறேன். "சிறுக விதைப்பவன் சிறுக அறுவடை செய்வான். ஏராளமாக விதைப்பவன் ஏராளமாக அறுவடை செய்வான்'' என்ற பைபிள் வாக்கியத்தின் கருத்தே மேற்கண்ட சுலோகத்தின் கருத்துமாகும். கீதையின் ஒன்பதாவது அத்தியாயம், *23-24*-ஆவது சுலோகங்களையும் இதனுடன் சேர்த்து வாசித்துக் கொள்ள வேண்டும்.]

**काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।**
**क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥**

**காங்க்ஷந்த: கர்மணும் ஸித்திம் யஜந்த இஹ தேவதா:|**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா|| 12**

*12.* தங்களுடைய கர்மங்களுக்குப் பலன் கிடைக்க வேண்டும் என்று விரும்புவோர் இங்கே தேவதைகளைப் பூஜிக்கின்றனர். ஏனெனில், மனிதர்கள் அடங்கிய இந்த உலகில் கர்மத்தின் பலன் விரைவில் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது.

---

12. பரமேசுவரனை வழிபடுவதன் உண்மையான பலன் மோட்சமே. கர்மத்தில் உள்ள பற்றுதலை அறவே துறந்த பின்தான் அந்த நிலையை அடைய முடியும். அந்த நிலையை அடைவதற்கு நீண்ட காலம் முயற்சிக்க வேண்டும்; ஆழ்ந்த பக்தியுடன் தனிமையில் இறைவனை வழிபட வேண்டும். எனினும், சிலர்தான் அவ்விதம் உறுதியுடன் பெருமுயற்சியை மேற்கொள்ள முடியும். இந்த உலகில் அநேகமாக எல்லோரும் தங்கள் செயலுக்கு உடனடியான பலனையே விரும்புகிருர்கள் என்பதே இந்த சுலோகத்தின் அர்த்தமாகும். எனவே, அவர்கள் பல தெய்வங்களையும் வணங்க முற்படுகிருர்கள். எனினும், அதுவும் இறுதியில் பரமேசுவரனை வழிபடுவதேயாகும் என்று கீதை கூறுகிறது. சாதாரண தெய்வங்களை வழிபடுவோரின் யோக சக்தி நாளடைவில் வளர்ந்து, இறுதியில் அவர்கள் பலனை எதிர்பாராமலேயே இறைவனை வழிபடும் முறையை மேற்கொண்டு மோட்சம் அடைகிருர்கள். —திலகர்.

ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதைப் போல் தெய்வங்கள் என்பதற்கு, சம்பிரதாயமாக எல்லோரும் கருதும் விண்ணுலகில் உள்ள தெய்வங்கள் என்று அர்த்தம் அல்ல தெய்விக சக்தியைப் பிரதிபலிக்கும் எதுவும் தெய்வம்தான. அந்த அர்த்தத்தில் மனிதன்கூட ஒரு தெய்வம்தான். நீராவி, மின்சாரம், முதலிய மற்றுமுள்ள இயற்கையின் மகத்தான சக்திகள் யாவும் தெய்வங்களே. அவற்றை நாடுவதால், விரைவில் பலன் கிடைக்கிறது என்பதை நாம் நன்கு அறிவோம். எனினும், அந்தப் பலன் அற்ப வாழ்வாக முடிந்துவிடுகிறது. அது, ஆன்மாவுக்கு ஆறுதலை அளிப்பதில்லை. அது மோட்சத்தை நோக்கி யாரையும் நிச்சயமாக ஓர் அடி தூரம் கூட இட்டுச் செல்லுவதில்லை.

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச:|
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்யகர்த்தார மவ்யயம்|| 13

*13.* ஒவ்வொரு வர்ணத்தின் வெவ்வேறு குணங்களுக்கும் கர்மங்களுக்கும் இணங்க நான்கு வர்ணங்களை நான் சிருஷ்டித்தேன். நான் அவற்றின் கர்த்தா என்றாலும், மாறுதலற்றவன் ஆதலால் நான் கர்த்தா அல்ல என்பதை அறிந்து கொள்.

*24-11-1927* 'எங் இந்தியா'வில் காந்திஜி பின்வருமாறு கூறியுள்ளார்:

குணத்திற்கும் கர்மத்திற்கும் இணங்க, வர்ணம் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதாக கீதை கூறுகிறது. ஆனால், குணமும் கர்மமும் பிறப்பினால் பரம்பரையாக வருகின்றன. வர்ணம் என்ற விதி, பிறப்பை அடிப்படையாகக் கொண்டதல்ல எனில், அதற்கு அர்த்தமே இல்லை. எனினும், இங்கே உயர்வு என்ற அர்த்தத்திற்கு இட

---

13. மனித வர்க்கத்தை நான்கு வர்ணங்களாகப் பிரித்ததற்குக் காரணம், இந்த சுலோகத்தில் கூறப்படுகிறது. சத்துவ குணம் மேலோங்கி நிற்பவன் பிராம்மணன்; சத்துவ குணத்தைவிட ரஜோ குணம் மேலோங்கி நிற்பவன் க்ஷத்திரியன்; தமோ குணத்தைவிட ரஜோ குணம் மேலோங்கி நிற்பவன் வைசியன்; ரஜோ குணத்தைக் காட்டிலும் தமோ குணம் மேலோங்கி நிற்பவன் சூத்திரன். இப்போது ஒரு கேள்வி எழுகின்றது. நான்கு வர்ணங்களையும் படைத்தவர் பகவான் எனில், எல்லாச் செயல்களுக்கும் அவர் கர்த்தா அல்ல என்று ஏன் கூறப்படுகிறது? இதற்குப் பதில் என்னவெனில், மாயை என்ற முறையில் எல்லாச் செயல்களுக்கும் அவர்தான் கர்த்தா. பிரம்மம் என்ற முறையில் செயல்களுக்கு அவர் கர்த்தா அல்ல. செயல்களால் அவர் சிறிதும் களங்கப்படாதவர்.
—சங்கரர்.

மில்லை. உடலுக்கு தலை இறுதி ஸ்தானமாக இருப்பது போலவே, மற்ற வர்ணங்களுக்கு பிராம்மணீயம் இறுதி ஸ்தானமாக இருக்கிறது. உயர்ந்த அந்தஸ்து அல்ல, உயர்ந்த தொண்டு செய்யும் சக்தி என்பதே ஆகும். உயர்ந்த அந்தஸ்து என்ற இறுமாப்பு ஏற்பட்ட அந்த விநாடியிலேயே, அது காலால் மிதித்துத் தள்ளுவதற்கு உரியதாகிவிடுகிறது.

न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸப்ருஹா|
இதி மாம் யோ(அ)பிஜாஞதி கர்மபிர் ந ஸபத்யதே|| 14

*14.* செயல்கள் என்னைப் பாதிப்பதில்லை. அவற்றின் பலன்களிலும் எனக்குப் பற்றில்லை. இவ்விதம் என்னை யார் அறிகின்ருனே, அவன், செயல்களால் கட்டுண்டு இருப்பதில்லை.

இவ்விதமாக, மனிதனுக்கு இது ஒரு மகோன்னதமான உதாரணமாகத் திகழ்கின்றது. இறைவன் செயலில் ஈடுபட்டிருந்தாலும், செயல் புரிபவர் அவர் அல்ல. நாம் எல்லோரும் அவரது கையில் உள்ள கருவிகளே. அப்படியிருக்க, செயலுக்குப் பொறுப்பாளி என்று அகந்தை கொள்ள நமக்கு இடம் எங்கே இருக்கிறது?

[இதை உணர்ந்துகொள்வதன் கருத்து என்ன என்பதை சங்கராச்சாரியார் இவ்விதம் தெளிவாகக் கூறியிருக்கிருர்: “என்னை, தாஞகவே பாவித்து எவன் தான் செயல் புரிபவன் அல்ல என்று உணருகிருனே, செயலின் பலனில் எவன் ஆசை வைப்பதில்லையோ அவன், செயலின் பந்தத்திலிருந்து விடுதலை அடைகிருன்.” அதாவது, கடவுளை அறிந்து கொண்ட மகோன்னத நிலையை அவன் எட்ட வேண்டும்.]

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:|
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம்|| 15

*15.* பண்டைய காலத்தில் இருந்தவர்கள் இதை அறிந்து, மோட்சத்தில் ஆசை கொண்டு கர்மத்தைச் செய்தனர். எனவே, பண்டைய காலத்தில் முன்னேர்கள் செய்ததைப் போலவே நீயும் செய்.

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

கிம் கர்ம கிமகர்மேதி கவயோ(அ)ப்யத்ர மோஹிதா:|
தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே(அ)சுபாத்|| 16

*16.* எது கர்மம்? எது அகர்மம்? - என்பதை அறிவாளிகள் கூட நிர்ணயிக்க முடியாமல் குழப்பம் அடைகிறார்கள். எனவே, அகர்மம் என்றால் என்ன என்பதை உனக்கு நான் விளக்கிக் கூறுகிறேன். அதை அறிந்து கொண்டால், நீ தீ வினையினின்றும் பாது காக்கப்படுவாய்.

[சீனர்களின் ஆன்மிக இலக்கிய நூலை வாசித்துள்ள ஸ்ரீமதி சோபியா வாடியா, இம்மியும் வேற்றுமையின்றி மேற்கண்ட வாக்கியத்தைப் போலவே அந்த நூலிலிருந்து ஒரு மேற்கோளை எடுத்துக் கூறியுள்ளார்: "ஆகையால், முனிவர் செயலற்ற செயலிலேயே நம்பிக்கை வைக்கிறார்."]

---

15. செயல் புரியும்படி அர்ஜுனனுக்கு பகவான் திட்டவட்டமாக புத்திமதி கூறுகிறார்; மோட்சத்திற்கும் செயலுக்கும் (கர்மா) முரண்பாடு இல்லை என்றும் கூறுகிறார். செயலைத் துறப்பதன் மூலம்தான், அதாவது அகர்மத்தின் மூலம்தான் மோட்சம் அடையமுடியும் என்று கூறப்படுவதன் அர்த்தம் என்ன என்ற சந்தேகம் எழுகின்றது. எனவே, செயல் என்றால் என்ன என்பதை பகவான் விளக்க முற்படுகிறார். —திலகர்.

15. இதை அறிந்து, பண்டைய காலத்தில் மோட்சத்தை நாடியவர்களைப் போல் நீயும் உன் கடமைகளைச் செய். சோம்பேறித்தனமாக உட்கார்ந்திருப்பதும், செயல்களைத் துறப்பதும் உனக்கு ஒழுங்கல்ல. ஆன்மாவைப்பற்றிய ஞானம் இல்லாதவன் தன்னுடைய மனத்தைத் தூய்மையாக்கிக் கொள்வதற்காக வேலை செய்ய வேண்டும்; அத்தகைய ஞானத்தை அடைந்தவன், மனித வர்க்கத்திற்கு உதாரணமாகத் திகழ்வதற்காக தன் கடமைகளைச் செய்ய வேண்டும். —சங்கரர்.

16. கடமைக்கும் கடமை அல்லாததற்கும் உள்ள வேற்றுமையை அறிந்து கொள்ளுவது எளிது என்றும், எனவே, அவ்விஷயத்தில் பண்டைக் காலத்திய முன்னோர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்ற வேண்டும் என்றும் பகவான் புத்திமதி கூறவேண்டிய அவசியம் இல்லை என்றும் அர்ஜுனன் நினைத்துவிடக் கூடாது என்பதற்காகவே இந்த சுலோகத்தில் பகவான் இவ்விதம் கூறுகிறார்: "எதைச் செய்வது, எதைச் செய்யாமல் இருப்பது என்பதை அறிவாளிகள் கூட நிர்ணயிக்க முடியாது. அதனாலேயே உனக்கு நான் அவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமையை எடுத்துக் கூறுகிறேன். அதை நீ அறிந்து கொண்டால், கர்மத்தின் பந்தத்திலிருந்து நீ விடுதலை அடைவாய். உடல், புலன்கள் ஆகியவற்றின் காரியங்களைச் செய்வதே கர்மம் என்றும், அவற்றைச் செய்யாமல் இருப்பதே அகர்மம் என்றும் நீ தெரிந்து கொண்டு விட்டதால், எல்லாக் கஷ்டங்களும் தீர்ந்துவிடா." —சங்கரர்

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண:|
அகர்மணச்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதி:|| 17

*17.* செயல், விலக்கப்பட்ட செயல், செயலைத் துறத்தல் ஆகியவற்றின் அர்த்தத்தை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். கர்மத்தின் ரகசியம் ஊடுருவிப் பார்க்க முடியாதது.

[செயலின் மூன்று பிரிவுகளும் கீழே குறிப்பிடப்படுகின்றன:

கர்மம்: பற்றுதலின்றி செய்யக்கூடியது. ஆனால், அவ்விதம் செய்யாததால், அது மனிதனை கட்டுப்படுத்துகிறது. பற்றுதலுக்கும் சுயநலத்திற்கும் காரணமான செயலின்மை அல்லது சோம்பேறித்தனமும் இதில் உள்ளடங்கியதே. இதுவும் மனிதனைக் கட்டுப்படுத்துகிறது, அதாவது பந்தத்திற்கு உள்ளாக்குகிறது.

விகர்மம்: விலக்கப்பட்ட கருமம் அல்லது செயல். பற்றுதலின்றி இதைச் செய்வது இயல்பாகவே முடியாத காரியம். கொலை, பொய் சொல்லுதல், விபசாரம் போன்ற செயல்கள் இதில் அடங்கியவையே.

அகர்மம்: மனம் அல்லது உடல் சம்பந்தமான செயல். இது பற்றுதலின்றி செய்யப்படுகிறது. எனவே இது கட்டுப்படுத்துவதில்லை.

ஸ்ரீ வினோபா, வழக்கமான பாதையிலிருந்து தைரியமாக விலகி, 'விகர்மம்' என்ற சொல்லுக்கு ஒரு புதிய விளக்கம் கொடுத்துள்ளார். விகர்மம் என்பதற்கு ஒரு குறிப்பிட்ட செயல் என்பதே அர்த்தம் என்று அவர் கூறுகிறார். சுயநலம் நிறைந்த செயலை சுயநலமற்றதாகச் செய்வதற்கு மனம் உடலுடன் ஒத்துழைத்து உதவி புரியும் போது, அது விகர்மம் ஆகிறது என்கிறார். இந்த முறையை அவர் கணித ரீதியாகவும் பின்வருமாறு விளக்குகிறார்: கர்மம் + விகர்மம் = அகர்மம்.)

---

17. சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட கடமைகளையும், விலக்கப்பட்ட கடமைகளையும் அறிந்து கொள்ள வேண்டும். இவற்றிற்கும், சோம்பேறித்தனத்தினால் எத்தகைய செயலிலும் ஈடுபடாமல் இருப்பதற்கும் வேற்றுமை உண்டு. கர்மத்தின் இந்த மூன்று வழிகளையும் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். இவற்றை அறிந்து கொள்வதுதான் ஆன்மிக ஞானமாகும்.

—சங்கரர்.

**कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।**

**स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥**

**கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய:|**

**ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன கர்மக்ருத்|| 18**

18. செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் யார் காண்கிறானோ, அவனே மனிதருள் ஞானி, அவனே யோகி, அவசியமாகச் செய்ய வேண்டியவற்றையெல்லாம் அவன் செய்து முடித்தவன் ஆகிறான்.

எப்போதும் செயலில் ஈடுபட்ட வண்ணம் இருக்கும் ஒருவன், செய்பவன் தான் என்று கருதாவிடில் அவனது செயல் செயலின்மை ஆகிறது. ஆனால் செயலற்றிருக்கும் ஒருவன், வெளிப்படையாக செயலைத் தவிர்த்தாலும், அவன் தன் மனத்தில் எப்போதும் கோட்டைகள் கட்டிய வண்ணமாக இருக்கிறான். எனவே அவனது செயலின்மை, செயலேயாகும். கர்மத்தின் ரகசியத்தை நன்கு அறிந்த ஞானி, எந்தச் செயலுக்கும் தான் பொறுப்பாளி அல்ல, எல்லாச் செயல்களுக்கும் கடவுளே பொறுப்பாளி என்பதை உணருகின்றான். அதன் காரணமாக அவன், சுயநலமின்றி செயலில் லயித்த வண்ணம் இருக்கின்றான். அவன் தான் உண்மையான யோகி. முற்றிலும் சுயநல நோக்கத்துடன் செயல் புரியும் மனிதனால், கர்மத்தின் ரகசியத்தை அறிந்து கொள்ள முடிவதில்லை. எனவே, தருமத்திற்கும் அதருமத்திற்கும் உள்ள வேற்றுமையை அவனால் அறிய முடியாது. ஆன்மாவின் இயல்பான முன்னேற்றம் சுயநலமின்மையையும் தூய்மையையும் நோக்கியே இருக்கும். ஆதலால், தூய்மையாகிய பாதையிலிருந்து தவறும் ஒருவன் சுயநலமின்மையிலிருந்து தவறியவன் ஆகிறான். சுயநலமற்ற மனிதனின் எல்லாச் செயல்களும் இயல்பாகவே தூய்மையானவை.

**यस्य सर्वे समारम्भाः कामसंकल्पवर्जिताः ।**

**ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥**

**யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்ப வர்ஜிதா:|**

**ஞானக்னி தக்த கர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:|| 19**

19. யாருடைய ஒவ்வொரு கர்மமும் ஆசையிலிருந்தும் சுயநல நோக்கத்திலிருந்தும் விடுபட்டிருக்கிறதோ, யார் தன் கர்மங்கள் யாவையும் ஞானமாகிய தீயில் எரித்துவிட்டானோ, அத்தகைய ஒருவனைத்தான் பண்டிதன் என்று விவேகிகள் கூறுகின்றனர்.

[சொல் இலக்கணத்திற்கு இணங்க, பண்டிதன் என்றால் தன்னைத் தானே அறிந்து கொண்டவன் என்றே அர்த்தம். ஆனால், இப்போது அந்தச் சொல் அதன் உயர்ந்த நிலையிலிருந்து வீழ்ச்சி அடைந்துளது.]

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥ २० ॥

த்யக்த்வா கர்ம பலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய:|
கர்மண்யபி ப்ரவ்ருத்தோ (அ)பி நைவ கிஞ்சித் கரோதி ஸ:|| 20

*20.* கர்ம பலனில் ஆசையைத் துறந்தவனும், எப்போதும் மனத் திருப்தியுடன் இருப்பவனும், எதையும் சார்ந்திராமல் சுதந்திரமாக இருப்பவனும் கர்மத்திலேயே ஆழ்ந்திருந்தால் கூட, அவன் செயல் புரியாதவனே.

அதாவது, அவனது செயல் அவனைக் கட்டுப்படுத்துவதில்லை.

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

நிராசீர்யத சித்தாத்மா த்யக்தஸர்வ பரிக்ரஹ:|
சாரீரம் கேவலம் கர்ம குர்வன் நாப்னோதி கில்பிஷம்|| 21

*21.* எதையும் எதிர்பாராமல், மனத்தையும், உடலையும் கட்டுப்படுத்திக் கொண்டு, எல்லா உடைமைகளையும் உதறித் தள்ளிவிட்டு, உடலினால் மாத்திரமே கர்மத்தைச் செய்பவன் பாவத்திற்கு ஆளாவதில்லை.

தூய்மையான செயலாக இருந்தால் கூட, 'தான்' என்பதால் களங்கம் அடையுமாயின், அது மனிதனைக் கட்டுப்படுத்துகிறது. ஆனால், இறைவனுக்கு அர்ப்பணம் என்ற உணர்ச்சியுடன் செய்யப்படுமாயின், அது கட்டுப்படுத்துவதில்லை. 'தான்' என்ற உணர்ச்சி முற்றிலும் அடங்கிவிட்டால், பின்னர் உடல் மாத்திரமே செயல் புரிகின்றது. உதாரணமாக, தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு மனிதனை எடுத்துக் கொள்வோம். அவன் தூங்கும்போது அவனது உடல் மாத்திரமே வேலை செய்கிறது. சிறையில் தன் வேலையைச் செய்யும் கைதி, தன் உடலை சிறை அதிகாரிகளிடம் ஒப்படைத்துவிடுகிறான். எனவே, சிறையில் அவனுடைய உடல் மாத்திரமே வேலை செய்கிறது. அது போலவே தன்னைத் தானே கடவுளின் கைதியாகச் செய்து கொண்டவன், தானாக எதுவுமே செய்வதில்லை. அவனது உடல் யந்திரத்தைப் போல் வேலை செய்

கின்றது. இந்த வேலையைச் செய்பவர் கடவுளேயன்றி அவன் அல்ல. அவன் தன்னைத்தானே சூன்யமாகச் செய்து கொண்டு விடுகிறான்.

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वाऽपि न निबध्यते ॥ २२ ॥

யத்ருச்சாலாப ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வா (அ)பி ந நிபத்யதே ॥ 22

22. தற்செயலாகத் தனக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைபவனும், சுகம்-துக்கம், விருப்பு-வெறுப்பு போன்ற இருமைகளைக் கடந்தவனும், துவேஷமற்றவனும், வெற்றியிலும் தோல்வியிலும் ஒரே விதமாக இருப்பவனும், செயல் புரிந்தாலும் அவன் பந்தத்திற்கு உள்ளாவதில்லை.

गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஞானாவஸ்தித சேதஸ: ।
யக்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥ 23

23. யார் எல்லாப் பற்றுதல்களையும் விட்டுவிட்ட சுதந்திர ஆன்மாவாகத் திகழ்கிறானோ, யாருடைய மனம் ஞானத்தை உறுதியான அடிப்படையாகக் கொண்டிருக்கிறதோ, யார் வேள்விக்காக மாத்திரம் செயல் புரிகின்றானோ, அவனது கர்மங்கள் யாவும் அழிக்கப்பட்டு விடுகின்றன.

*[19-லிருந்து 23-ஆம் சுலோகம் வரையில் பற்றற்ற சுதந்திரமான செயலைப் பற்றிய நிபந்தனைகளே குறிப்பிடப்பட்டுள்ளன. யக்ஞத்திற்காக கர்மம் செய்வது கட்டுப்படுத்துவதில்லை என்பதை நாம் மூன்றாவது அத்தியாயம் 9-ஆவது சுலோகத்தில் பார்த்தோம். இந்த அத்தியாயத்தின் 23-ஆம் சுலோகம், யக்ஞம் கர்மங்களையே அழித்துவிடுகிறது என்று கூறுகிறது. எதிர்காலத்தில் பலன் தரத்தக்க கர்மங்களைக் கூட அது அழித்துவிடுகிறது. எனவே யக்ஞம், எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய பந்தத்தைத் தடுப்பதுடன், ஏற்கனவே ஏற்பட்ட பந்தத்தையும் தீர்க்கின்றது. குஜராத்தி ஞானியான நரசிம்ம மேத்தா, அறியாமையில் ஆழ்ந்துள்ள ஒருவனை நாய்க்கு உவமையாகக் கூறுகிறார். அதாவது, ஓடிக்கொண்டிருக்கும் ஒரு வண்டிக்குக் கீழே செல்லும் நாய் வண்டியைத் தான் இழுப்பதாக நம்புகிறது என்று கூறுகிறார். பண்டித சதாவலேகர், ஞானியின் நிலையை விளக்க ஓர்*

அழகான உவமை கூறியிருக்கிறார். அதாவது, ஓடிக்கொண்டிருக்கும் வண்டியில் உட்கார்ந்திருப்பவர்கள் வண்டியுடன் செல்லுகிறார்கள். இருந்தாலும், வண்டிதான் ஓடுகிறதேயன்றி அவர்கள் நகருவதில்லை. அதுபோலவே, பரம்பொருளை நோக்கி யாத்திரை செய்யும் ஞானி, அவரது உடலாகிய வண்டியில் அமைதியாக உட்கார்ந்திருக்கிறார். உடல் தான் அசைகிறதேயன்றி, அவர் அசையாமல் இருந்த இடத்திலேயே இருக்கிறார்.]

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா
ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்ம கர்ம ஸமாதினா ‖ 24

24. யக்ஞமாகிய காணிக்கை பிரம்மமே; ஹோமத்தில் உபயோகிக்கும் சாதனம் பிரம்மமே; ஹோம அக்னியும் பிரம்மமே; ஹோமம் செய்பவனும் பிரம்மமே. இவ்விதமாக பிரம்மத்திற்காக அர்ப்பணம் செய்யப்படும் கர்மங்களில் யாருடைய மனம் உறுதியாக நிலைத்திருக்கிறதோ, அவன் நிச்சயமாக பிரம்மத்தையே அடைகிறான்.

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

தைவ மேவாபரே யக்ஞம் யோகின : பர்யுபாஸதே ।
பிரஹ்மாக்னவபரே யக்ஞம் யக்ஞேனை வோப ஜுஹ்வதி ‖ 25

---

24. பிரம்மத்தை அறிந்தவனுக்கு அவன், அவனது கர்மங்கள், கர்மங்களைச் செய்வதற்கான சாதனங்கள் எல்லாம் ஒன்றாகவே தோன்றுகின்றன. கிளிஞ்சலும், அது வெள்ளியைப் போல் புலப்படும் தோற்றமும் ஒன்றாக இருப்பதைப் போலவே, யக்ஞம், அக்னி, ஹோம சாதனங்கள், ஹோமம் செய்பவன், எல்லாம் ஞானிக்கு ஒன்றாகவே தோன்றுகின்றன. அத்தகைய ஒருவன், மற்றவர்களுக்கு உதாரணமாக விளங்க வேண்டும் என்பதற்காகவே செயல் புரிகிறான். பிரம்மத்தின் நிலையிலிருந்து பார்க்கும் போது, செயல் புரியும் அவனை செயலற்ற நிலையில் இருப்பதாகவே கருத வேண்டும். தான் செயல் புரிவதாக நினைக்காதவனும், ஒரு போதும் செயலின் பலனை எதிர்பார்க்காதவனுமே உண்மையான ஞானி —சங்கரர்.

25. தெய்வங்களை வழிபடுவதன் மூலம் சில யோகிகள் யக்ஞம் செய்கிறார்கள். மற்றவர்கள் பிரம்மமாகிய அக்னியில் யக்ஞத்தினாலேயே யக்ஞம் செய்கிறார்கள்.

[24-25. யாருடைய செயல்கள் எல்லையற்ற பரம்பொருளுக்கு அர்ப்பணமாக இருக்கின்றனவோ அவன் தான் 24-ஆவது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள யோகியாவான். அது, செயின்ட் அகஸ்டினின் பின்வரும் வாக்கியத்தை நினைவூட்டுகின்றது: "இறைவனுக்கு என்றும், இறைவனுடையது என்றும், இறைவனுக்காக என்றும் ஆனந்தம் அடைவதே இன்பமான வாழ்வாகும்"

இங்கே குறிப்பிடப்பட்டுள்ள யோகியும் பிரம்மத்திற்கு என்றும், பிரம்மத்தினுடையது என்றும், பிரம்மத்திற்காக என்றும் யக்ஞம் செய்கிறான்.

25-ஆவது சுலோகத்தின் இரண்டாவது பகுதி வேதத்தில் உள்ள ஒரு வாக்கியத்தையே குறிப்பிட்டிருக்கிறது. "தேவர்கள் யக்ஞத்தினால் யக்ஞம் செய்தார்கள்."*

யக்ஞம் என்பதற்கு ஆன்மா என்று சங்கராச்சாரியார் வியாக்கியானம் செய்துள்ளார். "எல்லைக்கு உட்பட்ட ஆன்மா எல்லையற்ற ஆன்மாவுடன் தனக்குள்ள ஐக்கியத்தன்மையை உணருவதே இந்த யக்ஞமாகும்" என்று அவர் கூறியுள்ளார். இதுதான் ஞான யக்ஞம் என்று அவர் கூறுகிறார். எனினும், இது ஒன்றுதான் ஞான யக்ஞம் என்று அர்த்தம் செய்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. பரம்பொருளுடன் ஐக்கியம் அடைவதற்காக இடைவிடாது முயற்சி செய்யும் ஆன்மாவின் நடவடிக்கைகள் யாவும் யக்ஞ நடவடிக்கைகளே அல்லது அத்தனையும் ஞான யக்ஞங்களேயாகும்.

25-ஆவது சுலோகத்தின் பிற்பகுதிக்கு மற்றொரு வியாக்கியான கர்த்தா வேறொரு விளக்கம் கொடுத்துள்ளார். யக்ஞம் செய்கிறோம் என்ற எண்ணத்தையே அக்னியில் ஹோமம் செய்து விடுவது, அதாவது தன்னைத் தானே சூன்யமாக்கிக் கொண்டு விடுவது என்று குறிப்பிட்டுள்ளார்.]

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

ச்ரோத்ராதீனீந்த்ரியாண்யன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி।
சப்தாதீன் விஷயானன்ய இந்திரியாக்னிஷு ஜுஹ்வதி ॥ 26

---

* यज्ञेन यज्ञमयजन्त देवा :।

இது ருக்வேதத்திலும் யஜுர் வேதத்திலும் உள்ள ஒரு வாக்கியம்.

26. கட்டுப்படுத்துதல் என்ற அக்னிகளில் சிலர் செவிப் புலனையும், மற்றப் புலன்களையும் ஹோமம் செய்கிறார்கள்; மற்றவர்கள், புலன்களாகிற அக்னிகளில் சப்தம் முதலிய இந்திரிய சாதனங்களை ஹோமம் செய்கிறார்கள்.

செவியால் கேட்பது முதலிய மற்ற காரியங்களைச் செய்யும் புலன்களை அடக்குவது என்பது ஒரு விஷயமாகும்; கடவுள் தோத்திரங்களையும் பஜனை கீதங்களையும் கேட்பது போன்ற தருமமான வழிகளில் அவற்றைத் திருப்புவது வேறு விஷயமாகும். எனினும் இறுதியில் அந்த இரண்டு வழிகளும் ஒன்றேதான்.

[புலன்களைக் கட்டுப்படுத்தும் பல்வேறு யோக முறைகளைக் குறிப்பிடுவதற்காகவே மேலே 'அக்னிகள்' என்ற பன்மை உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அந்த முறைகளாவன: தாரணம் (மனத்தை ஒரே இடத்தில் லயிக்கும்படி செய்தல்), தியானம் (தியானம் செய்தல்), சமாதி (தியானம் செய்யப்படும் பொருளில் லயமாகிவிடுதல்) ஆகிய மூன்றும் தன்னடக்கத்திற்கான (ஸம்யமம்)முறைகள்.]

**सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।**
**आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥**

ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।
ஆத்ம ஸம்யம யோகாக்னௌ ஜுஹ்வதி க்ஞானதீபிதே ॥ 27

27, மேலும் மற்றவர்கள், புலன்களின் எல்லா நடவடிக்கைகளையும், ஜீவ சக்தியின் எல்லா நடவடிக்கைகளையும், ஞானத்தினால் மூட்டப்பட்ட தன்னடக்கமாகிற யோக அக்னியில் ஹோமம் செய்கிறார்கள்.

அதாவது, அவர்கள் பரம்பொருளைப் பற்றிய தியானத்தில் தங்களை மறந்து லயித்துவிடுகிறார்கள்.

**द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।**
**स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥**

**த்ரவ்ய யக்ஞாஸ் தபோ யக்ஞா யோக யக்ஞாஸ் ததாபரே ।**
**ஸ்வாத்யாய க்ஞான யக்ஞாச்ச யதய : ஸம்சிதவ்ரதா : ॥ 28**

---

28. யாத்திரை ஸ்தலங்களில் கொடுக்கப்படும் தானங்கள் 'த்ரவ்ய யக்ஞம்'; துறவிகள் செய்யும் தவம் 'தப யக்ஞம்'; பிராணாயாமம் முதலியவை யோக யக்ஞம், வேதங்களைப் படித்தல் ஸ்வாத்யாய யக்ஞம்; சாத்திரங்களை ஆராய்ச்சி செய்து அவற்றை அனுசரித்து நடப்பதே ஞான யக்ஞம். —சங்கரர்.

28. சிலர் ஸ்தூலமான காணிக்கைகளாலும், சிலர் தவங்களாலும், சிலர் யோகத்திஞலும், சிலர் ஞானத்தைப் பெறுவதாலும், சிலர் ஞானத்தை உபதேசிப்தாலும் யக்ஞம் செய்கின்றனர். இவையெல்லாம் கடுமையான விரதங்களும், தீவிர முயற்சியும் அடங்கிய யக்ஞங்கள் ஆகும்.

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணே (அ)பானம் ததா பரே ।
ப்ராணுபானகதீ ருத்வா ப்ராணுயாம பராயணு : ॥ 29

29. மூலாதார சக்தியான மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தும் பயிற்சிகளில் ஈடுபட்டுள்ள மற்றவர்கள் உள்ளே இழுக்கும் காற்றில் (பிராண வாயு), வெளியே விடும் காற்றையும் (அபான வாயு), வெளியே விடும் காற்றில் உள்ளே இழுக்கும் காற்றையும் ஹோமம் செய்கின்றனர்; அல்லது பிராண, அபான வாயுக்கள் இரண்டையும் அடக்கிக் கொள்கின்றனர்.

இங்கே பிராணுயாமத்தின் அம்சங்களான பூரகம், ரேசகம், கும்பகம் என்ற மூன்று விதமான பயிற்சிகளே குறிப்பிடப்படுகின்றன.

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

அபரே நியதாஹாரா : ப்ராணுன் ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வே (அ)ப்யேதே யக்ஞவிதோ யக்ஞக்ஷபித கல்மஷா : ॥ 30

30. மற்றும் சிலர் குறைந்த உணவை உட்கொண்டு ஒரு விதமான பிராண வாயுவை மற்ருெரு விதமான வாயுவில் ஹோமம் செய்கின்றனர். யக்ஞம் என்ருல் என்ன என்பதை இவர்கள் எல்லோரும் அறிந்து, யக்ஞத்தின் மூலம் எல்லா அசுத்தங்களையும் (பாவங்களையும்) களைந்து கொண்டவர்களாகின்ருர்கள்.

[29-30. ஜீவ சக்தியான வாயுவின் மூலமே உடல் இயங்குகிறது என்று எல்லோரும் நம்புகின்றனர். அதில் ஐந்து விதமான வாயுக்கள் இருக்கின்றன. 29-ஆவது சுலோகத்தில் இரண்டு வாயுக்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 30-இல் எல்லா வாயுக்களையும் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மூச்சை உள்ளே இழுத்துக் கொண்டு, வெளியே மூச்சு விடுவதை நிறுத்துவதே 'பூரகம்' எனப்படும். அதாவது, 29-ஆவது சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளபடி, வெளியிலுள்ள காற்றை (பிராண வாயு) உள்ளேயுள்ள காற்றில் (அபான வாயு) ஹோமம் செய்வதே.

மூச்சை வெளியே விட்டு, உள்ளுக்கு இழுப்பதை அடியோடு நிறுத்திவிடுவதே 'ரேசகம்' எனப்படும். அதாவது, 29-ஆவது சுலோகத்தில் கூறியிருப்பதற்கிணங்க, உள்ளேயுள்ள காற்றை (அபான வாயு) வெளியேயுள்ள காற்றில் (பிராண வாயு) ஹோமம் செய்வதே.

உள்ளே இழுக்கும் மூச்சு, வெளியே விடும் மூச்சு இரண்டையும் தடுத்து, மூச்சை வெளியே விட்ட பிறகோ அல்லது உள்ளே இழுத்த பிறகோ நிறுத்திவைப்பதே 'கும்பகம்' ஆகும்.

உடல் சம்பந்தமாக வாயுக்கள் செய்யும் காரியங்களை அனுசரித்தே, அவற்றிற்கு பல்வேறு பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மூச்சு விடும் நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கும்போது, அதை பிராண வாயு என்று சொல்லுகிறோம்; அது பெருங்குடலிலும் சிறுநீர்ப்பையிலும் வேலை செய்யும் போது, அதை அபான வாயு என்கிறோம்; ஜீரண நடவடிக்கைக்குக் காரணமாக இருக்கும் வாயுவை, ஸமான வாயு என்று கூறுகிறோம்; ரத்தோட்டத்துடன் சென்று உடலின் சக்திக்குக் காரணமாக இருப்பதை வியான வாயு என்றும், குரல்வளையின் வழியாகச் சென்று வேலை செய்வதை உதான வாயு என்றும் குறிப்பிடுகிறோம்.

பிராண, அபான வாயுக்களைத் தவிர மற்றும் மூன்று விதமான மூலாதார சக்திகள் பின்வருமாறு:

1. வியான வாயு உடல் முழுவதும் பரவி, யந்திரமாகிய உடலின் நடவடிக்கைகளையெல்லாம் அடக்கி ஆள்வதாகக் கூறப்படுகிறது.

2. மரணம் ஏற்படும்போது உடலிலிருந்து வெளியே செல்லுவதே உதான வாயு என்று சொல்லப்படுகிறது.

3. உணவின் சாரத்தை உடல் எங்கும் பரவச் செய்து, ஜீரணம் ஏற்படும்படி செய்வதே ஸமானவாயு என்று குறிப்பிடப்படுகிறது.]

**यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।**
**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥**

**யக்ஞ சிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸனாதனம் ।**
**நாயம் லோகோ(அ)ஸ்த்ய யக்ஞஸ்ய குதோ(அ)ன்ய:**
**குருஸத்தம॥ 31॥**

*31.* யக்ஞத்தில் மிஞ்சியதே அமிருதம் எனப்படுகிறது. அதை யார் உணருகிறுர்களோ அவர்கள் என்றும் அழியாத பிரம் மத்தை அடைகின்றனர். குருஸத்தமா, யக்ஞம் செய்யாதவர் களுக்கு இந்த உலகில் கூட இடமில்லை. அப்படியிருக்க, அவர்க ளுக்கு பர உலகில் எப்படி இடம் இருக்க முடியும்?

[யக்ஞத்தில் மிஞ்சியதை அமிருதம் என்று மனுஸ்மிருதி* குறிப்பிடுகிறது. எனவே, யக்ஞங்களில் ஏதாவதொன்றைச் செய் யாமல் உண்பவன் 'பாவத்தை உண்கிறுன்' என்று அத்தியாயம் *3, 13*-ஆவது சுலோகம் கூறுகிறது. கிருஹஸ்தன் அவசியமாகச் செய்யவேண்டிய யக்ஞத்திற்குப் பொருத்தமான விதியை, பரந்த முறையில் எல்லா யக்ஞங்களுக்கும் பொருத்தமாக இருக்கும்படி கீதையின் ஆசிரியர் செய்துள்ளார்.]

**एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।**
**कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥**

ஏவம் பஹு"விதா யக்ஞா
விததா ப்ரஹ்மணோ முகே ।
கர்மஜான் வித்தி தான் ஸர்வான்
ஏவம் க்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥ 32

*32.* அதுபோலவே வேதங்களில் பல்வேறு விதமான யக்ஞங் கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவையெல்லாம் கருமத்தி லிருந்து உண்டானவை. இதை நீ அறிந்து கொண்டு மோட்சம் அடைவாயாக.

இங்கே கர்மம் என்பது மானசிக, சரீர, ஆன்மிகமான கர் மங்களே ஆகும். இந்த மூன்றுவிதமான கர்மங்களுமின்றி எவ்வித யக்ஞமும் சாத்தியமில்லை; யக்ஞமின்றி மோட்சம் சாத்தியமில்லை. இதை அறிவதும், இந்த அறிவை நடை முறையில் மேற்கொள் வதுமே, யக்ஞத்தின் ரகசியத்தை அறிந்து கொள்வதாகும். சுருங் கக் கூறுவதாயின், மனித வர்க்கத்திற்குத் தொண்டு செய்வதில் மனிதன் தன்னுடைய சரீர, மன, ஆன்மிக சக்திகளை உபயோகித் தாலொழிய, அவன் மோட்சத்திற்குத் தகுதியற்ற ஒரு திருடனு வான். ஒருவன் தன்னுடைய அறிவை மாத்திரம் உபயோகித்து உடலை உபயோகிக்காவிடில், அவன் பூரண யக்ஞம் செய்தவன் ஆகமாட்டான். மனம், உடல், ஆன்மா எல்லாம் ஐக்கியபாவத்து டன் வேலை செய்தாலன்றி, மனித வர்க்கத்திற்குத் தொண்டு புரி வதில் அவற்றைப் போதிய அளவு உபயோகித்துக் கொள்ள முடி

---

यज्ञशेषं तथामृतम् । मनु. ३.२८५
யக்ஞ சேஷம் ததாம்ருதம்| மனு–3.285

யாது. அவை மூன்றும் அந்நியோன்னியமான முறையில் வேலை செய்வதற்கு சரீர, மன, ஆன்மிகத் தூய்மை அவசியமாகும். எனவே மனிதன், தனக்குள்ள எல்லா சக்திகளையும் சிறந்த முறையில் உபயோகிப்பதற்கு, அவற்றின் வளர்ச்சியிலும், அவற்றைத் தூய்மையாக்கிக் கொள்வதிலும் தன் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும்.

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

ச்ரேயான் த்ரவ்ய மயாத் யக்ஞாத் க்ஞான யக்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த க்ஞானே பரிஸமாப்யதே ‖ 33

*33.* பரந்தபா, பொருளைக் கொண்டு யக்ஞம் செய்வதைக் காட்டிலும் ஞான யக்ஞம் சிறந்தது, கட்டுப்படுத்தாத எல்லாக் கர்மங்களும் ஞானத்திலேயே வந்து முடிவடைகின்றன.

ஞானமின்றி செய்யப்படும் தானங்கள் பெரும்பாலும் பேரபாயத்தில் வந்து முடிகின்றன என்பது யாருக்குத் தான் தெரியாது? ஒவ்வொரு கர்மமும், அதன் நோக்கம் எவ்வளவு உயர்ந்ததாக இருப்பினும் ஞானத்துடன் செய்யப்பட்டாலன்றி, அது நிறைவை அடைவதில்லை. எனவே, எல்லாக் கர்மங்களும் ஞானத்தினாலேயே முற்றிலும் பூர்த்தி பெறுகின்றன.

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

தத் வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே க்ஞானம் க்ஞானினஸ் தத்வதர்சின : ‖ 34

*34.* மெய்ப் பொருளைக் கண்ட ஞான சிரேஷ்டர்கள், உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள். பணிவான பக்தியினாலும், தொண்டினாலும், திரும்பத் திரும்பக் கேள்விகள் கேட்டு சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதாலும் நீ அதைக் கற்றுக்கொள்.

பக்தி, திரும்பத்திரும்ப கேள்விகள் கேட்பது, தொண்டு ஆகிய மூன்றும் ஞானத்தை அடைவதற்கான மூன்று நிபந்தனைகள் ஆகும். இவை, இக்காலத்தில் மிகவும் கவனத்துடன் மனத்தில் இறுத்திக் கொள்வதற்கு உகந்தவை. பக்தி என்றால் பணிவும் தொண்டுமே ஆகும். இவை தான், ஞானத்தை அடைவதற்கு அவசியமான உற்ற துணை. பணிவும் தொண்டும் இராத பக்தி,கேவி

பக்தியே. அடிக்கடி கேள்விகள் கேட்டுத் தெரிந்து கொள்வதும் அவசியம். விசாரித்துத் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற தீவிர உணர்ச்சி இல்லாவிடில், ஞானம் ஏற்படுவது முடியாத காரியம். அவ்விதம் அணுகும் குருவினிடத்தில் பக்தியும் நம்பிக்கையும் இருக்க வேண்டியது அவசியம் என்பதையே இவையெல்லாம் காட்டுகின்றன. நம்பிக்கையின்றேல் பணிவு இருக்க முடியாது; நம்பிக்கையின்றேல் தொண்டிற்கு இடம் ஏது?

**यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।**
**येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥**

**யத்க்ஞாத்வா ந புனர்மோஹம் ஏவம் யாஸ்யஸி பாண்டவ |**
**யேன பூதான்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ மயி || 35**

*35.* பாண்டவா, இந்த ஞானத்தைநீ அடையும் போது, மீண்டும் அத்தகைய தவறை நீ செய்ய மாட்டாய். அந்த ஞானத்தை அடைவதன் பலனாக, நீ யாதொரு விதி விலக்குமின்றி எல்லா உயிர்களையும் உன்னிடத்தில் காண்பாய். அவ்விதமே என்னிடத்திலும் காண்பாய்.

'யதா பிண்டே ததா பிரஹ்மாண்டே' (যথা পিংডে তথা ব্রহ্মাংডে) அதாவது 'தன்னிடத்தில் எப்படியோ அப்படியே உலகத்தினிடத்திலும்' என்ற பழமொழியும் அதே கருத்தையே குறிப்பிடுகின்றது. தன்னைத் தானே உணர்ந்த நிலையை அடைந்த ஒருவன், தனக்கும் மற்றவர்களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையையும் காண்பதில்லை.

[ஞானத்தின் இயற்கையான விளைவு என்னவெனில், தனக்கும் எல்லா சிருஷ்டிகளுக்கும் இடையே உள்ள ஒற்றுமையை உணர்ந்து கொள்வதே. அதாவது, தன்னிடத்தில் எல்லா உயிர்களையும் காண்பதும், ஆதலால், கடவுளிடத்திலும் எல்லா உயிர்களையும் காண்பதுமே ஆகும். அத்தியாயம். *6, 29-31*-ஆவது சுலோகங்களில் இந்தக் கருத்து விவரிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கவும். ஞானத்திற்கான சோதனையை இந்த சுலோகம் ஒரே வார்த்தையில் குறிப்பிட்டிருக்கிறது.

''தான் ஒளியில் இருப்பதாகக் கூறிக்கொண்டு, தன் சகோதரனை வெறுப்பவன் இப்போது கூட இருளிலேயே இருக்கிறான். தன் சகோதரன் மீது அன்பு காட்டுபவன் ஒளியிலேயே நிலைத்திருக்கிறான்''.—பைபிள்.]

**अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।**
**सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥**

**அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:|**
**ஸர்வம் க்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி|| 36**

*36.* பாவிகளுக்கெல்லாம் மிகக் கொடுமையான பாவியாக நீ இருந்தாலும் கூட, ஞானமாகிற படகினால் நீ பாவமாகிற மகா சமுத்திரத்தைத் தாண்டிவிடுவாய்.

**यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।**
**ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥**

**யதைதாம்ஸி ஸமித்தோ(அ)க்னிர் பஸ்மஸாத் குருதே(அ)ர்ஜுன|**
**ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா|| 37**

*37,* அர்ஜுனா, ஜ்வாலைவிட்டு எரிகின்ற தீ எவ்விதம் விறகைச் சாம்பலாகச் செய்துவிடுகிறதோ, அவ்விதமே ஞானமாகிற தீ எல்லாக் கர்மங்களையும் சாம்பலாகச் செய்துவிடுகிறது.

**न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।**
**तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८ ॥**

**ந ஹி க்ஞானேன ஸத்ருசம் பவித்ரம் இஹ வித்யதே|**
**தத் ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேனாத்மனி விந்ததி|| 38**

*38.* ஞானத்தைப் போல் பரிசுத்தம் செய்யும் பொருள் இந்த உலகில் வேறு எதுவுமே இல்லை. குற்றம் குறையின்றி பூரணமாக யோகத்தைப் பயிற்சி செய்து பக்குவம் அடைந்தவன், நாளடைவில் ஞானத்தைத் தன்னிடத்தில் தானே காண்கிறான்.

[*32-38. 32*-ஆவது சுலோகத்தில் "விததா ப்ரஹ்மணோ முகே" (वितता ब्रह्मणो मुखे) என்பதை "வேதங்களில் விவரிக்கப்பட்

---

36. இந்த உடலாகிற கோவிலை இருள் சூழும்படி விடக்கூடாது; அதில் ஞானமாகிற தீபத்தை ஏற்றிவைக்க வேண்டும். அப்போதுதான் பராசக்தியின் முகத்தைக் காண முடியும். —ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

37. ஞானமாகிற தீயில் புடம் செய்யப்பட்டவன் குற்றம் குறையற்ற நிறை மனிதனாக மரணம் அடைகின்றான். எனவே, பாவமற்ற அவன் மீண்டும் பிறப்பதில்லை. —ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

டுள்ள'' என்று காந்திஜி மொழிபெயர்த்துள்ளார். மற்றும் பலரும் அவ்விதமே மொழி பெயர்த்திருக்கிறார்கள். ஆனால், ஹில் இதற்கு ருசிகரமான ஒரு புதிய விளக்கம் கொடுத்துள்ளார். அந்த சுலோகத்தில் உள்ள 'ப்ரஹ்மன்' என்ற சொல்லுக்கு வேதம் என்ற அர்த்தத்தை நிராகரித்துவிட வேண்டும் என்றும், அதற்கு முந்திய சுலோகத்தில் பிரம்மத்தை அடைவது என்று கூறப்பட்டிருப்பதால், இங்கேயும் அந்த அர்த்தத்தையே கொள்ளவேண்டும் என்றும் அவர் கூறியிருக்கிறார். ''பிரம்மத்தின் வாயிற்படியில் பல விதமான யக்ஞங்களும் விரிந்துள்ளன'' என்று அவர் மேற்கண்ட வாக்கியங்களுக்குப் பொருள் கூறியுள்ளார். மேலும் அவர் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்: ''ஒவ்வொருவரும் அவரவருக்கு விருப்பமான யக்ஞத்தைச் செய்யலாம். அவ்விதம் செய்யும் ஒவ்வொருவரும் அந்த வாயிற்படியின் வழியாக பிரம்மத்தை அடைகின்றனர்.''

ஹில் கொடுத்துள்ள இந்த விளக்கம் மிகத் தெளிவாக இருக்கிறது. எனினும், அது ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல, ''வேதங்களில் விவரிக்கப்பட்ட'' அல்லது ''வேதங்களிலிருந்து அறியப்பட்ட'' என்பதே ஒப்புக் கொள்ளத்தக்க விளக்கமாகும். இந்த சுலோகத்தின் அர்த்தத்தையும், பின்வரும் சுலோகங்களின் அர்த்தத்தையும் விளக்குவதற்கு நான் விவரமாகச் சில விஷயங்களைக் குறிப்பிடவேண்டும். இந்த சுலோகமும், பின் வரும் சுலோகங்களும், முண்டக உபநிடதத்தில் உள்ள ஒரு முக்கியமான பிரிவின் சாரத்தைப் பிழிந்து கொடுக்கின்றன. அந்தப் பிரிவு இவ்விதம் ஆரம்பமாகிறது: ''தெய்விக மந்திரங்களில் ஞானிகள் கண்ட கர்மங்கள் மூன்று வேதங்களிலும் பலவாறாக விவரிக்கப்பட்டுள்ளன.''* ''த்ரேதாயாம் பஹுதா ஸந்ததானி'' என்ற இந்தக் கடைசி வாக்கியங்கள், கீதையின் 4-ஆவது அத்தியாயம், 32-ஆம் சுலோகத்தைப் போலவே இருக்கிறது. மேலும் முண்டக உபநிடதம் கூறுவதாவது:

''வேதங்களில் விவரிக்கப்பட்டுள்ள அந்த யக்ஞங்களைச் செய். அவைதான் புண்ணிய உலகை அடைவதற்கான வழியாகும்.''

மேற்கண்ட உபநிடதத்தில் வேதங்களில் விவரிக்கப்பட்டுள்ள பல்வேறு யக்ஞங்களையும் குறிப்பிட்ட பின், அந்தப் பிரிவு பின்கண்ட விளக்கத்துடன் முடிவடைகின்றது: ''இந்த யக்ஞங்களில், பல்வேறு கீழ்த்தரமான சடங்குகளும் அடங்கியிருக்கின்றன. புண்ணியத்தை சம்பாதிப்பதற்கு அவை அவசியமானவையே. ஆனால், அத்தகைய யக்ஞங்கள் நம்புவதற்குத் தகுதியற்ற படகுகள் போன்றவை. அவற்றைப்போற்றும் மூடர்கள் அடிக்கடி மூப்பையும் மரணத்தையும் அடைகின்றனர் (அடிக்கடி பிறந்து இறக்கின்றனர்). கட்டுப்படுத்தும் அந்தக் கர்மங்களைத் தழுவிக்கொண்டிருப்பவர்கள் தங்களுடைய புண்ணியமெல்லாம் தீர்ந்ததும் மீண்டும் இந்த உலகில் வந்து பிறக்கின்றனர். ஆனால்

---

*அடுத்த பக்கத்தில் உள்ள அடிக்குறிப்பைப் பார்க்கவும்.

ஞானமார்க்கத்தைப் பின்பற்றுவோரோ, தங்களுடைய தவத்தினாலும் நம்பிக்கையினாலும் அழிவற்ற பரம்பொருளை அடைகின்றனர். கர்மங்களால் அடையக் கூடிய உலகங்களையெல்லாம் பரிசீலனை செய்த பின், பிரம்மத்தில் ஈடுபாடுள்ள மனிதன், கர்மங்களில் அக்கறை கொள்ளுவதில்லை. பிரம்ம உலகம் மனிதனின் கர்மங்களிலிருந்து எழுந்ததல்ல. எனவே, கர்மங்களால் மனிதன் அவற்றை அடைய முடியாது. இந்த ஞானத்தை அவன் அடைய வேண்டுமாயின், வேதங்களை நன்கு கற்றவரும் பிரம்மத்தை அறிந்தவருமான குருவை அவன் ஒழுங்கான முறையில் நாட வேண்டும்.''*

முண்டக உபநிடதத்தில் உள்ள இந்தப் பிரிவை நான் மிகவும் சுருக்கியிருக்கிறேன். இருந்தாலும் அதில் அடங்கியுள்ள வாதம் தெளிவாக இருக்கிறது. இப்போது வாசகர்கள் 32-38 சுலோகங்களை வாசிப்பார்களாயின், பழைய கருத்து புதிய முறையில் விளக்கப்பட்டிருப்பதைத் தெரிந்து கொள்ளலாம் (சுலோகம்-38). வைதிகச் சடங்குகளை அடிப்படையாகக் கொண்ட யக்ஞங்கள், அல்லது ஸ்தூல யக்ஞங்கள், நம்பமுடியாத படகுகளே. ஞானப் படகு ஒன்றுதான் நிச்சயமானது என்று உபநிடதம் கூறுகிறது. கீதையும் அதையே 'க்ஞான ப்லவம்' அதாவது ஞானப் படகு என்று கூறுகிறது. உபநிடதத்தின் வாதத்தை கீதை அங்கீகரிக்கின்றது. உபநிடதத்தைப் போலவே கீதையும், ஞானத்தை அடைவதற்கான வழிகளையும் முறைகளையும் கூறுகிறது. அது மாத்திரமல்ல; ஞானத்தை அடைவதில் உள்ள கஷ்டத்தைத் தீர்ப்பதற்கான யோசனையையும் கூறுகிறது. அதாவது, உலகத்தைத் துறக்கவும் ஒரு குருவின் காலடியில் உட்கார்ந்து கற்றுக் கொள்ளவும் முடியாத, அவ்விதம் செய்வதற்குத் தகுதியற்ற ஒருவருக்கு யோகம்தான் அந்த ஞானத்தை அடைவதற்கான திறவுகோல் என்றும் பிரகடனம் செய்கிறது சுலோகம் - (38). உபநிடதத்தின் தீவிர நிலைக்கு மாற்று முறையையும் கீதை குறிப்பிட்டிருக்கிறது. வேதங்களில் விவரிக்கப்பட்டுள்ள ஸ்தூல யக்ஞங்கள் "நம்ப

---

*...मन्त्रेषु कर्माणि कवयो यान्यपश्यंस्तानि त्रेतायां बहुधा संततानि। तान्याचरथ नियतं सत्यकामा एष वः पन्थाः सुकृतस्य लोके ॥...प्रियां वाचमभिवदन्त्योऽर्चयन्त्य एषः वः पुण्यः सुकृतो ब्रह्मलोकः ॥ प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्तमवरं येषु कम । एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरामृत्युं ते पुनरेवापियन्ति ॥ ...यत् कर्मिणो न प्रवेदयन्ति रागात् तेनातुराः क्षीणलोकाश्च्यवन्ते ।...तपः श्रद्धे ये... विरजाः प्रयान्ति यत्रामृतः स पुरुषो ह्यव्ययात्मा ।...परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन ।...तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ।

—मुण्डक. १-२-१-१२.

முடியாத படகுகள்'' என்றாலும், அவற்றைக் காட்டிலும் ஞான யக்ஞங்கள் எவ்வளவோ சிறந்தவை என்று குறிப்பிட்டிருக்கிறது. ஞான யக்ஞங்களின் சாரத்தை ஒரே சொல்லில், அதாவது 'யோகம்' என்று கூறிவிடலாம். யோகம் என்றால் பலனில் பற்று தலின்றி எல்லாக் கர்மங்களையும் செய்யவேண்டும் என்பதுதான். அவற்றை இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அவ் விதம் செய்வது, ஞானத்தில்தான் வந்து முடிவடையும் (சுலோ கம் - *33*).

*32*-ஆம் சுலோகத்திற்கு காந்திஜி எழுதியுள்ள குறிப்பு அவ ரது சொந்தக் கருத்திற்கு இணங்க முக்கியமானது என்றாலும், இங்கே நான் குறிப்பிட்டுள்ள விஷயங்கள் அதில் இல்லை. உப நிடதத்தில் உள்ள இந்த உவமையை நான் அறிந்தவரையில், எந்த வியாக்கியான கர்த்தாவும் கவனித்ததாகத் தெரியவில்லை.]

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।

ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

**ச்ரத்தாவான் லபதே க்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:|**

**க்ஞானம் லப்த்வா பராம் சாந்திம் அசிரேணாதிகச்சதி|| 39**

*39*. நம்பிக்கையும் சிரத்தையும் உள்ளவன்தான் அத்தகைய ஞானத்தை அடைகிறான். ஞானத்தை அடைய வேண்டும் என்ப தில் தன் கவனத்தை லயிக்கச் செய்தவனும், தன் புலன்களை அடக்கி ஆளும் சக்தியைப் பெற்றவனும், ஞானத்தை அடைந்த தும் காலதாமதமின்றி மகோன்னதமான சாந்தியை அடைகிறான்.

[ஞானத்தைப் பெறவிரும்புவோனுக்கு, இவை பாறை போன்ற அடிப்படையான, இன்றியமையாத சாதனங்கள் ஆகும். தவம், நம்பிக்கை, பிரம்மச்சரியம், சத்தியம் ஆகியவை, ஆன்ம ஞானத்தை நாடும் ஒருவருக்கு அத்தியாவசியமான தகுதி கள் என்று உபநிடதங்களிலெல்லாம் காண்கிறோம் (சாந்தோக்ய உபநிடதம் *8. 5. 3-5*; முண்டக உபநிடதம் *3. 1. 5*; பிரச்ன உபநிடதம் - *1. 2* முதலியவை*]

---

* अथ यदनाशकायनमित्याचक्षते ब्रह्मचर्यमेव तदेष ह्यात्मा न नश्यति यं ब्रह्मचर्येणानुविन्दतेऽथ यदरण्यायनमित्याचक्षते ब्रह्मचर्यमेव तत्तदरश्च ह वै ण्यश्चार्णवौ ब्रह्मलोके तृतीयस्यामितो दिवि तदैरंमदीयं सरस्तदश्वत्थः सोमसवनस्तदपराजिता पूर्ब्रह्मणः प्रभुविमितं हिरण्मयम् ॥ तद्य एवैतावरं च ण्यं चार्णवौ ब्रह्मलोके ब्रह्मचर्येणानुविन्दन्ति तेषामेवैष ब्रह्मलोकस्तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति ॥

छान्दोग्य ८-५-३-५.

**अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।**
**नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥**

அக்ஞச்சாச்ரத் ததானச்ச ஸம்சயாத்மா விநச்யதி ।
நாயம் லோகோ(அ)ஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மன:।। 40

*40.* ஞானமும், நம்பிக்கையும் இல்லாத சந்தேகவாதி நாசம் அடைகிறான். சந்தேக புத்தியுள்ளவனுக்கு இந்த உலகமும் இல்லை, மேல் உலகமும் இல்லை, சுகமும் இல்லை.

---

सत्येन लभ्यस्तपसा ह्येष आत्मा । सम्यग्ज्ञानेन ब्रह्मचर्येण नित्यम् ॥ अन्तः शरीरे ज्योतिर्मयो हि शुभ्रो । यं पश्यन्ति यतयः क्षीणदोषाः ॥

मुण्डक ३-१-५

तान्ह स ऋषिरुवाच भूय एव तपसा ब्रह्मचर्येण श्रद्धया संवत्सरं संवत्स्यथ यथाकामं प्रश्नान् पृच्छथ यदि विज्ञास्यामः सर्वं ह वो वक्ष्याम इति ॥

प्रश्न १-२

உபவாசம் என்று ஜனங்கள் கூறுவது உண்மையில் பிரம்மச்சரியமே. இந்த ஆன்மா ஒரு போதும் அழிவதில்லை. பிரம்மச்சரியத்தின் மூலமே இதை எட்டலாம். ஆசிரம வாழ்க்கை என்று ஜனங்கள் கூறுவதும் உண்மையில் பிரம்மச் சரியமே. இங்கேயிருந்து மூன்றாவது சொர்க்கத்தில் பிரம்மலோகம் இருக்கிறது. அந்த உலகில் 'அர' என்றும் 'ண்ய' என்றும் இரண்டு சமுத்திரங்கள் இருக்கின்றன. அங்கே 'ஐரம்மதீயம்' என்ற ஏரியும், ஸோம அமிருதமும், அசுவத்த மரமும் இருக்கின்றன. அங்கேதான் யாராலும் ஜயிக்கப்படாத, இறைவனால் தங்க மயமாக நிர்மாணிக்கப்பட்ட பிரம்ம புரி இருக்கிறது. எனவே பிரம்மச்சரியத்தின் மூலம் 'அரம்', 'ண்யம்' என்ற சமுத்திரங்களை அடைபவர்களே பிரம்ம லோகத்தைச் சேர்ந்தவர்களாகின்றனர். அவர்களுக்கு, தங்கள் விருப்பப்படி எல்லா உலகங்களிலும் செல்ல சுதந்திரம் உண்டு.

—சாந்தோக்ய உபநிடதம் 8-5-3-5.

சத்தியம், தவம் அல்லது புலன்களையும் மனத்தையும் கட்டுப்படுத்துதல், உண்மையான ஞானம், பிரம்மச்சரியம் ஆகியவற்றை இடைவிடாது பயிற்சி செய்வதன் மூலம் பாவங்கள் களையப்பட்ட சந்நியாசிகள், ஒளிவீசிக் கொண்டும், பரிசுத்தமாகவும் இருக்கும் ஆன்மாவை உடலுக்குள்ளேயே காண்கின்றனர். —முண்டக உபநிடதம்-3,1.5.

"மீண்டும் தவத்தையும் பிரம்மச்சரியத்தையும், சிரத்தையையும் மேற்கொண்டு ஒரு வருஷம் வசியுங்கள். பின்னர் உங்கள் விருப்பப்படி கேள்விகள் கேளுங்கள். எமக்குத் தெரிந்தால் நிச்சயமாக விடையளிப்போம்" என்று அவர்களிடம் அந்த ரிஷி கூறினர். —பிரச்ன உபநிடதம்-1·2.

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनंजय ॥ ४१ ॥

யோக ஸந்யஸ்த கர்மாணம் க்ஞானஸஞ்சின்ன ஸம்சயம்|
ஆத்ம வந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ॥ 41

*41.* தனஞ்ஜயா! யோகத்தினல் கர்மங்களையெல்லாம் துறந்தவனும், ஞானத்தினல் சகல சந்தேகங்களையும் தகர்த்துக்கொண்டவனும் யாரோ, ஆன்ம ஞானத்தில் திளைக்கும் அவனைக் கர்ம பந்தங்கள் கட்டுப்படுத்தா.

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

தஸ்மாதக்ஞான ஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் க்ஞானஸிஞத்மன:|
சித்வைனம் ஸம்சயம் யோகம் ஆதிஷ்டோத்திஷ்ட பாரத॥ 42

*42.* ஆகையால் பாரதா! ஞானமாகிற வாளால் இந்த சந்தேகத்தை நீ வெட்டி வீழ்த்திவிடு. அறியாமை காரணமாக இந்த சந்தேகம் உன் உள்ளத்தில் புகுந்திருக்கிறது! யோகத்தை மேற்கொண்டு எழுந்திரு.

[“எழுந்திரு, இந்த விநாடியிலேயே தொடங்கு. போராடுவதற்கும் வாழ்க்கையைத் திருத்திக்கொள்வதற்கும் இதுதான் தருணம் என்று கூறு.” இந்த வாக்கியங்கள் ‘இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்’ என்ற நூலில் உள்ளவை.]

---

* 41-42. கிணறு வெட்ட வேண்டும் என்று விரும்பிய ஒருவன், ஓரிடத்தில் பத்து அடி ஆழம் வெட்டினன். பிறகு மற்ருெரிடம் சென்று இருபது அடி ஆழமும், அதன் பின் வேருெரிடம் சென்று முப்பது அடி ஆழமும் வெட்டினன். கடைசியில் ஓரிடத்திலும் தண்ணீர் வராததால், கிணறு வெட்டும் யோசனையை விட்டுவிட்டான். ஒன்றிலும் திடமான நம்பிக்கை இல்லாதவர்களின் நிலையும் இப்படித்தான் இருக்கும். சந்தேகமின்றி ஒரே பொருளின் மீது உறுதியான நம்பிக்கை வைப்பவனே, இறுதியில் வெற்றியடைவான் என்பதில் ஐயம் இல்லை.
—ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे ज्ञानकर्मसंन्यासयोगो नाम चतुर्थोऽध्यायः ॥ ४ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்தியாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
க்ஞான கர்ம ஸந்யாஸயோகோ நாம
சதுர்த்தோ (அ)த்யாய: ||-4

பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின் ஓர்
அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி கிருஷ்ண
பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷணை
யில் ஞான கர்ம சந்நியாச யோகம் என்ற
நான்காவது அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# சந்நியாச யோகம்

## ஐந்தாம் அத்தியாயம்

தன்னலமற்ற கர்மங்களின் கட்டுதிட்டங்களுக்கு உட்படாமல் கர்மங்களைத் துறப்பது முடியாத காரியம் என்பதையும், இறுதியில் இரண்டுமே ஒன்றுதான் என்பதையும் காட்டுவதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும்.

अर्जुन उवाच

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

அர்ஜுன உவாச
ஸந்யாஸம் கர்மணும் க்ருஷ்ண புனர்யோகம் ச சம்ஸஸி ।
யச்ரேய ஏதயோரேகம் தன் மே ப்ருஹி ஸுநிச்சிதம் ‖ 1

அர்ஜுனன் கூறினன்:

1. கிருஷ்ண, கர்மங்களைத் துறப்பதையும் நீங்கள் புகழ்கின்றீர்கள். அதே சமயத்தில், கர்மங்கள் செய்வதையும் நீங்கள் போற்றுகின்றீர்கள்; இவற்றில் எது சிறந்தது என்பதை நிச்சயமாக எனக்குக் கூறுங்கள்.

[சந்நியாசம் (துறவு), யோகம் (கர்மங்களைச் செய்தல்) ஆகிய இரண்டையும் பற்றி கீதையின் ஆசிரியர் விவாதிக்கிருர். அவரது காலத்தில் இந்த விவாதம் சாதாரணமாக நடைபெற்று வந்திருக்க வேண்டும். அந்த இரண்டு முறைகளின் சாரம் சரிவர அறிந்து கொள்ளப்படவில்லை என்பதையும் அவர் எடுத்துக் காட்டுகிருர். அவ்விரண்டுமே 'சாங்கியம்' என்றும், 'யோகம்' என்றும் 4-ஆவது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.]

श्रीभगवानुवाच

सन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

ஸ்ரீ பகவான் உவாச

ஸந்யாஸ : கர்மயோகச்ச நி : ச்ரேய ஸகராவுபௌ।
தயோஸ்து கர்ம ஸந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே॥ 2

ஸ்ரீபகவான் கூறினார்:

2. கர்மத்தைத் துறத்தல், கர்மத்தைச் செய்தல் ஆகிய இரண்டும் மோட்சத்தைக் கொடுப்பவையே. இருந்தாலும், அந்த இரண்டிற்குள் சந்நியாசத்தைக் (துறவு) காட்டிலும் கர்மயோகமே (கர்மத்தைச் செய்தல்) சிறந்தது.

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

க்ஞேய : ஸ நித்யஸந்யாஸீயோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ॥ 3

3. விருப்பு வெறுப்புகள் இராதவனை நிரந்தர சந்நியாசி என்று அறிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், இருமைகளிலிருந்து விடுபட்டவன் பந்தத்திலிருந்து எளிதில் விடுதலை அடைகிறான்.

அதாவது உண்மையான துறவு என்பது, கர்மத்தைத் துறப்பது அல்ல, இருமைகளில் உள்ள பற்றுதலைத் துறப்பதேயாகும். எப்போதும் கர்மத்தில் (செயலில்) ஈடுபட்டிருப்பவன் உண்மையான துறவியாக இருக்கலாம். செயலிலேயே ஈடுபடாத மற்றொருவன் துறவியைப் போல் தோன்றும் மோசக்காரனாக இருக்கலாம். அத்தியாயம் 3, 6–ஆம் சுலோகத்தைப் பார்க்கவும்.

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितःसम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४ ॥

ஸாங்க்ய யோகௌ ப்ருதக் பாலா : ப்ரவதந்தி ந பண்டிதா :।
ஏகமப்யாஸ்தித : ஸம்யக் உபயோர் விந்ததே பலம் ॥ 4

4. சாங்கியமும் யோகமும் வெவ்வேறானவை என்று அறிவு இல்லாதவர்களே கூறுவர்; பண்டிதர்கள் கூறமாட்டார்கள். அவ்விரண்டிற்குள் ஏதாவது ஒன்றில் ஒருவன் உறுதியுடன் நிலை பெற்றிருப்பானாயின், அவன் இரண்டின் பலனையும் அடைகிறான்.

ஞானத்தில் ஆழ்ந்துள்ள யோகி, தனது சிந்தனையில் கூட உலகத்தின் நன்மைக்காகவே வாழ்கிறான். எனவே, வேறு எதுவுமின்றி அவனது சிந்தனையின் சக்தியினால் மாத்திரமே கர்ம யோகத்தின் பலனை அவன் அடைந்துவிடுகிறான். கர்மயோகியோவெனில், எப்போதும் பற்றின்றி கர்மத்தில் ஈடுபட்டிருப்பதால், ஞான யோகியின் மனச்சாந்தியை இயல்பாகவே அனுபவிக்கிறான்.

यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५ ॥

யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம் தத் யோகைரபி கம்யதே।
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பச்யதி ஸ பச்யதி||-5

5. சாங்கியர்கள் எந்த லட்சியத்தை அடைகிறார்களோ அதே லட்சியத்தையே யோகிகளும் எய்துகின்றனர். சாங்கியமும் யோகமும் ஒன்று என்பதை யார் பார்க்கிறானோ, அவனே உண்மையில் பார்ப்பவன் ஆகிறான்.

[சாங்கியர்களையும் யோகிகளையும் பற்றி அத்தியாயம் 3, சுலோகம் 2-இல் உள்ள எனது குறிப்பைப் பார்க்கவும்.]

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म न चिरेणाधिगच्छति ॥ ६ ॥

ஸன்யாஸஸ்து மஹாபாஹோ து:க்கமாப்து மயோகத:।
யோக யுக்தோ முனிர் ப்ரஹ்ம ந சிரேணாதிகச்சதி|| - 6

6. மகத்தான தோள் வலிமை வாய்ந்தவனே, யோகத்தினாலன்றி துறவு நிலையை (சந்நியாசம்) அடைவது கடினமாகும். ஆனால், யோகத்துடன் கூடிய துறவி சீக்கிரத்திலேயே பிரம்மத்தை அடைகிறான்.

[இங்கே பிரம்மம் என்பதற்கு சந்நியாசம் (துறவு) என்றே அர்த்தம் என சங்கராச்சாரியார் தமது வியாக்கியானத்தில் கூறியுள்ளார். ஏனெனில், அது பரம்பொருளை அறிவதற்கான ஞானத்திற்கு வழிகாட்டுகிறது அல்லவா? இச் சந்தர்ப்பத்திற்கு அந்த வியாக்கியானம் நியாயமானது என்றே தோன்றுகிறது. இதன் பொருள் என்னவெனில், யோகமின்றி அடைவதற்குக் கஷ்டமாக இருப்பது, யோகத்தின் மூலம் எளிதாகிவிடுகிறது என்பதே.]

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

யோக யுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்திரிய: ।
ஸர்வ பூதாத்ம பூதாத்மா குர்வன்னபி நலிப்யதே ॥ 7

7. தன்னைத் தூய்மையாக்கிக் கொண்டவனும், தன் மனத்தையும் புலன்களையும் வென்றவனும், எல்லா சிருஷ்டிகளுடைய ஆன்மாவும் தானும் ஒன்று என்ற நிலையை அடைந்தவனும் கர்மங்களைச் செய்துவந்தால் கூட, அவற்றினுல் அவன் பாதிக்கப்படுவதில்லை.

["கர்மம் மனிதனை பாதிப்பதில்லை" என்று கூறும் ஈச உபநிடதத்தின் கருத்தையே இந்த சுலோகத்தில் கீதை எடுத்துக் கொண்டிருக்கிறது.*]

नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥ ८ ॥

நைவகிஞ்சித் கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் ।
பச்யன் ச்ருண்வன் ஸ்ப்ருசன் ஜிக்ரன் அச்னன் கச்சன் ஸ்வபன் ச்வஸன் ॥ 8

8. உண்மையைக் கண்ட யோகி, பார்த்தாலும், கேட்டாலும், தொட்டாலும், முகர்ந்து பார்த்தாலும், சாப்பிட்டாலும், நடந்தாலும், தூங்கினுலும், அல்லது மூச்சுவிட்டாலும், அந்தச் செயல்கள் புரிவது தான் அல்ல என்பதை அறிகிருன்.

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன் உன்மிஷன் நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் ॥ - 9

9. பேசினுலும், கைவிட்டாலும், இறுகப்பற்றிக் கொண்டாலும், இந்திரியங்கள் அவற்றின் அலுவல்களைச் செய்கின்றனவேயன்றி தான் செய்யவில்லை என்பதை யோகி அறிகிருன்.

* न कर्म लिप्यते नरे। ईश–२

'தான்' என்ற எண்ணம் நீடிக்கும் வரையில் இத்தகைய பற்றற்ற நிலையை அடைய முடியாது. எனவே, சிற்றின்பத்தில் ஆர்வம் கொண்ட ஒருவன், தான் எதுவும் செய்யவில்லை என்றும், புலன்களே செய்கின்றன என்றும் கூறித் தப்பித்துக் கொள்ள முடியாது. அத்தகைய குறும்புத்தனமான விளக்கம், கீதையையும் நேர்மையான நடத்தையையும் பற்றிய ஆழ்ந்த அறியாமையையே வெளிப்படுத்துவதாகும். இதை, அடுத்த சுலோகம் மிகவும் தெளிவாக்குகின்றது.

[*8*-ஆம் சுலோகத்தில் உள்ள 'தத்வவித்' என்ற சொல்லுக்கு, 'உண்மையைக் கண்டவன்' அல்லது 'விதிகளை அறிந்தவன்' என்று அர்த்தம் கூறலாம். இங்கே விதிகள் என்பது சாங்கிய விதிகளையே குறிக்கின்றது. அவையெல்லாம் குணங்களே, ஆன்மா அல்ல. உட்புலன்கள், வெளிப்புலன்கள் (ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள்) ஆகியவற்றின் நடவடிக்கைகள் யாவும் ஆன்மாவின் நடவடிக்கைகள் அல்ல என்பதை அவன் காண்பான். அந்த நடவடிக்கைகளுக்கு ஆன்மா காரணம் என்று அவன் கூறமாட்டான். *8-9*-ஆவது சுலோகங்கள் கபீர் தாசருடைய ஒரு மகத்தான கீதத்தை நினைவூட்டுகின்றன. அதாவது 'இயற்கையான தொடர்பே சிறந்தது' என்ற கீதத்தில் அவர் பின்வருமாறு கூறுகிறார்: "ஒரு யோகிக்கு, உடலின் ஒவ்வொரு நிலையும், ஒவ்வொரு அசைவும் கடவுளுக்கு அளிக்கப்படும் காணிக்கையே, அல்லது கடவுளுடன் ஒன்றாகிவிடுவதேயாகும்."]

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா ॥ - 10

*10.* யார் தனது கர்மங்களையெல்லாம் பிரம்மத்திற்கு அர்ப்பணம் செய்து, பற்றின்றி செயல்கள் புரிகின்றானோ அவன், தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாததைப் போலவே பாவத்தினால் களங்கம் அடைவதில்லை.

[இது, சாந்தோக்ய உபநிடதத்தில் உள்ள பின்வரும் அற்புதமான வாக்கியத்தின் சாரமேயாகும்: "தண்ணீர் தாமரை இலையில் ஒட்டிக் கொள்ளாததைப் போலவே, பாவமான செயல், ஆன்மாவை அறிந்து கொண்டவனைக் களங்கப்படுத்துவதில்லை." *4.14.3**]

---

* यथा पुष्करपलाश आपो न श्लिष्यत एवमेवंविदि पापं कर्म न श्लिष्यत इति ।
छान्दोग्य ४.१४.३

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वाऽऽत्मशुद्धये ११ ॥

காயேன மனஸா புத்யா கேவலை ரிந்த்ரியைரபி ।
யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வா(ஆ)த்ம சுத்தயே॥ 11

*11.* யோகிகள் ஆன்ம சுத்தியின் பொருட்டு, உடல், மனம், புத்தி, இந்திரியங்கள் ஆகியவற்றினால் மாத்திரமே பற்றின்றி கர்மங்களைச் செய்கின்றனர்.

[இந்த சுலோகத்தில் 'மாத்திரமே' என்பதற்கு, 'நான்' என்ற அகந்தை இல்லாமல் என்பதே அர்த்தமாகும். பகற் கனவு காணும் ஒருவன் மனத்தினால் மாத்திரம் உலகம் முழுவதையும் சுற்றிவரலாம். சித்த சுவாதீனம் இல்லாத அல்லது குடிபோதையில் உள்ள ஒருவன், உடலினால் மாத்திரமே செயல் புரியலாம். அறிவு மிக்க ஒரு மேதை அறிவினால் மாத்திரமே ஒரு காரியத்தைச் செய்யலாம். ஒரு குழந்தை புலன்களால் மாத்திரமே ஒரு செய்கையில் ஈடுபடலாம். எனினும், மேலே குறிப்பிட்டுள்ள ஒவ்வொருவரும் நெஞ்சறிந்து பற்றின்மையைக் கடைப்பிடிப்பதில்லை. ஆனால் யோகியோவெனில், பூரணமாக அறிந்தே, தான் என்ற உணர்ச்சியின்றியே, மனம், உடல், புத்தி, புலன்கள் ஆகியவற்றால் செயல் புரிகிறான். அதன் காரணமாக அவன் கனவு காண்பவனின் அமைதியையும், சித்த சுவாதீனமற்றவனின் சுதந்திரத்தையும், மேதையின் ஈடுபாட்டையும், குழந்தையின் குற்றமற்ற நிலையையும் அடைகிறான். மற்றவர்கள் உணர்ச்சியினால் செயல் புரிகின்றனர்; யோகி ஞானத்தினால் செயல் புரிகிறான்.]

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥ १२ ॥

யுக்த: கர்ம பலம் த்யக்த்வா சாந்தி மாப்னோதி நைஷ்டிகீம்।
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே॥ 12

*12.* யோகி, கர்மங்களின் பலனைத் துறப்பதன் மூலம் நிரந்தரமான சாந்தியைப் பெறுகிறான்; யோகத்தின் மகிமையை அறியாதவன் சுயநலத்தினால் பலனில் ஆசைவைத்து, பந்தத்திலேயே கட்டுண்டு கிடக்கிறான்.

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

ஸர்வ கர்மாணி மனஸா ஸங்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ।

நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வன் ந காரயன்॥ 13

*13.* இந்த உடலில் வசிப்பவன் தனக்குத் தானே எஜமானாக இருந்து கொண்டும், மனத்தினால் எல்லாக் கர்மங்களையும் துறந்தும், தான் எதுவும் செய்யாமலும், எதையும் பிறரைக் கொண்டு செய்விக்காமலும் ஒன்பது வாயில்கள் உள்ள அவனது நகரில் ஆனந்தமாகவும் அமைதியாகவும் வாழ்கின்றான்.

இரண்டு கண்கள், இரண்டு மூக்குகள், இருகாதுகள், வாய், மல ஜல உறுப்புகள் இரண்டு ஆகிய ஒன்பதுமே உடலின் முக்கிய வாயில்கள் ஆகும். உண்மையில், உடலில் உள்ள எண்ணிக்கையற்ற மயிர்க்கண் துவாரங்களும் உடலின் வாயில்களே; வாயிற்காப்போன் கண்காணிப்புடன் இருந்து தனது கடமையைச் செய்வானாயின், உள்ளே செல்லுவதற்கும் வெளியே வருவதற்கும் தகுதி வாய்ந்தபொருட்களை மாத்திரம் அனுமதித்து வருவானாயின், உள்ளே செல்வதிலும் வெளியே வருவதிலும் உண்மையில் அவனுக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை என்றும், அவன் செயலற்ற ஒரு சாட்சியே என்றும் கூறலாம். அவ்வாறாக, அவன் எதுவும் செய்வதில்லை, எதையும் செய்விப்பதும் இல்லை.

[இந்த நிலையை சுவேதாசுவதர உபநிடதம் (*3. 18*) பின் வருமாறு வர்ணிக்கிறது. “ஒன்பது வாயில்கள் உள்ள நகரில் குடிகொண்டிருக்கும் ஆன்மா, அங்குமிங்கும் சென்றுகொண்டிருந்தாலும் கூட, ஸ்தாவர, ஜங்கமப் பொருட்கள் அடங்கிய இந்த உலகம் முழுவதற்குமே எஜமானாக இருக்கிறது.”*]

**न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।**

**न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥**

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:।

ந கர்ம பல ஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே॥ 14

*14.* இறைவன், உலகத்திற்காக கர்மத்தையோ கர்மத்தைச் செய்ய கர்த்தாவையோ சிருஷ்டிக்கவில்லை. அவர் கர்மத்தைப் பலனுடன் இணைக்கவும் இல்லை. இயற்கையே இதையெல்லாம் செய்கிறது.

செய்பவர் இறைவன் அல்ல. தயவு தாட்சண்யமற்ற கர்ம வினையே இயங்கிவருகிறது. அதன் காரணமாக, ஒவ்வொருவனும்

---

* नवद्वारे पुरे देही हंसो लेलायते बहिः।

वशी सर्वस्य लोकस्य स्थावरस्य चरस्य च॥

श्वेताश्वतर ३.१८

அவனது யோக்கியதைக்குத் தகுந்தவாறு பலனைப் பெறுகிறான். ஒவ்வொருவனும் தான் என்ன விதைக்கிறானோ அதை அறுவடை செய்கிறான். அந்தச் சட்டம் நிறைவேறுவதிலேயே கடவுளின் எல்லையற்ற கருணையும், நீதியும் அடங்கியிருக்கின்றன. எள்ளளவும் அப்பழுக்கற்ற நீதியிலேயே கருணை அடங்கியிருக்கிறது. நீதிக்கு முரண்பாடான கருணை, கருணையல்ல. அதற்கு நேர் எதிரிடையேயாகும். மனிதன் சென்ற காலத்தையும், நிகழ் காலத்தையும், எதிர் காலத்தையும் அறிந்த நீதிபதி அல்ல. எனவே அவனுக்கு, கருணை அல்லது மன்னிப்பே மிகத் தூய்மையான சட்டமாகும். அவன் எப்போதுமே பிறருடைய தீர்ப்புக்கு உட்பட வேண்டியவனாக இருக்கிறான். ஆகையால், அவன் தனக்குத் தானே அளிக்க விரும்புவதை, அதாவது மன்னிப்பை, அவன் மற்றவர்களுக்கு அளிக்க வேண்டும். மன்னிக்கும் ஆற்றலைப் பயிற்சி செய்து கொள்வதன் மூலமே, அவன் ஒரு யோகி என்ற நிலையை எட்ட முடியும். யோகியை, எந்தக் கர்மங்களும் கட்டுப்படுத்துவதில்லை; அவன் எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனாக இருக்கிறான்; கர்மங்களைச் செய்வதிலும் திறமை வாய்ந்தவனாக இருக்கிறான்.

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५ ॥

நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: ।
அக்ஞானேனாவ்ருதம் க்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ:॥ 15

*15.* ஒருவன் செய்யும் பாவத்தையோ அல்லது புண்ணியத்தையோ கடவுள் தன் மீது ஏற்றுக் கொள்வதில்லை. அறியாமையே ஞானத்தை மறைத்து, எல்லாப் பிராணிகளையும் மதிமயங்கும்படி செய்கிறது.

மதிமயக்கத்தினாலேயே மனிதன், கர்மங்களுக்குத் தானே கர்த்தா என்று இறுமாப்பு அடைகிறான்; ஆனால் கர்மங்களின் விளைவுகளுக்கு, அவை தண்டனையாயினும் அல்லது வெகுமதியாயினும், கடவுளே காரணம் என்று கூறுகிறான்.

[*14-15.* இந்த சுலோகங்கள் சாங்கிய சித்தாந்தத்தின் எதிரொலியே. புருஷன் கர்மத்தைச் செய்யவில்லை, பிரகிருதியே செய்கிறது என்பதுதான் அந்தச் சித்தாந்தம். புருஷன் அல்லது ஆன்மாவும் பரம்பொருளும் ஒன்று என்கிறது வேதாந்தம். சுலோகம் *14*-இல் உள்ள 'ப்ரபு' என்ற சொல்லுக்கும், *15*-இல் உள்ள 'விபு' என்ற சொல்லுக்கும் கடவுள் அல்லது எங்கும் வியாபித்த, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் என்பதே பொருள். அந்த இரண்டு சொற்களுக்கும் பரம்பொருள் என்றே அர்த்தம் என்று காந்திஜி கருதுகிறார். ஆனால் சிலர், அந்தச் சொற்கள் உடலில்

உறையும் ஆன்மாவையே குறிக்கின்றன என்று கூறுகிறார்கள். எனினும், அந்த இரண்டுக்கும் அர்த்தம் ஒன்றுதான்.

கீதையில் உள்ள கடவுள், அரிஸ்டாடிலின் கடவுளைப் போன்ற ஒரு கற்பனைச் சித்தாந்தமே. எனினும், அந்தக் கடவுள் எதுவுமே செய்வதில்லை என்றும், உலகத்தில் எதிலுமே அக்கறை கொள்வதில்லை என்றும் யாரும் எண்ணிவிடக் கூடாது. எல்லாம் இயற்கையின் சட்டப்படி நடக்கிறது என்பதே இந்த சுலோகங்களில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. எனினும், அந்தச் சட்டங்களுக்கெல்லாம் அடிப்படை பரம்பொருள்தான். அவர்தான் எங்கும் வியாபித்திருக்கிறார். எல்லாவற்றையும் தாங்குகிறார் (அத்தியாயம் - *15*, சுலோகம் - *17*).

பரம்பொருள் உலகத்தை இயக்கும் சட்டமாகத் திகழ்கிறார் என்பதில் சாங்கியர் அல்லது ஞானயோகி திருப்தி அடைகிறான். ஆனால் கர்மயோகியோ அல்லது பக்தனோ அவ்விதம் திருப்தி அடைவதில்லை. தன்னுடைய பக்தியை கடவுள் ஏற்றுக்கொள்ளவேண்டும், எப்போதும் உதவிபுரியும் நண்பராகவும், ஆறுதல் அளிப்பவராகவும் இருக்கவேண்டும் என்று கருதுகிறான். கடவுள் அவ்விதம் இருந்தாலொழிய அவனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. இந்தக் கருத்தை நாம் இந்த அத்தியாயம் *29*-ஆம் சுலோகத்தில் காணலாம்.

இவற்றுடன், அத்தியாயம் *9*, *17-19* சுலோகங்களையும், அத்தியாயம் *13*, *13 - 16* சுலோகங்களையும் சேர்த்து வாசிக்கவும்.

''சிந்தனைக்கு எட்டாதவரைச் சிந்திக்கவும், வர்ணிக்கமுடியாதவரை வர்ணிக்கவும் அறிய முடியாதவரை அறியவும் நாம் எல்லோரும் முயற்சித்து வருகிறோம். அதனாலேயே நமது பேச்சு தடுமாறுகிறது ; குறையுள்ளதாக இருக்கிறது; முன்னுக்குப்பின் முரணாகவும் இருக்கிறது. அதனால்தான் வேதங்கள் பிரம்மத்தை 'இது அல்ல' என்று வர்ணிக்கின்றன. நாம் இருந்து வருகிறோம்; நமது பெற்றோர்களும், அவர்களுக்குப் பெற்றோர்களும் இருந்திருக்கிறார்கள். எனவே, எல்லாச் சிருஷ்டிகளுக்கும் பெற்றோரான கடவுளிடம் நம்பிக்கை வைப்பது நியாயமே ஆகும். அவர் இல்லையாயின், நாமும் இருக்கவே முடியாது. அதனால்தான் நாம் எல்லோரும் ஒரே கடவுளை வெவ்வேறு விதமாக அழைக்கின்றோம். அவர் ஓர் அணுவைக் காட்டிலும் சிறியவர்; இமயத்தைக் காட்டிலும் பெரியவர். சமுத்திரத்தில் உள்ள ஒரு துளி தண்ணீரிலும் அவர் அடங்கியிருக்கிறார்; எனினும் ஏழு கடல்களும் கூட அவரைச் சூழ்ந்து கொள்ள முடியாது. அவரைத் தெரிந்து கொள்ள பகுத்தறிவுக்கு சக்தி இல்லை. அவர் பகுத்தறிவுக்கு எட்டாதவர்.''

*21-1-1926* 'எங் இந்தியா' வில் காந்திஜி, கடவுளின் மகிமையைப் பற்றி மேற்கண்டவிதம் எழுதியுள்ளார்.

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

க்ஞானேன து ததக்ஞானம் யேஷாம் நாசிதமாத்மன: ।
தேஷா மாதித்யவத் க்ஞானம் ப்ரகாசயதி தத் பரம் ॥ 16

*16.* ஆன்மாவைப் பற்றிய ஞானத்தினுல் யாருடைய அறியாமை அழிக்கப்பட்டுவிடுகிறதோ, அவர்களுடைய ஞானமானது சூரியனைப் போல் பரம்பொருளைத் தெளிவாகக் காட்டுகின்றது.

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

தத் புத்தயஸ் ததாத்மான : தன்னிஷ்டாஸ் தத்பராயணு: ।
கச்சந்த்ய புனராவ்ருத்திம் க்ஞான நிர்த்தூத கல்மஷா: ॥ 17

*17.* யாருடைய அறிவு அந்தப் பரம்பொருளால் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, யாருடைய ஆன்மா அதனுடன் ஒன்ருகிவிடுகிறதோ, அதிலேயே யார் நிலைபெற்றிருக்கிருர்களோ, யாருடைய நோக்கமும், லட்சியமும் அந்தப் பரம்பொருளாக இருக்கிறதோ,

---

15. சூரியன் பூமியைவிட எத்தனையோ மடங்கு பெரியது. அது வெகு தூரத்தில் இருப்பதால், ஒரு சிறு வட்டத்தைப் போல் காணப்படுகிறது. அது போலவே இறைவன் எல்லாவற்றையம் விட அதிகத் தொலைவில் இருக்கிருர்; எல்லாவற்றையும்விட மிகவும் அருகிலும் இருக்கிருர். எல்லாவற்றையும் காட்டிலும் எட்டாத தூரத்தில் கடவுள் இருப்பதாக நாம் நினைப்பதால், அவருடைய உண்மையான மகத்துவத்தை அறிந்து கொள்ள நாம் சக்தியற்றவர்களாக இருக்கிருேம். --ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

16. அடர்த்தியாகப் பாசி படர்ந்துள்ள ஒரு குளத்தைப் பார்த்தால் அதில் தண்ணீர் இல்லை என்றே தோன்றும். தண்ணீரைப் பார்க்க விரும்பினுல், அதன் மீது படர்ந்துள்ள பாசியை அகற்றிவிட வேண்டும். அது போலவே, மாயையாகிற பாசியினுல் மூடப்பட்டுள்ள கண்களால் இறைவனைக் காண முடியாது. இறைவனை பார்க்க விரும்புவோர், கண்களை மறைத்துள்ள மாயைப் படலத்தை அகற்ற வேண்டும். —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு —குறள்

இதன் கருத்து: யாருடைய பார்வை தூய்மையானதாகவும், வீண் மயக்கத்திலிருந்து விடுபட்டதாதவும் இருக்கிறதோ அவருக்கு அது இருளை அகற்றி பேரானந்தத்தைக் காட்டுகிறது.

அவர்கள் ஞானத்தினல் தங்களுடைய பாவங்களைத் துடைத்தொழித்து, எங்கிருந்து மீண்டும் திரும்பி வரவேண்டிய நிர்ப்பந்தம் இல்லையோ அந்தப் பரமபதத்தை அடைகின்றனர்.

**विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥**

வித்யா வினயஸம்பன்னே பிராஹ்மனே கவி ஹஸ்தினி ।
சுனி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின: ॥ 18

*18.* பாண்டித்யமும் பணிவும் உள்ள பிராம்மணனையும், பசு, யானை, நாய் முதலியவற்றையும், நாயைத் தின்பவனையும் கூட, தம்மைத் தாம் உணர்ந்த ஞானிகள் சமமாகக் கருதுகின்றனர்.

அதாவது ஞானிகள் எல்லோரையும் சமமாகக் கருதி ஒவ்வொருவருடைய தேவைகளுக்கும் இணங்க ஒவ்வொருவருக்கும் தொண்டு புரிகின்றனர். பிரம்மணனையும், நாயைத் தின்பவனையும் ஒன்ருகக் கருதுவது எனில், பிராம்மணனைப் பாம்பு கடித்தால் அவனுடைய காயத்தில் உள்ள விஷத்தை உறிஞ்சி ஒரு ஞானி அவனை எவ்விதம் அக்கறையுடன் காப்பாற்ற முயல்வானே அது போலவே, நாயைத் தின்னும் ஒருவனைப் பாம்பு கடித்தாலும் அக்கறையுடனும் தயக்கமின்றியும் அவனது உடலிலிருந்து விஷத்தை உறிஞ்சி அவனைக் காப்பாற்ற முற்படுவான்.

[ஹரிஜனத் தொண்டர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியபோது, இந்த சுலோகத்தை அவர்களுக்கு நீண்ட நேரம் விளக்கிக் கூறினர். எல்லோருடைய அந்தஸ்தும் சமமானது என்று கருதுவதாக அவர்கள் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் காந்திஜி வற்புறுத்தினர். அவர் பேசியதாவது:

''எல்லா வேற்றுமைகளையும் ஒழித்துவிட வேண்டும் என்பது எனது நோக்கம் அல்ல. இயற்கையான வேற்றுமைகளை யார் ஒழிக்கமுடியும்? ஒரு பிராம்மணன், ஒரு நாய், நாயைத் தின்பவன் ஆகியவர்களுக்கிடையே வேற்றுமை இல்லையா? அவர்களிடையே வேற்றுமை இருக்கத்தான் செய்கிறது. ஆனல், உயிர்களின் தத்துவத்தை அறிந்தவன், அவர்களிடையே அந்தஸ்தில் எவ்வித வேற்றுமையும் இல்லை என்றே கூறுவான். ஓர் யானைக்கும், எறும்புக்கும், ஒரு காட்டுமிராண்டிக்கும், ஒரு மேதாவிக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் இல்லை. ஒரு மேதாவியின் முன்னிலையில் அவரது அறிவைக் கண்டு காட்டுமிராண்டி அச்சமடைந்து பிரமிக்கலாம். எனினும் அதற்காக, மேதாவி தன்னை உயர்ந்தவன் என்று எண்ணக் கூடாது.'' ('ஹரிஜன்' - *11-1-1935*)

அதன் சம்பந்தமாக மற்ருெரிடத்தில் காந்திஜி கூறியதாவது: "இவ்விஷயத்தை நாம் மற்ருெரு கோணத்திலிருந்து கவனிக்கலாம். ஓர் அம்சத்தில் நாம் எல்லோரும் சமமானவர்களே. அதாவது, நாம் எல்லோரும் குற்றம் குறைகள் உள்ளவர்களே. நம்மில் ஒருவர் கூட குற்றம் குறை இல்லாதவர் அல்ல. கடவுள் ஒருவர் தான் எள்ளளவும் குற்றம் குறையின்றி பூரணமானவராகத் திகழ்கின்ருர். மனிதர்கள் பிறவியிலேயே அசுத்தமானவர்கள். நாம் நமது உள்ளங்களைப் பரிசீலனை செய்து பார்ப்போமாயின், நாம் எல்லோரும் அதிக அளவிலோ அல்லது குறைந்த அளவிலோ அசுத்தமானவர்களாகவே இருக்கிருேம். அப்படியிருந்தும், எல்லா உயிர்களிலும் வியாபித்துள்ள ஆன்மா ஒன்றேயாகும். உருவங்கள் பலவாக இருக்கின்றன; ஆனல், உள்ளே இருக்கும் ஆன்மா ஒன்று தான்."

எல்லோரையும் சமதிருஷ்டியுடன் பார்ப்பது, யோகி, ஞானி ஆகியவர்களின் விசேஷ குணங்களில் ஒன்ருகும். இது கீதையில் அடிக்கடி கூறப்பட்டிருக்கிறது. அத்தியாயம்-6, சுலோகம் -9; அத்தியாயம் - 12, சுலோகம் - 18; அத்தியாயம் - 14, சுலோகம் - 25 ஆகியவற்றைப் பார்க்கவும்.

நண்பனையும், விரோதியையும் சமமாகக் கருதுவது, யோகி, பக்தன், குணதீதன் முதலியோரின் விசேஷ குணங்களில் ஒன்று என அந்த சுலோகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவன்' என்பதற்கு 'குற்றம் குறையற்றவன்' என்பதே பொருளாகும். இந்த சுலோகங்களுக்கு உவமையாக பைபிளில் உள்ள கீழ்க்கண்ட வாக்கியங்களைக் கூறலாம்:

"உங்களுடைய விரோதிகளின் மீது அன்பாக இருங்கள். உங்களுக்கு சாபம் கொடுப்பவர்களை நீங்கள் ஆசீர்வாதம் செய்யுங்கள். அவ்விதம் செய்வதால், சொர்க்கத்தில் இருக்கும் உங்களுடைய பிதாவுக்கு நீங்கள் குழந்தைகளாக இருப்பீர்கள். தீயோர் மீதும், நல்லவர்கள் மீதும் சூரியன் பிரகாசிக்கும்படி அவர் செய்கிருர். சொர்க்கத்தில் உள்ள உங்கள் பிதா குற்றம் குறையின்றி பூரணமானவராக இருப்பதுபோலவே, நீங்களும் பூரண நற்குணங்கள் வாய்ந்தவராக இருங்கள்."

இந்தக் கடைசி வாக்கியம், அநேகமாக இந்த அத்தியாயத்தில் உள்ள மேற்கண்ட சுலோகத்தைப் போலவே இருக்கிறது.]

**इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।**
**निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥**

**இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன:।**
**நிர்த்தோஷம் ஹி ஸமம் பிரஹ்ம தஸ்மாத் பிரஹ்மணி தே ஸ்திதா:॥ 19**

*19.* யாருடைய மனம் சமத்துவ புத்தியில் நிலைத்திருக்கிறதோ, அவர்கள் இந்த உடல் இருக்கும்போதே பிறப்பு இறப்புச் சுழலை வென்றவர்களாகின்றார்கள். ஏனெனில், குற்றம் குறையற்ற பிரம்மம் எல்லோருக்கும் ஒன்றுதான். ஆகையால், பிரம்மத்தில் அவர்கள் லயிக்கின்றனர்.

ஒரு மனிதன் என்ன சிந்திக்கிறானோ அப்படியே ஆகிவிடுகிறான். ஆகையால், எல்லோரிடத்திலும் ஒரே விதமாக நடந்து கொள்ள வேண்டும் என்று மனத்தில் திட சங்கல்பம் கொண்டவன், அத்தகைய சமத்துவ புத்தியை அடைந்து பிரம்மத்துடன் ஒன்றாகிவிடுகிறான்.

["தான் கடவுளிடம் நிலைத்திருப்பதாகக் கூறுவோன், கடவுள் எவ்விதம் நடக்கிறாரோ அதுபோலவே நடக்க வேண்டும்."
—பைபிள்

அதாவது, கடவுளைப் போல் நடப்பவன் கடவுளிடத்தில் நிலைபெறுகிறான் என்பதே அதன் அர்த்தமாகும்.

"கடவுள் அன்பு மயமே. யார் அன்பில் வாழ்கிறானோ அவன் கடவுளிடத்தில் வாழ்கிறான்."—பைபிள்]

**न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।**
**स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥ २० ॥**

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம்।
ஸ்திர புத்தி ரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்தித: ॥ 20

*20.* உறுதியான அறிவு படைத்தவனும், மதிமயக்கத்திற்கு ஆளாகாதவனும், பிரம்மத்தை அறிந்தவனும், பிரம்மத்தில் நிலைபெற்றவனும் பிரியமானதைப் பெறுவதால் மகிழ்ச்சி அடைவதில்லை; தனக்கு விருப்பம் இல்லாததைப் பெறுவதால் துக்கத்தையும் அடைவதில்லை.

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥**

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத் ஸுகம்।
ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா ஸுகமக்ஷய்ய மச்னுதே ॥ 21

*21.* புறப்பொருள்களில் உள்ள பற்றுதலை விட்டவன் ஆன்மாவில் பேரானந்தத்தைக் காண்கிறான். அவன் பிரம்மத்துடன்

ஐக்கியம் அடைந்து, நிரந்தரமான பேரின்பத்தை அனுபவிக்கிருன்.

வெளியே உள்ள பொருட்களிலிருந்து தன் மனத்தைத் திருப்பி உள்ளே இருக்கும் ஆன்மாவில் லயிப்பவன், பிரம்மத்துடன் ஐக்கியம் அடையவும், மகோன்னதமான இன்பத்தைப் பெறவும் தகுதிவாய்ந்தவனுகிருன். புறப்பொருள்களில் உள்ள தொடர்பைத் தவிர்ப்பதும், பிரம்மத்துடன் ஐக்கியம் என்ற சூரிய ஒளியில் திளைப்பதும் ஒரே நிலையின் இரண்டு அம்சங்களே, ஒரே நாணயத்தின் இரு புறங்களேயாகும்.

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:க்க யோனய ஏவ தே ।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥ 22

22. கௌந்தேயா, புலன்களின் தொடர்பினுல் ஏற்படும் இன்பங்கள், துன்பங்களும் துக்கங்களும் நிறைந்த சுரங்கங்களேயாகும். அவற்றிற்கு ஆரம்பமும் உண்டு, முடிவும் உண்டு. ஞானி அவற்றில் இன்பம் அடைவதில்லை.

['துக்கயோனய:' என்ற சொல்லை, 'துக்கத்தின் கருப்பைகள்' என்றும் மொழி பெயர்க்கலாம். 'யோனி' என்பதற்கு 'கருப்பை' என்றும், 'சுரங்கம்' என்றும் பொருள் கூறலாம். இந்தப் புலன்களின் தொடர்புகளை, "துக்கங்களின் நாற்றங்கால்கள்" என்றும் செயின்ட் அகஸ்டின் கூறியுள்ளார்.

"தொடாதே, ருசி பார்க்காதே, கையாளாதே. உபயோகிப்பதன் மூலம் எல்லாம் அழியக் கூடியவை." பைபிள்.]

शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

சக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் சரீர விமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥23

23. எவன் இந்த உடலிலிருந்து விடுதலை அடைவதற்கு முன், இங்கே இந்த பூமியிலேயே காமம், கோபம் என்ற வெள்ளப் பெருக்கை எதிர்த்து நிற்கும் சக்தியைப் பெறுகின்றுனே அவனே யோகி, அவனே ஆனந்தத்தை அடைகிருன்.

எவ்வாறு ஒரு சடலத்திற்கு விருப்பு வெறுப்புகள் இல்லையோ, சுக துக்கங்கள் இல்லையோ, அதுபோலவே உயிருடனிருந்தும் சடலத்தைப்போல் விருப்பு வெறுப்புகளும், சுக துக்கங்களும் அற்றவன்தான் உண்மையில் வாழ்கிறான். அவன்தான் உண்மையான இன்பத்தைப் பெறுகிறான்.

[காந்திஜியின் மேற்கண்ட குறிப்பு, அவர் அறியாமலேயே 'யோகவாசிஷ்டம்' என்ற நூலில் உள்ள ஒரு சுலோகத்தை அப்படியே எடுத்துக் கூறுவதுபோல் இருக்கிறது. அந்த சுலோகத்தின் பொருள் பின்வருமாறு: "உடலிலிருந்து உயிர் பிரிந்த பின், உடலுக்கு இன்ப உணர்ச்சியோ, துன்ப உணர்ச்சியோ இருப்பதில்லை. அதுபோலவே உயிருடன் இருப்பவனுக்கு உயிரற்ற உடலைப்போல் இன்ப, துன்ப உணர்ச்சி இராவிடில், அவன் முற்றிலும் பேரின்பத்தில் நிலைபெற்றவனாக இருக்கிறான்."]

योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

யோ(அ)ந்த: ஸுகோ(அ)ந்த ராராமஸ் ததாந்தர்ஜ்யோதி ரேவ ய:।
ஸ யோகீ பிரஹ்ம நிர்வாணம் பிரஹ்மபூதோ(அ)திகச்சதி 24

24. தன்னுள்ளே மாத்திரம் இன்பத்தையும், தன்னுள்ளே மாத்திரம் சாந்தியையும், தன்னுள்ளே மாத்திரம் ஒளியையும் காணும் யோகி, இயற்கையுடன் லயித்து, பிரம்மத்துடன் ஐக்கியம் அடைகிறான்.

लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

லபந்தே பிரஹ்ம நிர்வாணம் ரிஷய: க்ஷீணகல்மஷா:।
சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூத ஹிதே ரதா: ॥ 25

---

23. இந்த உலகில் காமமும் கோபமுமே மனிதனின் துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணமாக இருக்கின்றன. இவற்றைத் தவிர்க்க மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். மரணம் அடைவதற்கு முன் இந்த ஆசையையும், கோபத்தையும் அடக்கவேண்டும். ஒரு பொருளை அடைய வேண்டும் என்ற ஆசை உண்டாகும்போது ரோமம் சிலிர்க்கின்றது; உடலிலும், கண்களிலும், முகத்திலும் மகிழ்ச்சி உண்டாகின்றது. கோபம் உண்டாகும்போது உடல் நடுக்கமும், வியர்வையும் ஏற்படுகின்றன; உதடுகள் துடிக்கின்றன; கண்கள் சிவந்துவிடுகின்றன. எனவே, ஆசையினாலும் கோபத்தினாலும் ஏற்படும் இந்த உணர்ச்சிகளை அடக்கும் சக்தியுடையவனே யோகி யாவான்; இந்த உலகத்தில் அவனே ஆனந்தமாக வாழ்கிறான். —சங்கரர்.

25. பாவங்களைத் துடைத்தொழித்தவர்களும், சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டவர்களும், புலன்களை அடக்கி ஆள்பவர்களும், எல்லா உயிர்களின் நலனிலும் ஈடுபாடு உள்ளவர்களுமான ரிஷிகள் பிரம்மத்துடன் ஐக்கியம் அடைகின்றனர்.

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६ ॥

காமக்ரோத வியுக்தானும் யதீனும் யதசேதஸாம்|
அபிதோ பிரஹ்ம நிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனும் ॥ 26

26. காமத்தையும் குரோதத்தையும் விட்டவர்களும், புலன்களை வென்றவர்களும், ஆன்மாவை உணர்ந்த சந்நியாசிகளும் தங்களைச் சுற்றிலும் எங்கும் பிரம்ம நிர்வாணத்தையே காண்கின்றனர்.

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७ ॥

ஸ்பர்சான் க்ருத்வா பஹிர் பாஹ்யான்
சக்ஷுச்சை வாந்தரே ப்ருவோ: ।
ப்ராணு பானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்யந்தர சாரிணௌ ॥ 27

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

யதேந்த்ரிய மனே புத்திர் முனிர்மோக்ஷபராயண: ।
விகதேச்சாபயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥ 28

27-28. வெளிப்புலன்களின் தொடர்பை உதறித் தள்ளியவனும், புருவங்களுக்கு இடையே பார்வையை நிலைநிறுத்தி உட்காருபவனும், மூக்கின் வழியாக மூச்சை உள்ளே இழுப்பதையும் வெளியே விடுவதையும் (பிராண, அபான வாயுக்களை) சமமாகச் செய்தவனும், தனது புலன்கள், மனம், அறிவு ஆகியவற்றைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தவனும், ஆசை, பயம்,

கோபம் ஆகியவற்றை ஒழித்தவனும், மோட்சத்தை அடைவதில் உறுதி கொண்டவனும் யாரோ, அந்த முனிவன்தான் எப்போதும் விடுதலை பெற்றவனாக இருக்கிறான்.

யோக சூத்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள யோகப் பயிற்சிகளில் சிலவற்றைப்பற்றி இந்த சுலோகங்கள் குறிப்பிடுகின்றன. இந்தப் பயிற்சிகளைக் குறித்து எச்சரிக்கையாக ஒரு வார்த்தை கூறவேண்டியது அவசியம். தேகப்பயிற்சிகளும், கசரத்து விளையாட்டுகளும் உலக இன்பங்களை நாடும் போகிக்கு கோரிய பலனை அளிப்பது போலவே, உலக இன்பங்களை விட்டுவிட்ட யோகிக்கு யோகப் பயிற்சிகள் கோரிய பலனை அளிக்கின்றன. போகியின் உடல் சம்பந்தமான பயிற்சிகள், போகத்திற்கு உரிய புலன்களை பூரண வீரியத்துடன் வைத்துக்கொள்வதற்கு உதவியாக இருக்கின்றன. யோகி தன் உடலைச் சரியான நிலையில் வைத்துக் கொள்வதற்கும், தனது புலன்களை அடக்கி ஆள்வதற்கும் யோகப் பயிற்சிகள் உதவியாக இருக்கின்றன. அந்தப் பயிற்சிகளில் தேர்ச்சி பெற்றவர்கள், இந்தக் காலத்தில் அத்தி பூத்தாற்போல் அபூர்வமாகவே இருக்கிறார்கள். இவர்களில் சிலர் அந்தப் பயிற்சிகளை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

சுயக் கட்டுதிட்டத்தை அனுசரிப்பதில் பூர்வாங்கமான கட்டத்தைக் கடந்தவன், மோட்சத்தில் பேரார்வம் கொண்டவன், இருமைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவன், அச்சத்தை வென்றவன் யாரோ அவன்தான் இந்த யோகப் பயிற்சிகளை மேற்கொள்வது நன்மையாகும். அவனுக்கு, இந்தப் பயிற்சிகள் நிச்சயமாக உதவியாக இருக்கும். அத்தகைய கட்டுதிட்டங்களை அனுசரித்து வருபவன் மாத்திரமே, இந்த யோகப் பயிற்சிகளின் மூலம் தனது உடலை ஆண்டவன் குடிகொண்டுள்ள ஒரு புனித ஆலயமாகச் செய்ய முடியும். இதற்கு உள்ளத் தூய்மையும் உடல் தூய்மையும் இன்றியமையாதவை. இல்லாவிடில், இந்த யோக நடவடிக்கைகள் ஒரு மனிதனை முதலாவதாக தவறான வழியில் செலுத்தக் கூடும். பின்னர் அவை, அவனை மதிமயக்கமாகிற சேற்றில் மேலும் அதிகமாக ஆழ்த்திவிடும். சிலருடைய வாழ்க்கையில் ஏற்பட்ட இந்த விபரீதமான பலனை, நேரடியான அனுபவத்தின் மூலம் பலர் அறிந்துள்ளனர். அதனால்தான், யோகிகளுக்கெல்லாம் மன்னனான பதஞ்சலி, யமங்களுக்கும் (மூலாதாரமான விரதங்கள்), நியமங்களுக்கும் (நித்திய விரதங்கள்) முதல் ஸ்தானம் கொடுத்துள்ளார். இந்தப் பூர்வாங்கமான கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டு வந்திருப்பவர்களே யோகப் பயிற்சிகளுக்குத் தகுதிவாய்ந்தவர்கள் என்றும் நிர்ணயித்துள்ளார்.

ஐந்து மூலாதாரமான விரதங்களாவன: அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், உடைமைகளை விரும்பாதிருத்தல்.

ஐந்து நித்திய விரதங்களாவன: உடல் தூய்மை, போது மென்ற மனம், வேத நூல்களை வாசித்தல். தவம், கடவுள் தியானம்.

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९ ॥

போக்தாரம் யக்ஞ தபஸாம் ஸர்வலோக மகேச்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதானும் க்ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி॥ 29

29. யக்ஞத்தையும் தவத்தையும் அங்கீகரிப்பவனும், உலகங்களுக்கெல்லாம் மகா ஈசனும், எல்லாச் சிருஷ்டிகளுக்கும் நண்பனும் நான்தான் என்பதை அறிந்த யோகி, சாந்தியை அடைகிறுன்.

இந்த சுலோகம், இந்த அத்தியாயத்தில் உள்ள 14, 15 சுலோகங்களுக்கும் மற்ற அத்தியாயங்களில் உள்ள இவை போன்ற சுலோகங்களுக்கும் முரணுக இருப்பதாகத் தோன்ற லாம். ஆனல், உண்மையில் அத்தகைய முரண் எதுவும் இல்லை. செய்பவரும் செய்யாமல் இருப்பவரும், அனுபவிப்பவரும் அனுப வியாமல் இருப்பவரும் எல்லாம் வல்ல இறைவனே. அவர் வர்ணிக்க இயலாதவர், மனித மொழியின் சக்திக்கு எட்டாதவர். எனவே மனிதன், ஒரு விநாடியாவது அவரது தோற்றத்தைக் காண பெருமுயற்சி செய்கிறுன். அவ்விதம் செய்கையில், கடவுளுக்குப் பல்வேறு விதமான சக்திகளையும், முரண்பாடான குணங்களையும் கூடக் கற்பிக்க முற்படுகிறுன்.

[27-29. இந்த அத்தியாயத்தைப்பற்றிப் பரிசீலனை செய்ய விரும்பும் வாசகர்கள், இவ்விஷயமாக முன்னுரையில் உள்ள எனது விளக்கத்தைப் பார்க்கவும்.

ஞான யோகிக்கும் கர்ம யோகிக்கும் உள்ள தாரதம்மி யத்தை இந்த அத்தியாயத்தில் நாம் பார்த்தோம். இந்த அத்தி யாயம் 27-29 சுலோகங்களில் தியான யோகிக்கும் பக்தி யோகிக் கும் உள்ள வேற்றுமையைப் பற்றிய விளக்கம் ஆரம்பமா கின்றது. 6, 7, 8-ஆவது அத்தியாயங்களில் தியான யோகியைப் பற்றி வர்ணிக்கப்படுகின்றது. மேற்கண்ட 29-ஆம் சுலோகத் தில் பக்தி யோகியைப்பற்றி வர்ணிக்கப்படுகிறது. ஒன்று அல்லது பல உருவங்களில் பரம்பொருளை வணங்கும் பக்தி யோகியைப்பற்றி 9-12 ஆவது அத்தியாயங்களில் விவரிக்கப்படு கின்றது. கடவுள் எல்லா யக்ஞங்களையும் அங்கீகரிப்பவராகவும், எல்லாச் சிருஷ்டிகளுக்கும் நண்பராகவும் பக்தி யோகிக்குத் தோன்றுகிறுர். செயின்ட் காதரைனுக்கும் கடவுள் அவ்விதமே தோன்றி பின்வருமாறு கூறினுர்: ''தியாகங்களை அங்கீகரிப்பவ

னும், தீயுமான நான் அவர்களிடமிருந்து இருளை ஒழித்து ஒளியைக் கொடுக்கிறேன்."

பைபிளும் கூட கடவுளை, "தந்தை" என்றும், "ஆறுதல் அளிப்பவர்" என்றும் குறிப்பிட்டிருப்பது மகிழ்ச்சியை அளிக்கக் கூடியதாகும். கடவுளை, போஷகர் என்றும், நண்பர் என்றும் குரான் அடிக்கடி குறிப்பிடுகிறது. குரான் கூறுவதாவது: "கடவுள் உண்மையில் பரிபூரணமானவர், துதிப்பதற்கு உரியவர் (22-64). அவர் உங்களைப் பாதுகாக்கும் நண்பர், அருள் நிறைந்த போஷகர், அருளுடன் உதவி புரியும் நண்பர்" (22-78).]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे संन्यासयोगो नाम पञ्चमोऽध्यायः ॥ ५ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
ஸந்யாஸ யோகோ நாம
பஞ்சமோத்யாய:

ஸ்ரீ பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாத்திரத்தைப் பற்றி
ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'சந்நியாச யோகம்'
என்ற ஐந்தாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

# தியான யோகம்

## ஆறும் அத்தியாயம்

யோகத்தில் சித்தி பெறுவதற்கான அல்லது மனத்தையும் அதன் நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்துவதற்கான சில முறைகளை இந்த அத்தியாயம் விவரிக்கின்றது.

श्रीभगवानुवाच

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

அனாச்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: ।
ஸ ஸந்யாஸீ ச யோகீச ந நிரக்னிர் ந சாக்ரிய : ॥ 1

ஸ்ரீ பகவான் கூறினர் :

1. பலனை எதிர்பாராமல் தான் செய்யவேண்டிய கர்மங்களையெல்லாம் யார் செய்கிருனே, அவன்தான் சந்நியாசியும் யோகியும் ஆவான். யக்ஞ அக்னியையும், கர்மத்தையும் அசட்டை செய்தவன் சந்நியாசியோ, யோகியோ ஆகமாட்டான்.

இங்கே அக்னி என்பது, செயல் புரிவதற்கான எல்லாக் கருவிகளையும் குறிக்கும் என்று கூறலாம். அக்னியின் உதவியால் யக்ஞம் செய்யப்பட்டபோது, அக்னி தேவையாக இருந்தது. இந்தக் காலத்தில் நூற்பது உலக சேவையின் சாதனமாக இருப்பதால், ராட்டினத்தை அசட்டை செய்பவன் ஒரு சந்நியாசியாக மாட்டான்.

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ ।
ந ஹ்யஸந்யஸ்த ஸங்கல்போ யோகீ பவதி கச்சன ॥ 2

2. பாண்டவா, எதை சந்நியாசம் என்று கூறுகிருர்களோ, அதுதான் யோகம் என்பதை அறிந்து கொள். ஏனெனில், சுயநல நோக்கத்தைத் துறக்காத எவனும் யோகியாக வர முடியாது.

[5-ம் அத்தியாயத்தில் உள்ள ஆருவது சுலோகம் இதற்கு மாருக இருக்கிறது. யோகமின்றி சந்நியாச நிலையை அடைவது கடினம் என்று அந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥

ஆருருக்ஷோர் முனேர்யோகம் கர்ம காரண முச்யதே ॥
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரண முச்யதே ॥ 3

*3.* யோகமாகிற சிகரத்தை தாண்ட விரும்புவோனுக்கு, கர்மம் ஒரு சாதனமாகக் கூறப்படுகிறது; அந்தச் சிகரத்தைத் தாண்டிய பின் அதே மனிதனுக்கு சாந்தியே சாதனமாகக் கூறப்படுகிறது.

தன்னிடத்தில் உள்ள அழுக்காறுகளையெல்லாம் களைந்து கொண்டவன் யாரோ, எல்லாவற்றையும் சமமாகக் கருதுவதில் வெற்றி பெற்றவன் யாரோ, அவன் எளிதில் ஆன்ம ஞானத்தைப் பெறுகிருன். எனினும், யோகத்தில் சித்தியடைந்தவன் உலகத்தின் நன்மைக்காகத் தொண்டு புரிவதை வெறுப்பான் என்பது இதற்கு அர்த்தமல்ல. அதற்கு மாருக, அத்தகைய தொண்டு அவனுக்கு மூச்சுக் காற்றைப் போல் அவ்வளவு அவசியமாவதுடன், மூச்சுவிடுவதைப் போல் அவனுக்கு அது இயல்பாகியும் விடுகிறது. அவனுக்கு அத்தகைய தொண்டு செய்யாமல் இருப்பதென்பது இயலாத காரியம். அத்தியாயம் - 5, 4 - ஆம் சுலோகத்தைப் பார்க்கவும்.

[இந்த சுலோகம், அத்தியாயம் - 5, சுலோகம் -4- இல் உள்ள கருத்தையே ஓரளவுக்குத் திரும்பவும் குறிப்பிட்டிருக்கிறது. 'சாந்தி' என்பது செயலின்மை அல்ல. சமஸ்கிருதத்தில் 'சம:' என்ற வார்த்தைக்கு எதிராக 'அசம:' என்ற சொல் அத்தியாயம் - 14, சுலோகம் - 12-இல் காணப்படுகிறது. 'அசம' என்ருல் அமைதியின்மை அல்லது 'அமைதியற்ற உழைப்பு' என்று அர்த்தம். எனவே சாந்தி (சம:) என்பதற்கு 'அமைதியுடன் கூடிய உழைப்பு' என்று மெத்யூ அர்னல்டு கூறியுள்ளார். யோக சித்தியை அடைந்த முனிவன், சீன ஞானி லாவ் த்ஸே கூறுவதைப்போல "பேச்சுப் பேசாமலேயே கற்பிக்கவும், செயலின்றியே சமூகத்திற்கு உதவியாக இருக்கக் கூடியநிலையையும் அடைந்தவனுக இருப்பான்''.]

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ் வனுஷஜ்ஜதே ।
ஸர்வ ஸங்கல்ப ஸந்யாஸீ யோகாரூடஸ் ததோச்யதே ॥ 4

4. ஒரு மனிதன் புலன்களுக்கான சாதனங்களிலோ அல்லது கர்மங்களிலோ பற்றுதலின்றி சுயநல நோக்கத்தை அறவே கைவிட்டுவிடுவானுயின், அப்போது அவன் யோக சித்தியை அடைந்தவனுகிருன்.

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

உத்தரேதாத்மனு(ஆ)த்மானம் நாத்மான மவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனே பந்துர் ஆத்மைவ ரிபுராத்மன : ॥ 5

5. ஒருவன் தன்னுடைய ஆன்மாவினுலேயே தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டும்; தன்னைத் தாழ்த்திக் கொண்டுவிடக் கூடாது. ஏனெனில், தனக்கு ஆன்மா ஒன்றே நண்பனுக இருக்கிறது, ஆன்மா ஒன்றே விரோதியாகவும் இருக்கிறது.

बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥

பந்துராத்மா (ஆ)த்மனஸ்தஸ்ய யேனுத்மைவாத்மனு ஜிதः ।
அனுத்மனஸ்து சத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத் ॥ 6

6. ஆன்மாவினுல் தன்னைத்தானே வென்றவனுக்கு ஆன்மா தான் நண்பன். தன்னைத்தான் ஜயிக்காதவன் தனக்கு விரோதியாக இருக்கிருன். அவனது ஆன்மாவும் அவனுக்கு விரோதியைப் போல் நடந்து கொள்கிறது.

[5-6. தம்மபதம் (புத்த மத நூல்) பின் வருமாறு கூறுகிறது: "தனக்கு ஆன்மாவே எஜமானன். வேறு யார் எஜமானனுக இருக்க முடியும்? தன்னைத்தான் நன்கு அடக்கிக் கொண்டவன், காண்பதற்கு அரிதான கடவுளைக் காண்கிருன். ஒருவன் செய்யும் பாவம் அவனுக்குக் களங்கத்தை உண்டாக்குகிறது. பாவத்தைத் தவிர்ப்பவன் தன்னைத்தான் சுத்தமாக வைத்துக்கொள்கிருன். ஒருவன் தன்னைத்தானே சுத்தமாகவோ அல்லது அசுத்தமாகவோ வைத்துக் கொள்ள முடியும்; தன்னை வேறு யாரும் சுத்தமாகவோ அல்லது அசுத்தமாகவோ செய்துவிட முடியாது. பிக்ஷு, தன்னைத்தானே உயர்த்திக் கொள்ளவேண்டும். அவன் தனக்குத்

தானே நண்பனாக இருக்கவேண்டும். தனக்குத்தானே பாதுகாப்பாகவும், கலக்கமின்றி சாந்தமாகவும் இருப்பவன் ஆனந்தத்தை அடைகிறான். தனக்கு எஜமானன் ஆன்மாவே; தன்னுடைய லட்சியம் ஆன்மாவே."

நான் எனது மொழிபெயர்ப்பில் உயர்தர ஆன்மாவை, கீழ்த்தரமான பிரகிருதியிலிருந்து வேறு படுத்திக் காட்டியிருக்கிறேன். காந்திஜி தமது மொழிபெயர்ப்பில் அவ்விதம் செய்துள்ளாரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. உண்மையில், ஆன்மா நண்பனும் அல்ல, பகைவனும் அல்ல. ஆனால், கீழ்த்தர பிரகிருதியானது ஆன்மாவை நண்பனாகவோ அல்லது விரோதியாகவோ செய்துகொள்கிறது. ஆன்மாவின் நிலைக்குத் தன்னை உயர்த்திக்கொள்ள முற்படும்போது ஆன்மாவை நண்பனாகச் செய்துகொள்கிறது; ஆன்மாவின் நிலையிலிருந்து தன்னைக் கீழே இழுக்க முற்படும் போது ஆன்மாவை விரோதியாக்கிக் கொள்கிறது. தார்மிக லட்சியத்தைப் பூரணமாக நிறைவேற்ற வேண்டுமாயின், ஆன்மாவை "லட்சியமாகவும், சாட்சியாகவும், அடைக்கலமாகவும், நண்பனாகவுமே" கருதவேண்டும் (அத்தியாயம் - 9, சுலோகம்-18). ஆனால், மனிதன் பெரும்பாலும் ஆன்மாவைத் தனக்கு விரோதியாகவே செய்து கொண்டுவிடுகிறான். இது, நிலையற்ற மனிதர்களின் சொந்த அனுபவமேயாகும்.

குரான்: "யார் பாவம் செய்கிறானோ அவன் தனக்கு விரோதமாக பாவம் செய்கிறான். யார் நேர்மையாக நடந்து கொள்கிறானோ அவன் தன் சொந்த ஆன்மாவுக்காகவே அவ்விதம் செய்கிறான்; தவறான வழியில் செல்லுபவன் தன் சொந்த ஆன்மாவுக்கே பாதகத்தை உண்டாக்கிக் கொள்கிறான்."

'இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்' கூறுவதாவது: "ஆன்மாவை அனுசரித்து நடந்து கொள்ளாத உன்னைக் காட்டிலும் ஆன்மாவுக்கு அதிகத் தொல்லையைக் கொடுக்கும் மோசமான விரோதி வேறு யாரும் இல்லை."]

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥

ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: |
சீதோஷ்ண ஸுகது:க்கேஷு ததா மானபமானயோ: ‖ 7

7. தன்னை வென்றவனும், குளிர் - உஷ்ணம், இன்பம் - துன்பம், மானம் - அவமானம் எல்லாவற்றையும் சமமாகக் கருதி முற்றிலும் அமைதியாக இருப்பவனும் ஆன்ம சாந்தியை அடைகிறான்.

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८ ॥

க்ஞான விக்ஞான த்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: |
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்ம காஞ்சன: || 8

*8.* ஞானத்திலும் பகுத்தறிவினலும் ஏற்பட்ட திருப்தியினல் மனம் நிறைந்தவனும், பாறைபோல் உறுதியான மனம் படைத்தவனும், தனது புலன்களை வென்றவனும், மண், கல், தங்கம் எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனுமான யோகியே யோகத்தில் நிலைபெற்றவனாக இருக்கிறான்.

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

ஸுஹ்ருன் மித்ரார் யுதாஸீன மத்யஸ்த த்வேஷ்ய பந்துஷு |
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே || 9

*9.* உயிர்த்தோழன், நண்பன், விரோதி, முகம் தெரியாதவன், மத்தியஸ்த நிலையில் இருப்பவன், அந்நியன், கூட்டாளி, முனிவன், பாவி ஆகிய எல்லோரையும் சமமாகக் கருதுபவனே சிறந்தவன்.

---

7. அழுக்கடைந்த கண்ணடியில் சூரியனுடைய பிரகாசம் தெரிவதில்லை. மாயையில் அகப்பட்டு உள்ளத்தில் அழுக்கும் அசுத்தமும் நிறைந்தவர்களுக்கு ஒரு காலத்திலும் ஈசுவரனுடைய தரிசனம் கிடைப்பதில்லை. ஆனல், அழுக்கு இல்லாத சுத்தமான கண்ணடியில் சூரிய வெளிச்சம் பிரதிபலிக்கிறது. அது போலவே, உள்ளத் தூய்மை உள்ளவர்கள் இறைவனைத் தரிசிக்கின்றார்கள். —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

7. இந்த சுலோகத்தில் உள்ள 'பரமாத்மா' என்ற சொல் ஆன்மாவையே குறிக்கிறது. சாதாரணமாக இந்த உடலில் உள்ள ஆன்மா இன்பதுன்பங்களில் தொடர்பு உள்ளதாகவே இருக்கிறது. புலன்களை அடக்கித் தன்னைத் தானே ஜயிப்பவனின் ஆன்மா 'பரமாத்மா' வாக அல்லது 'பரமேசுவரனக' ஆகிறது. ஆன்மாவும் பரமாத்மாவும் ஒன்றே தான் என்று 13-ம் அத்தியாயம், 22, 31-ஆவது சுலோகங்கள் கூறுகின்றன. புலன்களிலிருந்தும் இருமை உணர்ச்சியிலிருந்தும் விடுதலை பெற்ற ஆன்மாவே பரமாத்மா ஆகின்றது.

—சங்கரர்.

*31*

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

யோகீ யுஞ்ஜீத ஸததம் ஆத்மானம் ரஹஸி ஸ்தித: ||
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீரபரிக்ரஹ: ॥ 10

*10.* யோகி தனிமையான இடத்தில் தனியாக இருந்து கொண்டு, மனத்தையும், உடலையும் கட்டுப்படுத்தி, ஆசைகளை யும், உடைமைகளையும் கைவிட்டு, இடைவிடாத ஆன்ம சிந்தனை யில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

[*10-16* சுலோகங்களில் குறிப்பிடப்படும் யோகி என்ற சொல்லுக்கு யோகியாவதற்கு முயற்சிப்பவன், யோகப் பயிற்சியில் தீவிர நாட்டம் கொண்டவன் என்றே பொருள். மனம், அறிவு, மூலாதாரமான வாயுக்கள் ஆகியவற்றை கட்டுதிட்டங்களுக்கு உட்படுத்தி ஆன்ம சிந்தனையில் லயிப்பதே யோகம் என்பதற்கு அர்த்தம். *10-14* சுலோகங்களில் காணப்படும் விவரங்களைக் காட்டிலும் சுவேதாசுவதர உபநிடதத்தில் (*2-8-12*), உட்காரும் விதம், இடம் முதலிய மற்ற நிபந்தனைகள் விவரமாக வர்ணிக்கப்பட் டுள்ளன. மற்றப் பகுதி, யோகப் பயிற்சியைப்பற்றி கீதையில் குறிப்பிடப்பட்டிருப்பது போலவே இருக்கிறது.]

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥

சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸன மாத்மன: ।
நாத்யுச்ரிதம் நாதிநீசம் சைலாஜின குசோத்தரம் ॥ 11

*11.* தனக்கு ஒரு பரிசுத்தமான இடத்தை நிர்ணயம் செய்துகொண்டு, அதிக உயரம் இல்லாததும், அதிகமாகத் தாழ்ந்து இராததுமான ஓர் உறுதியான ஆசனத்தில் தர்ப்பைப் புல்லைப் பரப்பி, அதன்மீது மான்தோலைப் போட்டுக்கொண்டு, அதன்மேல் ஒரு துணியை விரிக்க வேண்டும்.

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா யதசித்தேந்த்ரிய க்ரிய: ।
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத் யோகமாத்ம விசுத்தயே ॥ 12

*12.* பிறகு அந்த ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு மனத்தை ஒரு முகப்படுத்தியும், எண்ணங்களையும் புலன்களையும் கட்டுப்படுத்தியும், ஆன்ம சுத்திக்காக யோகப் பயிற்சியில் ஈடுபடவேண்டும்.

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।**
**संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥**

ஸமம் காயசிரோக்ரீவம் தாரயன் னசலம்ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சானவலோகயன் ॥ 13

**प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।**
**मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥**

ப்ரசாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்தித: ।
மன: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥ 14

*13-14.* ஸ்திரமாக இருந்துகொண்டு, உடல், கழுத்து, தலை இவற்றை ஒரு நேர்கோட்டைப் போல் ஒழுங்காக வைத்துக் கொண்டும், அசையாமலும், மூக்கின் நுணியை உற்று நோக்கிய வண்ணம் சுற்றிலும் எதையும் பாராமலும், அமைதியான மனத்துடனும், அச்சமின்றியும், பிரம்மச்சரிய விரதத்தில் உறுதியுடனும், மனத்தை அடக்கியும், என்னையே சிந்தித்த வண்ணம் என்னிடத்தில் லயிந்தவனாக யோகி உட்கார வேண்டும்.

---

13. "மூக்கின் நுணியைப் பார்த்துக்கொண்டு" என்பதில் உள்ள உட்பொருளை அறிந்துகொள்ளவேண்டும். பார்வையை வெளிச் சாதனங்களிலிருந்து திருப்பி உட்புறமாகச் செலுத்தவேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். இது, மன உறுதியையே பொறுத்திருக்கிறது. பார்வையை உட்புறமாகச் செலுத்தாமல் "மூக்கின் நுணியைப் பார்த்தவண்ணம்" இருக்க வேண்டும் என்று மாத்திரம் கருதுவது அர்த்தமற்றது. —சங்கரர்.

13. சுத்தமான இடத்தில், முதுகு, கழுத்து, தலை ஆகியவற்றை நேராக வைத்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து கொள்ள வேண்டும் என்பது, இங்கே ஹடயோகத்தைக் குறிப்பிடவில்லை. உபநிடதங்களில் விவரிக்கப்பட்டுள்ள யோகத்தையே பயிற்சி செய்ய வேண்டும். ஹட யோகத்தில், புலன்களை பலாத்காரமாகக் கட்டுப்படுத்தவேண்டும். ஆனால், இந்த அத்தியாயம் 24-ஆம் சுலோகத்தில் கூறியுள்ளபடி, மனத்தினாலேயே புலன்களைக் கட்டுப்படுத்தவேண்டும். எனவே, ஹடயோகத்தை கீதை ஆதரிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. —திலகர்.

பிரம்மச்சரியம் (சாதாரணமாக இச்சையடக்கம் என்றே மொழிபெயர்க்கப்படுகிறது) என்றால், சிற்றின்ப இச்சையைத் தவிர்ப்பது மாத்திரம் அல்ல; பிரம்மத்தை அடைவதற்காக, அகிம்சை, சத்தியம், திருடாமை, சிற்றின்ப இச்சையடக்கம், உடைமைகள் இராதிருத்தல் ஆகிய ஐந்து மூலாதாரமான விரதங்களை அனுசரிப்பதே ஆகும்.

**युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।**
**शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥**

**யுஞ்ஜன்னேவம் ஸதா(ஆ)த்மானம் யோகீ நியதமானஸ: ।**
**சாந்திம் நிர்வாண பரமாம் மத்ஸம்ஸ்தாமதிகச்சதி ॥ 15**

*15.* எப்போதும் அவ்விதமாக மனத்தைக் கட்டுப்படுத்தி ஆன்மாவுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளும் யோகி, சாந்தியை அடைகிறான். அந்த சாந்தியின் மூலம் அவன் நிர்வாண நிலையை அதாவது என்னிடத்தில் உள்ள பரம சாந்த நிலையை எய்துகிறான்.

[2-ஆம் அத்தியாயம், 72-ஆவது சுலோகத்திற்கு நான் எழுதியுள்ள குறிப்பில் நிர்வாண நிலையைப்பற்றிய விவரங்களைப் பார்க்கவும்.]

**नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।**
**न चाति स्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥**

**நாத்யச்னதஸ்து யோகோ (அ) ஸ்தி ந சைகாந்தமனச்னத: ।**
**ந சாதி ஸ்வப்ன சீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥ 16**

*16.* மிகவும் அதிகமாக உண்பவனும், மிகவும் அதிகமாகப் பட்டினி கிடப்பவனும் யோக நிலையை அடைவதற்குத் தகுதியற்றவன். அதுபோலவே, மிகவும் அதிகமாகத் தூங்குபவனும், மிகவும் அதிகமாக விழித்துக் கொண்டிருப்பவனும் யோக நிலையை அடைவதற்குத் தகுதியற்றவன் ஆகிறான்.

---

16. யோகி அனுசரிக்கவேண்டிய உணவு சம்பந்தமான விதிகள் இங்கே குறிப்பிடப்பட்டுள்ளன. "ஒழுங்கான அளவுள்ள உணவு, உண்பவனைப் பாதுகாக்கின்றது; அவனுக்குப் பாதகம் விளைவிப்பதில்லை. அதிகமான உணவோ அல்லது குறைந்த உணவோ அவனுக்கு தீங்கை விளைவிக்கின்றது'' என்று வேதம் கூறுகிறது. உணவின் அளவைப் பற்றி யோக சாஸ்திரத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது: ''அரை வயிறு உணவாலும், கால் வயிறு தண்ணீராலும் நிரப்பப்படவேண்டும். காற்று போய் வருவதற்காக கால் வயிற்றைக் காலியாக விடவேண்டும். —சங்கரர்.

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

யுக்தா ஹார விஹாரஸ்ய யுக்த சேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்தஸ்வப்னுவ போதஸ்ய யோகோ பவதி துःக்கஹா ॥ 17

*17.* உணவு, இளைப்பாறுதல், எல்லாக் காரியங்களிலும் செய்யப்படும் முயற்சி, தூக்கம், விழித்திருத்தல் ஆகிய எல்லா விஷயங்களிலும் கட்டுதிட்டங்களுடன் இருப்பவனுக்கு யோக மானது, எல்லாத் துன்பங்களையும் தீர்க்கவல்லதாக இருக்கிறது.

[''சிறந்து விளங்க முயற்சிக்கும் ஒவ்வொருவனும் எல்லா விஷயங்களிலும் மிதமாக இருக்கவேண்டும்''—பைபிள்.]

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥

யதா வினியதம் சித்தம் ஆத்மன்யேவாவ திஷ்டதே ।
நிஸ்ப்ருஹ: ஸர்வ காமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥ 18

*18.* தனது எண்ணங்களை பூரணமாகக் கட்டுப்படுத்தி, ஆன்மாவைப்பற்றிய சிந்தனையிலேயே நிலைபெற்றவன் எவனோ, பொருட்களின் மீது உள்ள ஆசையிலிருந்து விடுபட்டவன் எவனோ, அவன்தான் யோகி என்று அழைக்கப்படுகிறான்.

[ஒருவனுக்கு மற்றப் பொருட்களில் உள்ள ஆசையெல்லாம் தீர்ந்துவிட்டால், கடவுளுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற ஒரே ஆசை அவனது ஆன்மாவை ஆட்கொண்டுவிடுகிறது. ''முனிவர்களிடம் உள்ள எல்லா சக்திகளையும் மனிதனுக்குக் கடவுள் அளித்தாலும், தம்மைத் தவிர வேறு எல்லாவற்றையும் அவனுக்கு அளித்தாலும் கூட கடவுளை அடைய வேண்டும் என்ற அவனது பேரார்வம் நிறைவேறாமல், அவன் தவிப்பான்.'' —ரய்ஸ்ப்ரோக்.]

---

17. இந்த சுலோகத்தில் உள்ள 'யோக' என்ற சொல் பதஞ்சலி யோகத்தையே குறிப்பிடுகிறது. 'யுக்த' என்ற சொல்லுக்கு, 'மிதமான', 'போதிய' அல்லது 'குறிப்பிட்ட அளவுள்ள' என்பதே பொருள். பதஞ்சலி யோகத்தை விளக்குவது இந்த அத்தியாயத்தின் நோக்கம் அல்ல. கர்ம யோகத்தை அனுசரிப்பதற்கு பதஞ்சலி யோகம் உதவியாக இருக்கிறது என் பதற்காகவே அதைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்ம யோகத்தை வெற்றிகரமாகப் பயிற்சி செய்ய வேண்டியது, வாழ்க்கையில் மிகவும் முக்கிய மான கடமை என்பதை இந்த சுலோகம் தெளிவாக்குகிறது. —திலகர்.

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९ ॥

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகினோ யத சித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன: ॥ 19

19. காற்றில்லாத இடத்தில் உள்ள தீபத்தின் சுடர் அசையாமல் இருப்பதுபோலவே, மனத்தைக் கட்டுப்படுத்தி, தன்னை ஆன்மாவுடன் ஐக்கியப்படுத்த முயற்சிக்கும் யோகியின் நிலையும் இருக்கிறது.

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ २० ॥

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாத்மனா(ஆ)த்மானம் பச்யன்னாத்மனி துஷ்யதி ॥ 20

20. எண்ணம் யோகப் பயிற்சியால் அடக்கப்பட்டு எங்கே பூரணமாக ஸ்தம்பித்து விடுகிறதோ, ஆன்மாவினால் ஆன்மாவைக் கண்டு ஒரு மனிதன் எங்கே ஆன்ம திருப்தியுடன் உட்காருகின்றானோ;

[ப்ளோடினஸ் (கிரேக்க ஞானி) கூறுவதாவது: "அந்தத் தோற்றத்தைப் பார்ப்பதாகவும், பார்த்ததாகவும் கூறுவது சரியான காரணம் ஆகாது. இங்கே நாம் கண் பார்வையைப் பற்றிப் பேசவில்லை. ஏனெனில் எது கண்களால் பார்க்கப்படுகிறதோ அதை, ஞானி காண்பதில்லை; அதை இரண்டாவது பொருளாகவும் அவர் கருதுவதில்லை. எனவே, இந்தத் தோற்றத்தைப் பற்றிக் கூறுவது கடினமான விஷயம். ஏனெனில், மற்றொன்றாகத் தோன்றாத, தானாகவே தோன்றும் ஒன்றை ஒரு மனிதன், தன்னைக்காட்டிலும் வேறானதாக எப்படி வர்ணிக்க முடியும்?"

இதைத்தான் கீதை சிக்கல் எதுவுமின்றி, ஆன்மா ஆன்மாவைப் பார்க்கிறது என்று கூறுகிறது.]

सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥

---

20. சமாதியினால் தூய்மையாக்கப்பட்ட மனம் பரம்பொருளைப் பார்க்கும் சக்தியைப் பெறுகின்றது. — சங்கரர்

ஸுகமாத்யந்திகம் யத் தத் புத்திக்ராஹ்ய மதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதச் சலதி தத்வத: ‖ 21

21. புலன்களுக்கு எட்டாததும், பகுத்தறிவினல் மாத்திரம் பெறக்கூடியதுமான அந்த முடிவற்ற பேரின்பத்தை எவன் அனுபவிக்கிருனே, எதில் நிலைத்தபின் ஒருவன் சத்தியத்திலிருந்து வழுவுவதில்லையோ;

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ २२ ॥

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத: ‖
யஸ்மின் ஸ்திதோ ந து:க்கேன குருணுபி விசால்யதே ‖ 22

22. எதை அடைந்தபின், அதைக்காட்டிலும் வேறு எதையும் பெரும் லாபமாக அவன் கருதவில்லையோ, எந்த இடத்தில் உறுதியாக ஸ்தாபித்தபின் அவன் எத்தகைய பெரும் துன்பத்தையும் கண்டு சஞ்சலம் அடைவதில்லையோ;

तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ २३ ॥

தம் வித்யாத் து:க்க ஸம்யோக வியோகம் யோக ஸம்க்ஞிதம் ।
ஸ நிச்சயேன யோக்தவ்யோ யோகோ (அ)நிர்விண்ண சேதஸா ‖ 23

23. அதைத்தான் யோகநிலை என்று அதாவது பரம்பொருளுடன் ஐக்கியம் அடைவது என்று அறிந்துகொள்ள வேண்டும். அதுதான் துன்பத்துடன் எத்தகைய தொடர்புமற்ற ஒரு நிலையாகும். ஒருவன் இந்த யோகத்தைத்தான் உறுதியான தீர்மானத்துடனும், சலியாத ஊக்கத்துடனும் பயிற்சி செய்ய வேண்டும்.

---

23. துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதே யோகம். உறுதியுடனும் தன்னம்பிக்கையுடனும் யோகத்தைப் பயிற்சி செய்ய வேண்டியது அவசியமாகும். அவ்விதம் பயிற்சி செய்தால்தான், மேற்கண்ட சுலோகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள முறைகளில் வெற்றிபெறுவது சாத்தியமாகும்.

—சங்கரர்.

20-லிருந்து 23-ஆம் சுலோகம் வரையில் ஒரே வாக்கியமாகக் கருத வேண்டும். மேற்கண்ட நான்கு சுலோகங்களும் சமாதி நிலையைப் பூரணமாக வர்ணிக்கின்றன. யோகம் என்றால் மனம் சம்பந்தமான நடவடிக்கைகளைக்

[டாலர் கூறுவதாவது: ''அவனது ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலந்துவிடுவதால், அவனுக்கு எவ்வித வேற்றுமையும் தோன்றுவதில்லை. சிருஷ்டிக்கப்பட்ட யாவும் அவனுக்கு ஒன்றுதான். அவனது உள்ளமும் உணர்ச்சியும் தெய்விகத் தொடர்புகொண்டு கடவுளிடம் ஆழ்ந்துவிடுவதால், அவன் வேற்றுமை உணர்ச்சியையும் அடியோடு இழந்தவனாகிவிடுகிறான். யாதொரு களங்கமும் இல்லாத தெய்விகத் தொடர்பே அவனது நிலையின் ரகசியமாகும்.''

சாங்கியத்திற்கும் யோகத்திற்கும் இடையே உள்ள இணைப்பு, கீதையின் ஒரு சாதனையே யாகும். அந்தச் சாதனையின் ஒரு கட்டத்தை நாம் பார்த்தோம். 'சாங்கிய காரிகை'யின் முதல் வாக்கியமே, எல்லாத் துன்பங்களையும் அறவே ஒழிப்பதற்கான வழிகளைப் பற்றிய கேள்வியே ஆகும். இவ்விஷயமாக 'யோக பாஷ்யம்' கூறுவதாவது: ''ஸம்ஸாரம் துன்பமயமே யாகும். எனவே, அதைத் தவிர்க்க வேண்டியது அவசியம். பிரகிருதியுடன் உள்ள தொடர்பிலிருந்து புருஷன் விடுதலை அடைய வேண்டும். அந்தத் தொடர்பை அறவே ஒழிப்பதன் மூலம்தான் புருஷன் விடுதலை பெறமுடியும். துன்பமயமான ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான ஒரே வழி, பரம்பொருளுடன் ஐக்கியம் அடைவதே.''

பரம்பொருளுடன் ஆன்மா ஐக்கியம் அடைவதன் மூலமே, துன்பங்களுடன் உள்ள தொடர்பை அறவே கத்தரித்துக்கொள்ள முடியும் என்று கீதை கூறுகிறது.

''சலியா உற்சாகம்'' என்பதை, புகழ் பெற்ற கௌடபாதர் பின்வருமாறு வர்ணித்துள்ளார்: ''ஒரு புல்லினால் துளித்துளியாக கடல் தண்ணீரை எடுத்து கடலை வற்றடிக்க முயற்சிக்கும் ஒரு மனிதனின் உற்சாகம்''. அபாயம் ஏற்படுமோ என்ற பயம், கவனமின்மை, தூக்கக் கலக்கம், மதி மயக்கம், சந்தேகம் முதலியவையே யோகத்திற்கு இடையூறுகள் என்பது எல்லோரும் அறிந்ததாகும். அத்தகைய இடையூறுகள் ஏற்பட்டாலும், சந்

---

கட்டுப்படுத்துவதேயாகும். அந்த நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் ஏற்படும் இறுதி நிலையே சமாதி, அல்லது யோகம் என்று கூறப்படுகிறது. உறுதியும், உழைப்பும் உள்ள ஒருவன், இந்த யோகத்தில் ஆறுமாத காலத்திற்குள் தேர்ச்சி பெறலாம் என்று உபநிடதங்களும் மகாபாரதமும் கூறுகின்றன. மனத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தியபின், ஆன்மாவின் தன்மையைப் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் துக்கம் எதுவுமே இல்லாத பேரானந்த நிலை ஏற்படுகின்றது. மேற்கண்ட பதஞ்சலி யோகத்தினால்தான் அந்த நிலையை எட்ட முடியும் என்பதில்லை. அதே பலனை அதாவது மனத் தூய்மையை, ஞானத்தினாலும், பக்தியினாலும் எளிதில் அடைய முடியும் என்பதைப் பின் வரும் அத்தியாயங்கள் விவரிக்கின்றன.

—திலகர்.

தேகத்திலும், சோர்விலும் உறுதி குலையாமல் இருப்பவனின் உற்சாகமே அவ்விதம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४ ॥

ஸங்கல்ப ப்ரபவான் காமான் த்யக்த்வா ஸர்வானசேஷத:।
மனஸைவேந் த்ரியக்ராமம் வினியம்ய ஸமந்தத:॥ 24

24. சுயநல நோக்கம் காரணமாக எழுந்த ஆசைகளிலிருந்து தன்னைப் பூரணமாக விடுவித்துக் கொண்டு, மனத்தையும், புலன்களின் கூட்டத்தையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் இழுத்து அடக்கி;

शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ॥ २५ ॥

சனை: சனைருபரமேத் புத்யா த்ருதிக்ருஹீதயா।
ஆத்ம ஸம்ஸ்தம் மன: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்॥ 25

25. மன உறுதியினால் புத்தியை நிலைநிறுத்தி, அவன் சிறிது சிறிதாக அமைதியான நிலையை அடைய வேண்டும். வேறு எதையும் பற்றிச் சிந்திக்காமல் மனத்தை ஆன்மாவில் நிலை நிறுத்த வேண்டும்.

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥

யதோ யதோ நிச்சரதி மனச் சஞ்சல மஸ்திரம்।
ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மன்யேவ வசம் நயேத்॥ 26

26. சஞ்சலமான, உறுதியற்ற மனம் அங்குமிங்கும் திரியும் போதெல்லாம், அதை இழுத்து ஆன்மாவின் பூரணமான ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர வேண்டும்.

---

25. வேறு எதுவுமே இல்லை, ஆன்மாதான் எல்லாம் என்பதைத் தெளிவாக மனத்தில் இறுத்திக்கொள்ள வேண்டும். யோகத்தின் ரகசியம் இதுதான். —சங்கரர்.

26. மனம் சமாதி நிலையை அடைய வேண்டும் என்பதை விளக்க கட உபநிடதத்தில் ஓர் உதாரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ரதத்தை ஓட்டும்

[25-26. இதன் சம்பந்தமாக டாக்டர் ராதாகிருஷ்ணன், பிளாட்டோவின் நூலிலிருந்து பின்வரும் சில வாக்கியங்களை மேற்கொளாகக் கொடுத்துள்ளார்: "சப்தமோ, பார்வையோ, துன்பமோ, இன்பமோ எதனுலும் மனம் கலங்காமல் உறுதியான நிலையை அடையும்போதும், உடலுடன் தொடர்போ, உடலைப் பற்றிய உணர்ச்சியோ, சிந்தனையோ இன்றி மனம் பரம்பொருளை நாடும் போதும் சிறந்த எண்ணங்கள் எழுகின்றன."]

प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥

ப்ரசாந்த மனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம்।
உபைதி சாந்த ரஜஸம் பிரஹ்மபூத மகல்மஷம்॥ 27

27. மனத்தை சாந்த நிலைக்குக் கொண்டு வந்தவனும், வெறிக் குணங்களை அடக்கியவனும், பிரம்மத்துடன் ஒன்ருகி விட்டவனும், எல்லாப் பாவங்களும் அறவே களையப்பட்டவனுமான இந்த யோகியை, பேரானந்தம் வந்து அடைகின்றது.

युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥

யுஞ்சன் னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ:।
ஸுகேன ப்ரஹ்ம ஸம்ஸ்பர்சம் அத்யந்தம் ஸுக மச்னுதே॥ 28

---

திறமை வாய்ந்த சாரதி, குதிரைகளை இந்தப் பக்கமோ அல்லது அந்தப் பக்கமோ பார்க்க விடாமல் நேராக ஓட்டிச் செல்லுவதைப் போலவே, சமாதி நிலையை அடைவதற்கு மனிதன் பெருமுயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் மனத்தை ஒரு நிலைப்படுத்தும் வழக்கம் உள்ளவர், இந்த சுலோகத்தின் கருத்தை எளிதில் உணர்ந்து கொள்ளலாம். மனத்தை ஒரு திசையில் செல்லாமல் அடக்கினுல், அது மற்ருெரு திசைக்குத் தாவுகின்றது. இவ்விதமெல்லாம் செல்லாமல் மனத்தை அடக்கினுலன்றி, சமாதி நிலையை அடைவது இயலாத காரியம். —திலகர்.

27. யாருடைய மனம் முற்றிலும் சாந்த நிலையை அடைகின்றதோ, அதாவது துன்பத்திற்கு முக்கிய காரணமான விருப்பு, வெறுப்புகள் யாரிடமிருந்து மறைந்துவிடுகின்றனவோ, யாரிடத்தில் மூன்று குணங்களின் போராட்டம் இல்லையோ, யார் எல்லாம் பிரம்மம் என எண்ணி ஜீவன் முக்தனுக ஆகின்ருனே, அதன் காரணமாக தர்மத்தினுலோ, அதர்மத்தினுலோ பாதிக்கப்படாமல் இருக்கின்ற யோகி பேரானந்தத்தை அடைகிருன். —சங்கரர்.

28. அவ்விதம் ஆன்மாவுடன் தன்னை ஐக்கியப்படுத்தி எல்லாப் பாவங்களிலிருந்தும் தன்னைத் தூய்மையாக்கிக் கொண்ட யோகி, பிரம்மத்துடன் தொடர்பு கொள்வதால் ஏற்படக் கூடிய எல்லையற்ற பேரானந்தத்தை எளிதில் அனுபவிக்கிருன்.

["தெய்வத்தினிடம் முற்றிலும் லயித்துவிட்டால், ஆன்மா அதனுடன் இரண்டறக் கலந்துவிடுகிறது" என்று ப்ளோடினஸ் கூறியுள்ளார்.]

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

ஸர்வ பூதஸ்த மாத்மானம் ஸர்வ பூதானி சாத்மனி|
ஈக்ஷதே யோக யுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன:|| 29

29. யோகத்தில் தேர்ச்சி பெற்றவன், பாரபட்சமின்றி எல்லாவற்றையும் சமமாகக் கருதுகிருன். எல்லா உயிர்களிடத்திலும் ஆன்மாவையும், ஆன்மாவில் எல்லா உயிர்களையும் காண்கிருன்.

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि सच मे न प्रणश्यति ॥ ३० ॥

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி|
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி|| 30

30. யார் என்னை எல்லா இடங்களிலும் காண்கின்ருனே, என்னிடத்தில் எல்லாவற்றையும் பார்க்கின்ருனே, அவன் என் பார்வையிலிருந்து மறைவதில்லை. நானும் அவனது பார்வையிலிருந்து மறைவதில்லை.

[29-30. இந்த சுலோகங்கள், மகத்தான ஈச உபநிடதத்தின் வாக்கியங்களையே பிரதிபலிக்கின்றன: "எல்லா உயிர்களையும் ஆன்மாவாகக் கருதுபவனுக்கு, எல்லாச் சிருஷ்டிகளிலும் ஐக்கிய பாவத்தைக் காண்பவனுக்கு, உலகத்தில் மதிமயக்கம் ஏது, துக்கம் ஏது?"*

---

* यस्मिन्सर्वाणि भूतान्यात्मैवा भूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥
—ईश-७.

யஸ்மின் ஸர்வாணி பூதான் யாத்மைவாபூத் விஜானத: |
தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வ மனுபச்யத: ||
—ஈசாவாஸ்ய உபநிடதம்–7.

சுவேத உபநிடதம் கூறுவதாவது: "ஆன்மாவில் வீற்றிருக்கும் பரம்பொருளைக் கண்ட ஞானிக்கு மாத்திரமே நிரந்தரமான பேரானந்தம் சொந்தமானது, வேறு யாருக்கும் இல்லை."

யோகியின் அனுபவத்தை அவை அடிப்படையாகக் குறிப்பிடுகின்றன. "எல்லா உயிர்களையும் உன்னிடத்திலும், பின்னர் என்னிடத்திலும் நீ காண்பாய்" என்று நான்காம் அத்தியாயம் 35-ஆவது சுலோகத்தில் ஞானத்தின் பலன் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதுவே, இங்கு விவரிக்கப்பட்டிருக்கிறது என்றாலும், அதன் சம்பந்தமான வாதம் ஒன்றாகவே இருக்கிறது. ஒருவன் முதலில் தனக்கு அருகில் உள்ளவர்களிடம் தன்னைக் காண்கிறான். பின்னர் தொலைவில் உள்ளவர்களிடத்திலும், அதன் பின் மனித வர்க்கத்தினிடத்திலும், இறுதியாக எல்லோரிடத்திலும் தன்னைக் காண்கிறான். மற்றொருவரிடத்தில் தன்னைக் காண்பது எனில், மற்றொருவர் மீது அன்பு செலுத்துவது என்றே அர்த்தமாகும். தன்னிடத்தில் மற்றவர்களைக் காண்பது என்பதற்கும் அதுதான் அர்த்தம். ஒவ்வொருவரிடத்திலும் கடவுளையும், கடவுளிடத்தில் ஒவ்வொருவரையும் காண்பதே இயல்பாக அதற்கு அடுத்த படியாகும். இந்தக் கருத்தையே செயின்ட் ஜான் தமது நிருபத்தில் எளிய முறையிலும், நேரடியாகவும் பின்வருமாறு கூறியுள்ளார்: "'நான் கடவுளை நேசிக்கிறேன்' என்று ஒருவன் கூறிக்கொண்டு தன் சகோதரனை வெறுப்பானாயின், அவன் ஒரு பொய்யனே. ஏனெனில், தான் நேரில் பார்க்கும் தன் சகோதரனை நேசியாத ஒருவன், தான் கண்ணால் காணாத கடவுளை எப்படி நேசிக்க முடியும்?"

—ஜான் (பைபிள்) 4.20-21

கடவுளை வழிபட்டு அவரிடம் பக்தி செலுத்தும் ஒரு யோகி, ஒவ்வொருவரையும் வணங்குகிறான், ஒவ்வொருவரிடமும் அன்பு காட்டுகிறான். ஏனெனில், ஒவ்வொருவரிடத்திலும் அவன் கடவுளைக் காண்கிறான்.]

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

ஸர்வபூத ஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வ மாஸ்திதः।
ஸர்வதா வர்த்தமானோ(அ)பி ஸ யோகீ மயி வர்த்ததே॥ 31

---

* तमात्मस्थं येऽनुपश्यन्ति धीराः
तेषां सुखं शाश्वतं नेतरेषां ॥

—श्वेताश्वतर ६-१२

தமாத்மஸ்தம் யே(அ)னுபச்யந்தி தீரா:
தேஷாம் ஸுகம் சாச்வதம் நேதரேஷாம் ॥

—சுவேதாச்வதர உபநிடதம்-6.12,

*31.* எல்லாம் ஒன்றே என்ற உறுதியுடன், எல்லா உயிர்களும் என்னிடத்திலேயே நிலைத்திருப்பதாக எண்ணி என்னை வழிபடும் யோகி, எப்படி வாழ்ந்தாலும், எவ்விதம் நடந்து கொண்டாலும் என்னிடத்திலேயே வாழ்பவனாகிறான், என்னிடத்திலேயே இருப்பவனாகிறான்.

தான் என்ற எண்ணம் இருக்கும் வரையில் பரமாத்மாவைக் காண முடிவதில்லை. தான் என்ற எண்ணம் மறைந்து ஒழியும்போது, எல்லா இடங்களிலும் பரமாத்மா காணப்படுகிறார். அத்தியாயம்-*13*, சுலோகம்-*23*-க்கு நான் எழுதியுள்ள குறிப்பைப் பார்க்கவும்.

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।**
**सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥**

**ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோ(அ)ர்ஜுன**
**ஸுகம் வா யதி வா து:க்கம் ஸ யோகீ பரமோ மத:॥ 32**

*32.* அர்ஜுனா, மற்றவர்களுக்கு தன்னை உவமையாகக் கொண்டு, தன்னுடைய சுக துக்கத்தைப் போல் எல்லோருடைய சுக துக்கத்தையும் சமமாகக் கருதுபவனே மிகச் சிறந்த யோகி என்று கருதப்படுகிறான்.

[யோகியினுடைய ஞானத்தினால் ஏற்படக் கூடிய பலனை இந்த சுலோகம் சாரமாகவும் திட்டவட்டமாகவும் குறிப்பிட்டிருக்கிறது. இதற்கு சங்கராச்சாரியார் பின்வருமாறு விளக்கம் கொடுத்துள்ளார்: "தன்னைப் போலவே எல்லாப் பிராணிகளுக்கும் இன்பமும் துன்பமும் உண்டு என்பதை உணருகிறவன், யாருக்கும் தீங்கு செய்யமாட்டான்."

பைபிளில் உள்ள பின்வரும் பிரபல வாக்கியத்தின் கருத்தும் இதுதான்: "மனிதர்கள் உங்களுக்கு என்னவெல்லாம் செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களோ, அவற்றையே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்." —மாத்யூ-*7.12.*]

---

32. எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங்கிருப்பது நீ யன்றோ பராபரமே.
எவ்வுயிரும் என்னுயிர்போ லெண்ணி யிரங்கவும் நின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே. —தாயுமானவர்

அர்ஜுன உவாச

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

அர்ஜுன உவாச
யோ(அ)யம் யோகஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேன மதுஸூதன।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம்॥ 33

*அர்ஜுனன் கூறினான் :*

*33.* மதுசூதனா, தாங்கள் இதுவரையில் எனக்கு உபதேசித்த, சமத்துவ புத்தியை அடிப்படையாகக் கொண்ட இந்த யோகமானது எப்படி உறுதியாக நீடித்திருக்க முடியும் என்பதை, அலைகின்ற மனத்தை உடைய என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद् दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்॥ 34

*34.* கிருஷ்ணா, மனம் சஞ்சலமானது, அடக்க முடியாதது, மிகவும் சக்தி வாய்ந்தது, பிடிவாதம் உள்ளது. எனவே, காற்றை அடக்குவது எவ்விதம் கடினமோ அதுபோலவே மனத்தை அடக்குவதும் கடினமானது என்றே நினைக்கிறேன்.

---

33. உடலில் உள்ள புண்ணின் மீது உட்கார்ந்த ஈ, உடனே இறைவனுக்கு நைவேத்தியம் செய்யும் பண்டத்தின் மீதும் உட்காருகிறது. அதுபோலவே, மனிதனின் மனம் ஒரு சமயம் ஆன்மிக விஷயங்களை நாடுகின்றது; ஆனால் அடுத்த விநாடியில் சிற்றின்பங்களில் உழலத் தொடங்கிவிடுகிறது. —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

34. மனம் அமைதியற்றது மாத்திரமல்ல, கொந்தளிக்கும் தன்மையுள்ளது. அது உடலையும் புலன்களையும் ஆட்டிவைத்து, வெளியே உள்ள பொருட்களில் நாட்டம் கொள்ளும்படி செய்துவிடுகிறது. அதை அடக்குவது கடினமாகும். ஏனெனில், அது அடக்க முடியாதது. காற்றைக் கட்டுப்படுத்துவது எவ்வளவு கஷ்டமோ, அதுபோலவே மனத்தைக் கட்டுப்படுத்துவதும் கஷ்டமாகும், 'கிருஷ்' (துடைப்பது) என்ற மூலச் சொல்லிலிருந்து உண்டான 'கிருஷ்ண' என்ற சொல் இங்கே உபயோகிக்கப்பட்டிருக்கிறது. கிருஷ்ணன், மனிதனிடத்தில் உள்ள எல்லாப் பாவங்களையும், மற்ற அசுத்தங்

श्रीभगवानुवाच

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम्।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥ ३५ ॥

ஸ்ரீபகவான் உவாச

அஸம்சயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம்।
அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே।। 35

ஸ்ரீ பகவான் கூறினார் :

35. தோள் வலிமை படைத்தவனே, மனம் அலையும் தன்மை வாய்ந்தது, அடக்குவதற்குக் கஷ்டமானது என்பதில் சந்தேகம் இல்லை. கௌந்தேயா, இருந்தாலும் இடைவிடாத பயிற்சியினாலும், இச்சையடக்கத்தினாலும் அதைக் கட்டுப்படுத்த முடியும்.

[யோக சூத்ரத்தில் உள்ள கருத்தே இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. மன உறுதி ஏற்படும்படி செய்வதற்கு இடைவிடாத பயிற்சி அவசியமாகும். இடைவிடாத பயிற்சி என்றால், மனம் அறிந்த முயற்சி என்பதே பொருள். இச்சையடக்கம் என்பதற்கு, உடல் விரும்பும் இயற்கையான ஆசைகளைத் தீவிரமான ஆன்மிக ஆசைகளாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதே அர்த்தமாகும்.]

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६ ॥

அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதிமே மதி:।
வச்யாத்மனா து யததா சக்யோ (அ)வாப்து முபாயத: ।। 36

36. தன்னடக்கமின்றி யோக நிலையை அடைவது கடினம் என்பதே எனது அபிப்பிராயம். எனினும், ஒழுங்கான முறைகளைக் கைக்கொண்டு முயற்சி செய்பவன், தனது முயற்சியினால் அடக்கப்பட்ட மனத்தின் மூலம் அந்த நிலையை அடைய முடியும்.

---

களையும் துடைத்தொழித்து, மனத் தெளிவு ஏற்படும்படி செய்வதே அதற்குக் காரணம்.
—சங்கரர்.

34. பூமியில் கொட்டப்பட்ட கடுகைப் பொறுக்கி எடுப்பது மிகவும் கடினம். அதுபோலவே நாலாபுறங்களிலும் ஓடித் திரியும் மனத்தை ஒரு நிலைக்குக் கொண்டு வருவது எளிதல்ல.
—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

अर्जुन उवाच

अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥

அர்ஜுன உவாச
அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச் சலித மானஸ:।
அப்ராப்ய யோக ஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி।। 37

அர்ஜுனன் சொன்னான் :

*37.* கிருஷ்ணா, நம்பிக்கையுள்ளவன், யோகத்தில் நிலை பெறாமல் அலையும் மனம் காரணமாக முயற்சிக் குறைவினால் யோகத்தில் பூரண நிலையை எட்டாவிடில், அவனது கதி என்ன ஆகிறது?

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

கச்சின்னோபய விப்ரஷ்ட: சின்னாப்ரமிவ நச்யதி।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி।। 38

*38.* மகாபாஹு, உறுதியான நிலையின்றி பிரம்ம மார்க்கத்தி லிருந்து நழுவியவன், இருவழிகளிலும் வீழ்ச்சியடைந்து சிதறுண்ட மேகத்தைப் போல் அழிந்துவிடுவான் அல்லவா?

[ மேலே "இரு வழிகளிலிருந்தும்" என்பதற்கு, பலனை விரும்பி செய்யப்படும் சடங்கு மார்க்கமும், யோக மார்க்கமும் என்பதே பொருள். ]

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

ஏதன் மே ஸம்சயம் கிருஷ்ண சேத்துமர்ஹஸ்ய சேஷத:।
த்வதன்ய: ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுப பத்யதே।। 39

*39.* கிருஷ்ணா, இந்த சந்தேகத்தை நீங்கள் முற்றிலும் தீர்த்துவைக்க வேண்டும். இந்த சந்தேகத்தை ஒழிப்பதற்கு, உங்களைத் தவிர வேறு எவரும் இல்லை.

श्रीभगवानुवाच

**पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।**

**न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥**

ஸ்ரீ பகவான் உவாச

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ்தஸ்ய வித்யதே।

ந ஹி கல்யாண க்ருத் கச்சித் துர்க்கதிம் தாத கச்சதி।। 40

ஸ்ரீ பகவான் கூறினர்:

*40.* பார்த்தா, அவனுக்கு இந்த உலகத்திலோ அல்லது அந்த உலகத்திலோ அழிவு ஏற்படுவதில்லை. நல்ல காரியத்தைச் செய்பவனுக்கு ஒரு காலத்திலும் இறுதியில் துக்கம் ஏற்படுவதில்லை.

[பிளாட்டோவும் 'அபாலஜி' என்ற அவரது நூலில் இதே கருத்தை வெளியிட்டிருக்கிறர்: "ஒரு நல்ல மனிதனுக்கு, வாழ்விலோ அல்லது மரணத்திலோ ஒரு காலத்திலும் தீங்கு ஏற்படாது என்பதை நிச்சயமாக அறிந்துகொள்."

"யார் நல்ல தொண்டுகள் செய்பவனுகவும், நம்பிக்கையுள்ளவனுகவும் இருக்கிருனே அவனது முயற்சி நிராகரிக்கப்படுவதில்லை. பார்! அவனுக்காக, அதை நாம் பதிவு செய்து வைக்கிருேம்."—குரான்]

**प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।**

**शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥**

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகான் உஷித்வா சாச்வதீ: ஸமா:।

சுசீனும் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ(அ)பி ஜாயதே।। 41

யோகத்திலிருந்து வீழ்ச்சியடைந்தவன், தரும நெறியுள்ள ஆன்மாக்களின் உலகங்களை அடைந்து, அங்கு எண்ணிக்கையற்ற ஆண்டுகள் வாழ்ந்தபின், தூய்மையான செல்வவந்தர்களின் குடும்பத்தில் வந்து பிறப்பான்.

**अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।**

**एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥**

அதவா யோகினமேவ குலே பவதி தீமதாம்।

ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருசம்।। 42

42. அல்லது, அவன் யோகிகளின் குடும்பத்தில் வந்து பிறப்பான். இந்த உலகில் அவ்விதம் யோகிகளின் குடும்பத்தில் பிறப்பது மிகவும் அரிதாகும்.

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३ ॥

தத்ரதம் புத்தி ஸம்யோகம் லபதே பௌர்வ தேஹிகம்।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தன।। 43

43. குருநந்தனு, அங்கே அவன் முன் ஜன்மத்தில் அடைந்த அறிவை மீண்டும் பெற்று, அதிலிருந்து குறையற்ற நிலையை அடைய மீண்டும் முயற்சிக்கிருன்.

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥

பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவசோபி ஸ:।
ஜிக்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதி வர்த்ததே।। 44

44. முன் ஜன்மத்தில் அவன் செய்த பயிற்சியின் பலனுக, அவன் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் மேற்கொண்டு யோக மார்க்கத்தில் இழுக்கப்படுகின்ருன். யோகத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உடையவன் கூட வேதத்தில் கூறப்பட்டுள்ள சடங்குகளைக் கடந்துசெல்லுகிருன்.

[அதாவது, வைதிகச் சடங்குகளில் அவனுக்கு கவர்ச்சியோ அல்லது நாட்டமோ இராது.]

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

---

44. அவனுக்கு முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பழக்கமானது, அவனை பூரண நிலைக்குக் கொண்டு செல்லுகிறது. அவனிடத்தில் அதருமம் மேலோங்கி நிற்குமாயின், யோகத்திலிருந்து கிடைக்கும் பலனும் தாற்காலிக மாகக் குறைந்துவிடுகிறது. அவனிடத்தில் தர்மம் மேலோங்கி நிற்குமாயின், யோக நிலையில் அவன் முன்னேற்றம் அடைகிருன். எப்படி யிருந்தாலும், யோகத்தில் அவன் பெற்ற பயிற்சி அழிந்துவிடுவதில்லை. யோக மார்க்கத்தில் செல்ல வேண்டும் என்று விரும்புகிறவன் கூட, வேதங் களில் விவரிக்கப்பட்டுள்ள கர்ம காண்டத்தின் பந்தத்திலிருந்து விடுதலை பெறமுடியும். —சங்கரர்

ப்ரயத்னாத் யதமானஸ்து யோகீ ஸம்சுத்த கில்பிஷ:||
அனேக ஜன்ம ஸம்ஸித்தஸ் ததோ யாதி பராம் கதிம்|| 45

*45.* உறுதியுடன் விடாமுயற்சி செய்து வரும் யோகி, பாவமெல்லாம் தீர்ந்து சுத்தமாகி, பல பிறவிகளில் பக்குவம் அடைந்து மகோன்னதமான நிலையை அதாவது பரம பதத்தை அடைகிறான்.

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

தபஸ்விப்யோ(அ)திகோ யோகீ க்ஞானிப்யோ(அ)பி மதோ(அ)திக:|
கர்மிப்யச்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுன|| 46

*46.* தவங்கள் புரிந்தவனைவிட யோகி உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான்; ஞானியையும் விட அவன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான்; சடங்குகளில் ஆழ்ந்துள்ளவனையும் விட யோகி உயர்ந்தவனே. ஆகையால், அர்ஜுன, நீ யோகியாவாயாக.

தவங்கள் புரிந்தவன் என்பதற்கு, பலனில் ஒரு கண் வைத்துக்கொண்டு தவம் செய்பவன் என்றே பொருள். இங்கே ஞானி என்பவன் மெய்ப் பொருளை உணர்ந்தவன் அல்ல. இந்த இடத்தில் ஞானி என்ற சொல்லுக்கு பண்டிதன் என்றே அர்த்தம்.

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா|
ச்ரத்தாவான் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:||47

*47.* எல்லா யோகிகளுக்குள்ளும், நம்பிக்கையுடன் என்னிடம் முழு மனத்தையும் வைத்து என்னிடமே லயித்து யார் என்னை வழிபடுகின்றானோ, அவனையே நான் மிகச் சிறந்த யோகியாகக் கருதுகிறேன்.

[*46-47.* இங்கே போற்றப்பட்டுள்ள யோகி, பரம்பொருளுடன் பூரணமாக ஐக்கியம் அடைவதில் வெற்றி பெற்ற யோகியே ஆவார். அவர் உருவமற்ற பரம் பொருளை தியானிப்பவராயினும் அதாவது தியான யோகியாயினும், 6, 8-ஆம் அத்தியாயங்களில் தியான யோகியைப் பற்றி வர்ணிக்கப்பட்டுளது என்றாலும், உருவமுள்ள கடவுளை வழிபடும் பக்தனிடம் கிருஷ்ணனுக்குள்ள விசேஷமான கருணை, 47-ஆவது சுலோகத்திலும், மற்ற சுலோகங்களிலும் தெளிவாகத் தெரிகிறது.]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे ध्यानयोगो
नाम षष्ठोऽध्यायः ॥ ६ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு பிரஹ்ம
வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன
ஸம்வாதே த்யான யோகோ நாம
ஷஷ்டோத்யாய:|| 6

ஸ்ரீ பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப்பற்றி ஸ்ரீகிருஷ்ண
பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த சம்பாஷ
ணையில் 'தியான யோகம்' என்ற ஆருவது
அத்தியாயம் இவ்வாருக முடிவுறுகின்றது.

# ஞான விஞ்ஞான யோகம்

## ஏழாம் அத்தியாயம்

மெய்ப் பொருளின் இயல்பையும், பக்தியின் ரகசியத்தை யும் பற்றிய விளக்கம் இந்த அத்தியாயத்திலிருந்து ஆரம்ப மாகிறது.

श्रीभगवानुवाच

मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः ।

असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

மய்யாஸக்த மனா: பார்த்த யோகம் யுஞ்ஜன் மதாச்ரய:।

அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா க்ஞாஸ்யஸி தச்ச்ருணு॥ 1

ஸ்ரீ பகவான் சொன்னார்:

1. பார்த்தா, உன் மனத்தை என்னிடத்திலேயே உறுதியாக நிலைபெறச் செய்வதாலும், யோகப் பயிற்சியினாலும், முற்றிலும் என்னையே தஞ்சமாகக் கொள்வதாலும் நீ சந்தேகமின்றி என்னையே எப்படி பூரணமாக அறிந்து கொள்ளுவாய் என்பதைக் கேள்.

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।

यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

க்ஞானம் தே(அ)ஹம் ஸவிக்ஞானம் இதம் வக்ஷ்யாம் யசேஷத:।

யத்க்ஞாத்வா நேஹ பூயோ(அ)ன்யத் க்ஞாதவ்ய மவசிஷ்யதே॥ 2

---

1. புண்ணிய லோகத்தை அடைய விரும்புகிறவன், அக்னி ஹோத்ரம், தவம், தானம் முதலிய பல்வேறு கர்மங்களிலும் ஈடுபடுகிறான். ஆனால் யோகியோவெனில், என்னையே பாதுகாப்பாகக் கொண்டு, மற்ற எல்லாக் கர்மங்களையும் துறந்துவிடுகிறான். என்னிடம் மாத்திரமே மனத்தை லயிக்கச் செய்கிறான். எனவே, அவநம்பிக்கையின்றி நீயும் அவ்விதமே செய்து, என்னைப் பூரணமாகவும், எனது எல்லையற்ற மகத்துவம், சக்தி, வல்லமை, அருள் முதலிய மற்றும் உள்ள மகிமைகளையும் எப்படி அறிந்துகொள்வது என்பதைக் கேட்பாயாக.

—சங்கரர்.

2. பகுத்தறிவுடன் கூடிய இந்த ஞானத்தை முற்றிலும் உனக்கு எடுத்துக் கூறுகிறேன். இதை நீ அறிந்து கொண்டு விட்டால், பின்னர் இங்கே அறிய வேண்டியது வேறு எதுவுமே இல்லை.

[ஞானம், விஞ்ஞானம் என்ற சொற்கள் கீதையில் ஐந்து, ஆறு இடங்களில் வருகின்றன. அந்த வார்த்தைகளுக்கு சங்கராச்சாரியார் முறையே 'ஞானம்' என்றும் 'அனுபவம்' (தன்னைத் தான் உணர்ந்து கொள்ளும் அனுபவம்) என்றும் அர்த்தம் செய்துள்ளார். ஞானம் என்பதே, தன்னைத்தான் அறிந்து கொள்வதே யாகும். அப்படியிருக்க, 'விஞ்ஞானம்' என்பதற்கு தன்னைத் தான் அறிந்து கொள்ளுதல் என்று அர்த்தம் கூறுவது, கூறியதையே மீண்டும் திருப்பிக் கூறியதாக ஆகும். திலகரைப் போன்ற மற்ற மொழி பெயர்ப்பாளர்கள், 'விஞ்ஞானம்' என்பதற்கு ஸ்தூல உலகைப் பற்றிய அறிவு என்று அர்த்தம் கூறியிருக்கிறார்கள். வாழ்க்கையின் விவரங்களை, அறிவை அடிப்படையாகக் கொண்டு தெரிந்து கொள்வது என்று டாக்டர் ராதா கிருஷ்ணன் அர்த்தம் கூறியுள்ளார். சாங்கிய முறைப்படி அவ் வார்த்தைகளுக்கு விளக்கம் கூறவேண்டும் என்பதே எனது கருத்தாகும். ஞானம் என்பது, ஆன்மாவைப் பற்றிய அனுபவமே. விஞ்ஞானம் என்பது ஆன்மாவைப் பற்றிய பகுத்தறிவே. தோன்றாத நிலையையும் தோன்றும் நிலையையும், தன்னையும் பகுத்தறிவினால் அறிந்து கொள்வதால் மாத்திரமே, எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெற முடியும் என்று சாங்கிய காரிகை கூறுகின்றது. இந்தப் பகுத்தறிவைப் பற்றியே உபநிடதங்களும் குறிப்பிடுகின்றன.

பிருகதாரண்யக உபநிடதம் (2.4.5) கூறுவதாவது: ஆன்மா பார்ப்பதற்கும், கேட்பதற்கும், சிந்தனை செய்வதற்கும், உடலிலிருந்து முற்றிலும் வேறானது என்பதை அறிந்து கொள்வதற்கும் உகந்தது.*]

---

* आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः ।

—बृहदारण्यक २.४.५

ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:

—பிருகதாரண்யக உபநிடதம் - 2-4-5

सो ऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः ।

—छांदो ८-७-१

ஸோ அன்வேஷ்டவ்ய : ஸ விஜிக்ஞாஸிதவ்ய :

—சாந்தோக்ய உபநிடதம் - 8 - 7 - 1

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

மனுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாணும் கச்சின் மாம் வேத்தி தத்வத:॥ 3

3. ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவன் சித்தி பெற முயற்சிக்கிருன். அவ்விதம் முயற்சி செய்வோரில் ஒருவன்தான் உண்மையில் என்னை அறிகிருன்.

[ "மனிதனுகப் பிறப்பது கடினம்; மனிதனுக வாழ்வது கடினம்; அதைப் போல், தரும நெறியைக் காதால் கேட்பது கடினம்; புத்தராகப் பிறப்பதும், புத்தரின் நிலையை அடைவதும் அபூர்வமாகும்." —தம்மபதம்]

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

பூமிராபோ (அ)னலோ வாயு: கம் மனே புத்திரேவ ச।
அகங்கார இதீயம் மே பின்ன ப்ரக்ருதிரஷ்டதா॥ 4

4. பூமி, தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டு அம்சங்களாக எனது இயற்கை பிரிக்கப்பட்டுள்ளது.

அத்தியாயம்-13, சுலோகம்-5-இல் க்ஷேத்திரத்தைப் பற்றி விவரிக்கப் பட்டுள்ளதும், அத்தியாயம்-15, சுலோகம்-16-இல் அழிவுள்ள அம்சத்தைப் பற்றி விவரிக்கப்பட்டிருப்பதும் அநேகமாக ஒன்றேயாகும்.

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

அபரேய மிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத்॥ 5.

---

4. சுவைஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு. —குறள்

இதன் கருத்து : சுவை, பார்வை, உடல் உணர்வு (ஸ்பரிசம்), சப்தம், வாசனை ஆகிய ஐந்து உணர்ச்சிகளின் இயல்பை அறிந்தவனுக்கே இந்த உலகம் சொந்தமாகும்.

5. மகாபாகு (தோள்வலி படைத்தவனே), இது எனது கீழான அம்சம்; ஆனால், மற்றொன்றான உயர்ந்த அம்சத்தை நீ அறிந்து கொள்வாயாக. அதுதான் ஜீவன் (மூலாதாரமான சாரம்). அதனாலேயே இந்த உலகம் இயங்கி வருகிறது.

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

ஏதத் யோனீனி பூதானி ஸர்வாணீத்யு பதாரய ।
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா॥ 6

6. இந்த இரண்டிலிருந்தே எல்லா உயிர்களும் உற்பத்தியாகின்றன என்பதை அறிந்துகொள். இந்த பிரபஞ்சம் முழுவதும் உற்பத்தியாவதற்கும் அழிவதற்கும் நானே காரணம்.

मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनंजय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய।
மயி ஸர்வமிதம் ப்ரோதம்ஸூத்ரே மணிகணா இவ॥ 7

7. தனஞ்சயா, என்னைக் காட்டிலும் மேலானது வேறு எதுவுமே இல்லை. ஒரு நூலில் ரத்னங்கள் கோர்க்கப்பட்டிருப்பது போல் எல்லாம் என்னிடம் கோர்க்கப்பட்டிருக்கின்றன.

[குரான்: "ஆண்டவன் சத்தியத்தினால் சொர்க்கத்தையும் பூமியையும் சிருஷ்டித்திருக்கிறார். அவர் எல்லாவற்றையும் விட மகோன்னதமான ஸ்தானத்தில் இருக்கிறார்." 16. 3]

रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

ரஸோ(அ)ஹமப்ஸு கௌந்தேய ப்ரபா(அ)ஸ்மி சசி ஸூர்யயோ:।
ப்ரணவ: ஸர்வ வேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு॥ 8

---

5. கீழான அம்சம், அழுக்காறுகளுக்கும், தீங்குகளுக்கும், சம்சார பந்தத்திற்கும் காரணமானது. உயர்ந்த அம்சம் தூய்மையையும், என்னையும் ஆதாரமாகக் கொண்டது. உலகில் எல்லாம் உயிர்வாழ்வதற்கு அதுதான் காரணம். உலகம் முழுவதும் வியாபித்து அதைத் தாங்குவதும் அந்த உயர்ந்த அம்சம்தான். —சங்கரர்.

*8.* கௌந்தேயா, நான் தண்ணீரில் சுவையாகவும், சூரியனிடத்திலும் சந்திரனிடத்திலும் ஒளியாகவும், எல்லா வேதங்களிலும் 'ஓம்' ஆகவும், ஆகாயத்தில் சப்தமாகவும், மனிதர்களிடத்தில் ஆண்மையாகவும் இருக்கிறேன்.

['ஓம்' என்பது பற்றி அத்தியாயம்-*8*, சுலோகங்கள் *11–13*–க்கு எனது குறிப்பைப் பாக்கவும்.]

**पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।**
**जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥**

**புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச தேஜச் சாஸ்மி விபாவஸௌ।**
**ஜீவனம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு॥ 9**

*9.* நான் பூமியில் நறுமணமாகவும், அக்னியில் ஒளியாகவும், எல்லாப் பிராணிகளிடத்திலும் உயிராகவும், முனிவர்களிடத்தில் தவமாகவும் இருக்கிறேன்.

**बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।**
**बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥**

**பீஜம் மாம் ஸர்வ பூதானும் வித்தி பார்த்த ஸனுதனம்।**
**புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விஞ மஹம்॥ 10**

*10.* பார்த்தா, நான் எல்லா உயிர்களுக்கும் ஆதியான வித்தாகவும், பகுத்தறிவுள்ளவர்களின் அறிவாகவும், ஒளிவீசும் மகான்களின் ஒளியாகவும் இருக்கிறேன் என்பதை அறிந்து கொள்.

**बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।**
**धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥**

**பலம் பலவதாம் சாஹம் காமராக விவர்ஜிதம் ।**
**தர்மா விருத்தோ பூதேஷு காமோ(அ)ஸ்மி பரதர்ஷப॥ 11**

*11.* நான், காமமும், வெறிக் குணங்களுமற்ற பலவான்களின் பலமாகவும், உயிர்களிடம் தரும நெறியிலிருந்து பிறழாத ஆசையாகவும் இருக்கிறேன்.

[காமம் இல்லாத சாத்விக பலம் ராஜஸ குணத்தைக் குறிப்பதாகும். கோபம் போன்ற வெறிக் குணங்கள் தமோ குணத்தைக் குறிப்பவை. தருமம், அர்த்தம் (செல்வம்), காமம் (சந்ததிகளையும், புகழையும் பெறவேண்டும் என்ற ஆசை), மோட்சம் ஆகிய நான்குமே மனிதன் நாடும் சாதனங்களாக இருக்கின்றன. செல்வமும், காமமும் தரும நெறியிலிருந்து தவறுமாயின், அவை மோட்சத்திற்கு அல்ல, நரகத்திற்கே வழிகாட்டிகள் ஆகின்றன.]

**ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।**
**मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥**

**யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ் தாமஸாச்ச யே ।**
**மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி॥ 12**

*12.* சாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று குணங்கள் சம்பந்தமானவை யாவும் என்னிடமிருந்தே உண்டாகின்றன என்பதை அறிந்து கொள். எனினும், நான் அவைகளிடம் இல்லை; அவைகளே என்னிடம் இருக்கின்றன.

கடவுள் அந்த குணங்களைச் சார்ந்தவர் அல்ல. அவைகளே கடவுளைச் சார்ந்தவை. அவரின்றி, அந்தப் பல்வேறு குணங்களும் செயல்படுவது முடியாத காரியம்.

**त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।**
**मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥**

**த்ரிபிர் குண மயைர் பாவைர் ஏபி: ஸர்வமிதம் ஜகத்।**
**மோஹிதம் நாபிஜானுதி மாமேப்ய: பரமவ்யயம்॥ - 13**

*13.* இந்த உலகம் முழுவதும், இந்த மூன்று குணங்களின் ஆதிக்கத்தினல் மயக்கமுற்றிருப்பதால், அந்த குணங்

13. மூன்று குணங்களின் காரணமாக எழும் பற்றுதல், காமம், துவேஷம் ஆகியவை உயிருள்ள எல்லா ஜீவன்களையும் மயங்கும்படி செய்துவிடுகின்றன. அதனலேயே நிரந்தரமான, தூய்மையே உருவான, ஞான மயமான கடவுளை அறிந்து கொள்வதில்லை. கடவுளைப் பற்றிய ஞானமானது எல்லாத் தீமைகளையும் அகற்றி சம்சாரமாகிற துன்பத்திலிருந்தும் காப்பாற்றுகிறது என்பதையும் அறிந்துகொள்வதில்லை. இந்த அறியாமைக்குக் காரணம் என்ன ?

உயிருள்ளவை யாவும், மூன்று குணங்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு பற்றுதல், விருப்பு, வெறுப்பு உணர்ச்சிகளால் மதிமயக்கம் கொண்டுள்ளன. அவை, பரம்பொருளை அறிந்து கொள்ளாததற்கு அந்த உணர்ச்சிகளே காரணம். —சங்கரர்.

களையெல்லாம் கடந்த அழிவற்ற என்னை அது அறிந்து கொள்ளத் தவறிவிடுகிறது.

[12-ஆவது சுலோகம் கூறுவது போல், மூன்று குணங்களின் செயல்களுக்கும் கடவுளே காரணம். ஆனால் மனிதனோ, கடவுளுக்கும் அவனது பார்வையை மறைத்து அவனைத் திகைக்க வைக்கும் குணங்களுக்கும் இடையே நிற்கிறான். மதிமயக்கம் கொண்ட மனிதன் (சுலோகங்கள்-14-15), கடவுளைப் பாராமல் திரும்பி நிற்கிறான். இந்தக் கருத்தை செயின்ட் அகஸ்டின் மிகவும் அருமையாகப் பின்வருமாறு கூறியிருக்கிறார்: "என் முதுகுப்புறம் ஒளி வீசும் பக்கமாக இருக்கிறது. என் முகம், ஒளியினால் பிரகாசம் அடைந்த பொருட்களைப் பார்த்தவண்ணம் இருக்கிறது. அதனாலேயே ஒளியினால் தெளிவாக பொருட்களை நான் காண முடிகின்றது. எனினும், என் முகத்தில் ஒளி வீசவில்லை,")

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ‖ 14

*14.* என்னுடைய தெய்விகமான இந்த மாயை மூன்று குணங்களால் உருவாக்கப்பட்டது. இந்த மாயையை ஊடுருவிப் பார்ப்பது கடினமாகும். எனினும், என்னையே முற்றிலும் சரண் அடைவோர், மாயையாகிய திரையைக் கிழிக்கும் சக்தியைப் பெறுகிறார்கள்.

['மாயை'யைப் பற்றிய விளக்கத்தை 'எனது சமர்ப்பணத்'தில் பார்க்கவும். இந்த உலகில் கடவுளின் பிரதிபிம்பத்தை நாம் பார்க்க வேண்டும். கடவுள் இன்றேல் இந்த உலகம் இருக்க முடியாது. 'உலகம் தான் எல்லாம்' என்று நாம் நினைக்கும்படி செய்வது இந்த மாயையே.

இவ்விஷயமாக கவி பிரௌனிங் கூறுவதாவது: "கடவுளைக் காட்டுவதே சிருஷ்டியின் நோக்கம் என்று சிலர் எண்ணுகின்றனர். ஆனால், கடவுளை மறைப்பதே சிருஷ்டியின் நோக்கம் என்று நான் கூறுகிறேன்."

மாயையாகிய திரையை நாம் கிழிக்கும் போது, உலகம் மறைந்துவிடுவதில்லை; ஆனால், அது, உண்மையை மறைப்பதை விட்டுவிடுகிறது; உண்மையை நன்றாக விளக்கிக் காட்டுகிறது. சூரியனை மேகங்கள் மறைப்பதால், சூரியனே இல்லை என்று மதி மயக்கம் கொண்ட மனிதன் எண்ணுகிறான். சூரியன் இராவிட்டால், அந்த மேகங்களையே தான் பார்க்க முடியாது என்பதை அவன் மறந்துவிடுகிறான்.

கீதையைப் போலவே கத்தே* மாயையைப் பற்றி பின் வருமாறு வர்ணித்துள்ளார்:

"உலக மாயை, பட்டப்பகலில் கூட கண்ணுக்குத் தெரியாத மர்மமாக இருக்கிறது. நாம் எவ்வளவு கூக்குரலிட்டாலும் இயற்கை தன்னை மறைத்திருக்கும் திரையை அகற்றுவதில்லை. இயற்கை தானாக விரும்பிச் செய்யாததை செய்யும்படி வற்புறுத்த எத்தகைய கருவிகளுக்கும் சக்தியும் இல்லை".

ஆனால், கீதை மேற்கண்ட சுலோகத்தின் மூலம் அத்தகைய சக்தி வாய்ந்த அற்புதமான திறவுகோலை எடுத்துக் காட்டியிருக்கிறது.]

**न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।**
**माययाऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥**

ந மாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:||
மாயயா (அ) பஹ்ருதக்ஞானா ஆஸுரம் பாவமாச்ரிதா:|| - 15

15. மதிமயக்கம் கொண்டு தீச் செயல் புரியும் மனிதப் பதர்கள், என்னைச் சரண் அடைவதில்லை. இந்த மதிமயக்கம் காரணமாக அவர்கள் அறிவை இழந்து, அசுரத்தனமான வழிகளில் செல்லுகின்றனர்.

**चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।**
**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥**

சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோ (அ)ர்ஜுன ।
ஆர்த்தோ ஜிக்ஞாஸு ரர்த்தார்த்தீ க்ஞானீ ச பரதர்ஷப|| - 16

16. அர்ஜுனா, புண்ணியசாலிகளான நான்கு வகையினர் என்னிடம் பக்தியுள்ளவர்களாக இருக்கிறார்கள். பரத குல சிரேஷ்டனே, அவர்கள் யாரெனில், துன்பத்திற்கு உள்ளானவன்,

---

* ஜெர்மன் கவியான கத்தே (1749—1832) உலக மகாகவிகளில் ஒருவர் என்று புகழ்பெற்றவர். அவர் எழுதிய அரிய கவிதைகளும், நாடகங்களும் இன்றும்கூட சிறந்து விளங்குகின்றன. அவர் கவியாக மாத்திரமல்ல, விஞ்ஞானியாகவும் தத்துவ மேதையாகவும் விளங்கினர்.

14. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு. —குறள்

(இதன் பொருள் - மெய்ப்பொருள் அல்லாததை மெய்ப்பொருள் என்று கருதும் மயக்கம் காரணமாகவே துன்பம் நிறைந்த பிறப்பு ஏற்படுகின்றது.

ஆன்ம ஞானத்தை நாடுவோன், பொருளை நாடுவோன், ஞானி ஆகியவர்களே.*

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

தேஷாம் க்ஞானீ நித்ய யுக்த ஏக பக்திர் விசிஷ்யதே||
ப்ரியோ ஹி க்ஞானினே (அ) த்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:|||| - 17

*17.* அவர்களுள், ஒருமித்த மனத்துடன் என்னிடம் பக்தி கொண்டுள்ள ஞானியே மிகச் சிறந்தவன். நான் ஞானிக்கு அத்தியந்த அன்பன், அவனும் எனக்கு மிகுந்த அன்பன்.

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

உதாரா: ஸர்வ ஏவைதே க்ஞானீ த்வாத்மைவ மே மதம்||
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம்|||| - 18

*18.* இவர்கள் எல்லோரும் மதிப்புக்கு உரியவர்களே. இருந்தாலும், ஞானியை என்னுடைய ஆன்மாவாகவே நான் கருதுகிறேன். ஏனெனில், உண்மையான யோகியின் மகோன்னதமான லட்சியம் என்னையே அடைவதாக இருக்கிறது.

बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

பஹூனம் ஜன்மநாமந்தே க்ஞானவான் மாம் ப்ரபத்யதே|
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மகாத்மா ஸுதுர்லப: || - 19

---

* முதலையிடம் துன்பத்திற்கு உள்ளான கஜேந்திரன் இறைவனைச் சரண் அடைந்ததால் அதிலிருந்து விடுதலை பெறுவது சாத்தியமாயிற்று. பொருளை நாடிய பக்தர்களான சுக்ரீவனுக்கும், துருவனுக்கும் ராஜ்யங்கள் கிடைத்தன. சுகர், நாரதர், பிரஹ்லாதன் முதலியோர் இறைவனைச் சரண் அடைந்து ஞானிகளாயினர்.

18-19. துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று. —குறள்

இதன் பொருள் – முற்றும் துறந்த ஞானியின் பெருமையை அளவிடுவது, உலகில் இதுவரை மாண்டவர்களின் தொகையை எண்ணுவதற்கு ஒப்பாகும்!

*19.* பல ஜன்மங்கள் எடுத்த பின் இறுதியில் ஞானி என்னிடத்தில் தஞ்சம் அடைகிறான். 'எல்லாம் வாசுதேவ மயமே' என்று எண்ணும் இந்த மகாத்மா கிடைப்பது அபூர்வமாகும்.

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

காமைஸ்தை ஸ்தைர் ஹ்ருதக்ஞாஞ: ப்ரபத்யந்தே (அ) ன்ய தேவதா:|
தம் தம் நியம மாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா|| 20

*20.* பல்வேறு ஆசைகளின் காரணமாக ஞானத்தை இழந்தவர்கள், பல்வேறு சடங்குகளில் திடமான நம்பிக்கை வைத்தும், தங்களுடைய இயற்கை சுபாவத்தை அனுசரித்தும் மற்ற தெய்வங்களைச் சரண் அடைகிறார்கள்.

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥

யோ யோ யாம் யாம் தனும் பக்த: ச்ரத்தயா (அ) ர்ச்சிது மிச்சதி|
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம்|| - 21

*21.* நம்பிக்கையுடனும் பக்தியுடனும் ஒருவன் எந்த வடிவத்தைப் பூஜித்தாலும், அதே வடிவத்தில் அவனது நம்பிக்கை உறுதியாக இருக்கும்படி நான் செய்கிறேன்.

[குரான்: "இந்த உலகத்தில் நலனை விரும்புவோனுக்கு, அவ்விதமே இந்த உலக நலனை அளிக்கிறோம்; அந்த உலகத்தில் நலன் அடைய விரும்புவோனுக்கு அந்த உலக நலனை அளிக்கிறோம்."]

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२ ॥

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ் தஸ்யாராதன மீஹதே|
லபதே ச தத: காமான் மயைவ விஹிதான் ஹி தான் ||- 22

*22.* அத்தகைய நம்பிக்கையுடன் அவன் அந்த தெய்வத்தை திருப்தி செய்ய முற்பட்டு, அதன் மூலம் தன் ஆசைகளை நிறைவேற்றிக்கொள்கிறான். இருந்தாலும் உண்மையில், அந்த ஆசைகளை நிறைவேற்றுவது நானே, வேறு யாரும் அல்ல.

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३ ॥

அந்தவத் து பலம் தேஷாம் தத் பவத்யல்பமேதஸாம்|
தேவான் தேவ யஜோயாந்தி மத்பக்தா யாந்தி மாமபி || - 23

*23.* ஆனல், அற்ப மேதைகளான அவர்களுக்குக் கிடைக்கும் பலனும் ஓரளவுக்கு உட்பட்ட தாகவே இருக்கும். மற்ற தெய்வங்களைப் பூஜிப்பவர்கள் அந்த தெய்வங்களை அடைகின்றனர். என்னைப் பூஜிப்பவர்களோ என்னை வந்து அடைகின்றார்கள்.

[இதன் சம்பந்தமாக ராமானுஜாச்சாரியார் கீழ் வருமாறு விளக்கம் கொடுத்துள்ளார்: "பிரம்மாவிலிருந்து மிக மிகச் சிறிய அணு வரையில் உலகம் என்ற பெயரில் இயங்கும் எல்லாப் பொருட்களும் அழியக் கூடியவை. அவற்றை நம்புவது ஒடிந்த கொம்புகளை நம்புவதற்கு ஒப்பாகும். எனவே, கடவுள் ஒருவரையே முற்றிலும் நம்பி வேறு கதியில்லை என்று சரண் அடைந்து விட வேண்டும்."

'சதபத பிராம்மண'த்தில் பின் வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது: "அழியும் தன்மை வாய்ந்தவர்களை வழிபடுவோர், அழிவுள்ள உலகத்தையே அடைவார்கள். அழிவற்றவரை வழிபடுவோர் அழிவில்லாத உலகை அடைவார்கள்."

"அற்பமாக விதைப்பவர்கள் அற்பமாகவே அறுவடை செய்வார்கள்; ஏராளமாக விதைப்பவர்கள் ஏராளமாக அறுவடை செய்வார்கள்." —பைபிள்]

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।
परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥

அவ்யக்தம் வ்யக்தி மாபன்னம் மன்யந்தே மாமபுத்தய: ।
பரம் பாவமஜானந்தோ மமாவ்யய மனுத்தமம்|| 24

*24.* எல்லையில்லாத, அழிவற்ற, எல்லாவற்றையும் விட மேலான இயல்பு உள்ள என்னை அறிந்து கொள்ளாமல், பகுத்தறிவற்றவர்கள் உருவமற்ற என்னை, உருவம் உள்ளவனுக எண்ணுகின்றனர்.

[இந்த சுலோகத்தின் மொழி பெயர்ப்பு சம்பந்தப்பட்ட வரையில் வியாக்கியான கர்த்தாக்களிடையே மிகுந்த வேறுபாடு இருக்கிறது.

இதற்கு சங்கராச்சாரியாரின் வியாக்கியானம் பின் வருமாறு: "நான்தான் எல்லாவற்றிற்கும் மேலான ஆன்மா என்ற எனது உயர்ந்த இயல்பை உணராமல், அறியாமையில் ஆழ்ந்துள்ளவர்கள், நான் எப்போதும் ஜோதிமயமான கடவுளாக இருப்பினும், இதுவரையில் கண்களுக்குத் தோன்ருத நிலையில் இருந்த நான் இப்போது கண்களுக்குத் தோன்றும் நிலையை அடைந்திருப்பதாக எண்ணுகிருர்கள்."

இந்த சுலோகம் முற்றிலும் பிரகிருதியை குறிப்பிடுகிறது என ஹில் கருதுகிருர். அவர் பார்னெட் எழுதியிருப்பவையிலிருந்து கீழ்க்கண்ட மேற்கோளையும் கொடுக்கிருர்: "தவருன கருத்தைக் கொண்டுள்ள சிலர் பிரபஞ்சத்திற்கே அடிப்படையான, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை பெரிதும் ஸ்தூலமான பொருளாகவே கருதுகின்றனர்; நிர்ணயிக்கக் கூடிய உருவம் அற்றவராகவோ அல்லது நிர்ணயிக்கப்பட்டுள்ள உருவம் உடையவராகவோ இருப்பதாகவும் எண்ணுகின்றனர். ஆனல் உண்மையில், கடவுள் பரிபூரணமானவர், ஸ்தூல உருவம் இல்லாதவர்."

இந்த சுலோகத்திற்கு திலகரும், டாக்டர் ராதாகிருஷ்ணனும் செய்துள்ள மொழி பெயர்ப்புக்கு ஒத்ததாக காந்திஜியின் மொழி பெயர்ப்பும் இருக்கிறது. இதற்கு ஆதரவாக எவ்வளவோ கூறலாம். இங்கே குறிப்பிடப்பட்டிருப்பது பிரகிருதியைப் பற்றியதல்ல, கடவுளின் உருவமற்ற அம்சத்தைப் பற்றியதேயாகும். உருவமற்ற கடவுளை வழிபடுவதன் சம்பந்தமாகவே 6, 7, 8–ஆம் அத்தியாயங்களில் கூறப்பட்டிருக்கிறது (அத்தியாயம்-8, சுலேகங்கள் 20-21–ஐ பார்க்கவும்). தவருன எண்ணத்துடன் பல தெய்வங்களையும், பல தெய்வங்கள் என்றே நம்பிக்கைக் கொண்டு பூஜிப்பவர்களையும் பற்றியே இந்த சுலோகம் குறிப்பிடுகிறது. இந்த சுலோகத்தை 9–ஆம் அத்தியாயம், 10–ஆவது சுலோகத்துடன் சேர்த்து வாசிக்க வேண்டும். ஒரே கடவுள் என்ற கொள்கையே அதில் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. கடவுளின் கண்களுக்குத் தோன்றும் அம்சத்தைப் பூஜிப்பது பற்றி பொதுவாக 9-12–ஆம் அத்தியாயங்கள் விவரிக்கின்றன. உருவம் உள்ளவராயினும், இல்லாதவராயினும் அவர்தான் அழிவற்ற, எல்லாவற்றையும் கடந்த பரபிரம்மம். அவர்தான் கடவுள், சிருஷ்டிகர்த்தா, எல்லாவற்றையும் தாங்குபவர், உலகங்களை ஆள்பவர், எல்லோருக்கும் தந்தை, தாய் (அத்தியாயம் -9, சுலோகம்-17). எனினும், அந்த ஒரே கடவுளுக்குச் செய்யப்படும் பூஜையைப் பகிர்ந்து கொள்ள வேறு தெய்வங்களே இல்லை. பல தெய்வங்கள் உண்டு என்பதில் நம்பிக்கையுள்ளவர்களின் போக்கு தவருகும்; மதிமயக்கத்திலேயே அவர்கள் அவ்விதம் நம்புகின்றனர். இவர்களைப்பற்றி முந்திய சுலோகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இஸ்லாம் போன்ற மதத்தைச் சேர்ந்தவர்கள், அத்தகையோரை தவருன கொள்கையுடையவர்கள் என்று இகழ்வதுடன், நம்பிக்கையற்றவர்கள் என்றும் கண்டிப்பார்

கள். ஆனால், பல தெய்வங்கள் உண்டு என்று நம்புவோருக்கும் கீதையில் இடம் உண்டு. எனினும், அவர்கள் அடையும் பலன் ஓர் எல்லைக்கு உட்பட்டதேயாகும் (முந்திய சுலோகத்தைப் பார்க்கவும்). ஏனெனில் அவர்களுடைய வழிபாடும், நோக்கமும் ஓர் எல்லைக்கு உட்பட்டவையாகவே இருக்கின்றன அல்லவா?

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥

நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத: ।
மூடோ(அ)யம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ‖ 25

25. என்னுடைய இணையற்ற சக்தியினால் சிருஷ்டிக்கப்பட்ட யோக மாயையினால் நான் மறைக்கப்பட்டிருக்கிறேன். எனவே, நான் எல்லோருடைய கண்களுக்கும் புலப்படுவதில்லை. மயக்கத்தில் ஆழ்ந்துள்ள இந்த உலகமானது, என்னைப் பிறப்பற்றவன் என்றும், மாறுதலே இல்லாதவன் என்றும் உணருவதில்லை.

இந்த உலகைச் சிருஷ்டிக்கும் சக்தி இறைவனுக்கு இருக்கிறது. எனினும், இந்த உலகத்தினால் அவர் எள்ளளவும் பாதிக்கப்படுவதில்லை. அதனாலேயே அவருக்கு அபூர்வமான சக்தி இருப்பதாக வர்ணிக்கப்படுகின்றது.

[யோகமாயை என்பது, இந்த அத்தியாயம் 14-ஆவது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மாயையைப் போன்றதே. இறைவனின் தெய்விக இயல்பால் மாயை சிருஷ்டிக்கப்பட்டதாக அங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவரது அபூர்வ சக்தியின் சிருஷ்டியே யோக மாயை என்று இங்கே வர்ணிக்கப்பட்டுளது.]

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சார்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கச்சன ‖ 26

---

25. சிலருக்கு சம்சார பந்தங்கள் எல்லாம் தாமாக ஒழிந்து விடுகின்றன. அப்படியிருந்தும் கூட, அவர்கள் தங்களுக்குத் தாங்களே பந்தங்களை உண்டாக்கிக் கொண்டு தாங்கள் கட்டுண்டு கிடக்க முயற்சிக்கிறார்கள்! அவர்கள் முக்தியை விரும்புவதில்லை. பெண்டு பிள்ளைகள் இல்லாத ஒருவன், ஒரு நாய்க்குட்டியையாவது பிடித்து வைத்துக் கொண்டு கொஞ்சுகிறான். மானிட வர்க்கத்தை ஆட்டிவைக்கும் மாயையின் சக்தி அத்தகையது!.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்

26. அர்ஜுன, சென்ற காலத்தில் இருந்த, இப்போது இருக்கிற, இனி வரப்போகிற உயிர்கள் யாவையும் நான் அறிகிறேன். ஆனால், என்னை யாரும் அறியார்.

[ "தெரிய வேண்டியது எது உண்டோ அதையெல்லாம் அவர் அறிவார். ஆனால், அவரை அறிந்தவர் யாரும் இல்லை."* சுவேத உபநிடதம்.]

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परंतप ॥ २७ ॥

இச்சாத்வேஷ ஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத ||
ஸர்வ பூதானி ஸம்மோஹம் ஸர்க்கே யாந்தி பரந்தப || 27

27. பரந்தபா, பாரதா, இந்த உலகில் உள்ள எல்லாப் பிராணிகளும் விருப்பு வெறுப்புகளிலிருந்து எழுந்த நேர்மாறான இரட்டை உணர்ச்சிகளால் மயங்கிக் குழப்பம் அடைகின்றன.

['ஸர்க்கே' என்ற சொல்லுக்கு 'பிறவியிலேயே' என்றோ அல்லது 'இந்த உலகில்' என்றோ அர்த்தம் கூறலாம். ஆனால் இதற்கு 'பிறவியிலேயே' என்றே சங்கரார்ச்சாரியார் அர்த்தம் கூறியிருக்கிறார். அவர் இந்த சுலோகத்திற்கு மிகவும் உதவியாக இருக்கக் கூடிய விளக்கமும் கொடுத்துள்ளார். அதை நான் இங்கே சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன்: "எல்லா உயிர்களிடத்திலும் விருப்பு வெறுப்பு உணர்ச்சிகளே மனமயக்கத்தை உண்டாக்குகின்றன. அத்தகைய மயக்கம் உள்ளவர்களுக்கு, உலக சம்பந்தமான பொருள்களைப் பற்றிய உண்மையே தெரியாது. அப்படியிருக்க, அவர்கள் ஆன்மாவைப் பற்றிய உண்மையை எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்? எல்லாப் பிராணிகளும் இந்த மயக்கத்துடனேயே பிறக்கின்றன. இந்த மயக்கமானது அவர்களுடைய உள்ளத்தை ஆன்மாவான என்னிடமிருந்து திருப்பி, உலகத்தில் உள்ள பொருட்களை நாடும்படி செய்கிறது. ஆனால் புண்ணியசாலிகள் அந்த மயக்கத்தை வென்று என்னை அடைய முற்படுகிறார்கள்."]

येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥ २८ ॥

யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம் ।
தே த்வந்த்வ மோஹ நிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா: || 28

---

* स वेत्ति वेद्यं न च तस्यास्ति वेत्ता । श्वेत. ३–१९
ஸ வேத்தி வேத்யம் ந ச தஸ்யாஸ்தி வேத்தா|
சுவேத உபநிடதம்–3, 19

28. எனினும், பாவங்களைப் போக்கிக் கொண்ட புண்ணிய சாலிகள், இருமைகளின் மயக்கத்திலிருந்து விடுபட்டு உறுதியான நம்பிக்கையுடன் என்னை வழிபடுகிறார்கள்.

जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

ஜரா மரண மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே ।
தே பிரஹ்ம தத் விது: க்ருத்ஸ்னம் அத்யாத்மம் கர்ம சாகிலம் ‖ 29

29. என்னைச் சரண் அடைவதன் மூலம் மூப்பிலிருந்தும் மரணத்திலிருந்தும் விடுதலை பெற முயற்சிப்போர், பிரம்மம், அத்யாத்மம், கர்மம் ஆகிய எல்லாவற்றையும் பற்றி பூரணமாக அறிகின்றனர்.

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥

ஸாதி பூதாதி தைவம் மாம் ஸாதியக்ஞம் ச யே விது: ।
ப்ரயாணகாலே(அ)பி ச மாம் தே விதுர்யுக்த சேதஸ: ‖ 30

30. அதிபூதம், அதிதைவம், அதி யக்ஞம் ஆகியவற்றுடன் கூடியவனாக என்னை யார் அறிகின்றார்களோ அவர்கள், சமத்துவ நோக்கத்துடன் கூடிய மனம் உடையவர்களாக இருந்து, இறக்கும் தறுவாயிலும் என்னை அறிகின்றார்கள்.*

29-30-ஆம் சுலோகங்களில் உள்ள அத்யாத்மம், அதி பூதம், அதிதைவம், அதியக்ஞம் ஆகிய சொற்களின் பொருள் அடுத்த அத்தியாயத்தில் விவரிக்கப்படுகிறது. இவற்றின் கருத்து என்னவெனில், உலகில் உள்ள மூலை முடுக்குகள் யாவும் பிரம்ம மயமாக இருக்கின்றன, எல்லாக் கர்மங்களுக்கும் அவர்தான் கர்த்தா. இந்த ஞானமும் நம்பிக்கையும் உள்ளவன் தன்னை பிரம்மத்தினிடம் முற்றிலும் அர்ப்பணம் செய்துகொண்டு விடுகிறான், இந்த உலகிலிருந்து மறையும் போது அவன் பிரம்மத்துடன் ஒன்றாகி

---

* எப்போதும் 'ராதா கிருஷ்ணா' என்று சொல்லும் கிளி, பூனை அதன் மீது பாய்ந்தால் கீச்சு மூச்சு என்று கத்த ஆரம்பித்துவிடும். அதுபோலவேயே உறுதியான பக்தியில்லாதவர்கள் வாயளவில் பகவானின் நாமாவைச் சொன்னாலும், மரண காலத்தில் கிளியைப் போன்ற நிலையையே அடைகின்றனர்.
—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

விடுகிறான் என்பதே. பிரம்மத்தைக் கண்ட அவனது எல்லா ஆசைகளும் ஒழிந்துவிடுகின்றன. அவன் மோட்சத்தை அடைகிறான்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे ज्ञानविज्ञानयोगो नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோக சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
க்ஞான விக்ஞான யோகோநாம ஸப்தமோ (அ) த்யாய: - 7

ஸ்ரீபகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'ஞான விஞ்ஞான
யோகம்' என்ற ஏழாவது
அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# பிரம்ம யோகம்

## எட்டாம் அத்தியாயம்

பரம்பொருளின் இயல்பைப்பற்றி இந்த அத்தியாயத்தில் மேற்கொண்டு விளக்கப்படுகிறது.

अर्जुन उवाच

किं तद् ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १ ॥

அர்ஜுன உவாச
கிம் தத் பிரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம|
அதிபூதம் ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே|| 1

*அர்ஜுனன் சொன்னான்:*

*1. புருஷோத்தமா, பிரம்மம் என்றால் என்ன? அத்யாத்மம் என்றால் என்ன? கர்மம் எது? அதிபூதம் என்று கூறப்படுவது எது? அதிதைவம் எது?*

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥

அதியக்ஞ: கதம் கோ (அ)த்ர தேஹே (அ)ஸ்மின் மதுசூதன|
ப்ரயாணகாலே ச கதம் க்ஞேயோ(அ)ஸி நியதாத்மபி: || 2

*2. இங்கே இந்த உடலில் அதியக்ஞன் யார்? அவன் எப்படி அதியக்ஞன் ஆகிறான்? புலன்களை வென்றவன் இறக்கும் போது தங்களை எப்படி அறிகிறான்?*

श्रीभगवानुवाच

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

ஸ்ரீபகவான் உவாச
அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ (அ) த்யாத்மமுச்யதே।
பூதபாவோத் பவகரோ விஸர்க்க: கர்மஸம்க்ஞித:॥ 3

ஸ்ரீ பகவான் சொன்னர்:

3. எல்லாவற்றிற்கும் மேலானதும், அழிவற்றதுமே பிரம்மம். அது ஒவ்வொரு உடலிலும் வியாபித்திருப்பதே அத்யாத்மம். எல்லா உயிர்களும் சிருஷ்டிக்கப்படும் சிருஷ்டி நடவடிக்கையே கர்மம் என்று கூறப்படுகிறது.

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷச்சாதி தைவதம்।
அதி யக்ஞோ (அ) ஹ மேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர॥ 4

4. உடல் எடுத்தவர்களில் சிரேஷ்டனே, என்னுடைய அழியும் உருவமே அதிபூதம். அதிதைவதம் என்பது அந்தந்த உருவத்தில் உள்ள ஜீவான்மாவே. யக்ஞத்தினல் தூய்மையாக்கப்பட்டு இந்த உடலில் இருக்கும் நானே அதியக்ஞன்.

அழிவற்ற, உருவமற்ற பரம் பொருளிலிருந்து அழியும் தன்மையுள்ள அணுவரையில் உலகத்தில் உள்ள எல்லாம் பரமாத்மாவே, பரமாத்மாவின் சின்னமே. அப்படியிருக்க, நிலையற்ற மனிதன் இறைவனின் கட்டளைப்படியும், எல்லாக் கர்மங்களையும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்வதையும் விட்டுவிட்டு, எல்லாவற்றிற்கும் தானே கர்த்தா என்று ஏன் அகந்தை கொள்ள வேண்டும்?

[1-4. மேற்கண்ட நுணுக்கமான சொற்களைப் பற்றி கவலைப் படாதவர்களுக்காக, இந்த நான்கு சுலோகங்களின் கருத்தையும் காந்திஜி தமது குறிப்பில் சுருக்கமாகக் கொடுத்துள்ளார். ஆன்மிக விஷயங்களில் ஆழ்ந்த பற்றுள்ள ஒரு நண்பர், மேற்கண்ட சுலோகங்களில் ரகசியமான மந்திரங்களைப் போல் தோன்றும் சொற்களுக்கு விளக்கம் கொடுத்துள்ளார். அந்த விளக்கம் அவ்வார்த்தைகளின் அர்த்தத்தைத் தெளிவு படுத்துவதாக இருக்கின்றது. எல்லையற்ற, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் ஓர் எல்லைக்கு உட்பட்ட நிலையை அடைவதும், பின்னர் அந்த நிலையிலிருந்து மீண்டும் எல்லையற்ற நிலையை அடைவதும் அந்த சுலோகங்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

1. பரம் பொருள், முதலாவ்தாக உருவமற்ற, தோன்றாத நிலையில் உள்ள, கட்டுதிட்டங்களுக்கோ, எல்லைக்கோ உட்படாத நிலையில் இருக்கிறது.

2. பின்னர் அதன் அம்சங்களில் ஒன்று வெளியாகிறது. அந்த அம்சம்தான் ஆதியான தோன்றாத நிலையில் உள்ள பிரகிருதி. அந்தப் பிரகிருதியே இங்கே அத்யாத்மம் என்று கூறப்படுகிறது,.

3. பிரகிருதி பிறகு செயலில் ஈடுபடுகின்றது. அதன் குணங்களின் சம நிலையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வே கர்மம் அதாவது உழைப்பு, செயல் ஆகும்.

4. இந்த நடவடிக்கைகளில் அடுத்தபடியாக, உருவத்துடனும் பெயருடனும் உண்டாகும் எண்ணிக்கையற்ற உயிர்களே. இவற்றைத்தான் அதிபூதம் என்கிறோம்.

5. பின்னர் பரம்பொருள் எல்லா உயிர்களிலும் வியாபித்து 'தான்' என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது; அதாவது ஓர் எல்லைக்கு உட்பட்டதாகிறது. இதுவே அதிதைவம் ஆகும்.

6. எனினும், எல்லைக்குட்பட்ட நிலையை அடைந்த அது, தூய்மையான தியாகத்தின் மூலம் ஆதியில் இருந்த எல்லையற்ற நிலையை அடைவதற்கான சக்தியுடையதாக இருக்கிறது. உடல் மறையும் போது ஏற்படும் இந்த ஆன்ம தியாகம், எல்லைக்குட்பட்ட ஆன்மாவானது எல்லைக்கு உட்படாத பரம்பொருளுடன் கலப்பதே அல்லது ஐக்கியம் அடைவதேயாகும்.

சுருங்கக் கூறுவதாயின், தியாகத்தின் ஒரு சுழற்சியே அவ்விதம் வர்ணிக்கப்பட்டுளது. முதலில் எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் தன்னைத் தியாகம் செய்து கொள்கிறது. இறுதியாக மனிதன் பரம்பொருளுடன் ஐக்கியம் அடைவதற்காகத் தன்னைத் தியாகம் செய்து கொள்கிறான். இதே தியாகத்தின் சுழற்சியையே அத்தியாயம் - 3, சுலோகம் - 15 குறிப்பிடுகின்றது.

अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।

यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா களேவரம் ।

ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: ‖ 5

---

5. கிளிக்கு வயதாகிவிட்டால் நாக்கு தடித்து விடும். அப்போது அதற்கு சொல்லிக் கொடுத்தாலும் பேச்சு வராது. அது போலவே வயது சென்ற பின்னர் இறைவனிடத்தில் மனத்தைச் செலுத்த பயிற்சி செய்து கொள்ள முடியாது. இளம் பருவத்திலிருந்தே பயிற்சி செய்தால், இறுதிக் காலத்தில் இறைவனை மனம் நாடும். —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

5. இறுதி நேரத்தில் யார் என்னையே நினைத்த வண்ணம் இந்த உடலை விட்டுச் செல்லுகிறானோ, அவன் என்னுள் பிரவே சித்துவிடுகிறான். இதில் சந்தேகமே இல்லை.

यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்யந்தே களேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித: ‖ 6

6. கௌந்தேயா, அல்லது ஒருவன் எப்போதும் எந்த வித உருவத்தை இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அதையே அவன் இறக்கும் நேரத்தில் நினைக்கிறான். எனவே, அந்த உருவத்தையே அடைகிறான்.

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७ ॥

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச ।
மய்யர்ப்பித மனோ புத்திர் மாமேவைஷ்யஸ் யஸம்சயம் ‖ 7

7. எனவே, எப்போதும் என்னையே நினைத்துக் கொண்டு போர் புரிவாயாக. உன்னுடைய மனத்தையும் அறிவையும் நீ என்னிடமே நிலைநிறுத்துவதால், நிச்சயமாக நீ என்னையே அடைவாய்.

[போர் புரியும்படி அர்ஜுனனை பகவான் வற்புறுத்திய போதெல்லாம், அது அவர்கள் முன்னிலையில் நடக்கவிருந்த உண்மையான யுத்தத்தை மாத்திரம் குறிக்கவில்லை; தார்மிக யுத்தத்தையும் ஆன்மிக யுத்தத்தையும் குறிக்கின்றது. மனிதன் இந்த உலகில் நடத்த வேண்டியிருப்பது தார்மிக, ஆன்மிகப் போர்தான் அல்லவா?

---

5-6. இறக்கும் தறுவாயில் பரமேசுவரனை நினைக்க வேண்டியது அவசியம் என்று பகவான் 5-ஆம் சுலோகத்தில் கூறுகிறார். இறக்கும் தறுவாயில் மாத்திரம் அவரை நினைத்தால் போதும் என்ற தவறான எண்ணத்துக்கு அது இடம் அளிக்கக் கூடும். அதனாலேயே, ஆயுள் முழுவதும் எதை நினைத்துக் கொண்டிருக்கிறானோ அது இறக்கும்போது மனத்தை விட்டு அகலுவதில்லை என்று 6-ஆம் சுலோகத்தில் கூறப்பட்டிருக்கிறது. எனவே, ஆயுள் முழுவதும் இறைவனை நினைத்தும் பூஜித்தும் வந்தால்தான், இறக்கும் தறுவாயிலும் அந்த எண்ணம் ஏற்படும் என்பதை 6-ஆம் சுலோகம் தெளிவாக்கி யிருக்கிறது.

—திலகர்

ஏசுநாதர் கூறிய வார்த்தைகளைப் பாருங்கள்: "எனக்குப் பின்னால் வருபவன் யாராயினும், அவன் தன்னைத் துறந்து, தினந்தோறும் தன் சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைப் பின் தொடர்ந்து வருவானாக."

தினந்தோறும் ஒவ்வொரு விநாடியும் சிலுவையை எடுத்துச் செல்லவேண்டும் அதாவது இறைவனை நினைக்கவேண்டும் என்பதே இங்கே வற்புறுத்தப்பட்டிருக்கிறது. இந்த அத்தியாயம் 14-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும்.

காந்திஜி 8-7-1933 "ஹரிஜனில்" வருமாறு எழுதியுள்ளார்: "இடைவிடாத முயற்சியே வாழ்க்கையாகும். நம்மிடத்தில் எப்போதும் ஒரு சூறுவளி அடித்துக் கொண்டிருக்கிறது. கவர்ச்சிகளை எதிர்த்துப் போராடவேண்டியது நம்முடைய நிரந்தரமான கடமையாகும். கீதை, இதைப் பல இடங்களிலும் வற்புறுத்திக் கூறியிருக்கிறது."]

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

அப்யாச யோக யுக்தேன சேதஸா நான்யகாமினா ।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥ 8

*8.* பார்த்தா, இடைவிடாத பயிற்சியினால், வேறு எங்கும் அலையாமல் உறுதியுடன் நிலைத்திருக்கும் சித்தத்துடன் ஒளிமயமான பரம்பொருளை யார் தியானிக்கிறானோ, அவன் அவரையே அடைகிறான்.

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

கவிம் புராணம் அனுசாஸிதாரம்
அணோரணீயாம்ஸ மனுஸ்மரேத் ய: ।
ஸர்வஸ்ய தாதாரமசிந்த்யரூபம்
ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் 9

प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १० ॥

ப்ரயாணகாலே மனஸா(அ)சலேன
பக்த்யா யுக்தோ யோக பலேன சைவ ।
ப்ருவோர் மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷ முபைதி திவ்யம் ॥ 10

*9-10.* முற்றும் உணர்ந்த முனிவனை, ஆதியான பரம்பொருளை, எல்லாவற்றையும் ஆளுபவனை, அணுவுக்கும் சிறிய அணுப் போன்றவனை, எல்லாவற்றையும் தாங்குபவனை, கற்பனைக்கு எட்டாதவனை, சூரியனைப் போல் மகத்துவம் பொருந்தியவனை, இருளைக் கடந்தவனை, யார் இறக்கும் தறுவாயில் நிலைத்த மனத்துடனும், பக்தியுடனும், யோக சக்தியால் சரியாக புருவங்களுக்கு இடையே மூச்சை நிலை நிறுத்தியும் தியானம் செய்கின்றானோ, அவன் ஜோதிமயமான அந்தப் பரம்பொருளை அடைகிறான்.

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத் யதயோ வீதராகா: ।
யதிச்சந்தோ ப்ரஹ்ம சர்யம் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே 11

*11.* வேதங்களை அறிந்தவர்கள் எதை அழியாத பொருள் என்று கூறுகிறார்களோ (அல்லது வேதங்களை அறிந்தவர்கள் எந்த வார்த்தையை அடிக்கடி கூறுகிறார்களோ), காமம், கோபம் போன்றவற்றிலிருந்து விடுதலை அடைந்த முனிவர்கள் எதில் பிரவேசிக்கிறார்களோ, எதை விரும்பி அவர்கள் பிரம்மச்சரியத்தை மேற்கொள்கிறார்களோ அந்த லட்சியத்தை (அல்லது வார்த்தையை) உனக்கு நான் சுருக்கமாகக் கூறுகிறேன்.

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥

ஸர்வ த்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்யச ।
மூர்த்னியாதா யாத்மன: ப்ராணம் ஆஸ்திதோ யோகதாரணும் ॥ 12

*12.* எல்லா (இந்திரியங்களின்) வாயில்களையும் அடைத்துவிட்டு, மனத்தை வேறு எங்கும் செல்ல முடியாதவாறு இருதயத்தில் கட்டுப்படுத்தி, தலைக்குள் மூச்சை நிலைநிறுத்தி, முற்றிலும் யோக தியானத்தில் ஈடுபட்டவனாக இருந்துகொண்டு;

[12. கீதை, ஆருவது அத்தியாயத்திலும் இங்கேயும் மிக வும் நுட்பமான யோகப் பயிற்சிகளைத் தவிர்த்துவிட்டு, அவற்றை எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு எளிய முறையில் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது. யோக முறையைப் பற்றி இந்த சுலோகம் மேலெழுந்தவாரியாகவே குறிப்பிடுகிறது. ஆனல் இது, டாக்டர் ராதாகிருஷ்ணனல் விவரிக்கப்பட்டுளது. அவர் பிரம்ம சூத்திரத்திலிருந்து பின் வருமாறு மேற்கோள் கொடுத்துள்ளார்: "ஸுஷும்ன நாடி உச்சி மண்டைக்குச் செல்லுகிறது. மரணம் நெருங்கும்போது, விஷயம் அறிந்த ஆன்மா, கடவுளின் அருளால் இருதயத்தின் இணைப்பை அறுத்து, ஸுஷும்ன நாடியின் வழியாகப் பிரவேசித்து, மண்டையைப் பிளந்துகொண்டு உடலை விட்டு வெளியே செல்லுகின்றது."

மைத்ரி உபநிடதம் கூறுதாவது: "இந்த ஸுஷும்ன நாடியின் வழியாக மூச்சையும், 'ஓம்' என்ற மந்திரத்தையும், மனத்தையும் இணைத்துவிட்டால் ஒருவன் உயர்ந்த நிலையை (மோட்சத்தை) அடையலாம்."

இவ்விஷயத்தின் சாரம் முழுவதும் 13-ஆம் சுலோகத்தில் அடங்கியிருக்கிறது. இதை 6, 14-ஆம் சுலோகங்களுடன் சேர்த்து வாசித்தால், பின்வரும் அர்த்தம் தெளிவாகின்றது. அதாவது, இறக்கும் தறுவாயில் சிந்தனை முழுவதும் கடவுளைத் தவிர வேறு எதிலும் லயிக்காத விதத்தில் ஒருவர் வாழவேண்டும். அவரது சிந்தனைகள் கடவுளிடம் லயிப்பதற்கு 'ஓம்' என்ற தெய்விக மந்திரம் உதவியாக இருக்கிறது.]

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३ ॥

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ 13

13. ஒரே வார்த்தையில் பிரம்மத்தை குறிக்கும் 'ஓம்' என்ற மந்திரத்தை உச்சரித்துக் கொண்டும், என்னையே இடைவிடாது சிந்தித்த வண்ணமும் யார் உடலை விடுகின்ருனே அவன், எல்லாவற்றிற்கும் மேலான நிலையை அடைகிருன்.

[11-13. 11-ஆம் சுலோகம் கட உபநிடதத்தில் உள்ள சுலோகத்தைப் பெரிதும் அப்படியே திருப்பிக் கூறியிருக்கிறது. கட உபநிடதம் கூறுவதாவது: "எல்லாவேதங்களும் எதை அடிக்கடி கோஷிக்கின்றனவோ, எல்லாத் தவங்களும் எதைப் பற்றிக் குறிப்பிடுகின்றனவோ, எதில் ஆசைவைத்து மனிதர்கள் பிரம்மச்சரியத்தை அனுசரிக்கின்ருர்களோ, அந்த லட்சியத்தை (அல்லது

வார்த்தையை) நான் உனக்கு சுருக்கமாகக் கூறுகிறேன். அது தான் 'ஓம்' என்பதாகும்.''*

தெய்விக மந்திரமான 'ஓம்' என்பதே லட்சியம் என்றும், 'ஓம்' என்பதே தியானம் செய்வதற்கான முறை என்றும் உபநிட தங்கள் வர்ணிக்கின்றன. 'அக்ஷரம்' என்பதற்கு அழிவற்றது, சொல் என்ற இரண்டு அர்த்தங்களும் உண்டு. அதுபோலவே 'பதம்' என்பதற்கு லட்சியம், சொல் என்ற இரண்டு அர்த்தங்க ளும் உண்டு.

இந்த தியான முறையை முண்டக உபநிடதம் பின்வருமாறு மிகவும் அழகான உவமையுடன் வர்ணித்திருக்கிறது:

''தியான முறை வில் வித்தைப் பயிற்சிக்கு ஒப்பாகும். அதாவது ஆன்மாவாகிற அம்பை, பக்தியினால் கூராக்கி ஓம் என்ற வில்லிலிருந்து பிரம்மத்தைக் குறிவைத்துவிட வேண்டும். அந்த அம்புக்கு பிரம்மம்தான் குறிக்கோள் ஆகும். மனத்தைச் சிதறவிடாமல் அதிலேயே லயித்துவிட்டால், அம்பு அந்த இலக்கை ஊடுருவிச் சென்று அதனுடன் ஐக்கியம் அடைந்து விடுகிறது.''*(2)

'ஓம்' என்ற தெய்விக மந்திரத்தை ஜபம் செய்து தியானத்தில் ஈடுபடுவதால், பாவங்கள் தொலைந்து ஒருவன் பரிசுத்த மாகிவிடுவதாகவும், அந்த மந்திரம் பாவங்களைப் போக்கும் ஆன்மிக சக்திவாய்ந்த ரட்சையாக இருக்கிறது என்றும் பிரச்ன உப நிடதம் வர்ணிக்கின்றது.

மாண்டூக்ய உபநிடதம் முழுவதும், மந்திர சக்தி வாய்ந்த ஓங்காரத்தின் மகிமையைப் பற்றிய வர்ணனையே அடங்கியிருக்கிறது.

அ, உ, ம ஆகிய எழுத்துக்கள் அடங்கிய ஓங்காரம் தியானத்திற்கான சாதனமாகவும், லட்சியமாகவும் இருக்கிறது. அது பிரம்மத்தைக் குறிக்கிறது. பிரகிருதி, ஆன்மா, பரம்பொருள் எல்லாவற்றையும் அது குறிக்கிறது. 'ஓம் என்பதே பிரம்மம், ஓம் என்பதே எல்லாம்' என்று தைத்திரீய உபநிடதமும் கூறுகின்றது.

---

* கட உபநிடதத்தின் மூல சுலோகத்தை 252-ஆம் பக்கத்தில் பார்க்கவும்.

* (2) प्रणवो धनुः शरो ह्यात्मा । ब्रह्म तल्लक्ष्यमुच्यते ॥
अप्रमत्तेन वेद्धव्यं । शरवत्तन्मयो भवेत् ।

—मुंडक २-२-४

ப்ரணவோ தனு : சரோ ஹ்யாத்மா| ப்ரஹ்ம தல்லக்ஷ்ய முச்யதே||
அப்ரமத்தேன வேத்தவ்யம்| சரவத் தன்மயோ பவேத்||

—முண்டக உபநிடதம் - 2-2-4

ஓங்காரத்தின் இந்த மகிமைகளையெல்லாம் உணர்ந்து, தியானத்தின் தெய்விக சின்னமாக அதை உபயோகிக்க வேண்டும். இறக்கும் போது ஓங்காரத்தை எல்லையற்ற பரம்பொருளுடன் இணைத்து தியானம் செய்பவன் மிகுந்த பாக்கியசாலியாக இருக்க வேண்டும்.*]

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

அனன்ய சேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: ।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்ய யுக்தஸ்ய யோகின: ‖ 14

*14.* பார்த்தா, யார் எப்போதும் என்னிடம் பக்தியுடன் மனத்தை வேறு எதிலும் செலுத்தாமல் இடைவிடாது என்னையே நினைக்கின்றானோ, அந்த யோகி எளிதில் என்னை அடைவதில் வெற்றிபெறுகிறான்.

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

மா முபேத்ய புனர்ஜன்ம து:க்காலய மசாச்வதம்।
நாப்னுவந்தி மஹாத்மான: ஸம்ஸித்திம் பரமாம் கதா: ‖ 15

*15.* என்னை அடைந்த மகான்கள், எதற்கு மேல் உயர்ந்த நிலை இல்லையோ அந்த அப்பழுக்கற்ற நிறை நிலையை (மோட்சத்தை) அடைகின்றனர். நிலையற்ற, துன்பத்திற்கு இருப்பிடமான மறுபிறப்பை அவர்கள் அடைவதில்லை.

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

ஆப்ரஹ்ம புவனால்லோகா: புனராவர்த்தினோ (அ)ர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ‖ 16

---

* ॐ इति ब्रह्म । ॐ इतीदं सर्वं । तैत्तिरीय १-८-१

ஓம் இதி ப்ரஹ்ம| ஓம் இதீதம் ஸர்வம்| தைத்திரீய உபநிடதம்-1.8.1

16. அர்ஜுனா, பிரம்மாவின் உலகத்திலிருந்து கீழே எல்லா உலகங்களையும் சேர்ந்தவர்கள் மீண்டும் பிறந்துதான் ஆகவேண்டும். ஆனால் என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பு இல்லை.

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः॥ १७॥

ஸஹஸ்ரயுக பர்யந்தம் அஹர் யத் ப்ரஹ்மணோ விது:।
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தே(அ)ஹோராத்ரவிதோ ஜனா:॥ 17

17. ஆயிரம் யுகங்கள் சேர்ந்ததே பிரம்மாவின் பகல் என்பதையும், ஆயிரம் யுகங்கள் சேர்ந்ததே பிரம்மாவின் இரவு என்பதையும் யார் அறிகிறார்களோ அவர்களே, பகல் என்றால் என்ன என்பதையும், இரவு என்றால் என்ன என்பதையும் அறிந்தவர்கள் ஆகின்றனர்.

இதன் கருத்து என்னவெனில், 12 மணிநேரம் கொண்ட நமது பகலும், 12 மணிநேரம் கொண்ட நமது இரவும், மகத்தான கால சக்கரத்தின் ஒரு விநாடியில் எத்தனை எத்தனையோ, மடங்கு குறைந்த அம்சமேயாகும். எனவே, மிக மிகக் குறைந்த சில விநாடி நேரத்தில் போகங்களை நாடிச் செல்லுவது கானல் நீரை நாடிச் செல்லுவதுபோல் வீண் மன பிரமையே. குறுகிய காலமான இந்த விநாடிகளை வீணாக்குவதைவிட, இந்தக் குறுகிய காலத்தை மனித வர்க்கத்திற்குத் தொண்டு புரிவதன் மூலம் கடவுளுக்குத் தொண்டு செய்வதில் நாம் அர்ப்பணம் செய்யவேண்டும். மற்றொரு புறம், நமது காலம் எல்லையில்லாத காலமாகிய சமுத்திரத்தில் ஒரு துளியேயாகும். எனவே, இங்கே நாம் நமது லட்சியத்தை அடைய அதாவது ஞானத்தைப் பெறத் தவறிவிடுவோமாயின், நாம் சோர்வு அடைய வேண்டிய அவசியம் இல்லை; நாம் பொறுமையுடன் நமது சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके॥ १८॥

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹ ராகமே।
ராத்ரியாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த ஸம்க்ஞகே॥ 18

18. பகல் வரும்போது கண்களுக்குத் தோன்றா நிலையிலிருந்தவை யாவும் தோன்றும் நிலையை அடைகின்றன. இரவு வரும்

போது அவை தோன்ரு நிலையில் உள்ளவற்றுடன் மீண்டும் லயித்து விடுகின்றன.

இதை அறிந்த பின், மனிதன் எந்தப் பொருட்களின் விஷயத்திலும் தனக்கு சக்தியே இல்லை என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். பிறப்பு, இறப்புச் சுழலானது இடைவிடாமல் இயங்கி வருகிறது.

[17-18. உலகத்தின் கால அளவையொட்டி சம்பிரதாயமாக இருந்துவரும் நம்பிக்கையையே இந்த சுலோகங்கள் குறிக்கின்றன. அதன்படி உத்தராயணம், தட்சிணாயனம் ஆகிய இரண்டும் தெய்வங்களுக்கு ஒரு பகலும் இரவும் ஆகும். எனவே, மனிதரின் 360 ஆண்டுகள் தெய்வங்களுக்கு ஒரு வருடம் ஆகின்றன. காலமானது, நான்கு யுகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கிருத யுகத்தில் 4000 வருடங்களும், திரேதா யுகத்தில் 3000 வருடங்களும், துவாபர யுகத்தில் 2000 வருடங்களும், கலி யுகத்தில் 1000 வருடங்களும் அடங்கியுள்ளன. இந்த யுகங்களுக்கு இடையே 2000 ஆண்டுகள் இடைக்காலமாக இருக்கின்றன. எனவே ஒரு தடவை நான்கு யுகங்கள் முடிய 12,000 ஆண்டுகள் செல்லுகின்றன. இவை, தெய்வங்களின் வருடங்கள்! அவற்றை மனித வருடங்களாக மாற்றினால், $12{,}000 \times 360 = 43{,}20{,}000$ வருடங்கள் ஆகின்றன. இதுதான் தெய்வங்களுக்கு ஒரு யுகமாகும். இப்படிப்பட்ட ஆயிரம் யுகங்கள் சேர்ந்தால் பிரம்மாவுக்கு ஒரு நாள் ஆகிறது; அதாவது பிரம்மாவுக்கு ஒரு நாள் என்பது, 4, 32,00,00,000 (432) கோடி மனித வருடங்கள் ஆகும். இதுதான் கல்பம் என்று கூறப்படுகிறது. (அத்தியாயம்-9, சுலோகம் 7-ஐப் பார்க்கவும்) ஒரு கல்பத்திற்கு ஒரு முறை சிருஷ்டி ஆரம்பமாகிறது.

இந்தக் கணக்கு வெறும் கற்பனையாகத் தோன்றலாம். எனினும், மனித வர்க்க ஆராய்ச்சி நிபுணரான டாக்டர் புரும் எழுதியுள்ள நூல் சமீபத்தில் வெளியாகியிருக்கிறது. அதில் அவர், மனிதன் சென்ற 150 கோடி வருடங்களாக வளர்ச்சி பெற்று வந்திருப்பதாக மதிப்பிட்டுள்ளார்.]

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते।
राज्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥१९॥

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ரியாகமே (அ)வச: பார்த்த ப்ரபவத்யஹ ராகமே ॥ 19

19. பார்த்தா, இதே ஜீவராசிகளின் கூட்டம் மீண்டும் மீண்டும் பிறக்கின்றன. அவை விரும்பினாலும் விரும்பாவிட்டா

டாலும், இரவு வரும்போது அவை மறைந்துவிடுகின்றன; பகல் வரும்போது மீண்டும் பிறக்கின்றன.

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति॥२०॥

பரஸ்தஸ்மாத் து பாவோ(அ)ன்யோ (அ)வ்யக்தோ (அ)வ்யக்தாத் ஸநாதன: ।
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந வினச்யதி ‖ 20

20. தோன்றாத நிலையில் உள்ள அதைக் காட்டிலும் மேலான தோன்றாத நிலையில் உள்ள பரம்பொருள் இருக்கிறது. அது நிரந்தரமானது. எல்லா ஜீவராசிகளும் அழியும்போது கூட அது அழிவதில்லை.

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम्।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम॥२१॥

அவ்யக்தோ(அ)க்ஷர இத்யுக்தஸ் தமாஹு: பரமாம் கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம ‖ 21

21. அழிவற்ற, கண்ணுக்குத் தெரியாத இந்தப் பரம்பொருளை அடைவதே எல்லாவற்றிற்கும் மேலான லட்சியமாகும். அந்த லட்சியத்தை அடைந்தவர்கள் திரும்பி வருவதில்லை. அது தான் என்னுடைய மகோன்னதமான இருப்பிடம் (பரம பதம்) ஆகும்.

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया।
यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम्॥२२॥

புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா ।
யஸ்யாந்த: ஸ்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் ‖ 22

22. பார்த்தா, எல்லாவற்றிற்கும் மேலான இந்தப் பரம்பொருளை, சஞ்சலமற்ற ஆழ்ந்த பக்தியினால் அடையலாம். அதில் தான் எல்லா உயிர்களும் வாழ்கின்றன. அதனால்தான் எல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

[22. 'வியாபிக்கப்பட்டிருக்கின்றன' ('ததம்') என்பதற்கு, அத்தியாயம் - 2, சுலோகம் - 17-க்கு நான் கொடுத்துள்ள குறிப்பைப் பார்க்கவும்.]

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

யத்ர காலே த்வனுவ்ருத்திம் ஆவ்ருத்திம் சைவ யோகின:|
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப || 23

23. பரதவம்சத்தில் சிறந்தவனே, யோகிகள் இந்த உலகத்திலிருந்து சென்ற பின், சென்றவர்கள் எப்போது திரும்பி வருவதில்லை என்பதையும், சென்றவர்கள் எப்போது மீண்டும் வந்து பிறக்கிறுர்கள் என்பதையும் இப்போது உனக்கு நான் கூறுகிறேன்.

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

அக்னிர் ஜ்யோதி ரஹ: சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்|
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜனு: || 24

24. பிரம்மத்தை அறிந்த யோகிகள் அக்னி, ஒளி, பகல், சுக்ல பட்சம், உத்தராயணம் ஆகியவற்றில் மரணம் அடைந்து பிரம்மத்தை அடைகிறுர்கள்.

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணுயனம் |
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்த்ததே || 25

25. புகை, இரவு, கிருஷ்ண பட்சம், தக்ஷிணுயனம் ஆகியவற்றில் மரணம் அடையும் யோகி, சந்திரனுடைய ஒளியை அடைந்து மீண்டும் உலகில் வந்து பிறக்கிறுன்.

இந்த இரண்டு சுலோகங்களின் அர்த்தத்தை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. அவை, கீதையின் உபதேசத்திற்குப் பொருத்தமானவையாகத் தோன்றவில்லை. யாருடைய உள்ளம் பக்தியினுல் பணிவுள்ளதாக இருக்கிறதோ, யார் பற்றற்று செயல்

புரிவதில் ஈடுபட்டிருக்கிறனே, யார் சத்தியத்தைக் கண்டவனே, அவன் எப்போது இறந்தாலும் மோட்சத்தை அடைகிறான் என்று கீதை உபதேசிக்கின்றது. ஆனால், அந்த உபதேசத்திற்கு இந்த சுலோகங்கள் முரணைத் தோன்றுகின்றன. ஒருவேளை அவற்றிற்கு பரந்த முறையில் இவ்விதம் விளக்கம் கொடுக்கலாம்: தியாகம் செய்தவன், ஞான ஒளி உள்ளவன், பிரம்மத்தை அறிந்தவன் இறக்கும் தறுவாயில் ஞானம் குன்றாமல் இருப்பானாயின், அவன் மறுபிறப்பிலிருந்து விடுதலை அடைகிறான். அதற்குமாறாக, மேற் கண்ட தகுதிகள் எதுவும் இராதவன் சந்திரலோகத்தை அடை கிறான்.

சந்திர லோகம் நிரந்தரமானது அல்ல. சந்திரனே கடன் வாங்கிய ஒளியினால் தான் பிரகாசிக்கின்றான் அல்லவா?

[24-25. இந்த சுலோகங்களைப் பற்றிய விளக்கம் சம்பந்த மாக, மிகுந்த கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. இவற்றின் கருத்தைப்பற்றியும் மிகவும் மாறுபாடான அபிப்பிராயம் இருந்து வருகிறது. உதாரணமாக, 23-ஆம் சுலோகத்தில் உள்ள 'காலம்' என்ற சொல்லுக்கு அர்த்தம் 'காலம்' அல்ல என்றும் 'வழி' என்றும் சிலர் கூறுகிறார்கள். அதாவது, மரணத்திற்குப் பிறகு ஆன்மா செல்லும் வழியையே அது குறிக்கிறது என்று கருதுகிறார்கள். அதே சந்தர்ப்பத்தையொட்டி 26, 27-ஆவது சுலோகங்களில் 'கதி' (गति), 'ஸ்ருதி' (सृति) என்ற சொற்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. எனவே, இது மேற்கண்ட கருத்துக்கு ஆதரவு அளிப்பதாக இருக்கிறது. மற்றொரு புறம், பீஷ்மரைப் பற்றிய கதை இருக்கிறது. நல்ல காலமான உத்தரா யணத்தில் மரணம் அடைய வேண்டும் என்பதற்காக, பீஷ்மர் ஐம் பத்தெட்டு நாட்கள்வரையில் காத்திருந்தார். அச் சம்பவமானது, காலத்தையே இந்த சுலோகம் குறிக்கிறது என்பதற்கு ஆதரவு அளிப்பதாக இருக்கிறது.

ருக் வேதத்திலிருந்தும், உபநிடதங்களிலிருந்தும் பாரம்பரிய மாக வந்துள்ள புராதனமான நம்பிக்கையையே இந்த சுலோகங் கள் குறிப்பிட்டிருக்கின்றன என்பது நிச்சயம்தான். சாந்தோக்கிய உபநிடதம் (5. 10. 1–6) இந்த வழிகளை மிகவும் விரிவாகக் குறிப் பிட்டிருக்கிறது. தீ, ஒளி, புகை ஆகியவை காலத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் தலைமை வகிக்கும் தேவதைகளாக இருக்கலாம் என்று சங்கராச்சாரியார் தமது வியாக்கியானத்தில் கூறியுள்ளார்.

24-ஆம் சுலோகத்தில் உள்ள உத்தராயணம்தான் தேவ யானம் என்று கூறப்படுகிறது. 25-ஆம் சுலோகத்தில் உள்ள தக்ஷிணாயனமே பிதுருயானம் என்று கூறப்படுகிறது. இந்த வழிகளைப் பற்றி பிரம்ம சூத்திரத்திலும் குறிப்பிடப்பட்டிருக் கிறது.

இவ்விஷயமாக திலகர் கூறுவதாவது: "தேவர்களின் இரவில் ஒருவர் இறந்தால், அவர் புண்ணிய உலகை அடையவே

முடியாது என்பதில் உள்ள சங்கடமான நிலைமையைச் சமாளிப்பதற்காக ஆசிரியர் அதையொட்டி இவ்விதம் தமது அபிப்பிராயத்தைக் கூறியுள்ளார். அதாவது, தக்ஷிணயனத்திலோ, அல்லது தேவர்களின் அதாவது உத்தராயணத்தின் இரவிலோ மரணம் அடையும் ஒவ்வொருவருடைய எதிர்காலமும் அமைதியற்றதாக இருக்கும் என்று அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது என்று குறிப்பிட்டுள்ளார். மரணத்திற்குப் பிறகு குறிப்பிட்ட ஒருவிதமான சொர்க்கத்தை விரும்பும் யோகிகளையே அந்த சுலோகங்கள் குறிப்பிடலாம் என்று பாதராயணர் கூறுகிறார். இந்தக் கருத்தையொட்டி நமது எண்ணம் எதுவாயினும், அவ்விதம் வியாக்கியானம் செய்ய பாதராயணர் முயற்சித்திருப்பதிலிருந்து அத்தகைய சம்பிரதாயம் இருந்து வந்திருக்கிறது என்பதை நாம் தெளிவாக அறிந்துகொள்ளலாம். தேவர்களின் இரவில் மரணம் அடைவதை அது அறவே தடுக்கவில்லை என்றாலும், அத்தகைய மரணம் புண்ணியசாலியின் மரணம் அல்ல என்பது அதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. பிதுருயானம் என்பது இருள் காலத்தைக் குறிக்குமாயின், அந்த சம்பிரதாயத்திற்கு எளிதாகவும் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டும் விளக்கம் கூறமுடியும். அதாவது, அக்காலத்தில், அதாவது இரவில் யார் இறந்தாலும், பிதுருயானம் (இரவு) முடிந்து தேவயானம் (பகல்) ஆரம்பமாகும் வரையில் உத்தரக்கிரியைகளைத் தொடங்குவதில்லை. இப்போது கூட இரவில் மரணம் அடைவது கெட்ட சகுனமாகவே கருதப்படுகிறது. இரவில் யார் இறந்தாலும் பொதுவாக ஈமச்சடங்குகள் பகலிலேயே நடைபெறுகின்றன.''

இவ்வாறாக, இந்த சுலோகங்களில் உள்ள கருத்து மிகமிகப் புராதனமானது. இதைத் திலகர், தமது கொள்கைக்கு ஆதாரமாக நன்கு உபயோகப்படுத்திக்கொண்டுள்ளார். ஆறு மாதங்கள்வரை பகலாகவும், மற்றொரு ஆறுமாதங்கள் வரையில் இரவாகவும் இருக்கும் வடக்குப் பிரதேசங்களே ஆதிகாலத்தில் ஆரியர் வாழ்ந்த இடங்களாக இருந்தன என்பதே திலகரின் கொள்கையாகும். ஆனால் கீதையின் ஆசிரியர் அவற்றை வர்ணிக்கையில், 'ஒளி வீசும்' பாதை என்றும், 'இருண்ட' பாதை என்றும் குறிப்பிட்டுள்ளார். ஒரு புராதனமான சம்பிரதாயத்திற்கு அவர் தார்மிக ரீதியாக ஒரு புதிய விளக்கம் கொடுத்துள்ளார். ஒளி வீசும் பாதை என்பது ஞானத்தைக் குறிக்கிறது. இருண்ட பாதை என்பது அறியாமையைக் குறிக்கிறது. உண்மையில், தார்மிக விளக்கத்தை அடிப்படையாகக் கொண்ட காந்திஜியின் குறிப்புக்கு, உபநிடதங்களில் மிகுந்த ஆதாரம் இருக்கிறது. இந்த இரண்டு வழிகளையும் பற்றி உபநிடதங்கள் குறிப்பிடுகின்றன.

பிரச்ன உபநிடதம் (1. 9-10) கூறுவதாவது: ''தாங்கள் யக்ஞங்களையும், தர்மமான கர்மங்களையும் செய்தோம் என்ற எண்ணத்துடன் கடவுளை வழிபடுவோர் சந்திர உலகத்தை அடைகின்றனர். இதுதான் பிதுருயானம். ஆனால், தவம், பிரம்மச்

சரியம், நம்பிக்கை, ஆன்மிக ஆராய்ச்சி ஆகியவற்றின் மூலம் ஆன்மாவை நாடுவோர், உத்தராயணத்தில் சூரியனை அடைகின்றனர்.''*

முண்டக உபநிடதமும் (1. 2. 11) இவ்வாறு கூறுகின்றது: ''காட்டில் வாழ்ந்துகொண்டும், உணவுக்கு பிட்சை எடுத்தும், நம்பிக்கையுடனும், பக்தியுடனும், சாந்தமாகவும், விவேகத்துடனும் தவம் செய்வோர், அசுத்தங்களின்றி இந்த உலகத்தைவிட்டு சூரிய மார்க்கத்தின் வழியாக, அழிவற்ற அந்தப் பரம்பொருள் இருக்கும் இடத்திற்குச் செல்லுகின்றனர்:"†

பரலோகத்தைப் பற்றிய இந்தக் கருத்து பிற்காலத்தில் வந்திருக்க வேண்டும். அந்த மார்க்கங்களுக்கே கீதை மறுபெயர் கொடுத்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இதன் சம்பந்தமாக 27-ஆம் சுலோகத்தைப் பார்க்கவும். அந்த சுலோகத்தில் கிருஷ்ணபகவான் அர்ஜுனனை உண்மையான யோகியாக இருக்கும்படி அறிவுறுத்துகிறார்.]

---

* तये ह वै तदिष्टापूर्ते कृतमित्युपासते ते
चान्द्रमसमेव लोकमभिजयन्ते ।
अथोत्तरेण तपसा ब्रह्मचर्येण श्रद्धया
विद्ययात्मानमन्विष्यादित्यमभिजयन्ते ।

प्रश्न १. ९-१०

தத்யே ஹ வை ததிஷ்டாபூர்த்தே க்ருத மித்யுபாஸதே
தே சாந்த்ரமஸமேவ லோக மபிஜயந்தே|...அதோத்
தரேண தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா வித்யயாத்
மான மன்விஷ் யாதித்ய மபிஜயந்தே|

ப்ரச்ன உபநிடதம் 1-9-10

† तपःश्रद्धे ये ह्युपवसन्त्यरण्ये
शान्ता विद्वांसो भैक्षचर्यां चरन्तः ।
सूर्यद्वारेण ते विरजाः प्रयान्ति
यत्रामृतः स पुरुषो ह्यव्ययात्मा ॥

मुण्डक १-२-११

தப: ச்ரத்தே யே ஹ்யுபவஸந்த் யரண்யே
சாந்தா வித்வாம்ஸோ பைக்ஷசர்யாம் சரந்த:|
ஸூர்யத்வாரேணதே விரஜா: ப்ரயாந்தி
யத்ராம்ருத: ஸ புருஷோ ஹ்யவ்யயாத்மா||

முண்டக உபநிடதம்-1-2-11

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

சுக்ல கிருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே ।
ஏகயா யாத்யனுவ்ருத்திம் அன்யயா (ஆ)வர்த்ததே புன: ॥ 26

26. ஒளி மார்க்கம், இருள் மார்க்கம் என்ற இந்த இரண்டு வழிகளும் உலகத்தின் நிரந்தர மார்க்கங்களாக இருந்து வருகின்றன. ஒன்றின் வழியாகச் செல்லுபவன் திரும்பிவருவதில்லை. மற்றொன்றின் வழியாகச் செல்லுபவன் மீண்டும் வந்து பிறக்கிறான்.

ஒளி மார்க்கத்தை ஞான மார்க்கம் என்றும், இருள் மார்க்கத்தை அறியாமையாகிய வழி என்றும் கூறலாம்.

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கச்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுன ॥ 27

27. பார்த்தா, இந்த இரண்டு வழிகளையும் அறிந்த யோகி மதிமயக்கத்தில் ஆழ்ந்துவிட மாட்டான். ஆகையால் அர்ஜுனா, எப்போதும் யோகத்தில் உறுதியுள்ளவனாக இரு.

"மதிமயக்கத்தில் ஆழ்ந்துவிடமாட்டான்" என்பதன் பொருள் இதுதான்: அந்த இருவழிகளையும் அறிந்தவனும், எல்லாவற்றையும் சமமாகக் கருதும் ரசசியத்தை அறிந்தவனும் அறியாமை மார்க்கத்தில் செல்லமாட்டான்.

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८ ॥

வேதேஷு யக்ஞேஷு தபஸ்ஸு சைவ
தானேஷு யத் புண்யபலம் ப்ரதிஷ்டம் ।
அத்யேதி தத் ஸர்வமிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தானமுபைதி சாத்யம் ॥ 28

28. வேதங்களைப் பாராயணம் செய்தல், யக்ஞங்கள், தவங்கள், தானங்கள் ஆகிய நற்செய்கைகளால் ஏற்படக்கூடிய பலன்களையெல்லாம் யோகி கடந்தவனாக இருக்கிறான். இதையெல்லாம் அறிந்த யோகி, பரம்பொருளையும் பரமபதத்தையும் அடைகின்றான்.

பக்தியினாலும், ஞானத்தினாலும், தொண்டினாலும் சமத்துவ நோக்குடன் கூடிய மன நிலையை அடைந்தவன், தனது நற்செயல்களுக்கெல்லாம் உரிய பலனை அடைவதுடன், மோட்சத்தையும் கூட அடைகிறான்.

['இதை அறிந்த யோகி' என்பதற்கு சங்கராச்சாரியார் பின்வருமாறு விளக்கம் கொடுத்துள்ளார்: "இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் கேட்ட ஏழு கேள்விகளுக்கு பகவான் அளித்துள்ள பதில்களில் அடங்கியுள்ள உபதேசத்தைச் சரியாக அறிந்து நடமுறையில் அனுசரிக்கும் யோகி."]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे अक्षरब्रह्मयोगो नामाष्टमोऽध्यायः ॥ ८ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே அக்ஷர ப்ரஹ்மயோகோ நாம
அஷ்டமோ (அ)த்யாய :-8

ஸ்ரீபகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம
ஞானத்தின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப்பற்றி
ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'அட்சர பிரம்ம
யோகம்' என்ற எட்டாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

# ராஜவித்யா, ராஜகுஹ்ய யோகம்

## ஒன்பதாம் அத்தியாயம்

இந்த அத்தியாயம் பக்தியின் மகத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது.

श्रीभगवानुवाच

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச
இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம் யனஸூயவே ।
க்ஞானம் விக்ஞான ஸஹிதம் யத் க்ஞாத்வா மோக்ஷ்யஸே (அ)சுபாத் ॥ 1

ஸ்ரீ பகவான் சொன்னர்

1. மிக்க ரகசியமான இந்த ஞானத்தையும், பகுத்தறிவுடன் கூடிய ஞானத்தையும், குற்றம் காணும் குணமற்ற உனக்கு நான் இப்போது எடுத்துக் கூறுகிறேன். இதை அறிந்து கொண்டால் நீ தீமைகளிலிருந்து விடுதலை பெறுவாய்.

["ஆண்டவனுடைய சாம்ராஜ்யத்தின் ரகசியங்களை நீங்கள் அறிந்துகொள்ளும் பாக்கியம் கிடைத்தது" என்று ஏசுநாதர் தமது சீடர்களிடம் கூறினர். லூக்கா (பைபிள்) 8. 10]

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமித முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம் ॥ 2

2. இது சாத்திரங்களுக்கெல்லாம் அரசன்; ரகசியங்களுக் கெல்லாம் ராஜா; இது தூய்மையானது; எல்லாவற்றிற்கும் மேலானது; நேரடியாக உணர்ந்து கொள்வதற்கு சாத்தியமானது;

தருமத்தின் சாரமாகவும், அனுசரிப்பதற்கு எளிதாகவும், மாறுதல் அற்றதாகவும் உள்ளது.

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

அச்ரத்ததானு: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி ॥ 3

3. பரந்தபா (பகைவர்களை வாட்டுபவனே), இந்த சித்தாந்தத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் என்னை அடைய முடியாததுடன், பிறப்புக்கும் இறப்புக்கும் காரணமான இந்த உலக மார்க்கத்தில் அடிக்கடி திரும்பிவருகின்றனர்.

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥

மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்த மூர்த்தினு ।
மத் ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ॥ 4

4. உருவமற்ற என்னுல் இந்த உலகம் முழுவதும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. எல்லா உயிர்களும் என்னிடம் இருக்கின்றன. நானே, அவைகளிடத்தில் இல்லை.

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥

ந ச மத் ஸ்தானி பூதானி பச்யமே யோகமைச்வரம் ।
பூதப்ருன் ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவன: ॥ 5

5. அப்படியிருந்தும், அந்த உயிர்கள் என்னிடத்தில் இல்லை. இதுதான் ஈசுவரனுன என்னுடைய அசாதாரண சக்தியின் மகத்துவமாகும். எல்லா உயிர்களையும் தாங்கும் நான் அவைகளிடத்தில் இல்லை. அவற்றையெல்லாம் சிருஷ்டிப்பது நானே.

இதுதான் இறைவனுடைய ஈடு இணையற்ற மகோன்னத சக்தியின் ரகசியமாகும். இதுதான் அவரது சக்தியின் அற்புதமாகும். அதாவது, எல்லா உயிர்களும் அவரிடத்தில் இருக்கின்றன; அப்படியிருந்தும், அவையெல்லாம் அவரிடத்தில் இல்லை. இறைவன் அவைகளிடத்தில் இருக்கிருர்; அப்படியிருந்தும் அவர் அவைகளி

டத்தில் இல்லை. நிலையற்ற மனிதனின் மொழியில் பகவானின் வர்ணனை இதுதான். அவர் புதிர்களைப் போன்ற எல்லா விதமான யுக்திகளையும் உபயோகித்து, தன்னுடைய எல்லா அம்சங்களையும் வெளியிட்டு அர்ஜுனனின் மனத்திற்குத் திருப்தியும் ஆறுதலும் ஏற்படும்படி செய்கிறார். சிருஷ்டிகள் யாவும் அவருடையவை. ஆதலால், எல்லா ஜீவன்களும் அவரிடத்தில் இருக்கின்றன. எனினும், அவர் எல்லாவற்றையும் கடந்தவராக இருக்கிறார். உண்மையில், அவற்றிற்கெல்லாம் சிருஷ்டி கர்த்தா அவர் அல்ல. எனவே, அவரிடத்தில் உயிர்கள் இல்லை என்று கூறுவதும் உண்மை எனலாம். அவருடைய உண்மையான பக்தர்கள் எல்லோரிடத்திலும் அவர் உண்மையாகவே இருக்கிறார். ஆனால், அவரை மறுப்பவர்களிடத்தில் அவர் இல்லை என்று அந்த பக்தர்கள் கூறுகின்றனர். இதெல்லாம் என்ன? கடவுளின் ரகசியம் அல்லவா? கடவுளின் மகத்தான அற்புதம் அல்லவா?

[4-5. இந்த அத்தியாயத்திலும், அடுத்த மூன்று அத்தியாயங்களிலும் உருவமுள்ள கடவுளின் வழிபாட்டைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. எனினும், இந்த சுலோகங்களில் உள்ள புதிர்கள், இறைவனின் உருவமுள்ள அம்சங்களுக்கும் உருவமற்ற அம்சங்களுக்கும் பொருந்தும். கண்ணுக்குத் தெரியாத, எல்லையற்ற பரம்பொருள், கண்ணுக்குத் தெரியும் அம்சத்தைக் காட்டிலும் மேலானதாக இருக்கிறது. தோன்றும் அம்சம், கண்களுக்குத் தெரியாததன் சின்னமேயாதலால், அது கண்களுக்குத் தெரியாததிலேயே அடங்கியிருக்கிறது. ஆனால், கண்களுக்குத் தெரியாதது, அதில் அடங்கியில்லை, அதைக் கடந்ததாக இருக்கிறது. சிருஷ்டி கர்த்தாவின் சிருஷ்டி என்ற முறையில் இந்த உலகம் கடவுளைப் பிரதிபலிக்கின்றது; எனினும், அவரை உலகம் தன்னகத்தே அடங்கியுள்ளவராகச் செய்ய முடியாது. ஏனெனில், சிருஷ்டியை விட சிருஷ்டி கர்த்தா பெரியவர். மேலும், ரத்னங்கள் ஒரு நூலில் கோர்க்கப்பட்டிருக்கின்றன. நூலைப் போன்ற கடவுள் எல்லாவற்றிலும் ஊடுருவிச் செல்லுகிறார், எல்லாவற்றையும் தாங்குகிறார். அவைகள் அவரிடத்தில் இல்லை. ஏனெனில் அவைகள் அவரைத் தாங்கவில்லை. "நான் அவைகளிடத்தில் இல்லை" என்று பகவான் கூறும்போது, உடலில் உறையும், ஆனால் உடலினால் பாதிக்கப்படாத தனி ஆன்மாவையே அவர் குறிப்பிடுகிறார். காந்திஜி தமது குறிப்பில் கூறியிருப்பதைப் போல், கடவுள் தார்மிக ரீதியாக பக்தர்கள் எல்லோருடைய உள்ளங்களிலும் இருக்கிறார். ஆனால், கடவுளை நிந்திப்போருக்கு, அவர் தங்களுடைய உள்ளங்களில் இல்லை என்று தோன்றுகிறது.

'ஆத்மபோதம்'* கூறுவதாவது: "எல்லாக் காலங்களிலும், எல்லாப் பொருட்களிலும் ஆன்மா இருந்தாலும், எல்லாப்பொருட்

---

* ஆதிசங்கரரால் இயற்றப்பட்ட 'ஆத்மபோதம்', அற்புதமான 68 சுலோகங்கள் அடங்கிய ஒரு தத்துவ நூலாகும். இது, அத்வைதத்தை விளக்கி ஆன்ம ஞானத்திற்கு வழி காட்டும் ஒரு திறவுகோலாகத் திகழ்கின்றது.

களிலும் அது ஒளி வீசுவதில்லை. ஆனால், பளபளப்பான தரைக ளில் பிரதிபிம்பம் பிரகாசிப்பது போலவே, தெளிவான ஞானம் உள்ளவர்களிடம் மாத்திரம் அது (ஆன்மா) ஒளி வீசுகின்றது."

குரான் பின்வருமாறு கூறுகிறது:" என்னுடைய பூமியிலும், என்னுடைய சொர்க்கத்திலும் நான் அடங்கியவன் அல்ல. ஆனால், விசுவாசமுள்ள என் ஊழியனின் உள்ளத்தில் நான் அடங்கியவ னாக இருக்கிறேன்."

செயின்ட் அகஸ்டினும் இவ்விதம் கூறுகிறார்: "எல்லா இடங் களிலும் நீங்கள் பூரணமாக இருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் பூரணமாக அடங்கக் கூடிய பொருள் எதுவுமே இல்லை."]

यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

யதா(ஆ)காச ஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹான் ।
ததா ஸர்வாணி பூதானி மத்ஸ்தானீத் யுபதாரய ॥ 6

6. எல்லா இடங்களிலும் சஞ்சரிக்கும் வல்லமை வாய்ந்த காற்று ஆகாயத்தில் அடங்கியிருப்பது போலவே, எல்லா உயிர் களும் என்னிடத்தில் அடங்கியிருக்கின்றன.

[ஐந்து பூதங்களுக்குள்ளேயே ஆகாயம்தான் மிகவும் நுட்ப மானது. அதற்கு அடுத்தபடியாக மிக்க நுட்பமாயிருப்பது காற்றேயாகும். வானத்தில் சலனம் இல்லையாயின், அப்போது வானத்திற்கும் காற்றுக்கும் இடையே எவ்வித வேற்றுமையும் இருப்பதில்லை. சஞ்சரிக்கும் காற்று, எல்லா இடங்களிலும் சஞ் சரிக்கும் மகாவல்லமை பொருந்திய காற்று, எங்கும் வியாபித் துள்ள ஆகாயத்தில் எப்போதும் அடங்கியிருக்கிறது. எனினும், அதனால் ஆகாயம் எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. அந்த இரண்டிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. எத்தகைய புயல் காற்று அடித்தாலும் கூட, அது ஆகாயத்தைப் பாதிப்பதில்லை. அதுபோலவே எல்லா உயிர்களும் கடவுளிடத்தில் அடங்கியிருக் கின்றன. ஆனால் அவை, கடவுளை எவ்விதத்திலும் பாதிப்ப தில்லை.]

सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥

ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥ 7

7. கௌந்தேயா, ஒரு கல்பத்தின் முடிவில் எல்லா உயிர்களும் என்னுடைய பிரகிருதியில் லயம் அடைந்துவிடுகின்றன. மறுபடியும் ஒரு கல்பம் ஆரம்பமாகும்போது, அவைகளை யெல்லாம் நான் மீண்டும் வெளியே அனுப்புகிறேன்.

[கல்பத்தைப் பற்றிய விவரங்களை அத்தியாயம்-8, 17-18 சுலோகங்களுக்கு நான் கொடுத்துள்ள குறிப்பைப் பார்க்கவும்.]

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புன: புன: ।
பூதக்ராம மிமம் க்ருத்ஸ்னம் அவசம் ப்ரக்ருதேர் வசாத் ॥ 8

8. என்னுடைய பிரகிருதியை (மாயா சக்தியை) மேற்கொண்டு, நான் உயிர்களின் கூட்டத்தை திரும்பத் திரும்ப சிருஷ்டி செய்து அனுப்புகிறேன். அவை தம் தம் இயல்பை (சுபாவம்) மீறிச் செல்ல சக்தியற்றவையாக இருக்கின்றன.

न च मां तानि कर्माणि निबध्नन्ति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

ந ச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவ தாஸீனம் அஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9

9. தனஞ்சயா, எனினும், அக்கறையில்லாதவனைப் போலவும், பற்றற்றும் உட்கார்ந்திருக்கும் என்னை இந்த நடவடிக்கைகள் எல்லாம் கட்டுப்படுத்துவதில்லை.

मया ऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

மயா(அ)த்யக்ஷேண ப்ரகிருதி: ஸூயதே ஸசராசரம் ।
ஹேதுனா(அ)நேன கௌந்தேய ஜகத் விபரிவர்த்ததே ॥ 10

10. கௌந்தேயா, எல்லாவற்றையும் மேற்பார்வையிடும் என்னை சாட்சியாக வைத்துக்கொண்டு, ஸ்தாவர, ஜங்கமப் பொருட்கள் எல்லாவற்றையும் பிரகிருதி உண்டாக்குகிறது. இதனாலேயே, உலகத்தின் சக்கரம் சுழன்று வருகிறது.

[சங்கராச்சாரியார் தமது வியாக்கியானத்தில் கூறுவதாவது: "நான் சாட்சியாக இருப்பதாலும், நான் மேற்பார்வையிடுவதாலுமே இந்த பிரபஞ்சம் எல்லாக் கட்டங்களையும் கடந்து வருகிறது. மூன்று குணங்களால் உருவான எனது மாயை, ஸ்தாவர, ஜங்கமப் பொருள்கள் அடங்கிய இந்த பிரபஞ்சத்தை உற்பத்தி செய்கிறது."]

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।
பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேச்வரம் ॥ 11

*11.* உயிர்களுக்கெல்லாம் மகேசுவரனான எனது மகோன்னதமான தன்மையை அறியாத மூடர்கள், மனிதனாக அவதாரம் எடுத்துள்ள என்னைக் கண்டிக்கிறார்கள்.

ஏனெனில் அவர்கள் கடவுள் இருப்பதையே மறுக்கிறார்கள்; மனித உடலை இயக்குவிக்கும் கர்த்தாவான அவரை உணர்ந்து கொள்ளுவதில்லை.

[அத்தியாயம்-7, சுலோகம் 24-க்கு நான் எழுதியுள்ள குறிப்பைப் பார்க்கவும்.]

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

மோகாசா மோக கர்மாணோ மோகக்ஞானா விசேதஸ: ।
ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ருதா: ॥ 12

*12.* அந்த மூடர்களின் நம்பிக்கைகளும், செயல்களும், ஞானமும் உதவாக்கரையானவை. ராக்ஷசர்கள், பைசாசத் தன்மை வாய்ந்தவர்கள் ஆகியோரின் மதிகெட்ட இயல்பை அவர்கள் மேற்கொள்கின்றனர்.

---

12. அந்த மூடர்களின் நம்பிக்கைகள் நிறைவேறுவதில்லை. அவர்கள் செய்யும் அக்னி ஹோத்ரங்களும், மற்ற கர்மங்களும் அவர்களுக்குப் பலனை அளிப்பதில்லை. ஏனெனில், அவர்கள் இறைவனிடம் பக்தி வைப்பதில்லை. தங்களுடைய சொந்த ஆன்மாவைப் பற்றிய உண்மையையும் அவர்கள் அறிந்து கொள்வதில்லை. அவர்களுக்கு பகுத்துணரும் சக்தியும் இருப்பதில்லை. 'வெட்டுவதும், குடிப்பதும், அழிப்பதும், பிறருடைய செல்வத்தைச் சூறையாடுவதுமே' அவர்களுடைய முக்கிய கொள்கைகளாக இருப்பதால், அவர்கள் செய்யும் கர்மங்கள் அவர்களுக்குப் பலனை அளிப்பதில்லை.
—சங்கரர்.

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி மாச்ரிதா: ।
பஜந்த்யனன்ய மனஸோ க்ஞாத்வா பூதாதி மவ்யயம் ॥ 13

*13.* பார்த்தா, தெய்விக இயல்பை மேற்கொள்ளும் மகாத்மாக்கள், எல்லா உயிர்களுக்கும் அழிவற்ற ஆதிகாரணம் நான் என்பதை உணர்ந்து, மனத்தை வேறு எதிலும் செலுத்தாமல் என்னையே வணங்குகின்றனர்.

सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।
नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்ய யுக்தா உபாஸதே ॥ 14

*14.* அவர்கள் எப்போதும் என்னைத் துதித்துக்கொண்டும், நம்பிக்கையுடனும் விடா முயற்சியுடனும் பக்தியுடனும் என்னை வழிபட்டுக்கொண்டும், எப்போதும் என்னிடத்தில் பற்றுதலுடனும் என்னைப் பூஜிக்கிறார்கள்.

ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।
एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥

க்ஞான யக்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோமுகம் ॥ 15

---

12. இந்த சுலோகத்தில் தெய்வத் தன்மை இல்லாதவனைப் பற்றி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அடுத்த சுலோகத்தில் தெய்வத் தன்மை வாய்ந்தவனை பகவான் வர்ணிக்கிறார். —திலகர்.

13. உயர்ந்த ஆன்மாக்கள் தேவர்களின் இயல்பு உள்ளவர்களாக இருக்கிறார்கள். உடல், மனம், புலன்கள் எல்லாம் அவர்களுடைய கட்டுப்பாட்டில் இருக்கின்றன. அவர்கள் இறைவனிடத்தில் நம்பிக்கையும், மற்ற உயிர்களிடத்தில் இரக்கமும் உள்ளவர்களாக இருக்கிறார்கள். —சங்கரர்.

14. வீட்டில் உள்ளவர்கள் விழித்துக் கொண்டிருந்தால், திருடர்கள் வீட்டிற்குள் நுழைய மாட்டார்கள். அது போல், நீ எப்பொழுதும் திட சித்தத்துடன் இறைவனை வணங்கி வந்தால், உன் மனத்தில் தீய எண்ணங்கள் பிரவேசிக்க முடியா. —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

*15.* மேலும், மற்றவர்கள் ஒன்ருகவும், வெவ்வேருகவும் அல்லது பலவாகவும் எங்கும் பார்க்கப்படும் என்னை, ஞான யக்ஞத்திஞல் வழிபடுகின்றனர்.

[இந்த சுலோகத்தை காந்திஜி எப்படி மொழி பெயர்த்திருக்கிருரோ அப்படியே நானும் மொழி பெயர்த்திருக்கிறேன். எனினும், அது சரியான மொழி பெயர்ப்பா என்பதை என்ஞல் நிச்சயமாகக் கூறமுடியாது. சங்கராச்சாரியாரையும், மற்றவர்களையும் பின்பற்றியே காந்திஜி மொழி பெயர்த்திருக்கிருர் என்று தோன்றுகிறது. இந்த மொழி பெயர்ப்புக்கு அதிக ஆதாரம் இல்லை என்றே ஹில் கருதுகிருர். அவரைப் போலவே நானும் எண்ணுகிறேன். சுலோகத்தில் 'அல்லது' என்ற சொல் இல்லை. கடவுளின் பலவான தோற்றத்தில் ஒருவருடைய மனத்தை நிலை நிறுத்துவது ஞான யக்ஞம் ஆகாது.

ஹில்லின் விளக்கம் வருமாறு: "எல்லா உயிர்களும் தானும் ஒன்று என்று கிருஷ்ணன் (அத்தியாயம்-*4*, சுலோகம்-*10*) கூறுவதை நாம் ஏற்கனவே பார்த்தோம். அதே சமயம், அவற்றுடன் தமக்குத் தொடர்பு இல்லை என்றும் அவர் கூறுகிருர். இந்த ஞானத்துடனேயே யோகிகள் அவரை வழிபடுகின்றனர்; எல்லா உயிர்களும் அவரும் ஒன்று என்ற முறையிலும் அவைகளிலிருந்து அவர் வேருக இருக்கிருர் என்ற முறையிலும் அவரை வழிபடுகின்றனர்."

நான் அறிந்தவரையில், இந்த சுலோகத்தின் கருத்து இது தான்: கடவுள் உருவத்துடன் இருக்கும் அம்சத்தை *14*-ஆவது சுலோகம் வற்புறுத்துகிறது. உருவமற்ற அம்சத்தை *15*-ஆவது சுலோகம் வற்புறுத்துகிறது. உருவமற்ற கடவுளை வழிபடுவோர், அவரை ஒன்ருகவோ அதாவது உள்ளத்தில் இருப்பவராகவோ, அல்லது வேருகவோ அதாவது எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளாகவோ காண்கின்றனர். இவை *6-8* அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. எனவே, இந்த சுலோகத்திற்கு எனது மொழிபெயர்ப்பு இவ்விதம் இருக்கும்: "மேலும் மற்றவர்கள், ஞான யக்ஞத்திஞல் பல்வேறு விதமாக வழிபடுகிருர்கள். எல்லாவிடங்களிலும் இருக்கும் என்னை (சிலர்) உள்ளத்தில் இருப்பவஞகவும், (சிலர்) எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளாகவும் வழிபடுகின்றனர்." ஆஞல், இதுகூட பரீட்சார்த்தமான விளக்கமேயாகும்.]

---

15. இறைவனைப் பற்றிய ஞானமே ஓர் யக்ஞம் தான். எனவே, பலர் ஞான யக்ஞத்திஞல் பகவானைப் பூஜிக்கிருர்கள். மற்றும் சிலர் மற்ற எல்லா வழிபாடுகளையும் விட்டு விட்டு, பகவான் ஒருவரையே பூஜிக்கிருர்கள். வேறு சிலர், விஷ்ணுவே, சூரியன், சந்திரன் ஆகிய வெவ்வேறு உருவங்களாக இருக்கிருர் என்று எண்ணி அந்த உருவங்களைப் பூஜிக்கிருர்கள். மற்றும் சிலர் எல்லா இடங்களிலும், எல்லா உருவங்களிலும் பகவான் இருப்பதாக எண்ணி, பல்வேறு விதமாகப் பூஜிக்கிருர்கள். —சங்கரர்.

अहं क्रतुरहं यज्ञः स्वधाऽहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

அஹம் க்ரது ரஹம் யக்ஞ: ஸ்வதா(அ)ஹமஹமௌஷதம் ।
மந்த்ரோ(அ)ஹ மஹமேவாஜ்யம் அஹமக்னி ரஹம் ஹுதம் ॥ 16

*16.* யக்ஞத்திற்காகச் செய்யும் விரதம் நான்; யக்ஞமும் நான்; பிதுருக்களுக்கு அளிக்கப்படும் அன்னம் நானே; மருந்துச் செடி வகைகளும் நானே; மந்திரமும் நான்; ஹோமம் செய்யப் படும் நெய்யும் நான்; அக்னியும் நான்; ஹோமம் செய்யப் படும் பொருளும் நானே.

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोंकार ऋक्साम यजुरेव च ॥ १७ ॥

பிதா(அ)ஹமஸ்ய ஜகத: மாதா தாதா பிதாமஹ: ॥
வேத்யம் பவித்ர மோங்கார ரிக் ஸாம யஜுரேவச ॥ 17

*17.* இந்த உலகத்தின் தந்தையும், தாயும், சிருஷ்டிகர்த் தாவும், பாட்டனும் நானே. புனிதமான ஓம் என்ற மந்திரமும், ருக், ஸாம, யஜுர் வேதங்களும் நான்தான்.

('ஓம்' என்பதற்கு, அத்தியாயம்-8, சுலோகம் 13-க்கு நான் எழுதியுள்ள குறிப்பைப் பார்க்கவும்.)

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

கதிர் பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரலய: ஸ்தானம் நிதானம் பீஜமவ்யயம் ॥ 18

*18.* அடைய வேண்டிய லட்சியமும், போஷிப்பவனும், காப்பவனும், இறைவனும், சாட்சியும், வாழும் இடமும், அடைக் கலமும், நண்பனும், பிறப்பும், முடிவும், பாதுகாப்பவனும், களஞ்சியமும், அழிவற்ற விதையும் நானே.

[பைபிளில் உள்ள வாக்கியத்திற்கு 'இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்' என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் கொடுக்கப் பட்டிருக்கிறது: "என்னைப் பின் தொடருங்கள். நான்தான் வழி, சத்தியம், உயிர். வழி தெரியாமல் போக முடியாது; சத்தியம் இரா

விடில் அறிந்து கொள்ள முடியாது; உயிர் இராவிடில் வாழ முடியாது.'']

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

தபாம்யஹ மஹம் வர்ஷம் நிக்ருஹ்ணும் யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதம் சைவ ம்ருத்யுச்ச ஸதஸச்சாஹ மர்ஜுன ।। 19

*19.* அர்ஜுன, நானே உஷ்ணத்தைக் கொடுக்கிறேன். மழையை நிறுத்தி வைப்பவனும், மழை பெய்யும்படி செய்பவனும் நானே. மரணமின்மையும் மரணமும் நான்தான். இருப்பவனும் இராமலிருப்பவனும் நானே.

[புதிர் போன்ற அந்த வர்ணனைக்கு ஆதியான மூல வாக்கியம் ருக் வேதத்தில் இருக்கிறது: ''அப்போது இராமலிருந்தது (அஸத்) எதுவும் இல்லை, இருந்தது (ஸத்) எதுவும் இல்லை.''*

சிருஷ்டிகளுக்கு முன் ஆதியில் இருந்த நிலை, சிற்சில சமயங்களில் 'ஸத்' என்றும், சிற்சில சமயங்களில் 'அஸத்' என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்த நிலையிலிருந்தே 'ஸத்', 'அஸத்' இரண்டும் உண்டாயின.

தைத்திரீய உபநிடதம் பின்வருமாறு கூறுகிறது: ஆதியில் 'அஸத்' இருந்தது. அதிலிருந்தே 'ஸத்' பிறந்தது.†

சாந்தோக்ய உபநிடதம் கூறுவதாவது: உண்மையிலேயே ஆதியில் 'ஸத்' மாத்திரமே இருந்தது; வேறு எதுவும் இல்லை.‡

---

* नासदासीन्नो सदासीत्तदानीं । ऋग्वेद १०.१२९
நாஸதாஸீன்னே ஸதாஸீத்ததானீம்[
ருக்வேதம்-10, 129.

† असद्वा इदमग्र आसीत् । ततो वै सदजायत । तैत्तिरीय २.७
அஸத்வா இதமக்ர ஆஸீத்| ததோ வை ஸதஜாயத]
தைத்திரீயம் 2-7.

‡ सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं । छान्दोग्य ६.२
ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேக மேவாத்விதியம்]
சாந்தோக்யம்-6, 2.

பிருகதாரண்ய உபநிடதம் இவ்விதம் கூறுகிறது: உருவம் உள்ளது-உருவம் இல்லாதது என்றும், அழியக் கூடியது-அழிவற்றது என்றும், நிலையற்றிருப்பது-உறுதியாக நிலைத்திருப்பது என்றும், இது என்றும் அது என்றும் பிரம்மத்திற்கு இரண்டு அம்சங்கள் உண்டு. அதுதான் இந்த உண்மைகளுக்கெல்லாம் உண்மையானது. உண்மைகள் எல்லாவற்றையும் விட மகோன்னதமான உண்மையானது. $]

त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकमश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்த்ர லோகம்
அச்னந்தி திவ்யான் திவி தேவ போகான் ।। 20

20. மூன்று வேதங்களைப் பின்பற்றுவோர் ஸோமபானத்தினால் பாவங்கள் களையப்பட்டவர்களாகி, வேள்வியினால் என்னைப் பூஜித்து, சொர்க்கத்தை அடைவதற்காகப் பிரார்த்திக்கிறார்கள். தேவர்கள் வாழும் புனிதமான சொர்க்க லோகத்தை அடைந்து அங்கு தேவர்களுக்குரிய தெய்விகமான போகங்களை அனுபவிக்கிறார்கள்.

கீதை காலத்தில் அமலில் இருந்த யக்ஞங்களையும், சடங்குகளையுமே இந்த சுலோகம் குறிப்பிடுகிறது. அந்தச் சடங்குகள் எப்படி இருக்கும் என்பதுபற்றியும், ஸோம பானம் என்றால் என்ன என்பதுபற்றியும் நாம் திட்டவட்டமாக எதுவும் கூற முடியாது.*

---

$ ब्रह्मणो रूपे द्वे वाव—मूर्तं चैवामूर्तं च,
मर्त्यं चामृतं च, स्थितं च यच्च, सच्च त्यच्च । बृहद् २.३-१

ப்ரஹ்மணோ ரூபே த்வே வாவ-மூர்த்தம் சைவாமூர்த்தம் ச,
மர்த்யம் சாம்ருதம் ச, ஸ்திதம் ச யச்ச, ஸச்ச த்யச்ச]
பிருகத்-2-3-1.

सत्यस्य सत्यमिति; प्राणा वै सत्यं तेषामेष सत्यं ॥ बृहद् २-३-६

ஸத்யஸ்ய ஸத்யமிதி; ப்ராணாவை ஸத்யம் தேஷா மேஷ ஸத்யம்]]
பிருகத்-2-3-6.

* ஸோம யாகத்தில் ஸோம லதை என்ற ஒரு கொடியை மந்திரபூர்வமாகப் பிழிந்து அதன் ரசத்தை அருந்தவேண்டும். அவ்விதம் அருந்துவதே ஸோமபானம் எனப்படுகிறது. ஸோம லதையே 'ஆட்டாங்கொடி' என்று தமிழில் வழங்கப்படுகிறது. இந்தக் கொடியைப் பற்றிய விவரங்கள் யஜுர் வேதத்தில் உள்ளன.

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभन्ते ॥ २१ ॥

தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந் தி ।
ஏவம் த்ரயீ தர்ம மனுப்ரபன்னு
கதாகதம் காம காமா லபந்தே ‖ 21

*21.* அவர்கள் பரந்த சொர்க்கலோகத்தில் போகங்களை அனுபவித்துவிட்டு, புண்ணியம் தீர்ந்ததும் மீண்டும் மனித உலகத்தில் (பூமியில்) வந்து பிறக்கிறார்கள். இவ்வாருக, அவர்கள் வேத விதிகளைப் பின்பற்றி, தங்களுடைய கர்மங்களின் பலனில் ஆசை வைத்து பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக் கொள்கிறார்கள்.

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

அனன்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜனு: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபி யுக்தானும் யோக க்ஷேமம் வஹாம்யஹம் ‖ 22

*22.* வேறு எதிலும் சிந்தனையைச் செலுத்தாமல், என்னைப் பற்றியே சிந்தித்த வண்ணம் என்னை வணங்குவோரின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பணியை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

அவ்வாருக, ஓர் உண்மையான யோகி அல்லது பக்தனுக்கு நிச்சயமான மூன்று அடையாளங்கள் உண்டு. அவையாவன: எல்லாவற்றையும் சமமாகக் கருதும் மனநிலை, செயல் திறன், களங்கமற்ற ஆழ்ந்த பக்தி ஆகிய மூன்றும் ஓர் யோகியினிடத்தில் பூரணமாக இணைந்திருக்க வேண்டும். பக்தியின்றி சமத்துவ புத்தி இருக்க முடியாது; சமத்துவ புத்தி இன்றேல் பக்தி இருக்க முடியாது. செயல் திறன் இன்றேல், பக்தியும் சமத்துவ புத்தியும் வெறும் பாசாங்காக முடியும்.

["அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதை" என்று நான் எழுதியிருக்கிறேன். மேற்கண்ட சுலோகத்தில் உள்ள 'யோக க்ஷேமம்' என்ற சொல்லுக்கு, "அவர்களிடம் இராததை அவர்கள் பெறும்படி செய்வதும், அவர்களிடம் இருப்பதைப் பாதுகாப்பதும்" என்பதே சரியான அர்த்தம்.

"முதலில் கடவுளின் சாம்ராஜ்யத்தையும், அவரது தரும நெறியையும் நாடிச் செல். பிறகு மற்றவையெல்லாம் உன்னிடம் வந்து சேரும்." மாத்யூ - *6. 33* (பைபிள்)

“உனக்குத் தேவையானதைக் கடவுள் கொடுப்பார். எல்லாப் பொருட்களையும் விசுவாசத்துடன் உனக்கு தேடித் தருவார். பின்னர் நீ மனிதர்களை நம்பிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இராது.” – ‘இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்’.]

येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३ ॥

யே(அ)ப்யன்ய தேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயா(அ)ன்விதா: ।
தே(அ)பி மாமேவ கௌந்தேய யஜந்த்ய விதி பூர்வகம் ‖ 23

23. கௌந்தேயா, பூரண நம்பிக்கையுடனும் பக்தியுடனும் மற்ற தெய்வங்களைப் பூஜிப்பவர்கள் கூட, விதிகளை அனுசரித்து நடந்து கொண்டவர் ஆக மாட்டார்களேயன்றி, அவர்களும், வேறு யாரையும் அல்ல, என்னையே பூஜித்தவர் ஆவார்கள்.

“விதிகளை அனுசரித்து நடந்து கொண்டவர் ஆக மாட்டார்கள்” என்பதற்கு, “என்னை உருவம் அற்றவன் என்றும், எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருள் என்றும் அறியாதவர்கள்” என்பதே அர்த்தமாகும்.

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४ ॥

அஹம் ஹி ஸர்வ யக்ஞானும் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாமபிஜானந்தி தத்வேனுதச் ச்யவந்தி தே ‖ 24

24. எல்லா யக்ஞங்களுக்கும் தலைவனும், எல்லா யக்ஞங்களையும் அங்கீகரிப்பவனும் நான்தான். ஆனால், என்னைப் பற்றிய இந்த உண்மையை அறியாதவர்கள் வழி தவறிச் செல்லுகிறார்கள்.

---

23-24. இந்த இரண்டு சுலோகங்களிலும் மிகவும் முக்கியமான ஒரு கொள்கை அடங்கியிருக்கிறது. எந்த தெய்வமாயினும், பரமேசுவரனின் ஓர் அம்சமேயாகும். எனவே, எந்தத் தெய்வத்தைப் பூஜித்தாலும் அது இறுதியில் பரம் பொருளையே அடைகின்றது. இதில் முக்கியமாக கவனிக்க வேண்டியது களங்கமற்ற பக்தியேயன்றி, பூஜிக்கப்படும் சின்னம் அல்ல. எல்லாச் சின்னங்களும் பரம்பொருளே என்ற ஞானமின்றி பூஜிப்பவன், மோட்சத்தைத் தவிர மற்ற பலன்களை அடைகிறான். அக்னி, யமன், காற்று ஆகிய ஒவ்வொன்றும் பரம்பொருளின் அம்சமே. —திலகர்.

यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रताः ।
भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥

யாந்தி தேவ வ்ரதா தேவான் பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினோ(அ)பி மாம் ‖ 25

25. தேவர்களைப் பூஜிப்பவர்கள் தேவர்களை அடைகின்றனர். பிதுருக்களை வழிபடுவோர் பிதுருக்களை அடைகின்றனர். பூதங்களை வழிபடுவோர் பூதங்களை அடைகின்றனர். என்னை யார் பூஜிக்கிறார்களோ, அவர்கள் என்னிடம் வந்து சேருகிறார்கள்.

[மன தத்துவ சம்பந்தமான இந்த உண்மையை எல்லா மதங்களிலும் உள்ள ஞானிகள் அங்கீகரித்துள்ளனர். சுபி ஜலாலுதீன் ருமி கூறுகிறார்: "ஒருவன் எதில் தன் முழு மனத்தையும் செலுத்துகிறானோ, அவன் அந்தப் பொருளாகவே ஆகிவிடுகிறான்."

"மனிதன் எதில் பூரண அன்பு காட்டுகிறானோ அதாகவே அவன் இருக்கிறான்" என்று செயின்ட் அகஸ்டின் கூறியிருப்பதை எக்கார்ட் மேற்கோளாக எடுத்துக் காட்டியிருப்பதுடன், அதன் சம்பந்தமாகத் தாமும் பின்வருமாறு வியாக்கியானம் செய்துள்ளார்: "மனிதன் ஒரு கல்லினிடம் அன்பு காட்டினால், அவன் ஒரு கல்லாக இருக்கிறான். அவன் ஒரு மனிதனிடம் அன்பு காட்டினால், அவன் ஒரு மனிதனாக இருக்கிறான். அவன் கடவுளிடம் அன்பு காட்டினால்... இதற்குமேல் நான் சொல்லத் துணியவில்லை. ஏனெனில், அவன் கடவுளிடம் அன்பு காட்டினால் பின்னர் அவன் கடவுளாகிவிடுகிறான் என்று நான் கூறினால், என்னை நீங்கள் கல்லால் அடிக்க முற்பட்டுவிடலாம்!"]

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மன: ‖ 26

---

26. பரம ஏழையான குசேலர் கொடுத்த அவலை, கிருஷ்ண பகவான் ஆர்வத்துடன் வாங்கிச் சாப்பிட்டார். சபரி ருசிபார்த்துக் கொடுத்த பழத்தை ஸ்ரீராமன் அங்கீகரித்து அவளுக்கு மோட்சம் அளித்தார். தமக்கு அளிக்கப்படும் சாதனம் உயர்ந்ததா, தாழ்ந்ததா என்பதைப்பற்றி பகவான் கவலைப்படுவதில்லை. அவருக்கு எந்தச் சாதனமும் தேவையும் இல்லை. மனப்பூர்வமான பக்தியுடன் மானசிகமாக அர்ப்பணம் செய்யப்படுவதைக் கூட அவர் ஏற்றுக் கொள்கிறார். களங்கமற்ற பக்தியுடன் ஒரு துளசி தளத்தைக்

26. பச்சிலே, புஷ்பம், பழம் அல்லது தண்ணீர் எதுவாயினும், பக்தியுடனும் சிரத்தையுடனும் எந்த ஆன்மா எனக்கு அளிக்கிருனே, அதை நான் திருப்தியுடன் அங்கீகரிக்கிறேன்.

இந்த சுலோகத்தின் பொருள் இதுதான்: ஒவ்வோர் உயிரிடத்திலும் கடவுள் இருக்கிருர். அந்த உயிர்களுக்கு நாம் பக்தியுடன் தொண்டு செய்தால், அந்தத் தொண்டை பகவான் ஒப்புக் கொள்கிருர்.

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥

யத் கரோஷி யதச்னஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் ॥ 27

27. கௌந்தேயா, நீ எதைச் செய்தாலும், நீ எதைச் சாப்பிட்டாலும், நீ எதை ஹோமம் செய்தாலும், அல்லது எதை தானம் செய்தாலும், நீ எத்தகைய தவம் புரிந்தாலும், எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு.

["ஆகையால், நீ எதைச் சாப்பிட்டாலும் எதைப் பானம் செய்தாலும், நீ எதைச் செய்தாலும் கடவுளின் மகத்துவத்தை மனத்திற்கொண்டு செய்"-பைபிள்.]

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥

சுபா சுப பலைரேவம் மோக்ஷ்யஸே கர்ம பந்தனை: ।
ஸந்யாஸ யோக யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ 28

28. இவ்விதம் நீ செய்வதால், நற்பலன்களையும் தீயபலன்களையும் கொடுக்கும் கர்ம பந்தங்களிலிருந்து நீ விடுதலே அடை

---

கொடுத்தால் கூட பகவானைத் திருப்தி செய்யலாம். திரௌபதி, பகவானுக்கு ஒரு சிறிய பச்சிலையைக் கொடுத்து திருப்தி செய்த சம்பவம் மகாபாரதத்தில் இருக்கிறது. எனவே, மற்ற எல்லா யக்ஞங்களையும் காட்டிலும் பக்தி யக்ஞமே சிறந்தது. —திலகர்.

28. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு --குறள்.

இ-ள். இம்மை, மறுமை இவற்றின் துன்ப இன்பங்களை ஆராய்ந்து துறவறத்தை மேற்கொள்பவர்களின் நிலேயே உலகில் சிறந்ததாகும்.

வாய். பின்னர் துறவு (சந்நியாசம்), கர்மயோகம் இரண்டையும் நிறைவேற்றியவனாய் நீ (பிறப்பிலிருந்தும் இறப்பிலிருந்தும்) விடுதலை பெற்று என்னை வந்து அடைவாய்.

[இந்த சுலோகத்தில் சந்நியாசம் என்பதும், யோகம் என்பதும் ஐந்தாவது அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளபடி பலனைத் துறப்பதும், செயல் புரிவதுமே யாகும.]

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।**

**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥**

**ஸமோ(அ)ஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோ(அ)ஸ்தி ந ப்ரிய: ।**

**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் || 29**

*29.* நான் எல்லோரிடத்திலும் சம பாவத்துடன் இருக்கிறேன். யாருக்கும் சலுகை காட்டுவதோ அல்லது சலுகை காட்டாமல் இருப்பதோ எனது இயல்பு அல்ல. ஆனால், பக்தியுடன் என்னை யார் பூஜிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்தில் இருக்கின்றனர், நான் அவர்களிடத்தில் இருக்கிறேன்.

["என்னிடத்தில் நிலைத்திருங்கள், நானும் உங்களிடத்தில் இருக்கிறேன்."-ஜான் *15-4*—பைபிள்.]

**अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।**

**साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥**

**அபி சேத் ஸு துராசாரோ பஜதே மாமனன்யபாக் ।**

**ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ।। 30**

*30.* எத்தகைய மகாபாவியாக இருந்தாலும், வேறு எந்த இடத்திலும் நாட்டமின்றி என்னிடம் பக்தியுடன் இருப்பானு

---

29. நான் அக்னியைப் போல் இருக்கிறேன். தூரத்தில் இருப்பவர்களின் குளிரை அக்னி போக்குவதில்லை. ஒருவர் தூரத்தில் இருந்து கொண்டு அக்னி தன் குளிரைத் தீர்க்கவில்லை என்றால், அது அக்னியின் குற்றம் அல்ல. அதுபோலவே, என்னிடம் பக்தியுடைவர்களுக்கு நான் கருணை புரிகின்றேன். அவர்கள் என் கருணைக்குப் பாத்திரமானவர்களாக இருப்பதற்கு, என்னிடத்தில் அவர்களுக்கு உள்ள பக்தி காரணமேயன்றி, அவர்கள் மீது எனக்கு உள்ள பற்றுதல் காரணம் அல்ல. மற்றவர்களிடம் எனக்கு துவேஷமும் இல்லை.
--சங்கரர்.

29. பகவானை அடைய பக்தன் ஓர் அடி எடுத்து வைத்தால், பக்தனை நோக்கி பகவான் பத்து அடி முன் வைத்து விரைந்து வருகிறார்.
--ராமகிருஷ்ண பரமஹம்சர்.

யின், அவனை ஒரு முனிவனாகவே கருத வேண்டும். ஏனெனில், அவன் உறுதியுடன் ஒரு தீர்மானத்திற்கு வந்தவன் ஆகிறான்.

அவனது ஒருமித்த பக்தியானது, அவனது வெறிக் குணங்களையும், தீச் செயல்களையும் அடக்கி ஒடுக்கிவிடுகின்றது.

[உறுதியான தீர்மானம் என்பது, "இனி பாவம் செய்வதில்லை" என்ற தீர்மானத்தையே குறிக்கிறது.]

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रति जानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்சாந்திம் நிகச்சதி ।
கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணச்யதி ॥ 31

*31.* சீக்கிரத்தில் அவன் தர்மவானாகி, நிரந்தரமான சாந்தியை அடைகிறான். கௌந்தேயா, என் பக்தன் ஒரு காலத்திலும் அழிந்து போவதில்லை என்பதை நிச்சயமாக அறிந்து கொள்.

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யே(அ)பி ஸ்யு: பாபயோனய: ।
ஸ்த்ரியோ வைச்யாஸ் த தா சூத்ராஸ் தே(அ)பி யாந்தி பராம் கதிம்:॥ 32

*32.* பாவிகளின் வயிற்றில் பிறந்தவர்களும், பெண்களும், வைசியர்களும், சூத்திரர்களும் கூட என்னைத் தஞ்சம் அடைவார்களாயின், அவர்கள் மகோன்னத லட்சியமான மோட்சத்தை அடைகிறார்கள்.

---

31. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது —குறள்.

இ-ள்: ஈடு இணையற்ற இறைவனின் பாதங்களை நாடினாலன்றி, மனக்கவலைகளும் துன்பங்களும் தீர்ந்து சாந்தி ஏற்படுவது கடினமாகும்.

31. ஒரு மனிதன் ஆரம்பத்தில் தீச்செயல்களில் ஈடுபட்டிருந்தாலும் கூட, அவனுக்கு தெய்வ பக்தி ஏற்பட்டுவிடுமாயின், அதன்பின் அவனது மனம் தீச்செயல்கள் புரிவதற்கு இடம் கொடுக்காது. பிறகு அவன் நாளா

[''யாராயினும், ஆண்டவனிடம் நம்பிக்கை வைப்பவர்கள் அழிவதில்லை''-பைபிள்.]

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

கிம் புனர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ் ததா ।
அனித்ய மஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ 33

*33.* அப்படியிருக்க, என் பக்தர்களான தூய பிராம்மணர்களும், ராஜரிஷிகளும் மகோன்னத நிலையை அடைவார்கள் என்பதைச் சொல்லவா வேண்டும்? ஆகையால், நிலையற்ற, இன்பமற்ற இந்த உலகில் பிறந்திருக்கும் நீ என்னை வழிபடுவாயாக.

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மானம் மத்பராயண: ॥ 34

*34.* என்னிடத்தில் உன் மனத்தை நிலைநிறுத்து; என்னுடைய பக்தனாக இரு: உன்னுடைய யக்ஞத்தை எனக்கு அர்ப்பணம் செய்; என்னை வழிபடு. இவ்விதம் நீ என்னிடம் இணைந்து என்னையே உனது லட்சியமாகக்கொண்டால், நீ உண்மையில் என்னையே வந்து அடைவாய்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे राजविद्याराजगुह्ययोगो नाम नवमोऽध्यायः ॥ ९ ॥

---

வட்டத்தில் உயர்ந்த நிலையை அடைவான். உயர்ந்த நிலையை அடைந்தவனின் பாவங்கள் இருந்த இடம் தெரியாமல் ஒழிந்துவிடும். —திலகர்.

32. வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பை இல —குறள்.

இ-ள்: விருப்பு வெறுப்பு இல்லாத இறைவனின் அடிகளை உறுதியாகப் பற்றிக் கொண்டவர்களுக்கு யாதொரு துன்பமும் இராது.

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூ உபநிஷத்ஸூ
ப்ரஹ்ம வித்தியாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
ராஜவித்யா ராஜகுஹ்ய யோகோ நாம
நவமோ(அ)த்யாய: 9

ஸ்ரீ பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையில் 'ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்'
என்ற ஒன்பதாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

# விபூதி யோகம்*

## பத்தாம் அத்தியாயம்

பக்தர்கள் பலன் அடைவதற்காக, இந்த அத்தியாயத்தில் பகவான் தம்முடைய தெய்விகமான வடிவங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

श्रीभगवानुवाच

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச: ।
யத் தே(அ)ஹம் ப்ரீயமாணய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ 1

ஸ்ரீ பகவான் கூறினர் :

*1.* மகாபாகு, மகத்தான பெருமை வாய்ந்த என்னுடைய வார்த்தையை மீண்டும் கேள். ஏற்கனவே என் வார்த்தைகளால் ஆனந்தத்தை அடைந்திருக்கும் உனக்கு இதை உன்னுடைய நன்மைக்காகவே நான் கூறுகிறேன்.

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்ஹி தேவானும் மஹர்ஷீணும் ச ஸர்வச: ॥ 2

*2.* எனது உற்பத்தியைப் பற்றி தேவர்களுக்கோ அல்லது ரிஷிகளுக்கோ எதுவும் தெரியாது. ஏனெனில், எல்லாவிதத்திலும் நான் அவர்கள் எல்லோருக்கும் ஆதிகாரணமானவன்.

---

* விபூதி என்றால் இறைவனின் சக்தி அல்லது இறைவனின் மகிமை என்று பொருள். இறைவனின் சக்தி பல்வேறு பொருள்களிலும் வியாபித்து நிற்பதை இந்த அத்தியாயம் விளக்குவதால், இதற்கு விபூதி யோகம் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

[இந்த சுலோகத்தில் 'ப்ரபவம்' என்பதற்கு (ஆதி காரணம்) சக்தி என்றும் பொருள் கூறலாம்.]

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

யோ மாமஜமனாதிம் ச வேத்தி லோக மகேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3

*3.* என்னை உலகங்களுக்கெல்லாம் ஈசுவரனாகவும், பிறப்பற்றவனாகவும், ஆதி இல்லாதவனாகவும் யார் அறிகின்றானோ, அவன் நிலையற்ற மனிதர்களுக்குள் மதிமயக்கம் நீங்கியவனாக, பாவங்களிலிருந்து விடுதலை பெறுகிறான்.

बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४ ॥

புத்திர் க்ஞான மஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம: ।
ஸுகம் துக்கம் பவோ(அ)பாவோ பயம் சாபயமேவ ச ॥ 4

*4.* பகுத்தறிவு, ஞானம், மதிமயக்கமின்மை, நீண்ட கால துக்கத்தைப் பொறுமையுடன் சகித்தல், சத்தியம், தன்னடக்கம், மன அமைதி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, பயம், பயமின்மை,

अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ் தபோ தானம் யசோ(அ)யச: ।
பவந்தி பாவா பூதானும் மத்த ஏவ ப்ருதக் விதா: ॥ 5

*5.* அகிம்சை, சமத்துவ புத்தி, போதுமென்ற திருப்தி, தவம், தானம், நல்ல புகழ், கெட்ட பெயர் ஆகிய உயிர்களிடம் காணப்படும் பல்வேறு குணங்களும் உண்மையில் என்னிடமிருந்தே உண்டாகின்றன.

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥ 6

6. ஏழு மகாரிஷிகளும், பண்டைக் காலத்திய நான்கு மகாரிஷிகளும், மனுக்களும், என்னிடமிருந்தும் என் மனத்திலிருந்தும் உண்டானார்கள். அவர்களிடமிருந்து, உலகத்தில் உள்ள எல்லாப் பிராணிகளும் உண்டாயின.

[மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, வசிஷ்டர் ஆகிய ஏழு பேரும் மேற்கண்ட சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மகாரிஷிகள் ஆவர். மற்ற நான்கு மகாரிஷிகள் யார் என்பது பற்றி பல்வேறு அபிப்பிராயங்கள் நிலவிவருகின்றன. எனவே, அந்த நால்வர் யார் என்பதை கீதையின் ஆசிரியர் ஒருவரால்தான் நிச்சயமாகக் கூறமுடியும்! அந்த நால்வரும்* இந்த அத்தியாயம் 13-ஆம் சுலோகத்தில் குறிப்பிடப்பட்டவர்களே என்று பிடே சாஸ்திரி கூறுகிறார். மனுக்களில் 14 பேர்கள் உண்டு. ஒவ்வொருவரும் ஒரு மன்வந்தரத்தில் அதாவது 432 கோடி ஆண்டுகள் கொண்ட ஒரு கல்பத்தில் பிரபஞ்சத்திற்குத் தலைமை வகிக்கிறார். (அத்தியாயம்-8, சுலோகம்-17, அத்தியாயம்-9. சுலோகம்-7-ஐ பார்க்கவும்.)]

एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்வத: !
ஸோ(அ)விகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்சய : ॥ 7

7. எனது இந்த மகிமையையும், யோகத்தையும் யார் உண்மையில் அறிகின்றானோ, அவன் தான் அசைக்க முடியாத யோக நிலையை அடையும் பாக்கியம் பெற்றவன் ஆகிறான். இதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

[யோகம் என்பது பகவானின் இணையற்ற மகிமையாகும். சமத்துவ புத்தியும், தன்னலமற்ற, பற்றற்ற செயல் ஆகிய யோகமும் அந்த யோகத்தில் அடங்கியதே. இதை அறிந்தவன் பகவானிடம் நிலைத்திருக்கிறான், பகவானுடனேயே செல்லுகிறான், உறுதியான யோக நிலையை அடைந்தவனாக இருக்கிறான்.

"ஆண்டவனை வரவேற்றவர்களுக்கெல்லாம் கடவுளின் புத்திரர்களாகும்படி அவர் அதிகாரம் கொடுத்தார்." —பைபிள்

---

* 6-ஆம் சுலோகத்தல் நால்வர் என்பது, ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர், ஸனத்குமாரர் ஆகிய முனிவர்களையே குறிக்கின்றது என்று ஒரு வியாக்கியான கர்த்தா கூறியுள்ளார்.

ஒருமையில் விபூதி என்பதற்கு கடவுளின் சக்தி என்றும், எங்கும் வியாபித்திருக்கும் இயல்பு என்றுமே அர்த்தம். ஆனல், பன்மையில் அந்தச் சொல் உபயோகிக்கப்படும் போது, எங்கும் வியாபித்திருக்கும் தன்மையை வெளிப்படுத்தும் உருவங்கள் என்றே அர்த்தம் என நான் கருதுகிறேன்.]

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவ ஸமன்விதா: ॥ 8

8. எல்லாவற்றிற்கும் நானே ஆதிகாரணம். எல்லாம் என்னிடமிருந்தே உண்டாகின்றன. இதை அறிந்த புத்திமான்கள் மனத்தில் பூரண பக்தியுடன் என்னை வழிபடுகிறார்கள்.

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥

மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9

9. அவர்கள் தங்களுடைய உள்ளங்களில் என்னையே பதிய வைத்தும், ஆன்மார்த்தமாக என்னிடம் பக்தி கொண்டும், ஒருவருக் கொருவர் என்னைப் பற்றி உபதேசித்துக் கொண்டும், எப்போதும் என் பெயரையே ஜபித்துக் கொண்டும் மனத்திருப்தியுடனும் ஆனந்தமாகவும் வாழ்கிறார்கள்.

[காந்திஜி ஒரு நண்பரிடம் கூறியதாவது: ''ஒவ்வொரு தடவையும் நீங்கள் கடவுளின் பெயரை உச்சரிக்கும் போது, நீங்கள் மேன்மேலும் அவரது அருகில் செல்லுகிறீர்கள். இது உறுதியான உண்மையாகும். நான் இத்தகைய கொள்கையுடையவன் என்ற முறையில் உங்களுடன் இப்போது நான் பேசவில்லை. எனது வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷத்திலும் நான் காணும் அனுபவத்தையே கூறுகிறேன். மூச்சு நின்று விடுவது கூட எளிதேயாகும்; ஆனல், கடவுளின் பெயரை உச்சரிக்கும் இந்த இடைவிடாத காரியம் நிற்பது எளிதல்ல. இது ஆன்மாவுக்கு அத்தியாவசியமான தேவையாக இருக்கிறது.'' — 'ஹரிஜன்' -25-5-1935]

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

தேஷாம் ஸதத யுக்தானும் பஜதாம் ப்ரீதி பூர்வகம் ।
ததாமி புத்தி யோகம் தம் யேன மாமுபயாந்தி தே ॥ 10

*10.* எப்போதும் என்னையே சிந்தித்தவர்களாக இருந்து கொண்டு, ஆழ்ந்த பக்தியுடன் என்னைப் பூஜிப்பவர்களுக்கு தன்னலமின்றிச் செயல் புரியும் சக்தியை நான் அளிக்கிறேன். அதன் மூலம் அவர்கள் என்னை வந்து அடைகிறார்கள்.

[''நம்முடன் முயற்சி செய்வோரை நாம் நம்முடைய வழிகளிலேயே நிச்சயமாக நடத்திச் செல்கிறோம். பாருங்கள்! அல்லா நல்லவர்களின் பக்கத்திலேயே இருக்கிறார்.'' -குரான்.]

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

தேஷா மேவானுகம்பார்த்தம் அஹ மக்ஞானஜம் தம: ।
நாசயாம்யாத்மபாவஸ்தோ க்ஞான தீபேன பாஸ்வதா ॥ 11

*11.* அவர்களுடைய உள்ளங்களில் வசிக்கும் நான் எவ்விதத்திலும் அவர்களிடம் கருணை கொண்டு ஒளிவீசும் ஞான தீபத்தினால், அறியாமை காரணமாக உண்டான இருளை நாசம் செய்துவிடுகிறேன்.

अर्जुन उवाच

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥

அர்ஜுன உவாச

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்யம் ஆதிதேவ மஜம் விபும் ॥ 12

*அர்ஜுனன் சொன்னான்:*

*12.* பகவானே! நீங்கள்தான் எல்லாவற்றிற்கும் மேலான பரப்ரஹ்மம். மகோன்னதமான பரம பதமும் நீங்களே. எல்லாவற்றையும் தூய்மையாக்கும் மகாபுருஷர் தாங்களே! நிரந்தரமான தெய்வமும், ஆதி தேவனும், பிறப்பு இல்லாதவரும், எங்கும் வியாபித்திருப்பவரும் தாங்கள்தான்.

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥

ஆஹுஸ்த்வாம் ரிஷய: ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ 13

*13.* தெய்விக ரிஷிகளான நாரதர், அஸிதர், தேவலர், வியாசர் ஆகிய மகாரிஷிகள் யாவரும் தங்களை அவ்விதமே கூறுகிறார்கள்.

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥

ஸர்வமேதத் ரிதம் மன்யே யன் மாம் வதஸி கேசவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்தேவா ந தானவா: ॥ 14

*14.* கேசவா, நீங்கள் என்னிடம் கூறுவதெல்லாம் சத்தியமே என்பதை நான் அறிவேன். பகவானே, உங்களுடைய தோற்றத்தை உண்மையில் தேவர்களோ அல்லது அசுரர்களோ அறியார்.

स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥

ஸ்வயமேவாத்மநாத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே ॥ 15

*15.* புருஷோத்தமா, எல்லா உயிர்களுக்கும் பிறப்பிடமான, எல்லோருக்கும் ஈசுவரனான பகவானே, தேவர்களுக்கெல்லாம் தேவனே, பிரபஞ்சத்திற்கெல்லாம் அதிபதியே, தங்களை தாங்கள் ஒருவர்தான் அறிவீர்கள்.*

---

15. வைரக்கல் ஒன்றை விற்பதற்காக ஒருவன் அதைக் கடைத்தெருவுக்கு எடுத்துச் சென்றான். அது என்ன விலை பெறும் என்று அவன் ஒரு கத்திரிக்காய்க் கடைக்காரனைக் கேட்டான். அதற்கு ஈடாக ஒரு கூடைக் கத்திரிக்காய்கள் கொடுக்கலாம் என்றான் கத்திரிக்காய்க் கடைக்காரன். அதற்கு விலையாக ஒரு மூட்டை அரிசி கொடுக்கலாம் என்றான் அரிசிக் கடைக்காரன். இவ்வாறாக, ஒவ்வொருவனும் தனது அறிவுக்கு எட்டிய விதம் அதை மதிப்பிட்டான். கடைசியாக ஒரு வைர வியாபாரி அந்த வைரக் கல் பத்து லட்சம் ரூபாய் பெறுமானது என்றான். இவ்விதமே பிரம்மத்தையும் ஒவ்வொருவரும் தம் தம் அறிவுக்கு எட்டியபடி மதிப்பிடுகிறார்கள். ஆனால், பிரம்மத்தின் மகிமையை பிரம்மமே முற்றிலும் அறியும்.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥

வக்து மர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய:।
யாபிர் விபூதிபிர் லோகான் இமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி‖ 16

*16.* உங்களுடைய தோற்றங்கள் எல்லாவற்றையும் பற்றி பூரணமாகவும், எந்தத் தோற்றங்களின் மூலம் தாங்கள் இந்த உலகங்களில் வியாபித்திருக்கிறீர்கள் என்பதையும் தாங்கள் எனக்குச் சொல்லி அருளவேண்டும்.

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७ ॥

கதம் வித்யா மஹம் யோகின் ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயன் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோ(அ)ஸி பகவன் மயா ‖ 17

*17.* யோக புருஷனே! உங்களையே இடைவிடாமல் சிந்திப்பதன் மூலம், நான் உங்களை எப்படி உணர்ந்துகொள்ள முடியும்? பகவானே, பல்வேறு விதமான எந்த வடிவங்களில் உங்களை நான் சிந்திக்க வேண்டும்?

[யோகி என்பதற்கு இணையற்ற சக்தியுடையவர் என்று பொருள். இதே அர்த்தத்திலேயே அடுத்த அத்தியாயத்தில் கிருஷ்ணனை அர்ஜுனன் யோகேசுவரன் என்று குறிப்பிடுகிறான்.]

विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥

விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்த்தன ।
பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே(அ)ம்ருதம் ‖ 18

*18.* ஜனார்த்தனா! உங்களுடைய ஈடு இணையற்ற சக்தியையும், மகிமையையும் முழு விவரங்களுடன் எனக்கு மறுபடியும்

---

17. பழம், யானை போன்ற விளையாட்டுப் பொம்மைகள் உண்மையான பழத்தையும், யானையையும் நமக்கு நினைவூட்டுவதைப் போல், நம்மால் பூஜிக்கப்படும் விக்கிரகங்கள் நிரந்தரமானவரும், உருவம் இல்லாதவருமான இறைவனை நமக்கு நினைவூட்டுகின்றன.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

எடுத்துக் கூறுங்கள். ஏனெனில், உங்களுடைய அமுத மொழிகள் என் செவிகளுக்குத் தெவிட்டவே இல்லை.

श्रीभगवानुवाच

हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९ ॥

ஸ்ரீ பகவான் உவாச

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்ம விபூதய: ।
ப்ராதான்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ‖ 19

ஸ்ரீ பகவான் கூறினர்:

*19.* குருசிரேஷ்டா (குரு வம்சத்தில் சிறந்தவனே), நன்று. என்னுடைய தெய்விகமான வடிவங்களில் மிகவும் முக்கியமானவற்றை மாத்திரம் உனக்கு எடுத்துக் கூறுகிறேன். ஏனெனில், என்னுடைய வடிவங்களின் தொகைக்கு எல்லையே இல்லை.

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २० ॥

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்தித: ।
அஹமாதிச்ச மத்யஞ்ச பூதாணமந்த ஏவச ‖ 20

*20.* குடாகேசா, ஒவ்வொரு உயிரின் உள்ளத்திலும் வீற்றிருக்கும் ஆன்மா நானே. எல்லா உயிர்களுக்கும் ஆதியும், நடுவும், முடிவும் நான்தான்.

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

ஆதித்யாணமஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான் ।
மரீசிர் மருதாமஸ்மி நக்ஷத்ராணமஹம் சசீ ‖ 21

---

21. அக்கினிக்கு உருவம் இல்லை. ஆனல், அதன் ஜ்வாலைகள் வெவ்வேறு உருவங்களாக இருக்கின்றன. வடிவம் இல்லாத அக்கினிக்கு அப்போது வடிவங்கள் உண்டாகின்றன. அது போலவே உருவமற்ற கடவுள் பல்வேறு உருவங்களாகக் காட்சி அளிக்கிறர்.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

21. ஆதித்தியர்களுள் நான் விஷ்ணு; பிரகாசிக்கும் பொருள்களுள் நான் ஒளிக்கதிர்களுடன் கூடிய சூரியன்; தேவதைகளுள் நான் மரீசி; நட்சத்திரங்களுள் நான் சந்திரன்.

[ஆதித்தியர்களின் தொகை பன்னிரண்டு. பன்னிரண்டு மாதங்களுக்கும் தலைமை வகிப்பவர்கள் அவர்களே. மருத் தேவதைகள் வாயுக்களே ஆவர்.]

**वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।**
**इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥**

வேதானும் ஸாமவேதோ(அ)ஸ்மி தேவானுமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணும் மனச்சாஸ்மி பூதானுமஸ்மி சேதனு ॥ 22

22. வேதங்களுள் நான் சாம வேதமாக இருக்கிறேன்; தேவர்களுள் நான் இந்திரன்; இந்திரியங்களுள் (புலன்கள்) நான் மனமாக இருக்கிறேன்; உயிர்களிடத்தில் நான் உணர்வாக இருக்கிறேன்.

[கீதை, பக்தியின் மகிமைபற்றிய கீதமேயாகும். எனவே, இறைவனைத் தோத்திரம் செய்யும் கானம் போன்ற மந்திரங்கள் அடங்கிய சாமவேதத்திற்கே கீதை சிறப்பிடம் அளித்திருக்கிறது.]

**रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।**
**वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥**

ருத்ராணும் சங்கரச்சாஸ்மி வித்தேசோ யக்ஷ ரக்ஷஸாம் ।
வஸூனும் பாவகச் சாஸ்மி மேரு: சிகரிணுமஹம் ॥ 23

23. ருத்ரர்களுள் நான் சங்கரனுகவும், யக்ஷ ராக்ஷசர்களுள் நான் குபேரனுகவும், வசுக்களுள் நான் அக்கினியாகவும், மலைகளுள் நான் மேரு மலையாகவும் இருக்கிறேன்.

[ருத்திரர்கள் அழிக்கும் சக்திவாய்ந்த தெய்வங்கள். அவர்களின் தொகை பதினுென்று. அவர்களுள் அழிக்க வல்லவரும், மங்களங்களை அளிக்க வல்லவரும் சங்கரனே. குபேரன், செல்வங்களுக்கெல்லாம் அதிபதி. எல்லையற்ற அவனது பொக்கிஷங்களை யட்சர்களும் ராட்சதர்களும் காவல்புரிந்து வருவதாகக் கூறப்படுகிறது. அக்கினி, வாயு, உதயம் ஆகிய தேவதைகளே எட்டு வசுக்களாக உருவம் எடுத்துள்ளனர். அவர்களில் அக்கினியே மேலானவர். ரத்ன மயமாகவும தங்க மயமாகவும் இருப்

பதாகப் புராணங்கள் வர்ணிக்கும் மேரு மலையையே நவ கிரகங்கள் சுற்றிவருவதாகக் கூறப்படுகிறது.]

पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥

புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் ।
ஸேனானீனமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர : ॥ 24

*24.* பார்த்தா நான் புரோகிதர்களுக்குள் முக்கிய குருவான பிருகஸ்பதி என்று அறிந்துகொள். சேனாதிபதிகளுக்குள் நான் கார்த்திகேயன்; நீர் நிலைகளுள் நான் மகா சமுத்திரம்.

[பிருகஸ்பதி தேவர்களுக்கெல்லாம் குரு. கார்த்திகேயன் தேவ சேனாதிபதியான முருகன்.]

महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேக மக்ஷரம் ।
யக்ஞானாம் ஜபயக்ஞோ(அ)ஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய:॥25

*25.* மகாரிஷிகளுக்குள் நான் பிருகுவாக இருக்கிறேன்; வார்த்தைகளுள் ஓரெழுத்தாகிய 'ஓம்' நானே. யக்ஞங்களுக்குள் நான் ஜப யக்ஞமாக இருக்கிறேன். ஸ்தாவரங்களுக்குள் நான் இமயமலையாக இருக்கிறேன்.

[ஜபம் என்பது பகவானின் நாமத்தை இடைவிடாது ஜபம் செய்வதே யாகும். பக்தியைப் பற்றி கீதையில் உள்ள சுலோகங்களில் இறைவனின் பெயரை இடைவிடாது ஜபிக்கும் யக்ஞமே, குறிப்பாக தோத்திர யக்ஞமே எல்லாவற்றையும்விடச் சிறந்தது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥

அச்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத: ।
கந்தர்வாணாம் சித்ரரத: ஸித்தானாம் கபிலோ முனி: ॥ 26

*26.* எல்லா மரங்களுக்குள்ளும் நான்தான் அசுவத்த மரம்; தேவரிஷிகளுள் நான் நாரதர். ஆடல் பாடல்களில் தேர்ந்த

கந்தவர்களுக்குள் நான் சித்ரரதன்; குற்றம் குறையற்ற சித்தர்களுள் நான்தான் கபில முனி.

[அசுவத்த மரம் என்பது புனிதமான அரச மரமே. இந்த சுலோகத்தில் வரும் கபிலர் சாங்கிய தத்துவத்தின் கர்த்தாவான கபிலராக இருக்கலாம்.]

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥

உச்சைச்ரவஸ மச்வானும் வித்தி மாமம்ருதோத்பவம் ।
ஐராவதம் கஜேந்த்ராணும் நராணும் ச நராதிபம் ॥ 27

27. குதிரைகளுக்குள் அமிருதத்துடன் பிறந்த உச்சைச்ரவஸ் என்பதே நான் என்று அறிந்து கொள். மகாவல்லமை பொருந்திய யானைகளுக்குள் நான் ஐராவதம்; மனிதர்களுக்குள் அரசன் நானே.

[உச்சைச்ரவஸ் என்பது இந்திரனுடைய குதிரை. அமிருதத்திற்காக பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து கிடைத்த பதினன்கு சாதனங்களுள் அந்தக் குதிரையும் ஒன்று. அவ்விதம் கிடைத்த சாதனங்களுள் ஐராவதமும் ஒன்ருகும்.]

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

ஆயுதானும் அஹம் வஜ்ரம் தேனூனுமஸ்மி காமதுக் ।
ப்ரஜனச்சாஸ்மி கந்தர்ப்ப : ஸர்ப்பாணுமஸ்மி வாஸுகி : ॥ 28

28. ஆயுதங்களுள் நான் வஜ்ராயுதமாகவும், பசுக்களுள் காமதேனுவாகவும் இருக்கிறேன். பிரஜைகளை உற்பத்தி செய்யும் தேவனை கந்தர்ப்பனும் (மன்மதன்) நான்தான். ஸர்ப்பங்களுள் நான் வாசுகியாக இருக்கிறேன்.

[வஜ்ராயுதம், இந்திரனின் இடி ஆயுதமாகும். அது ததீசி முனிவரின் எலும்புகளால் செய்யப்பட்டது. அந்த ஆயுதத்தை உருவாக்கி உலகத்தைக் காப்பாற்றுவதற்காக அம் முனிவர் தமது உயிரை அர்ப்பணம் செய்தார்.

காமதேனு, விரும்பியதையெல்லாம் கொடுக்கும் தெய்விகமான பசுவாகக் கருதப்படுகிறது. பாற்கடலிலிருந்து கிடைத்த பதினன்கு சாதனங்களில் அதுவும் ஒன்று.]

अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

அனந்தச்சாஸ்மி நாகாஞம் வருணோ யாதஸாமஹம் ।
பித்ருணுமர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாமஹம் ॥ 29

29. நாகப்பாம்புகளுள் நான் அனந்தனுக இருக்கிறேன். தண்ணீரில் வாழும் உயிர்களுள் நான் வருணனுகவும், பிதுருக்களுக்குள் அர்யமாவாகவும், தண்டித்து அடக்குபவர்களுள் யமனுகவும் இருக்கிறேன்.

[28-ஆவது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வாசுகி ஸர்ப்பத்தையே பாற்கடலைக் கடையும் கயிருக தேவர்கள் உபயோகித்துக் கொண்டனர். அனந்தன், ஆயிரம் தலைகள் உள்ள ஆதிசேஷனே. விஷ்ணு பகவானுக்கு அதுதான் படுக்கையாக இருப்பதாகக் கருதப்படுகிறது. யமனை மரண தேவன் என்பதைக் காட்டிலும், இறந்தவர்களை ஆட்சி புரிபவன் என்பதே சரியாகும். வேதங்களில் குறிப்பிட்டுள்ள தேவர்களுள் வருணனுக்குத்தான் உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்பட்டுள்ளது. அவன் தண்ணீருக்கெல்லாம் இறைவன்.]

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

ப்ரஹ்லாதச்சாஸ்மி தைத்யாஞம் கால: கலயதாமஹம் ।
ம்ருகாணும் ச ம்ருகேந்த்ரோ(அ)ஹம் வைனதேயச்ச
பக்ஷிணும் ॥ 30

30. அசுரர்களுள் நான் பிரஹ்லாதன்; கணக்கு எடுப்பவர்களுள் நான் காலன்; மிருகங்களுள் நான் சிங்கம்; பட்சிகளுள் நான் கருடன்.

[பிரஹ்லாதன், தன் தந்தையின் கோபாவேசத்தை லட்சியம் செய்யாமல், சகிக்கமுடியாத சோதனைகளுக்கு உள்ளானவன். அப்படியிருந்தும், அவன் தெய்வ பக்தியைக் கைவிடவில்லை. பக்தியில் பிரஹ்லாதன் உதாரண புருஷனுக விளங்குகிருன். கருடன், விஷ்ணுவின் வாகனம் என்று வர்ணிக்கப்படுகின்றது.]

---

29. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. —குறள்.

இ-ள். இன்றியமையாத தண்ணீர் இல்லாவிடில் உலகமே ஸ்தம்பித்து விடும். மழை இல்லாவிடில், தண்ணீருக்கு வழியில்லை.

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

பவன: பவதாமஸ்மி ராம: சஸ்த்ரப்ருதாமஹம் ।
ஜஷாணும் மகரச் சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்னவீ ‖ 31

*31.* சுத்தம் செய்வோர்களுள் நான் காற்று; ஆயுதங்களைப் பிரயோகிக்கும் வல்லுனர்களுள் நான் ராமன்; மீன் வர்க்கங்களுள் நான் முதலை; நதிகளுள் நான் கங்கை.

[இந்த சுலோகத்தில் உள்ள 'ராமன்' என்ற பதம், பரசுராமனையோ அல்லது ராமாயணத்தில் உள்ள புகழ் பெற்ற ராமபிரானையோ குறிப்பிடுவதாக இருக்கலாம்.]

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥

ஸர்க்காணுமாதிரந்தச்ச மத்யம் சைவாஹமர்ஜுன ।
அத்யாத்ம வித்யா வித்யானும் வாத: ப்ரவததாமஹம் ‖ 32

*32.* அர்ஜுனு, சிருஷ்டிகளுள் நான் ஆதியாகவும், முடிவாகவும், நடுவாகவும் இருக்கிறேன். சாஸ்திரங்களுள் நான் ஆன்மஞான சாஸ்திரமாகவும், தர்க்கவாதிகளுள் நான் தர்மவாதமாகவும் இருக்கிறேன்.

[எதையும் மறுத்து வாதம் செய்வதற்கும், தர்மத்தை அடிப்படையாகக்கொண்டு நேர்மையுடன் வாதம் செய்வதற்கும் மிகுந்த வேற்றுமை உண்டு.]

अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ॥ ३३ ॥

அக்ஷராணுமகாரோ(அ)ஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்யச ।
அஹமேவாக்ஷய: காலோ தாதா(அ)ஹம் விச்வதோமுக:‖ 33

---

33. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு. —குறள்.

இ-ள். அகரத்திலிருந்தே எல்லா எழுத்துக்களும் உண்டாகின்றன; அதுபோல பகவானிடமிருந்தே உலகம் உண்டாகின்றது.

*33.* எழுத்துக்களுக்குள் நான் 'அ' காரமாக இருக்கிறேன். சேர்க்கைச் சொற்களுள் 'த்வந்த்வம்' நான். அழிவற்ற காலமும், எல்லா இடங்களிலும் தென்படும் சிருஷ்டிகர்த்தாவும் நானே.

[சமஸ்கிருதத்தில் சமமான இரண்டு சொற்களைச் சேர்ப்பதே 'த்வந்த்வம்' என்று கூறப்படுகிறது. 'ராமலக்ஷ்மணர்கள்' என்பதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். சமஸ்கிருதத்தில் இரு சொற்களின் வேறுவிதமான சேர்க்கை, ஒன்றைக்காட்டிலும் மற்ெறான்றுக்கு முக்கியத்துவம் அளிப்பதாக இருக்கும்.]

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥

ம்ருத்யு: ஸர்வஹரச்சாஹம் உத்பவச்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஶ்ரீர்வாக் ச நாரீணும் ஸ்மிருதிர் மேதா த்ருதி: க்ஷமா ‖ 34

*34.* எல்லாவற்றையும் கவர்ந்து செல்லும் மரண தேவன் நானே; வரப்போகும் பொருட்களுக்கெல்லாம் உற்பத்தி காரணமும் நானே; பெண்களுக்கான சிறப்பு அம்சங்களுள் கீர்த்தி (பெருமை), ஶ்ரீ (அழகு), வாக் (பேச்சு), ஸ்மிருதி (ஞாபக சக்தி), மேதை (அறிவு), திருதி (மன உறுதி), க்ஷமை (பொறுமை) ஆகியவையும் நானே.

[இந்த சுலோகத்தின் இரண்டாவது பகுதிக்கு அந்தப் பெயர்கள் உள்ள 'பெண் திலகங்கள்' என்றோ அல்லது 'பெண்களுக்கான சிறப்பு இயல்புகள்' என்றோ அர்த்தம் கூறலாம்.]

बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

ப்ருஹத்ஸாம ததா ஸாம்ஞம் காயத்ரீ சந்தஸா மஹம் ।
மாஸாஞம் மார்க்க சீர்ஷோ(அ)ஹம் ருதூஞம் குஸுமாகர:‖ 35

*35.* சாமவேத மந்திரங்களுள் நான் பிருகத் சாம மந்திரம்; சந்தங்களுள் நான் காயத்ரி சந்தம்; மாதங்களுள் நான் மார்கழி மாதம்; பருவகாலங்களுள் நான் வசந்த ருது.

---

34. இந்த சுலோகத்திற்கு "லக்ஷ்மியும் (ஶ்ரீ), ஸரஸ்வதியும் (வாக்), கீர்த்தி, ஞாபகசக்தி, மேதை, மன உறுதி, பொறுமை முதலியவற்றிற்கு முக்கிய தேவதைகளாக விளங்குவோரும் நான்தான்" என்று கிருஷ்ண பகவான் கூறுவதாக சில வியாக்கியான கர்த்தாக்கள் குறிப்பிட்டுள்ளனர்.

[பிருஹதீ சந்தத்தில் சாம வேதத்தில் உள்ள ஒரு மந்திரத்தையே இது குறிக்கிறது. வேத சம்பந்தமான சந்தங்களுக்குள் காயத்ரிதான் சிறந்த சந்தம் என்பதற்காக அல்ல, எல்லா வேத மந்திரங்களின் சாரமும் காயத்ரியில்தான் அடங்கியிருக்கிறது என்பதற்காகவே காயத்ரி சந்தம் என்று இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது. காயத்ரி, பிராம்மணர்களின் தினசரிப் பிரார்த்தனை மந்திரமாக இருந்து வருகிறது. பண்டைய காலத்தில் மார்கழி மாதமே ஹிந்துக்களுடைய வருடத்தின் முதலாவது மாதமாக இருந்துவந்தது. அதனாலேயே கிருஷ்ண பகவான் அதற்கு முக்கியத்துவம் அளித்துள்ளார்.]

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்விநாமஹம் ।
ஜயோ(அ)ஸ்மி வ்யவஸாயோ(அ)ஸ்மி ஸத்வம் ஸத்வவதா
மஹம் ॥ 36

*36.* மோசக்காரர்களிடம் நான் சூதாட்டமாகவும், ஒளி பொருந்தியவர்களின் ஒளியாகவும், நான் வெற்றியாகவும், விடா முயற்சியாகவும், சாத்விகர்களின் சத்துவ குணமாகவும் இருக்கிறேன்.

மேலே "மோசக்காரர்களின் சூதாட்டமாக" என்றிருப்பதைக் கண்டு யாரும் திடுக்கிடவேண்டிய அவசியம் இல்லை. பொருட்களின் நன்மை, தீமைகளைப் பற்றி இங்கே குறிப்பிடவில்லை. எல்லாவற்றையும் இயக்குவிக்கும், எங்கும் வியாபித்தும் உள்ள இறைவனின் சக்தியே இங்கே வர்ணிக்கப்படுகிறது. மோசக்காரர்கள் தாங்களும் கடவுளின் ஆதிக்கத்திலும், தீர்ப்புக்கு உட்பட்டும் இருப்பதை அறிந்து, தங்களுடைய இறுமாப்பையும் வஞ்சகத்தையும் உதறித் தள்ளிவிட வேண்டும்.

["நான் மோசக்காரர்களின் சூதாட்டமாக இருக்கிறேன்" என்று பி. சாஸ்திரி மொழி பெயர்த்துள்ளார். அதாவது "மோசக்காரர்களை நான் மோசம் செய்கிறேன்" என்பதே அதன் அர்த்தமாகும்.]

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनंजयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥

வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ(அ)ஸ்மி பாண்டவானாம் தனஞ்ஜய: ।
முனீனாமப்யஹம் வ்யாஸ: கவீனாம் உசனா கவி: ॥ 37

*37.* விருஷ்ணிகளுள் நான் வாசுதேவன்; பாண்டவர்களுள் நான் தனஞ்சயன்; முனிவர்களுள் நான் வியாசர்; தீர்க்கதரிசிகளுள் நான் உசனராகவும் இருக்கிறேன்.

[விருஷ்ணி அல்லது யாதவ வம்சத்தில் பிறந்தவர்களுள் நான் வசுதேவரின் குமாரனான வாசுதேவன், அதாவது விருஷ்ணியின் கொள்ளுப்பேரனுக்கும் பேரன். உசனர் என்பவர் அசுரர்களின் குருவான சுக்ராச்சாரியார்; அல்லது வேதகால ரிஷிகளில் அந்தப் பெயர் உள்ள ஒருவராகவும் இருக்கலாம்.]

**दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।**
**मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥**

தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் ।
மௌனம் சைவாஸ்மி குஹ்யாநும் க்ஞானம் க்ஞானவதாமஹம் ।। 38

*38.* நான், தண்டிப்பவர்களின் செங்கோலாகவும், வெற்றியை நாடுவோரின் தந்திரமாகவும், ரகசியமான விஷயங்களுள் நான் மௌனமாகவும், ஞானிகளின் ஞானமாகவும் இருக்கிறேன்.

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।**
**न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥**

யச்சாபி ஸர்வபூதாநும் பீஜம் ததஹமர்ஜுன ।
ந ததஸ்தி விநு யத் ஸ்யான் மயா பூதம் சராசரம் ॥ 39

*39.* அர்ஜுன, எல்லா உயிர்களுக்கும் வித்து நானே. இந்த உலகில், என்னையன்றி எத்தகைய ஸ்தாவர, ஜங்கமப் பொருளும் இருக்கமுடியாது.

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥**

நாந்தோ(அ)ஸ்தி மம திவ்யாநும் விபூதீநும் பரந்தப ।
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர் விஸ்தரோ மயா ॥ 40

*40.* பரந்தபா, என்னுடைய தெய்விக வடிவங்களுக்கு முடிவே இல்லை. உதாரணத்திற்காக மாத்திரமே, இப்போது உனக்கு நான் அவற்றில் சிலவற்றை எடுத்துக் கூறினேன்.

यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥ ४१ ॥

யத் யத் விபூதிமத் ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா ।
தத் ததேவாவகச்ச த்வம் மம தேஜோ(அ)ம்ச ஸம்பவம் ॥ 41

*41.* மகத்துவமும், அழகும், வல்லமையும் வாய்ந்தது எது வாயினும், அவையெல்லாம் என்னுடைய பேரொளியின் திவலை போன்ற ஓர் அம்சத்திலிருந்தே உண்டாயிருக்கின்றன.

अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥

அதவா பஹுனைதேன கிம் க்ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம் ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ॥ 42

*42.* எனினும், அர்ஜுனா, இதையெல்லாம் நீ விவரமாக அறிந்துகொள்ள வேண்டிய அவசியம் ஏது? என்னுடைய ஓர் அம்சத்தினாலேயே இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் நான் தாங்கிக்கொண்டிருக்கிறேன்.

[*39-42.* மேற்கண்ட சுலோகங்களில் உள்ள புராண, இதிகாச சம்பந்தமான பல்வேறு குறிப்புகளையொட்டியும் நான் மிகச் சுருக்கமான விளக்கமே கொடுத்திருக்கிறேன். இந்த அத்தியாயத்தின் சாரம் யாவும் இந்த சுலோகங்களிலேயே அடங்கியிருக்கிறது. கீதையின் வியாக்கியான கர்த்தாக்களில் ஒருவரான சங்கரானந்தா, *41*-ஆவது சுலோகத்திற்குக் கொடுத்துள்ள விளக்கத்தில் இந்த அத்தியாயத்தின் சாரத்தையே இவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்:

"உயிருள்ளவையாயினும் ஜடப்பொருளாயினும், ஆக்க வேலைகளில் அவற்றின் ஊக்கம், சக்தி, செல்வம், உயர்ந்த செயல்கள், கல்வி, தவம், தீரம், எதையும் சகிக்கும் உறுதி, பெருந்தன்மை, வல்லமை, ஒளி, பலம், ஆண்மை, திடகாத்திரம், அழகு, அறிவு, புகழ் ஆகியவை ஒவ்வொன்றும் மகத்துவம் வாய்ந்த என்னுடைய சக்தியின் ஓர் அம்சத்திலிருந்தே எழுகின்றன."

பாரசீக சுபியான ஜாமி கூறுவதாவது: ஆண்டவனின் எல்லையற்ற குண விசேஷங்கள் ஒவ்வொன்றும் பல்வேறு வடிவங்களில் தோன்ற வேண்டும். அதனாலேயே அவர், காலமாகிய பசுமையான வயல்களையும், ஆகாயத்தையும், உயிர்கொடுக்கும் உலகமாகிய நந்தவனத்தையும் சிருஷ்டித்துள்ளார். அந்த நந்தவனத்தில் உள்ள ஒவ்வொரு கிளையும், இலையும், பழமும் அவரது

குற்றம் குறையற்ற மகோன்னதமான பல்வேறு நிலைகளையே காட்டுகின்றன.''

எனினும், இவையெல்லாம் இறைவனின் ஒரு சிறு அம்சத்தையே வெளிப்படுத்துகின்றன. 42-ஆவது சுலோகம் மகத்தான ஒரு வேத வாக்கியத்தையே எதிரொலிக்கின்றது:

"கடவுளின் நான்கில் ஓர் அம்சமே கீழேயுள்ள பிரபஞ்சமாகும்.''*

பாகவதத்திலும் பகவான் இவ்விதம் கூறுகிறார்: "ஒளி, அழகு, மகிமை, வல்லமை, பணிவு, துறவு, சுபிட்சம், அதிருஷ்டம், தீரம், பொறுமை, விவேகம் ஆகியவை யாவும் என்னில் ஒரு சிறு அம்சமே.'']

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे विभूतियोगो नाम दशमोऽध्यायः ॥ १० ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு உபநிஷத்ஸு
பிரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
விபூதி யோகோ நாம
தசமோ(அ)த்யாய: ‖ 10

ஸ்ரீ பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் "விபூதி யோகம்''
என்ற பத்தாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

---

* पादोऽस्य विश्वा भूतानि । ऋग्वेद १०-९०-३

பாதோ(அ)ஸ்ய விச்வா பூதானி। —ருக்வேதம் - 10-90-3.
இதே வாக்கியம் யஜுர் வேதத்திலும் இருக்கிறது.

# விசுவரூப தர்சன யோகம்

## பதினொன்ரும் அத்தியாயம்

பகவானின் விசுவரூபத்தைப் பற்றி காதுகளால் கேட்ட அர்ஜுனன், அந்த அற்புத ரூபத்தைக் கண்களால் பார்க்கும்படி இந்த அத்தியாயத்தில் பகவான் அருள்புரிகின்ருர். இது, பக்தர்கள் மிகவும் விரும்பும் ஓர் அத்தியாயம் ஆகும். இந்த அத்தியாயத்தில் வாதம் எதுவும் இல்லை. இது முற்றிலும் தூய்மையான கவிதைச் சிறப்பு வாய்ந்தது. காவிய ரசம் ததும்பும் இந்த அருமையான கீதம்* செவிகளுக்கு இன்பத்தைக் கொடுக்கின்றது. திரும்பத் திரும்ப எத்தனை தடவை வாசித்தாலும் இந்த அத்தியாயம் தெவிட்டுவதில்லை.

अर्जुन उवाच

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

**அர்ஜுன உவாச**
**மதனுக்ரஹாய பரமம் குஹ்ய மத்யாத்ம ஸம்க்ஞிதம் ।**
**யத் த்வயோக்தம் வசஸ்தேன மோஹோ(அ)யம் விகதோ மம ॥ 1**

*அர்ஜுனன் கூறினன் :*

*1. என்னிடம் தாங்கள் கிருபைகூர்ந்து எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளைப் பற்றிய மகத்தான ரகசியத்தை எனக்குக் கூறினீர்கள். அது என் மதிமயக்கத்தை அறவே ஒழித்து விட்டது.*

---

*இந்த அத்தியாயத்தில் உள்ள சமஸ்கிருத சுலோகங்களே கீதம்போல் ஒலிக்கின்றன. எனினும் மொழி பெயர்ப்பில், அவற்றின் மகத்துவம் போய் விடுகின்றது. சமஸ்கிருத சுலோகங்களின் மனத்தைக் கவரும் கான ரசத்தை ஓரளவாவது அனுபவிக்க வேண்டுமாயின், சர் எட்வின் அர்னல்டு மொழி பெயர்த்துத் தந்துள்ள ஆங்கிலக் கவிதைகளை வாசகர்கள் வாசிக்க வேண்டும்.*
*—மகாதேவ தேசாய்.*

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥

பவாப்யயௌ ஹி பூதாநாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா ।
த்வத்த: கமலபத்ராக்ஷ மாகாத்ம்யமபி சாவ்யயம் ॥ 2

2. கமல பத்ராக்ஷா, உயிர்களின் உற்பத்தியைப் பற்றியும், நாசத்தைப்பற்றியும் உங்களிடமிருந்து நான் விவரமாகக் கேட்டேன். உங்களுடைய அழிவற்ற மகிமையைப் பற்றியும் கேட்டேன்.

['கமல பத்ராக்ஷ' என்பதற்கு, தாமரை இலையைப்போல் கருமையான, மிருதுவான, பரந்த கண்களை உடையவர் என்று பொருள்.]

एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥

ஏவ மேதத் யதாத்த த்வம் ஆத்மானம் பரமேச்வர ।
த்ரஷ்டு மிச்சாமி தே ரூபம் ஐச்வரம் புருஷோத்தம ॥ 3

3. பரமேசுவரா, உங்களைப் பற்றி நீங்கள் வர்ணித்த விதமே இருக்கிறீர்கள். எனினும், ஈசுவரன் என்ற நிலையில் தங்களுடைய வடிவத்தை இப்போது நான் காண விரும்புகிறேன்.

[பரமேசுவரன், ஈசுவரன் ஆகிய இரண்டு சொற்களும் பொதுவாக இந்தியா முழுவதும் கடவுளைக் குறிக்க உபயோகிக்கப்படுகின்றன. ஈசுவரன் என்பதற்கு எதையும் ஆக்கவும், அழிக்கவும், மாற்றவும் வல்லவர் என்பதே பொருள்.]

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

மன்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ !
யோகேசுவர ததோ மே த்வம் தர்சயாத்மான மவ்யயம் ॥ 4

4. பகவானே, யோகேசுவரா, அந்தக் காட்சியை நான் காண்பது சாத்தியம் என்று நீங்கள் கருதுவீர்களாயின், உங்களுடைய அழிவற்ற உருவத்தை எனக்குக் காட்டி அருள்புரியுங்கள்.

[யோகேசுவரன்-யோகங்களுக்கு இறைவன் அல்லது யோகங்களில் நிபுணன்.]

श्रीभगवानुवाच

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

ஸ்ரீ பகவான் உவாச

பச்ய மே பார்த்த ரூபாணி சதசோ(அ)த ஸஹஸ்ரச: ।
நாநாவிதானி திவ்யானி நாநாவர்ணாக்ருதீனிச ॥ 5

ஸ்ரீ பகவான் கூறினார் :

5. பார்த்தா, நூற்றுக் கணக்கிலும், ஆயிரக் கணக்கிலும், எல்லையின்றி பல்வேறு விதங்களாகவும், எல்லையின்றி பல்வேறு நிறங்களுடனும் வடிவங்களுடனும் இருக்கும் என்னுடைய தெய்விகமான உருவங்களைப் பார்.

पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

பச்யாதித்யான் வஸூன் ருத்ரான் அச்வினௌ மருதஸ்ததா ।
பஹூன்யத்ருஷ்ட பூர்வாணி பச்யாச்சர்யாணி பாரத ॥ 6

6. பாரதா, ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், இரு அசுவினி தேவதைகள், மருத்துக்கள் முதலியோரைப் பார். மற்றும் இதற்கு முன் ஒருபோதும் வெளியிடப்படாத எண்ணிக்கையற்ற அதிசயங்களையும் பார்.

इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பச்யாத்ய ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்யத் த்ரஷ்டுமிச்சஸி ॥ 7

7. குடாகேசா, இன்று எனது சரீரத்தில் பிரபஞ்சம் முழுவதையும், ஸ்தாவர ஜங்கமங்கள் ஒன்றாக இருப்பதையும் பார். இன்னும் நீ ஆர்வத்துடன் பார்க்க விரும்புவதையெல்லாம் பார்.

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

ந து மாம் சக்யஸே த்ரஷ்டும் அனேனைவ ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோக மைச்வரம் ॥ 8

8. ஆனால், நீ உன்னுடைய இந்த ஊனக் கண்களால் என்னைப் பார்க்க முடியாது. உனக்கு நான் தெய்விகமான ஞானக் கண்ணைத் தருகிறேன். என்னுடைய மகத்தான சக்தியைப் பார்!

[தெய்விகமான கண் என்றால் எப்படியிருக்கும் என்பதை சாந்தோக்கிய உபநிடதத்திலிருந்து ஓரளவு நாம் தெரிந்துகொள்ளலாம். அது கூறுவதாவது: "இந்த உடல் அழியக்கூடியது. அது மரணத்திற்குச் சொந்தமானது. எனினும் அது, இறப்பற்ற ஆன்மாவுக்கு அடிப்படையாக இருக்கிறது. உடலற்ற ஒருவர் இன்பத்தினாலோ, துன்பத்தினாலோ பாதிக்கப்படமாட்டார். காற்றுக்கு உடல் இல்லை. அதுபோலவே மேகங்கள், மின்னல், இடி ஆகியவற்றிற்கும் உடல் இல்லை. அப்படியிருந்தும் அவை ஆகாயத்தில் மகோன்னதமான ஜோதியை அடைந்து அவற்றின் சொந்த உருவத்திலேயே தோன்றுகின்றன. அதுபோலவே, சாந்தமான, கலக்கமற்ற ஆன்மா, இந்த உடலிலிருந்து எழும்பி மகோன்னதமான ஜோதியை அடைந்து, அதன் சொந்த உருவத்தில் தோன்றுகிறது. நமது உடல் தூக்கத்தில் ஆழ்ந்து, ஆன்மா ஜீவனுடன் இருக்கும்போது உள்ள சாந்தமான, ஆனந்தமான நிலையே தெய்விகமான பார்வை ஏற்படும்போதும் இருக்கும்."]

संजय उवाच

एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

ஸஞ்சய உவாச:

ஏவ முக்த்வா ததோ ராஜன் மஹாயோகேச்வரோ ஹரி: ।
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ॥ 9

சஞ்சயன் சொன்னான்:

9. (திருதராஷ்டிர) மகாராஜனே, இவ்விதம் கூறிவிட்டு யோகேசுவரனான ஹரி (கிருஷ்ணன்), பார்த்தனுக்கு ஒப்பற்ற தனது ஈசுவர உருவத்தைக் காட்டியருளினான்.

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

அனேக வக்த்ர நயனம் அனேகாத்புத தர்சனம் ।
அனேக திவ்யாபரணம் திவ்யானேகோத்யதாயுதம் ।। 10

*10.* பல வாய்களுடனும், பல கண்களுடனும், பல அற்புதமான அம்சங்களுடனும், பல தெய்விக ஆபரணங்களுடனும், பல தெய்விக ஆயுதங்களைத் தரித்துக்கொண்டும் அந்த உருவம் இருந்தது.

दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥

திவ்ய மால்யாம் பரதரம் திவ்யகந்தானுலேபனம் ।
ஸர்வாச்சர்ய மயம் தேவம் அனந்தம் விச்வதோமுகம் ।। 11

*11.* தெய்விகமான மாலைகளையும் ஆடைகளையும் தரித்துக் கொண்டும், தெய்விகமான வாசனைகளைப் பூசிக்கொண்டும் இருந்த இறைவனின் திரு உருவம், அற்புத மயமாகவும், எல்லையற்றும், எங்கும் வியாபித்தும் இருந்தது.

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா ।
யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மன: ॥ 12

*12.* திடீரென்று ஆகாயத்தில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியன்கள் உதித்தால் அவற்றின் பேரொளி எவ்விதம் இருக்குமோ, அதுபோலவே மகாவல்லமை பொருந்திய இறைவனின் பேரொளியும் அதற்கு ஒத்ததாக இருந்தது.

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥

தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்தமனேகதா ।
அபச்யத் தேவ தேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா ॥ 13

*13.* பிரபஞ்சம் முழுவதும் அதன் பல்வேறு பிரிவுகளுடனும் தேவர்களுக்கெல்லாம் தேவனின் உடலில் ஒன்று சேர்ந்திருப்பதை, பாண்டவனை அர்ஜுனன் பார்த்தான்.

**ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनंजयः ।**
**प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४ ॥**

தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய: ।
ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்சலி ரபாஷத ॥ 14

*14.* பின்னர் தனஞ்சயன் ஆச்சரியத்தினால் பரவசம் அடைந்தான். அவனுக்கு ரோமங்கள் சிலிர்த்தன. உடல் முழுவதும் புல்லரித்தது. பகவானின் முன்னிலையில் அவன் தலை வணங்கி, கைகூப்பி அவரிடம் இவ்வாறு கூறலானான்:

अर्जुन उवाच

**पश्यामि देवांस्तव देव देहे**
**सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थ-**
**मृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥**

அர்ஜுன உவாச:

பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வாம்ஸ்ததா பூத விசேஷ ஸங்கான் ।
ப்ரஹ்மாண மீசம் கமலாஸனஸ்தம்
ரிஷீம்ச்ச ஸர்வான் உரகாம்ச திவ்யான் ॥ 15

*அர்ஜுனன் சொன்னான்:*

*15.* பகவானே, எல்லா தேவர்களையும், பல்வேறு உயிர்களின் கூட்டங்களையும், தாமரை சிம்மாசனத்தில் உள்ள பிரம்ம தேவனையும், எல்லா ரிஷிகளையும், தெய்விக ஸர்ப்பங்களையும் உங்களுடைய உடலில் நான் காண்கிறேன்.

**अनेकबाहूदरवक्त्रनेत्रं**
**पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।**
**नान्तं न मध्यं न पुनस्तवादिं**
**पश्यामि विश्वेश्वर विश्वरूप ॥ १६ ॥**

அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோ(அ)னந்த ரூபம் ॥
நாந்தம் ந மத்யம் நபுனஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥ 16

*16.* பல கைகளுடனும், வயிறுகளுடனும், கண்களுடனும் கூடிய தங்களுடைய எல்லேயற்ற உருவத்தை எல்லா இடங்களிலும் எங்கு பார்த்தாலும் காண்கிறேன். பிரபஞ்சத்துக்கெல்லாம் ஈசுவரா, பிரபஞ்சத்தையே உருவமாகக் கொண்டவரே, உங்கள் உருவத்திற்கு முடிவுமில்லே, நடுவுமில்லே, ஆரம்பமுமில்லே என்பதையும் நான் காண்கிறேன்.

**किरीटिनं गदिनं चक्रिणं च**
**तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।**
**पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ता-**
**द्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥**

கிரீடினம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தானலார்க்க த்யுதிமப்ரமேயம் ॥ 17

*17.* கிரீடம், கதை, சக்கரம் ஆகியவற்றுடன் தாங்கள் ஒளிப் பிழம்பாக எல்லா இடங்களிலும் பிரகாசித்துக்கொண்டிருப்பதை நான் பார்க்கிறேன். தங்களுடைய பேரொளியைக் காண கண்கள் கூசுகின்றன. தீ மயமான சூரியன் எல்லாப் பக்கங்களிலும் ஒளிவீசிப் பிரகாசிப்பது ,போன்ற உங்கள் உருவம் கற்பனேக்கு எட்டாததாக இருக்கிறது.

**त्वमक्षरं परमं वेदितव्यं**
**त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता**
**सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥**

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
த்வமவ்யய: சாச்வத தர்மகோப்தா
ஸனுதனஸ்த்வம் புருஷோ மதோ மே ॥ 18

18. நீங்களே, எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டிய அழிவற்ற பரம்பொருள். இந்தப் பிரபஞ்சத்தின் இறுதியான உறைவிடமும் தாங்களே. நிரந்தரமான தர்மத்திற்குத் தாங்களே எவ்வித மாறுதலும் இல்லாத ரட்சகர். என்றென்றும் இருப்பவர் தாங்களே என்பதும் எனது நம்பிக்கை.

अनादिमध्यान्तमनन्तवीर्य-
मनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं
स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९ ॥

அனாதி மத்யாந்த மனந்த வீர்யம்
அனந்த பாஹும் சசி ஸூர்ய நேத்ரம் ।
பச்யாமி த்வாம் தீப்த ஹுதாச வக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் ॥ 19

19. தங்களுக்கு ஆதியும் இல்லை, நடுவும் இல்லை, முடிவும் இல்லை. தங்களுடைய சக்தி எல்லையற்றது. எண்ணிக்கையற்ற கைகளையுடைய தாங்கள் சூரியனையும் சந்திரனையும் கண்களாகக் கொண்டிருக்கிறீர்கள். ஜ்வாலை வீசும் அக்னியே தங்களுடைய வாயாக இருக்கிறது. தங்களுடைய பேரொளியால் இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஆட்கொண்டிருக்கிறீர்கள்.

द्यावापृथिव्योरिदमन्तरं हि
व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं
लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

த்யாவா ப்ருதிவ்யோரித மந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன திசச்ச ஸர்வா: ।
த்ருஷ்ட்வா(அ)த்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் ॥ 20

20. வானத்திற்கும், பூமிக்கும், எல்லாத் திசைகளுக்கும் இடையே உள்ள இடங்களை யெல்லாம் நீங்கள் ஒருவரே வியாபித்துக் கொண்டிருக்கிறீர்கள். பரமாத்மாவே, தங்களுடைய ஆச்சரியகரமான இந்த பயங்கரமான உருவத்தைக் கண்டு, மூன்று உலகங்களும் தவிக்கின்றன.

[*19-20.* இந்த சுலோகங்கள் முண்டக உபநிடதத்தில் உள்ள வாக்கியங்களையே திருப்பிக்கூறுவதாக இருக்கின்றன : "இறைவனின் தலையே அக்னி; சூரியனும் சந்திரனும் அவரது கண்கள்; ஆகாயத்தின் இடைவெளி யாவும் அவரது காதுகளே."*]

अमी हि त्वां सुरसङ्घा विशन्ति
केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः
स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥ २१ ॥

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விசந்தி
கேசித் பீதா: ப்ராஞ்சலயோ க்ருணந்தி
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷி ஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥ 21

*21.* இங்கேகூட தேவர்கள் கூட்டம் கூட்டமாக உங்களிடத்தில் பிரவேசிக்கின்றனர். சிலர் பயத்துடன் கைகூப்பி உங்களைத் துதிக்கிறார்கள். ஏராளமான மகாரிஷிகள் 'எல்லாம் வாழ்க' என்று கூறிக்கொண்டே தோத்திர கீதங்களை கானம் செய்கிறார்கள்.

रुद्रादित्या वसवो ये च साध्या
विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा
वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வே(அ)ச்விநௌ மருதச்சோஷ்ம பாச்ச ।
கந்தர்வ யக்ஷாஸுர ஸித்த ஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே ॥ 22

*22.* ருத்திரர்கள், ஆதித்தியர்கள், வசுக்கள், சாத்தியர்கள், தேவர்கள் யாவரும், இரட்டையர்களான அசுவினி தேவர்கள், மருத்துக்கள், பிதுருக்கள், கந்தவர்கள், யக்ஷர்கள், அசுரர்கள்,

---

* अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ दिशः श्रोत्रे । मुण्डक २-१-४

*அக்னிர் மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ திச: ச்ரோத்ரே ]*
*—முண்டக உபநிடதம் –* 2-1-4.

சித்தர்கள் ஆகியோரின் கூட்டங்கள், எல்லோரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்து உங்களையே பார்த்தவண்ணமாக இருக்கிறார்கள்.*

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं
महाबाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं
दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ २३ ॥

ரூபம் மஹத் தே பஹுவக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூருபாதம் ।
பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்ததா(அ)ஹம் ॥ 23

23. மகாபாஹு, பல வாய்களுடனும், கண்களுடனும், கைகளுடனும், தொடைகளுடனும், எண்ணிக்கையற்ற பாதங்களுடனும், பரந்துகிடக்கும் பல வயிறுகளுடனும், பயங்கரமான பல கோரப் பற்களுடனும் கூடிய உங்களுடைய பிரம்மாண்டமான உருவத்தைக் கண்டு உலகங்கள் எல்லாம் நடுங்குகின்றன; நானும் அவ்விதமே நடுங்குகிறேன்.

नभःस्पृशं दीप्तमनेकवर्णं
व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा
धृतिं न विन्दामि शमं च विष्णो ॥ २४ ॥

நப: ஸ்ப்ருசம் தீப்தமனேகவர்ணம்
வ்யாத்தானனம் தீப்த விசால நேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ ॥ 24

---

* 11 ருத்திரர்கள், 12 ஆதித்தியர்கள், 8 வசுக்கள், 49 மருத்கணங்கள் என்றெல்லாம் புராணங்கள் கூறுகின்றன. இரட்டையர்களான அசுவினி குமாரர்கள், தேவர்களுக்கெல்லாம் வைத்தியம் செய்வோர் என்றும் கூறப்படுகிறது.

22. ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், அசுவினி குமாரர்கள், மருத் கணங்கள் ஆகியோர் வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ள தெய்வங்கள். அவர்களிலும் நான்கு பிரிவுகள் இருப்பதாக மகாபாரதம் கூறுகிறது. ஆதித்தியர்கள் க்ஷத்திரியர்கள் என்றும், மருத் கணங்கள் வைசியர்கள் என்றும், அசுவினி குமாரர்கள் சூத்திரர்கள் என்றும் மகாபாரதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. —திலகர்.

24. விஷ்ணு பகவானே! வானத்தைத் தொட்டுக்கொண்டும், ஜொலித்துக்கொண்டும், பல நிறங்களுடனும், பிளந்த வாய்களுடனும், ஒளிவீசும் விசாலமான கண்களுடனும் கூடிய உங்களைக் கண்டு என் உள்ளம் கலங்குகின்றது; மனத்தில் சாந்தியையோ, சமாதானத்தையோ காண்கிலேன்.

दंष्ट्राकरालानि च ते मुखानि
दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म
प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

தம்ஷ்ட்ரா கராளானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல ஸன்னிபானி ।
திசோ ந ஜானே ந லபே ச சர்ம
ப்ரஸீத தேவேச ஜகன்னிவாஸ ‖ 25

25. பயங்கரமான தெற்றுப் பற்களுடன் கூடிய உங்களுடைய வாய்களை நான் பார்க்கிறேன். அவை ஊழித் தீயைப் போல் தோன்றுகின்றன. அவற்றைப் பார்த்தமாத்திரத்திலேயே எனக்கு திசைகளே தெரியவில்லை; மன அமைதியும் ஏற்படவில்லை. தேவேசா, ஜகன்னிவாசா, எனக்கு அருள்புரியுங்கள்.

[தேவேசா—தேவர்களுக்கெல்லாம் தேவனே. ஜகன்னிவாசா—பிரபஞ்சத்திற்கே அடைக்கலமாக இருப்பவரே அல்லது பிரபஞ்சத்திற்கு உறைவிடமானவரே. கானத்தைப்போல் ஒலிக்கும் இந்த அத்தியாயத்தில் சந்தம் கெடாமல் இருப்பதற்காக, பகவானின் பெயர்களை அப்படியே குறிப்பிட்டிருக்கிறேன். இதே பெயர்கள் 37, 45-ஆம் சுலோகங்களிலும் வருகின்றன.]

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः
सर्वे सहैवावनिपालसङ्घैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ
सहास्मदीयैरपि योधमुख्यैः ॥२६॥

அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவனிபால ஸங்கை: ।
பீஷ்மோ த்ரோண: ஸூத புத்ரஸ் ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோத முக்யை: ‖ 26

26. திருதராஷ்டிரரின் புதல்வர்கள் யாவரும், அவர்களுடன் மன்னர்களின் கூட்டமும், பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகியோரும், அதுபோலவே நம் பக்கத்தில் உள்ள முக்கிய போர் வீரர்களும்,

वक्त्राणि ते त्वरमाणा विशन्ति
दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनान्तरेषु
संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७ ॥

வக்த்ராணி தே த்வரமாணு விசந்தி
தம்ஷ்ட்ரா கராளானி பயானகானி ।
கேசித் விலக்ஞ தசனுந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: ‖ 27

27. கோரமான பற்களையுடைய உங்களுடைய பயங்கரமான வாய்களுக்குள் அவசரமாகப் பிரவேசிக்கிருர்கள். அவர்களில் சிலர் உங்களுடைய பற்களிடையே அகப்பட்டு, அவர்களுடைய தலைகள் பொடிப் பொடியாக நொறுங்குவதையும் காண்கிறேன்.

यथा नदीनां बहवोऽम्बुवेगाः
समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीरा
विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥

யதா நதீனும் பஹவோ (அ)ம்பு வேகா :
ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி ।
ததா தவாமீ நரலோக வீரா
விசந்தி வக்த்ராண்யபி விஜ்வலந்தி ‖ 28

28. வெள்ளப் பெருக்குடன் கூடிய நதிகள் அதிவேகமாகச் சென்று கடலில் பாய்வது போலவே, உலகத்தில் உள்ள வீரர்களான மனிதர்கள் நாலா புறங்களிலும் ஜ்வாலை வீசும் உங்களுடைய வாய்களுக்குள் மிகவும் வேகமாகப் பிரவேசிக்கின்றனர்.

यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा
विशन्ति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशन्ति लोका-
स्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்த வேகா: ।
ததைவ நாசாய விசந்தி லோகாஸ்
தவாபி வக்த்ராணி ஸம்ருத்த வேகா: ॥ 29

*29.* விட்டில் பூச்சிகள் நாசம் அடைவதற்காக சுடர் விட்டெரியும் தீயில் வேகமாக வந்து விழுவதைப் போலவே, இவர்களும் நாசமடைவதற்காக உங்களுடைய வாய்களுக்குள் வேகமாக வந்து விழுகின்றனர்.

लेलिह्यसे ग्रसमानः समन्ता-
ल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं
भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

லேலிஹ்யஸே க்ரஸமானஸ் ஸமந்தாத்
லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி: ।
தேஜோபிராபூர்ய ஜகத் ஸமக்ரம்
பாஸஸ் தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥ 30

*30.* எல்லாப் புறங்களிலிருந்தும் இவர்கள் எல்லோரையும் விழுங்கும் தாங்கள், ஜ்வாலையைக் கக்கும் தங்களுடைய நாக்குகளால் அவர்களை ருசி பார்க்கின்றீர்கள். உங்களுடைய பயங்கரமான தீக் கதிர்களிலிருந்து பீறிட்டெழும் ஒளி உலகம் முழுவதையும் வியாபித்திருக்கின்றது.

आख्याहि मे को भवानुग्ररूपो
नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं
न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

ஆக்யாஹி மே கோ பவானுக்ர ரூபோ
நமோ(அ)ஸ்து தே தேவவர ப்ரஸீத ।
விக்ஞாதுமிச்சாமி பவந்த மாத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31

*31.* பகவானே, இவ்வளவு பயங்கரமான உருவம் உள்ள தாங்கள் யார் என்பதை எனக்குச் சொல்லுங்கள். தேவவரா, உங்களுக்கு நமஸ்காரம! அருள்புரியுங்கள்! ஆதிமூர்த்தியான

உங்களை அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

[தேவவரா என்ற சொல், தேவேசா என்பதைப் போலவே தான். தேவர்களுக்கெல்லாம் தேவன் என்பதே அதன் பொருள்.]

श्रीभगवानुवाच

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो
लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे
येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥

ஸ்ரீ பகவான் உவாச

காலோ(அ)ஸ்மி லோககக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்த்துமிஹ ப்ரவ்ருத்த: |
ருதே(அ)பி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யே(அ)வஸ்திதா: ப்ரத்யனீகேஷு யோதா: || 32

ஸ்ரீ பகவான் சொன்னார் :

*32.* உலகங்களை நாசம் செய்து, மனிதவர்க்கத்தை விழுங்கும் பூரண பக்குவம் அடைந்த ஊழிக்காலம் நான். நீ இவர்களைக் கொல்லாவிட்டால்கூட, உனக்கு எதிராகப் போர் செய்ய அணிவகுத்து நிற்கும் வீரர்களில் ஒருவர்கூட உயிருடன் இருக்கப்போவதில்லை.

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व
जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहताः पूर्वमेव
निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் |
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசின் || 33

*33.* ஆகையால், எழுந்திரு; புகழை சம்பாதித்துக்கொள்; உன்னுடைய பகைவர்களைத் தோல்வியுறும்படி செய்; சுபிட்

சமும், செல்வமும் நிறைந்த ராஜ்யத்தை அனுபவிக்க முற்படு. ஸவ்யஸாசி (அர்ஜுனா),* என்னால் இவர்கள் எல்லோரும் முன்பே அழிக்கப்பட்டுவிட்டார்கள். நீ ஒரு வெறும் கருவியாக மட்டுமே இரு.

द्रोणं च भीष्मं च जयद्रथं च
कर्णं तथान्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा
युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४ ॥

த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச
கர்ணம் ததா(அ)ன்யானபி யோதவீரான்।
மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதா(அ)ஸி ரணே ஸபத்னான் ‖ 34

34. ஏற்கனவே என்னால் கொல்லப்பட்டுவிட்ட துரோணன், பீஷ்மன், ஜயத்ரதன், கர்ணன் ஆகியோரையும், போர் வீரர்களான மற்றத் தலைவர்களையும் நீ கொல்லுவாயாக! நீ தைரியத்தை இழக்காதே! போர்க்களத்தில் உள்ள இந்தப் பகைவர்களை எதிர்த்துப் போர்புரி! வெற்றி உன்னுடையதே.

[இந்த சுலோகத்தில் குறிப்பிட்டுள்ள நால்வரும் வரப்பிரசாதத்தினால் விசேஷ சக்திகளையும், தெய்விக ஆயுதங்களையும் பெற்றிருந்தனர். எனவே, அவர்களை யாரும் ஜயிக்க முடியாது என்று கருதப்பட்டு வந்தது. அதனாலேயே குறிப்பாக அந்த நால்வருடைய பெயர்களும் இங்கே குறிப்பிடப்பட்டுள்ளன.]

---

* இடது கையினாலும் அம்புகளை எய்வதில் அர்ஜுனன் நிபுணனாக விளங்கியதால், அவனுக்கு 'ஸவ்யஸாசி' என்று ஒரு பெயர் உண்டு.

34. பீஷ்மர், துரோணர் முதலியவர்கள் தம்மால் எற்கனவே கொல்லப்பட்டுவிட்டதாக பகவான் கூறுகிறார். துரோணர் அர்ஜுனனுக்கு வில்வித்தை கற்றுக்கொடுத்த குரு. வில்போரில் அவர் இணையற்றவர். தவிர, தெய்விகமான ஆயுதங்களும் அவரிடம் இருந்தன. பீஷ்மரிடமும் தெய்விக ஆயுதங்கள் இருந்தன. தவிர, அவர் விரும்பியபோதுதான் அவரை மரணம் நெருங்க முடியும் என்பதும் அவர் பெற்றிருந்த வரப்பிரசாதமாகும். ஜயத்ரதனை யார் கொல்லுகிறானோ, அவனது தலை அறுந்துவிழுந்துவிடவேண்டும் என்று ஜயத்ரதனின் தந்தை வரம் பெற்றிருந்தார். சூரியனின் புதல்வனான கர்ணனுக்கு, யாராலும் எதிர்க்க முடியாத சக்தி ஆயுதம் இந்திரனால் அளிக்கப்பட்டிருந்தது. அதனால்தான், இணையற்ற பலம் வாய்ந்த அவர்கள் கூட தம்மால் கொல்லப்பட்டுவிட்டதாக பகவான் அர்ஜுனனுக்குக் கூறுகிறார். —சங்கரர்

संजय उवाच

एतच्छ्रुत्वा वचनं केशवस्य
कृताञ्जलिर्वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं
सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

ஸஞ்சய உவாச

ஏதச்ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமான: கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீத பீத: ப்ரணம்ய ॥ 35

சஞ்சயன் சொன்னான்.*

35. கிரீடத்தைத் தரித்துக்கொண்டிருக்கும் அர்ஜுனன், கேசவனின் இந்த வார்த்தைகளைக் கேட்டு நடுங்கிக்கொண்டே கைகூப்பி கிருஷ்ணனை நமஸ்காரம் செய்தான். அவன் தலை வணங்கி மிகுந்த தயக்கத்துடனும், தழுதழுத்த குரலிலும் மீண்டும் கிருஷ்ணனைப் பார்த்து சொல்லத் தொடங்கினான்.

अर्जुन उवाच

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या
जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति
सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥ ३६ ॥

---

* தான் கூறிய வரலாற்றைக் கேட்டு திருதராஷ்டிரனின் மனம் மாறும் என்று சஞ்சயன் நம்பினான். துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன் ஆகியோர் கொல்லப்பட்டுவிட்டால், பின்னர் துரியோதனனும் மற்றவர்களும் கொல்லப்படுவது நிச்சயம் என்பதை திருதராஷ்டிரன் உணர்ந்து யுத்தத்தைக் கைவிட்டு பாண்டவர்களுடன் சமாதானம் செய்து கொள்ள முற்படுவான் என்றும் அவன் நம்பினான். ஆனால், சஞ்சயனின் வார்த்தைகள் திருதராஷ்டிரனின் செவிகளில் ஏறவில்லை. நாசத்தை நோக்கி விதி திருதராஷ்டிரனை இழுத்துச் சென்றதே அதற்குக் காரணம். —சங்கரர்.

அர்ஜுன உவாச

ஸ்தானே ஹ்ருஷீகேச தவப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்ய த்யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ।। 36

அர்ஜுனன் கூறினன் :

*36.* ஹ்ருஷீகேசா, உங்களைத் தோத்திரம் செய்வதால் உலகமே உணர்ச்சி வசப்பட்டு ஆனந்தத்தை அடைகின்றது. இது முற்றிலும் நியாயமே. உங்களைக் கண்டு ராட்சதர்கள் பயந்து நாலாபுறங்களிலும் ஓடுகிறார்கள். கூட்டம் கூட்டமாக சித்தர்கள் பயபக்தியுடன் உங்களை வணங்குகிறார்கள்.

कस्माच्च ते न नमेरन्महात्मन्
गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनन्त देवेश जगन्निवास
त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோ(அ)ப்யாதிகர்த்ரே ।
அனந்த தேவேச ஜகன்னிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத் ।। 37

*37.* மஹாத்மாவே, அவர்கள் ஏன் உங்களை நமஸ்கரிக்க-மாட்டார்கள்? பிரம்மாவையும்விட மேலான ஆதி சிருஷ்டி கார்த்தா தாங்களே. அனந்தா, தேவேசா, ஜகன்னிவாசா, தாங்கள் அழிவற்றவர், இருப்பவர், இராமலிருப்பவர், இவற்றையெல்லாம் கடந்தவர்.

त्वमादिदेवः पुरुषः पुराण-
स्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्तासि वेद्यं च परं च धाम
त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥

த்வமாதி தேவ: புருஷ: புராணஸ்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விச்வமனந்த ரூப ।। 38.

38. ஆதி தேவனும், பழம் பரம் பொருளும் தாங்களே. இந்தப் பிரபஞ்சத்திற்கு இறுதியான உறைவிடம் தாங்களே. அறிந்தவரும், அறியத் தகுந்தவரும் தாங்கள்தான். எல்லாவற்றிற்கும் மேலான ஸ்தானமும் தாங்களே. கணக்கற்ற வடிவங்களுடைய ஈசா, இந்தப் பிரபஞ்சம் தங்களாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது.

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः
प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः
पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥

வாயுர்யமோ(அ)க்னிர் வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹச்ச ।
நமோ நமஸ்தே(அ)ஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புனச்ச பூயோ(அ)பி நமோ நமஸ்தே ॥ 39

39. வாயு, யமன், அக்னி, வருணன், சசாங்கன், பிரஜாபதி, பிரபிதாமஹர் எல்லோரும் தாங்களே! உங்களுக்கு நமஸ்காரம், ஆயிரம் தடவை நமஸ்காரம்! மறுபடியும் நமஸ்காரம்! மீண்டும் மீண்டும் நமஸ்காரம்!

[வாயு-காற்று, யமன்-இறந்தவர்களின் அதிபர், அக்னி-நெருப்பு, வருணன்-தண்ணீருக்கு அதிஷ்டான தேவன், சசாங்கன்-சந்திரன், பிரஜாபதி-முதல் சிருஷ்டி கர்த்தாவான பிரம்மா, பிரபிதாமஹர்-கொள்ளுப்பாட்டனரான ஆதிதேவன். இது சுவேதாசுவதர உபநிடதத்தின் எதிரொலியே ஆகும். "அதுவே அக்னி, அதுவே சூரியன், அதுதான் காற்று, அதுவே சந்திரன்... அதுதான் பிரம்மா, பிரஜாபதியும் அதுதான்."*]

---

* तदेवाग्निः तदादित्यः तद्वायुः तदुचंद्रमाः ।
तदेव शुक्रं तद् ब्रह्म तदापस्तत् प्रजापतिः ॥

श्वेताश्वतर – ४-२

ததேவாக்னி: ததாதித்ய: தத்வாயு: ததுசந்த்ரமா: ।
ததேவ சுக்ரம் தத் ப்ரஹ்ம ததாபஸ்தத் ப்ரஜாபதி: ॥

—சுவேதாசுவதர உபநிடதம் – 4-2.

नमः पुरस्तादथ पृष्ठतस्ते
नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं
सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோ(அ)ஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோ(அ)ஸி ஸர்வ : ॥ 40

*40.* முன்புறத்திலிருந்தும் பின்புறத்திலிருந்தும் உங்களுக்கு நமஸ்காரம். எல்லாப் புறங்களிலிருந்தும் உங்களுக்கு நமஸ்காரம். எல்லாம் தாங்களே. உங்களுடைய மகிமைக்கு எல்லையில்லை. உங்களுடைய வல்லமையை அளவிட முடியாது. நீங்களே எல்லாவற்றையும் தாங்குகிறீர்கள். ஆகையால், தாங்கள் எல்லாமாக இருக்கிறீர்கள்.

[*39,40.* அர்ஜுனன் ஒவ்வொரு கட்டமாக அந்தத் தோற்றத்தின் மகிமையை அறிந்து கொள்ளுகிறான். இப்போது அவன் மூலாதாரமான உண்மையைக் கண்ணால் பார்ப்பதுடன் வாய்விட்டும் கூறுகிறான். அதாவது வாசுதேவன் அல்லது ஆன்மாதான் எல்லாம் என்ற உண்மையைக் காண்கிறான்.

சாந்தோக்ய உபநிடதம் கூறுவதாவது. "ஆன்மா கீழேயும் இருக்கிறது, ஆன்மா மேலேயும் இருக்கிறது; ஆன்மா மேற்கேயும் இருக்கிறது; ஆன்மா தெற்கேயும் இருக்கிறது; ஆன்மா வடக்கேயும் இருக்கிறது; இதெல்லாம் ஆன்மாதான்."*

குரானில் உள்ள பின்வரும் வாக்கியங்கள் 39-வது சுலோகத்திற்குப் பொருத்தமாக இருக்கின்றன. "கிழக்கும் மேற்கும் அல்லாவுக்குச் சொந்தமானவை. நீ எந்தத் திசையில் திரும்பினாலும் அங்கே அல்லாவின் முகத்தைக் காணலாம். பாருங்கள்! அல்லா எங்கும் வியாபித்தவராகவும், எல்லாம் அறிந்தவராகவும் இருக்கிறார்."]

---

* स एवाधस्तात् स उपरिष्टात् स पश्चात्
स पुरस्तात् स दक्षिणतः स उत्तरतः स एवेदं सर्वं ।

छान्दोग्य ७-२५

ஸ ஏவாதஸ்தாத் ஸ உபரிஷ்டாத் ஸ பச்சாத்
ஸ புரஸ்தாத் ஸ தக்ஷிணத: ஸ உத்தரத: ஸ ஏவேதம் ஸர்வம்॥

—சாந்தோக்ய உபநிடதம்-7-25

सखेति मत्वा प्रसभं यदुक्तं
हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं
मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१ ॥

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே கிருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி ‖ 41

*41.* உங்களுடைய மகிமையை அறியாமலோ, அலட்சியமாகவோ அல்லது அன்பினாலோ நான் உங்களை தோழன் என நினைத்துக்கொண்டு கவனக்குறைவினால் ஏ கிருஷ்ணா, ஏ யாதவா, ஏ நண்பா என்று நான் எப்போதாவது கூறியிருந்தாலும்,

यच्चावहासार्थमसत्कृतोऽसि
विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं
तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

யச்சாவஹாஸார்த்த மஸத்க்ருதோ(அ)ஸி
விஹார சய்யாஸன போஜனேஷு ।
ஏகோ(அ)தவாப்யச்யுத தத் ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹ மப்ரமேயம் ‖ 42

*42.* விளையாடும்போதோ, படுத்துக் கொண்டிருந்தபோதோ, உட்கார்ந்திருந்தபோதோ, அல்லது சாப்பிடும்போதோ, தனியாக இருந்தபோதோ அல்லது மற்றவர்களுடன் கூடியிருந்தபோதோ, உங்களிடம் நான் விளையாட்டாக எப்போதாவது துடுக்காக நடந்து கொண்டிருந்தாலும், அச்சுதா, என் குற்றத்தை மன்னித்து அருள்வீர்களாக. அறிவுக்கு எட்டாதவரே, நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கோள்கிறேன்.

पितासि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

பிதா(அ)ஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யச்ச குருர்கரீயான ।
ந த்வத்ஸமோ(அ)ஸ்த்யப்யதிக: குதோ(அ)ன்யோ
லோகத்ரயே (அ)ப்யப்ரதிமப்ரபாவ ॥ 43

*43.* தாங்கள் ஸ்தாவர, ஜங்கமங்கள் எல்லாம் அடங்கிய இந்த உலகத்தின் தந்தை; உலகத்தினுல் போற்றப்படுகிறவர்; எல்லாத் தகுதிகளும் வாய்ந்த மாபெரும் குருவாக இருக்கிறீர்கள். உங்களுக்கு ஈடு இந்த உலகில் யாரும் இல்லை. அப்படியிருக்க, உங்களுக்கு மேலானவராக யார் இருக்க முடியும்? உங்களுடைய சக்திக்கு மூன்று உலகங்களிலும் இணையில்லை.

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं
प्रसादये त्वामहमीशमीड्यम्।
पितेव पुत्रस्य सखेव सख्युः
प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४ ॥

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீச மீட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥ 44

*44.* பூஜிப்பதற்குரிய காருண்ய மூர்த்தி! ஆகையால், நான் உங்கள் முன்னிலையில் விழுந்து வணங்கி வேண்டிக் கொள்கிறேன். மகன் செய்த பிழையைத் தந்தையும், தோழன் செய்த பிழையைத் தோழனும் பொறுத்துக் கொள்வது போல, பேரன்புக்கு உரிய ஈசுவரா, உங்கள் அன்புக்குப் பாத்திரனுன நான் செய்த பிழையையும் பொறுத்துக் கொள்ளுங்கள்.

---

* 'மகன் செய்த பிழையைத் தந்தையும், தோழன் செய்த பிழையைத் தோழனும், காதலியின் பிழையைக் காதலனும் பொறுத்துக்கொள்வதுபோல'' என்று பலரும் 44-ஆம் சுலோகத்திற்கு அர்த்தம் கூறியிருக்கிருர்கள். ஆனுல் காந்திஜி அவ்விதம் மொழிபெயர்க்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ''காதலியின் பிழையைக் காதலனும்'' என்ற அர்த்தம் தவருகும் என்பதை, லோகமான்ய திலகரும் தமது 'கீதா ரகஸ்ய'த்தில் பல ஆதாரங்களுடன் விவரித்திருக்கிருர்.

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा
भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं
प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

அதிர்ஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோ (அ)ஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோமே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகன்னிவாஸ ‖ 45

45. இதற்கு முன் யாரும் கண்டிராத வடிவத்தைக் கண்டு எனக்கு ஆனந்தம் பொங்குகின்றது. இருந்தாலும், என் மனம் பயத்தினாலும் வருந்துகின்றது. உங்களுடைய முந்திய அந்த வடிவத்தைக் காட்டுங்கள். பகவானே! அருள் புரியுங்கள். தேவேசனே, ஜகன்னிவாசா!

किरीटिनं गदिनं चक्रहस्त-
मिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन
सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

கிரீடினம் கதினம் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ ।
தேனைவ ரூபேண சதுர்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே ‖ 46

46. நீங்கள் முன்பு இருந்தது போலவே கிரீடத்துடனும், கையில் கதையுடனும், சக்கரத்துடனும் இருப்பதைக் காண நான் ஆவல் உள்ளவனாக இருக்கிறேன். ஆகையால், ஆயிரம் கைகள் உள்ள விசுவமூர்த்தி! நான்கு கைகள் உள்ள அந்த உருவத்தை மீண்டும் மேற்கொள்ளுங்கள்.

('விசுவமூர்த்தி' = உலகமே உருவான அவதார மூர்த்தி, உலகம் முழுவதும் வியாபித்த வடிவம் உள்ளவர்.)

श्रीभगवानुवाच

मया प्रसन्नेन तवार्जुनेदं
रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं
यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

ஸ்ரீ பகவான் உவாச

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்ம யோகாத் ।
தேஜோமயம் விச்வமனந்த மாத்யம்
யன் மே த்வதன்யேன ந த்ருஷ்ட பூர்வம் ॥ 47

ஸ்ரீ பகவான் சொன்னார்:

47. அர்ஜுனா, உனக்கு அருள் புரிவதற்காகவே எனது ஒப்பற்ற சக்தியினால், ஜோதிமயமான, உலகம் முழுவதும் வியாபித்த, எல்லையற்ற, ஆதியான பரப்பிரம்ம வடிவத்தை உனக்கு நான் காண்பித்தேன். உன்னைத் தவிர வேறு யாரும் இந்த உருவத்தைப் பார்த்ததில்லை.

न वेदयज्ञाध्ययनैर्न दानै-
र्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके
द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

ந வேத யக்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம் ரூப: சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ॥ 48

48. குருப்ரவீரா (குருவம்சத்தில் உதித்த சிறந்த வீரனே), வேதங்கள் ஓதுவதாலோ, யாகங்கள் செய்வதாலோ, மற்ற சாத்திரங்களை வாசிப்பதாலோ, தானங்கள் செய்வதாலோ அல்லது உக்ரமான தவங்கள் புரிவதாலோ, இந்த உருவத்தில் என்னை மனித உலகத்தில் யாரும் பார்க்க முடிந்ததில்லை.

[“வேதங்களை ஓதுவதால் அல்ல, யக்ஞங்களால் அல்ல, மற்ற சாத்திரங்களை வாசிப்பதாலும் அல்ல”-காந்திஜி. இதுபோலவே திலகர், ஹில் ஆகியோரும், சங்கராச்சாரியாரைப் பின்பற்றியுள்ள வியாக்கியான கர்த்தாக்களும் மேற்கண்ட சுலோகத்திற்கு விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்.]

मा ते व्यथा मा च विमूढभावो
दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं
तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

மா தே வ்யதா மா ச விமூடபாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோர மீத்ருங் மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய ‖ 49

*49.* இந்த பயங்கரமான என்னுடைய உருவத்தைக் கண்டு நீ அஞ்சவேண்டாம்; மனம் கலங்கவும் திகைக்கவும் வேண்டாம். உனது பீதியை விட்டொழித்து, மனத்தைச் சமாதானப் படுத்திக் கொள். மீண்டும் நான் முன் இருந்தது போலவே இருப்பதைப் பார்!

संजय उवाच

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा
स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं
भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

ஸஞ்சய உவாச :

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்யவபுர் மஹாத்மா ‖ 50

சஞ்சயன் கூறினான்:

50. வாசுதேவன் அர்ஜுனனிடம் அவ்விதம் கூறி, மீண்டும் தமது பழைய வடிவத்தைக் காட்டினார். மகாத்மாவான அவர் தனது இனிய அருள் வடிவத்தை மீண்டும் மேற்கொண்டு, பீதியில் ஆழ்ந்திருந்த அர்ஜுனனைத் தேற்றினார்.

अर्जुन उवाच

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

அர்ஜுன உவாச

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்த்தன ।
இதானீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51

அர்ஜுனன் கூறினான்:

51. மீண்டும் உங்களுடைய இனிய மனித வடிவத்தைப் பார்த்ததும் என் பிரமை தீர்ந்து, மறுபடியும் நான் வழக்கம் போல் சாதாரண மன நிலையை அடைந்திருக்கிறேன்.

श्रीभगवानुवाच

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥ ५२ ॥

ஸ்ரீ பகவான் உவாச

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவாநஸி யன் மம ।
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன காங்க்ஷிண: ॥ 52

ஸ்ரீ பகவான் சொன்னார்:

52. நீ இப்போது பார்த்த என்னுடைய அந்த உருவம் காண்பதற்கு மிகவும் அரிது. அதைக் காண தேவர்களும் எப்போதும் பேரார்வத்துடன் ஏங்கிவருகிறார்கள்.

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

நாஹம் வேதைர் ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।
சக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா ॥ 53

53. நீ பார்த்த என்னுடைய உருவத்தை, வேதங்களாலோ, தவத்திலுலோ, தானங்களாலோ, யக்ஞங்களாலோ கூட யாரும் பார்க்க முடியாது.

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

பக்த்யா த்வனன்யயா சக்ய அஹமேவம் விதோ(அ)ர்ஜுன ।
க்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥ 54

54. அர்ஜுன, பரந்தபா, மனம் வேறு எங்கும் செல்லாத தீவிர பக்தியினுல் மாத்திரமே என்னை இந்த உருவத்தில் அறிந்து கொள்ளவும், காணவும், உண்மையிலேயே இந்த உருவத்திற்குள் பிரவேசிக்கவும் முடியும்.*

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५ ॥

மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ ॥ 55

55. பாண்டவா, எனக்காக செயல் புரிபவனும், என்னை தன்னுடைய லட்சியமாகக் கொண்டவனும், என்னுடைய பக்தனும், பற்றுதலைத் துறந்தவனும், எவரிடமும் விரோதம் இல்லாதவனும் யாரோ அவன் மாத்திரமே என்னை வந்து அடைகிருன்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे विश्वरूपदर्शनयोगो
नाम एकादशोऽध्यायः ॥ ११ ॥

---

* இந்த ஊனக் கண்களால் கடவுளைக் காணமுடியாது. பக்தி ததும்பும்போது அன்பு மயமான சரீரம் ஒன்று நம் உள்ளே உருவாகின்றது. அந்தச் சரீரத்துக்கு அன்பு மயமான கண்களும் காதுகளும் உண்டு. அவற்ருல் நீ இறைவனைக் காணவும், இறைவன் கூறுவதைக் கேட்கவும் முடியும்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோகசாஸ்த்ரே
ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
விச்வரூபதர்சன யோகோ நாம
ஏகாதசோ (அ)த்யாய: ॥ 11

ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'விசுவரூப தரிசன
யோகம்' என்ற பதினொன்றுவது
அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# பக்தி யோகம்

## பன்னிரண்டாம் அத்தியாயம்

இவ்வாருக, அப்பழுக்கற்ற பக்தியினுல் மாத்திரமே கடவுளின் தோற்றத்தைக் காண்பது சாத்தியம் என்பதை நாம் பார்த்தோம். எனவே, பக்தியைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம் என்று ஏற்படுகிறது. மற்ற அத்தியாயங்களையெல்லாம் மனப் பாடம் செய்யாவிட்டாலும், இந்தப் பன்னிரண்டாவது அத்தியாயத்தையாவது மனப் பாடம் செய்து கொள்ளவேண்டியது அவசியம். கீதையில் உள்ள அத்தியாயங்களில் இதுதான் மிகச் சிறிய அத்தியாயம். ஒரு பக்தனின் லட்சணங்களை அக்கறையுடன் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

*[11, 12,-ஆவது அத்தியாயங்களைப் பற்றி, 12-1-1928 'எங் இந்தியா'வில் வெளியான எம். டி. யின் வாரக் கடிதத்தில் காந்திஜி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: "இறைவனின் எண்ணிக்கையற்ற உருவங்கள் அடங்கிய இந்த விசுவ ரூபத்தைக் காட்டிலும், நம்மைக் கடவுள் பக்கமாகத் திருப்பக் கூடிய அதிக சக்தி வாய்ந்தது வேறு என்ன இருக்க முடியும்? இவ்விதமாக, நம்மை பக்தி மார்க்கத்தை மேற்கொள்ளுவதற்கு ஆயத்தமாக இருக்கும்படி செய்துள்ள பகவான், 12-ஆம் அத்தியாயத்தில் பக்தியின் சாரத்தை நமக்குக் கொடுக்கிருர். இது மிக மிகச் சுருக்கமான ஓர் அத்தியாயம் ஆகும். எனவே, எவரும் இதை மனப்பாடம் செய்து கொண்டுவிட முடியும். அவ்விதம் ஒருவர் மனப் பாடம் செய்து கொண்டால், அவருக்கு ஏற்படும் சோதனைக் காலங்களில், அவர் அதன் உதவியை நாடலாம்."]*

अर्जुन उवाच

**एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।**
**ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥**

அர்ஜுன உவாச

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ‖ 1

அர்ஜுனன் கூறினன்:

அவ்விதம் இடைவிடாத் அன்புடன் வழிபடும் பக்தர்கள், அழிவற்ற பரம்பொருளை வழிபடுவோர் ஆகிய இவர்களுள் யார் சிறந்த யோகிகள் ஆவர்.

श्रीभगवानुवाच

सय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

ஸ்ரீபகவான் உவாச

மய்யாவேச்ய மனோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।
ச்ரத்தயா பரயோ பேதாஸ்தே மே யுக்ததமா மதா: ‖ 2

ஸ்ரீ பகவான் சொன்னார்:

2. என்னிடத்தில் மனத்தை நிலை நிறுத்தி, எப்போதும் பக்தியுடனும், மகத்தான நம்பிக்கையுடனும் என்னை யார் வழிபடுகிறார்களோ, அவர்களை நான் யோகிகள் என்று கருதுகிறேன்.

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥

யேத்வக்ஷர மனிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே ।
ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்த மசலம் த்ருவம் ‖ 3

3. அழிவற்ற, விவரிக்க முடியாத, உருவமற்ற, எங்கும் வியாபித்த, சிந்திக்க முடியாத, பாறைபோன்று அசைவற்ற, மாறுதலற்ற, பரம்பொருளை யார் வழிபடுகின்றார்களோ,

संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

ஸன்னியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸம புத்தய: ।
தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: ‖ 4

4. இந்திரியக் கூட்டங்களை பூரணமாக அடக்கியவர்களும், எல்லோரையும் சமபுத்தியுடன் நோக்குபவர்களும், எல்லோரு

டைய க்ஷேமத்திலும் தீவிர அக்கறையுடையவர்களுமான அவர்கள் என்னை அடைகிறார்கள்.

[புலன்களை எவ்விதம் முற்றிலும் அடக்கவேண்டும் என்பது, ஆறாவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. உருவமுள்ள கடவுளை வழிபடுவோர் தன்னடக்கத்துடன் இருக்க மாட்டார்கள் என்பதில்லை. எல்லாப் பலன்களையும் துறக்கும் மிக்க எளிதான மார்க்கத்தைப் பின்பற்றுவோர் கூட, தன்னடக்கத்தை மேற்கொண்டே அதைப் பின்பற்ற வேண்டியவர்களாக இருக்கிறார்கள். (11-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும்). இறைவனை வழிபடுவதில் அவர்கள் புலன்களுக்கு பூரண சுதந்திரம் அளிக்கலாம். உடல் இன்பத்தையொட்டிய விஷயங்களிலிருந்து மாத்திரமே அவர்கள் புலன்களைக் கட்டுப்படுத்த வேண்டியவர்களாக இருக்கிறார்கள். எனினும் அது, ஆறாவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விதம், இந்திரியங்களின் கூட்டத்தையே அடக்குவதைக் காட்டிலும் எளிதேயாகும்.]

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

க்லேசோ(அ)திகதரஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர் துஃக்கம் தேஹவத்பி ரவாப்யதே ‖ 5

5. உருவமற்ற பரம்பொருளில் மனத்தை நிலைநிறுத்துவோர், அதிகமான பிரயாசையை மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஏனெனில், உடல்கள் எடுத்த மனிதர்கள் பரம்பொருளை, லட்சியத்தை அடைவது கடினமாகும்.

தோன்றாத நிலையில் உள்ள, உருவமற்ற பரம்பொருளை நிலையற்ற மனிதன் கற்பனை மாத்திரமே செய்து கொள்ள முடியும். பரம் பொருளை விளக்க மனிதனின் பாஷையே சக்தியற்றதாக இருக்கிறது. எனவே அவன், 'நேதி', 'நேதி' (அது இல்லை, அது இல்லை) என்று எதிர் மறையாக விளக்க முற்படுகிறான். விக்கிரக வழிபாட்டை வெறுப்பவர்கள் கூட, விக்கிரகங்களை வணங்குவோரைக் காட்டிலும் அடிப்படையில் மேலானவர்கள் அல்ல. ஒரு நூலை வணங்குவது, கிறிஸ்தவாலயத்துக்குப் போவது, அல்லது குறிப்பிட்ட ஒரு திசையை நோக்கிய வண்ணம் தொழுவது-இவையெல்லாம், ஓர் உருவத்தில் அல்லது விக்கிரகத்தில் உள்ள உருவமற்ற ஒன்றை வழிபடும் முறைகளே ஆகும். இருந்தாலும், விக்கிரகங்களை உடைப்பவர்கள், விக்கிரகங்களை வழிபடுவோர் இரு சாராரும் ஓர் உண்மையை மறந்துவிடக் கூடாது. அதாவது, உருவங்களையெல்லாம் கடந்த, சிந்திக்க முடியாத, வடிவமற்ற, மாறுதலற்ற ஏதோ ஒன்று இருக்கிறது என்பதை அவர்கள்

மறந்துவிடக் கூடாது. பக்தனின் மகோன்னதமான லட்சியம், அவனது பக்திக்குக் காரணமான பொருளுடன் ஒன்ருகி விடுவதே. பக்தன் தன்னை சூன்யமாக்கிக் கொண்டு பகவானுடன் ஐக்கியமாகிவிடுகிருன், பகவாஞகவே ஆகிவிடுகிருன். ஏதாவது ஓர் உருவத்தில் பக்திவைத்து வழிபடுவதன் மூலம் இந்த நிலையைச் சிறந்த முறையில் அடையக் கூடும். அதனுல்தான், உருவமற்ற பரம்பொருளை வழிபடும் குறுக்குவழி, உண்மையில் மிகவும் தொலைவான, மிகவும் கஷ்டமான வழி என்று கூறப்படுகிறது.

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பரா: ।
அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே ‖ 6

6. ஆனல், தங்களுடைய எல்லாக் கர்மங்களையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, எல்லாவற்றிற்கும் நானே கதி என்று வேறு எதிலும் மனத்தைச் செலுத்தாமல் ஆழ்ந்த பக்தியுடன் என்னைத் தியானித்து யார் வழிபடுகிருர்களோ,

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் ।
பவாமி ந சிராத் பார்த்த மய்யாவேசித சேதஸாம் ‖ 7

7. பார்த்தா, அவ்விதம் யாருடைய சிந்தனைகள் என்னிடம் லயித்திருக்கின்றனவோ அத்தகையோரை, மரணமும், துன்பங்களும் நிறைந்த இந்த உலகமாகிற மகாசமுத்திரத்திலிருந்து நான் கரையேற்றுகிறேன்.*

[ரோமியர்களுக்கு செயின்ட் பால் எழுதிய பின்வரும் விகிதத்தை இந்த சுலோகம் நினைவூட்டுகிறது: "வெறுக்கத்தக்க, துரதிருஷ்டசாலியான என்னை, இறக்கும் தன்மை வாய்ந்த இந்த உடலிலிருந்து யார் விடுதலை செய்யப்போகிருர்கள்?" (7.24)

---

* அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது. —குறள்.

இ-ள். தருமக் கடலான இறைவனின் பாதங்களைப் பற்றிக் கொண்டாலன்றி, பிறவிக் கடலைத் தாண்டுவது கடினம்.

"பாவம், மரணம் என்ற விதியிலிருந்து ஏசு நாதரின் ஆன்ம விதி, என்னை விடுதலை செய்திருக்கிறது." 8.2-பைபிள்]

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய ।
நிவாஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்சய: ॥ 8

*8.* உன் மனத்தை என்மீது நிலைநிறுத்தி, என் மீது உறுதியான நம்பிக்கை வைப்பாயாக. அவ்விதமாயின், இதற்குப் பிறகு நீ என்னிடத்திலேயே இருப்பாய் (என்னையே அடைவாய்) என்பதில் ஐயமில்லை.

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनंजय ॥ ९ ॥

அத சித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி மயி ஸ்திரம் ।
அப்யாஸ யோகேன ததோ மாமிச்சாப்தும் தனஞ்ஜய ॥ 9

*9.* தனஞ்சயா, என் மீது உன் மனத்தை உறுதியுடன் நிலைநிறுத்த உன்னால் முடியாவிடில், பின்னர் இடைவிடாத பயிற்சியை (யோகாப்பியாசம்) மேற்கொண்டு என்னை அடைய முற்படுவாயாக.

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

அப்யாஸே(அ)ப்யஸமர்த்தோஸி மத்கர்ம பரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்திமவாப்ஸ்யஸி ॥ 10

*10.* இடைவிடாது பயிற்சி செய்யும் இந்த முறையையும் உன்னால் மேற்கொள்ள இயலாவிடில், எனக்குப் பணி செய்வதிலேயே உன் முழுமனத்தையும் செலுத்து. அவ்விதம் எனக்குத் தொண்டு செய்வதாலும் நீ மோட்சத்தை அடைவாய்.

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

அதைத தப்யசக்தோ(அ)ஸி கர்த்தும் மத்யோக மாச்ரித: ।
ஸர்வகர்ம பலத்யாகம் தத: குரு யதாத்மவான் ॥ 11

*11.* இதைக் கூட உன்னால் செய்ய முடியாவிட்டால், மனத்தைக் கட்டுப்படுத்தி, எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்து, செயல்களின் பலன்களையெல்லாம் துறந்துவிடுவாயாக.*

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥

ச்ரேயோ ஹி க்ஞான மப்யாஸாத் க்ஞானாத் த்யானம் விசிஷ்யதே ।
த்யானாத் கர்மபலத்யாகஸ் த்யாகாச்சாந்திரனந்தரம் ॥ 12

*12.* பயிற்சியை விட ஞானம் சிறந்தது; ஞானத்தைவிட தியானம் சிறந்தது; தியானத்தைவிட செயல்களின் பலனையெல்லாம் துறத்தல் மேலானது. இவ்விதம் துறப்பதால் உடனடியாக சாந்தி ஏற்படுகின்றது.

பயிற்சி என்பது மனத்தையொட்டிய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி தியான யோகத்தில் ஈடுபடுவதே யாகும். ஞானம், அறிவை அடிப்படையாகக் கொண்ட முயற்சி. தியானம், பக்தியுடன் கூடிய வழிபாடு. இவற்றையெல்லாம் மேற்கொண்டாலும் கூட, செயல்களின் (கர்மங்கள்) பலனைத் துறக்காவிட்டால், பயிற்சி, பயிற்சி அல்ல; ஞானம், ஞானம் அல்ல; தியானமும், தியானம் அல்ல.

[மொழி பெயர்ப்பாளர்கள், வியாக்கியான கர்த்தாக்கள் எல்லோருக்கும் இந்த சுலோகம் சிக்கறுக்க முடியாத ஒரு புதிராக இருந்து வருகிறது. ஹில்லைப் போன்ற சிலர், இதை விளக்கப் பெருமுயற்சி செய்திருக்கிறார்கள். மற்றவர்கள், இந்தக் கஷ்டத்தைச் சமாளிக்க முற்படவே இல்லை. அதன் சம்பந்தமான பல்வேறு விளக்கங்களையும் பற்றி விவாதிக்க இங்கே இடம் போதாது. காந்திஜியின் விளக்கம் உள்பட அவர்களில் பெரும்பாலோருடைய விளக்கங்களும் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. இதுவரையில் வெளியாகியுள்ள விளக்கங்களுள் விநோபாவின் விளக்கம்தான் சிறந்தது என்று என் மனத்திற்குத் தோன்று

---

*12 யாதனின் யாதனி னீங்கியான் நோதல்
அதனி னதனி னிலன். —குறள்.

இ-ள். மனிதன் எதைத் துறக்கிறானோ, அதனால் ஏற்படக் கூடிய துன்பத்திலிருந்து அவன் விடுதலை பெறுகிறான்.

கிறது. பி. சாஸ்திரியின் விளக்கமும் இதை அனுசரித்ததாக இருக்கிறது. இந்தக் கருத்தையே என்னுடைய விளக்கத்திலும் நான் மேற்கொண்டுள்ளேன் (264-ஆம் பக்கம் பார்க்கவும்). அதை இங்கே மேற்கொண்டு விவரிக்க முற்பட்டுள்ளேன்.

'எல்லாச் செயல்களின் பலனையும் துறப்பது' தான், எல்லா வற்றையும் விட மிகவும் எளிதான முறை என்று 11-ஆம் சுலோ கத்தில் கூறப்பட்டிருக்கிறது என்பதை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். அது எவ்வாறு எளிதாகும் என்பது, 12-ஆம் சுலோகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. அதற்கு, இடைவிடாத பயிற்சிதான் முதலாவது கட்டம். அடுத்தபடியாக, அதற்கு மேலான கட்டமும், முதலாவது கட்டத்தின் இயற்கையான பல னும், துறவின் ரகசியம் பற்றிய ஞானமேயாகும். அதற்கும் மேலான கட்டமும் இரண்டாவது கட்டத்தின் இயல்பான பல னும் தியானமே; அதாவது, அம்முறையில் ஒருமித்த மனத்துடன் கூடிய பக்தியேயாகும். இந்தக் கடைசி கட்டத்தின் பலனாக, எல் லாச் செயல்களின் பலனையும் பூரணமாகத் துறக்கும் ஆற்றல் உண்டாகின்றது. அப்பழுக்கற்ற பூரணமான இந்தத் துறவு நிலையே நிரந்தரமான சாந்தியைக் கொடுக்கின்றது.

விளக்க சம்பந்தமான இந்த சங்கடத்திற்கெல்லாம் காரணம், பல்வேறு அர்த்தங்களிலும் ஒரே சொல்லை உபயோகிக்கும் வழக் கத்தை கீதையின் ஆசிரியர் மேற் கொண்டிருப்பதுதான். வியாக் கியான கர்த்தாக்கள், 12-ஆம் சுலோகத்தை 8-10 சுலோகங்களு டன் இணைக்க முற்பட்டிருப்பதும் அதற்கு ஒரு காரணம் ஆகும். ஆனால் அதற்கு மாறாக, 12-ஆவது சுலோகத்தை முற்றிலும் தனி யாகப் பிரித்திருப்பதுபோல் காந்திஜியின் விளக்கம் தோன்று கிறது. 12-ஆவது சுலோகத்தை 11-ஆவது சுலோகத்துடன் இணைப்பதுதான் இயல்பாகவும் பொருத்தமாகவும் இருக்கும். 11-ஆம் சுலோகத்தில்தான் மிகவும் எளிதான முறை குறிப்பிடப் பட்டிருக்கிறது.

இந்த சுலோகத்திற்கும், அடுத்துள்ள சுலோகங்களுக்கும் காந்திஜி மற்றொரு சந்தர்ப்பத்தில் மேற்கொண்டு கொடுத்துள்ள பின்வரும் விளக்கத்தையும் வாசகர்கள் ஆலோசிக்க வேண்டும்:

“பகவானின் மகத்துவத்தைக் காதால் கேட்பது, பகவானைத் தியானம் செய்வது, பகவானின் மகிமையை அறிந்து கொள்வது என்ற மார்க்கம், யம, நியம, பிராணாயாம, யோகாசன மார்க்கத் தைக் காட்டிலும் எளிதாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இந்த மார்க்கத்தைப் பற்றி ஏற்கனவே நான் குறிப்பிட்டிருக் கிறேன். முதலில் கூறிய வழியைக் காட்டிலும் பகவானைத் தியா னம் செய்வதும், வழிபடுவதும் எளிதாக இருக்கலாம். தியான வழியைக் காட்டிலும் செயல்களின் பலன்களைத் துறப்பது அதிக எளிதாகும். ஒரே முறை, ஒவ்வொருவருக்கும் எளிதாக இருப்பது இயலாத காரியம். சிலர், இந்த எல்லா முறைகளின் உதவியை

யும் நாடும்படி நேரலாம். நிச்சயமாக அவை, ஒன்றுக் கொன்று இணைந்தே இருக்கின்றன. அது எப்படியாயினும், நீங்கள் பக்தர் களாக இருக்க ஆசைப்படுகிறீர்கள். உங்களால் இயன்ற எந்த முறையையாவது மேற்கொண்டு, அந்த லட்சியத்தை அடையுங் கள். என் கடமை என்னவெனில், இவர்களில் யாரை உண்மை யான பக்தன் எனலாம் என்பதைக் கூறுவதுதான்.''—'எராவ்டா மந்திர்.']

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

அத்வேஷ்டா ஸர்வபூதானும் மைத்ர: கருண ஏவச ।
நிர்மமோ நிரஹங்கார: ஸமது:க்க ஸுக: க்ஷமீ ॥ 13

*13.* யார் மீதும் துவேஷம் இல்லாதவனுக, எல்லோ ரிடத்திலும் நட்புக் கொண்டவனுக, எல்லோரிடத்திலும் கருணையுள்ளவனுக, 'என்னுடையது', 'நான்' என்ற எண் ணத்தை யெல்லாம் அறவே கைவிட்டவனுக, இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதுபவனுக, பொறுமையுடையவனுக,

संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சய: ।
மய்யர்ப்பித மனே புத்திர் யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 14

*14.* எப்போதும் போதும் என்ற மனத்திருப்தி யுடையவ னுக, யோகப் பயிற்சியில் அனுபவம் பெற்றவனுக, தன்னடக்கம் உள்ளவனுக, உறுதியான கொள்கையுடையவனுக, தனது மனத் தையும் அறிவையும் என்னிடம் அர்ப்பணம் செய்தவனுக யார் இருக்கிறுனே, என்னுடைய அத்தகைய பக்தனே எனக்குப் பிரிய மானவன்.

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मेप्रियः ॥ १५ ॥

யஸ்மான்னேத்விஜதே லோகோ லோகான்னேத்விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ 15

*15.* எவன் உலகத்திற்கு யாதொரு துன்பமும் இழைப்பதில்லேயோ, யாருக்கு உலகம் எவ்விதத் துன்பமும் இழைப்பதில்லேயோ, யார் மகிழ்ச்சி, கோபம், அச்சம், கலக்கம் ஆகியவற்றிலிருந்து விடுதலே பெற்றிருக்கிருனே, அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

**अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।**
**सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥**

அனபேக்ஷ: சுசிர்தக்ஷ உதாஸீனே கதவ்யத: ।
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 16

*16.* எதையும் விரும்பாதவனும், தூய்மையானவனும், திறமையுடையவனும், பற்றின்றி எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனும், கவலேயற்றவனும், புதிய பொறுப்புகளே மேற்கொள்ளாதவனும் யாரோ அவனே எனக்குப் பிரியமானவன்.

**यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।**
**शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७ ॥**

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுப பரித்யாகீ பக்திமான் ய: ஸ மே ப்ரிய: ॥ 17

*17.* யார் மகிழ்ச்சி அடைவதில்லேயோ, துவேஷத்தினுல் அலட்டிக் கொள்வதில்லேயோ, துக்கப்படுவதில்லேயோ, ஆசைப்படுவதில்லேயோ, நல்லது கெட்டது எல்லாவற்றையும் துறந்து விடுகின்ருனே, அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

**समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।**
**शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥**

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா மானுபமானயோ: ।
சீதோஷ்ண ஸுகது:க்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥ 18

*18.* விரோதியையும் நண்பனேயும் ஒரே விதமாக நடத்துபவனும், மானம்–அவமானம், குளிர்–உஷ்ணம், இன்பம்–துன்பம்

ஆகியவற்றை சமமாகக் கருதுபவனும், பற்றுதலிலிருந்து விடுதலை பெற்றவனும்,

तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

துல்ய நிந்தா ஸ்துதிர்மௌனீ ஸந்துஷ்டோ யேன கேனசித் ।
அனிகேத: ஸ்திரமதிர் பக்திமான் மே ப்ரியோ நர: ॥ 19

*19.* புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் ஒன்ருகக் கருதுபவனும், மௌனமாக இருப்பவனும், தனக்குக் கிடைத்ததைக் கொண்டு சந்தோஷத்தை அடைபவனும், சொந்த இருப்பிடம் இல்லாதவனும், உறுதியான மனம் படைத்தவனும் யாரோ, அந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

[*13-19.* அப்பழுக்கற்ற ஒரு சிறந்த பக்தனின் முக்கிய அம்சங்களைப் பற்றிய இந்த வர்ணனைக்குப் பல உதாரணங்கள் கூறலாம். எனினும், பெனலன்* எழுதியுள்ள நூலிலிருந்து ஒரு பகுதியை இங்கே குறிப்பிடுவது போதுமானது. பக்தி என்பது உண்மையான எளிய வாழ்க்கையே என்று அவர் கூறுகிருர்: "உண்மையான எளிய வாழ்க்கை என்பது யாதொரு தங்குதடையுமின்றியும், தன்னை மறந்தும் தந்தையிடம் (கடவுளிடம்) நம்மை அர்ப்பணம் செய்துகொண்டு விடுவதேயாகும். அதனுல் உள்ளம் எவ்வளவு தூரம் விரிவடைகின்றது என்பதை அனுபவத்தின் மூலம் தான் நாம் உணர்ந்து கொள்ள முடியும். அப்போது நாம் தன் தந்தையின் கைகளில் இருக்கும் ஒரு குழந்தையைப் போலாகிவிடுகிருேம். அப்போது அதை விட அதிகமாக நாம் விரும்புவது எதுவும் இல்லை; எதைக் கண்டும் நாம் அஞ்சுவதில்லை. தூய்மையான இந்த அன்பிற்கு நம்மை நாம் அர்ப்பணம் செய்து கொண்டுவிடுகிருேம். நமது நலன்கள், இன்பம், புகழ் எல்லாவற்றையும் கடவுளின் கையில் ஒப்படைத்துவிடுகிருேம். நம்மீது அவர் சுமத்தக்கூடிய துன்பங்களையெல்லாம் நாம் வரவேற்கிருேம். அவர் மீது நமக்கு உள்ள அன்பை மதிப்பிடுவதற்கான சோதனைகளாகவே அவற்றைக் கருதுகிருேம். உள்ளத் தூய்மையுடன் இருக்கும் சிலர் மற்றவர்களுடன் சுமுகமாக இருப்பதில்லை; மற்றவர்களும் அவர்களுடன் சுமுகமாக இருப்பதில்லை. எனினும் உண்மையில் எளிய வாழ்க்கை நடத்தும் ஒருவன், மற்றவர்களுடன் அமைதியாகவும் சுமுகமாகவும் பழகுகிருன்; மற்றவர்களும் அவனுடன் அமைதியாகவும் சுமுகமாகவும் பழகுகின்றுர்கள்."

---

* பிரான்ஸில் இலக்கிய மேதாவியாக விளங்கிய பெனலன் (1651-1715) பிரஞ்சு மொழியில் பல அரிய நூல்கள் எழுதியுள்ளார். அவர் பிரான்ஸைச் சேர்ந்த ஒரு மாகாணத்தில் பாதிரிமார்களின் தலைவராக இருந்தார்.

இந்தக் கடைசி வரி, *15*-ஆவது சுலோகத்தின் கருத்தை மிகவும் அழகாக எதிரொலிக்கின்றது.

*19.* சமத்துவ புத்தி, இருமைகளையெல்லாம் சமமாகக் கருதுவது, நண்பனையும் விரோதியையும் ஒரே விதமாக நடத்துவது, "சொர்க்கத்தில் உள்ள அப்பழுக்கற்ற தந்தையைப் போலவே அப்பழுக்கற்றிருப்பது'' ஆகியவற்றைப்பற்றி ஏற்கனவே நான் விவரித்துள்ளேன். ஆனால், மௌனம் என்ற அதிகப்படியான ஒரு விசேஷ குணம் இந்த சுலோகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. மனத்தையொட்டிய அல்லது ஆன்மிகத் தவத்தின் அம்சங்களில் ஒன்ருக மௌனத்தையும் அத்தியாயம்-*17*, சுலோகம்-*16*-இல் நாம் காண்கிறோம்.

மௌனம் என்ருல் வாயளவில் பேசாமல் இருப்பது அல்ல. ருஷ்ய ஆசிரியர் கூறுவது போல் அது உள்ளத்தின் மௌனத்தையே குறிக்கிறது. தத்துவ ஆராய்ச்சி நிபுணரான ஆர்ஸென்யூ கூறுவதாவது: "மௌனம் என்பது ஆன்மாவின் மௌனத்தையே குறிக்கின்றது. அதாவது வெறிக்குணங்களின் ஆர்ப்பாட்டத்திலிருந்து விலகியிருப்பதும், மௌனமாகவும் வேறு சிந்தனையின்றி மனப்பூர்வமாகவும், உள்ளத்தின் இடைவிடாத பிராத்தனையுடனும் கடவுளிடம் முழுமனத்தையும் செலுத்துவதுமேயாகும். அதாவது, 'நான் தூங்குகிறேன்; ஆனால், என் உள்ளம் தூங்காமல் கண்காணிப்புடன் இருந்துவருகிறது' என்ற நிலையே ஆன்மிக மௌனமாகும்."]

**ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।**
**श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥**

**யே து தர்ம்யாம்ருத மிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।**
**ச்ரத்ததாணு மத்பரமா பக்தாஸ்தே(அ)தீவ மே ப்ரியா : ॥ 20**

*20.* நான் கூறியுள்ள விதம் தர்மத்தின் சாரமான இதை, யார் நம்பிக்கையுடனும், என்னை லட்சியமாகக் கொண்டும் பின்பற்றுகிருர்களோ, அத்தகைய பக்தர்கள்தான் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

['தர்ம்யாம்ருதம்' என்ற சொல்லை, 'தர்மத்தின் சாரம்' என்று நான் மொழி பெயர்த்திருக்கிறேன். பிறப்பு இறப்பற்ற நிலையை அடைவதற்கு வழி காட்டும் தர்மம் என்றும் மொழி பெயர்க்கலாம். அல்லது காந்திஜி மொழிபெயர்த்திருப்பதுபோல, 'இந்தப் புனிதமான சித்தாந்தத்தின் உருவத்தில் அமுதம்' என்றும் மொழி பெயர்க்கலாம். எனினும், 'தர்மத்தின் சாரம்' என்ற மொழி பெயர்ப்புதான் சிறந்தது என்று நான் நினைக்கிறேன்

ஏனெனில், இதுதான் ஒன்பதாவது அத்தியாயத்தின் இரண்டாவது சுலோகத்தில் உள்ள கருத்துக்குப் பொருத்தமாக இருக்கிறது. அங்கே 'தர்ம்யம்' என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது, அங்க ஆரம்பமாகிய இவ்விஷயத்தைப் பற்றிய விளக்கம் இங்கேதான் முடிவடைகின்றது.

"இந்த பக்தர்கள் பகவானுக்கு ஏன் மிகவும் பிரியமானவர்களாக இருக்கிறார்கள்?'' என்று தீவிர புத்திசாலியான ஒரு வியாக்கியான கர்த்தா ஒரு கேள்வி ஒன்றைக் கேட்டு, அதற்கு விடையும் அளித்துள்ளார். உதாரணமாக விளங்கக் கூடிய அப்பழுக்கற்ற பக்தனைப்பற்றி 12-19 சுலோகங்கள் விவரிக்கின்றன. ஒருவர் உருவமுள்ள கடவுளை வழிபட்டாலும், உருவமற்ற கடவுளை வழிபட்டாலும், அத்தகைய சிறந்த பக்தரைக் காண்பது அரிது என்று அந்த வியாக்கியான கர்த்தா கூறுகிறார். அத்தகைய சிறந்த பக்தர் ஆவதற்கு முயற்சிப்போரைப் பற்றி 20-ஆம் சுலோகம் குறிப்பிடுகிறது. அத்தகையோர்தான், கடவுளுக்கு மிகவும் பிரியமானவர்கள் என்றும், ஏனெனில் மற்றவர்கள் ஏற்கனவேயே லட்சியத்தை அடைந்து விட்டதால் புதல்வனைக் காட்டிலும் பேரனிடம் பாட்டனுக்கு அதிகமான பிரியம் இருப்பது போல மேற்கண்டவாறு முயற்சி செய்வோர்தான் கடவுளின் விசேஷமான அருளுக்குப் பாத்திரமானவர்கள் என்றும் அவர் வியாக்கியானம் செய்துள்ளார்!]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे भक्तियोगो नाम द्वादशोऽध्याय: ॥ १२ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
பிரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
பக்தி யோகோ நாம
த்வாதசோ (அ)த்யாய:||-12

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில்
பிரம்ம ஞானத்தின் ஓர் அம்சமான யோக
சாஸ்திரத்தைப் பற்றி ஸ்ரீகிருஷ்ண
பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில்
'பக்தி யோகம்' என்ற
பன்னிரண்டாவது அத்தியாயம்
இவ்வாறாக முடிவுறுகின்றது.

# உடலும் ஆன்மாவும்

## பதின்மூன்றாம் அத்தியாயம்

உடலுக்கும் (ஆன்மா அல்லாதது), ஆன்மாவுக்கும் உள்ள வேற்றுமையை இந்த அத்தியாயம் விவரிக்கின்றது.

श्रीभगवानुवाच

इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।

एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே ।

ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: ॥ 1

ஸ்ரீபகவான் கூறினார்:

1. கௌந்தேயா, இந்த உடலே க்ஷேத்திரம்* என்று கூறப்படுகிறது. இதை யார் அறிகின்றானோ அவன் க்ஷேத்திரத்தை அறிந்தவன் (க்ஷேத்திரக்ஞன்) என்று கூறப்படுகிறான்.

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।

क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ २ ॥

க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோர் க்ஞானம் யத் தத் க்ஞானம் மதம் மம ॥ 2

2. எல்லா க்ஷேத்திரங்களிலும் க்ஷேத்திரத்தை அறிந்தவன் நான்தான் என்பதை அறிந்து கொள். க்ஷேத்திரத்தையும், க்ஷேத்திரத்தை அறிந்தவனையும் பற்றிய ஞானமே உண்மையான ஞானம் என்பது என்னுடைய உறுதி.

---

* க்ஷேத்திரம் என்றால் வயல் என்றும் அர்த்தம் உண்டு. அதாவது வயலைப் போல் கர்மங்களாகிற விதைகள் முளைத்து வளரும் இடமான உடல்.

तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३ ॥

தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத் விகாரி யதச்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவச்ச தத் ஸமாஸேன மே ச்ருணு ॥ 3

3. க்ஷேத்திரம் என்ருல் என்ன? அதன் இயல்பு எத்தகையது? அதன் வேறுபாடுகள் என்ன? எதிலிருந்து எது தோன்றியது? இன்னும் க்ஷேத்திரக்ஞன் என்ருல் யார்? அவனது சக்தி என்ன? இதையெல்லாம் பற்றி சுருக்கமாக என்னிடமிருந்து கேட்டுக் கொள்.

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४ ॥

ரிஷிபிர் பஹுதா கீதம் சந்தோபிர் விவிதை : ப்ருதக் ।
ப்ரஹ்ம ஸூத்ர பதைச் சைவ ஹேதுமத்பிர் விநிச்சிதை : ॥ 4

4. இவ்விஷயமாக ரிஷிகள் தெளிவாகவும், பல்வேறு விதமாகவும், பலவிதமான சந்தங்களிலும், சரியான காரணங்களுடனும், சந்தேகத்துக்கு இடமின்றியும் பிரம்மத்தைப் பற்றிய சூத்திர நூல்களிலும் கானம் செய்திருக்கிருர்கள்.

महाभूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ५ ॥

மஹாபூதான்யஹங்காரோ புத்தி ரவ்யக்த மேவ ச ।
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச சேந்த்ரிய கோசரா : ॥ 5

5. மகாபூதங்கள், அகங்காரம், அறிவு, கண்ணுக்குத் தெரியாதது, பத்து புலன்கள், ஒரு மனம், புலன்களுக்கான ஐந்து விஷயங்கள்,.

[பிரகிருதியின் 24 அம்சங்களைப் பற்றியும், மனத்தின் வேறுபாடுகளைப் பற்றியும், மனம் உடலின் ஓர் அம்சமே, ஆன்மா அல்ல என்பது பற்றியும் 'எனது சமர்ப்பண'த்தில் நான் விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறேன்.]

इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६ ॥

இச்சா த்வேஷ : ஸுகம் து:க்கம் ஸங்காதச் சேதனு த்ருதி :।
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார முதாஹ்ருதம்॥ 6

6. ஆசை, வெறுப்பு, இன்பம், துன்பம், தொடர்பு, உணர்வு, உடலையும் புலன்களையும் இணைக்கும் உறுதி ஆகியவைதான், மாறுபாடுகளுடன் கூடிய க்ஷேத்திரம் ஆகும்.

மேற்கண்ட சுலோகங்களில் மகாபூதங்கள் என்பது மண், தண்ணீர், தீ, காற்று ஆகாயம் ஆகியவற்றைக் குறிக்கிறது. அகங்காரம் என்பது 'நான்' என்ற எண்ணம், அல்லது உடல் தான் நான் என்ற எண்ணம். கண்ணுக்குத் தெரியாதது என்பது பிரகிருதி அல்லது மாயை. பத்து புலன்களாவன: வாசனை, ருசி, பார்ப்பது, தொடுவது, கேட்பது முதலிய உணர்வுப் புலன்கள் ஐந்து; கைகள், கால்கள், நாக்கு, மலஜல உறுப்புகள் ஆகிய ஐந்தும் செயல்களில் ஈடுபடும் புலன்கள். முகர்வது, ருசிப்பது, உருவங்களைப் பார்ப்பது, தொடுவது, கேட்பது ஆகியவை புலன்களுக்கான விஷயங்களாகும். பல்வேறு புலன்களையும் பரஸ்பரம் ஒத்துழைக்கும்படி செய்வதே சுலோகத்தில் உள்ள 'ஸங்காதம்' என்ற சொல்லுக்கு அர்த்தம். இங்கே 'த்ருதி' என்பதற்கு பொறுமை அல்லது மாருத மன உறுதி என்று பொருள் அல்ல; உடலில் உள்ள எல்லா அணுக்களையும் ஒன்று சேர்த்து உறுதியாக இணைப்பது என்பதே அர்த்தம். இந்த இணைப்பு, அகங்காரத்திலிருந்தே எழுகின்றது. அகங்காரம், தோன்ரு நிலையில் உள்ள பிரகிருதியுடன் இயல்பாகவே இணைந்திருக்கிறது. இந்த அகங்காரத்தையோ அல்லது 'நான்' என்ற எண்ணத்தையோ உதறித் தள்ளுபவனே மதிமயக்கம் தீர்ந்த, மாயையிலிருந்து விடுபட்ட மனிதன் ஆவான். அவ்விதம் உதறித் தள்ளியவனைப் பாதிக்க, தவிர்க்க முடியாத மரணத்தினுல் ஏற்படும் அதிர்ச்சியோ, புலன்களின் தொடர்பால் ஏற்படும் இருமை உணர்ச்சிகளோ சக்தியற்றவையாக இருக்கின்றன. க்ஷேத்திரம் பல்வேறு மாறுதல்களுக்கு உட்பட்டது. ஞானிகளும் சரி, அஞ்ஞானிகளும் சரி, இறுதியில் அந்த க்ஷேத்திரத்தை (உடலை) துறக்கவேண்டியவர்களாகவே இருக்கிருர்கள்.

अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥

அமானித்வ மதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ।
ஆசார்யோபாஸனம் சௌசம் ஸ்தைர்ய மாத்ம விநிக்ரஹ : ॥ 7

7. இறுமாப்பிலிருந்து விடுதலே, டம்பமின்மை, அஹிம்சை, மன்னிக்கும் குணம், நேர்மை, குருவுக்குத் தொண்டு, தூய்மை, மன உறுதி, தன்னடக்கம்,

[ஞானத்தை அடைய விரும்புவோனுக்கு, இறுமாப்பிலிருந்து விடுதலே பெறுவதே முதல் தர்மமாக விதிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஏனெனில், இறுமாப்பு ஒரு பாவமாகும். உடல் சம்பந்தமான எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலே பெறுவதில் வெற்றிபெற்றுல் கூட, இறுமாப்பைக் கைவிடுவது கடினமாக இருக்கிறது. அது மிகவும் நுட்பமானதாக இருப்பதால், இறுதி வரையில் அதை ஒருவர் உணர்ந்து கொள்ளாமலும் இருந்துவிடலாம். பணிவு என்ற போர்வையில் கூட அது பதுங்கிக் கொண்டிருக்கக் கூடும். மார்க்கஸ் ஆரிலியஸ் கூறுவதாவது, "தனது பணிவைக் குறித்து இறுமாப்பு அடைவதைக் காட்டிலும் மானக்கேடான விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது."]

इन्द्रियार्थेषु वैराग्यमनहंकार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८ ॥

இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் அனஹங்கார ஏவ ச ।
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க்க தோஷானு தர்சனம் ‖ 8

8. புலன்களுக்கான விஷயங்களே வெறுத்தல், கர்வமின்மை, பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி ஆகியவற்றிலுள்ள துன்பங்களேயும் தீமைகளேயும் உணருதல்,

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९ ॥

அஸக்திரனபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு ।
நித்யம் ச ஸமசித்தத்வம் இஷ்டானிஷ்டோப பத்திஷு ‖ 9

9. பற்றின்மை, குழந்தைகள், மனேவி, வீடு, குடும்பம் ஆகியவற்றில் உழன்று கொண்டிருக்க மறுத்தல், நன்மை, தீமை எது ஏற்பட்டாலும் அவற்றைச் சமமாகக் நினேத்தல்,

['குழந்தைகள், மனேவி, வீடு, குடும்பம் ஆகியவற்றில் உழன்று கொண்டிருக்க மறுத்தல்' என்பதற்கு பைபிளிலும் அழகான உவமை இருக்கிறது. "எந்த மனிதனுவது தன் தந்தை, தாய், மனேவி, குழந்தைகள் ஆகியோரை வெறுக்காமல் என்னிடம் வருவானுயின், அவன் என்னுடைய சீடனுக இருக்க முடியாது." -லூக் *14-26* (பைபிள்)

குரான் கூறுவதாவது: "பாருங்கள்! உங்களுடைய மனைவிகள், குழந்தைகள் ஆகியோரிடையே உங்களுக்கு விரோதிகள் இருக்கிறார்கள்; ஆகையால் அவர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள்." (*64–14*)

"வேறு எவ்வித சிந்தனையுமின்றி இறைவனிடம் அப்பழுக்கற்ற பக்தியுடன் இருக்கவேண்டும்" என்பதே அந்த மேற்கோள்களின் கருத்து. குரான் கூறுவது போல், பக்தியில் வேறு யாருக்கும் பங்கு இருக்க முடியாது.

"அல்லாவை நினைப்பதிலிருந்து, உங்களுடைய செல்வமோ, அல்லது குழந்தைகளோ, உங்கள் மனத்தைத் திருப்பித் தடுமாறும்படி செய்ய விடாதீர்கள்" -குரான்-*63. 9*]

**मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।**

**विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १० ॥**

மயி சானன்யயோகேன பக்தி ரவ்யபிசாரிணீ ।

விவிக்த தேச ஸேவித்வம் அரதிர் ஜன ஸம்ஸதி ॥ 10

*10.* என்னிடத்தில், வேறு எதிலும் சிந்தனையற்ற ஆழ்ந்த பக்தி, தனிமையான இடங்களில் இருக்க விருப்பம், ஜனக் கூட்டத்தில் வெறுப்பு,

[தனி இடத்தை நாடுவதும், மௌனமாக இருப்பதும் (அத்தியாயம்-*12*, சுலோகம் -*19*) உண்மையான பக்தனின் லட்சணங்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பது 'இமிடேஷன் ஆப் கிறைஸ்டி'ல் அற்புதமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது: "தனிமையை விரும்புகிறவனே, பொது இடங்களில் எச்சரிக்கையுடனும் நம்பிக்கையுடனும் இருக்க முடியும். மௌனத்தை விரும்புகிறவனே, எச்சரிக்கையுடனும் நம்பிக்கையுடனும் பேசமுடியும்."]

**अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।**

**एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११ ॥**

அத்யாத்ம க்ஞான நித்யத்வம் தத்வக்ஞானார்த்த தர்சனம் ।

ஏதத் க்ஞானமிதி ப்ரோக்தம் அக்ஞானம் யததோ(அ)ன்யதா । 11

*11.* ஆன்மாவின் இயல்பு பற்றிய உறுதியான ஞானம், மெய்ப் பொருள் ஞானமாகிய லட்சியத்தை ஆராய்ச்சி செய்து அறிந்து கொள்ளுதல் ஆகிய இவை யெல்லாம் ஞானம் என்றும்,

இவற்றிற்கு மாறுனவை யெல்லாம் அஞ்ஞானம் என்றும் கூறப்படுகிறது.

[*7-11.* இறுதியான லட்சியம் ஞானமே. அந்த லட்சியத்தில் அதை அடைவதற்கான வழிகளும் அடங்கியிருப்பது குறிப்பிடத் தக்கது. வழிகளின்றி இறுதியான லட்சியத்தை அடைய முடியாது. மேற்கண்ட சுலோகங்களுக்கு பைபிளில் உள்ள பின்வரும் வாக்கியங்களைச் சிறந்த உவமையாகக் கூறலாம்:

"உங்களுடைய விடாமுயற்சியுடன் நம்பிக்கையையும், உங்கள் நம்பிக்கையுடன் நெறியையும், நெறியுடன் ஞானத்தையும், ஞானத்துடன் தன்னடக்கத்தையும், தன்னடக்கத்துடன் பொறுமையையும், பொறுமையுடன் தெய்வத்தன்மையையும், தெய்வத்தன்மையுடன் சகோதர அன்பையும், சகோதர அன்புடன் தர்ம குணத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள். இவையெல்லாம் உங்களிடம் நிறைந்திருக்குமாயின், ஏசு நாதரைப் பற்றிய உங்களுடைய ஞானம் வீணுகவோ, பலனற்றதாகவோ ஆகாது. ஆனல் இவையெல்லாம் இராதவன் குருடனுவான். அவனல் அதிக தூரம் பார்க்க முடியாது. அவன் பழைய பாவத்திலிருந்து தான் தூய்மையாகியிருப்பதை மறந்துவிடுவான்." பீட்டர்- 2-1. 5-9 பைபிள்]

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वामृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १२ ॥

க்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யத் ஞாத்வா(அ)ம்ருத மச்னுதே ।
அனுதிமத் ப்ரம் பரஹ்ம ந ஸத் தன்ன ஸதுச்யதே ॥ 12

*12.* எதை நீ அறிந்து கொள்ள வேண்டுமோ, எதை அறிந்தால் பிறப்பு இறப்பற்ற மோட்சம் கிடைக்குமோ, அதை நான் உனக்கு (இப்போது) விவரித்துக் கூறுகிறேன். அது இதுதான்: எல்லாவற்றிற்கும் மேலான பிரம்மத்திற்கு ஆதியில்லை. அது இருப்பதாகவும் கூறமுடியாது, இல்லை என்றும் கூறமுடியாது.

மகோன்னதமான பரம்பொருளை இருப்பதாகவோ அல்லது இல்லாததாகவோ கூற முடியாது. அது விளக்கத்திற்கோ, வர்ண

---

12. *இந்த சுலோகத்தில் உள்ள 'ஸத்', 'அஸத்' என்ற இரு சொற்களுக்கும் திலகர் 'கீதா ரகஸ்ய'த்தில் நீண்ட வியாக்கியானம் எழுதியுள்ளார். அதன் சாரம் இதுதான்: 'ஸத்' என்ற சொல் உருவமற்ற பரபிரம்மத்தைக் குறிக்கிறது. 'அஸத்' என்ற சொல் உருவமுள்ள, கண்களுக்குத் தெரியும் பிரபிரம்மத்தை அதாவது உலகத்தைக் குறிக்கிறது.* —திலகர்.

னக்கோ அப்பாற்பட்டது ; அது எல்லா குணங்களுக்கும் அப் பாற்பட்டது.

[இங்கே கீதையின் சுலோகத்தில் உள்ள சொற்கள், வேத மந்திரத்தில் உள்ள சொற்களைப் போலவே இருக்கின்றன. இது, அத்தியாயம் - 9, சுலோகம்-19-இல் உள்ள குறிப்பில் விவரிக்கப் பட்டிருக்கிறது. எனினும், அந்த சுலோகத்தில் உருவம் உள்ள கடவுளைப் பற்றி மாத்திரமே விவரிக்கப்பட்டிருக்கிறது. இங்கே பரபிரம்மத்தை உருவம் இல்லாதவராகவும் வர்ணிக்கப்பட்டுள் ளது. அதனுல்தான் கீதையின் ஆசிரியர் சாத்தியமான எல்லா குண விசேஷங்களையும் குறிப்பிட்டு, பரபிரம்மத்தை வர்ணிக்க அவையும் போதவில்லை என்ற வழக்கமான முறையையும் கையாண்டுள்ளார். நமது பாஷை ஒரு எல்லைக்கு உட்பட்டது. பிரம்மத்தை வர்ணிக்க அந்த பாஷையை உபயோகிக்க முற்படும் அந்த விநாடியிலேயே, பிரம்மத்தை நாம் எல்லைக்கு உட்படுத்தி விடுகிறோம். எல்லையில்லாததை எல்லையுள்ள இனங்களில் சிறைப்படுத்துவது வீண் வேலையாகும். பின்வரும் சுலோகங் களில் உள்ள முரண்பாடுகளை அறிந்து கொள்வதற்கான உண்மையான திறவுகோல் இந்த சுலோகமே யாகும்.]

सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतःश्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३ ॥

ஸர்வத : பாணிபாதம் தத் ஸர்வதோ(அ)க்ஷி சிரோமுகம்।
ஸர்வத : ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥ 13

*13.* அது எல்லாவிடங்களிலும் கைகளும், கால்களும் உடை யது; எல்லாவிடங்களிலும் கண்களும், தலைகளும், வாய்களும், எல்லாவிடங்களிலும் காதுகளும் உடையது. அது உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் தழுவிக்கொண்டு அவற்றில் நிலைபெற் றிருக்கிறது.

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४ ॥

ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம்।
அஸக்தம் ஸர்வப்ருச் சைவ நிர்க்குணம் குணபோக்த்ருச ॥ 14

*14.* புலன்களின் நடவடிக்கைகளை அது மேற்கொண்டுள்ள தாகத் தோன்றினுலும், அது புலன்கள் அற்றதாக இருக்கிறது. அது எதையும் தொடுவதில்லை; ஆனுல் அது எல்லாவற்றையும்

தாங்கி நிற்கிறது. அதற்கு குணங்கள் இல்லை; எனினும் குணங்களில் அதற்கு அனுபவம் இருக்கிறது.

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥ १५ ॥

பஹிரந்தச்ச பூதானும் அசரம் சரமேவ ச ।
ஸூக்ஷமத்வாத் ததவிக்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத் ॥ 15

*15.* அது எல்லா உயிர்களுக்கும் வெளியில் இருந்தாலும், எல்லாவற்றின் உள்ளேயும் இருக்கிறது. அது அசைவற்றிருந்தாலும் அசைந்து கொண்டும் இருக்கிறது. அது மிகவும் நுட்பமானதாக இருப்பதால், அறிந்து கொள்ள முடியாததாக இருக்கிறது. அது மிகவும் தொலைவில் இருக்கிறது; எனினும், மிகவும் அருகிலும் இருக்கிறது!

அதை அறிபவன் அதன் உள்ளே இருக்கிறான், அதற்கு அருகில் இருக்கிறான். நாம் போவதற்கும், நிற்பதற்கும், சாந்தியுடன் இருப்பதற்கும், அமைதியற்றுத் தவிப்பதற்கும் அதுதான் காரணம். ஏனெனில், அது அசைந்துகொண்டிருக்கிறது; இருந்தாலும் அசைவற்றும் இருக்கிறது.

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६ ॥

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ।
பூதபர்த்ரு ச தத் க்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ॥ 16

*16.* அது பிரிக்க முடியாததாயினும், அது பிரிந்து எல்லா உயிர்களிடத்திலும் இருப்பது போலவே தோன்றுகிறது. இந்த பிரம்மத்தை, எல்லாவற்றையும் பாதுகாப்பதாக அறிந்து கொள்ள் வேண்டும். அப்படியிருந்தும், அது எல்லாவற்றையும் அழிப்பதாகவும் படைப்பதாகவும் இருக்கிறது.

---

15. தண்ணீருக்குள் வைக்கப்பட்ட ஒரு பாத்திரத்தில் உள்ளும் புறமும் தண்ணீர் நிறைந்திருக்கிறது. அதுபோலவே, இறைவனிடத்தில் லயித்துள்ள ஆன்மா, எங்கும் வியாபித்துள்ள பரமாத்மாவை உள்ளும் புறமும் பார்க்கிறது. —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १७ ॥

ஜ்யோதிஷாமபி தஜ்யோதிஸ் தமஸ : பரமுச்யதே ।
க்ஞானம் க்ஞேயம் க்ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் ॥ 17

*17.* ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக விளங்கும் அது, இருளுக்கு அப்பால் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஞானமும், ஞானத்திற்கான சாதனமும், ஞானத்தினுல் மாத்திரமே அடையக்கூடியதும் அதுதான். அது எல்லோருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கிறது.

[*13-17.* பல்வேறு உபநிடதங்களிலும் பரம்பொருளைப்பற்றிய வர்ணனைகள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து இந்த சுலோகங்களில் கொடுக்கப்பட்டுள்ளது. பரபிரம்மத்தின் உருவத்துடன் கூடிய அம்சங்களும், உருவமற்ற அம்சங்களும் இங்கே தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

*16*-ஆம் சுலோகம் முழுவதும், *14*-ஆம் சுலோகத்தின் முதல் பாதியும் சுவேதாசுவதர உபநிடதத்திலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.*

*15*-ஆம் சுலோகத்தின் ஒரு பகுதி ஈச, முண்டக உபநிடதங்களில் உள்ள கருத்தையே திருப்பிக் கூறுகிறது.†

---

* सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥

श्वेताश्वतर ३–१६

ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோ(அ)க்ஷி சிரோமுகம் ।
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வ மாவ்ருத்ய திஷ்டிதி ॥

—ச்வேதாச்வதர உபநிடதம் – 3-16

† तदेजति तन्नैजति तद्दूरे तद्वन्तिके ।
तदन्तरस्य सर्वस्य तदु सर्वस्यास्य बाह्यतः ॥

ईश ५

ததேஜதி தன்னைஜதி தத்தூரே தத்வந்திகே ।
ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத: ॥

—ஈச உபநிடதம் – 5

*16-17*-ஆம் சுலோகங்களின் பகுதிகள் பிருகதாரண்யக, சுவேத, தைத்திரீய உபநிடதங்களில் உள்ள வாக்கியங்களைப் போலவே இருக்கின்றன.‡

*16*-ஆம் சுலோகத்தில் உள்ள 'இவ' (போல) என்ற சொல், முரண்பாடாக இருப்பவைபோல் தோன்றும் அம்சங்களை சீர் படுத்துவதாக இருக்கிறது. அந்த வாக்கியமாவது: "பிரம்மம்

---

वृहच्च तद्दिव्यमचिन्त्यरूपं
सूक्ष्माच्च तत्सूक्ष्मतरं विभाति ।
दूरात्सुदूरे तदिहान्तिके च
पश्यत्स्विहैव निहितं गुहायाम् ॥
मुण्डक ३-१-७

*ப்ருஹச்ச தத்திவ்ய மசிந்த்ய ரூபம்*
*ஸூக்ஷ்மாச்ச தத்ஸூக்ஷ்மதரம் விபாதி ।*
*தூராத்ஸுதூரே ததி ஹாந்திகே ச*
*பச்யத்ஸ்விஹைவ நிஹிதம் குஹாயாம் ॥*
*முண்டக உபநிடதம்* - 3-1-7

‡ यस्मादर्वाक्संवत्सरोऽहोभिः परिवर्तते ।
तद्देवा ज्योतिषां ज्योतिरायुर्होपासतेऽमृतम् ॥
वृहदारण्यक ४-४-१६

*யஸ்மாதர்வாக் ஸம்வத்ஸரோ(அ) ஹோபி: பரிவர்த்ததே ।*
*தத் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதிராயுர் ஹோபாஸதே(அ)ம்ருதம் ॥*
*ப்ருஹதாரண்யக உபநிடதம்* - 4-4-16

वेदाहमेतं पुरुषं महान्तम्
आदित्यवर्णं तमसः परस्तात् ।
तमेव विदित्वातिमृत्युमेति
नान्यः पन्था विद्यतेऽयनाय ॥
श्वेताश्वतर ३-८

*வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்*
*ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் ।*
*தமேவ விதித்வாதி ம்ருத்யுமேதி*
*நான்ய: பந்தா வித்யதே(அ)யனாய ॥*
—*சுவேதாசுவதர உபநிடதம்* - 3-8

ஒன்றுயினும் பல்வேறு உருவங்களாகப் பிரிக்கப்பட்டிருப்பது போலத் தோன்றுகிறது." பிரம்மம் எவ்வித செயல்களிலும் ஈடு படுவதில்லை. எனினும் அது, புலன்களுடைய செயல்களின் மூலம் இயங்குகிறது. பிருகதாரண்யக உபநிடதம் கூறுவதைப்போல, "அது தியானம் செய்வது போலவும், அது அசைவது போலவும் இருக்கிறது."

பல்வேறு காலங்களிலும் இருந்த மேனாட்டு ஞானிகள் கடவுளைப்பற்றி சாரமாகக் கூறியுள்ள கருத்துகளை ஸ்ரீமதி அண்டர்ஹில் மேற்கோள்களாகக் கொடுத்துள்ளார். அவை பின் வருமாறு:

"பெயரில்லாத ஏதோ ஒன்று, கடவுளாக இருக்கும் அள வுக்கு மிகப் பெரியதாகவும், என் அளவுக்கு மிகச் சிறியதாகவும் இருக்கிறது"—சூசோ

"ஒரு கடுகின் அளவுக்கு நீ ஒரு நுண்ணிய வட்டத்தைக் கற்பனை செய்து கொண்டால், அந்தச் சிறிய வட்டத்திற்குள் கடவுளின் இதயம் பூரணமாக, முற்றிலும் அடங்கியதாக இருக் கிறது. நீ கடவுளிடத்திலேயே பிறந்தாய். இருந்தாலும், உன்னுள் கடவுளின் இதயம் முற்றிலும் பூரணமாக அடங்கியிருக்கிறது."— பொஹீம்

"எனக்கு, என்னை விட கடவுள் அதிக சமீபத்தில் இருக் கிறார். அதுபோலவே, அவர் மரத்துக்கும் கல்லுக்கும் அருகில் இருக்கிறார். எனினும் அவைகள் அவரை அறிவதில்லை."— எக்கார்ட்.

"என் மூச்சைக் காட்டிலும், எனது கைகள், கால்களைக் காட்டிலும் கடவுள் எனக்கு அதிக சமீபத்தில் இருக்கிறார்"—ஒரு நவீன ஆங்கில கீதம்.

---

यतो वाचो निवर्तन्ते ।

... ... ... ... ...

महः पुच्छं प्रतिष्ठा ॥

तैत्तिरीय २-४

ध्यायतीव लेलायतीव ।

बृहदारण्यक ४-३-७

யதோ வாசோ நிவர்த்தந்தே

... ... ... ...

மஹ: புச்சம் ப்ரதிஷ்டா ॥

தைத்திரீய உபநிடதம் 2-4.

த்யாயதீவ லேலாயதீவ ।

—ப்ருஹதாரண்யக உபநிடதம் - 4-3-7

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८ ॥

இதி க்ஷேத்ரம் ததா க்ஞானம் க்ஞேயம் சோக்தம் ஸமாஸத: ।
மத்பக்த ஏதத் விக்ஞாய மத்பாவாயோப பத்யதே ॥ 18

*18.* க்ஷேத்திரம், ஞானம், அறியத் தகுந்தது ஆகியவற்றைப்பற்றி நான் சுருக்கமாக விளக்கியுள்ளேன். இதை எனது பக்தன் அறிந்து கொள்ளும்போது, என்னுடன் ஒன்ருகிவிட அவன் தகுதி வாய்ந்தவனுகிருன்.

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ १९ ॥

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யனுதீ உபாவபி ।
விகாராம்ச்ச குணும்ச்சைவ வித்தி ப்ரக்ருதி ஸம்பவான் ॥ 19

*19.* பிரகிருதி, புருஷன் இரண்டும் ஆதியில்லாதவை என்பதை அறிந்து கொள். குணங்களின் எல்லா வேறுபாடுகளும் பிரகிருதியிலிருந்து பிறந்தவை என்பதையும் அறிந்து கொள்.

[பிரகிருதி, புருஷன் ஆகியவற்றைப்பற்றிய விளக்கத்தை எனது 'சமர்ப்பண'த்தில் பார்க்கவும். இவை கடவுளின் இரண்டு அமசங்களே என்பதையும், அவற்றில் ஒன்று கீழ்த்தரமான அம்சம் என்பதையும், மற்ருென்று மேல்தரமான அம்சம் என்பதையும் ஏழாவது அத்தியாயத்தில் பார்த்தோம். கடவுள் ஆதியற்றவராதலின், அவரது அம்சங்களும் ஆதியற்றவை.]

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २० ॥

கார்ய காரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ।
புருஷ: ஸுகது:க்காணும் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ 20

*20.* காரியங்களுக்கும், அவற்றின் காரணங்களுக்கும் ஹேதுவாக இருப்பது பிரகிருதி என்று கூறப்படுகிறது; சுகதுக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாக இருப்பது புருஷன் என்று கூறப்படுகிறது.

பத்து புலன்கள், மனம், ஐந்து மகா பூதங்கள் ஆகியவை, பிரகிருதி என்ற மரத்தில் காரியங்களாக இருக்கின்றன; மற்றவை களுக்குக் காரணங்களாக இல்லை. (*183*-ஆம் பக்கம் பார்க்கவும்) அறிவு, 'தான்' என்பது, காரணங்களாகவும் காரியங்களாகவும் இருக்கும் ஐந்து சூட்சும பூதங்கள் ஆகியவை காரியங்கள் என்றே கூறப்படுகின்றன. இவையெல்லாம் பிரகிருதியிலிருந்தே உண்டாகின்றன.

पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।

कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१ ॥

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான் குணான் ।

காரணம் குணஸங்கோ(அ)ஸ்ய ஸதஸத்யோனி ஜன்மஸு ॥ 21

*21.* பிரகிருதியில் வசிக்கும் புருஷனே, பிரகிருதியிலிருந்து பிறந்த குணங்களை அனுபவிக்கிறான். இந்த குணங்களில் அவனுக்கு உள்ள பற்றுதலே, அவன் நல்ல அல்லது தீய கருப் பைகளிலிருந்து பிறப்பதற்கு காரணமாகின்றது.

பிரகிருதியை, சாதாரண பாஷையில் மாயை என்றே கூறு கின்றனர். புருஷன் தான் ஜீவன். ஜீவன் அவனது இயல்புக்கு உகந்தவாறு செயல் புரிவதால், மூன்று குணங்களிலிருந்து எழும் செயல்களின் பலனை அனுபவிக்கிறான். அதன் காரணமாகவே, அவனுக்கு மறு பிறப்புகளும் ஏற்படுகின்றன.

उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।

परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २२ ॥

உபத்ரஷ்டா(அ)னுமந்தா ச பர்த்தா போக்தா மகேச்வர: ।

பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹே(அ)ஸ்மின் புருஷ: பர: ॥ 22

*22.* இந்த உடலில் சாட்சியாக இருப்பவன், அனுமதிப் பவன், தாங்குபவன், அனுபவிப்பவன், மகேசுவரன், மகோன்னத மான ஆன்மா என்றெல்லாம் கூறப்படுவது, எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளேயாகும்.

[இந்த உடலுக்குள் கட்டுப்பட்டு இருப்பதாலேயே ஜீவ னுக்கு அல்லது ஆன்மாவுக்கு பல்வேறு பெயர்கள் கொடுக்கப் படுகின்றன. ஆனால், அந்த ஜீவனோ அல்லது ஆன்மாவோ மகோன்னதமான பரம் பொருளைத் தவிர வேறு யாருமில்லை.]

*40*

य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३ ॥

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை:ஸஹ ।
ஸர்வதா வர்த்தமானோ(அ)பி ந ஸ பூயோ(அ)பிஜாயதே ॥ 23

23. இவ்விதமாக, அதன் குணங்களுடன் பிரகிருதியையும் புருஷனையும் அறிந்து கொள்ளுபவன் எப்படி வாழ்ந்தாலும், எவ்விதமாக நடந்து கொண்டாலும், அவன் மீண்டும் பிறப்பதில்லை.

2, 9, 12-ஆம் அத்தியாயங்களை மனத்திற் கொண்டு இந்த சுலோகத்தை வாசிக்க வேண்டும். எத்தகைய தீச் செயல்களையும் புரிய இது ஆதரவு அளிப்பதாக நினைத்துவிடக் கூடாது. தன்னைக் கடவுளிடம் அர்ப்பணம் செய்யும், தன்னலமற்ற பக்தியுடன் இருக்கும் தர்மத்தையே இது காட்டுகிறது. எல்லாச் செயல்களும் ஆன்மாவைக் கட்டுப்படுத்துகின்றன. எனினும், எல்லாக் கர்மங்களையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால், அவை மனிதனைக் கட்டுப்படுத்துவதில்லை; அவை அவனை விடுவிக்கின்றன என்றே சொல்ல வேண்டும். தன்னையோ அல்லது 'நான்' என்ற எண்ணத்தையோ அவ்விதம் சூன்யமாகச் செய்து கொள்ளுபவன், மகத்தான சாட்சியின் (கடவுளின்) கண்களுக்கு எதிரில் செயல் புரிகிறான். எனவே, அவன் ஒருபோதும் தவறோ, பாவமோ செய்ய மாட்டான். 'நான்' என்பது ஒழிந்துவிட்டால், பாவம் ஏற்படுவதில்லை. எல்லாப் பாவங்களிலிருந்தும் விலகிச் செல்லும் வழியையே இந்த சுலோகம் காட்டுகிறது.

[23. காந்திஜியின் இந்தக் குறிப்பில் அடங்கியுள்ள விஷயத்தை 'எனது சமர்ப்பண'த்தில் விவரமாக விளக்கியிருக்கிறேன்.]

ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४ ॥

த்யானேனாத்மனி பச்யந்தி கேசிதாத்மான மாத்மனா ।
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே ॥ 24

24. சிலர் தியானத்தின் மூலம் தங்களிடத்தில் தங்களுடைய முயற்சியினாலேயே ஆன்மாவைக் காண்கின்றனர்; மற்றவர்கள் சாங்கிய யோகத்தினாலும், மேலும் பலர் கர்ம யோகத்தினாலும் ஆன்மாவைக் காண்கின்றனர்.

अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५ ॥

அன்யே த்வேவமஜானந்த: ச்ருத்வா(அ)ன்யேப்ய உபாஸதே ।
தே(அ)பி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதிபராயணா: ॥ 25

25. இன்னும் மற்றவர்கள் இதையெல்லாம் (ஆன்மாவாகிய பரம்பொருளை) அறிந்து கொள்ளாமல், மற்றவர்களிடமிருந்து கேட்பதன் மூலம் பரம் பொருளை வழிபடுகின்றனர். அவர்களும் பிறப்பு இறப்பைக் கடந்தவர்களாகிறார்கள். ஏனெனில், அவர்கள் காதால் கேட்டதை உறுதியுடனும் பக்தியுடனும் பின்பற்றுகிறார்கள் அல்லவா?

यावत्संजायते किंचित्सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥ २६ ॥

யாவத் ஸஞ்சாயதே கிஞ்சித் ஸத்வம் ஸ்தாவர ஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞ ஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப ॥ 26

26. பரதர்ஷபா (பரதகுல சிரேஷ்டனே), இந்த உலகத்தில் எங்கே எது பிறந்தாலும், அது ஸ்தாவரமாயினும், ஜங்கமமாயினும், அது க்ஷேத்திரம், க்ஷேத்திரத்தை அறிந்தவன் ஆகிய இரண்டின் சேர்க்கையிலிருந்தே பிறக்கிறது என்பதை அறிந்து கொள்வாயாக.

[சங்கராச்சாரியார் கூறுவதாவது: "பகுத்தறியும் ஆற்றல் இராததால், கயிற்றை பாம்பு என்றும், கிளிஞ்சலை வெள்ளி என்றும் தவறாக நினைக்கிறோம். அது போலவே மேலே குறிப்பிட்டுள்ள சேர்க்கை வெறும் மாயைத் தோற்றமே".

உண்மையை அறிந்தவர்களுக்கு அது ஒரு மாயைத் தோற்றத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆனால், அதை அறியாதவர்களுக்கு?

பாஸ்கல் கூறுவதாவது: "மனிதன் தனக்குத் தானே, இயற்கையில் உள்ள மிகவும் அதிசயமான ஒரு பொருளாக இருக்கிறான். உடல் எப்படி உருவாகியது என்பதை அவனால் அறிந்து கொள்ள முடியவில்லை. மனம் என்பது என்ன என்பதையும் அவனால் சிறிதும் உணர்ந்து கொள்ள முடியவில்லை. உடலும் மனமும் சேர்ந்ததே அவனது உயிராகும். அப்படியிருந்தும், ஓர் உடல் ஒரு மனத்துடன் எப்படி இணைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. இதுதான் அவனது கஷ்டங்களின் சிகரமாகும்."]

समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥ २७ ॥

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம் ।
விநச்யத்ஸ்வ விநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி ॥ 27

27. எல்லா உயிர்களிலும் ஒரே பரமேசுவரன் நிலைத்திருப்பதை, அதாவது அழியக்கூடிய பொருட்களில் அழிவற்றது நிலைத்திருப்பதை யார் பார்க்கிறானோ, அவன் தான் உண்மையில் பார்ப்பவனாகிறான்.

समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम् ॥ २८ ॥

ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம் ।
ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோ யாதி பராம் கதிம் ॥ 28

28. எல்லா இடங்களிலும் ஒரே ஈசுவரன் ஒரே விதமாக நிலைத்திருப்பதை அவன் பார்க்கும்போது, அவன் தனக்குத் தானே எவ்விதத் தீங்கும் செய்வதில்லை. அதன் பலனாக அவன் மகோன்னதமான லட்சியத்தை அடைகிறான்.

எல்லா இடங்களிலும் ஒரே கடவுளைக் காணும் ஒருவன் அவரிடமே லயித்துவிடுவான். அவன் வேறு எதையும் பார்ப்பதில்லை. எனவே அவ்வாறாக, அவன் வெறிக் குணத்திற்கு இடம் கொடுப்பதில்லை; அவன் தனக்குத் தானே விரோதியாகிவிடுவதில்லை. அவ்விதமாக, அவன் மோட்சத்தையும் அடைகிறான்.

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥ २९ ॥

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வச: ।
ய: பச்யதி ததா(அ)த்மானம் அகர்த்தாரம் ஸ பச்யதி ॥ 29

29. எல்லாக் கர்மங்களையும் செய்வது பிரகிருதிதான் என்பதையும், ஆன்மா அல்ல என்பதையும் யார் அறிகின்றானோ, அவன்தான் உண்மையில் பார்ப்பவனாகிறான்.

தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு மனிதனை எடுத்துக் கொள்வோம். தூங்கும் கர்மத்தைச் செய்வது அவனது பிரகிருதியே

யன்றி, ஆன்மா அல்ல. அதுபோலவே, ஞானத்தை அடைந்தவன் அவனது நடவடிக்கைகளுக்கும் ஆன்மாவுக்கும் சம்பந்தம் இல்லை என்பதை உணர்ந்து கொள்வான். தூய்மையுள்ளவனுக்கு எல்லாம் தூய்மையானவையாகவே இருக்கின்றன. பிரகிருதி தூய்மையற்றது அல்ல. ஆனால், அகந்தை கொண்ட மனிதன் பிரகிருதியை தன்னுடைய மனைவியாகக் கருதும் போது தான் இருமை உணர்ச்சி ஏற்படுகின்றது.

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३० ॥

யதா பூத ப்ருதக்பாவம் ஏகஸ்தமனு பச்யதி |
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா || 30

*30.* உயிர்களின் வேற்றுமை, ஒற்றுமையையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பதையும், அதிலிருந்தே பிரபஞ்சம் முழுவதும் விரிவடைகின்றது என்பதையும் காண்பவன், பிரம்மத்தை* அடைகிறான்.

எல்லாம் பிரம்மத்தினிடமே நிலைபெற்றிருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்வது பிரம்மத்தின் நிலையை அடைவதே ஆகும். அப்போது ஜீவன் சிவனாக மாறிவிடுகின்றது.

[இந்த சிந்தனையின் அடிப்படை, பிருகதாரண்யக உபநிடதத்தில் உள்ள பின்வரும் பிரபல சுலோகத்தில் அடங்கியிருக்கிறது: *" இந்த பூமியில் வேற்றுமை என்பதே இல்லை. இங்கே

---

मनसैवानुद्रष्टव्यं नेह नानास्ति किंचन ।
मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥
एकधैवानुद्रष्टव्यमेतदप्रमेयं ध्रुवम् ।
... ... ... ... ... ॥ बृहद् ४-४-१९-२०

மனஸைவானு த்ரஷ்டவ்யம் நேஹ நானஸ்தி கிஞ்சன |
ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நானேவ பச்யதி ||
ஏகதைவானு த்ரஷ்டவ்ய மேதப்ரமேயம் த்ருவம் |
... ... ... ... ...

—பிருகதாரண்யக உபநிடதம் - 4-4-19-20.

* பிரம்மம் என்று வேதாந்திகள் கூறும் பரம்பொருளைத்தான் ஆன்மா என்று யோகிகளும், பகவான் என்று பக்தர்களும் கூறுகின்றனர்.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

30. தண்ணீரும் அதில் காணப்படும் குமிழியும் ஒன்றே. குமிழி தண்ணீரில் பிறக்கின்றது. தண்ணீரில் மிதக்கின்றது, இறுதியில் தண்ணீரோடு

வேற்றுமையைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியாதவன், மீண்டும் மீண்டும் இறந்து மறுஜன்மம் எடுக்கிறான். ருசுப்பிக்க முடியாத, நிரந்தரமான பரம்பொருளை ஒற்றுமையின் உருவமாகவே காணவேண்டும்.''

இந்த சிந்தனையே ஷோபென்ஹாவரின்* மனத்தைக் கவர்ந்தது. அவர் கூறியதாவது: ''தான் தொடர்பு கொள்ளும் ஒவ்வொன்றிலும் தன்னையே காணும் ஹிந்து ஞானியின் நிலைதான், நிச்சயமான தர்ம நெறியும், பேரானந்த நிலையும் ஆகும். அவர் தான் மோட்சத்தை அடைவதற்கான நேர் பாதையில் செல்லுபவராக இருக்கிறார்'']

अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ ३१ ॥

அனாதித்வான் நிர்க்குணத்வாத் பரமாத்மா(அ)ய மவ்யய : ।
சரீரஸ்தோ (அ)பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ 31

*31.* கௌந்தேயா, அழிவற்ற மகோன்னதமான இந்த ஆன்மா உடலிலேயே வசித்துக் கொண்டிருப்பினும், அது செயல் புரிவதில்லை, களங்கமும் அடைவதில்லை. ஏனெனில், அதற்கு ஆதியோ (ஆரம்பமோ), குணங்களோ இல்லை அல்லவா?

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३२ ॥

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாத் ஆகாசம் நோபலிப்யதே।
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததா(ஆ)த்மா நோபலிப்யதே ॥ 32

*32.* எங்கும் வியாபித்துள்ள ஆகாயம் சூட்சுமமாக இருப்பதன் காரணமாகக் களங்கம் அடைவதில்லை. அதுபோலவே உடலில் உள்ள ஒவ்வொரு பாகத்திலும் வியாபித்துக் கொண்டிருக்கும் ஆன்மா களங்கம் அடைவதில்லை.

---

ஒன்றாகிவிடுகிறது. அது போலவே, பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே. வேற்றுமை அளவிலேதான் உள்ளது. ஒன்று, பலவாகிப் பிரிந்து காணப்படுகிறது; மற்றொன்று, அகண்டமானது; ஒன்று கட்டுப்பட்டது; மற்றொன்று சுதந்திரமானது.

—ராமகிருஷ்ண பரம ஹம்சர்.

* ஜெர்மன் தத்துவ ஞானி ஆர்தர் ஷோபென்ஹாவர் (1788-1860). பௌத்த மதத்தினரைப் போன்ற கொள்கையுடையவர். அவர் தத்துவ சாத்திர சம்பந்தமான பல நூல்கள் எழுதியுள்ளார்.

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३ ॥

யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத ॥ 33

33. பாரதா! ஒரே சூரியன் உலகம் முழுவதும் வியாபித்து ஒளி வீசுவதைப் போலவே, க்ஷேத்திரத்திற்கு நாயகனுக விளங்கு பவன் க்ஷேத்திரம் முழுவதும் வியாபித்து ஒளி வீசுகிருன்.

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३४ ॥

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோரேவம் அந்தரம் க்ஞான சக்ஷுஷா |
பூத ப்ரக்ருதி மோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥ 34

34. இவ்விதமாக, யார் தங்களுடைய ஞானக் கண்களால் க்ஷேத்திரத்திற்கும் க்ஷேத்திரத்தை அறிந்தவனுக்கும் உள்ள வேற்றுமையையும், பிரகிருதியிலிருந்து உயிர்கள் விடுதலே பெறும் ரகசியத்தையும் அறிகின்ருர்களோ, அவர்கள் எல்லாவற்றிற்கும் மேலான பிரம்மத்தை அடைகின்றனர்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे क्षेत्रक्षेत्रज्ञविभागयोगो नाम त्रयोदशोऽध्यायः ॥ १३ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்ம வித்யாயாம்
யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணர்ஜுன ஸம்வாதே
க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகோ நாம
த்ரயோதசோ (அ)த்யாய: - 13

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம
ஞானத்தின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ
விபாக யோகம்' என்ற பதின்மூன்ருவது
அத்தியாயம் இவ்வாருக முடிவுறுகின்றது.

---

32. நாகப்பாம்பின் பல்லில் விஷம் இருப்பதன் காரணமாக, பாம்புக்கு எவ்வித அபாயமும் ஏற்படுவதில்லே. அதுபோலவே, இந்த உலகில் நாம் காணும் துன்பங்கள், பாவங்கள் ஆகியவை பிரம்மத்தைக் களங்கப்படுத்துவதில்லே.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

# மூன்று குணங்கள்

## பதினான்காம் அத்தியாயம்

பிரகிருதியைப் பற்றிய வர்ணனை, இப்போது இயல்பாகவே அதன் அம்சங்களான குணங்களைப் பற்றிய வர்ணனைக்கு இட்டுச் செல்லுகின்றது. இந்த அத்தியாயத்தின் விஷயம் குணங்களைப் பற்றியதுதான். இதிலிருந்து, மூன்று குணங்களையும் கடந்த நிலையை அடைந்தவனின் லட்சணங்களைப் பற்றிய விளக்கமும் தொடருகின்றது. அவனது லட்சணங்கள், உறுதியான அறிவு படைத்தவனின் (ஸ்தித ப்ரக்ஞன்) லட்சணங்களைப் போலவும் (அத்தியாயம்-2, சுலோகங்கள் 54-72), அப்பழுக்கற்ற சிறந்த பக்தனின் லட்சணங்களைப் போலவுமே இருக்கின்றன (அத்தியாயம்-12, சுலோகங்கள்-12-20).

श्रीभगवानुवाच

परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி க்ஞானானாம் க்ஞான முத்தமம் ।
யத் க்ஞாத்வா முனய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: ॥ 1

ஸ்ரீ பகவான் கூறினார் :

1. ஞானங்களுள் மிகச் சிறந்த எந்த ஞானத்தை அறிந்து முனிவர்கள் யாவரும் இந்த உலகை நீத்து பரம பதத்தை அடைந்தனரோ, அந்த உத்தமமான ஞானத்தை உனக்கு மீண்டும் விளக்கிக் கூறுகிறேன்.

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २ ॥

இதம் க்ஞான முபாச்ரித்ய மம ஸாதர்ம்ய மாகதா: ।
ஸர்க்கே (அ)பி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ॥ 2

2. இந்த ஞானத்தை மேற்கொண்டு அவர்கள் என்னுடன் ஒன்ருக லயித்துவிட்டார்கள். எனவே, உலக சிருஷ்டியின் போது கூட அவர்கள் பிறக்க வேண்டிய அவசியம் இல்லை; பிரளய காலம் வரும்போது அவர்கள் துன்பத்திற்கு உள்ளாவதும் இல்லை.

मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

மம யோனிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மின் கர்ப்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதாஞம் ததோ பவதி பரதா ॥ 3

3. பாரதா, மகத்தான பிரகிருதியே எனக்கு கர்ப்பாசயமாக இருக்கிறது. அதில் நான் இளம் கருவை வைக்கிறேன். அதிலிருந்தே எல்லா உயிர்களும் பிறக்கின்றன.

सर्वयोनिषु कौन्तेय मूर्तयः संभवन्ति याः ।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: ।
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிர் அஹம் பீஜப்ரத: பிதா ॥ 4

4. பல்வேறு இனங்களிலும் எத்தகைய உருவங்கள் பிறந்தாலும் அவற்றிற்கெல்லாம் தாய் மூல பிரகிருதியே. வித்தைக் கொடுக்கும் தந்தை நானே.

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥

ஸத்வம் ரஜஸ் தம இதி குஞ: ப்ரக்ருதி ஸம்பவா: ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் ॥ 5

5. மகத்தான தோள்வலிமை வாய்ந்தவனே, பிரகிருதியிலிருந்து சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் உண்டாகின்றன. உடலில் உள்ள அழிவற்ற ஜீவனை, அவை உடலுடன் இறுகப் பிணைக்கின்றன.

तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।
सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥ ६ ॥

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசக மஞமயம் ।
ஸுக ஸங்கேன பத்ஞதி க்ஞான ஸங்கேன சானக ॥ 6

6. பாவமற்றவனே, இவற்றுள் சத்துவ குணம் மாசற்றிருப்பதால், அது ஒளியையும் சுகத்தையும் கொடுப்பதாக இருக்கிறது; அது இன்பம், ஞானம் என்ற பந்தங்களால் கட்டுப்படுத்துகிறது.*

रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम् ॥ ७ ॥

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணு ஸங்கஸமுத்பவம் ।
ன் நிபத்னுதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் ॥ 7

7. கௌந்தேயா, ரஜோ குணம் ஆசையின் இயல்பு உள்ளதாகவும், வேட்கைக்கும் பற்றுதலுக்கும் மூல காரணமாகவும் இருக்கிறது என்பதை அறிந்துகொள்வாயாக. அது கர்ம பந்தத்தினுல் மனிதனைக் கட்டுப்படுத்துகின்றது.

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

தமஸ்த்வக்ஞான்ஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினும் ।
ப்ரமாதாலஸ்ய நித்ராபிஸ் தன் நிபத்னுதி பாரத ॥ 8

8. பாரதா, அறியாமையிலிருந்து உண்டான தமோ குணம், நிலையற்ற மனிதனின் மதிமயக்கமே என்பதை அறிந்து கொள். அது அவனை, கவனமின்மை, சோம்பேறித்தனம், தூக்கம் ஆகியவற்றுடன் இறுகப் பிணைத்து விடுகின்றது.

सत्त्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥ ९ ॥

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।
க்ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9

---

* 6. சத்துவ குணம், ஸ்படிகக் கல்லைப் போல் தூய்மையானது. அது இன்பத்தினுலும் ஞானத்தினுலும் ஆன்மாவைக் கட்டுப்படுத்துகின்றது. விஷயங்களைப் பற்றிய உண்மையான ஞானத்தினுல் ஒளி ஏற்படுகிறது. சத்துவ குணம் இருக்கும் இடத்தில் துன்பத்திற்கு இடம் இல்லை. —சங்கரர்—

*9.* சத்துவ குணம் மனிதனை இன்பத்துடனும், ரஜோ குணம் கர்மத்துடனும், தமோ குணம் ஞானத்தை மறைத்து கவனமின்மையுடனும் இணைக்கின்றது.

**रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।**
**रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १० ॥**

ரஜஸ் தமச்சாபிபூய ஸத்வம் பவதி பாரத ।
ரஜ: ஸத்வம் தமச்சைவ தம: ஸத்வம் ரஜஸ்ததா ॥ 10

*10.* பாரதா, ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் அடக்கி சத்துவ குணம் மேலெழுகின்றது; சத்துவ குணமும் தமோ குணமும் அடக்கப்பட்டபோது ரஜோ குணம் மேலோங்குகிறது. அதுபோலவே, சத்துவ குணமும் ரஜோ குணமும் ஒடுங்கும் போது தமோ குணம் ஆதிக்கம் செலுத்துகிறது.

**सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।**
**ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥**

ஸர்வத்வாரேஷு தேஹே (அ)ஸ்மின் ப்ரகாச உபஜாயதே ।
க்ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥ 11

*11.* இந்த உடலின் எல்லா வாயில்களிலிருந்தும் ஞானமாகிய ஒளி வீசும்போது, சத்துவ குணம் மேலோங்கி நிற்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

**लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।**
**रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥**

லோப: ப்ரவ்ருத்தி ராரம்ப: கர்மணுமசம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥ 12

*12.* பரதர்ஷபா, ரஜோ குணம் பெருகும் போது, பேராசை, புலன்களின் சேஷ்டை, புதிய பொறுப்புகளை மேற்கொள்ளுதல், அமைதியின்மை, இச்சை ஆகியவை தோன்றுகின்றன.

---

11. எல்லாப் புலன்களின் வழியாகவும் ஞானம் ஒளிவீசுகிறது என்றால், அவையெல்லாம் நேர்மையான வழியில் செல்லுகின்றன என்பதே பொருள்.
—சங்கரர்.

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३ ॥

அப்ரகாசோ (அ)ப்ரவ்ருத்திச்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன ॥ 13

*13.* குருநந்தன, அறியாமை, மந்த புத்தி, கவனமின்மை, மதிமயக்கம் இவையெல்லாம் தமோ குணம் ஆதிக்கம் செலுத்தும் போது ஏற்படுகின்றன.

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत्।
तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४ ॥

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரளயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகான் அமலான் ப்ரதிபத்யதே ॥ 14

*14.* சத்துவ குணம் மேலோங்கி நிற்கும் போது உடல் தாங்கிய மனிதன் மரணம் அடைந்தால், அவன் மகோன்னதமான பரம்பொருளை அறிந்தவர்கள் அடையும் பரிசுத்தமான உலகங்களை அடைகின்ருன்.

[*14.* ''மகோன்னதமான பரம்பொருளை அறிந்த ஞானிகள் அடையும் பரிசுத்தமான உலகங்கள்'' என்பதன் பொருள் என்ன என்பதைத் திட்ட வட்டமாகக் கூறுவது கடினமாகும். ''மகோன்னதமான பரம் பொருளை அறிந்தவர்கள்'' என்ருல், தங்களைத் தாங்களே உணர்ந்து கொண்டவர்களாகவோ அல்லது ஞானிகளாகவோ இருக்க முடியாது. ஏனெனில், அவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. ஆனல், மேலே குறிப்பிட்டுள்ளவர்களுக்கு மறுபிறப்பு உண்டு என்பதையே அந்த சுலோகம் குறிக்கின்றது. "மகத்தான கொள்கைகளை அறிந்தவர்களுக்கு" என்று சங்கராச்சாரியார் விளக்கம் கொடுத்துள்ளார். அந்த விளக்கத்திற்கும் மேற்கொண்டு விளக்கம் தேவையாக இருக்கிறது! ''தேவர்களின் உலகங்களை அடைவான்'' என்று திலகர் கூறுகிருர். சத்திய லோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய உலகங்களை அடைவான்'' என்று பி. சாஸ்திரி கூறுகிருர். இதற்கு, விளுேபா புதிய முறையில் விளக்கம் கொடுத்துள்ளார். ''ஞானிகள் வாழும் பரிசுத்

---

13. எதையும் தெளிவாக அறிந்து கொள்ள முடியாத மந்த புத்தி, உழைப்பில் மனம் ஈடுபடாமல் இருத்தல், தீய செயல்களில் ஆர்வம், தவறு அல்லது மதிமயக்கம், அதாவது விஷயங்களைத் தவருகப் புரிந்து கொள்ளும் இயல்பு ஆகியவை, தமோ குணம் மேலோங்கி நிற்கும்போது உண்டாகின்றன.
—சங்கரர்.

தமான உலகங்களில் அவன் பிறக்கிருன்" என்பதே விநோபா வின் விளக்கமாகும். இந்த விளக்கம், சுலோகத்தின் வாசகத்திற் குப் பொருத்தமாக இருக்கிறதா என்பதைக் கூறுவது கடினமா கும். இந்த சுலோகத்திற்கு விளக்கம் கூறுவதாயின், அடுத்த சுலோகத்தில் உள்ள 'கர்மஸங்கிஷு' (कर्मसंगिषु) என்ற வார்த்தை யைக் கவனிக்க வேண்டும். ரஜோ குணம் உடையவர்கள், கர்மங் களில் பற்றுதல் உள்ளவர்களிடையே பிறக்கிருர்கள் எனில், சத்துவ குணம் உள்ளவர்கள் ஞானத்தில் பற்றுள்ளவர் களிடையே, அதாவது ஞான மார்க்கத்தைப் பின்பற்றுவோரி டையே பிறக்கிருர்கள் என்று கூறலாம். இதுபோன்ற ஒரு வாதத்தை மனத்திற் கொண்டே விநோபா அவ்விதம் விளக்கம் கொடுத்திருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். வேறு சிறந்த விளக்கம் எதுவும் இராததால், விநோபாவின் விளக்கத் தையே நான் ஒப்புக் கொள்கிறேன்.]

रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥

ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரலீனஸ் தமஸி மூடயோனிஷு ஜாயதே ॥ 15

*15.* ரஜோ குணம் ஆதிக்கம் செலுத்தும் போது ஒருவன் இறந்தால், அவன் கர்மங்களில் பற்றுதல் உள்ளவர்களிடையே பிறக்கிருன்; தமோ குணம் மேலிட்டிருக்கும் போது ஒருவன் மரணம் அடைந்தால், அவன் பகுத்தறிவற்ற இனவகைகளில் பிறக்கிருன்.

कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६ ॥

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் துக்கம் அக்ஞானம் தமஸ : பலம் ॥ 16

*16.* சாத்துவிகமான செயலின் பலன் அப்பழுக்கற்ற புண் ணியம் என்றும், ராஜஸமான செயலின் பலன் துன்பம் என்றும், தாமஸமான செயலின் பலன் அறியாமை என்றும் கூறப்படு கிறது.

['கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம்' (कर्मण: सुकृतस्याहुः सात्विकं निर्मलं फलं) என்றே இந்த சுலோகம் இருக்கி றது. ஆனல், இதில் வார்த்தைகள் மாறிவிட்டன என்றே தோன் றுகிறது. இந்த சுலோகம் பின்வருமாறு இருக்க வேண்டும்:

'கர்மண: ஸாத்விகஸ்யாஹு: ஸுக்ருதம் நிர்மலம் பலம்' (कर्मण: सात्विकस्याहु: सुकृतं निर्मलं फलं).

सत्त्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥

ஸத்வாத் ஸஞ்ஜாயதே க்ஞானம் ரஜஸோ லோப ஏவ ச !
ப்ரமாத மோஹௌ தமஸோ பவதோ(அ)க்ஞானமேவ ச ‖ 17

17. சத்துவ குணத்திலிருந்து ஞானமும், ரஜோ குணத்திலிருந்து பேராசையும், தமோ குணத்திலிருந்து கவனக்குறைவு, மதிமயக்கம், அறியாமை ஆகியவையும் உண்டாகின்றன.

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्था अधो गच्छन्ति तामसाः ॥ १८ ॥

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா: ।
ஜகன்யகுண வ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ‖ 18

18. சத்துவ குணத்தில் நிலை நிற்பவன் மேலே உயருகிறான்; ராஜஸ குணம் உள்ளவன் மத்தியில் இருக்கிறான்: தமோ குணம் உள்ளவன் பாதாளத்தில் வீழ்ச்சியடைகிறான்.

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

நான்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டா(அ)னுபச்யதி ।
குணேப்யச்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோ(அ)தி கச்சதி ‖ 19

---

18. சத்துவ குணம் உடையவர்கள் உயர்ந்த நிலையை அடைந்து பிறப்பு, இறப்பாகிய துன்பத்திலிருந்து விடுதலை அடைகிறார்கள். ரஜோ குணம் உள்ளவர்கள், பலன்களைக் கொடுக்கக்கூடிய கர்மங்களிலேயே நாட்டம் கொண்டு, சிறிது காலம் நல்ல உலகங்களில் போகங்களை அனுபவித்துவிட்டு, மீண்டும் மீண்டும் பிறவித் துன்பத்தில் சிக்கிக் கொள்ளுகிறார்கள். தமோ குணம் உள்ளவர்கள் மனித வர்க்கத்தில் கீழ்த்தரமானவர்களாகப் பிறந்து, பின்னர் மிருகங்களாகவும், பூச்சிகளாகவும், புழுக்களாகவும், மரம், கொடி செடிகளாகவும் பிறந்து, பிறகு உயிரற்ற பொருட்களின் நிலையைக் கூட அடைகின்றனர். —சங்கரர்.

*19.* உண்மையைக் காணும் ஞானி, குணங்களைத் தவிர வேறு கர்த்தா யாரும் இல்லை என்பதையும், குணங்களைக் கடந்துள்ள இறைவனையும் எப்போது அறிகின்றானோ, அப்போது அவன் எனது நிலையை எய்துகின்றான்.

செயல் புரிபவன் தான் அல்ல என்பதையும், குணங்கள் தான் கர்த்தாவாக இருந்து செயல் புரிகின்றன என்பதையும் ஒரு மனிதன் உணர்ந்துகொண்ட உடனேயே, அவனிடமிருந்து 'தான்' என்ற எண்ணம் மறைந்துவிடுகின்றது. எனவே, அவன் உடலைப் பேணுவதற்காக மாத்திரமே அகந்தையின்றி இயல்பாகக் கர்மங்களைச் செய்கிறான். மகோன்னதமான லட்சியத்தை அடைவதற்காகவே இந்த உடல் ஏற்பட்டிருப்பதால், அவனது செயல்கள் யாவும் பற்றற்றும், பாரபட்சமின்றியுமே இருக்கும். அத்தகைய ஒரு ஞானியால், குணங்களைக் கடந்து இருக்கும் பரம்பொருளின் மின்னொளித் தோற்றத்தை எளிதில் கண்டு, அவரை பக்தியுடன் பூஜிக்க முடியும்.

गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

குணானேதானதீத்ய த்ரீன் தேஹீ தேஹஸமுத்பவான் ।
ஜன்ம ம்ருத்யு ஜராது:க்கைர் விமுக்தோ (அ)ம்ருத மச்னுதே ॥ 20

*20.* ஜீவனுக்கு உடலுடன் உள்ள தொடர்பினாலேயே இந்த மூன்று குணங்களும் உண்டாகின்றன. உடல் தாங்கிய ஜீவன் இந்த மூன்று குணங்களையும் கடந்த நிலையை அடைவானாயின், பிறப்பு, இறப்பு, மூப்பு ஆகிய துன்பங்களிலிருந்து அவன் விடுதலை பெறுகிறான்.

['தேஹஸமுத்பவான்' ( देहसमुद्भवान् ) என்ற சொல்லையே, 'உடலுடன் உள்ள தொடர்பினால் உண்டாகின்றன' என்று காந்திஜி மொழி பெயர்த்துள்ளார். ஹில் கொடுத்துள்ள விளக்கமும் அவ்விதமாகவே இருக்கிறது: "ஆன்மாவுடன் மூன்று குணங்களுக்கும் தொடர்பு இருப்பதற்குக் காரணம், ஆன்மா உடலில் உறைவதேயாகும்."

ஆனால் இவ்விஷயமாக பல வியாக்கியான கர்த்தாக்களும் சங்கராச்சாரியாரையே பின்பற்றியிருக்கிறார்கள். அதையொட்டி சங்கராச்சாரியார் கொடுத்துள்ள விளக்கம் பின் வருமாறு: "அந்த குணங்களாகிய வித்திலிருந்தே உடல் உருவாகியிருக்கிறது."

எனினும், அதற்கு நான் இவ்விதம் விளக்கம் கூற விரும்புகிறேன்: "உடலையும் ஆன்மாவையும் மனிதன் ஒன்றாகக் கருதுவதே, அந்த குணங்களுக்கு மூல காரணமாகும்."]

अर्जुन उवाच

कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१ ॥

அர்ஜுன உவாச

கைர்லிங்கைஸ்த்ரீன் குணானேதான் அதீதோ பவதி ப்ரபோ |
கிமாசார: கதம் சைதான் த்ரீன் குணானதிவர்த்ததே || 21

*அர்ஜுனன் கூறினான் :*

*21.* பகவானே, மூன்று குணங்களையும் கடந்தவனின் லட்சணங்கள் என்ன? அவன் எப்படி நடந்து கொள்கிறான்? அவன் எப்படி மூன்று குணங்களையும் கடக்கிறான்?

श्रीभगवानुवाच

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥ २२ ॥

ஸ்ரீ பகவான் உவாச

ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ |
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி || 22

*ஸ்ரீ பகவான் கூறினார் :*

*22.* பாண்டவா, ஒளி, புலன்களின் சேஷ்டை, மதிமயக்கம் ஆகியவை வரும்போது அவற்றை யார் வெறுப்பதில்லையோ, அவை மறைந்துவிடும் போது அவற்றை யார் விரும்புவதில்லையோ,

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥ २३ ॥

உதாஸீன வதாஸீனோ குணைர்யோ ந விசால்யதே |
குணா வர்த்தந்த இத்யேவ யோ(அ)வதிஷ்டதி நேங்கதே || 23

*23.* யார், எதையும் பொருட்படுத்தாமல் உட்கார்ந்து கொண்டு குணங்களால் அசைக்கப் படுவதில்லையோ, குணங்களே அவற்றின் வேலைகளைச் செய்கின்றன என்பதை அறிந்து யார் உறுதியாகவும் அசையாமலும் இருக்கின்றானோ,

समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४ ॥

ஸமது:க்கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சன: ।
துல்யப்ரியாப்ரியோ தீரஸ் துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி: ‖ 24

24. யார் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதுகிறானோ, யார் எவ்விதக் கவலையுமின்றி சாந்தமாக இருக்கிறானோ, மண், கல், பொன் எல்லாவற்றையும் யார் சமமாக எண்ணுகிறானோ, யார் விவேகத்துடனும் விருப்பு வெறுப்பின்றியும் புகழ்ச்சி, இகழ்ச்சி எல்லாவற்றையும் ஒன்றாக நினைக்கிறானோ,

मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५ ॥

மாநாபமானயோஸ் துல்யஸ் துல்யோ மித்ராரி பக்ஷயோ: ।
ஸர்வாரம்ப பரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ‖ 25

25. யார், மானம் அவமானம் இரண்டையும் ஒன்றாக நினைக்கிறானோ, யார், நண்பர்களிடமும் பகைவர்களிடமும் ஒரே விதமாக நடந்து கொள்கிறானோ, ஆசை காரணமாக யார் புதிய பொறுப்புகளை ஏற்றுக்கொள்வதில்லையோ, அத்தகைய ஒரு மனிதனே குணாதீதன் என்று கூறப்படுகிறான்.

22-லிருந்து 25 வரையில் உள்ள நான்கு சுலோகங்களையும் சேர்த்து வாசிப்பதுடன், சேர்த்தே ஆராய்ச்சி செய்ய வேண்டும். முந்திய சுலோகங்களில் நாம் பார்த்தது போல், ஒளி, புலன்களின் சேஷ்டை, மதிமயக்கம் ஆகியவை முறையே சத்துவ, ராஜஸ, தாமஸ குணங்களின் லட்சணங்கள் ஆகும். குணங்களைக் கடந்தவன் அவற்றினால் பாதிக்கப்படுவதில்லை என்பதே மேற்கண்ட சுலோகங்களின் உட்கருத்தாகும். ஒரு கல், ஒளியை விரும்புவதில்லை; அது செயலையோ, செயலின்மையையோ வெறுப்பதில்லை. அது அசைவற்றிருக்கிறது. அது தன் விருப்பம் காரணமாக அவ்விதம் இருக்கவில்லை. யாராவது ஒருவன் அதை அசைத்தால், அதற்காக அது கோபம் அடைவதில்லை. அசையாத நிலையிலேயே அதை விட்டுவிட்டால், மந்த புத்தியோ, மதிமயக்கமோ தன்னைப் பற்றிக் கொண்டுவிட்டதாக அது கருதுவதில்லை. ஒரு கல்லுக்கும் குணாதீதனுக்கும் உள்ள வேற்றுமை என்னவெனில், குணாதீதன் நெஞ்சறிந்தும், முற்றிலும் புத்தி பூர்வமாகவும் பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறான். சாதாரண மனிதன் அந்த பந்தங்களால் கட்டுண்டிருக்கிறான். குணாதீதனோவெனில், தான் அடைந்துள்ள ஞானத்தின் பலனாக ஒரு கல்லைப்

போல் சாந்த நிலையை எய்தியுள்ளான். கல்லைப் போல் அவன் சாட்சியாக இருக்கிறானேயன்றி, செயல் புரிபவனாக இல்லை. செயல்கள் புரிவது குணங்களோ அல்லது பிரகிருதியோ தான். குணங்கள் தான் செயல் புரிகின்றன என்ற ஞானத்துடன் அத்தகைய ஞானி எதையும் பொருட்படுத்தாமல் உட்கார்ந்திருப்பான். வாழ்க்கையில் ஒவ்வொரு விநாடியும் செயல் புரிபவர்கள் நாம் தான் என்று நடந்து கொள்ளும் நாம், அத்தகைய ஞானியின் நிலையைக் கற்பனை செய்து கொள்ளத்தான் முடியுமேயன்றி, அனுபவத்தினால் அறிந்து கொள்ள முடியாது. ஆனால், செயல்களுக்கும் ஆன்மாவுக்கும் சம்பந்தம் இல்லை என்ற உறுதியான நம்பிக்கையைச் சிறிது சிறிதாக வளர்த்துக் கொள்வதன் மூலம் நாம் ஞானியின் நிலையை நெருங்க முயற்சிக்கவேண்டும். குணாதீதன் தனது நிலையை அனுபவிக்கிறான்; எனினும், அவனால் அதை வர்ணிக்க முடியாது. ஏனெனில், அவ்விதம் வர்ணிக்கக் கூடியவன் குணாதீதனாக இருக்க முடியாது. அவன் அவ்விதம் வர்ணிக்க முற்பட்ட விநாடியிலேயே, 'நான்' என்ற அகந்தை தலைகாட்டத் தொடங்குகிறது. நாம் பொதுவாக அனுபவிக்கும் அமைதி, ஒளி, பரபரப்பு, மந்தம் யாவும் கானல் நீர் போன்றவை. சாத்துவிக நிலை, குணாதீதனுடைய நிலைக்கு வெகு அருகில் இருப்பதாக கீதை தெளிவாகக் கூறுகிறது. ஆதலால், ஒவ்வொருவரும், எப்போதாவது தாங்கள் குணாதீதனின் நிலையை எட்ட முடியும் என்ற நம்பிக்கையுடன், தங்களிடத்தில் சத்துவ குணத்தை மேலும் மேலும் அதிகமாக அபிவிருத்தி செய்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान्ब्रह्मभूयाय कल्पते ॥ २६ ॥

மாம் ச யோ(அ)வ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே ।
ஸ குணான் ஸமதீத்யைதான் ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 26

26. யார் தடுமாற்றமின்றி அப்பழுக்கற்ற பக்தி யோகத்தினால் எனக்குத் தொண்டு புரிகின்றானோ, அவன் மூன்று குணங்களையும் கடந்து பிரம்மத்துடன் ஐக்கியம் அடைவதற்குத் தகுதி வாய்ந்தவனாகிறான்.

ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥ २७ ॥

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா(அ)ஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்யச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27

27. மாறுதலற்ற, மரணமற்ற பிரம்மத்தின் உருவமே நான்; அதுபோலவே, நிரந்தரமான தர்மத்தின், குற்றம் குறையற்ற பேரானந்தத்தின் வடிவமும் நானே.

[குணாதீதன் என்றால் குணங்களே இல்லாதவன் அல்ல. எல்லா குணங்களையும் கடந்தவனே குணாதீதன். பூரண சத்துவ குணம் உள்ளவன் என்பது அதன் அர்த்தம் அல்ல. ஒவ்வொரு பக்தனும் அந்த நிலையை அடையவே முயற்சிக்கிறான். ஆனால், குணாதீதன் என்பவனோ, எள்ளளவும் ரஜோ குணமோ, தமோ குணமோ இல்லாத தூய்மையான கலப்பற்ற சத்துவ குணமே உருவானவன். அப்பழுக்கற்ற அத்தகைய குணாதீதன் கடவுளே. அவர் தான் சச்சிதானந்தன், சத்-சித்-ஆனந்தன்; பிரம்மத்தின் உருவம் அவர்தான். அவரே சத், அதாவது அவரே சத்தியம் அல்லது மெய்ப்பொருள்; அவரே சித், அதாவது அவரிடத்தில் நிரந்தரமான தர்மம் அடங்கியிருக்கிறது. பிரபஞ்ச மலர்ச்சியின் நிரந்தரமான சட்டமே தர்மமாகும்; அவரே ஆனந்தம்; ஏனெனில் அப்பழுக்கற்ற பேரானந்தத்தின் இருப்பிடம் கடவுள் தான்.]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे

श्रीकृष्णार्जुनसंवादे गुणत्रयविभागयोगो नाम चतुर्दशोऽध्यायः ॥ १४ ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
குணத்ரய விபாக யோகோ நாம
சதுர்தசோ (அ)த்யாய: - 14

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில்
பிரம்மஞானத்தின் ஓர் அம்சமான யோக
சாஸ்திரத்தைப் பற்றி ஸ்ரீ கிருஷ்ண
பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையில் 'குணத்ரய விபாக
யோகம்' என்ற பதினான்காவது
அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# புருஷோத்தம யோகம்

## பதினைந்தாம் அத்தியாயம்

க்ஷரத்தையும் (அழிவுள்ளது), அக்ஷரத்தையும் (அழிவற்றது) கடந்த கடவுளின் மகோன்னதமான உருவத்தைப் பற்றி இந்த அத்தியாயம் விவரிக்கின்றது.

श्रीभगवानुवाच

ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

ஊர்த்வமூல மத: சாகம் அச்வத்தம் ப்ராஹுரவ்யயம் |
சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் || 1

ஸ்ரீ பகவான் கூறினார்:

1. மேலே வேரும் கீழே கிளைகளும் உள்ள அசுவத்த மரம் அழிவற்றது என்று கூறுகிறார்கள். அதன் இலைகள் வேத மந்திரங்களாக இருக்கின்றன. இதை யார் அறிகிறானோ அவன் வேதங்களை அறிந்தவனாகிறான்.

'ச்வ' என்றால் நாளை என்று அர்த்தம். அச்வத்தம் என்றால் (ந ச்வோபி ஸ்தம்), நாளை வரையில் கூட நிலைத்து இராதது என்று பொருள். புலன்களால் காணக் கூடிய இந்த உலகமானது ஒவ்வொரு விநாடியும் மாறிக் கொண்டிருக்கிறது. அது இடைவிடாது மாறிக் கொண்டிருப்பினும், அதன் வேர் பிரம்மமாக அல்லது எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளாக இருப்பதால், அது அழிவற்றதேயாகும். வேத மந்திரங்களாகிய அதன் இலைகளே, அதாவது தர்மமே அதற்கு (உலகத்திற்கு) பாதுகாப்பாகவும், ஆதாரமாகவும் இருக்கின்றன. இந்த உலகம் அத்தகையது என்பதையும், தர்மம் தான் உண்மையான ஞானி என்பதையும் அறிந்தவன், உண்மையிலேயே வேதங்களை அறிந்தவனாகிறான்.

अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा
गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसंततानि
कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २ ॥

அதச்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ் தஸ்ய சாகா
குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாளா: ।
அதச்ச மூலான்யனு சந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்ய லோகே ॥ 2

2. அதன் கிளைகள் கீழேயும் மேலேயும் பரந்து, குணங்களின் காரணமாக செழுமையாக வளர்ந்திருக்கின்றன. புலன்களுக்கான சாதனங்களே அதன் துளிர்களாக இருக்கின்றன. செயல்களின் விளைவுகள் என்ற உருவத்தில் அதன் வேர்கள், மனித உலகில் ஆழமாகச் சென்று பரந்திருக்கின்றன.

ஞானம் ஏற்படாதவனுக்கு இந்த உலகமாகிய மரம் தோன்றும் விதமே இவ்விதம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மேலே பிரம்மத்திடம் உள்ள அதன் வேர்களை அவர்கள் கண்டு கொள்வதில்லை. எனவே, அவர்கள் எப்போதும் புலன்களுக்கான சாதனங்களில் பற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் மூன்று குணங்கள் தான் அந்த மரத்திற்குத் தண்ணீராக இருக்கிறது. அவ்விதம் அவர்கள் மனித உலகில் கர்மத்தினால் கட்டுண்டு கிடக்கிறார்கள்.

[1-2. மேலே வேரும், கீழே கிளைகளும் உள்ள அசுவத்த மரத்தை, நிரந்தரமான, இறப்பற்ற பிரம்மமாக கட உபநிடதம் வர்ணித்திருக்கிறது. ஆனால் அந்த மரம் எப்போதும் அழிந்து விடக் கூடியதே. அதன் மாறும் தன்மை தான் நிரந்தரமானது. திலகர் ஆதாரத்துடன் காட்டியிருப்பது போல், அசுவத்த மரம் (Ficus Religiosa) அரச மரமே யாகும். அதன் வேர் அல்லது ஆதி விதை பிரம்மமே. அது தான் காவிய ரசனையுடன் 'மேலே' என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஏராளமான அதன் கிளைகள் கீழே பரந்து விரிந்திருப்பதை நம் கண்களால் பார்க்கிறோம். இரண்டாவது சுலோகத்தில், அதன் வேர்கள் கீழே இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால், சாதாரண மனிதர்கள் மேலேயுள்ள வேரை மறந்து, கீழேயுள்ள உலகாயதமான வேர்களையே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் கிளைகள் மேலேயும் கீழேயும் பரந்து வியாபித்திருக்கின்றன. சென்ற ஜன்மத்தின் கர்ம வினைகளின் பலனைச் செய்யப்படும் கர்மங்கள் கீழே சல்லிவேர்களுக்குக் காரணமாக இருக்கின்றன. அந்தக் கர்மங்களே இடைவிடாத பிறப்பு-இறப்பு, இறப்பு-பிறப்புச் சுழலுக்குக் காரணமாக இருக்கின்றன. அசுவத்த மரத்தின்

மேலேயிருந்து கீழே வேர்கள் வருவதில்லை என்றும், அவை பூமியில் மீண்டும் வேரூன்றுவது இல்லை என்றும், ஹில் கூறுவது தவறாகும். பல வருடங்கள் சென்ற முதிர்ந்த அசுவத்த மரத்தின் மேலேயிருந்தும் வேர்கள் கீழே வருகின்றன.

உபநிடத தத்துவங்களை ஆராய்ச்சி செய்து பேராசிரியர் ரானடே எழுதியுள்ள நூலில் ('Constructive Survey of Upanishadic Philosophy'), அசுவத்த மரத்தை ஸ்காண்டிநேவிய புராதனக்கதையில் உள்ள 'இக்ட்ராஸில்' (Igdrasil) மரத்துடன் ஒப்பிட்டிருக்கிறார். கார்லைல் எழுதியுள்ள 'வீரர்கள்' என்ற நூலில் அந்த மரத்தைப் பற்றிப் பின்வருமாறு அழகாக வர்ணித்துள்ளார்: "அதன் கிளைகளும், தளிர்களும், உதிரும் இலைகளும் எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் நிகழும் சம்பவங்களையும், மனிதர் அனுபவிக்கும் துன்பங்களையும், அவர்களுடைய செயல்களையும், கொடிய இயற்கை விபத்துக்களையும் குறிக்கின்றன. அந்த மரத்தில் உள்ள ஒவ்வொரு இலையும் ஒரு வரலாற்றைக் கூறுகின்றது அல்லவா? இலையில் உள்ள ஒவ்வொரு நரம்பு ஒரு செயலையோ அல்லது சொல்லையோ குறிக்கின்றது அல்லவா? அதன் கிளைகள் உலக நாடுகளின் சரித்திரங்களேயாகும். அதனுடைய இலைகளின் சலசலப்பு, மனித வாழ்க்கையின் சந்தடியையே குறிக்கின்றது. அதன் வளர்ச்சி, மனிதனின் ஆசாபாசங்களை எதிரொலிக்கின்றது. அதுதான் 'இக்ட்ராஸில்' அதாவது வாழ்க்கை மரம் ஆகும். சென்ற காலமும், நிகழ் காலமும், வருங்காலமும் அதுதான்; செய்தது, செய்து கொண்டிருப்பது, செய்யப் போவது, செய்ய வேண்டியது எல்லாவற்றையும் அந்த மரம் குறிப்பிடுகின்றது."

ஆனால், அந்த மரத்திற்கும் அசுவத்த மரத்திற்கும் ஒரு முக்கிய வேற்றுமை இருப்பதாக பேராசிரியர் ரானடே குறிப்பிட்டுள்ளார். அதாவது 'இக்ட்ராஸில்' மரத்தின் வேர்கள் கீழே மரண தேவனின் சாம்ராஜ்யம் வரையில் ஆழ்ந்திருக்கின்றன. ஆனால், அவர் இந்த அத்தியாயத்தின் இரண்டாவது சுலோகத்தை மறந்துவிட்டார் என்றே எண்ணுகிறேன். அங்கே 'வேர்கள்' என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது; முதல் சுலோகத்தில் இருப்பது போல் 'வேர்' என்று குறிப்பிடப்படவில்லை. "வேர்கள் கீழே பரந்தும், விரிந்தும், ஆழ்ந்தும் சென்றிருக்கின்றன" என்று இரண்டாவது சுலோகத்தில் கூறப்பட்டிருக்கிறது. எனவே, மேற்கண்ட உவமை அதிகப் பொருத்தமாகவும், அதிகத் தெளிவாகவும் இருக்கிறது என்றே தோன்றுகிறது. மேலே 'செய்ய வேண்டியது' என்பது, கர்மத்தின் நிரந்தரமான பந்தத்தையே அல்லது மீண்டும் மீண்டும் ஏற்படும் மரணத்தையே குறிக்கிறது. மனிதன் அவனது கண்களைத் திறந்து மேலேயுள்ள அழிவற்ற வேரைக் கண்டுகொண்டாலொழிய, அதாவது அத்தியாயம்-15, சுலோகம்-2-க்கு காந்திஜி தாம் எழுதியுள்ள குறிப்பில் கூறுவதுபோல், மனிதன் இறப்பு இல்லாத நிலையைக் கண்டு கொண்டாலொழிய, அவன் கர்ம பந்தத்திலிருந்து விடுதலை பெற முடியாது. அத்தியா

யம்-12, சுலோகம் - 7-ஐயும் பார்க்கவும். அதில் சம்சாரம் என்பது மரணமே என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

न रूपमस्येह तथोपलभ्यते
नान्तो न चादिर्न च संप्रतिष्ठा ।
अश्वत्थमेनं सुविरूढमूल-
मसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३ ॥

ந ரூப மஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா ।
அச்வத்தமேனம் ஸுவிரூடமூலம்
அஸங்க சஸ்த்ரேண த்ருடேன சித்வா ‖ 3

3. அதன் (பிரம்மத்தின்) உண்மை உருவம் இங்கே கண்களுக்குப் புலப்படுவதில்லை. அதன் முடிவோ, ஆரம்பமோ, அஸ்திவாரமோ எதுவும் புலப்படுவதில்லை. எனவே, மனிதன் முதலில் பற்றின்மை என்ற உறுதியான வாளால், ஆழ்ந்து வேரூன்றியுள்ள இந்த அசுவத்த மரத்தைவெட்டி,

ततः पदं तत्परिमार्गितव्यं
यस्मिन्गता न निवर्तन्ति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये
यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४ ॥

தத: பதம் தத் பரிமார்க்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய: ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ‖ 4

4. எந்த சரணாலயத்திற்குச் சென்றால் திரும்பிவர வேண்டிய அவசியம் இல்லையோ அந்த இடத்தைப் பெறவேண்டும் என்று அவன் பிரார்த்திக்க வேண்டும். பழமையான இந்த கர்ம உலகமானது யாரிடமிருந்து உண்டாயிற்றோ, அந்த ஆதிப் பரம் பொருளிடம் அவன் தஞ்சம் அடைய வேண்டும்.

---

* 3. ...இந்த மயக்கை யறுக்க-எனக்
கெந்தை யெழில் வாள் கொடுத்தான். —தாயுமானவர்.

மூன்ருவது சுலோகத்தில் குறிப்பிட்டுள்ள ‘பற்றின்மை’ என்பது, இச்சையடக்கத்தையும் புலன்களுக்கான சாதனங்களில் வெறுப்பையுமே குறிக்கின்றது. உலகத்தின் கவர்ச்சிகளிலிருந்து அறவே ஒதுங்கி நிற்க அவன் உறுதி கொண்டாலன்றி, அவன் ஒவ்வொரு நாளும் மேலும் மேலும் அதிகமாக சேற்றில் ஆழ்ந்து விடுவான். புலன்களுக்கான சாதனங்களுடன் விளையாடத் துணியக் கூடாது என்பதையும், அவ்விதம் துணிபவன் தண்டனையிலிருந்து தப்பமுடியாது என்பதையுமே இந்த சுலோகங்கள் காட்டுகின்றன.

निर्मानमोहा जितसङ्गदोषा
अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।
द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञै-
र्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५ ॥

நிர்மான மோஹா ஜிதஸங்க தோஷா
அத்யாத்ம நித்யா விநிவ்ருத்த காமா: ।
த்வந்த்வைர் விமுக்தா: ஸுகது:க்க ஸம்ஞைர்
கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத் ‖ 5

5. யார் அகந்தையும் மதிமயக்கமும் இராதவர்களோ, பற்றின்மையாகிய மாசுகளைக் களைவதில் யார் வெற்றியடைந்தவர்களோ, இடைவிடாது பரம்பொருளுடன் யார் தொடர்பு கொண்டிருப்பவர்களோ, கோபம் முதலிய வெறிகளை யார் ஒழித்தவர்களோ, இன்பம்-துன்பம் போன்ற இருமைகளிலிருந்து யார் விடுதலை அடைந்தவர்களோ, ஞானத்தைப் பெற்ற அத்தகைய ஆன்மாக்கள் அழிவற்ற அந்தச் சரணலயத்தில் இடம் பெறுகிருர்கள்.

न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ ६ ॥

ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: ।
யத் கத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம ‖ 6

6. சூரியனே, சந்திரனே அல்லது அக்கினியோ அந்த இடத்தில் பிரகாசிப்பதில்லை. அங்கு சென்றவர்கள் திரும்பவும் பிறக்க மாட்டார்கள். அதுதான் என்னுடைய மகோன்னதமான ஸ்தானம் (பரம பதம்) ஆகும்.

[இதே சிந்தனை, உபநிடதங்களில் திரும்பத் திரும்ப இடம் பெற்றிருக்கிறது : "அங்கே சூரியனோ, நட்சத்திரங்களோ, மின்னலோ, அக்னியோ பிரகாசிப்பதில்லை! பரபிரம்மம் பிரகாசிப்பதனாலேயே அவையெல்லாம் ஒளிவீசுகின்றன. பிரம்மத்தின் ஒளியினாலேயே அவையெல்லாம் பிரகாசிக்கின்றன."*]

ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥

மமை வாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸனாதன: ।
மன: ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி ॥ 7

7. என்னுடைய ஓர் அம்சமே இந்த உலகத்தில் நிரந்தரமான ஜீவனாக இருந்துவருகிறது. அதுவே மனத்தையும், புலன்களையும் பிரகிருதியில் உள்ள அவற்றின் ஸ்தானத்திலிருந்து இழுக்கின்றது.

[சங்கராச்சாரியார் கூறுவதாவது: ஒவ்வொருவருடைய ஆன்மாவும், பர பிரம்மத்தின் ஓர் அம்சமே. தண்ணீரில் சூரியனின் பிரதிபிம்பத்தைப் போலவோ, அல்லது ஒரு பானைக்குள் இருக்கும் இடை வெளியைப் போலவோ பரபிரம்மமும் ஒவ்வொன்றை

---

* न तत्र सूर्यो भाति न चंद्र तारकं
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥
कठ २-५-१५, मुण्डक २-२-१०, श्वेताश्वतर ६-१४

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோ(அ)ய மக்னி:]
தமேவ பாந்த மனுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி.
--கட. 2-5-15, முண்டக. 2-2-10, சுவேதாசுவதர உபநிடதம்-6-14.

6. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றிற்குப் பெயர்களும் உருவங்களும் இருக்கின்றன. ஆனால் பரபிரம்மமோ, பெயரையும் உருவத்தையும் கடந்தது. சூரியன், சந்திரன் யாவும் பரபிரம்மத்தினிடமிருந்தே ஒளியைப் பெறுகின்றன என்பதில் சந்தேகமில்லை. பரபிரம்மம் ஒளி வீசும்படி செய்ய யாருடைய உதவியும் தேவையில்லை. அத்தகைய பரபிரம்மத்துடன் ஐக்கியமாகிவிடுவதே மோட்சம் என்றும், விடுதலை என்றும், பிரம்ம நிர்வாணம் என்றும் கூறப்படுகின்றன. —திலகர்.

யும் உருவமாகக் கொண்டு வியாபித்திருக்கிறது. தண்ணீரையும், பானையையும் அப்புறப்படுத்திவிட்டால், சூரியனும் ஆகாய வெளியும் முன்போலவேதான் இருக்கின்றன.]

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८ ॥

சரீரம் யதவாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர: ।
க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர் கந்தா நிவாசயாத் ॥ 8

8. (இந்த உடலின்) எஜமானனான ஜீவன் உடலை அடையும் போதும், உடலை விட்டுச் செல்லும்போதும், காற்று பூக்களிலிருந்து வாசனையைக் கவர்ந்து செல்லுவதைப் போல், தான் போகும் இடத்திற்குத் தன்னுடன் இவைகளையும் (மனத்தையும் இந்திரியங்களையும்) கவர்ந்து செல்லுகிறான்.

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥

ச்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்சனம் ச ரஸனம் க்ராணமேவ ச ।
அதிஷ்டாய மனச்சாயம் விஷயானுபஸேவதே ॥ 9

9. காது, கண், மெய், நாவு, மூக்கு ஆகிய இந்திரியங்களில் ஜீவன் ஸ்திரமாக இருந்து கொண்டு, அவற்றின் வழியே அடிக்கடி விஷயங்களை அனுபவிக்கிறான்.

கேட்பது, பார்ப்பது, தொடுவது, சுவைப்பது, முகர்வது ஆகியவை புலன்களின் இயற்கையான அலுவல்களே. எனினும், 'நான்' என்ற அகந்தையுடன் புலன்களின் சாதனங்களை அடிக்கடி நாடுவதோ அல்லது அனுபவிப்பதோ களங்கம் உடையதாகிவிடும். அவ்விதமின்றேல், புலன்களின் சாதனங்களை குழந்தை அனுபவிப்பது போல் அது தூய்மையாக இருக்கும்.

उत्क्रामन्तं स्थितं वापि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ १० ॥

உத்க்ராமந்தம் ஸ்திதம் வா(அ)பி புஞ்சானம் வா குணான்விதம் ।
விமூடா நானுபச்யந்தி பச்யந்தி க்ஞான சக்ஷுஷ: ॥ 10

*10.* (இறைவனின் அம்சமான) ஜீவன் உடலை விடும்போதும், உடலில் இருக்கும் போதும், குணங்களுடன் சேர்ந்து புலன்களுக்கான சாதனங்களை அனுபவிக்கும்போதும், அவனை மதி மயக்கம் கொண்டவர்கள் பார்ப்பதில்லை, ஞானக் கண் உடையவர்கள் மாத்திரமே பார்க்கின்றனர்.

[அதாவது, ஜீவனுடைய உண்மைத் தத்துவத்தையும், இங்கே குறிப்பிட்டுள்ள நடவடிக்கைகளுக்கும் அவனுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதையும் காண்பதேயாகும்.]

**यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।**
**यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ ११ ॥**

**யதந்தோ யோகினச் சைனம் பச்யந்த்யாத்மன் யவஸ்திதம் ।**
**யதந்தோ(அ)ப்யக்ருதாத்மானோ நைனம் பச்யந்த்யசேதஸ: ॥ 11**

*11.* யோகிகள் தங்கள் உள்ளத்திலேயே வீற்றிருக்கும் அவனைக் காண முயற்சிக்கின்றனர். தங்களைத் தூய்மையாக்கிக் கொள்ளாத மூடர்கள் முயற்சி செய்தாலும் கூட அவனைக் காண முடிவதில்லை.

இந்த சுலோகத்திற்கும், பாவம் செய்வோனுக்குக் கூட 9-ஆம் அத்தியாயத்தில் பகவான் கொடுத்துள்ள வாக்குறுதிக்கும் முரண்பாடு இல்லை. 'அக்ருதாத்மன்' (अकृतात्मन्) என்றால் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளாதவன் என்று பொருள். யாருக்கு தெய்வ பக்தி இல்லையோ, தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ள யார் உறுதிகொள்ளவில்லையோ அவனையே அந்தச் சொல் குறிக்கின்றது. படுமோசமான பாவி கூட, பணிவுடன் சரண் அடைந்து தன்னைத் தூய்மையாக்கிக் கொள்வானாயின், அவன் பகவானைக் காண்பதில் வெற்றி பெறுகிறான். யம, நியமங்களை அனுசரிப்பதில் அக்கறை கொள்ளாமல், வெறும் அறிவின் மூலம் கடவுளைக் காணலாம் என்று எதிர்பார்ப்பவர்கள், மூடர்களும் தெய்வ பக்தி இல்லாதவர்களுமே ஆவர். அவர்களால் கடவுளைக் காண முடியாது.

**यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।**
**यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ १२ ॥**

**யதாதித்யகதம் தேஜோ ஜகத் பாஸயதே(அ)கிலம் ।**
**யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ தத் தேஜோ வித்தி மாமகம் ॥ 12**

*12.* பிரபஞ்சம் முழுவதும் பிரகாசிக்கும் சூரியனின் ஒளியும், சந்திரனிடமும், அக்கினியிலும் உள்ள ஒளியும் என்னுடைய ஜோதியே என்பதை அறிந்து கொள் ;

**गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।**
**पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥**

காமாவிச்ய ச பூதானி தாரயாம்யஹமோஜஸா।
புஷ்ணுமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: || 13

*13.* நான் பூமிக்குள் பிரவேசித்து என்னுடைய சக்தியினுல் எல்லா உயிர்களையும் தாங்குகிறேன். நான் எல்லாவிதமான சாரத்தையும் கொடுக்கும் சந்திரனுகி, மரம், செடி, கொடிகள் எல்லாவற்றையும் போஷித்து வளர்க்கிறேன் ;

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।**
**प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४ ॥**

அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநும் தேஹமாச்ரித: !
ப்ராணுபான ஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம் || 14

*14.* நான் வைச்வாநரன் என்ற அக்கினியாகி, மூச்சு விடும் எல்லாப் பிராணிகளின் உடல்களிலும் பிரவேசித்து, பிராண, அபான வாயுக்களின் மூலம் நான்கு விதமான உணவை ஜீரணம் செய்கிறேன் ;

---

14. உயிர்கள் சாப்பிடும் உணவை ஜீரணம் செய்யும் அக்னியே வைச்வாநரன் என்று கூறப்படுகிறது. மென்று சாப்பிடும் உணவு, உறிஞ்சி சாப்பிடும் உணவு, விழுங்கும் உணவு, நாவினுல் அருந்தும் உணவு (பான வகை) ஆகியவையே நான்கு வித உணவு ஆகும். சாப்பிடுவோன் வைச்வாநரன் என்றும், உணவு சந்திரன் என்றும் தியானம் செய்துகொண்டு யார் சாப்பிடுகிருனே, அவன் சாப்பிடும் உணவில் உள்ள அசுத்தங்கள் எல்லாம் நீங்கிவிடுகின்றன. —சங்கரர்.

14. மனிதனின் உடலை ஒரு பானைக்கு உவமையாகக் கூறலாம். உடலில் உள்ள மனம், அறிவு, புலன்கள் யாவும் பானையில் உள்ள தண்ணீர், காய்கறி, அரிசி ஆகியவற்றைப் போன்றவை. அந்தப் பானையை அடுப்பின் மீது வைத்தால், பானைக்குள் இருப்பவை தீயினுல் பக்குவமாகின்றன. ஆனுல், அவற்றை வேக வைக்கும் உஷ்ணம் பானைக்குச் சொந்தமானது அல்ல; நீர், காய்கறி, அரிசியினுடையதும் அல்ல. அது போலவே மனித சரீரத்தைப் போஷித்துப் பாதுகாக்கும் சக்தி எல்லாம் வல்ல இறைவனைச் சார்ந்தது.
—ராமகிருஷ்ண பரமஹம்சர்

[*12-14.* அக்னி, வாயு, இந்திரன் முதலிய யாவரும் பகவானிடமிருந்தே தங்களுடைய பெருமையையும் சக்தியையும் அடைகின்றனர். ஏனெனில், பகவானே எங்கும் வியாபித்திருக்கிறார் அல்லவா? பகவானின் அருள் இல்லாததால் அக்னியால் ஒரு புல்லைக் கூட எரிக்க முடியவில்லை என்றும், வாயுவினால் ஒரு புல்லைக் கூட தூக்க முடியவில்லை என்றும், எல்லாப் பொருட்களுக்கும் பஞ்ச பூதங்களுக்கும் கூட உள்ள சக்தி பிரம்மத்தினிடமிருந்தே வருவதை இந்திரன் உணர்ந்து கொண்டதாயும், கேனோபநிடதத்தில் (*3-4*) ஒரு தத்துவக் கதை இருக்கிறது.]

सर्वस्य चाहं हृदि संनिविष्टो
मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो
वेदान्तकृद्वेदविदेव चाहम् ॥ १५ ॥

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்க்ஞான மபோஹனம் ச ।
வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் ॥ 15

*15.* நான் எல்லோருடைய இதயத்திலும் வீற்றிருக்கிறேன். என்னிடமிருந்தே ஞாபக சக்தியும், ஞானமும், சந்தேகங்களைத் தீர்க்கும் ஆற்றலும் உண்டாகின்றன. எல்லா வேதங்களாலும் அறியப்பட வேண்டியவன் நானே; வேதாந்தத்தின் கர்த்தாவும் வேதங்களை உணர்ந்தவனும் நானே.

[வேதாந்தம் என்ற சொல்லுக்கு வேதங்களின் முடிவு என்பதே அப்பட்டமான பொருள். வேதங்களின் முடிவில் குறிப்பிடப்பட்டுள்ள சித்தாந்தம் என்பது அதன் அர்த்தமாக இருக்கலாம். அந்த சித்தாந்தம், உபநிடதங்கள் அல்லது வேதங்களின்

---

15. பசுவினிடத்தில் உள்ள பால் அதன் உடல் முழுவதும் புஷ்டி உருவமாகப் பரவியுள்ளது. என்றாலும், பாலை அதன் மடியில் மாத்திரமே காண்கிறோம். அதுபோலவே, இறைவன் உலகம் எங்கும் வியாபித்திருக்கிறார் என்றாலும், தியானம் செய்வோர் அவரைத் தங்களுடைய இதயத்திலேயே காண்கின்றனர்.

—ராமகிருஷ்ண பரமஹம்சர்.

சாரமே. முக்திகோபநிஷத் இவ்விதம் கூறுகிறது: "எண்ணெய்க்கு ஆதாரம் எள்ளில் இருப்பது போலவே, வேதாந்தத்திற்கு ஆதாரம் வேதங்களில் இருக்கின்றது"*)

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६ ॥

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்சாக்ஷர ஏவ ச |
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோ(அ)க்ஷர உச்யதே ‖ 16

16. இந்த உலகில் இரண்டு பேர் இருக்கின்றனர். ஒருவன் க்ஷரன் (அழியக் கூடியவன்), மற்றொருவன் அக்ஷரன் (அழிவற்றவன்). க்ஷரன் எல்லாப் பிராணிகளையும் தழுவியிருக்கிறான். அவைகளுக்கெல்லாம் நிரந்தரமான அஸ்திவாரமாக இருப்பவனே அக்ஷரன்.

[அத்தியாயம்-13, சுலோகம்-1-இல் கூறப்பட்டிருக்கும் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன், அல்லது அத்தியாயம்-7, சுலோகம் 5-இல் குறிப்பிடப்பட்டிருக்கும் பரபிரகிருதி, அபர பிரகிருதி ஆகியவற்றைப் போல, இந்த சுலோகத்தில் க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்று சிலர் நினைக்கக் கூடும். உண்மையில் ராமானுஜரைப் பின்பற்றி ஹில்லும் அவ்விதமே கருதுகிறார். ஆனால், அவ்விதம் எண்ணுவதில் இரண்டு, மூன்று சங்கடங்கள் இருக்கின்றன.

1. க்ஷேத்திரக்ஞனும் தானும் ஒன்று என பகவான் அடிக்கடி கூறியிருக்கிறார். (அத்தியாயம்-13, சுலோகங்கள் 2, 22).

2. பரம்பொருளின் கீழ்த்தர இயல்பு, மேலான இயல்பு என்ற இரண்டு அம்சங்களைப் பற்றி (அத்தியாயம்-7, சுலோம்-5) பகவான் இங்கே எதுவும் கூறவில்லை. உலகத்தின் இரண்டு அம்சங்களைப் பற்றியே (लोके द्वौ इमौ पुरुषौ—லோகே த்வௌ இமௌ புருஷௌ) பேசுகிறார். அவ்விரண்டில் அக்ஷரம் என்பது தோன்றா நிலையில் உள்ள பிரகிருதி. உருவம் உள்ள எல்லா

---

* तिलेषु तैलवद् वेदे वेदान्तः सुप्रतिष्ठितः ।

मुक्तिक १-९

திலேஷு தைலவத் வேதே வேதாந்த: ஸுப்ரதிஷ்டித: |

முக்திக உபநிடதம்.1-9

சிருஷ்டிகளுக்கும் அதுதான் நிரத்தரமான அடிப்படையாகும். அக்ஷரம் அழிவற்றது, நிரந்தரமானது. உலகில் எப்போதும் மாறிக் கொண்டிருக்கும் பொருட்களே க்ஷரம் (அழியக் கூடியவை) என்று வர்ணிக்கப்படுகின்றன.

*3.* இவ்விதமாகவே, சாங்கிய தத்துவத்தில் அந்த இரண்டு அம்சங்களும் வர்ணிக்கப்பட்டுள்ளன. கீதையும் அவ்வாறே விவரிக்கின்றது என்ருலும், உருவமற்றது, அழிவில்லாதது என்று சாதாரணமாக எல்லோரும் நினைப்பதைக் காட்டிலும் உண்மையிலேயே உருவமற்றதும் அழிவற்றதும் புருஷோத்தமனே, அதாவது எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளே என்று கீதை பிரகடனம் செய்கின்றது (சுலோகம்-*17*). இந்தப் பரம் பொருளே உலகங்கள் முழுவதும் வியாபித்திருக்கிறது, உலகங்கள் முழுவதற்கும் உயிரைக் கொடுக்கிறது, உலகங்களை யெல்லாம் தாங்குகிறது. இந்த சுலோகத்துடன், எட்டாவது அத்தியாயத்தில் உள்ள *20*-ஆம் சுலோகத்தை ஒப்பிட்டுப் பாருங்கள். அதுவும் இதே கருத்தையே குறிப்பிட்டிருக்கிறது.

*4.* ஹில் தமது கருத்துக்கு ஆதாரமாக சுவேதாசுவதர உபநிடதத்திலிருந்து (*1-10*) மேற்கோள் காட்டியுள்ளார். மேற்கண்ட உபநிடதத்தில் அந்தப் பிரிவு முழுவதும் பிரகிருதியையும், ஆத்மாவையும், பரமாத்மாவையும் பற்றியே குறிப்பிட்டிருக்கிறது. உலகத்தின் அம்சங்களைப் பற்றி அது எதுவும் குறிப்பிடவில்லை. இங்கே *17*-ம் சுலோகத்தில் உலகத்தையும், உலகங்களையும் கடந்த சில விஷயங்களை, அதாவது ஆத்மாவைப் பற்றியும் பரமாத்மாவைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அடுத்த குறிப்பில் முண்டக உபநிடதத்திலிருந்து கொடுக்கப்பட்டுள்ள மேற்கோளில் இதன் சம்பந்தமான இறுதியான விளக்கம் அடங்கியிருப்பதாகத் தோன்றுகிறது.]

**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।**
**यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥**

உத்தம: புருஷஸ்த்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: ।
யோ லோகத்ரய மாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: ॥ 17

*17.* இவர்களைத் தவிர நிச்சயமாக மற்ருெருவரே, பரமாத்மா என்று கூறப்படும் பரம் பொருள் ஆவார். அழிவற்ற ஈசுவரனை பரமாத்மாவே மூன்று உலகங்களையும் வியாபித்துக் காப்பாற்றுகிருர்.

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥

யஸ்மாத் க்ஷர மதீதோ(அ)ஹம் அக்ஷராதபி சோத்தம: ।
அதோ(அ)ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥ 18

*18.* நான் க்ஷரத்தைக் கடந்தவன்; அக்ஷரத்திற்கும் மேலானவன். அதனுலேயே என்னை, உலகமும், வேதங்களும் புருஷோத்தமன் (எல்லாவற்றையும் விட மேலானவன்) என்று அழைக்கின்றன.

[வேதங்களில், குறிப்பாக உபநிடதங்களில் பிரபல வேத மந்திரமான 'புருஷ ஸூக்தம்' புருஷோத்தமனையே குறிக்கிறது. "எந்த அழிவற்ற பொருளிலிருந்து பல்வேறு உயிர்களும் உண்டாகின்றனவோ, அதைக் காட்டிலும் மேலானதே மகோன்னதமான பரம் பொருள் ஆகும்" என்று முண்டக உபநிடதம் வர்ணிக்கின்றது. அது மேலும் கூறுவதாவது: "தெய்விகமானவனும், உருவம் அற்றவனும் புருஷனே. அவன் பிறப்பு இல்லாதவன், மூச்சு இல்லாதவன், மனம் இல்லாதவன், அப்பழுக்கு இல்லாதவன், உயர்ந்த அழிவற்ற பொருளைக் காட்டிலும் மேலானவன்".]

சுவேதாசுவதர உபநிடதமும் (*1.7-12*) மகோன்னதமான பரம் பொருளை வர்ணித்திருக்கிறது.]

यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥ १९ ॥

யோ மாமேவ மஸம்மூடோ ஜானுதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ॥ 19

*19.* பாரதா, நான் புருஷோத்தமன் என்பதை யார் மதி மயக்கமின்றி அறிகின்ருனே, அவனே எல்லாவற்றையும் அறிந்தவன்; அவனே இதய பூர்வமாக என்னைப் பூஜிப்பவன் ஆகிருன்.

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ ।
एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत ॥ २० ॥

இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் இதமுக்தம் மயானக ।
ஏதத் புத்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத ॥ 20

20. பாவமற்றவனே, இவ்வாருக மிகவும் ரகசியமான சாஸ்திரத்தை நான் உனக்கு வெளியிட்டிருக்கிறேன். பாரதா, இதை யார் அறிகின்ருனே அவன் தான் அறிஞன்; அவனே, அவனுடைய வாழ்க்கையின் லட்சியத்தை நிறைவேற்றியவன் ஆகிருன்.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे पुरुषोत्तमयोगो नाम पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
புருஷோத்தம யோகோ நாம
பஞ்சதசோ(அ)த்யாய:-15

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம
ஞானத்தின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப்பற்றி
ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையில் 'புருஷோத்தம யோகம்'
என்ற பதினைந்தாவது அத்தியாயம்
இவ்வாருக முடிவுறுகின்றது.

# தெய்விக குணங்களும் அசுர குணங்களும்

## பதினாறும் அத்தியாயம்

தெய்விக இயல்புகளையும் அசுர இயல்புகளையும் பற்றி இந்த அத்தியாயம் விவரிக்கின்றது.

श्रीभगवानुवाच

अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।

दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் உவாச

அபயம் ஸத்வஸம்சுத்திர் க்ஞானயோக வ்யவஸ்திதி: |
தானம் தமச்ச யக்ஞச்ச ஸ்வாத்யாயஸ் தப ஆர்ஜவம் || 1

ஸ்ரீ பகவான் கூறினார் :

1. அஞ்சாமை, உள்ளத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் அதாவது ஞானத்திலும் கர்மத்திலும் உறுதி, தானம், தன்னடக்கம், ஆன்மிக ஆராய்ச்சி, தவம், நேர்மை,*

---

* கர்மத்தில் உறுதி :

வினைத்திட்பம் என்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. —குறள்.

இ-ள். செயலில் உறுதி மன உறுதியே யாகும். மற்ற எதுவும் உறுதியல்ல.

தானம் :

ஒப்புரவி னல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக் கோள் தக்க துடைத்து. —குறள்.

இ-ள். தானத்தினால் ஒருவனுக்குக் கேடுவிளையுமாயின், தன்னை விற்றாவது அந்தக் கேட்டை அவன் வரவேற்கவேண்டும். (தனக்குக் கேடு வருவதாக இருந்தால் கூட தானதருமத்தைக் கைவிடக்கூடாது என்பதே இதன் கருத்து.)

अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २ ॥

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ் த்யாக: சாந்திரபைசுனம் ।
தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் ॥ 2

2. அகிம்சை, சத்தியம், கோபத்தை அடக்குதல், தியாக உணர்ச்சி, சாந்தம், கோள் சொல்லாமை, எல்லா உயிர்களிடத்திலும் இரக்கம், பேராசை யின்மை, மரியாதை, அடக்கம், அற்பச் செயல்களில் ஈடுபடாமல் இருத்தல்,

---

தன்னடக்கம் :

அடக்க மமரருளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்துவிடும். —குறள்.

இ-ள். தன்னடக்கம் ஒருவனை தேவர்களுள் ஒருவனுகச் செய்கின்றது; அடக்கமின்மை ஒருவனை சகிக்கமுடியாத இருளில் தள்ளிவிடுகின்றது.

தவம் :

கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்டவர்க்கு. —குறள்.

இ-ள். தவத்தினால் சக்தி பெற்றவர்களுக்கு மரணத்தையும் வெல்வது சாத்தியமாகும்.

நேர்மை :

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. —குறள்.

இ-ள். தர்மத்தைக் காட்டிலும் மனிதனை உயர்த்துவது வேறு எதுவுமில்லை; தர்மத்தைக் கைவிடுவதைக் காட்டிலும் படுமோசமான தீமை வேறு எதுவுமில்லை.

அஹிம்சை :

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. —குறள்.

இ-ள். உணவை எல்லோருடனும் பகிர்ந்து, எல்லா உயிர்களிடமும் அன்பு காட்டுவதே ஒழுக்கங்கள் எல்லாவற்றையும் விட மேலானது.

சத்தியம் :

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. —குறள்.

இ-ள். எல்லா விளக்குகளும் விளக்குகள் அல்ல. நல்லவர்களுக்கு சத்தியமாகிய தீபமே நல்வழி காட்டும் உண்மையான விளக்கு ஆகும்.

तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत ॥ ३ ॥

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசம் அத்ரோஹோ நாதிமானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய பாரத ‖ 3

3. பாரதா, விறுவிறுப்பு, மன்னிக்கும் குணம், தளரா உறுதி, தூய்மை, துவேஷத்திலிருந்தும் இறுமாப்பிலிருந்தும் விடுதலை ஆகியவற்றை தெய்விக இயல்புடன் பிறந்தவனிடத்தில் காணலாம்.

---

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. —குறள்.

இ-ள். தவம், தான தர்மங்கள் செய்வோரைக் காட்டிலும் உண்மை பேசுவோரே மேலானவர்.

கோபத்தை அடக்குதல் :

உள்ளியதெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளியெனின். —குறள்.

இ-ள். உள்ளத்தில் கோபம் இல்லாதவன், தான் விரும்புவதையெல்லாம் உடனடியாகப் பெறுகிறான்.

புறம் கூறுதல் :

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங் கூறு மாக்கந் தரும். —குறள்.

இ-ள். புறம் கூறி, மோசடி வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும் மரணமானது அறநூல்கள் கூறும் பெருமைகளைக் கொடுக்கும்.

உயிர்களிடத்தில் இரக்கம் :

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. —குறள்.

இ-ள். எல்லா உயிர்களிடத்திலும் அன்பும் இரக்கமும் காட்டுவோருக்கு அவர்கள் பயப்படவேண்டிய பாவம் எதுவும் ஏற்படாது.

பேராசையின்மை :

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். —குறள்.

இ-ள். அநீதியைக் கண்டு வெட்கம் அடைபவர்கள் பிறர் பொருளில் ஆசை கொள்ளமாட்டார்கள்.

दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥ ४ ॥

தம்போ தர்ப்போ(அ)பிமானச்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அக்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பத மாஸுரீம் ‖ 4

4. டம்பம், இறுமாப்பு, தற்புகழ்ச்சி, கோபம், முரட்டுத்தனம், அறியாமை ஆகியவை அசுர இயல்புடன் பிறந்தவனிடத்தில் காணப்படுகின்றன.

दैवी संपद्विमोक्षाय निबन्धायासुरी मता ।
मा शुचः संपदं दैवीमभिजातोऽसि पाण्डव ॥ ५ ॥

தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ।
மா சுச: ஸம்பதம் தைவீம் அபிஜாதோ(அ)ஸி பாண்டவ ‖ 5

5. தெய்வ இயல்பு மோட்சத்தைக் கொடுக்கிறது; அசுர இயல்பு அடிமைத்தனத்தில் ஆழ்த்துகிறது. பார்த்தா, வருந்தாதே, நீ தெய்வ இயல்புடன் பிறந்திருக்கிறாய்.

[1-5. "ஆன்மிக மார்க்கத்தில் செல்லுங்கள். அவ்விதமாயின், நீங்கள் சிற்றின்ப இச்சையை நிறைவேற்ற முற்படமாட்டீர்கள்" என்று செயின்ட் பால் கூறுகிறார்.

இந்த அத்தியாயம் முழுவதையும் பைபிளில் உள்ள கீழ்க்கண்ட வாக்கியங்களுடன் ஒப்பிடலாம்.

---

மன்னிக்கும் குணம் :

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். —குறள்.

இ-ள். குற்றம் குறைகளின்றி நிறைமனிதராக விளங்க வேண்டுமாயின், மன்னிக்கும் குணத்தைப் போற்றி வளர்க்க வேண்டும்.

தளரா உறுதி :

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. —குறள்.

இ-ள்- எத்தனை இடையூறுகள் நேர்ந்தாலும், இறுதியில் இன்பம் பயக்கும் செயலைத் துணிச்சலுடன் நிறைவேற்ற வேண்டும்.

"உடலின் செயல்கள் இப்போது பிரத்தியட்சமாக இருக்கின்றன. அந்தச் செயல்கள் இவைதான்: விபசாரம், தூய்மையின்மை, காமம்...அத்தகைய தீய வழிகளில் ஈடுபடுவோர் ஆண்டவனின் சாம்ராஜ்யத்தை அடைய மாட்டார்கள் என்று உங்களுக்குக் கூறுகிறேன். ஆனால் ஆன்மிக மார்க்கத்தில் செல்லுவோருக்கு அன்பு, இன்பம், அமைதி, பொறுமை, நல்ல குணம், நம்பிக்கை, பணிவு, அடக்கம் எல்லாம் ஏற்படும். நாம் ஆன்மிக வழியில் வாழ்ந்து, ஆன்மிக சம்பந்தமான செயல்களையே புரிய வேண்டும். நாம் வீண் டம்பத்திற்கு ஆசைப்படாமல் இருப்போமாக. ஒருவருக்கொருவர் கோபமூட்டாமலும், ஒருவர் மீது ஒருவர் பொறாமை கொள்ளாமலும் இருப்போமாக." (பைபிள்)

மேற்கண்ட சுலோகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள உயர்ந்த குணங்களை "தெய்விக இயல்புகள்" என்று கூறுவதைவிட "ஆன்மிக வாழ்க்கையின் பலன்கள்" என்று குறிப்பிடுவது ஒருவேளை சிறந்ததாக இருக்கலாம். தீய குணங்களை அசுர இயல்பு என்று கூறுவதைக் காட்டிலும் "உடலின் செயல்கள்" என்று கூறலாம். ஏனெனில், தெய்விக இயல்புகளுக்கும் அசுர இயல்புகளுக்கும் இடையே திட்டவட்டமான எல்லைக் கோடுகள் எதுவும் இல்லை. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒருவர் புரியும் செயல்களே அவரது குணத்தை நிர்ணயிக்கின்றன. உண்மையில், கீதையும் இதை ஒப்புக் கொண்டிருக்கிறது. இந்த அத்தியாயத்தின் இறுதியில், நரகத்தின் மூன்று வாயில்களை மனிதன் தவிர்க்கவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட சுலோகங்களில் காணப்படும் சிறப்புக் குணங்கள் அடங்கிய ஜாபிதாவில், "அச்சமின்மை, பேராசையின்மை, கோபமின்மை போன்ற எதிர் மறையான குணங்கள் தான் மிகவும் பிரபலமாக இருக்கின்றன" என்று கிறிஸ்தவரான ஓர் ஆட்சேபவாதி இகழ்ந்து கூறியிருக்கிறார். அவரது கூற்று முற்றிலும் தவறாகும். அந்த குணங்களை வாழ்க்கையில் அனுசரிக்க விரும்புவோருக்கு அவை எவ்வளவு முக்கியமானவை என்பதை அறிந்து கொள்ளவேண்டுமாயின், அக் குணங்கள் ஒவ்வொன்றிலும் அடங்கியுள்ள கருத்துக்களைப் பற்றி ஞானேசுவரர் இயற்றியுள்ள விளக்கக் கவிதைகளை வாசிக்கவேண்டியது அவசியமாகும்.

அந்த ஜாபிதாவில் முதலில் இருப்பது அஞ்சாமையே. அது எள்ளளவும் எதிர்மறையான குணம் அல்ல. மனத்தில் அஞ்சாமை உண்டாவதற்கான நிபந்தனைகளையும் உபநிடதங்கள் விதித்துள்ளன:

"உலகில் தன்னை-விட வேறானது எதுவும் இல்லை என்பதை மனிதன் உணரும் போது, அவனிடமிருந்து பயம் ஓடி விடுகிறது.

மற்றென்று இருக்கிறது என்ற எண்ணத்திலிருந்தே பயம் உண்டாகிறது.''—பிருகதாரண்யக உபநிடதம்.*

''பிரம்மமாகிய பேரானந்தத்தை யார் உணருகிருனே, அவன் ஒருபோதும் அஞ்சுவதில்லை''—தைத்திரீய உபநிடதம்.*

''கண்களுக்குத் தெரியாத, உருவமற்ற, பயமற்ற அந்தப் பரம்பொருளில் அவனது மனம் உறுதியுடன் நிலைக்கும் பொழுது, அவன் பயமற்றவனுக இருக்கிருன்.—தைத்திரீய உபநிடதம்.†

சீரிய குணங்களான மற்றவையெல்லாம் இந்த குணத்தி லிருந்தே (அஞ்சாமை) உண்டாகின்றன. காந்திஜி அடிக்கடி இவ்விதம் கூறுவது உண்டு: ''நாம் கடவுளிடம் பயப்படும் போது, மனிதனைக் கண்டு—அவன் எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தாலும்-நாம் பயப்பட வேண்டியதில்லை. சத்தியமாகிய விரதத்தை நீங்கள் பின்பற்ற விரும்பினல், அஞ்சாமை அத்தியாவசியமாகும்.''

---

* सोऽबिभेत्तस्मादेकाकी बिभेति सहायमीक्षांचक्रे
यन्मदन्यन्नास्ति कस्मान्नु बिभेमीति तत एवास्य
भयं वीयाय कस्माद् ध्यभेष्यद् द्वितीयाद्वै भयं भवति ।

बृहदारण्यक १–४–२

ஸோ (அ)பிபேத்தஸ்மாதேகாகீ பிபேதி ஸஹாய மீக்ஷாம் சக்ரே
யன்மதன்யன் நாஸ்தி கஸ்மான்னு பிபேமீதி தத ஏவாஸ்ய
பயம் வீயாய கஸ்மாத்ய பேஷ்யத் த்விதீயாத்வை பயம் பவதி|

பிருஹதாரண்யக உபநிடதம் - 1-4-2.

* आनन्दं ब्रह्मणो विद्वान् । न बिभेति कदाचन ॥

तैत्तिरीय २–४

ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான் | ந பிபேதி கதாசன ||

தைத்திரீய உபநிடதம் - 2-4.

† यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयने
ऽभयं प्रतिष्ठां विन्दते । अथसोऽभयं गतो भवति ।

तैत्तिरीय २-७

யதாஹ்யே வைஷ ஏதஸ்மின்னத்ருச்யே (அ)னுத்ம்யே (அ) நிருக்தே (அ)னிலயனே
(அ)பயம் ப்ரதிஷ்டாம் விந்ததே | அத ஸோ(அ)பயம் கதோ பவதி||

—தைத்திரீய உபநிடதம் - 2-7.

இரண்டாவது சுலோகத்தில் அகிம்சையும் சத்தியமும் குறிப்பிடப்படுகின்றன. அவ்விரண்டும், அஞ்சாமை என்ற நாணயத்தின் இரு பக்கங்களே ஆகும். சத்தியத்தைக் கடைப்பிடிப்பதற்கு அஞ்சாமை அவசியமாயின், பிறர் மனத்தைப் புண்படுத்துதல் அல்லது அகிம்சை, அஞ்சாமையின் சிகரமே என்று காந்திஜி கூறியுள்ளார்.]

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन्दैव आसुर एव च ।
दैवो विस्तरशः प्रोक्त आसुरं पार्थ मे शृणु ॥ ६ ॥

த்வௌ பூதஸர்கௌ லோகே(அ)ஸ்மின் தைவ ஆஸுர ஏவச
தைவோ விஸ்தரச: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ‖ 6

6. பார்த்தா, இந்த உலகத்தில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள உயிர்களுள் தெய்விக இயல்பும், அசுர இயல்பும் கொண்ட இரு வகைகள் இருக்கின்றன. தெய்வ இயல்பைப் பற்றி உனக்கு நான் விவரமாகக் கூறினேன். இப்போது அசுர இயல்பைப் பற்றி என்னிடமிருந்து கேட்பாயாக.

प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः ।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥ ७ ॥

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜனா ந விதுராஸுரா: ।
ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ‖ 7

7. அசுர இயல்புள்ள மனிதர்கள், தாங்கள் எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது என்பதை அறியார்கள். அவர்களிடம் தூய்மையோ, நல்ல ஒழுக்கமோ, சத்தியமோ இருப்பதில்லை.

असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसंभूतं किमन्यत्कामहैतुकम् ॥ ८ ॥

அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரனீச்வரம் ।
அபரஸ்பர ஸம்பூதம் கிமன்யத் காமஹைதுகம் ‖ 8

8. "இந்த உலகம் பொய்யானது, ஆதாரமற்றது, கடவுள் இல்லாதது, காமம் ஒன்றினால் மாத்திரமே தூண்டப்பட்டு ஆண், பெண் சேர்க்கையினால் உண்டானது" என்று அவர்கள் கூறுகின்றனர்.

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥ ९ ॥

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மானோ(அ)ல்பபுத்தய: ।
ப்ரபவந்த்யுக்ர கர்மாண: க்ஷயாய ஜகதோ(அ)ஹிதா: ॥ 9

9. இந்த அபிப்பிராயம் கொண்ட சீர்கெட்ட இந்த ஆன்மாக்கள் அற்ப புத்தியுடையவர்கள், கொடுஞ்செயல்களைப் புரிபவர்கள். இவர்கள் உலகத்தை நாசம் செய்வதற்காக உலகத்தின் விரோதிகளாக வந்து சேருகிறார்கள்.

काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।
मोहाद्गृहीत्वासद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥ १० ॥

காமமாச்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான்விதா: ।
மோஹாத் க்ருஹீத்வா(அ)ஸத் க்ராஹான் ப்ரவர்த்தந்தே(அ)
சுசிவ்ருதா: ॥ 10

10. திருப்தி செய்ய முடியாத காம இச்சையில் ஆழ்ந்த இவர்கள் டம்பம், இறுமாப்பு, தற்பெருமை ஆகியவற்றால் ஆட்கொள்ளப்பட்டு, மதிமயக்கத்தினால் தீய நோக்கம் கொண்டு, களங்கமுள்ள செயல்களையே புரிவது என்ற விரதம் பூண்டவர்களாக அலைகிறார்கள்.

---

8. தங்களைப் போலவே இந்த பிரபஞ்சமும் பொய்யானது என்று அசுர இயல்புள்ளவர்கள் கூறுவர். மற்றும் இந்த உலகம் தர்மத்தையும், அதர்மத்தையும் ஆதாரமாகக் கொண்டிருக்கவில்லை; தர்மத்தையும் அதர்மத்தையும் ஆதாரமாகக் கொண்டு உலகைப் படைத்து ஆட்சி புரியும் கடவுள் என்று யாரும் இல்லை; காமத்தினால் தூண்டப்பட்ட ஆண், பெண்கள் சேர்க்கையினாலேயே உலகம் ஏற்பட்டுள்ளது; உலகம் உண்டாவதற்கு அந்தச் சேர்க்கையைத் தவிர வேறு காரணம் எதுவும் இல்லை; கண்களுக்குத் தெரியாத கர்ம வினை என்று எதுவுமே இல்லை; உலகத்திற்கு ஆதாரம் சிற்றின்ப இச்சைதான்;—இவ்விதமெல்லாம் அவர்கள் கூறுவர்.

—சங்கரர்—

चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥ ११ ॥

சிந்தாமபரிமேயாம் ச ப்ரளயாந்தா முபாச்ரிதா: ।
காமோப போக பரமா ஏதாவதிதி நிச்சிதா: ‖ 11

11. மரணத்தின்போது மாத்திரமே தீரக்கூடிய அளவற்ற கவலைகளில் ஆழ்ந்து அவர்கள் போகங்களையும், சிற்றின்ப இச்சையையுமே தங்களுடைய ஒரே லட்சியமாகக் கொண்டும், வாழ்க்கையில் அவைதான் எல்லாம் என்ற உறுதியுடையவர்களாக இருந்து கொண்டும்,

[இந்தக் கவலைகளைத் தான் "மரணத்தில் வந்து முடியும் உலகத்தின் துக்கங்கள்" என்றும், ஆனால் "செய்ததைக் குறித்து வருந்துவோருக்கு மோட்சம் அளிக்கும் தெய்விகமான துக்கங்கள் அல்ல" என்றும் பைபிள் கூறுகிறது.]

आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १२ ॥

ஆசாபாச சதைர் பத்தா: காமக்ரோத பராயணா: ।
ஈஹந்தே காமபோகார்த்தம் அன்யாயேனார்த்த ஸஞ்சயான் ‖ 12

12. ஆசையாகிய எண்ணிக்கையற்ற வலைகளில் சிக்கிக் கொண்டும், காமத்திற்கும் கோபத்திற்கும் அடிமைகளாகியும், தங்களுடைய ஆசைப் பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக அந்நியாயமான வழிகளில் செல்வம் திரட்ட முற்படுவார்கள்.

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥ १३ ॥

இதமத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மனோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்த்தனம் ‖ 13

13. "இன்று இதை நான் அடைந்தேன்; இந்த ஆசையை இப்போது பூர்த்தி செய்து கொள்வேன்; இந்தச் செல்வம் என்னுடையது; இனிமேல் அந்தச் செல்வமும் என்னுடையதாகி விடும்.

असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥ १४ ॥

அஸௌ மயா ஹத: சத்ரு: ஹனிஷ்யே சாபரானபி ।
ஈச்வரோ(அ)ஹமஹம் போகீ சித்தோ(அ)ஹம் பலவான்
ஸுகீ ॥ 14

14. "இந்த விரோதியை நான் முன்பே கொன்றுவிட்டேன் மற்றவர்களையும் கொல்லப்போகிறேன்; நான் எல்லோருக்கும் எஜமானன்; போகமும் இன்பமும் எனக்கே சொந்தம்; எனது நிலை குற்றம் குறையற்றது; பலம் எனக்கு உரியது; ஆனந்தமும் எனக்கே உரியது;

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥ १५ ॥

ஆட்யோ(அ)பிஜனவானஸ்மி
கோ(அ)ன்யோ(அ)ஸ்தி ஸத்ருசோ மயா ।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய
இத்யக்ஞான விமோஹிதா: ॥ 15

15. "நான் செல்வவந்தன், உயர் குலத்தில் பிறந்தவன், எனக்குச் சமமானவர் எவர் உளர்? நான் யக்ஞம் செய்வேன்! நான் தானங்கள் கொடுப்பேன்! நான் ஆனந்தமாக இருப்பேன்!" அறியாமையினாலும் மதிமயக்கத்தினாலும் அவர்கள் இவ்விதமெல்லாம் எண்ணுகின்றனர்;

अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६ ॥

அனேக சித்த விப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காம போகேஷு பதந்தி நரகே(அ)சுசௌ ॥ 16

16. கற்பனையான பலவிதமான ஆசைகளுக்கு இரையாகி, மதிமயக்கமாகிற வலையில் சிக்குண்டு, போகங்களில் ஆழ்ந்து அவர்கள் துர்நாற்றம் நிறைந்த நரகத்தில் வீழ்கின்றனர்.

आत्मसंभाविताः स्तब्धा धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥ १७ ॥

ஆத்ம ஸம்பாவிதா: ஸ்தப்தா தனமான மதான்விதா: |
யஜந்தே நாம யக்ஞைஸ்தே தம்பேனாவிதிபூர்வகம் || 17

*17.* தங்களைத் தாங்களே புத்திசாலிகள் என்று தம்பட்ட மடித்துக் கொண்டு, செல்வம், அந்தஸ்து ஆகியவை காரணமாக இறுமாப்பும் பிடிவாதமும் கொண்டு அவர்கள் பெயருக்காகவும், பகட்டுக்காகவும், விதிகளுக்கு முரணாகவும் யக்ஞங்களைச் செய்வார்கள்.

अहंकारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८ ॥

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் ச ஸம்ச்ருதா: |
மாமாத்ம பரதேஹேஷு ப்ரத்விஷந்தோ (அ)ப்யஸூயகா: || 18

*18.* அகங்காரம், பலம், துடுக்கு, காமம், கோபம் முதலிய தீய குணங்களை மேற்கொண்டு அவர்கள், அவர்களுடைய உடல்களிலும் மற்றவர்களுடைய உடல்களிலும் இருக்கும் என்னை வெறுத்து தூஷிப்பார்கள்.

तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥ १९ ॥

தானஹம் த்விஷத: க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிபாம்யஜஸ்ர மசுபான் ஆஸுரீஷ்வேவ யோனிஷு || 19

*19.* நிந்திக்கும் கொடிய குணம் உள்ள இவர்கள் மனித வர்க்கத்தில் மிக மிகக் கீழ்த்தரமானவர்கள், இழிவானவர்கள். அவர்களை நான் அசுர இயல்புள்ளவர்களின் கருப்பைகளில் அடிக்கடி தள்ளுகிறேன்.

[“ஆண்டவனை மறுப்பவர்கள், சுகமாகவும் சௌகரியமாகவும் காலம் கழிக்கும் பிரபுக்கள் முதலியோரை நான் பார்த்துக் கொள்கிறேன்.”—குரான் 73.11.]

आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥ २० ॥

ஆஸுரீம் யோனிமாபன்னு மூடா ஜன்மனி ஜன்மனி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥ 20

*20.* அசுர இயல்புள்ளவர்களின் கருப்பைகளில் தள்ளப் பட்ட இந்த மூடர்கள் ஒரு காலத்திலும் என்னிடம் வர முடியாமல், ஒவ்வொரு பிறப்பிலும் மேலும் மேலும் கீழ்த்தர நிலையை அடைவார்கள்.

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥ २१ ॥

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசனமாத்மன: ।
காம: க்ரோதஸ்ததாலோபஸ் தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ॥ 21

*21.* மனிதனை நாசமாக்கும் இந்த நரகத்திற்கு, காமம், கோபம், பேராசை ஆகிய மூன்றும் மூன்றுவித வாயில்களாக இருக்கின்றன. எனவே, இந்த மூன்றையும் தவிர்க்க வேண்டும்.

एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।
आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥ २२ ॥

ஏதைர்விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர் நர: ।
ஆசரத்யாத்மன: ச்ரேயஸ் ததோ யாதி பராம் கதிம் ॥ 22

*22.* கௌந்தேயா, இருள் சூழ்ந்த இந்த மூன்று வாயில்களி லிருந்தும் தப்பித்துக் கொள்ளும் மனிதன், தன்னுடைய உயர்ந்த நலனுக்கு வழிதேடிக் கொண்டு, அதிலிருந்து மகோன்னதமான நிலையையும் (பரம பதத்தை) அடைகிருன்.

यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ २३ ॥

ய:சாஸ்த்ர விதி முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: ।
ந ஸ ஸித்தி மவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ 23

23. சாஸ்திர விதிகளைப் புறக்கணித்துவிட்டு யார் சுயநல மான ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முற்படுகிறானோ அவன், சித்தியையோ, ஆனந்தத்தையோ அல்லது பரம பதத் தையோ அடைவதில்லை.

சாஸ்திர விதிகள் என்றால், தர்ம சாஸ்திரங்கள் என்று கூறப் படும் நூல்களில் விதிக்கப்பட்டுள்ள சடங்குகள், முறைகள் ஆகி யவை அல்ல; ஆனால் மகான்களும் முனிவர்களும் விதித்துள்ள தன்னடக்க முறைகளே ஆகும்.

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्मकर्तुमिहार्हसि ॥ २४ ॥

தஸ்மாச் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ ।
ஃஞாத்வா சாஸ்த்ர விதானோக்தம் கர்ம கர்த்து மிஹார்ஹஸி ॥ 24

24. ஆகையால், எது செய்ய வேண்டியது, எது செய்யத் தகாதது என்பதை நிர்ணயிப்பதில் சாஸ்திரத்தையே நீ பிர மாணமாகக் கொள்ள வேண்டும். எனவே, சாஸ்திரத்தின் விதி களை நீ நிச்சயமாக அறிந்து கொண்டு அவற்றிற்கு இணங்க உனது கடமையைச் செய்வாயாக.

இந்த சுலோகத்திலும், சாஸ்திரம் என்ற சொல்லுக்கு முன் போலவே அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். எவரும் தங்க ளுக்குத் தாங்களே ஒரு விதியை ஏற்படுத்திக் கொண்டு தங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளக் கூடாது. தர்மத்தை அறிந்து, தர்ம நெறியுடன் வாழ்ந்தவர்கள் நிர்ணயித்துள்ள ஒழுக்க விதி களை, தங்களுக்கு பிரமாணமாகக் கொள்ளவேண்டும்.

[23-24. சாஸ்திரம் என்ற சொல்லுக்கு, சாதாரணமாக ஒப் புக்கொள்ளப்படும் விதமாக அர்த்தம் செய்யக் கூடாது என்று காந்திஜி தமது குறிப்பில் எச்சரித்திருப்பது நியாயமே. எனி னும், சாஸ்திரம் என்பதற்கு அவர் வேறு விதமாகப் பொருள் கூறியிருப்பது அவ்வளவு அவசியம் அல்ல. இந்த சுலோகத்தில் உள்ள 'சாஸ்திரம்' கீதை விளக்கியுள்ள சாஸ்திரத்தைத் தவிர வேறு எதையும் குறிப்பிடவில்லை. அதாவது பற்றற்ற அல்லது கடவுளுக்கு அர்ப்பணமான அல்லது தன்னலமற்ற செயல் என்ற சித்தாந்தமே, சாஸ்திரம் என்பதற்கு அர்த்தமாகும். 23-ஆம் சுலோகத்தின் முதல் பகுதியே அதைத் தெளிவாக்குகிறது. அதா வது, தன்னலமான ஆசைகளால் தூண்டப்படுவதற்கு இணங்க நடந்து கொள்ளாமல், சாஸ்திர விதியின்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பக்தி மார்க் கத்தில் சாஸ்திரம் என்பது அத்தியாயம் 14, சுலோகம்-20-இல் விளக்கப்பட்டிருக்கிறது. எங்கும் வியாபித்துள்ள, எல்லா இடங்

களிலும் ஊடுருவியுள்ள, பிரபஞ்சத்தையே தாங்கும் புருஷோத்த மனை ஒரே கடவுளை வழிபடுவதே பக்தி மார்க்கத்தைக் காட்டும் சாஸ்திரமாகும்; பல தெய்வங்களையோ, பூதங்களையோ அல்லது ஆவிகளையோ வழிபடுவது அல்ல.

இங்கே சாஸ்திரம் என்பது தர்ம சாஸ்திரங்களைக் குறிப்பிட வில்லை என்பதை விளக்க வாதம் எதுவும் தேவையில்லை. தன் னலமின்றிச் செயல் புரிவது, ஒரே கடவுளை வழிபடுவது என்ற சித்தாந்தத்தை கீதை பூரணமாக விளக்கியிருக்கிறது. அவ்விதம் விளக்கியபின், தங்களுடைய நடவடிக்கைகளை நிர்ணயித்துக் கொள்ள தர்ம சாஸ்திர நூல்களை நாடும்படி வாசகர்களை கீதை கேட்டுக் கொள்வது விந்தையாகவும், நகைக்கத்தக்கதாகவும் இருக்கும்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் காந்திஜி பின்வருமாறு கூறியுள் ளார்: "கீதையின் முக்கிய சித்தாந்தத்திற்கு முரணாக எதுவும், அது எங்கே, எவ்விதமாக அச்சடிக்கப்பட்டிருந்தாலும், சாஸ் திரம் அல்ல..."

"சாஸ்திர ஞானத்திற்கு கீதைதான் திறவுகோலாக இருக் கிறது. எல்லா ஒழுக்கங்களுக்கும் அடிப்படையான கொள்கை களை அது வரையறுத்துக் கூறியிருக்கிறது. அது, சாஸ்திரங் களின் சாரத்தையே பிழிந்து கொடுக்கிறது" என்றும் 'ஹரிஜ னி'ல் (22-12-1933.) காந்திஜி எழுதியுள்ளார்.]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे दैवासुरसंपद्विभागयोगो नाम षोडशोऽध्यायः ॥ १६ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
தைவாஸுர ஸம்பத் விபாக
யோகோ நாம ஷோடசோ
(அ)த்யாய:-16.

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம ஞானத்தின்
ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த
சம்பாஷணையில் 'தைவாசுர சம்பத் விபாக
யோகம்' என்ற பதினாறுவது
அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# சிரத்தையில் மூன்று பிரிவுகள்

## பதினேழாம் அத்தியாயம்

சாஸ்திரத்தை (மகான்களின் ஒழுக்கத்தை) ஆதாரமாகக் கொள்ளவேண்டும் என்று கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறியபின், அவனுக்கு ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. சாஸ் திரத்தின் ஆதாரத்தை ஒப்புக் கொள்ள முடியாதவர்கள், ஆனால் சிரத்தையுடன் செயல் புரிவோரின் நிலைமை என்ன? இந்தக் கேள்விக்கு இந்த அத்தியாயத்தில் விடை அளிக்கப் பட்டிருக்கிறது. கலங்கரை விளக்காக விளங்கும் சாஸ் திரத்தை (மகான்களின் ஒழுக்கம்) கைவிடுவோன் செல்லும் பாதை பேரபாயங்கள் நிறைந்ததாக இருக்கும் என்பதைச் சுட்டிக் காட்டுவதுடன் கிருஷ்ணன் திருப்தி அடைகிறார். அவ் விதம் சுட்டிக் காட்டும் போது மனப்பூர்வமாகவும், சிரத்தை யுடனும் செய்யப்படும் யக்ஞம், தவம், தானம் ஆகியவற்றை யும், எந்த உணர்ச்சியுடன் அவை செய்யப்படுகின்றனவோ, குணங்களை அடிப்படையாகக் கொண்டு அவற்றின் பிரிவு களைப் பற்றியும் கிருஷ்ணன் கூறுகிறார். மறை பொருள் அடங்கிய ஓம்-தத்-ஸத் என்ற மந்திரத்தின் மகிமையைப் பற்றியும் கிருஷ்ணன் திருவாய் மலர்ந்து அருள்கின்றார். எல்லாச் செயல்களையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யும் விதியே அந்த மந்திரமாகும்.

*[17-ஆம் அத்தியாயம்: அத்தியாயம்-16, சுலோகங்கள் 23-24-க்கு நான் கொடுத்துள்ள குறிப்பைப் பார்க்கவும். தன்னலமற்ற தொண்டு (கர்மம்) என்ற சித்தாந்தத்தை ஏற்கனவேயே கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறிவிட்டார். கீதையில் விளக்கப் பட்டுள்ள சாஸ்திரமும் அதுதான். ஒழுக்கத்திற்கு முற்றிலும் அதுதான் ஆதாரமும் ஆகும். அப்படியிருக்க, இங்கே முதலாவது சுலோகத்தில் உள்ள கேள்விக்குக் காரணமே இல்லை என்று தோன்றலாம். எனினும், அக் கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், 16-ஆம் அத்தியாயம், 23-24 சுலோகங்களில், ஒழுக் கத்தைப் பற்றி விவரமாகப் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. இங்கே, பக்தியை பற்றி விவரமாக விளக்கப்பட்டிருக்கிறது. அத்தியாயம்-9, சுலோகங்கள் 23-25-இல், தெய்வங்களையும், பிது*

ருக்களேயும், பூதங்கள், பிசாசுகள் முதலியவற்றையும் பூஜிப்பவர்களேப் பற்றி, கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறியுள்ளார். அவர்கள் சிரத்தையுடன், ஏதோ சில சாஸ்திரங்களிலோ அல்லது மதச் சடங்குகளிலோ உள்ள நம்பிக்கையுடன் அவ்விதம் வழிபடுகிருர்கள் என்பதை அத்தியாயம்-7, சுலோகம்-21-இல் பார்த்தோம்.

எனவே, அர்ஜுனன் இவ்விதம் கிருஷ்ணனேக் கேட்கிருன்: "அவ்விதம் சிரத்தையுடன், ஆனல் ஒரே கடவுளே வழிபட வேண்டும் என்ற சாஸ்திர விதியை அசட்டை செய்துவிட்டு, பல தெய்வங்களே வழிபடுவோரை எந்தப் பிரிவில் சேர்ப்பது?"

இந்த அத்தியாயம் முழுவதும் மேற்கண்ட கேள்விக்குப் பதிலே ஆகும். யக்ஞம், தவம், தானம் ஆகியவை வழிபாட்டின் பல்வேறு முறைகளே, அல்லது பக்தியை அடிப்படையாகக் கொண்டவையே. அவை மனிதனின் சிரத்தையையோ, அவன் அறிந்தவிதம் தர்ம சாஸ்திரங்களில் அவனுக்கு உள்ள நம்பிக்கையையோ அனுசரித்ததாக இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு வகையான தெய்வத்திற்கு மாத்திரம் அவன் யக்ஞம் செய்யவில்லே; குறிப்பிட்ட ஒரு வகையான உணர்ச்சியுடனும் அவ்வாறு செய்கிருன்.

'எனது சமர்ப்பண'த்திலும் இந்த விதமான வாதத்தையே அடிப்படையாகக் கொண்டு 17-ஆம் அத்தியாயத்தைப் பரிசீலனே செய்திருக்கிறேன். இங்கே, காந்திஜியின் வாதத்திலோ அல்லது மொழிபெயர்ப்பிலோ நான் குறுக்கிட்டு எதுவும் கூறவில்லே.]

अर्जुन उवाच

ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयान्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥

அர்ஜுன உவாச

**யே சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயா(அ)ன்விதா: |**
**தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வமாஹோ ரஜஸ்தம: || 1**

*அர்ஜுனன் சொன்னுன்:*

*1. கிருஷ்ண, அப்படியாயின், சாஸ்திர விதியை விட்டுவிட்டு, ஆனல் சிரத்தையுடன் இறைவனேப் பூஜை செய்பவனின் நிலே என்ன? அவனது செயல் சாத்துவிகமா (சத்துவ குணமா), ராஜஸமா (ரஜோ குணமா), அல்லது தாமஸமா (தமோகுணமா)?*

---

1. சாஸ்திர விதிகளே அனுசரித்து நடந்து கொள்ளவேண்டும் என்று சென்ற அத்தியாயத்தின் இறுதியில் கிருஷ்ண பகவான் கூறியதைக் கேட்டதும், அர்ஜுனனுக்கு ஒரு சந்தேகம் எழுகின்றது, சாஸ்திர விதிகளில்

श्रीभगवानुवाच

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥ २ ॥

ஸ்ரீ பகவான் உவாச

த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு ॥ 2

ஸ்ரீபகவான் கூறினர்:

2. மனிதருடைய சிரத்தையிலும் மூன்று வகைகள் உண்டு. அவரவருடைய இயல்பை (ஸ்வபாவத்தை) அனுசரித்ததாகவே அந்த சிரத்தை இருக்கும். சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என அது மூன்று வகைப்படும். அவற்றை நீ கேட்பாயாக.

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३ ॥

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத ।
ச்ரத்தா மயோ(அ)யம் புருஷ: யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥ 3

3. பாரதா, ஒவ்வொரு மனிதனுடைய சிரத்தையும் அவனது பிறவிக் குணத்தை அனுசரித்ததாகவே இருக்கும். மனிதன் சிரத்தையினலேயே உருவானவன். அவனுக்கு எதில் சிரத்தை உளதோ, அதாகவே அவன் ஆகிவிடுகிருன்.

---

நம்பிக்கை உள்ளவர்கள்கூட சிற்சில சமயங்களில் அறியாமையினல் தவறுகள் செய்துவிடுகிருர்கள். உதாரணமாக, எங்கும் வியாபித்துள்ள பரமேசுவரனையே வழிபட வேண்டும் என்று சாஸ்திரங்கள் கட்டளையிடுகின்றன. அப்படியிருந்தும், ஒருவன் வேறு தெய்வங்களை வழிபட முற்படலாம். அத்தகைய மனிதனின் நிலை என்ன? அர்ஜுனனின் கேள்வி இதுதான். எனினும், சாஸ்திரங்களிலோ, சமயத்திலோ நம்பிக்கையற்ற அசுர இயல்புள்ளவர்களைப் பற்றி அர்ஜுனன் அவ்விதம் கேட்கவில்லை. சிரத்தையுடன், ஆனல் அறியாமையினல் சாஸ்திர விதிகளை அனுசரிக்காமல் வழிபடுவோனின் கதி என்ன என்றே கேட்கிருன். —திலகர்.

3. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. —குறள்.

இ-ள். தண்ணீரின் ஆழம் எவ்வளவோ அவ்வளவு நீளம் பூவின் தண்டும் இருக்கும். மனிதரின் மன நிலைக்குத் தகுந்தவாறு அவர்கள் உயர்வை அடைகிருர்கள்.

[அத்தியாயம்-9, சுலோகம்-25-க்கு நான் எழுதியுள்ள குறிப்பைப் பார்க்கவும்.]

यजन्ते सात्त्विका देवान्यक्षरक्षांसि राजसाः ।
प्रेतान्भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ॥ ४ ॥

யஜந்தே ஸாத்விகா தேவான் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதான் பூதகணும்ச்சான்யே யஜந்தே தாமஸா ஜனு: ‖ 4

4. சாத்துவிகர்கள் தேவர்களை வழிபடுகின்றனர்; ராஜஸ குணம் உள்ளவர்கள் யக்ஷ ராக்ஷசர்களையும், தமோ குணம் உள்ளவர்கள் ஆவிகளையும், பூதங்களையும் வழிபடுகிருர்கள்.

अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जनाः ।
दम्भाहंकारसंयुक्ताः कामरागबलान्विताः ॥ ५ ॥

அசாஸ்த்ர விஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜனு: ।
தம்பாஹங்கார ஸம்யுக்தா: காமராக பலான்விதா: ‖ 5

5. டம்பமும் அகந்தையும் உள்ள மனிதர்கள் தீவிரமான காமத்திஞலும், கோபம், ஆசைபோன்ற தீயகுணங்களாலும் ஆக்கிரமிக்கப்பட்டு, சாஸ்திர விதிகளுக்கு முரணுக கொடிய தவம் புரிகிருர்கள்.

कर्षयन्तः शरीरस्थं भूतग्राममचेतसः ।
मां चैवान्तःशरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥

கர்ஷயந்த: சரீரஸ்தம் பூதக்ராம மசேதஸ: ।
மாம் சைவாந்த: சரீரஸ்தம் தான் வித்யாஸுரநிச்சயான் ‖ 6

6. அவர்கள், தங்களுடைய உடல் உருவாவதற்குக் காரணங்களான பல்வேறு இந்திரியங்களையும் பிறவற்றையும் சித்திரவதை செய்வதுடன், அவர்களிடத்தில் வசிக்கும் என்னையும் சித்திரவதைக்கு உள்ளாக்குகிருர்கள். எனவே, அவர்கள் புனிதமற்ற அசுரத்தன்மை வாய்ந்த தீர்மானங்களைச் செய்துகொண்டிருப்பவர்கள் என்பதை அறிந்துகொள்.

आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥ ७ ॥

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யக்ஞஸ் தபஸ் ததா தானம் தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥ 7

7. ஒவ்வொருவருக்கும் விருப்பமான உணவிலும் மூன்று வகைகள் உள்ளன. அவ்விதமே யக்ஞம், தவம், தானம் ஆகியவற்றிலும் மூன்றுவகைகள் உண்டு. அவற்றின் வேற்றுமைகளைக் கேள்.

आयुःसत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्त्विकप्रियाः ॥ ८ ॥

ஆயு: ஸத்வ பலாரோக்ய ஸுகப்ரீதி விவர்த்தன: ।
ரஸ்யா: ஸ்னிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விகப்ரியா: ॥ 8

8. ஆயுளை வளர்ப்பதும், ஜீவ சக்தி, பலம், ஆரோக்கியம், சந்தோஷம், பசி ஆகியவற்றைக் கொடுப்பதும், ருசியாக இருப்பதும், புஷ்டியை அளிப்பதும், கெட்டியாக இருப்பதும், மனத்தைக் கவருவதுமான உணவுகள் சாத்விகர்களுக்கு விருப்பமானவை.

कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥

கட்வம்ல லவணத்யுஷ்ண தீக்ஷ்ண ருக்ஷ விதாஹின: ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா துக்கசோகா மயப்ரதா:॥ 9

9. துன்பம், துக்கம், நோய் ஆகியவற்றிற்குக் காரணமான கசப்பு, புளிப்பு, உப்பு, அமிதமான சூடு, காரம், வறட்சி ஆகிய உணவுவகைகள் ராஜஸ குணம் உடையவர்களுக்குப் பிரியமானவை.

यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १० ॥

யாதயாமம் கத ரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் ।
உச்சிஷ்டமபி சாமேத்தியம் போஜனம் தாமஸப்ரியம் ॥ 10

*10.* ஆறிப்போனதும், சுவையற்றதும், ஊசியதும், பழையதும், எச்சில் செய்யப்பட்டதும், பூஜைக்குத் தகுதியற்றதுமான உணவை தாமஸ குணம் உள்ளவர்கள் விரும்புகின்றனர்.

अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥ ११ ॥

அபலா காங்க்ஷிபிர் யக்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக: ‖ 11

*11.* கடமை உணர்ச்சியுடனும், பலனில் ஆசையின்றியும், விதிப்படியும் மனப்பூர்வமாக செய்யப்படும் யக்ஞமே சாத்துவிக யக்ஞம் ஆகும்.

अभिसंधाय तु फलं दम्भार्थमपि चैव यत् ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२ ॥

அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவ யத்।
இஜ்யதே பரத ச்ரேஷ்ட தம் யக்ஞம் வித்தி ராஜஸம் ‖ 12

*12.* பரதகுல சிரேஷ்டனே, வீண் பெருமைக்காகவும், பலனில் ஆசை வைத்தும் செய்யப்படும் யக்ஞம் ராஜஸமாகும் என்பதை அறிந்துகொள்.

विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥

விதிஹீன மஸ்ருஷ்டான்னம் மந்த்ர ஹீன மதக்ஷிணம் ।
ச்ரத்தா விரஹிதம் யக்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ‖ 13

*13.* விதிக்கு முரணகவும், உணவை உண்டு பண்ணுவதற்கு வழியில்லாமலும், வேத மந்திரங்கள் இல்லாமலும், விருப்பமுள்ள பொருளைத் துறக்காமலும், சிரத்தையில்லாமலும் செய்யப்படும் யக்ஞம் தாமஸமானது.

['அஸ்ருஷ்டான்னம்' (असृष्टान्नं) என்பது சாதாரணமாக "உணவு அளிக்கப்படாத" அதாவது அன்னதானம் செய்யப்படாத யக்ஞம் என்றே மொழிபெயர்க்கப்படுகிறது. ஆனல், காந்திஜி தீர்க்காலோசனையின் மீதே "உணவை உண்டுபண்ணுத" என்று மொழிபெயர்த்திருக்கிருர். கீதையையும் (அத்தியாயம் –

3, சுலோகம்-14), மனுவையும் ஆதாரமாகக் கொண்டே காந்திஜி அவ்வாறு மொழி பெயர்த்துள்ளார். யக்ஞத்தினல் மழை உண்டாகிறது; மழையினல் உணவு உற்பத்தியாகிறது. எனவே, எல்லா யக்ஞங்களும் எதையாவது உண்டாக்குவதாக இருக்கவேண்டும்.

'அதக்ஷிணம்' (अदक्षिणं) என்ற சொல்லுக்கு, 'புரோகிதர்களுக்கு குறிப்பிட்ட தட்சிணை கொடுக்காமல் இருப்பது' என்றே சாதாரணமாக மொழிபெயர்க்கப்படுகிறது. ஆனல், அந்தச் சொல்லுக்கு காந்திஜியின் விளக்கம் மாறுபாடாகவே இருக்கிறது. அதாவது "எதையும் துறக்காமலும்" என்று காந்திஜி மொழி பெயர்த்திருக்கிருர். வைதிகமான மேற்கண்ட விளக்கம் அப்பட்டமான சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஆனல் தட்சிணை என்ற சொல், உபநிடதங்களில் ஆன்மிக சம்பந்தமான உயர்ந்த அர்த்தத்திலேயே விளக்கப்பட்டிருக்கிறது. "தவம், தானம், நேர்மை, அகிம்சை, சத்தியம் ஆகியவையே யக்ஞத்தில் கொடுக்கப்பட வேண்டிய தானங்கள்" என்று சாந்தோக்ய உபநிடதம் கூறுகிறது.* காந்திஜியின் மொழிபெயர்ப்பில் உள்ள 'துறப்பது' என்ற சொல்லுக்கு, ஒருவருக்கு மிகவும் விருப்பமான ஒன்றைத் துறப்பது என்பதே அர்த்தமாகும். ஆனல், சாந்தோக்ய உபநிடதம் இன்னும் தீவிரமாகச் சென்றிருக்கிறது. அதாவது யக்ஞம் செய்பவர், மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூலாதாரமான விரதங்களை (யமங்கள்) மேற்கொண்டு வாழ்க்கை நடத்துவதாக பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும் என்று அந்த உபநிடதம் கூறுகிறது. அதாவது, ஒருவர் தம்மையே அர்ப்பணம் செய்து கொள்வதே ஒரு தூய்மையான யக்ஞமாகும்.

நான் கூறியுள்ள வாதத்தின்படி வைதிகர்கள் கூறும் விளக்கமே போதுமானது. அதாவது, பிராம்மணர்களுக்கு போஜனம் அளிக்க வேண்டும் என்ற வைதிகமான சாஸ்திர விதியைக் கூட நிறைவேற்ருத யக்ஞம் படுமோசமானதாகும்.]

**देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।**
**ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४ ॥**

**தேவத்விஜகுரு ப்ராக்ஞ பூஜனம் சௌசமார்ஜவம் ।**
**ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே ॥ 14**

---

* अथ यत्तपो दानमार्जव महिंसा सत्यवचनमिति
ता अस्य दक्षिणा:। छान्दोग्य ३-१७-४

அத யத்தபோ தானமார்ஜவ மஹிம்ஸா ஸத்யவசனமிதி
தா அஸ்ய தக்ஷிணு:

—சாந்தோக்ய உபநிடதம் - 3-17-4

*14.* தேவர்கள், பிராம்மணர்கள், குருமார், ஞானிகள் ஆகியோரை வழிபடுதலும், தூய்மை, நேர்மை, பிரம்மச்சரியம், அகிம்சை ஆகியவையும் உடல் சம்பந்தமான தவமாகும்.

[காந்திஜி நாம் எல்லோரும் அகிம்சையின் தத்துவத்தை அறிந்து கொள்ளும்படி செய்திருக்கிறார். அகிம்சையையே செயின்ட் அகஸ்டின் ''பிறர் மனத்தைப் புண்படுத்தாமல் இருத்தல்'' என்று குறிப்பிட்டிருக்கிறார். அகிம்சையை, காந்திஜி பின்வருமாறு விளக்கியுள்ளார்: ''மனத்தினாலோ, வார்த்தையினாலோ, செயலினாலோ பூமியில் உள்ள எதற்கும் தீங்கு செய்வதையும், பிறர் மனம் புண்படும்படி செய்வதையும் தவிர்ப்பதே அகிம்சை.'']

**अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।**
**स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥ १५ ॥**

**அனுத்வேக கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।**
**ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே ‖ 15**

*15.* யாரையும் புண்படுத்தாத, உண்மையான, அன்பான, நன்மையளிக்கக்கூடிய வார்த்தைகளைக் கூறுவதும், ஆன்மிக நூல்களை வாசிப்பதுமே வாயினால் செய்யும் தவம் ஆகும்.

---

14. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. —குறள்.

இ-ள். வாழ்க்கையின் துன்பங்களைச் சகித்துக் கொள்வதும், உயிர்களுக்கு யாதொரு தீங்கும் செய்யாமல் இருப்பதுமே சிறந்த தவம் ஆகும்.

14. இங்கே தவம் என்றால், காட்டிற்குச் சென்று தவம் புரிவது என்று அர்த்தம் செய்துகொள்ளக்கூடாது. வர்ணாசிரம தர்மத்திற்கு இணங்க அவரவர் கடமையைச் செய்வதே தவமாகும். பிராம்மணர்கள் யக்ஞங்கள் செய்வதும், வேதம் ஓதுவதும், க்ஷத்திரியர்கள் தர்ம யுத்தம் செய்வதும், வைசியர்கள் வர்த்தகம் செய்வதுமே அவரவருக்கு விதிக்கப்பட்டுள்ள தவம் ஆகும். —திலகர்.

15. தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ் செய்வா ராசையுட் பட்டு. —குறள்.

இ-ள். தமக்கு இடப்பட்ட கடமைகளைச் செய்வோரே தவம் செய்பவர் ஆவர். மற்றவர்கள் ஆசைக்கு அடிமைகளாகி, தங்களுடைய அழிவையே தேடிக்கொள்வர்.

मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६ ॥

மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌனமாத்ம விநிக்ரஹ: ।
பாவஸம்சுத்திரித் யேதத்தபோ மானஸமுச்யதே ॥ 16

*16.* மன அமைதி, கருணை உள்ளம், மௌனம், தன்னடக்கம், மனத் தூய்மை ஆகியவை மனத்தின் தவமாக இருக்கிறது.

[மௌனத்தை யொட்டி அத்தியாயம்-12 சுலோகம்-19-இல் உள்ள குறிப்பைப் பார்க்கவும். மௌனத்தைப் பற்றி காந்திஜி கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கது: "இடைவிடாது சத்தியத்தை நாடுவோரின் வாழ்க்கையில் மௌனம் அத்தியாவசியமாகும். கோபத்தை அடக்கிக் கொள்வதற்கும் மௌனம் உதவியாக இருக்கிறது. கோபத்தை அடக்கிக்கொள்வதற்கு மௌனத்தைப் போல் வேறு எதுவும் உதவி அளிப்பதில்லை எனலாம். ஒருவர் மௌனமாக இருந்தால், அவர் தமது கோபத்தை எவ்விதம் வெளியிட முடியும்? கண்களின் மூலம் கோபத்தை வெளியிட முடியாது. ஒருவர் அகிம்சை விரதம் பூண்டிருந்தால், அவர் கோபத்தை வெளியிட உடல் சம்பந்தமான பலாத்காரத்தில் ஈடுபடுவதும் நிச்சயமாக முடியாது. எழுத்து மூலமும் கோபத்தை வெளியிட முடியாது. ஏனெனில், எழுதிக் கொண்டிருக்கும் போதே கோபம் தணிந்து மறைந்து விடும்."

மௌனம், ஒரு வகையான தன்னடக்கமே. உண்மையான தன்னடக்கம், நெஞ்சறிந்து அனுசரிக்கப்படும் மௌனத்தின் பலனே ஆகும். "ஆன்மாவின் ஒரே உண்மையான பலன் உள்ளத் தூய்மைதான். உள்ளத் தூய்மையின்றி, உடல் சம்பந்தமான நடவடிக்கைகள் எதுவும் வீணாகவே முடியும்" என்று மேநாட்டு ஞானி ஒருவர் கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கது ]

श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।
अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥ १७ ॥

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவிதம் நரை: ।
அபலாகாங்க்ஷிபிர் யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே ॥ 17

*17.* பலனில் ஆசைவைக்காமலும், கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டும், பூரணமான சிரத்தையுடனும் செய்யப்படும் இந்த மூன்று விதமான தவமும் சாத்துவிகமானது என்று கூறப்படுகிறது.

सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८ ॥

ஸத்காரமான பூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத் ।
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்ருவம் ॥ 18

*18.* புகழ், கௌரவம், பிறர் செய்யும் உபசாரம், டம்பம் இவற்றிற்கு ஆசைப்பட்டுச் செய்யும் தவம் ராஜஸமாகும். அது நிலையற்றது, உறுதியில்லாதது.

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥ १९ ॥

மூடக்ராஹேணாத்மனோ யத் பீடயா க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத் தாமஸமுதாஹ்ருதம் ॥ 19

*19.* ஏதாவது மூடப்பிடிவாதம் காரணமாக, தன்னைச் சித்திரவதை செய்துகொண்டோ அல்லது பிறரை நாசம் செய்ய வேண்டும் என்றோ அனுசரிக்கப்படும் தவம் தாமஸமானது என்று கூறப்படுகிறது.

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥ २० ॥

தாதவ்யமிதியத் தானம் தீயதே(அ)னுபகாரிணே ।
தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் ॥ 20

*20.* கடமை என்ற எண்ணத்துடனும், பதிலுக்கு யாதொரு உதவியையும் எதிர்பார்க்காமலும், உற்ற இடத்தில், உற்ற காலத்தில், தகுதி வாய்ந்த நபருக்குக் கொடுக்கப்படும் தானம் சாத்துவிகமானது.

---

20. வறியார்க் கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. —குறள்.

இ-ள். ஏழைகளுக்குக் கொடுப்பதே தானமாகும். மற்றெல்லாம் பேரவியாபாரம் போன்றது.

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥ २१ ॥

யத் து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புன: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத் தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 21

*21.* பதிலுக்குப் பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடனே, புண்ணியம் சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனே அல்லது மனமின்றியோ செய்யப்படும் தானம் ராஜஸமானது.

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

அதேச காலே யத்தானம் அபாத்ரேப்யச்ச தீயதே ।
அஸத்க்ருத மவக்ஞாதம் தத் தாமஸ முதாஹ்ருதம் ॥ 22

*22.* தகாத இடத்திலும், தகாத காலத்திலும், மரியாதையின்றியும், வெறுப்புடனும், தகுதியற்ற நபருக்கும் கொடுக்கப்படும் தானமே தாமஸமானது.

ॐतत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥ २३ ॥

ஓம் தத் ஸதிதி நிர்த்தேசோ ப்ரஹ்மணஸ் த்ரிவித: ஸ்ம்ருத: ।
பிராஹ்மணாஸ்தேன வேதாச்ச யக்ஞாச்ச விஹிதா: புரா ॥ 23

*23.* ஓம், தத், ஸத், என்ற மூன்று விதமான பெயர்களால் பிரம்மம் குறிப்பிடப்படுகிறது. பண்டைக் காலத்தில் அந்தப் பெயர்களின் மூலமே பிராம்மணர்கள் சிருஷ்டிக்கப்பட்டனர்; வேதங்களும், யக்ஞங்களும் சிருஷ்டிக்கப்பட்டன.

---

23. உலகம் ஆரம்பமான காலத்தில், முதலாவது பிராம்மணரான பிரம்மா சிருஷ்டிக்கப்பட்டதுடன், தேவர்களும், யக்ஞங்களும் சிருஷ்டிக்கப்பட்டன என்று மூன்ருவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பர பிரம்மத்திலிருந்தே பிரம்மா முதல் யாவரும் சிருஷ்டிக்கப்பட்டனர்; எல்லாப் பொருட்களும் சிருஷ்டிக்கப்பட்டன. எல்லா சிருஷ்டிகளுக்கும் காரணமான பர பிரம்மம் ஓம், தத், ஸத் என்ற மூன்று வார்த்தைகளில் அடங்கியிருக்கிறது. எனவே, இந்த பிரபஞ்சம் முழுவதற்கும் ஆணிவேர் 'ஓம்-தத்-ஸத்' என்பதே இந்த சுலோகத்தின் அர்த்தமாகும். —திலகர்.

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥

தஸ்மாதோமித் யுதாஹ்ருத்ய யக்ஞதான தப:க்ரியா: ।
ப்ரவர்த்தந்தே விதானேக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினும் ॥ 24

*24.* ஆகையால், யக்ஞம், தானம், தவம் முதலிய எல்லாச் சடங்குகளையும் பிரம்மவாதிகள் எப்போதும் ஓம் என்று உச்சரித்துக் கொண்டே விதிப்படி ஆரம்பிக்கிருர்கள்.

तदित्यनभिसंधाय फलं यज्ञतपःक्रियाः ।
दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥ २५ ॥

ததித்யனபிஸந்தாய பலம் யக்ஞதப: க்ரியா ।
தானக்ரியாச்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ॥ 25

*25.* மோட்சத்தை விரும்புவோர் தத் என்று கூறிக் கொண்டும் பலனில் ஆசையை வைக்காமலும், யக்ஞம், தவம், தானம் முதலிய பல்வேறு சடங்குகளையும் செய்கிருர்கள்.

सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६ ॥

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே ॥ 26

*26.* 'உண்மையானது' என்பதையும், 'சிறந்தது' என்பதையும் குறிக்க 'ஸத்' என்ற சொல் உபயோகிக்கப்படுகிறது. பார்த்தா, சிறந்த செயல்களைக் (கர்மங்கள்) குறிக்கவும் 'ஸத்' என்ற சொல் உபயோகிக்கப்படுகிறது.

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥

யக்ஞே தபஸி தானே ச ஸ்திதி: ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே ॥ 27

27. யக்ஞம், தவம், தானம் ஆகியவற்றில் உள்ள மன உறுதியே 'ஸத்' என்று கூறப்படுகிறது. அவற்றிற்காகச் செய்யப்படும் எல்லா அலுவல்களையும் 'ஸத்' என்றே கூறவேண்டும்.

பூரணமாக இறைவனுக்கே அர்ப்பணம் என்ற உணர்ச்சியுடன் ஒவ்வொரு கர்மத்தையும் செய்யவேண்டும். இதுதான், சென்ற நான்கு சுலோகங்களின் சாரம். ஓம் என்பது மாத்திரமே சத்தியமானது. எனவே அதற்கு அர்ப்பணம் செய்யப்படும் கர்மமே சிறந்தது.

[24-27. 'ஓம்' என்ற சொல்லுக்கு அத்தியாயம்-8, சுலோகங்கள்-11-13-இல் உள்ள குறிப்பைப் பார்க்கவும். 24-ஆம் சுலோகத்தில் உள்ள பிரம்ம வாதிகளும், 25-ஆம் சுலோகத்தில் உள்ள "மோட்சத்தை நாடுவோரும்" ஒரே பிரிவினர்தான். அவர்கள் தான் பிரம்மத்தைக் குறிக்கும் ஓம்-தத்-ஸத் என்ற மூன்று பெயர்களையும் கூறி, தங்களுடைய யக்ஞங்கள், தானங்கள், தவங்கள் எல்லாவற்றையும் பிரபிரம்மத்திற்கு அர்ப்பணம் செய்கிறார்கள். 25-27-ஆம் சுலோகங்கள், அந்த மூன்று பெயர்களில் ஒவ்வொரு பெயரின் சிறப்பையும் குறிப்பிடுகின்றது. எனினும், அம் மூன்றும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யும் ஒரே மந்திரமேயாகும்.

**ஓம்**, எல்லாக்காலங்களிலும் எல்லா இடங்களிலும் இருக்கும் பரம்பொருளைக் குறிக்கிறது.

**தத்**, காலம் இடம் எல்லாவற்றிற்கும் அப்பால் பற்றற்ற நிலையில் உள்ள பரம்பொருளைக் குறிக்கிறது.

**ஸத்**, சத்தியம், உயர்வு, அழகு ஆகியவற்றைக் குறிக்கிறது. அந்த மூன்று பெயர்களின் மகத்துவத்திற்காக எல்லாக் கர்மங்களையும் செய்யும் பக்தன் மனஉறுதியுடனும், பற்றற்றும், சத்தியமாகவும், அழகான முறையிலும், தர்மமாகவும் நடந்து கொள்வதாகப் பிரதிக்ஞை செய்து கொள்கிறான்.]

---

27. யக்ஞங்கள், தவங்கள், தானங்கள் ஆகியவை முக்கியமான புண்ணிய கர்மங்கள் ஆகும். ஒரு மனிதன் பலனில் நம்பிக்கை வைத்து அந்தக் கருமங்களைச் செய்தால், அதில் தவறு இல்லை. ஏனெனில், அத்தகைய நம்பிக்கை தர்மத்திற்கும் ஒழுக்கத்திற்கும் முரணானது அல்ல. பலனில் நம்பிக்கை வைத்து செய்யப்படும் அத்தகைய கர்மங்கள் 'ஸத்' என்ற பிரிவின் கீழ் வருகின்றன. பற்றற்ற, பலனில் ஆசை இல்லாத எல்லாச் செயல்களும் 'தத்' என்ற பிரிவின் கீழ் வருகின்றன. 'தத்' என்றால் 'அது' என்று பொருள். அது என்றால் இந்த பிரபஞ்சத்திற்கு அப்பால் உள்ளது என்பதே யாகும். ஒவ்வொரு கர்மத்தின் ஆரம்பத்திலும் ஓம்-தத்-ஸத் என்று கூறுவது, பிரம்மத்தை அடைவதற்கான வழியே.

—திலகர்.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत्।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥ २८ ॥

அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத் ப்ரேத்ய நோ இஹ ॥ 28

28. பார்த்தா, யக்ஞம், தானம், தவம் அல்லது வேறு கர்மம் எதைச் செய்தாலும், அது சிரத்தையின்றி செய்யப்படுமாயின் அது 'அஸத்' என்று கூறப்படும். அதனால் இந்த உலகிலும் நன்மை ஏற்படாது, அந்த உலகிலும் நன்மை ஏற்படாது.

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे श्रद्धात्रयविभागयोगो नाम सप्तदशोऽध्यायः ॥ १७ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன
ஸம்வாதே ச்ரத்தாத்ரய விபாக யோகோ
நாம ஸப்ததசோ(அ)த்யாய :-17

ஸ்ரீமத் பகவத்கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம
ஞானத்தின் ஓம் அம்சமான யோகசாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் 'சிரத்தாத்ரய
விபாகயோகம்' என்ற பதினேழாவது
அத்தியாயம் இவ்வாறாக
முடிவுறுகின்றது.

# சந்நியாச யோகம்

## பதினெட்டாம் அத்தியாயம்

இறுதியான இந்த அத்தியாயம், கீதை முழுவதையுமே சாரமாக எடுத்துக் கூறுகின்றது. அதன் சாரம் பின்வரும் வாக்கியத்தில் அடங்கியிருக்கிறது என்று கூறலாம்: "எல்லாக் கடமைகளையும் (தர்மங்களையும்) விட்டுவிட்டு, என் ஒருவனையே தஞ்சமாகக் கொண்டு, என்னை அடைவாயாக" (சுலோகம் 66). அதுதான் உண்மையான துறவு ஆகும். ஆனால், எல்லாக் கடமைகளையும் துறப்பது எனில், எல்லாச் செயல்களையும் துறந்துவிடுவது என்று அர்த்தமல்ல; எல்லாச் செயல்களின் பலனிலும் உள்ள ஆசையைத் துறப்பது என்பதே அதன் பொருள். மகோன்னதமான தொண்டைக் கூட, பலனில் ஆசையின்றி பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அதுதான் தியாகம், அதுதான் சந்நியாசம்.

अर्जुन उवाच

संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।
त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १ ॥

அர்ஜுன உவாச

ஸந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசி நிஷூதன ॥ 1

*அர்ஜுனன் கூறினான்.*

*1. மஹாபாகு! ஹ்ருஷீகேசா! கேசிநிஷூதனா,* சந்நியாசம், தியாகம் ஆகிய இரண்டின் ரகசியத்தையும் தனித்தனியாக அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன்.*

---

* கேசி என்ற அசுரன் பயங்கரமான குதிரை உருவத்துடன் கிருஷ்ணனை விழுங்குவதற்காக வாயைத் திறந்து கொண்டு வந்தான். கிருஷ்ணன் அதன் வாயில் தனது கையை விட்டு அவனைக் கிழித்துக் கொன்றார். அதனு

श्रीभगवानुवाच

काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥

பகவான் உவாச

காம்யானும் கர்மணும் ந்யாஸம் ஸங்யாஸம் கவயோ விது: ।
ஸர்வ கர்ம பலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணு: ॥ 2

ஸ்ரீ பகவான் கூறினர்:

2. சுயநல ஆசையிலிருந்து எழும் செயல்களைத் துறப்பதே சந்நியாசம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். எல்லாச் செயல்களின் பலனையும் துறப்பதே தியாகம் என்று விவேகிகள் கூறுகின்றனர்.

[அக் காலத்தில் பிரபலமாக நிலவிய சித்தாந்தத்தைப் பற்றியே இங்கே குறிப்பிடப்படுகிறது. இதை, மனுஸ்மிருதி பின் வருமாறு விளக்கியிருப்பதைக் காண்கிறோம்: "இங்கே ஆசையின்றி எந்தக் கர்மமும் செய்யப்படுவதில்லை. ஒருவர் செய்யும் எந்தச் செயலாயினும், அதற்கு மூல காரணம் ஆசையே."*

லேயே அவருக்கு கேசி நிஷூதனன் என்ற பெயர் ஏற்பட்டது. ஹ்ருஷீகேசன் என்றால் புலன்களுக்கெல்லாம் இறைவன் என்று பொருள்.

மகாபாகு என்றும், ஹ்ருஷீகேசா என்றும், கேசி நிஷூதன என்றும் ஒரே சமயத்தில் மூன்று பெயர்களையும் அர்ஜுனன் உபயோகித்திருப்பது அவனது பக்தியையும், பரவச நிலையையும் காட்டுகிறது.

1. சந்நியாசம், தியாகம் என்ற வார்த்தைகளின் அர்த்தத்தை அறிந்து கொள்ளவேண்டும் என்பதற்காக, அர்ஜுனன் அக்கேள்வி கேட்கவில்லை. துறப்பது என்பதுதான் அவ்விரண்டு சொற்களுக்கும் அடிப்படையான பொருள். இது அர்ஜுனனுக்குத் தெரியாதது அல்ல. செயல்களைத் (கர்மங்களை) துறந்துவிடவேண்டும் என்று பகவான் ஓரிடத்திலாவது கூறவில்லை; செயல்களின் பலனில் உள்ள ஆசையைத் துறக்கவேண்டும் என்றே கூறியுள்ளார். எல்லாச் செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிடுவதே சந்நியாசம் என்றும் கூறியிருக்கிறார். ஆனால், துறவு மார்க்கத்தைப் பற்றி உபநிடதங்கள் விவரிக்கையில், செயல்களைத் துறந்துவிட வேண்டும் என்றே குறிப்பிட்டிருக்கின்றன. எனினும், பகவான் அந்த இரண்டு சொற்களையும் வேறு அர்த்தத்தில் குறிப்பிட்டிருப்பதால், அவ்விஷயத்தைத் தெளிவாக அறிந்து கொள்வதற்காக அர்ஜுனன் பகவானை அவ்விதம் கேள்வி கேட்கிறான்.
—திலகர்.

* अकामस्य क्रिया काचित् दृश्यते नेह कर्हिचित् ।
यद् यद् हि कुरुते किंचित् तत् तत् कामस्य चेष्टितं ॥
मनुस्मृति २-४

*அகாமஸ்ய க்ரியா காசித் த்ருச்யதே நேஹ கர்ஹிசித் ।*
*யத் யத் ஹி குருதே கிஞ்சித் தத் தத் காமஸ்ய சேஷ்டிதம் ॥*
—மனுஸ்மிருதி – 2-4.

அதனால்தான், சந்நியாசம் என்ற கொள்கையை ஆதரிக்கும் தீவிரவாதிகள் எல்லாச் செயல்களையும் துறந்து விடவேண்டும் என்று கூறுகின்றனர். ஆனால், கீதையின் உபதேசம் வேருகும். செயலைக் களங்கப்படுத்துவது ஆசை அல்ல என்றும், சுய நல ஆசையே என்றும் கீதை கூறுகிறது. அதாவது பலனில் உள்ள ஆசையை முற்றிலும் துறந்துவிட வேண்டும் என்றும், அவ்வித ஆசையின்றி செய்யப்படும் கர்மங்கள் மனிதனைக் கட்டுப்படுத்துவதில்லை என்றுமே கீதை உபதேசிக்கின்றது. பலனில் உள்ள ஆசையைத் துறப்பதே சந்நியாசமும், தியாகமும் ஆகும். ஏனெனில், அந்த இரண்டு சொற்களுக்கும் 'துறப்பது' என்பதே பொருள். அதை 'தியாகம்' என்றாலும் சரி, அல்லது 'சந்நியாசம்' என்றாலும் சரி, அது சாத்விகமானதாக இருக்க வேண்டும். இதையே கீதாச்சாரியார் இப்போது நமக்கு சொல்லப் போகிருர்.]

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥ ३ ॥

த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்மப்ராஹுர் மனீஷிண: |
யக்ஞதான தப: கர்ம ந த்யாஜ்ய மிதி சாபரே || 3

3. எல்லாக் கர்மங்களும் தீமையானவை என்றும், அவற்றைத் துறந்துவிட வேண்டும் என்றும் சிந்திக்கும் சக்தியுள்ள சிலர் கூறுகின்றனர். யக்ஞம், தானம், தவம் ஆகிய கர்மங்களை விட்டுவிடக் கூடாது என்று மற்றவர்கள் சொல்லுகின்றனர்.

निश्चयं श्रृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥ ४ ॥

நிச்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம |
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: || 4

4. பரத சிரேஷ்டனே, மனிதருள் மகத்தான வல்லமை வாய்ந்தவனே, தியாகத்தைப் பற்றி எனது முடிவான அபிப்பிராயத்தைக் கேட்பாயாக. தியாகமும் மூன்று வகைகளாக வர்ணிக்கப்படுகிறது.

[அந்த மூன்று வகைத் தியாகங்களும், 7, 8, 9 சுலோகங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றது.]

44

यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥ ५ ॥

யக்ஞ தான தப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
யக்ஞோ தானம் தபச்சைவ பாவனானி மனீஷிணும் ॥ 5

5. யக்ஞம், தானம், தவம் ஆகிய கர்மங்களைத் துறக்கக் கூடாது. அவற்றைச் செய்யவேண்டியது அவசியம். யக்ஞமும், தானமும், தவமும் விவேகிகளைத் தூய்மைப்படுத்தும் தன்மை வாய்ந்தவை.

[பி. சாஸ்திரி, திலகரைக் காட்டிலும் கூட தீவிரமாகச் சென்றிருக்கிருர். அதாவது, கீதையில் உள்ள ஒவ்வொரு சுலோகத்திலும் அவர் கர்ம யோகத்தைக் காண்கிருர். அவர், இந்த சுலோகத்தின் பிற்பகுதியை அற்புதமான முறையில் மொழிபெயர்த்திருக்கிருர்: "விவேகிகள் செய்யும் யக்ஞம், தானம், தவம் ஆகியவை உலகத்தைத் தூய்மைப்படுத்துகின்றன. விவேகிகள், அதாவது தங்களைத் தாங்கள் உணர்ந்துகொண்ட ஞானிகள் ஏற்கனவேயே தூய்மையானவர்கள். எனவே, அவர்கள் தங்களை மேற்கொண்டு தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. உலகத்தைத் தூய்மைப்படுத்துவதே அவர்களுடைய கடமையாக இருக்கிறது. ஆகையால், ஞானத்தை அடைந்த பிறகு கூட அவர்கள், உலகத்திற்கு வழிகாட்டுவதற்காக யக்ஞம், தானம், தவத்தைச் செய்து தீர வேண்டியவர்களாக இருக்கிருர்கள் (அத்தியாயம்-3, சுலோகம்-20)"

அத்தகைய அர்த்தம் செய்து கொள்வதற்கும் நிச்சயமாக இடம் இருக்கிறது. எனினும், 'மனீஷிணும்' (मनीषिणां) என்ற சொல்லுக்குக் கொடுக்கப்படும் அர்த்தத்தையே அது பொறுத்திருக்கிறது. இந்த சுலோகத்தில் அந்தச் சொல் 'விவேகிகள்' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆனல், "பலனில் ஆசையில்லாதவர்கள்" என்று சங்கராச்சாரியார் மொழிபெயர்த்திருக்கிருர். 'மனீஷிண:' என்பதற்கு 'ஞானிகள்' என்றே பொருள் கூறினல் கூட யக்ஞம், தானம் ஆகியவற்ருல் அவர்களும், அதேபோல் மற்ற ஒவ்வொருவரும் தூய்மையடைய வேண்டிய அவசியம் இல்லை

* எல்லாச் செயல்களையும் 'காம்ய கர்மங்கள்' (பலனில் ஆசையுடன் செய்யப்படும் கர்மங்கள்) என்றும், 'நிஷ்காம கர்மங்கள்' (பலனில் ஆசையின்றி கடமை என்ற உணர்ச்சியுடன் செய்யப்படும் கர்மங்கள்) என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சந்நியாசம் என்ருல், செயல்களையே துறந்துவிடுவது என்று அர்த்தமல்ல, ஆசையுடன் கூடிய செயல்களைத் துறப்பதேயாகும். தியாகம் என்ருல், பலனில் உள்ள நம்பிக்கையைத் துறப்பதாகும். எனவே, கீதை முழுவதும் கர்மயோகமே, அதாவது பலனில் ஆசை வைக்காமல் செயல்கள் புரிவதே வற்புறுத்தப்பட்டிருக்கிறது. —திலகர்.

என்று ஏன் கூற வேண்டும்? யாரும், இந்த உடலில் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கும் வரையில் வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியும் சிறப்புமிக்க ஆன்மிக நிலையிலிருந்து சிறிதும் வழுவாமல் இருந்து வர முடியுமா? அனுபவ பூர்வமாக அறிந்தவர்கள் மாத்திரமே இதற்கு பதில் கூற முடியும்!]

एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च ।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ ६ ॥

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச ।
கர்த்தவ்யானீதி மே பார்த்த நிச்சிதம் மதமுத்தமம் ॥ 6

*6.* இந்தக் கர்மங்களைக் கூட பற்றின்றியும், பலனில் ஆசையின்றியுமே செய்யவேண்டும். பார்த்தா, இதுதான் சிறந்த, தீர்க்காலோசனையுடன் கூடிய எனது அபிப்பிராயம்.

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७ ॥

நியதஸ்ய து ஸங்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।
மோஹாத் தஸ்ய பரித்யாகஸ் தாமஸ: பரிகீர்த்தித : ॥ 7

7. ஒருவருக்கு விதிக்கப்பட்டுள்ள கடமையைத் துறப்பது சரியல்ல. மதிமயக்கத்தினால் தன் கடமைகளை விட்டுவிடுவது தமோ குணம் ஆகும்.

दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥ ८ ॥

து:க்கமித்யேவ யத் கர்ம காயக்லேச பயாத் த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥ 8

*8.* வேதனையாக இருக்கிறது என்பதற்காகவும், உடல் உறுப்புகளுக்கு சிரமமாக இருக்கிறது என்று அஞ்சியும் செயல்களை யார் விட்டுவிடுகின்றாரோ, அவன் ஒரு காலத்திலும் அவ்விதம் துறப்பதன் பலனை அடைய மாட்டான். ஏனெனில், அவனது துறவு ராஜஸமாகும்.

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्त्विको मतः ॥ ९ ॥

கார்யமித்யேவ யத் கர்ம நியதம் க்ரியதே(அ)ர்ஜுன ।
ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத: ॥ 9

*9.* அர்ஜுனா, ஆனல் விதிக்கப்பட்ட ஒரு கடமையை, கடமை உணர்ச்சியுடனும், பற்றுதலின்றியும், பலனில் ஆசை வைக்காமலும் செய்தால், அது சாத்விகமான தியாகம் என்று கருதப்படும்.

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।
त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥ १० ॥

ந த்வேஷ்ட்யகுசலம் கர்ம குசலே நானுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வ ஸமாவிஷ்டோ மேதாவீ சின்னஸம்சய: ॥ 10

*10.* தியாகத்தை மேற்கொண்டுள்ளவனும், சந்தேகங்களை யெல்லாம் உதறித் தள்ளியவனுமான சத்துவ குணம் நிறைந்த இந்த ஞானி, துன்பத்தைத் தரும் செயல்களை வெறுப்பதில்லை, இன்பத்தைக் கொடுக்கும் செயல்களில் பற்றுதல் வைப்பதும் இல்லை.

न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ ११ ॥

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத: ।
யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே ॥ 11

*11.* உடலுடன் இருக்கும் ஒருவனல் கர்மங்களை முற்றிலும் விட்டுவிட முடியாது. எனினும், கர்மங்களின் பலனைத் துறக்கும் ஒருவன் தியாகியாகின்றான்.

अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥ १२ ॥

அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச த்ரிவிதம் கர்மண: பலம் ।
பவத்ய த்யாகினும் ப்ரேத்ய ந து ஸங்யாஸினும் க்வசித் ॥ 12

*12.* தியாகம் செய்யாதவர்கள் மரணமடைந்தபின் பெறும் கர்ம பலன்கள் மூன்று விதமாக, அதாவது துன்பத்தைக் கொடுக்கக் கூடியவையாகவும், இன்பத்தை அளிக்கக் கூடியவையாகவும், இரண்டும் கலந்தவையாகவும் இருக்கும். ஆனால், சந்நியாசிகளை அவை ஒருபோதும் அணுகமாட்டா.

[*11-12.* தியாகி (கர்மபலனைத் துறப்பவன்), சந்நியாசி (துறவி) ஆகிய இருவரும் உண்மையில் ஒருவரேதான். ஐந்தாவது அத்தியாயத்தில் சந்நியாசியும், யோகியும் ஒருவரே என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.]

**पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे ।**
**सांख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥ १३ ॥**

பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே |
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸர்வகர்மணாம் || 13

*13.* தோள்வலிமை வாய்ந்தவனே, எல்லாக் கர்மங்களையும் நிறைவேற்றுவதற்கு ஐந்து காரணங்கள் இருப்பதாக சாங்கிய சித்தாந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றை என்னிடமிருந்து தெரிந்து கொள்:

[‘சாங்கிய சித்தாந்தம்’ என்பது பலரும் அறிந்த சாங்கிய முறை என்ற சித்தாந்தமா அல்லது சங்கராச்சாரியாரும், ஞானேசுவரரும் கருதுவதுபோல் வேதாந்த சித்தாந்தமா என்பதைக் கூறுவது கடினமாகும். சாங்கிய தத்துவ நூல்களில் ஐந்து காரணங்களைப்பற்றி ஓரிடத்திலும் கூறப்படவில்லை. ‘அஹிர் புத்னிய சம்ஹிதை’ என்று நூலைப் பற்றி கீத் குறிப்பிட்டிருக்கிறார். சாங்கிய முறை, பல பிரிவுகளுடன் கூடிய ஒரு ‘தந்த்ரம்’ என்று அதில் கூறப்பட்டிருக்கிறது. அதில் சாங்கியக் கொள்கைகளும், இங்கே *14*-ஆம் சுலோகத்தில் காணப்படும் கர்த்தா (செயல் புரிபவன்), தெய்வம் (கண்ணுக்குத் தெரியாதது அல்லது விதி) ஆகியவற்றைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து காரணங்களில், சாங்கிய முறையில் குறிப்பிடும் *21* அம்சங்களும் அடங்கியிருப்பதாக, ஹில் கூறுகிறார். அவையாவன: அதிஷ்டான க்ஷேத்திரம் அதாவது தோன்றா நிலையில் உள்ள பிரகிருதி. 2. கர்த்தா (செயல் புரிபவன்), இதில் புத்தியும் அகங்காரமும் அடங்கியிருக்கின்றன. *3.* கரணங்கள்-மனம், ஐந்து ஞானேந்திரியங்கள். 4. சேஷ்டைகள்-ஐந்து கர்மேந்திரியங்கள். *5.* தெய்வம்-ஐந்து மகா பூதங்கள், ஐந்து சூக்ஷ்ம பூதங்கள் ஆகியவை. இந்த விளக்கம் துணிகரமான ஓர் யுக்தியே ஆகும். இந்த விளக்கம் எவ்வளவு தூரம் நியாயமானது என்பதை கீதையின் ஆசிரியரால்தான் கூற முடியும்! அப்படியாயின், சாங்கிய முறை என்ற அர்த்தத்தில்

'சாங்கியம்' என்ற சொல் கீதையில் உபயோகிக்கப்பட்டிருப்பது இதுதான் முதல் தடவையும், கடைசித் தடவையுமாக இருக்கும். ஆனால், ஞானம் என்ற அர்த்தத்தில் சாங்கியம் என்ற சொல்லை உபயோகிப்பதே பொதுவாக வழக்கத்தில் இருந்துவருகிறது. அது வேதாந்த சித்தாந்தமாயினும் சரி, சாங்கிய சித்தாந்தமாயினும் சரி, அந்தச் சொல் 'ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட ஏதாவதொரு சித்தாந்தம்' என்று கூறுவதே தான்தோன்றித்தனமல்லாத ஒரு விளக்கமாக இருக்கும்.]

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥ १४ ॥

அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாச்ச ப்ருதக் சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ 14

*14.* (அந்த ஐந்து காரணங்களாவன:) உடல், கர்த்தா, பல்வேறு முறைகள், பலவித வேறுபாடான நடவடிக்கைகள், ஐந்தாவதாகவும் கடைசியாகவும் பார்க்க முடியாதது (தெய்வம்).

शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥ १५ ॥

சரீர வாங் மனோபிர்யத் கர்ம ப்ராரபதே நர: ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥ 15

*15.* உடல், வாக்கு அல்லது மனம் ஆகியவற்றினால் ஒருவன் நியாயமாகவோ அல்லது நியாயமற்ற முறையிலோ எந்தச் செயலில் ஈடுபட்டாலும், அதற்கு மேற்கண்ட ஐந்துமே காரணங்களாக இருக்கின்றன.

तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।
पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६ ॥

தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மானம் கேவலம் து ய: ।
பச்யத்யக்ருத புத்தித்வாந் ந ஸ பச்யதி துர்மதி: ॥ 16

*16.* இவ்வித மிருக்க, தெளிவற்ற புத்தியின் காரணமாக யார் பற்றற்ற ஆன்மாவையே கர்த்தாவாக (செயல் புரி

பவனாக) எண்ணுகிறானோ, அவன் உண்மையைக் காணாத மூடனே ஆவான்.

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वापि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥ १७ ॥

யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வா(அ)பி ஸ இமான் லோகான் ந ஹந்தி ந நிபத்யதே ॥ 17

17. யார் 'நான்' என்ற உணர்ச்சியிலிருந்து விடுபட்டிருக்கிறானோ, யாருடைய நோக்கம் மாசற்றதாக இருக்கிறதோ அவன், உலகங்களையெல்லாம் அழித்தாலும் கூட அவன் கொல்லுபவன் ஆகமாட்டான்; பந்தங்களுக்கும் இலக்காக மாட்டான்.

இந்த சுலோகம் திகைப்பை உண்டாக்குவதாகத் தோன்றினாலும், இது உண்மையில் அப்படியல்ல. கீதை பல சந்தர்ப்பங்களிலும் மனிதன் அடைய வேண்டிய லட்சியத்தின் சிகரத்தைக் குறிப்படுகின்றது. லட்சியவாதி அதை அடைய முயற்சி செய்ய வேண்டியவனாக இருக்கிறான். எனினும், இந்த உலகில் அந்த நிலையைப் பூரணமாக எட்டுவது சாத்தியம் அல்ல. அது க்ஷேத்திர கணிதத்தின் விளக்கங்கள் போன்றது. அப்பழுக்கற்ற அதாவது கனம், அகலம் அற்ற நேர்கோடு என்று எதுவும் இல்லை. எனினும், க்ஷேத்திர கணித சம்பந்தமான பல்வேறு சூத்திரங்களையும் ருசுப்பிக்க அவ்விதம் கற்பனை செய்து கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதுபோலவே, இவைபோன்ற லட்சியங்களை மனத்தில் வைத்துக் கொண்டு ஒழுக்கத்தை உருவாக்கிக் கொள்ளவேண்டியிருக்கிறது. எனவே, இந்த சுலோகத்திற்குப் பின் வருமாறு அர்த்தம் செய்து கொள்ளவேண்டும் என்று தோன்றுகிறது: 'தான்' என்ற அகந்தையை எரித்துச் சாம்பலாக்கியவன் யாரோ, யாருடைய நோக்கம் மாசற்றதாக இருக்கிறதோ, அவன் விரும்பினால் இந்த உலகம் முழுவதையுமே கொன்றுவிடலாம்.

ஆனால் உண்மை என்னவெனில், யார் 'தான்' என்ற எண்ணத்தை ஒழித்தவனோ, அவன் உடலின் இச்சைகளையும் ஒழித்தவன் ஆகிறான்; யாருடைய நோக்கம் மாசற்றதாக இருக்கிறதோ அவன் சென்ற காலத்தையும், நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும் பார்க்கிறான். மனிதர்களிடையே அத்தகைய ஒருவன் இருக்க முடியாது. அவர் கடவுள் ஒருவராக மாத்திரமே இருக்க முடியும். அவர்தான் செயல்கள் புரிகிறார்; ஆனால் அவர் கர்த்தா அல்ல. அவர் கொல்லுகிறார்; ஆனால் அவர் கொல்லுபவர் அல்ல. நிலையற்ற மனிதன் செல்ல வேண்டிய ராஜபாட்டை, மகான்கள் காட்டியுள்ள ஒழுக்கப் பாதையே, அதாவது

அகிம்சையே, எல்லா உயிர்களேயும் புனிதமானவையாகக் கருதுவதே ஆகும்.

[இந்த சுலோகத்தைப் பற்றி ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "கிருஷ்ணனைக் கடவுள் என்று நாம் நம்பினுல், அவர் எங்கும் வியாபித்தவர் என்பதையும், எல்லாம் வல்லவர் என்பதையும் நாம் ஒப்புக் கொள்ளவேண்டும். அத்தகைய சக்திவாய்ந்த ஒருவருக்கு எல்லாவற்றையும் நிச்சயமாக அழித்துவிட முடியும். ஆனுல், நாம் பலவீனர்களான, நிலையற்ற மனிதர்கள். நாம் எப்போதும் தவறு செய்துகொண்டும், எப்போதும் நமது அபிப்பிராயங்களேயும், கருத்துகளேயும் மாற்றியவண்ணமும் இருந்துவருகிறோம். எனவே, கீதையை உண்டாக்கிய கிருஷ்ணனைப் போல் நாம் நடந்துகொள்ள முற்படுவோமாயின், நாம் துக்கத்திற்கு உள்ளாக நேரும்."

—'யங் இந்தியா'—*30-4-1925.*

மற்ருெரு சந்தர்ப்பத்தில் காந்திஜி கூறியதாவது: "சத்தியம், பலாத்காரம் உபயோகிக்கப்படுவதைத் தவிர்க்கின்றது. ஏனெனில், அப்பழுக்கற்ற மெய்ப் பொருளை அறியும் சக்தி, மனிதனுக்கு இல்லை. எனவே, அவனுக்கு யாரையும் தண்டிக்கும் தகுதி இல்லை." தண்டிக்கும் தகுதியும், சக்தியும் கடவுளுக்குத் தான் உண்டு.]

ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥ १८ ॥

க்ஞானம் க்ஞேயம் பரிக்ஞாதா த்ரிவிதா கர்ம சோதனு ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்ம ஸங்க்ரஹ: ॥ 18

*18.* அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் இம்மூன்றும் சேர்ந்தே, செயலுக்குத் தூண்டுதலாக இருக்கின்றன; கருவி, கர்மம், கர்த்தா ஆகிய மூன்றும் செயலுக்கு மூல காரணமாக இருக்கின்றன.

---

* செயல்களின் பலனில் மனிதன் நம்பிக்கை வைக்கக் கூடாது என்றும், செயல்களுக்குத் தானே கர்த்தா என்ற அகந்தையும் அவனுக்கு இருக்கக் கூடாது என்றும் கீதையில் பல இடங்களிலும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. செயலுக்கு மனிதன் மூல காரணம் அல்ல. மனிதன் இருந்தாலும், இராவிட்டாலும், பிரகிருதியின் இயல்பான நடவடிக்கைகள் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கும் என்பதே 14-ஆம் சுலோகத்தின் அர்த்தமாகும். உதாரணமாக, விவசாயம் மனிதனின் முயற்சியினுல் மாத்திரமே நடைபெறுவதில்லை. நிலம், விதை, மழை, உரம், மாடுகள் போன்ற பல்வேறு சாதனங்களின் உதவியையும் விவசாயி நாடவேண்டியிருக்கிறது. அப்போது

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावच्छृणु तान्यपि ॥ १९ ॥

க்ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: ।
ப்ரோச்யதே குணஸங்க்யானே யதாவச்ச்ருணு தான்யபி ॥ 19

*19.* ஞானம், கர்மம், கர்த்தா ஆகியவை, அவற்றின் வெவ்வேறான குணங்களின் காரணமாக மூன்று வகையாக இருக்கின்றன. குணங்களைப் பற்றிய சாஸ்திரத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள விதம் இவற்றைப் பற்றிக் கேட்பாயாக.

सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २० ॥

ஸர்வபூதேஷு யேனைகம் பாவமவ்யய மீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தத் க்ஞானம் வித்தி ஸாத்விகம் ॥ 20

*20.* எந்த ஞானத்தினால் ஒருவன், எல்லா உயிர்களிலும் பிரிக்கமுடியாத ஒரே பொருளை, வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்கின்றானோ, அந்த ஞானம் சாத்துவிகமானது என்பதை அறிந்து கொள்.

पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान् ।
वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१ ॥

ப்ருதக்த்வேன து யத் க்ஞானம் நானாபாவான் ப்ருதக் விதான் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தத் ஞானம் வித்தி ராஜஸம் ॥ 21

---

தான், விவசாயம் வெற்றிகரமாக நடைபெற முடியும். இதையெல்லாம் மனிதன் அறிவான். ஆனால், மனிதனுக்குத் தெரியாத ஒன்றும் இருக்கிறது. அதுதான் விதி எனப்படும். இவ்வளவும் சாதகமாக இருந்தால்தான், மனிதனின் முயற்சி வெற்றிபெறுவது சாத்தியமாகும். அப்படியிருக்க, ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்தவன், தான் என்று மனிதன் எவ்வாறு கூற முடியும்? தவிர, சுயநல நோக்கம் உள்ளவனே தவறான செயல்களில் ஈடுபடுகிறான். பலனில் ஆசையற்றவன், எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவன், தவறான செயல்களில் ஈடுபட முடியாது. அவன் எவருக்கும் தீங்கு செய்வது முடியாத காரியம்.

—திலகர்

21. எல்லா உயிர்களிலும் வெவ்வேறு விதமான ஜீவ தத்துவங்களைக் காணும் ஞானம் ராஜஸமானது என்பதை அறிந்து கொள்.

यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम् ।
अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

யத் து க்ருத்ஸ்னவதேகஸ்மின் கார்யே ஸக்தமஹைதுகம் ।
அதத்வார்த்தவதல்பம் ச தத் தாமஸ முதாஹ்ருதம் ॥ 22

22. காரணமின்றி ஒரே பொருளை, அதுதான் எல்லாம் என்று பற்றிக் கொண்டிருப்பதும், உண்மையான சாரத்தை விட்டுவிட்டு சக்கையைப் பற்றிக் கொண்டிருப்பதுமான ஞானம் தாமஸமாகும்.

[20-22. இந்த அத்தியாயத்தில் உள்ள 20-ஆம் சுலோகம், அத்தியாயம்-13, சுலோகம்-30-இல் உள்ள கருத்தையே திரும்பவும் குறிப்பிடுகின்றது. இந்த மூன்று சுலோகங்களும் மூன்று விதமான ஞானத்தை அல்லது அறிவைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. அவை முறையே ஒற்றுமையையும், வேற்றுமையையும், குழப்பத்தையும் குறிக்கின்றன. வேதாந்தத்தில், சாத்துவிக ஞானம் பல்வேறு உயிர்ப் பிராணிகளிடத்திலும் ஆன்ம ஒற்றுமையைக் காண்கிறது. அவைகளிடத்தில் உள்ள வேற்றுமையை ராஜஸ ஞானம் வற்புறுத்துகிறது. பொருட்களின் ஸ்தூல வாழ்க்கைக்கு அப்பால் தாமஸ ஞானத்தினுல் எதையும் பார்க்க முடிவதில்லை. இவ்விதமே எல்லாத் துறைகளிலும் விளக்கம் கூற முற்படலாம், உதாரணமாக, மதத்தில் சாத்துவிக ஞானம் உள்ள ஒருவன், ஒரே கடவுளையும், எல்லா மதங்களிலும் ஒரே ஆன்மிக உண்மையையும் காண்பான். அவன் எல்லா மதங்களையும் ஒரே விதமாக மதித்து நடந்து கொள்ளுவான். ராஜஸ ஞானம் உள்ளவன், மதங்களுக்குள் வேற்றுமைகளை வற்புறுத்துவதுடன், மற்ற எல்லா மதங்களையும் காட்டிலும் தன் மதமே உயர்வானது

---

ஞானத்தின் பல்வேறு வகைகளையும் பற்றி மேற்கண்ட சுலோகங்களில் சாரமாகவும், தெளிவாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஒருவன், தன்னுடைய மனைவி, மக்கள் தான் எல்லாம் என்று நினைப்பது தாமஸ ஞானமாகும். தன்னைப் போல் தன் ஊரில் உள்ளவர்களையும், தன் தேசத்தில் உள்ளவர்களையும் நினைப்பானுயின் அது ராஜஸ ஞானமாகும். உலகில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள எல்லா உயிர்களிடத்திலும் ஒரே ஆன்மாதான் இருக்கிறது என்று எண்ணுவதுதான் சாத்துவிக ஞானமாகும். இவ்வாருக, வேற்றுமையில் அதாவது வெவ்வேறுன பொருட்களில் ஒற்றுமையைக் காண்பவனே உண்மையான ஞானியாவான். உபநிடதங்கள் கூறுவதுபோல், அத்தகையோரே பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெறுகிருர்கள். —திலகர்

என்று கூறுவான். தாமஸ ஞானம் உள்ளவன், தன் சொந்த மதம் ஒன்றுதான் கடவுளால் படைக்கப்பட்டது என்றும், மற்றவையெல்லாம் போலி மதங்கள் என்றும், தன் மதத்தைச் சேராதவர்கள் யாவரும் நரகத்தில் வீழ்வார்கள் என்றும் பிரகடனம் செய்வான். எல்லோரையும் தன் மதத்தில் சேர்ப்பதற்காக அவன் போரில் இறங்கவும் முற்படுவான். சுருங்கக் கூறுவதாயின், சத்துவ குணம் உள்ளவன், வெவ்வேறாகத் தோன்றுவது போல் இருக்கும் பொருட்களில் ஒற்றுமையைக் காண்பான்; ரஜோ குணம் உள்ளவன், வேற்றுமைகளை வற்புறுத்துவான். தமோகுணம் உள்ளவன், எதையும் திரித்துக் கூறி குழப்புவான்.

ஞானத்தைப் பற்றிய பிரிவைக் குறித்து ஹர்பர்ட் ஸ்பென்சர் எழுதியுள்ள விவரங்கள், இந்த சுலோகங்களுக்கு நெருங்கிய தொடர்புள்ளவையாக இருக்கின்றன. இதை 'எனது சமர்ப்பண'த்தில் *194*-ஆம் பக்கம் பார்க்கவும்.]

**नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।**

**अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥ २३ ॥**

நியதம் ஸங்கரஹிதம் அராகத்வேஷத: க்ருதம் ।

அபலப்ரேப்ஸுனா கர்ம யத் தத் ஸாத்விக முச்யதே ॥ 23

*23.* பற்றுதலின்றியும், விருப்பு வெறுப்பு இல்லாமலும், பலனில் ஆசையின்றியும் ஒருவர் தமக்கு இடப்பட்டுள்ள கடமையைச் செய்வாராயின், அதுவே சாத்துவிகமான செயலாகும்.

**यत्तु कामेप्सुना कर्म साहंकारेण वा पुनः ।**

**क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४ ॥**

யத் து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வா புன: ।

க்ரியதே பஹுலாயாஸம் தத் ராஜஸ முதாஹ்ருதம் ॥ 24

*24.* பலனில் உள்ள ஆசையால் தூண்டப்பட்டோ அல்லது 'நான்' என்ற எண்ணத்துடனோ, சக்தியையெல்லாம் வீணாகச் சிதறடித்து செய்யப்படுவதே ராஜஸமான கர்மம் ஆகும்.

**अनुबन्धं क्षयं हिंसामनपेक्ष्य च पौरुषम् ।**

**मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥ २५ ॥**

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாம் அனபேக்ஷ்ய ச பௌருஷம் ।

மோஹாதாரப்யதே கர்ம யத் தத் தாமஸ முச்யதே ॥ 25

25. தன் திறமையையும், விளைவுகளையும் பற்றி யோசிக்காமலும், நஷ்டத்தையும் பிறருக்கு ஏற்படும் துன்பத்தையும் கவனியாமலும், கண் மூடித்தனமாக மேற்கொள்ளப்படும் செயலே தாமஸமான கர்மம் ஆகும்.

मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ॥ २६ ॥

முக்த ஸங்கோ(அ)னஹம் வாதீ த்ருத்யுத்ஸாஹஸமன்வித: ।
ஸித்யஸித்யோர் நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே ॥ 26

26. செயலில் எல்லாவிதமான பற்றுதல்களையும், 'நான்' என்ற எண்ணத்தையும் விட்டவனும், உறுதியும் உற்சாகமும் நிறைந்தவனும், வெற்றியையோ, தோல்வியையோ பொருட்படுத்தாதவனும் சாத்துவிகமானவன்.

रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥

ராகீ கர்ம பல ப்ரேப்ஸுர் லுப்தோ ஹிம்ஸாத்மகோ(அ)சுசி: ।
ஹர்ஷசோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: ॥ 27

27. இச்சையுடையவனும், செயலின் பலனில் ஆசையுடையவனும், பேராசையுடையவனும், இம்சை செய்பவனும், அசுத்தமானவனும், சந்தோஷத்திலும் துக்கத்திலும் ஆட்கொள்ளப்படுபவனுமான கர்த்தா (செயல் புரிபவன்) ராஜஸமானவன்.

अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैष्कृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८ ॥

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: சடோ நைஷ்க்ருதிகோ(அ)லஸ: ।
விஷாதீ தீர்க்க ஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ॥ 28

---

28. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். —குறள்.

இ-ள். காலம்கடத்துதல், மறதி, சோம்பல், தூக்கம் ஆகிய நான்கும், அழிவை நோக்கிச் செல்பவர்களுக்கு அருமையான படகுகளாக அமைகின்றன.

*28.* கட்டுதிட்டம் இல்லாதவனும், ஆபாசமாக நடந்து கொள்பவனும், பிடிவாதம் உள்ளவனும், அயோக்கியனும், வஞ்ச புத்தியுள்ளவனும், சோம்பேறியும், துக்க கோலமாக இருப்பவனும், இழுக்கடித்துத் தாமதம் செய்பவனும் தாமஸமாகச் செயல் புரிபவன் என்று கூறப்படுகிறான்.

**बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।**
**प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनंजय ॥ २९ ॥**

புத்தேர் பேதம் த்ருதேச்சைவ குணதஸ்த்ரிவிதம் ச்ருணு ।
ப்ரோச்யமான மசேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ‖ 29

*29.* தனஞ்சயா*, அவர்களுடைய குணங்களுக்குத் தகுந்தவாறு புத்தியும் மன உறுதியும் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதை, பூரணமாகவும் தனித்தனியாகவும் இப்போது கேட்பாயாக.

**प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।**
**बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥**

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யா கார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திः ஸா பார்த்த ஸாத்விகீ ‖ 30

*30.* பார்த்தா, செயல் புரிவதையும் செயலைத் தவிர்ப்பதையும், செய்யத் தக்கதையும் செய்யத் தகாததையும், பயத்தை விளைவிப்பதையும் பயமில்லாததையும், பந்தத்தையும் மோட்சத்தையும் அறிந்து கொள்ளும் புத்தியே சாத்துவிகமானது.

**यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।**
**अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥ ३१ ॥**

யயா தர்ம மதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜானாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ‖ 31

---

* அர்ஜுனன் திக் விஜயம் செய்து பலரையும் போரில் ஜயித்த போது அவனுக்கு ஏராளமான செல்வம் கிடைத்தது. அதனாலேயே அவனுக்கு தனஞ்சயன் என்ற பெயர் வழங்கலாயிற்று. —சங்கரர்.

30. சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. —குறள்.

இ-ள். மனத்தை விருப்பம்போல் செலவிடாமல், தீய வழியிலிருந்து அதை விலக்கி நல்வழியில் செலுத்துவதே அறிவாகும்.

31. பார்த்தா, தர்மத்திற்கும் அதர்மத்திற்கும், செய்யத் தக்க காரியத்திற்கும் செய்யத் தகாததற்கும் இடையே உள்ள வேற்றுமையை அறிந்து கொள்ள முடியாமல் தவருக முடிவு செய்யும் புத்தியே ராஜஸமாகும்.

अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता ।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२ ॥

அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸா(ஆ)வ்ருதா ।
ஸர்வார்த்தான் விபரீதாம்ச்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥ 32

32. பார்த்தா, இருளில் ஆழ்ந்து அதர்மத்தை தர்மமாக எண்ணியும், ஒவ்வொன்றையும் தாறுமாருக அறிந்து கொண்டும் தவறு செய்யும் புத்தி தாமஸமானது.

["தீமையை நன்மை என்றும், நன்மையைத் தீமை என்றும், இருளை ஒளி என்றும், ஒளியை இருள் என்றும், கசப்பை இனிப்பு என்றும், இனிப்பைக் கசப்பு என்றும் கூறுவோரின் கதி அதோ கதிதான்." —பைபிள்.]

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥ ३३ ॥

த்ருத்யா யயா தாரயதே மன: ப்ராணேந்த்ரியக்ரியா: ।
யோகேனுவ்யபிசாரிண்யா த்ரிதி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥ 33

33. பார்த்தா, மனத்தின் நடவடிக்கைகள், ஜீவாதார சக்திகள், புலன்கள் ஆகியவற்றினிடையே இடைவிடாத அந்நியோன்னிய பாவத்தை நிலைநிறுத்திவரும் உறுதியே சாத்துவிகமான உறுதியாகும்.

[சாத்துவிக உறுதியினல் தூண்டப்பட்ட நடவடிக்கைகள் யாவும், விடுதலை அதாவது மோட்சம் அடைவதற்கு உதவியாகவே இருக்கும். இது, அடுத்த சுலோகத்திலிருந்து தெளிவாகத் தெரிகின்றது.]

---

33. உரனென்னுந் தோட்டியா னேரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. —குறள்.

இ-ள். உறுதி என்னும் அங்குசத்தால் ஐந்து புலன்களையும் தீய வழியில் செல்லாமல் காப்பவன், எல்லாவற்றிலும் மேலான நிலைக்கு விதை போன்றவன் ஆவான்.

यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन ।
प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी ॥ ३४ ॥

யயா து தர்ம காமார்த்தான் த்ருத்யா தாரயதே(அ)ர்ஜுன ।
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ॥ 34

*34.* பார்த்தா, பலனில் ஆசைகொண்டு தர்மம், காமம், செல்வம் ஆகியவற்றில் பற்றுதல் கொண்டுள்ள உறுதி ராஜஸமாகும்.

[தர்மம், அர்த்தம் (செல்வம்), காமம் (சந்ததிகள் உண்டாக வேண்டும் என்பதில் ஆசை), மோட்சம் (விடுதலை) ஆகிய நான்குமே மனிதனின் லட்சியமாகும். ஆனால், இறுதி லட்சியமான மோட்சத்தைத் தவிர மற்ற மூன்றையும் மாத்திரம் பின்பற்றும்படி ராஜஸ உறுதி மனிதனைத் தூண்டும்.]

यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।
न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥ ३५ ॥

யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥ 35

*35.* பார்த்தா, அறிவற்ற மனிதன் எதனால் தூக்கம், பயம், துக்கம், சோர்வு, தற்பெருமை ஆகியவற்றைக் கைவிடுவதில்லையோ, அந்த உறுதியே தாமஸமானது.

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।
अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥ ३६ ॥

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத் ரமதே யத்ர து:க்காந்தம் ச நிகச்சதி ॥ 36

*36.* பரத சிரேஷ்டனே, இன்பத்தின் மூன்றுவகைகளை இப்போது நீ என்னிடமிருந்து கேட்பாயாக. இடைவிடாத பயிற்சியினால் மாத்திரமே ஒரு மனிதன் எதை அடைந்து இன்பத்தை அனுபவிக்கிறானோ, எதனால் துன்பம் அடியோடு தீர்ந்துவிடுகிறதோ,

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७ ॥

யத் ததக்ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம் ।
தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம் ஆத்ம புத்தி ப்ரஸாதஜம் ॥ 37

*37.* எது ஆரம்பத்தில் விஷத்தைப் போலவும் இறுதியில் அமிர்தத்தைப் போலவும் இருக்கிறதோ, ஆன்மாவின் உண்மையான இயல்பை சாந்தமாக உணர்ந்து கொண்டதன் மூலம் உதித்தது எதுவோ, அதுவே சாத்துவிகமான இன்பம் என்று கூறப்படுகிறது.

[*36-37:* இந்த இன்பத்திற்குக் கொடுக்க வேண்டிய விலை ஆரம்ப முயற்சியும், உழைப்பும், துன்பமுமே. துன்பம் போல் தோன்றுவது தவமேயாகும்.

''எந்த சிட்சையும் தற்போது இன்பமாக இராது, துன்பமாகவே தோன்றும். எனினும் பிற்காலத்தில் அது தர்மமாகிய சாந்தமான பலனை அளிக்கும்.''-பைபிள்.

தத்துவ ஞானத்தின் இன்பத்தைப் பற்றி ஸ்பினோஸாவும் குறிப்பிட்டுள்ளார். *36*-ஆம் சுலோகத்தில் உள்ள கருத்தையொட்டியே அவரது கருத்தும் இருக்கிறது. ஸ்பினோஸா கூறுவதாவது: ''நிரந்தரமான, நிலையற்ற ஒரு பொருளிடத்தில் வைக்கும் அன்பு மாத்திரமே, மனத்திற்கு எள்ளளவும் துன்பம் இல்லாத அப்பழுக்கற்ற இன்பத்தைக் கொடுக்கிறது. மனத்திற்கும் இயற்கை முழுவதற்கும் உள்ள ஐக்கிய பாவத்தைப் பற்றிய அறிவே எல்லாவற்றிற்கும் மேலான நன்மையைக் கொடுப்பதாகும்.'']

विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८ ॥

விஷயேந்த்ரிய ஸம்யோகாத் யத் ததக்ரே(அ)ம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத் ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38

---

37. சுடச் சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பம்
சுடச் சுட நோற்கிற் பவர்க்கு. —குறள்.

இ-ள். தீயில் புடம் செய்யப்பட்ட பொன்னைப் போல, தவம் செய்வோரின் ஞானம் துன்பமாகிய தீயில் புடம் செய்யப்படும்போது அதிக ஒளியுடன் விளங்கும்.

38. அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. —குறள்.

இ-ள். தர்ம வழியில் ஏற்படும் இன்பமே இன்பமாகும். மற்றவையெல்லாம் இன்பத்தை மாத்திரமல்ல, புகழைக் கூடக் கொடுப்பதில்லை.

*38.* புலன்களுக்கு, அவற்றிற்கான சாதனங்களுடன் தொடர்பு ஏற்படும் போது ஆரம்பத்தில் அமிருதம் போலவும், ஆனால் முடிவில் விஷம் போலவும் இருக்கும் இன்பமே ராஜஸ மாகும்.

["சிற்றின்பங்கள் யாவும் முதலில் ஆனந்தமாக இருக்கும்; ஆனல், இறுதியில் மானக்கேட்டிலும் மரணத்திலும் வந்து முடியும்.''—'இமிடேஷன் ஆப் கிறைஸ்ட்']

यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।
निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९ ॥

யதக்ரே சானுபந்தே ச ஸுகம் மோஹன மாத்மன: ।
நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம் தத் தாமஸ முதாஹ்ருதம் ॥ 39

*39.* தூக்கம், சோம்பல், கவனமின்மை ஆகியவற்றிலிருந்து எழும் இன்பம் தாமஸமானது. அது ஆரம்பத்திலும் இறுதியிலும் ஆன்மாவை உணர்ச்சியற்று மயங்கும்படி செய்துவிடுகிறது.

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥ ४० ॥

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புன: ।
ஸத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம் யதேபி: ஸ்யாத் த்ரிபிர் குணை: ॥ 40

*40.* பிரகிருதியிலிருந்து உண்டான இந்த மூன்று குணங் களிலிருந்து விடுதலை பெறும் சக்தி உடையவர்கள் பூமியிலோ, சொர்க்கத்திலோ, அல்லது தேவர்களிடையோ எவரும் இல்லை.

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परंतप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१ ॥

ப்ராஹ்மண க்ஷத்ரியவிசாம் சூத்ராணாம் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவ ப்ரபவைர் குணை: ॥ 41

---

41. நோயினல் துன்புறும் குழந்தைகளைப் பராமரிக்கும் தாய், அந்தக் குழந்தைகளின் நோய்க்குத் தகுந்தவாறு ஒன்றுக்கு சோறும் குழம்பும், மற்றென்றுக்கு சவ்வரிசிக் கஞ்சியும், வேறொரு குழந்தைக்கு ரொட்டியும் கொடுக்கிறாள். அதுபோலவே, வெவ்வேறு ஜனங்களுக்கு அவரவர் இயல்புக் குத் தகுந்தவாறு வெவ்வேறு வழிகளை இறைவன் வகுத்துக் கொடுத் திருக்கிறார். —ராமகிருஷ்ண பரமஹம்சர்.

41. பரந்தபா, பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர் கள், சூத்திரர்கள் ஆகியோரின் கடமைகள், அவரவர்களுடைய இயற்கையான தகுதிகளுக்குத் தகுந்தவாறு வகுக்கப்பட்டிருக் கின்றன.

शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥ ४२ ॥

சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
க்ஞானம் விக்ஞான மாஸ்திக்யம் ப்ரஹ்ம கர்ம ஸ்வபாவஜம் ॥ 42

42. சாந்தம், தன்னடக்கம், தவம், தூய்மை, மன்னிக்கும் குணம், நேர்மை, ஞானம், பகுத்தறிவு, கடவுளிடத்தில் நம்பிக்கை ஆகியவை பிராம்மணனின் இயற்கையான கடமைகள் ஆகும்.

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३ ॥

சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம் ।
தானமீசுவரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43

43. சூரத்தனம், ரோஷம், உறுதி, உபாயம், போரில் புறம் காட்டாமை, பெருந்தன்மை, ஆளும் திறமை ஆகியவை க்ஷத்திரி யனின் இயற்கையான கடமைகள் ஆகும்.

कृषिगोरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम् ।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४ ॥

க்ருஷி கோரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ 44

44. வேளாண்மை, பசுப் பாதுகாப்பு, வர்த்தகம் ஆகியவை வைசியனின் இயற்கையான கடமைகளாகவும், தொண்டு செய் வது சூத்திரனின் இயற்கையான கடமையாகவும் இருக்கின்றன.

[41-44. 'வர்ண' சம்பந்தமான விவரங்களை 'எனது சமர்ப் பணம்' 287-292-ஆம் பக்கங்களில் பார்க்கவும்.

"ஓர் உண்மையான பிராம்மணன், பணிவே உருவானவனாக இருக்கவேண்டும்; அவன் தன் அறிவைக் குறித்தோ அல்லது ஞானத்தைக் குறித்தோ கர்வம் அடையக் கூடாது. அவன் மற்றவர்களை விடத் தன்னை உயர்வாக நினைத்துக் கொண்டால், அவன் பிராம்மணனாக இருக்கத் தகுதியற்றவனாகிவிடுகிறான். பிராம்மணனையும் தோட்டியையும் சமமாகக் கருதும்படி ஜனங்களுக்குக் கற்பிப்பதே அவனது கடமையாகும். மேலும், தன் கொள்கையில் உறுதியும், அதை நிறைவேற்றும் தைரியமும் இராதவனும், பிராம்மணன் என்ற பெயருக்குத் தகுதியற்றவன் ஆகிறான்."–'ஹரிஜன்'-18-5-1934

"மனத்தில் தீர்க்காலோசனை செய்து வருங்காலத்தை முன்னதாக அறிந்து கொள்பவன், மன்னனாகவும் எஜமானனாகவும் இருக்கவேண்டும் என்பது இயற்கையின் கட்டளை; தன்னுடைய உடலினால் மாத்திரமே உழைக்கும் ஆற்றல் உள்ளவன் அடிமையாக இருக்கவேண்டும் என்பதும் இயற்கையின் கட்டளை" என்று அரிஸ்டாடில் கூறியுள்ளார்.

ஆனால், காந்திஜி அவ்விதம் நினைக்கவில்லை. அவர் கூறுவதாவது: "பிராம்மணன் கலப்பையைத் தொடக் கூடாது என்று கூறுவது வர்ணாசிரம தர்மத்தைக் கேலி செய்வதாகும், பகவத் கீதையின் அர்த்தத்தையும துஷ்பிரயோகம் செய்வதாகும். பல்வேறு பிரிவினருக்கும் உள்ள தகுதிகள் மற்றவர்களுக்கு இருக்கக் கூடாது என்பதில்லை. தைரியம், க்ஷத்திரியர்களின் ஏகபோக பாத்தியமாக இருக்கவேண்டுமா? தன்னடக்கம், பிராம்மணர்களுக்கு மாத்திரமே ஏகபோக பாத்தியமாக இருக்கவேண்டுமா? பசுவைப் பாதுகாக்கவேண்டியது, பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், சூத்திரர்கள் ஆகிய எல்லோருடைய கடமையும் அல்லவா? ஒரு பசுவுக்காக உயிரை விடுவதற்குத் தயாராக இராதவர் ஓர் ஹிந்துவாக இருக்க முடியுமா?"— 'எங் இந்தியா'-22-1-1925.]

**स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।**
**स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५ ॥**

**ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।**
**ஸ்வகர்ம நிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு ॥ 45**

45. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கடமையைச் செய்வதில் தன் முழுகவனத்தையும் செலுத்துவதன் மூலம் சித்தியடைகிறான். தன் கடமையில் மனப்பூர்வமாக ஈடுபடுவதன் மூலம் அவன் எவ்விதம் சித்தியடைகிறான் (மோட்சம் அடைகிறான்) என்பதை இப்போது கேட்பாயாக.

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥ ४६ ॥

யத: ப்ரவ்ருத்திர் பூதானும் யேன ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணு தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: ।। 46

46. எல்லா உயிர்களையும் இயக்குபவரும், எல்லா இடங்களிலும் வியாபித்துள்ளவருமான இறைவனை, யார் தன் கடமைகளின் மூலம் வழிபடுகின்ருனே அவன் சித்தியடைகிருன்.

["உண்மையான எல்லா அலுவல்களும் மதமேயாகும்" என்று கார்லைல் கூறியுள்ளார்.

"உன்னால் எதைச் செய்ய முடியும் என்பதை அறிந்துகொள். சிறிதும் சலியாமல் அதைச் செய்துகொண்டிரு" என்று பைபிள் கூறுகிறது.

"வெகுமதியை எதிர்பாராமல் செய்யும் காரியங்கள் யாவும் கடவுளுக்குத் தொண்டு புரிவதேயாகும்" என்று ஸ்பினேஸா கூறியுள்ளார்.]

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ ४७ ॥

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வபாவநியதம் கர்ம குர்வன்னுப்னோதி கில்பிஷம் ।। 47

47. தன் சொந்தக் கடமை வெறுப்பைக் கொடுப்பதாக இருப்பினும், பிறருடைய கடமை செய்வதற்கு அதிக எளிதாக இருப்பினும் கூட, தன் சொந்தக் கடமையைச் செய்வதே சிறந்தது. ஒருவருடைய இயல்புக்கு ஒத்த கடமையைச் செய்தால், பாவம் ஏற்படுவதில்லை.

பற்றின்மையே அதாவது செயலின் பலனைத் துறப்பதே கீதையின் நடுநாயகமான உபதேசமாக இருக்கிறது. ஒருவர் தன் கடமைக்குப் பதிலாகப் பிறரது கடமையைச் செய்ய முற்பட்டால், பலனைத் துறப்பதற்கு இடம் இல்லாமற்போய்விடும். அதனுல்தான், மற்றவருடைய கடமையை விட தன் சொந்தக் கடமையே சிறந்தது என்று கூறப்படுகிறது. எந்த உணர்ச்சியுடன் கடமையைச் செய்கிருேம் என்பதே முக்கியமானது. அந்தக் கடமையைப் பற்றின்றி செய்வதே, அதன் மூலம் கிடைக்கும் வெகுமதி ஆகும்.

["உன் இயல்புக்கு உகந்த எந்தக் கடமையைச் செய்வதிலும் வெட்கம் அடையாதே. அதைச் செய்வதில், பிறருடைய கண்டனத்தையோ, புகழ்ச்சியையோ கண்டு நீ அஞ்சாதே."
—மார்க்கஸ் ஆரிலியஸ்.]

सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥ ४८ ॥

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனுக்னி ரிவாவ்ருதா: ॥ 48

*48.* குந்தியின் புதல்வனே, உடன் பிறந்த கடமை குறைகள் உள்ளதாக இருப்பினும், அதைக் கைவிட்டுவிடக் கூடாது. நெருப்புடன் புகை இருப்பதுபோல், ஆரம்பத்தில் எல்லாக் கர்மங்களும் (கடமைகள்) குறைகளால் சூழப்பட்டவையாகத் தான் இருக்கும்.

[மனிதனின் பிறப்பும், இங்கே உலகில் இந்த உடல் ஏற்பட்டிருப்பதும் முன் ஜன்மத்தின் கர்ம வினைகளேயாகும். எனவே, எந்தக் கடமையும் ஆரம்பத்தில் குறைகள் உள்ளதாகத்தான் இருக்கும்.]

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ ४९ ॥

அஸக்த புத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸந்யாஸேனுதிகச்சதி ॥ 49

*49.* எல்லாவிதமான பற்றுதல்களிலிருந்தும் தன்னை விலக்கிக் கொண்டவனும், தன் மனத்தை வென்று தனக்கு எஜமானனுக இருப்பவனும், ஆசைகளை அறவே ஒழித்தவனும், துறவின் மூலம் கர்ம பந்தத்திலிருந்து விடுதலை பெறும் மகோன்னதமான நிறை நிலையை (சித்தியை) அடைகிருன்.

---

49. 'கர்ம பந்தத்திலிருந்து விடுதலை பெறவேண்டும்' என்ருல் கர்மங்களைத் துறந்துவிட வேண்டும் என்று அர்த்தம் இல்லை. எல்லோரும் கர்ம பந்தங்களிலிருந்து விடுதலை பெறவேண்டியதுடன், உலகம் முழுவதும் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்பதை பகவான் தெளிவாகக் கூறியிருக்கிருர். அதாவது, சமூகம் நலன் பெற்று விளங்க வேண்டுமாயின், எல்லோரும் அவரவர் கடமைகளை ஒழுங்காகச் செய்ய வேண்டும். ஆன்மிகத் துறையில் உழைப்பவரைப் போலவே, வீரர்கள் போர்க்களத்திலும், வியாபாரி,

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।
समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥ ५० ॥

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்னோதி நிபோத மே ।
ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா க்ஞானஸ்ய யா பரா ॥ 50

*50.* குந்தியின் புதல்வனே, இந்த சித்தியை எய்தியவன் யாரோ அவன், ஞானத்தின் மகோன்னத சிகரமான பிரம்மத்தை எப்படி அடைகிறான் என்பதை என்னிடமிருந்து அறிந்து கொள் வாயாக.

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥ ५१ ॥

புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச ।
சப்தாதீன் விஷயாம்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச ॥ 51

---

தொழிலாளி, தச்சுவேலை செய்பவர், குயவர், கொல்லர் எல்லோரும் தங்கள் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். இறைச்சி விற்கும் கசாப்புக் கடைக் காரர் கூடத் தமது கடமையைச் செய்ய வேண்டும். கர்மங்களை அதாவது கடமைகளைத் துறந்தாலன்றி மோட்சம் அடைய முடியாது எனில், மேற்கண்ட வர்கள் யாவரும் தங்கள் தங்கள் கடமைகளை விட்டுவிட்டுத் துறவிகளாக வேண்டியதுதான்! கர்மங்களை விட்டுவிடுவதுதான் உண்மையான துறவு என்று கூறுவோர், ஒவ்வொருவரும் தமது கடமையைச் செய்ய வேண்டியது அவசியம் என்பதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்றாலும், கீதை அவ் விதம் குறுகிய நோக்கம் உடையதாக இல்லை. ஒவ்வொரு கடமையிலும் குறைகள் இருக்கத்தான் செய்யும். பிராம்மணனுக்கு பொறுமை அவசிய மாகும். எனினும், பொறுமையாக இருப்பவனை பலமற்ற அப்பாவி என்று பலரும் எண்ணுவது உண்டு. அதற்காக பிராம்மணன், பொறுமையையும், மன்னிக்கும் குணத்தையும் கைவிட்டுவிடக் கூடாது. இறைச்சி விற்கும்படி நேருவது துரதிருஷ்டமானதே என்றாலும், அதற்காக கசாப்புக் கடைக்காரர் தமது தொழிலை விட்டுவிட வேண்டியதில்லை. ஆனால், பற்றுதலோ, பேரா சையோ இல்லாமல் ஒவ்வொருவரும் தமக்கு வகுக்கப்பட்டுள்ள தொழிலை,— அது எவ்வளவு கடினமாக இருப்பினும், விரும்பத்தகாததாக இருப்பினும்,— செய்து தீர வேண்டும். ஒரு மனிதனின் உயர்வு அவனது தொழிலைப் பொறுத்ததல்ல; அவனது மன நிலையைப் பொறுத்ததே. மனத்தில் சாந்த மும், சிருஷ்டியில் எல்லாம் சமமே என்ற விவேகமும் உள்ள ஒருவன், ஒரு வியாபாரியாகவோ அல்லது ஒரு கசாப்புக் கடைக்காரராகவோ இருக்கலாம். எனவே, அவனும் உயர்ந்த ஞானம் உள்ள பிராம்மணனைப் போலவும், தர்ம யுத்தம் செய்யும் வீரனான க்ஷத்திரியனைப் போலவும் மோட்சம் பெறத் தகுதி வாய்ந்தவனே.

51. தூய்மையாக்கப்பட்ட அறிவுடன் கூடியவனாகி, உறுதியான மனத்துடன் தன்னடக்கத்தைக் கைக்கொண்டு, புலன்களுக்கு இலக்கான சப்தம் முதலிய விஷயங்களைத் துறந்து, விருப்பு வெறுப்புகளை ஒதுக்கித் தள்ளி,

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥ ५२ ॥

விவிக்தஸேவீ லக்வாசீ யதவாக்காய மானஸ: ।
த்யான யோக பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித: ॥ 52

52. தனிமையில் வாழ்ந்து கொண்டு, உணவைக் குறைத்து, பேச்சையும், உடலையும், மனத்தையும் கட்டுப்படுத்தி, எப்போதும் தியான யோகத்தில் ஈடுபட்டு, வைராக்கியத்தை (இச்சைகளை அடக்குதல்) உறுதியாகக் கடைப்பிடித்து,

अहंकारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।
विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥ ५३ ॥

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 53

53. அகந்தை, பலாத்காரம், இறுமாப்பு, காமம், கோபம், உடைமைகள் ஆகிய எதுவும் இல்லாமல் 'என்னுடையது' என்ற எண்ணத்தையெல்லாம் ஒழித்து, சாந்த நிலையில் இருப்பவனே பிரம்மத்துடன் ஐக்கியம் அடைவதற்குத் தகுதிவாய்ந்தவன் ஆகிறான்.

ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति ।
समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ ५४ ॥

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா ந சோசதி ந காங்க்ஷதி ।
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥ 54

---

52. தனிமையாக இருக்கும்போது எவ்வித பாவமும் செய்யாதவனே உண்மையான பக்தன். ஏனெனில், தனிமையாக இருக்கும்போது மனிதன், தான் செய்வதை வேறு எவரும் பார்க்கா விட்டாலும் கடவுள் பார்க்கிறார் என்பதை உணருகிறான்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

54. பிரம்மத்துடன் ஒன்றிவிட்ட ஒருவன் சாந்தத்துடனும் மலர்ந்த முகத்துடனும் இருப்பான். அவன் துக்கப்படமாட்டான், (எதற்காகவும்) ஆசைப்படவும் மாட்டான். அவன் எல்லா உயிர்களையும் சமமாகக் கருதுவதுடன், என்னிடத்தில் மிகவும் ஆழ்ந்த பக்தியுடன் இருப்பான்.

भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।
ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥ ५५ ॥

பக்த்யா மாமபிஜானுதி யாவான் யச்சாஸ்மி தத்வத: ।
ததோ மாம் தத்வதோ க்ஞாத்வா விசதே ததனந்தரம் ।। 55

55. பக்தியினுல் அவன், நான் யார் என்பதையும் எனது மகத்துவத்தையும் உள்ளவாறு உணர்கிருன். உண்மையில் அவன் என்னை அறிந்து என்னுள் பிரவேசிக்கிருன்.

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥ ५६ ॥

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாச்ரய: ।
மத்ப்ரஸாதாதவாப்னோதி சாச்வதம் பதமவ்யயம் ।। 56

56. என்னைத் தஞ்சமாக அடைபவன், எப்போதும் கர்மங்களைச் செய்து கொண்டிருந்தாலும் கூட, நிரந்தரமான அழிவற்ற பரமபதத்தை எனது அருளால் அடைகிருன்.

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥ ५७ ॥

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸங்யஸ்ய மத்பர: ।
புத்தியோக முபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ।। 56

57. மனத்தினுல் எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, என்னை உன்னுடைய லட்சியமாகக் கொண்டும்,

---

56. நீ பலாப்பழத்தை உடைப்பதற்கு முன் உனது கையில் சிறிதளவு எண்ணெயைத் தடவிக் கொண்டால், அப் பழத்தின் பசை உன் கைகளில் ஒட்டிக்கொண்டு தொந்தரவைக் கொடுக்காது. அதுபோலவே, பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தினுல் நீ உன்னை பலப்படுத்திக் கொண்டுவிட்டால், லௌகிகமான கர்மங்களில் நீ உழன்ற போதிலும், அவற்றினுல் உனக்குத் தீங்கு ஏற்படாது.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

எல்லாவற்றையும் சமமாகக் கருதும் யோக நிலையை மேற்கொண்டும், என்னிடத்தில் எப்போதும் உன் சித்தத்தை நிலை நிறுத்துவாயாக.

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।
अथ चेत्त्वमहंकारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥ ५८ ॥

மச்சித்த: ஸர்வ துர்க்காணி மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி ।
அத சேத் த்வமஹங்காரான் ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ 58

58. அவ்விதமாக உன்னுடைய சித்தத்தை என்பால் நிலை நிறுத்தி, என் அருளால் எல்லா இடையூறுகளையும் தாண்டிச் செல்லுவாயாக. அவ்விதமின்றி 'நான்' என்ற அகந்தையால் ஆக்கிரமிக்கப் பட்டு என் சொல்லைக் கேட்காவிடில், நீ நாசம் அடைவாய்.

यदहंकारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥ ५९ ॥

யதஹங்காரமாச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே ।
மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ॥ 59

59. 'நான்' என்ற அகந்தையினால் பீடிக்கப்பட்டு, 'நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்று நீ எண்ணுவாயானால், உன்னுடைய அந்த எண்ணம் வீணாகிவிடும்; (உன்னுடைய) சுபாவம் உன்னை யுத்தத்தில் ஈடுபடும்படி வற்புறுத்திவிடும்.

स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥ ६० ॥

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த: ஸ்வேன கர்மணா ।
கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத் கரிஷ்யஸ்யவசோ(அ)பி தத் ॥ 60

60. கௌந்தேயா, உன் மதி மயக்கம் காரணமாக எதை நீ செய்ய மறுப்பாயோ அதையே, நீ எந்தக் கடமையைச் செய்வதற்குப் பிறந்திருக்கிறாயோ அந்தக் கடமையால் கட்டுண்டு உன் விருப்பத்திற்கு விரோதமாகச் செய்வாய்.

[கிருஷ்ணன், அர்ஜுனனை உள்ளும் புறமும் நன்கு அறிவார். அவனது இயல்பு அவனைச் செய்யும்படி தூண்டும் கர்மத்திலிருந்து அவன் தப்பித்துக் கொள்ள முடியாது என்பது நிச்சயம். அதன் காரணமாக அவன், பந்தத்திற்கு உள்ளாவான். எனவே, தமது கட்டளைப்படி பற்றுதலின்றியும் இறைவனுக்கு அர்ப்பணம் என்ற உணர்ச்சியுடனும் அவன் நடந்து கொள்ளுவதே சிறந்தது என்றும், அது அவனைக் கட்டுப்படுத்தாது என்றும் பகவான் அவனுக்குக் கூறுகிறார்.]

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१ ॥

ஈச்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசே(அ)ர்ஜுன திஷ்டதி ।
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ 61

*61.* அர்ஜுனா, இறைவன் ஒவ்வொரு பிராணியின் உள்ளத்திலும் குடியிருந்து கொண்டு, அவரது மாயா சக்தியினால் எல்லோரையும் யந்திரத்தினால் ஆட்டிவைப்பது போல் ஆட்டிவைக்கிறார்.

[ப்ளோடினஸ் குறிப்பிட்டுள்ள பின்வரும் ஓர் அழகான உவமையில் இதே கருத்து அடங்கியிருக்கிறது. அவரது கருத்து இந்த முக்கியமான சுலோகத்திற்கு சிறந்த விளக்கமாக அமைந்திருக்கிறது: "எல்லாப் பொருட்களுக்கும் கர்த்தாவான இறைவனையே நாம் இடைவிடாது சுற்றி வருகிறோம். அப்படியிருந்தும், நாம் எப்போதும் அவரைப் பார்ப்பதில்லை. பாடகர்களின் ஒரு கோஷ்டி, தலைவரைக் கவனிக்காமல் பாட்டிற்கு புறம்பாக வேறு எங்கேயாவது கவனம் செலுத்துமாயின், தவறு ஏற்படலாம். ஆனால், அக்கோஷ்டியினர் தலைவரையே கவனித்துக் கொண்டிருப்பார்களாயின், அவர்கள் நன்றாகப் பாடுவார்கள். அதைப் போலவே நாம் எல்லாப் பொருட்களுக்கும் மூலப் பொருளான கடவுளிடமிருந்து நழுவி அப்பால் செல்லும்போது கூட இடைவிடாது அவரையே சுற்றிவருகிறோம். ஆனால் அவ்விதம் சுற்றி வருவதை நாம் கவனிக்க முற்படும்போது நாம் முரண்பாடாக இருப்பதில்லை. அதற்கு மாறாக, அதையொட்டிய தெய்விகமான நடனத்தில் நாம் ஈடுபடுகிறோம்."

"கடவுளிடமிருந்து நழுவி நாம் அப்பால் செல்லும் போது" நாம் பிரகிருதியின் இசைக்குத் தகுந்தவாறு நடனம் ஆடுகிறோம்;

---

61. சர்க்கஸில் வித்தை செய்யும் பையன், உயரச் சென்று ஒரு கயிற்றைப் பிடித்துக்கொண்டு யந்திரத்தைப் போல் சுற்றுகிறான். அதுபோலவே நீயும் ஈசுவரனை உறுதியாகப் பற்றிக்கொண்டு உலகத்தில் உன் கடமைகளைச் செய்தால், நீ சிறிதும் பயப்படவேண்டிய அவசியமே இல்லை.

—ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

ஆனல், நாம் கடவுளிடத்திலேயே முழு மனத்தையும் செலுத்தும் போது, நம்முடைய இசைக்கு, அதாவது கடவுளின் இசைக்குத் தகுந்தவாறு பிரகிருதி ஆடும்படி செய்கிறோம்.]

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२ ॥

தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ॥ 62

*62.* பாரதா, உன் மனப்பூர்வமாக நீ அவர் ஒருவரையே சரணம் அடைவாயாக. அவரது அருளால், சாந்திமயமான நிரந்தரமான பரம பதத்தை நீ அடைவாய்.

["என்னிடம் வா; நான் உனக்கு சாந்தியை அளிக்கின்றேன்" என்பது பைபிள் வாக்கு. இந்த வாக்கியத்தையே செயின்ட் அகஸ்டின் பின்வருமாறு விளக்கியுள்ளார்: "ஆண்டவன் பக்கத்தில் நில்; நீ உறுதியாக நிற்பாய். அவரைத் தஞ்சமாகக் கொள்; உனக்கு சாந்தி கிடைக்கும்."]

इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।
विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३ ॥

இதி தே க்ஞான மாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா ।
விம்ருச்யைத தசேஷேண யதேச்சஸி ததா குரு ॥ 63

*63.* இவ்வாறாக, ரகசியங்களுக்கெல்லாம் பரம ரகசியமான ஞானத்தை உனக்கு நான் உபதேசித்திருக்கிறேன். இதைப் பற்றி தீர ஆலோசித்து, பிறகு உன் விருப்பம் போல் செய்.

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥ ६४ ॥

ஸர்வகுஹ்ய தமம் பூய: ச்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோ(அ)ஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ 64

*64.* ரகசியங்களுக்கெல்லாம் பரம ரகசியமான என்னுடைய மகோன்னதமான வார்த்தையை மீண்டும் கேட்பாயாக. நீ என்னுடைய ஆழ்ந்த அன்புக்குப் பாத்திரமானவன். எனவே, உன்னுடைய க்ஷேமத்திற்காக இதை நான் உனக்குக் கூறுகிறேன்.

सन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ ६५ ॥

மன்மனு பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமே வைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோ(அ)ஸி மே ।। 65

65. என்னிடம் உன் மனத்தை நிலைநிறுத்து; என்னிடம் பக்தியுடன் இரு; உனது யக்ஞங்களை எனக்கு அர்ப்பணம் செய்; என்னையே நமஸ்காரம் செய். நீ என்னையே வந்து அடைவாய். இது நான் உனக்கு அளிக்கும் வாக்குறுதி; எனக்கு நீ மிகவும் அன்பார்ந்தவன்.

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச : ।। 66

66. எல்லா தர்மங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனையே அடைக்கலமாகக் கொள். உன்னை நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை செய்கிறேன். துக்கம் அடையாதே!

---

66. பற்றுதல்களை அறவே ஒழித்து. இறைவனிடம் பக்தியுடன் பணி செய்யவேண்டும். அவ்விதம் செய்து அவனிடம் அடைக்கலம் புகுவது ஒன்றே நமது கடமை. எல்லாம் அவனுடையது.

—விவேகானந்தர்.

66. காற்று அடிக்கும்போது விசிறிகள் தேவையில்லை. அதுபோலவே, இறைவனின் அருள் உண்டாகும்போது ஜபம், தவம் எதுவும் அவசியம் இல்லை. 'கீதா' என்ற சொல்லைப் பல முறைகள் வேகமாகக் கூறினல், அப்போது 'தாகீ', 'தாகீ' என்று சொல்லுவது போல் இருக்கும். 'தாகீ' என்ருல் 'தியாகம் செய்' என்று பொருள். அதாவது, ''உலக பந்தங்களுக்கு உட்பட்ட மனிதர்களே! எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டு, இறைவனிடத்தில் உங்களுடைய உள்ளத்தை நிலை நிறுத்துங்கள்'' என்று கீதை உபதேசிக்கின்றது.

— ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

66. உருவம், குணம் எல்லாவற்றையும் கடந்த நிர்க்குண பிரம்மத்தை கீதை ஒப்புக்கொண்டிருப்பது உண்மையே. அதுவே மகோன்னதமான சித்தாந்தம் என்றும் கீதை உபதேசிக்கிறது. இருந்தாலும், உருவம் உள்ள கடவுளை வணங்குவதுதான் எளிதாகும் என்றும் கீதை கூறுகிறது. இந்த சுலோகத்தில் பகவான், கண்ணுக்குத் தெரியும் தம்முடைய உருவத்தையே

[''நன்மையைச் செய்து கொண்டு அல்லாவிடம் சரண் அடைவோர் யாராயினும், அவர்களுக்கு வெகுமதி அளிப்பது ஆண்டவன் கையில் இருக்கிறது. அவர்களுக்கு எவ்வித பீதியும் ஏற்படாது. அவர்கள் துக்கத்திற்கு உள்ளாகும்படியும் நேராது'' (2. 112; 10. 63). ''நான் என்னுடைய கையை உன் மீது திருப்பி உன் அழுக்குகளையெல்லாம் போக்கி, உன் பாவங்களையெல்லாம் அகற்றிவிடுவேன்'' (1. 25). ''உனக்குக் கஷ்டகாலம் வரும்போது என்னை நாடு; நான் உன்னை விடுவிக்கின்றேன்''—குரான்.]

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन।
न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७ ॥

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।
ந சாசுச்ருஷவே வாச்யம் ந ச மாம் யோ(அ)ப்யஸூயதி ॥ 67

67. தவத்தை அறியாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும், இதைக் கேட்க விருப்பம் இல்லாதவனுக்கும், என்னை இகழ்பவனுக்கும் இதை ஒரு போதும் எடுத்துக் கூறுதே.

---

குறிப்பிடுகிறுர். இந்த சுலோகம் பக்தி மார்க்கத்தை ஆதரிக்கிறது என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். இங்கே நிர்க்குண பிரம்மத்தைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. இந்த சுலோகத்தில் தர்மங்கள் என்பவை, அகிம்சை, சத்தியம், பெற்றேர்களுக்குப் பணிவிடை செய்தல், குருமாருக்குத் தொண்டு செய்தல், யக்ஞங்கள் செய்தல், தானம், துறவு போன்றவற்றையே குறிப்பிடுகின்றன. அவற்றைத்தான், இறைவனை அடைவதற்கான தர்மங்கள் என்று சாஸ்திரங்கள் குறிப்பிடுகின்றன. எனினும், பகவான் இங்கே ஒரே ஒரு தர்மத்தைத்தான் குறிப்பிடுகிறுர். ''என்னையே தஞ்சமாக அடைவாயாக. நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் மீட்கின்றேன். பயப்படாதே'' என்று கிருஷ்ணன் உறுதி கூறுகிறுர். இந்தப் புத்திமதியை பகவான் பெயரளவில் அர்ஜுனனுக்குக் கூறினுலும், அது எல்லோருக்கும் கூறப்பட்ட புத்திமதியே ஆகும். அதாவது, ஒவ்வொருவரும் அவரிடம் ஆழ்ந்த பக்தியுடன் இருக்க வேண்டும; அவரவருக்கு இடப்பட்டுள்ள கடமைகளை பக்தியுடன் செய்ய வேண்டும். இதுதான் கர்மயோகம். கீதையின் சாரமும் இதுதான்.

—திலகர்.

67. மழைத் தண்ணீர் மேடான இடத்தில் தங்குவதில்லை; பள்ளத்திற்கு ஓடிவந்துவிடுகிறது. அதுபோலவே, தற்பெருமையும், அகந்தையும் உள்ளவர்களின் மனத்தில் தெய்வ பக்தி தங்குவதில்லை. பணிவு உள்ளவர்களின் மனத்தில்தான் தங்கி நிற்கும்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

67. எந்த ஆயுதத்தினுலும் முதலையின் முதுகுத் தோலைப் பிளக்க முடியாது. அதுபோல, உலக விஷயங்களிலேயே உழன்று கொண்டிருக்கும்.

य इमं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥ ६८ ॥

ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத் யஸம்சய: ॥ 68

68. மிகச் சிறந்த இந்த ரகசியத்தை என்னுடைய பக்தர்களுக்கு எடுத்துக் கூறுபவன் மகோன்னதமான பக்தி செய்தவனுகிருன். அதன் பலனுக, அவன் நிச்சயமாக என்னை வந்து அடைவான்.

தான் ஞானத்தை அடைந்து, வாழ்க்கையிலும் அதை அனுசரித்து வாழ்பவனே அதைப் பிறருக்கு எடுத்துப் பிரகடனம் செய்ய முடியும். தான் வாழ்க்கையில் எப்படி யெல்லாமோ நடந்துகொண்டு, கீதையைப் பற்றி அப்பழுக்கற்ற முறையில் பிரசங்கம் செய்பவரையும், கீதைக்கு விளக்கம் கூறுபவரையும் இந்த இரண்டு சுலோகங்களும் குறிப்பிடுவது முடியாதகாரியம்.

न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥ ६९ ॥

ந ச தஸ்மான் மனுஷ்யேஷு கச்சின்மே ப்ரியக்ருத்தம: ।
பவிதா ந ச மே தஸ்மாத் அன்ய: ப்ரியதரோ புவி ॥ 69

---

ஒருவனுக்கு எவ்வளவு நல்ல உபதேசம் செய்தாலும் அது அவ்னது மனத்திற்குள் நுழையாது.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

68. சைதன்னிய தேவர் தட்சிணப் பிரதேசத்தில் யாத்திரை செய்துகொண்டிருந்தபோது, ஓர் இடத்தில் பண்டிதர் ஒருவர் கீதா காலட்சேபம் செய்துகொண்டிருந்தார். அங்கே அதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒரு பக்தனின் கண்களிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருந்தது. அந்த பக்தனுக்கு எழுதவோ, படிக்கவோ தெரியாது; கீதையில் ஒரு சுலோகத்துக்குக்கூட அர்த்தம் தெரியாது "நீ ஏன் இப்படி அழுகிருய்" என்று சைதன்னியர் அவனைக் கேட்டார். "எனக்கு கீதையில் ஒரு வார்த்தை கூடத் தெரியாது. ஆனுல், அதை யாராவது படிக்கும்போது, என் மனக்கண்ணினுல் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் ரதத்தின்மீது கிருஷ்ண பகவான் உட்கார்ந்துகொண்டு அர்ஜுனனுக்கு உபதேசம் செய்வதைக் காண்பதுபோல் தோன்றுகிறது. அந்த ஆனந்தத்தில் என்னையறியாமல் கண்ணீர் பெருகுகிறது" என்ருன் அந்த பக்தன்!

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

*69.* மனிதர்களிடையே அவனைக் காட்டிலும் எனக்கு மிக்க அன்புடன் பணிவிடை செய்பவன் வேறு யாரும் இல்லை. இந்த பூமியில் அவனைக் காட்டிலும் சிறந்த அன்பன் எனக்கு வேறு யாரும் இல்லை.

अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।
ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥ ७० ॥

அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ: ।
க்ஞான யக்ஞேன தேனாஹம் இஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥ 70

*70.* நம்முடைய புனிதமான இந்த சம்பாஷணையை யார் பாராயணம் செய்கின்றனோ அவன் ஞான யக்ஞத்தினல் என்னைப் பூஜை செய்தவன் ஆகிருன். இது எனது சித்தாந்தம்.

श्रद्धावाननसूयश्च शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभाँल्लोकान्प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥ ७१ ॥

ச்ரத்தாவான் அனஸூயச்ச ச்ருணுயாதபி யோ நர: ।
ஸோ(அ)பி முக்த: சுபான் லோகான் ப்ராப்னுயாத் புண்யகர்மணும் ॥ 71

*71.* நிந்தித்து இகழாமல் சிரத்தையுடன் இதைக் கேட்பவன் கூட விடுதலை பெற்று, நற்செய்கைகள் புரிந்தோர் செல்லும் புண்ணிய லோகங்களுக்குச் செல்லுவான்.

*70-71.* "விடுதலை பெற்று" என்பதற்கு "பாவங்களிலிருந்து விடுதலை பெற்று" என்று சங்கராச்சாரியார் வியாக்கியானம் செய்துள்ளார்.

*2-2-1934* 'ஹரிஜனில்' காந்திஜி பின்வருமாறு எழுதியுள்ளார்:
"கீதையைப் பாராயணம் செய்வோர் ஒரு விஷயத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். அதாவது வெறும் பாராயணத்துடன் லட்சியம் பூர்த்தியாகிவிடாது. இறைவனைத் தியானம் செய்வதற்கும், அர்த்தத்தையும் கீதையின் உபதேசத்தையும் மனத்தில் பதியவைத்து அவற்றை நடைமுறையில் கொண்டு வருவதற்கும் பாராயணம் உதவியாக இருக்கவேண்டும். ஒரு

கிளியைக் கூட கீதையை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும்படி செய்துவிட முடியும், அவ்விதம் ஒப்புவிப்பதால் கிளிக்கு ஞானம் உண்டாகிவிடாது. கீதையைப் பாராயணம் செய்பவர், அவர் எப்படி இருக்க வேண்டும் என்று கீதையின் ஆசிரியர் எதிர் பார்க்கிறாரோ அவ்விதம் இருக்க வேண்டும். அதாவது, அவர் பரந்த அர்த்தத்தில் ஒரு யோகியாக இருக்க வேண்டும். கீதையின் பக்தர்கள், எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் ஒரே விதமாக இருக்க வேண்டும் என்றும், அந்த மூன்றுக்கும் இடையே எள்ளளவும் முரண்பாடு இருக்கக் கூடாது என்றும் கீதை கோருகிறது''.]

कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसंमोहः प्रनष्टस्ते धनंजय ॥ ७२ ॥

கச்சி தேதச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।
கச்சி தக்ஞானஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தே தனஞ்சய ॥ 72

72. பார்த்தா, இதை ஒருமித்த மனத்துடன் நீ கேட்டாயா? தனஞ்சயா, அறியாமையினால் உண்டான உன் மதிமயக்கம் ஒழிந்துவிட்டதா?

अर्जुन उवाच

नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।
स्थितोऽस्मि गतसन्देहः करिष्ये वचनं तव ॥ ७३ ॥

அர்ஜுன உவாச

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா த்வத்ப்ரஸாதான் மயா(அ)ச்யுத ।
ஸ்திதோ(அ)ஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ ॥ 73

*அர்ஜுனன் கூறினான்:*

73. அச்சுதா, தங்களுடைய அருளால் என் மதிமயக்கம் ஒழிந்துவிட்டது. இழந்த அறிவை நான் மீண்டும் பெற்றிருக்கிறேன். எனது சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்து என் மனம் உறுதியடைந்திருக்கிறது. உங்களுடைய கட்டளைப்படி நான் செய்வேன்.

संजय उवाच

इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।
संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥ ७४ ॥

ஸஞ்சய உவாச

இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।
ஸம்வாதமிம மச்ரௌஷம் அத்புதம் ரோமஹர்ஷணம் ॥ 74

ஸஞ்சயன் சொன்னான்:

74. இவ்விதமாக, வாசுதேவனுக்கும் மகாத்மாவான பார்த்தனுக்கும் நடந்த அற்புதமான, மெய்சிலிர்க்க வைக்கும் சம்பாஷணையை நான் கேட்டேன்.

व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम् ॥ ७५ ॥

வ்யாஸ ப்ரஸாதாச்ச்ருதவான் ஏதத் குஹ்ய மஹம் பரம் ।
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயத: ஸ்வயம் ॥ 75

75. யோகேசுவரனை கிருஷ்ணனே திருவாய் மலர்ந்து அருளிய மிகவும் சிறந்த, பரம ரகசியமான இந்த யோகத்தை நான் வியாசரின் அருளினால் நேரில் கேட்டேன்.

राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६ ॥

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிம மத்புதம் ।
கேசவார்ஜுனயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர் முஹு: ॥ 76

76. அரசே, கேசவனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த அந்த அற்புதமான, தூய்மையாக்கும் சம்பாஷணையை நான் மீண்டும் மீண்டும் நினைக்கும் போது, என் மனத்தில் ஆனந்தம் பொங்கி வழிகின்றது.

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान्राजन्हृष्यामि च पुनः पुनः ॥ ७७ ॥

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹான் ராஜன் ஹ்ருஷ்யாமி ச புன: புன: ॥ 77

77. ஹரியின் அந்த அற்புத வடிவத்தை நினைக்க நினைக்க என் வியப்பிற்கு எல்லையே இல்லை; நான் மீண்டும் மீண்டும் பரவசம் அடைகிறேன்.

[தாந்தே* கூறுகிறார்: "அதன்பின் நான் கண்டதை வார்த்தைகளால் வர்ணிப்பது என்பது முடியாத காரியம். உலகம் முழுவதும் வியாபித்த வடிவத்தைப் பற்றி நான் பேச முற்படும் போதெல்லாம், என் ஆன்மா அதன் எல்லைக்கு அப்பால் பரந்து விரிகின்றது."]

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७८ ॥

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்த்தர: ।
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம ॥ 78

78. யோகேசுவரனான கிருஷ்ணனும், வில் வீரனான பார்த்தனும் எங்கே இருக்கிறார்களோ அங்கே, அதிர்ஷ்டம், வெற்றி, சுபிட்சம், நிரந்தரமான நீதி எல்லாம் இருக்கும் என்பது நிச்சயம்.

[1930-இல் தண்டி உப்புச் சத்தியாக்கிரகப் படை அணி வகுத்துச் சென்றபோது காந்திஜி நிகழ்த்திய அற்புதமான பிரசங்கங்கள் ஒன்றில், கிருஷ்ணனை லட்சியத்தின் நேர்மையுடனும், அர்ஜுனனை முறைகளின் தூய்மையுடனும் ஒப்பிட்டுப் பேசினார். அவர் கூறியதாவது: "நமது லட்சியத்தின் நேர்மையிலும், நமது ஆயுதங்களின் தூய்மையிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. எங்கே முறைகள் தூய்மையாக இருக்கின்றனவோ, அங்கே கடவுள் தமது ஆசிகளுடன் பிரசன்னமாகிறார் என்பதில்

---

* தாந்தே (1265-1321) இத்தாலியிலேயே இணையற்ற கவிச்சக்கரவர்த்தியாக விளங்கினார். அவர் எழுதிய அற்புதமான கவிதைகள் உலகத்தில் உள்ள பல முக்கிய பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

சந்தேகம் இல்லை. அந்த இரண்டும் ஒன்று சேர்ந்துள்ள இடத்தில் தோல்விக்கு இடமே இல்லை.”]

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे मोक्षसंन्यासयोगो नामाष्टादशोऽध्यायः ॥ १८ ॥

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
மோக்ஷ ஸந்யாஸ யோகோநாம
அஷ்டாதசோ(அ)த்யாய: ।। 18

ஸ்ரீமத் பகவத் கீதை என்ற உபநிடதத்தில் பிரம்ம
ஞானத்தின் ஓர் அம்சமான யோக சாஸ்திரத்தைப் பற்றி
ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும்
நடந்த சம்பாஷணையில் ‘மோட்ச ஸந்நியாச
யோகம்’ என்ற பதினெட்டாவது அத்தி
யாயம் இவ்வாறாக முடிவுறுகின்றது



# 1

# காந்திஜி வாழ்கின்ருர்

மார்க் எட்மண்ட் ஜோன்ஸ் எழுதியுள்ள 'காந்தி வாழ்கின்ருர்' என்ற நூலின் ஓர் அத்தியாயத்தில், அவர் கீதையைப்பற்றித் தமது கருத்தை விளக்கியிருப்பதுடன், காந்திஜிக்கும் கீதைக்கும் உள்ள தொடர்பையும் விவரித்துள்ளார். அந்த அத்தியாயம் முழுவதும் இந்தப் பகுதியில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது:

மகாத்மா காந்தியின் எழுபத்தைந்தாவது பிறந்த தின வைபவத்தையொட்டி வெளியான நினைவு மலரில், பர்ல் எஸ். பக்* எழுதியுள்ள பாராட்டுரை இடம் பெற்றிருக்கிறது. அதில் அவர் கூறுவதாவது: ''காந்திஜி, தமது சொந்த குணாதிசயங்களின் மூலம் இந்தியா என்ருல் என்ன என்பதையே சித்திரித்துக் காட்டி வருகிருர் என்பதே எனது அபிப்பிராயம். காந்திஜியைப் பற்றி நான் என்னவெல்லாம் அறிந்து கொள்ள முடியுமோ அவற்றின் மூலமும், அவரைப் புரிந்து கொள்ள முயற்சித்ததன் மூலமும் நான் ஓரளவாவது இந்தியாவை, இந்தியாவில் உள்ள முரண்பாடுகளையெல்லாம் கூட அறிந்து கொண்டுள்ளேன்.''

ஹிந்துக்களுக்கு இயல்பாக உள்ள விசேஷ குணங்கள் எல்லாம் காந்திஜியிடம் இணையற்ற முறையில் அமைந்திருக்கின்றன. அந்த குணங்களும், உண்மையான இந்தியாவின் ஆழ்ந்த அல்லது நிரந்தரமான இதயத்தில் அவர் முற்றிலும் இரண்டறக் கலந்திருப்பதுமே, அவரை ஓர் அவதார புருஷராகச் செய்திருக்கிறது. அவ்வாருக, அவர் எந்த நாட்டில் தோன்றினரோ, எந்த நாட்டிற்காக உயிர் நீத்தாரோ, அந்த நாட்டைப் பலரும் அறிந்து கொள்வதற்கு அவர் உதவியாக இருக்கிருர். இன்று காந்திஜியைப் பற்றி அறிந்து கொள்ள எல்லையற்ற சாதனங்கள் இருக்கின்றன. ஆனல் துரதிருஷ்டவசமாக, அவற்றையெல்லாம் பரிசீலனை செய்ய சராசரி தனி நபருக்கு நேரமோ அல்லது வாய்ப்போ இராது. எனவே, பொதுவாக வாசகர்களைப் பொறுத்தமட்டில், முற்றிலும் மாறுபாடான ஒரு முறை அவசியமாகியிருக்கிறது. அதாவது காந்திஜியைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமாயின், இந்தியாவைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும்! உலகம் உய்வதற்கு காந்திஜி புரிந்துள்ள தொண்டைச் சிறிதாவது அறிந்து கொள்ள வேண்டுமாயின், ஹிந்து சமயத்தினரின் சிந்தனைப் போக்கைப் பற்றிய ஞானம் அவசியமாகிறது. இந்த

---

* பர்ல் எஸ். பக் (1892) உலகப் புகழ் பெற்ற அமெரிக்க நூலாசிரியை. அவர் பல சிறந்த நாவல்கள் எழுதியிருப்பதுடன், 1938–ஆம் ஆண்டில் இலக்கிய நோபல் பரிசும் பெற்றவர்.

உண்மை, இன்னும் அதிகமான கஷ்டத்திற்குக் காரணமாகிறது. ஏனெனில், இந்திய இலக்கியங்கள் ஏராளமாக இருக்கின்றன. இந்தியாவில் வாழையடி வாழையாக வந்துள்ள இலக்கியப் பொக்கிஷங்களும், மறைந்தவை போக மீதியுள்ள பழக்க வழக்கங்களும், மக்களின் வாழ்க்கை முறையிலும், மனப் போக்கிலும் உள்ள எண்ணிக்கையற்ற வேறுபாடுகளும் மேநாட்டினர் புரிந்து கொள்ள முடியாதவையாக இருக்கின்றன. அவற்றைப் புரிந்து கொள்ள அவர்கள் தங்களுடைய ஆயுட்காலம் முழுவதையும் அர்ப்பணம் செய்ய இயலாதவர்களாக இருக்கிறார்கள். எனினும் அதிருஷ்டவசமாக, ஒன்றே ஒன்று ஹிந்து சமயத்தின் சாரமாகவும், வைரத்தைப் போல் மிகுந்த ஒளியுடனும் விளங்கி வருகின்றது. அதுதான் பகவத் கீதை.

காந்திஜிக்கு கீதை எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது என்பதை, அவரது சுயசரிதையின் மூலமும், கீதையைப் பற்றி அவர் அடிக்கடி குறிப்பிட்டுள்ள விவரங்களிலிருந்தும் எல்லோரும் நன்கு அறிவர். அவர் சுடப்பட்ட தினத்தன்று மாலையில் அவரது உயிர் பிரிந்து கொண்டிருந்த போது, கீதையில் அவருக்கு மிகவும் பிடித்தமான சுலோகங்கள் பாராயணம் செய்யப்பட்டன. கீதை, ஹிந்துக்களின் மாபெரும் காவியமான மகா பாரதத்தின் குறிப்பிடத்தக்க ஒரு பாகமாக விளங்குகிறது. ஒரு லட்சம் சுலோகங்கள் அடங்கிய மகாபாரதத்தில் சுமார் எழு நூற்று எழுபது* சுலோகங்கள் அடங்கியதே கீதையாகும். கீதையின் ஆங்கில மொழி பெயர்ப்புகளுள் எட்வின் அர்னால்டு கவிதை வடிவில் மொழி பெயர்த்துள்ள 'சொர்க்க கீதம்' மிகப் பிரபலமாக விளங்குகிறது. காந்திஜியின் மொழி பெயர்ப்பு வைதிக ஹிந்துக்களின் கருத்துக்கு மிகவும் மாறுபாடாக இருப்பதால், அவரது நிலையைப் பாரபட்சமின்றிப் பரிசீலனை செய்வதற்கு அது உதவி அளிப்பதாக இல்லை. எனவே, மோஹினி எம். சாட்டர்ஜியின் ஆங்கில மொழிபெயர்ப்பே மேநாட்டினருக்கு மிகவும் உதவியாக இருக்கக்கூடிய விளக்கமாகத் திகழ்கிறது எனலாம். "புனித நூல்கள் எல்லாவற்றின் சாரமும் பகவத் கீதைதான் என்பதை, இந்தியாவில் ஆதார பூர்வமாகப் பேசக் கூடிய சகலரும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்" என்று சாட்டர்ஜி கூறுகிறார். கீதை, வேதங்களின் சாரமே என்று சங்கராச்சாரியார் கூறியிருப்பதையும் அவர் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்.

அது எப்படியாயினும், கீதை ஹிந்து சமய தத்துவத்தின் சாரமாகக் கருதப்படுகிறது என்பதை யாரும் ஆட்சேபிப்பதற்கில்லை. யூதர்களுக்கு பழைய ஏற்பாடும், கிறிஸ்தவர்களுக்கு புதிய ஏற்பாடும், முஸ்லிம்களுக்கு குரானும் எப்படியோ, அப்படியே கீதையும் ஹிந்து சமயத்தினருக்கு முக்கியமானது என்று

* கீதையில் சரியாக எழுநூறு சுலோகங்களே உள்ளன. ஒருவேளை கீதையின் பெருமையைப் பற்றிய மற்றும் சில சுலோகங்களையும் சேர்த்து எழுநூற்று எழுபது சுலோகங்கள் என்று மார்க் எட்மண்ட் ஜோன்ஸ் கணக்கிட்டிருக்கலாம்.

கூருமல் இருப்பதற்கில்லை. ஹிந்து மத வேதாந்த தத்துவத்தை இந்தியாவில் புனருத்தாரணம் செய்த சங்கராச்சாரியார் கீதைக்குக் கொடுத்துள்ள விளக்கத்தின் கருத்தைப் பின்பற்றியே சாட்டர்ஜியின் விளக்கமும் இருக்கிறது. எனவே, காந்திஜியை உருவாக்குவதற்கு கீதையின் பங்கு எவ்வளவு என்பதை மேனாட்டினர் அறிந்து கொள்வதற்கு, அந்த விளக்கம் பெரிதும் உதவியாக இருக்கிறது.

கீதைக்கு சங்கராச்சாரியார் கொடுத்துள்ள விளக்கத்தைத் தவிர, மற்றவர்களின் விளக்கங்களையும் சாட்டர்ஜி போதிய அளவு பரிசீலனை செய்துள்ளார். எனவே, விளக்கங்களின் நுணுக்கங்களை ஆழ்ந்து பரிசீலனை செய்யும் அளவுக்கு சமஸ்கிருதத்தில் பாண்டித்யம் இராதவர்களுக்கு, சாட்டர்ஜியின் விளக்கம் உதவியாக இருக்கும். அவர் தமது பரிசீலனைக்குப் பூர்வாங்கமாகக் கூறுவதாவது:

"......... மதத்தில் இரண்டு விதமான அம்சங்கள் இருக்கின்றன. ஒன்று, கர்ம மார்க்கத்தைக் காட்டுகிறது; மற்றொன்று, கர்மங்களற்ற மார்க்கத்தைக் காட்டுகிறது. முதல் வழியைப் பின்பற்றுவோர், கடவுளின் திரையிடப்பட்ட ஒளியில் வாழ்கின்றார்கள். அவர்கள் எப்போதும் வேலை செய்து கொண்டும், எப்போதும் வேலை செய்ய வேண்டியவர்களாகவும் இருக்கிறார்கள். மற்றொரு வழி, கடவுளை அடையும் வழியைக் காட்டுகிறது. அவரை அடைந்துவிட்டால், பின்னர் அடைய வேண்டியது எதுவுமே இல்லை; அவருடன் லயித்துவிட்டால், பின்னர் ஆக வேண்டிய காரியம் எதுவுமே இல்லை. இரண்டாவது வழியின் மூலம் ஒருவன் பேரானந்தத்தின் சிகரத்தை அடைகிறான். அந்த நிலை, துன்பம் எதுவும் அறவே இல்லாத ஒரு நிலையாக மனிதனின் கற்பனைக்குத் தோன்றுகிறது.

"கர்ம மார்க்கத்தின் இயல்பை அறிந்து கொள்வது எளிதாகும். எனக்கு ஏதோ ஒன்றை நான் விரும்புகிறேன். அது நிரந்தரமாக என்னிடம் இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இந்த ஆசையை, என் புத்தியைக் கொண்டோ அல்லது உடல் உழைப்பைக் கொண்டோ முயற்சிப்பதன் மூலம் நான் நிறைவேற்றிக் கொண்டுவிட முடியாது. எனவே, மனித சக்திக்கு அப்பாற்பட்ட முறைகளைக் கைக் கொள்ள முற்படுகிறேன். அதாவது, இந்த உலகில் மாத்திரம் அல்ல, மறு உலகில் கூட பலனை அடைய நான் விரும்புகிறேன். இதிலிருந்து ஒரு விஷயம் சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாகிறது. அது என்னவெனில், எல்லைக்கு உட்படாத ஒன்றை எல்லைக்கு உட்பட்டதாக மாற்றுவதன் மூலம் நான் ஆனந்தத்தை நாடுகின்றேன்....

"பந்தங்களிலிருந்து நம்மை விடுவிக்க கர்மத்தினால் (செயலினால்) முடியாது. மிருகங்கள் அதன தன் வர்க்கத்தைப் பெருக்குவது போல, கர்மம் மேற்கொண்டு நம்மை கர்மத்தில் மாத்திரமே கொண்டு போய்விடும். கர்மம் செய்பவன் மாயையினால்

உருவானவன். அவனது கர்மம் மாயைக்கு அப்பால் செல்ல முடியாது. மாயை ஒரு விநாடி செயல் புரியவில்லை என்று வைத்துக் கொள்வோமாயின், கர்மத்திற்கோ, கர்மம் செய்பவனுக்கோ இடம் இராது.

"நாம் பந்தங்களால் கட்டுண்டிருக்கும் நிலையை உணர்ந்திருக்கிறோம். அதுபோலவே, அந்த பந்தங்களை அகற்றக்கூடிய ஒரு நிலையை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பது தெளிவாகின்றது. சரியான ஞான நிலையை நாம் அடையும் போது, மாயை அல்லது போலியான ஞான நிலைக்கு இடம் இராது.

"எனவே, நாம் செய்ய வேண்டியது எதுவாயினும், அதைச் செய்துதான் தீரவேண்டும். ஆனால், பலனை அனுபவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் அதைச் செய்யக் கூடாது. நான் ஓர் அடிமையைப் போல் கடவுளுக்குத் தொண்டு புரிய வேண்டும். நான் அவ்விதம் தொண்டு புரிய வேண்டும் என்று அவர் விரும்பவில்லை. ஆனால், அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆசையை அவர் எனக்கு அருளியிருக்கிறார். ஒவ்வொரு எண்ணத்தையும், ஒவ்வொரு செயலையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்ய எனக்கு இயலாவிடில், அவருக்காக ஏதாவது குறிப்பிட்ட காரியங்களையாவது நான் செய்ய வேண்டும். இருபத்து நான்கு மணி நேரத்தையும் அவருக்கு அர்ப்பணம் செய்ய இயலாவிடில், குறைந்த பட்சம் ஒரு மணி நேரத்தையாவது அவருக்கு நான் அர்ப்பணம் செய்யவேண்டும். ஆனால், அவருக்கு என்னால் இயன்ற தொண்டைச் செய்யாமல் மாத்திரம் இருந்துவிடக் கூடாது."

பகவத் கீதை காவிய வடிவில் உருவாக்கப்பட்டிருக்கிறது. போர் முனையில் மகத்தான இரண்டு பகைப் படைகள் போருக்கு ஆயத்தமாகக் கூடியிருந்த ஒரு சந்தர்ப்பமே, பகவத் கீதை தோன்றுவதற்குக் காரணம் ஆயிற்று. அந்தக் கீதத்தின் கதா நாயகனான அர்ஜுனன், நியாயமாக தேசத்தை ஆட்சிபுரிய வேண்டியவர்களின் பிரதிநிதியாக விளங்குகிறான். அவ்விதம் ஆட்சிபுரியும் உரிமையுள்ளவர்கள், பகைவர்களின் சூழ்ச்சியினால் தங்களுடைய உரிமையை இழக்க நேர்ந்தது. அவனது பகைவர்கள் தாயாதிகள் ஆவர். அவர்கள், அர்ஜுனனைச் சேர்ந்தவர்களின் ராஜ்யத்தைப் பறித்துக் கொண்டு அதைத் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டார்கள்.

அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த சம்பாஷணைகளே கீதையாக உருவாகியிருக்கின்றன. சஞ்சயனின் அறிக்கை அதற்கு எல்லைக் கோடாக அமைந்திருக்கிறது. அந்தக மன்னனான திருதராஷ்டிரனுக்கு சஞ்சயன் சாரதியாக இருந்தவன். திருதராஷ்டிரனின் புதல்வர்களே, அர்ஜுனன் முதலியோரிடமிருந்து ராஜ்யத்தைக் கைப்பற்றி ஆண்டு கொண்டிருந்தார்கள். சஞ்சயனுக்கு அளிக்கப்பட்ட தெய்விகமான சக்தியால் அவன் எல்லாவற்றையும் பார்த்து, யுத்த நிகழ்ச்சிகளை அந்தக மன்னனுக்கு விவரித்

துக் கூறுகிறான். அர்ஜுனனுக்கும் அவனுக்கு சாரதியாக இருக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த விவாதங்களை அவன் அந்த மன்னனுக்கு அறிவிக்கிறான். கிருஷ்ணன், விஷ்ணுவின் ஓர் அவதாரமே யாவார்.

போர் முனைக் காட்சியை சாட்டர்ஜி பின்வருமாறு விவரிக்கிறார்: "மாமன்மார், பாட்டன்மார், புதல்வர்கள், பேரன்மார், சகோதரர்கள், நண்பர்கள், குருமார் முதலியோர் ஒருவரையொருவர் எதிர்த்து மரணத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் இறுதிவரையில் யுத்தம் செய்வதற்கு ஆயத்தமாக நிற்பதை அர்ஜுனன் பார்க்கிறான். ரத்த பாசமும், நட்பு உறவும் மேலோங்கி அவன் மனத்தை வேதனைக்கு உள்ளாக்குகின்றன. பல்வேறு முரண்பாடான உணர்ச்சிகளால் அவனது இதயம் அல்லல் படுகின்றது. அத்தகைய உணர்ச்சிகளின் காரணமாக, போர் வீரனான அவனது அஞ்சா நெஞ்சம் கூட நடுங்குகின்றது; துக்கத்தினால் அவனது தைரியம் மண்ணோடு மண்ணாகிவிடுகின்றது. அவனது ஆயுட் காலத்திலேயே அவன் அப்போதுதான் முதல் தடவையாக பயம் என்றால் என்ன என்பதை அறிந்து கொள்ளுகிறான். அதனால் அவனது உறுப்புகள் சோர்வடைகின்றன; பயத்தினால் அவனது ரோமம் சிலிர்க்கின்றது; மகத்துவம் வாய்ந்த அவனது வில், அவனுடைய கையிலிருந்து நழுவி விழுகின்றது; அவனுக்கு உடல் முழுவதும் எரிகின்றது.

"அர்ஜுனன் ஒரு க்ஷத்திரியன். போர் செய்வதே அவனது கடமை. அந்தக் கடமையில் அவனுக்கு இருந்த பலமான நம்பிக்கை, உறவினர் மீதும், நண்பர்கள் மீதும் உள்ள அன்பினால் தகர்ந்து விடுகின்றது; சந்தேகங்கள் ஏற்பட்டு அவனது மனம் தடுமாறுகின்றது. உற்றார் உறவினரிடையே சுபிட்சமாக வாழ்வதுதான் இன்பத்தை அளிக்கக் கூடியது. அவர்களின்றி சிம்மாசனத்தில் உட்கார்ந்து ஆட்சிபுரிவதால் என்ன பலன் ஏற்பட முடியும்? ரத்தக் கறையுடன் கூடிய வெற்றியைக் காட்டிலும் பிச்சையெடுத்து உண்பதே சிறந்தது என்று அவனுக்குத் தோன்றுகிறது. தெய்விகத் தன்மை வாய்ந்த அவனது மூதாதையர்கள் க்ஷத்திரிய தர்மத்தில் ஊறித் திளைத்தவர்கள். பரம்பரையான அந்த தர்மமும், பூஜ்யர்களான ரிஷிகளின் உபதேசங்களும் அவனது மனத்தில் போராட்டத்தை உண்டாக்குகின்றன. அறிவும் ஆற்றலும் வாய்ந்த அவனது மனச்சாட்சியைத் திருப்திசெய்வதற்காக, தர்ம நூலில் உள்ள வாக்கியங்கள் எடுத்துக்காட்டப் படுகின்றன.

"எப்போதுமே மனிதனின் நிலை அதுதான். தீமைக்கு ஊற்றுக்கால் நம் உள்ளேயே இருக்கிறது. 'நான்' என்ற எண்ணமானது, உடைமையே இராத இடத்தில் நமக்கு உடைமை உணர்ச்சியை உண்டாக்கி நம்மை மயக்குகின்றது. என்னிடத்தில் உள்ள 'என்னுடையது' என்ற இந்த எண்ணமே, எனக்குப்

பெரிய விரோதியாக இருக்கிறது. இந்த பயங்கரமான பூண்டு, மனிதனின் உள்ளத்தில் ஆழ்ந்து வேரோடியிருக்கிறது. அரக்கத் தன்மை வாய்ந்த அந்தப் பூண்டை வேருடன் களைந்து எறிவதே பகவத் கீதையின் நோக்கமாகும்.

"பகவத் கீதை ஒரு மகத்தான காவியம். அந்தக் காவியத்தை இயற்றிய ஆசிரியர் மகாகவியாகவும் தீர்க்க தரிசியாகவும் இருந்திருக்கவேண்டும். விஜயன் உறுதியுடனும் மகத்துவத்துடனும் நிற்கும் அற்புதமான காட்சியுடன் அந்தக் காவியம் முடிவடைகின்றது: 'அச்சுதா! உங்களுடைய அருளால் எனது மயக்கம் ஒழிந்தது; உங்களை நான் உணர்ந்து கொண்டேன்; எனது சந்தேகங்கள் தீர்ந்தன; நான் உறுதியுடன் இருக்கிறேன்; உங்களுடைய கட்டளைப்படி நான் நடந்து கொள்வேன்?'

"வேத கீதங்கள் அடங்கிய அந்த நூலை நான் வாசித்து முடிக்கும்போது, அது என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து எதிரொலிக்கின்றது. அவரை, மகோன்னதமாகவும் மகோன்னதம் அல்லாததாகவும் உள்ள பரம்பொருளைக் கண்டதும் உள்ளத்தில் ஏற்பட்ட சிக்கல்கள் மறைந்தொழிந்தன; சந்தேகங்கள் யாவும் தீர்ந்தன; மனிதன் உள்ளத்தில் மறைந்துகிடக்கும் ஆசைகள் யாவும் நாசமாயின."

ஹிந்து சமய தத்துவத்திலிருந்து எழுந்த பகவத் கீதை, கீழ்த் திசையிலேயே ஆஸ்திகக் கொள்கை பரவுவதற்கான ஒரு புதிய சகாப்தம் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்தது. அக்கொள்கை இந்தியாவிலும், முற்றிலும் வேறான சந்தர்ப்பங்களில் மேநாடுகளிலும் இரட்டைத் தாக்குதல்களை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. அவற்றில் ஒன்று, முற்றிலும் உள் ஆராய்ச்சியில் ஈடுபடுவதும், மற்றொன்று, கலப்பற்ற ஸ்தூல வாழ்வில் அல்லது வெளியுலக விவகாரங்களில் ஈடுபடுவதும் ஆகும். ஞானிக்கும், பணத்தையே தெய்வமாகக் கருதுபவனுக்கும் இடையே எப்போதும் தகராறு இருந்துவருவதே மனிதனின் அனுபவமாகும். இந்த இரண்டு தீவிர நிலைகளுக்கு இடையே, கீதை அற்புதமான புதிய வழியை, ஒரு புதிய ஒளியைக் காட்டுகிறது. அதாவது, கடவுள் உருவத்துடன் காட்சி அளிக்கிறார். அதுபோலவே, மனிதனும் தனக்கு தெய்விகமான இயல்பு இருப்பதையும், அதன் மூலம் தான் நலனை அடைய முடியும் என்பதையும் உணருகிறான்.

11-ஆவது அத்தியாயத்தில் உள்ள 55-ஆம் சுலோகத்தில் தான், கீதையின் சாரம் முழுவதும் அடங்கியிருக்கிறது. "எனக்காகச் செயல் புரிபவனும், என்னையே தன்னுடைய மகோன்னதமான லட்சியமாகக் கொண்டவனும், விஷயங்களில் ஆசையைத் துறந்தவனும் யாரோ அவன் என்னிடம் வந்து சேருகிறான்" என்று அந்த சுலோகம் கூறுகிறது.

காந்திஜியின் வாழ்க்கையும், குணங்களும் அந்த சுலோகத்தை அடிப்படையாகக் கொண்டே உருவாயின.

கீதை, மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிலும் ஆறு அத்தியாயங்கள் இருக்கின்றன. பதினெட்டு அத்தியாயங்களுள், முதல் அத்தியாயத்தில் தான் அர்ஜுனனுக்கு ஏற்பட்ட சந்தேகங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. நடைமுறையிலும், தினசரி வாழ்க்கையிலும் ராணுவக் கொடுமைகளைச் சகித்துக் கொண்டிருப்பது தீங்கேயாகும். அதனுல்தான், காந்திஜி தமது பிற்கால வாழ்க்கையில் இந்தியர்களின் துன்பங்களை பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்க முடியவில்லை. தென்னுப்பிரிக்காவிலும் சரி, இந்தியாவிலும் சரி, அல்லது வேறு எந்த இடத்திலும் சரி, ஆசியா மக்கள் இடைவிடாமல் சுரண்டப்படுவதைப் பார்த்துக் கொண்டு வாளாவிருக்க அவர் விரும்பவில்லை. எனினும், அதைத் தடுக்க பலாத்காரத்தில் நம்பிக்கை வைப்பது தீமையாகும். ஏனெனில், பலாத்காரத்தை பலாத்காரத்தினுல் அடக்குவது முடியாத காரியம். அதனுல்தான், கத்தியினுல் வாழ்பவன் கத்தியினுலேயே அழிவான் என்று ஏசு நாதர் கூறினுர்.

சாட்டர்ஜி கூறுவதாவது: ''தீமை, தீமையின் மூலமே ஆதரவைத் தேட நேரும். ஆனுல் நற்செயலோவெனில், உலகம் முழுவதற்கும் பொதுவான உயர்ந்த கொள்கைகளைச் சார்ந்திருக்கிறது. தீங்கு செய்வோரின் பலத்தையே தீமை நம்ப வேண்டியிருக்கிறது. ஆனுல் நன்மையோ, தர்மத்திலுள்ள நம்பிக்கையிலிருந்து பலம் பெறுகின்றது. தீமை தனி நபரைப் பொறுத்தது; ஆனுல், நன்மையோ உலகம் முழுவதற்கும் பொதுவானது. ஒரு நல்ல மனிதன், தனக்கு மேலேயுள்ள ஒரு சக்தியினுல் தான் பாதுகாக்கப்படுவதை உணருகிருன். என்ன நேருவதாயினும், தான் உறுதியுடன் நம்பிக்கை வைத்துள்ள கொள்கைகள் நிலைத்து நிற்பவை என்பதை அவன் அறிகிருன். ஆனுல், தீங்கு செய்பவனுக்கு அத்தகைய நம்பிக்கை இருப்பதில்லை. ஏனெனில், அவன் ஏதோ குறிப்பிட்ட பொருளை நாடுகிருன். அதை அடைவதற்கான தீயவழிகள் நிலைத்து நிற்பவையா என்பதைப்பற்றி அவன் கவலைப்படுவதில்லை. ஏனெனில், அவன் விரும்பும் பொருளை அவன் இழந்துவிட்டால், அத்தகைய அறிவினுல் அவனுக்கு யாதொரு ஆறுதலும் ஏற்படுவதற்கில்லை!''

கீழ்த்திசை நாடுகளிலோ அல்லது மேனாடுகளிலோ மத சம்பந்தமான விஷயங்களில் உள்ள அறிவுக் குழப்பமே, எல்லாக் கஷ்டங்களுக்கும் ஆணி வேராக இருக்கின்றன. அந்தக் கஷ்டங்களை அறவே தீர்க்க கீதை உதவியாக இருக்கிறது. அதுதான் கீதையின் சிறப்பாகும். வைதிகமான அல்லது மேலெழுந்தவாரியான விளக்கங்களைக் காட்டிலும் காந்திஜியின் வாழ்க்கையும் கொள்கைகளுமே அதற்குச் சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றன.

அந்த மனக் குழப்பம் வெறும் கற்பனை அல்ல. யாரால் உயிர்களுக்கும் மக்களின் நலனுக்கும் உடனடியாக அபாயம் ஏற்படக் கூடுமோ, அத்தகையோரை அழித்துவிடுவது அனுமதிக்கப்பட்டிருக்கிறது. எனினும், உயிருக்குப் பாதகம் விளைவிப்பது மகத்.

தான பாவம் என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. யுத்தம் செய்வது அர்ஜுனனின் கடமை. அது தெய்விகமான கட்டளையை அடிப்படையாகக் கொண்டது என்று கீதையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சாதி முறை ஏற்பட்டிருப்பதற்கும் அக் கட்டளையே காரணம். இதைத்தான் மேனாட்டினர் அறிந்து கொள்வது கஷ்டமாக இருக்கிறது. அர்ஜுனன், க்ஷத்திரிய வகுப்பை அல்லது ஆட்சி புரியும் சாதியைச் சேர்ந்தவன். அவன் தனது இயல்பான கடமையை அனுசரித்தும் நடந்து கொள்ள வேண்டியவனாக இருந்தான்.

காந்திஜியும், குறிப்பாக இந்த அம்சத்தின் அவசியத்தைத் தான் மக்களிடம் வற்புறுத்தி வந்தார். ஒருவன் தனது இயல்பான கடமையைச் செய்வதில் உண்மையாக நடந்து கொள்ளாவிடில், அவன் வேறு எதிலும் உண்மையாக நடந்து கொள்ளமாட்டான். பரம்பரை வழக்கமும் பண்பும், அவன் சில கடமைகளைச் செய்து தீரவேண்டும் என்று வற்புறுத்துகின்றன. அவற்றிலிருந்து அவன் தப்ப முடியாது. எனவே, ஒரு முஸ்லிம் முஸ்லிமாகவே இருப்பது போலவும், ஓர் ஆங்கிலேயர் ஆங்கிலேயராகவே இருப்பது போலவும், ஓர் ஹிந்து ஹிந்துவாக இருந்து தீர வேண்டும். மனித வர்க்கத்தின் ஆன்மிகப் பிரச்னைகளை, ஒருவர் பலாத்கார முறையினால் தமது விருப்பத்திற்கிணங்க மாற்றிவிட முடியாது. உடைகளைப்போல் கொள்கைகளை, அவரவருக்குப் பொருத்தமாக இருக்கும்படி அறுத்துத் தைத்துவிட முடியாது.

எனினும் அதே சமயத்தில், தீமை தீமையே என்பதையும், அதைத் தவிர்க்க வேண்டியது அவசியம் என்பதையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். ரத்த வெள்ளம் ஓடுவதாக இருப்பினும், தமது கொள்கைகளை விட்டுக்கொடுக்க காந்திஜி விரும்பவில்லை. எனினும், அவர் எவ்வித பலாத்காரத்தையும், ரத்தக் களரியையும் அடியோடு வெறுத்தார்.

"இறப்பற்ற நிலையை அடைய ஒரு மனிதன் என்ன செய்ய வேண்டும் என்ற அறிவை, சாதி முறை மனிதனுக்கு வலியுறுத்துகிறது. குடும்பத்தின் கடமைகளையும், சாதியின் கடமைகளையும் எல்லோரும் அறிவர். அவை கண்டிப்பாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன. குறிப்பிட்ட ஒரு சாதியைச் சேர்ந்தவன், தன் கடமைகள் என்ன என்பதைக் கண்மூடித்தனமாகவும், தயக்கத்துடனும், தடுமாற்றத்துடனும் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை. தனக்கு வகுக்கப்பட்ட கடமைகளுடன் அவன் வாழ்க்கையின் மகத்தான பிரயாணத்தைத் தொடங்குகிறான். எனவே, சாதி முறையில் குழப்பத்தை உண்டாக்குவது, கப்பல் மாலுமிகளுக்கு உதவியாகக் கடலில் இருக்கும் அடையாளங்களை அகற்றிவிடுவதைப் போல தார்மிக ரீதியாகப் பெரும் தவறாகும்" என்று சாட்டர்ஜி விளக்கியுள்ளார். இந்தக் கருத்துக்கு உவமையாக, மேனாட்டு சமய நூல்களில் குறிப்பிடத் தக்கவாறு எதுவும்

இல்லை என்றாலும், தார்மிக அல்லது சமூக நெறிகளிலிருந்து வழுவுவதைக் காட்டிலும் கடமைகளாகிய சடங்குகளிலிருந்து வழுவுவது, அதிகமான தீங்கை விளைவிக்கும் என்று அறிஞர் எஸிகீல் மாத்திரம் கூறியுள்ளார்.

கீதையின் முதல் பிரிவு ஜீவான்மாவைப் பற்றியதாகும். ''ஆன்மாவைப்பற்றிய சரியான ஞானம்'' (சாங்கிய யோகம்) என்பதே இரண்டாவது அத்தியாயத்தின் தலைப்பாக இருக்கிறது. ''பகைவரைத் தவிக்கும்படி செய்யும் வல்லமை வாய்ந்த அர்ஜுனா, ஆண்மையற்ற இந்தப் பேச்சு உனக்குத் தகுதியல்ல. இழிவான இந்தக் கோழைத்தனத்தை உதறித் தள்ளிவிட்டு எழுந்திரு'' என்று கிருஷ்ணன் அர்ஜுனனைக் கடிந்து கொள்கிறார். தனி நபரின் ஆன்மா, அழிவற்ற பரமாத்மாவின் ஓர் அம்சமே. எனவே, உலகாயதமான விஷயங்களைக் குறித்து அதிகமாகக் கவலைப்படுவது அனாவசியம் ஆகும். அதனாலேயே கிருஷ்ணன் அர்ஜுனனைப் பார்த்து இவ்விதம் கூறுகிறார்: ''நீ பண்டிதனைப் போல் பேசுகிறாய் என்றாலும், யாருக்காக துக்கப்பட வேண்டிய அவசியம் இல்லையோ அவர்களுக்காக நீ துக்கப்படுகிறாய். ஆன்மிக விஷயங்களில் ஞானம் உள்ளவர்கள், இருப்பவர்களைக் குறித்தோ அல்லது இறந்தவர்களைக் குறித்தோ துக்கப்படமாட்டார்கள்."

இதை, இரக்கமற்ற உள்ளம் என்றோ அல்லது யோசனையற்ற பற்றின்மை என்றோ யாரும் கூற முடியாது. உண்மைத் தத்துவத்தையே கிருஷ்ணன் எடுத்துக் கூறியுள்ளார். ''உண்மையில் நானோ, நீயோ அல்லது இந்த மன்னர்களோ இராமல் இருந்ததில்லை; நாம் எல்லோரும் இனி இருக்க மாட்டோம் என்பதும் இல்லை'' என்றும் கிருஷ்ணன் கூறுகிறார்.

மனிதனும் கடவுளும் ஒரு நாணயத்தின் இருபுறங்களைப் போல் இருக்கிறார்கள். கடவுளிடத்தில் உள்ள எல்லையற்ற அம்சம் மனிதனிடமும் இருக்கிறது. ஆத்மா எல்லையின்றி விரிவடைந்தே பரமாத்மா ஆகிறது.

''இல்லாதது இருப்பதில்லை; இருப்பது இல்லாமற் போவதுமில்லை. இந்த இரண்டைப்பற்றிய முடிவும் உண்மையை அறிந்த ஞானிக்கே தென்படுகிறது'' என்றும், மேலும் ''ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இருக்கும் ஆன்மா அழிவற்றது, நிரந்தரமானது; ஆகையால், எந்தப் பிராணியைக் குறித்தும் நீ துக்கப்படவேண்டிய அவசியம் இல்லை'' என்றும் கிருஷ்ணன் கூறுகிறார்.

அர்ஜுனனின் கடமையை கிருஷ்ணன் வலியுறுத்தும்போது, ''ஒரு க்ஷத்திரியனுக்கு தர்ம யுத்தத்தைக் காட்டிலும் சிறந்தது வேறு எதுவும் இல்லை. ஆகையால், உன்னுடைய இயல்பான கடமையை நிறைவேற்றும் விஷயத்தில் நீ தடுமாறக் கூடாது'' என்று கூறுகிறார். எனவே, ஒருவர் தமக்கு ஏற்பட்டுள்ள இயல்பான கடமையை மறுத்து அதிலிருந்து தப்பித்துக் கொள்ள

முற்படுவது, கடவுளையே மறுப்பதாகும். கடவுள், தீமை நிறைந்த உலகைக் கடந்தவராக இருக்கிறார். அதனாலேயே காந்திஜி முன்னுக்குப் பின் முரணான முறைகளைக் கைக்கொள்ள நேர்ந்தாலும் சரி, தமது லட்சியம் சிறிது சிறிதாகக் கிடைப்பதாக இருந்தாலும் சரி, தமது ஆயுட்காலத்தில் தமது இயல்புக்கோ, ஆன்மிக ஞான வளர்ச்சிக்கோ முரணாக நடந்து கொள்ளக் கூடாது என்பதை உணர்ந்திருந்தார்.

வெளி உலக விவகாரங்கள் தவறான வழியில் சென்ற போதெல்லாம் காந்திஜி, தாம் உண்ணாவிரதம் இருந்ததுடன், தமக்குத் தாமே கட்டுதிட்டங்களைக் கடுமையாக்கிக் கொண்டார். அத்தகைய தவறான நிகழ்ச்சிகளுக் கெல்லாம் தம்மிடத்தில் உள்ள குறையே காரணம் என்றும், எனவே, அந்தக் குறையை அகற்றி தம்முடைய ஆன்மிக நிலையை பலப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றும் அவர் கருதினார். அவர், வெளியில் உள்ள உண்மை நிலையிலிருந்து ஓடித் தப்பித்துக் கொள்ள விரும்ப வில்லை; அதில் மேலும் தீவிரமாகப் பங்கு எடுத்துக்கொள்ளவே விரும்பினார். தனக்குத் தானே அதிகமான துன்பத்தை ஏற்றுக் கொள்வது, தெய்விக சக்தியைப் பெறுவதற்கான வழியாகும்.

உலகத்தின் நிரந்தர ஊழியரான கடவுள், தாம் படைத்த உயிர்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். அவைகள் நலன் பெற்று விளங்க வேண்டும் என்பதே அவரது விருப்பம். உயிர்களின் கஷ்டங்களைக் கண்டு அவரது இதயம் வேதனைக்கு உள்ளாகின்றது. தனக்குத் தானே துன்பத்தை ஏற்று உலகத் திற்குத் தொண்டு செய்பவருக்கும் அவருக்கும் தொடர்பு ஏற்படு வதற்கு அதுதான் காரணம்.

தனி நபரின் வாழ்க்கைக்கும் சமூகத்தின் நலனுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படும்படி செய்வதோ, அல்லது லௌகிக வாழ்க்கையின் நிலைக்கும் ஆன்மிக வாழ்க்கையின் நிலைக்கும் இடையே பிணைப்பு ஏற்படும்படி செய்வதோ, நிறுத்தலளவை யைப் போல் ஏற்றத் தாழ்வைச் சரிக்கட்டும் ஒரு முறையே.

தீய முறைகளின் மூலம் தீமையை எதிர்த்துப் போராடுவது, தீமைக்கு ஆக்கம் அளிப்பதாகும். அது போலவே, நல்ல முறை களைக் கொண்டு தீமையை எதிர்ப்பது தீமையைப் பலவீனப் படுத்துவதாகும். அதனாலேயே நல்ல முறைகள் வற்புறுத்தப் படுகின்றன. எனினும், தீமையுடன் சமரசம் செய்து கொள்வ தற்காக நல்ல முறைகளைத் தளர்த்திவிடக் கூடாது. தீமையை எதிர்ப்பது, அதிருப்திகரமாகவும், இணக்கத்திற்கு வழியின்றியும் இருக்கிறது என்பதற்காக, எதிர்ப்பைக் கைவிட்டுவிடவும் கூடாது. அவ்விதம் செய்வது, மனிதன் தனது இயல்புக்கும் உறுதிக்கும் முரணாக நடந்து கொள்வதாகும்.

நிரந்தரமான நல்ல முறைகளையே பின்பற்ற வேண்டும்; அதே சமயத்தில் தனி நபரின் இயல்புக்கும் நிலைக்கும் உகந்த

தர்மத்தைப் பின்பற்றவும் தவறக்கூடாது. இது ஒரு புதிர் போல் இருக்கிறது. ஹிந்துக்களிடையே கர்ம தத்துவம் என்றும், ஞான தத்துவம் என்றும் இரண்டுவித முறைகள் இருக்கின்றன. கலப்பற்ற ஞான தத்துவம் தான், மகோன்னதமான உண்மையை அறிவதற்குற்ற சரியான ஞானம் ஆகும். கலப்பற்ற ஞான தத்துவம் எனில், அதில் பயிற்சி பெற்ற ஞானிகள் எல்லாத் தீய குணங்களிலிருந்தும், வாழ்க்கையில் உள்ள ஆசைகளிலிருந்தும் விடுதலை அடைந்து முற்றிலும் தூய்மை வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள்.

கர்ம தத்துவம் என்பது, ஆன்மிக ஞானத்தை அடைவதற்கான முறையே. ஒரு மனிதன் வாழ்க்கையில் தனக்கு இடப்பட்டுள்ள சமய சம்பந்தமான, தார்மிகமான கடமைகளை விருப்பு வெறுப்பின்றியும், கடவுளுக்கு அர்ப்பணமாகவும் செய்வதே கர்ம தத்துவம் ஆகும். எவ்வித ஆசையும் இல்லாமல், வேறு எவ்வித சிந்தனையுமின்றி கடவுளைத் தியானித்த வண்ணம் கடமைகளைச் செய்யவேண்டும். இத்தகைய ஞானத்தை ஒருவர் பெற்றுவிட்டால், அவர் கர்ம பந்தங்களிலிருந்து விடுதலை அடைவார் என்று கீதை கூறுகிறது. கர்ம தத்துவத்தைப் பற்றிய ஞானம், ஒருவரை கர்ம பந்தங்களிலிருந்து விடுவிக்காது என்றாலும், கர்ம பந்தங்களை அறுக்கும் ஆன்மிக ஞானத்தைப் பெறுவதற்கான தூய்மை நிலையை அவர் அடையும்படி செய்கிறது. ஆன்மிக ஞானமும் கர்ம தத்துவ ஞானமும் ஒன்றேதான். ஏனெனில், லட்சியமும் அதை அடைவதற்கான முறைகளும் ஒன்றாக இணைந்து இருக்கக் கூடும் அல்லவா?

இந்தக் கொள்கை, மேநாட்டினர் புரிந்து கொள்ளக் கூடிய வாறு எளிதாக இருக்கிறது. அதாவது, வாழ்க்கையில் எதைச் செய்தாலும், கடவுளின் மகத்துவத்தை மனத்திற் கொண்டு செய்ய வேண்டும். தினசரி வாழ்க்கையில் ஆன்மிக மணம் திகழ வேண்டும் என்பதே அதன் கருத்தாகும். குறிப்பிட்ட பல்வேறு சடங்குகள், உணவு சம்பந்தமான விதிகள், ஆண்-பெண் சம்பந்தமான கட்டுப்பாடுகள் முதலியவற்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

வாழ்க்கையில் எல்லாவற்றையும் சமமாகக் கருதும் யோக சாஸ்திரத்தை அனுசரிக்க வேண்டும் என்று கீதை கூறுகிறது. வேறு எவ்வித சிந்தனையுமின்றி, கடவுளிடம் பக்தியுடன் ஒவ்வொரு கடமையையும் செய்ய வேண்டும்; வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கருதவேண்டும்; துன்பத்தைக் கண்டு கலங்கக் கூடாது; இன்பத்திற்கு ஆசைப்படவும் கூடாது; பற்றுதல், பயம், கோபம் ஆகியவற்றைத் துறந்துவிட வேண்டும். இத்தகைய ஞானி, புலன்களுக்கான சாதனங்களை நாடமாட்டார்; உடைமைகளை வைத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பமாட்டார். அதன் பலனாக, அவர் சுதந்திரமாக இருக்கும்படி, விவேகம் இல்லாதவர்கள் விரும்பும் பொருட்கள் யாவும் அவரை விட்டுவிடுகின்

றன. ஏனெனில், அவர் தமது உணர்ச்சிகளையும் உடல் சம்பந்தமான நடவடிக்கைகளையும் கட்டுப்பாட்டிற்குள் அடக்கி வைக்கும் சக்தி வாய்ந்தவராக இருக்கிறார். எவ்வித நிர்ப்பந்தங்களுக்கும் அவர் இடம் கொடுப்பதில்லை. கோபம், ஞாபக சக்தியின்மை, பகுத்தறிவின்மை போன்ற மதி மயக்கத்திலிருந்து அவர் தப்பித்துக் கொள்வதுடன், மனச் சாந்தியும் அடைகிறார். தமக்கு வெளிப் புறத்தில் உள்ள எந்தப் பொருளையும் அவர் விரும்பாததே, அவரது மனச் சாந்திக்குக் காரணம். அதன் பலனாக, அவரது துன்பங்களுக்கெல்லாம் ஒரு முடிவு ஏற்பட்டு விடுகிறது.

செயலற்ற நிலையில் அர்ஜுனன் பற்றுதல் வைக்கக் கூடாது என்று கூறும் மூன்றாவது அத்தியாயத்திற்கு, 'கர்ம யோகம்' என்ற தலைப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அத்தியாயத்தில், கிருஷ்ணன் அர்ஜுனனை எச்சரிக்கை செய்கிறார். அவனுக்கு பொறுப்பு உணர்ச்சி குன்றிவிடக் கூடாது என்றும், அவன் உயர்ந்த செயலிலோ அல்லது சக மனிதர்களுக்கு உதவியாக இருக்கக் கூடிய செயலிலோ ஈடுபட வேண்டியது அவசியம் என்றும் கிருஷ்ணன் அவனுக்குக் கூறுகிறார்.

சக மனிதர்களிடத்தில் காந்திஜிக்கு இருந்த அனுதாபமே அவரது விசேஷ குணமாகும். தம்மைச் சுற்றியுள்ள உலகத்தின் பயங்கரமான நிலையிலிருந்து அவர் விடுதலை பெற்றிருந்தார் என்றாலும், சமூகத்திற்குத் தம்மால் இயன்ற தொண்டைச் செய்ய வேண்டும் என்ற பொறுப்பை அவர் தட்டிக் கழித்துக் கொண்டு விடவில்லை. காந்திஜி, தமது ஆயுட்காலம் முழுவதும் இந்த உலகில் உள்ள விஷயங்களில் அதிகமாக அக்கறை கொண்டிருந்தார். தமக்கு நிர்வாணத்தை அதாவது மோட்சத்தைத் தேடிக்கொள்வதைக் காட்டிலும், இந்தியாவில் உள்ள வாயில்லாத கோடிக் கணக்கான மக்களின் துன்பத்தைத் தீர்ப்பதற்கான போராட்டத்தில் ஈடுபடுவதையே மேலானதாகக் கருதினார்.

யுத்தத்தில் கொடிய செயல்கள் புரிய வேண்டியிருப்பதைக் குறித்தே அர்ஜுனன் துக்கமடைந்தான். ஆனால், இச்சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். அத்தகைய நிலை, அவன் தானாகத் தேடிக்கொண்டது அல்ல. சந்தர்ப்பங்களே அவனைத் தன் விருப்பத்துக்கு விரோதமாக அச் செயல்களில் ஈடுபடும்படி வற்புறுத்திவிட்டன. இங்கேதான், கர்மம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள முடிகின்றது.

ஒரு மனிதன் செயலில் (கர்மம் செய்வதில்) ஈடுபடாமல் இருப்பதால் மாத்திரம் அதிலிருந்து விடுதலை பெற்றுவிட முடியாது என்பதையும், செயலைத் துறப்பதால் மாத்திரம் லட்சியத்தை அடைந்துவிட முடியாது என்பதையும் கிருஷ்ணன் விளக்குகிறார். "உண்மையில் ஒருவர் கூட கர்மம் செய்யாமல் ஒரு விநாடி கூட இருக்க முடியாது. கர்மம் செய்யாமல் இருக்க

யாருக்கும் சுதந்திரம் இல்லை. பிறவிக் குணங்களுக்கு உகந்த வாறு செயல் புரியவே எல்லாப் பிராணிகளும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன'' என்றும் கிருஷ்ணன் கூறுகிருர். செயல் புரியும் போது ஒரு மனிதனின் நிலை எப்படி இருக்கவேண்டும் என்பதே, கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயமாக இருக்கிறது. கடவுளுக்காகச் செய்யப்படாத கர்மங்கள் யாவும் மனிதனை பந்தத்திற்கு உள்ளாக்குகின்றன. ''குந்தியின் மகனே, பற்றுதலின்றி, கடவுளுக்காக எல்லாக் கடமைகளையும் செய்'' என்கிருர் கிருஷ்ணன்.

இந்தக் கருத்தை, 'ஞான, கர்ம, சந்நியாச யோகம்' என்ற தலைப்புடன் கூடிய நான்காவது அத்தியாயம் மேலும் விரிவாக விளக்குகின்றது. கடவுளை நோக்கிச் செல்லுவது எப்படி என்பதை, இந்த அத்தியாயத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்தக் கருத்தை, 'யார் சிலுவையை ஒப்புக் கொள்கிருனே, அவன் கடவுளை நோக்கிச் செல்லுகிருன்' என்ற கிறிஸ்தவர்களின் நம்பிக்கைக்கு உவமையாகக் கூறலாம். கீதை கூறும் தெய்விகமான அவதாரம், அது போன்றதேயாகும். அதாவது, கடவுள் மனிதனைப் போல் உருக்கொண்டு வருகிருர். ஏனெனில், மூலாதாரமான அம்சங்களில் கடவுளுக்கும் மனிதனுக்கும் வேற்றுமை இல்லை அல்லவா?

இந்த தெய்விக அவதாரத்தைப் பற்றியும் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இவ்விதம் விளக்குகிருர்: ''நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், எல்லா உயிர்களுக்கும் ஈசன். இருந்தாலும் ஆராய்ந்து அறிய முடியாத என்னுடைய சக்தியினலும், இயற்கையைக் கட்டுப்படுத்தும் சக்தியினலும் நான் பிறக்கிறேன்.''

ஆன்ம சக்தி வெளிப்புற நிர்ப்பந்தத்தினல் ஏற்படுவது அல்ல, உள் ஒளியினல் ஏற்படுவதாகும்.

''அர்ஜுன, என்னுடைய தெய்விகப் பிறப்பு, எனது அலுவல்கள் முதலியவற்றின் உண்மையை யார் அறிகின்ருனே அவன் இந்த உடலைத் துறந்தபின் என்னிடம் வருகிருன். அதன்பின் அவனுக்கு மறுபிறப்பு இல்லை'' என்று கிருஷ்ணன் கூறுகிருர். இதுவே விடுதலை (மோட்சம்) ஆகும். மறுபிறப்பு என்பது, மீண்டும் மீண்டும் பிறப்பது மாத்திரம் அல்ல; மனிதன் தன்னுடைய குற்றம் குறைகள் காரணமாக அர்த்தமின்றி மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதையும், பிறப்பு இறப்பாகிற தீய சுழல்களில் சிக்கி அவதிப்படுவதையுமே குறிக்கிறது. அவனது இயல்பின் நிலையும், சமூகம் அல்லது சாதியின் நிலையும், அவன் தானகவே உண்மையை உணர்ந்து தனது போக்கை மாற்றிக் கொள்ளும் வரையில், அடிக்கடி ஜன்மம் எடுக்கும்படி அவனை வற்புறுத்துகின்றன.

தனி நபரின் சக்திக்கு எல்லைகள் உண்டு. அவ்விஷயத்தில் வெளி உலகம் அவருக்கு ஆதரவாக இருக்கிறது. இதை எல்

லோரும் தெளிவாக அறிவர். ஆனால், அவர் இன்னும் அதிக சக்தியைப் பெறவும், அந்த சக்தியை அடிப்படையாகக் கொண்டு அவர் செயல்கள் புரியவும் கூட அதே வெளி உலகம் அவருக்கு ஆதரவாக இருக்கும் என்பதைப் பலரும் உணர்ந்து கொள்வதில்லை. தெய்விக அவதாரங்கள் என்பது, கிருஷ்ணன்களுக்கும் காந்திகளுக்கும் மாத்திரம் ஏற்பட்டதல்ல. "யார் எந்த முறையில் என்னை அணுகினாலும், அதே முறையில் அவனை நான் அணுகுகிறேன்" என்கிறார் பகவான். உலகத்தில் உள்ள தீமைகளை எதிர்க்கவும், சிறந்தவற்றை எல்லோருடனும் ஆர்வத்துடன் பகிர்ந்து கொள்ளவும் மனிதர்கள் ஒன்று சேருவார்களாயின், மனித வர்க்கத்தின் துன்பங்கள் குறைய வழி உண்டாகும். காந்திஜி உபதேசிக்கும் இந்த அகிம்சையின் மூலம் அப்போது மிகுந்த பலன் ஏற்படும்.

கீதையின் ஐந்தாவது அத்தியாயத்திற்கு, "கர்மங்களைத் துறப்பது பற்றிய சரியான ஞானம்" (சந்நியாச யோகம்) என்ற தலைப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஞானமாகிய ஒளியை அடைவதற்கான வழிகள், பல்வேறு இயல்புகளுக்குத் தகுந்தவாறு பல்வேறு விதமாக இருக்கின்றன. இந்த வேற்றுமைகளை, மகத்தான யாத்திரையின் பல்வேறு கட்டங்கள் என்று கூறுவதற்கும் இடம் இல்லை. முதலில் கர்மங்களில் ஈடுபட்டு வாழ்க்கையை நடத்தும் ஒருவர், பிற்காலத்தில் கர்மங்களைத் துறக்கிறார் என்று கூறுவதும் சரியல்ல. ஒருவர் ஒரே சமயத்தில், கர்மங்களில் ஈடுபட்ட வண்ணம் கர்மங்களைத் துறக்கும் ஆற்றல் பெற்றவராக இருக்க வேண்டும்.

கர்மங்களைத் துறப்பதையும், அதே சமயம் கர்மங்களைச் செய்வதையும் கிருஷ்ணன் புகழ்வதாக அர்ஜுனன் கூறுகிறான். அவ்விரண்டில் எது சிறந்தது என்றும் அவன் கிருஷ்ணனைக் கேட்கிறான். "கர்மங்களைத் துறப்பது கர்மங்களை ஒழுங்காகச் செய்வது இரண்டுமே மகத்தான நன்மையை அளிக்கக் கூடியவை. என்றாலும், அந்த இரண்டிற்குள். கர்மங்களைத் துறப்பதைக் காட்டிலும் அவற்றை ஒழுங்கான முறையில் செய்வதே சிறந்தது" என்று கிருஷ்ணன் கூறுகிறார்.

எனவே, கர்மங்கள் செய்வதில் காந்திஜி ஈடுபட்டதற்கும், உலகத்தில் அமைதி ஏற்படும்படி செய்வதற்கான ஒரு முறையாக முதலில் தீண்டாதாரை உய்விக்க முற்பட்டதற்கும் தகுந்த ஆதாரம் இருக்கிறது. எனினும், கர்மங்களில் ஈடுபடுவது சிறந்ததா அல்லது கர்மங்களைத் துறப்பது சிறந்ததா என்பதைச் சீர் தூக்கிப் பார்க்க முற்படுவது வீண் வேலையாகும். ஏனெனில், இந்த இரண்டிற்கும் வேற்றுமை இல்லை என்பதைக் கிருஷ்ணன் பின்வருமாறு விளக்கியிருக்கிறார்:

"கர்மங்களை ஒழுங்கான முறையில் செய்ய முற்படும் எவனும், விருப்பு வெறுப்பற்ற, உண்மையில் இருமைகளைக் கடந்த

துறவியே ஆவான். பந்தங்களிலிருந்து அவன் எளிதில் விடுதலை பெறுகிறான். கர்மங்களை ஒழுங்கான முறையில் செய்வதும், துறவும் வெவ்வேறானவை என்று மூடர்களே கூறுவர். அந்த இரண்டில் ஒன்றை அப்பழுக்கற்ற முறையில் ஒழுங்காக அனுசரிப்பவன், இரண்டினாலும் ஏற்படும் பலனை அடைகிறான்.''

உண்மையில், துறவு கூட ஒரு கர்மமே ஆகும். இறைவனுடன் லயிக்க முற்படுவதும் ஆன்மிக சம்பந்தமான கர்மமே. அதை, செயலற்ற நிலை என்று ஒரு போதும் கூற முடியாது. ''கர்மங்களை ஒழுங்கான முறையில் செய்யாமல் உண்மையான துறவு நிலையை அடைவது கடினமாகும். ஒழுங்கான முறையில் கர்மங்களைச் செய்யும் பக்தன், விரைவிலேயே உண்மையான துறவு நிலையை அடைகிறான்'' என்றும் கிருஷ்ணன் கூறுகிறார். கர்மமும் துறவு நிலையும் இரண்டறக் கலக்கும் உண்மையான இயல்பு, அற்புதமான அழகு வாய்ந்த சுலோகங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதற்கிணங்க வாழ்வதே, துறவு நிலையை அடைவதற்கான வழியாகும்.

இந்த பூமியில், உயிர் பிரியும் வரையில் எந்த மனிதன் ஆசையிலிருந்தும் கோபத்திலிருந்தும் எழும் சக்திகளைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றிருக்கிறானோ, அவன்தான் சரியான ஞானம் உள்ளவன், அருள்பெற்றவன் ஆவான். அவன் உள்ளத்திலிருந்தே அவனுக்கு ஆனந்தம் ஏற்படும்; உள்ளிருந்தே அவனுக்கு ஒளி உண்டாகும்; அவன் தன்னைச் சூன்யமாக்கிக் கொண்டு எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளில் லயித்துவிடுவான். அப்பழுக்கற்ற சரியான ஞானம் உள்ள முனிவனே அத்தகைய நிலையை அடைவான். அவனது பாவங்கள் எல்லாம் தீர்ந்துவிடும்; புலன்களும் உறுப்புகளும் அவனது கட்டுப்பாட்டிற்குள் இருக்கும்; எல்லாப் பிராணிகளும் நலன் பெறவேண்டும் என்பதில் அவன் ஈடுபாடு உள்ளவனாக இருப்பான்.

ஐந்தாவது அத்தியாயத்தின் இறுதியில் உள்ள மூன்று சுலோகங்களில் யோகப் பயிற்சிகள்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த யோகப் பயிற்சிகளைப்பற்றிய விளக்கங்களை ஆறாவது அத்தியாயத்தில் காண்கிறோம். கீதையின் முதற் பிரிவு இத்துடன் முடிகின்றது.

கீதையின் இரண்டாவது பிரிவு, தனி நபரின் ஆன்மாவுக்கும் உலகம் முழுவதும் வியாபித்துள்ள ஆன்மாவுக்கும் உள்ள பாகுபாட்டை விவரிக்கின்றது. இதை யொட்டி சாட்டர்ஜி கூறுவதாவது:

''தெய்வ ரகசியத்தைப்பற்றிய விவரங்கள் ஏழாவது அத்தியாயத்தில் ஆரம்பமாகின்றன. கடவுள், குணங்களைக் கடந்தவர் என்பதும், உலகத்தில் உள்ள எந்தப் பொருளுக்கும் அவருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதுமே கலப்பற்ற உண்மையாகும். எனினும், கடவுளுக்குப் புறம்பான எல்லாம் பொய்யே.

இந்த உண்மையை உணர்ந்து கொள்ளும் வரையில், மனிதன் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதில்லை. இந்த உண்மையை உணர்ந்து கொள்வதையே, எல்லா மதங்களும், எல்லாத் தத்துவங்களும், ஞானத்தை அடைவதற்கான எல்லாப் பயிற்சிகளும் மகோன்னதமான லட்சியமாகக் கொண்டுள்ளன. கற்பனைக்கு எட்டாத கடவுளை அணுகும் முறைகள் பல்வேறு விதமாக இருக்கின்றன. எல்லோரும் கடவுளை அணுகவேண்டும் என்பதே அவ்விதம் இருப்பதன் நோக்கமாகும். ஆன்மிகப் பண்பாட்டைப் பொறுத்தமட்டில் மனிதர்களை மூன்று பிரிவினராகப் பிரிக்கலாம்.

"முதலாவதாக, வார்த்தைகளின் மூலம் விவரிக்கப்பட்டுள்ள கடவுளை உணர்ந்து கொள்ளும் ஆற்றல் உடையவர்கள். இவர்களுக்கு, கடவுளைத் தவிர மற்றவையெல்லாம் போலியாக அல்லது மாயையாகத் தோன்றுகின்றன. இத்தகைய பக்தர்களுக்கு, மெய்ப்பொருளை அறிந்துகொள்வதற்குப் பூர்வாங்கமான பயிற்சி எதுவும் தேவையில்லை. ஒரு பொருளைக் கண்ணால் பார்ப்பது போலவே, தூய்மையான அந்த ஆத்மாக்கள் தத்துவ நூல்களில் விவரிக்கப்படும் கடவுளைக் காண்கின்றனர். ஒருவர் கண் எதிரில் காணும் பொருளுக்கு, சிந்திக்க வேண்டிய தேவை எதுவும் இல்லை. அதுபோலவே, மேலே குறிப்பிட்டவர்கள் கடவுளைப்பற்றிய உண்மையான ஞானத்தைப் பெறுவதற்கு, கர்மயோகப் பயிற்சிகளில் ஈடுபட வேண்டிய அவசியம் இல்லை. ஒரு பொருளைப் பார்ப்பவர்கள் அது இருப்பதை உணருவது போலவேயே, ஆன்மிக ஞானம் உள்ளவர்கள் மெய்ப்பொருளைக் காண்கின்றனர்,

"இரண்டாவதாக, குணங்களுக்கு உட்பட்டு உலகாயதமான விஷயங்களில் ஈடுபடுவோர். இவர்கள், மெய்ப்பொருளின் சக்தியை அறிந்து கொள்வதில்லை என்றாலும், ஆன்மிக உண்மைகளில் இவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாக இருக்கிறார்கள்; ஒரே மனத்துடன் அவற்றைப்பற்றி தியானம் செய்யும் ஆற்றல் பெற்றவர்களாகவும் இருக்கிறார்கள். கடவுள் எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் என்பதையும், உண்மையான ஆன்மாவும் கடவுளும் ஒன்றே என்பதையும் அவர்கள் உணருகிறார்கள். அவர்கள் அதை நம்புகிறார்கள்; ஆனால் அதை அறிந்து கொள்வதில்லை.

"மூன்றாவதாக, ஆசைகள் காரணமாக தங்கள் மனத்தை மெய்ப்பொருளில் நிலைநிறுத்த முடியாதவர்கள். இந்த பக்தர்கள் அன்புடன் கடவுளைப் பூஜை செய்கிறார்கள். மனித உருவத்திலும் ஆச்சரியகரமான இயற்கையின் பல்வேறு உருவங்களிலும் அவர்கள் கடவுளை நாடுகிறார்கள். கடவுளை வணங்கும் எல்லோருடனும் அவர்கள் சகோதர அன்புடன் வாழ்கின்றார்கள்; கடவுளைப் பற்றிப் பேசுகிறார்கள்; எல்லாப் பிராணிகளும் சுகமாக வாழ வேண்டும் என்று விரும்புகிறார்கள்; தங்களுடைய சொந்த விருப்பு வெறுப்புகளைத் தள்ளிவிட்டு கடவுளுக்காக நல்ல காரி

யங்களைச் செய்கிருர்கள். இந்தப் பிரிவில், ஆன்மிக வளர்ச்சியில் பல்வேறு கட்டங்களை எட்டியுள்ள நபர்கள் இருக்கின்றனர். இந்த பக்தர்கள் யாவரும் நிர்வாணத்தை (மோட்சத்தை) அடைகின்றனர்.''

''ஆயிரக்கணக்கானவர்களில் யாராவது ஒருவர் தான் அப்பழுக்கற்ற நிறை நிலையை அடைய முயற்சிக்கின்றனர். அவ்விதம் முயற்சிப்பவர்களில் யாராவது ஒருவர்தான் என்னை உண்மையில் அறிகின்றனர்'' என்று கிருஷ்ணன் கூறுகிருர். எனினும், அவ்விதம் பலரில் ஒருவர்தான் ஆன்மிக ஞானத்தை அடைவதற்குத் தகுதி வாய்ந்தவராக இருக்கிருர் என்பது அதன் அர்த்தம் அல்ல. அத்தகைய அபூர்வமான ஒருவர்தான் சகமனிதர்களுக்குத் தொண்டு செய்யும் ஆற்றல் பெற்றவராக இருக்கிருர் என்பதும், எல்லா முறைகளையும் காட்டிலும் சிறந்த இந்த முறைதான் கடவுளைக் காண உதவி புரிகிறது என்பதுமே அதன் பொருள்.

ஆன்மிக சம்பந்தமான உண்மைகளை நடைமுறையில் அனுசரித்துக் காட்டுவதே அவதாரங்களின் முக்கிய நோக்கமாகும். மனிதர்களின் ஆர்வத்திற்குத் தகுந்தவாறு அந்த உண்மைகள் மாறக்கூடியவையாகவும், பல்வேறுவிதமானவையாகவும் இருந்து வருகின்றன. அதனல்தான் காந்திஜியைப் போன்ற ஒருவரிடம் கூட மேலெழுந்தவாரியான முரண்பாடுகள் இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆனல் அந்த முரண்பாடுகளுக்கு அடிப்படையில், மாறுதலற்ற உண்மையைத் திட்டவட்டமாக உணர்ந்து கொள்ளும் அபூர்வ சக்தி இருப்பதைக் காண்கிருேம்.

பரம்பொருளுடன் மனிதன் ஐக்கியம் அடைவதுபற்றி எட்டாவது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. தியானம் செய்வோர், தியானம் செய்யப்படும் பொருளுடன் லயித்து ஒன்ருகிவிடுவதே தியானத்தின் சிகரம் ஆகும். அதையே வாழ்க்கையின் லட்சியமாக ஹிந்துக்கள் கருதுகின்றனர். ஆனல் ஞானத்தைப்பற்றிய மேனாட்டினரின் விளக்கம், வேதாந்த தத்துவத்திற்கு நேர்மாருனதாக இருக்கிறது. வெளித்தோற்றத்தையே காணும் மனம், இந்த உலக வாழ்க்கையையே உண்மையான நரகமாகச் செய்து விடுகிறது. உட்புறமாக நோக்கி, எல்லோரிடமும் அன்பு செலுத்தும் மனத்திற்கு இந்த உலகம் சொர்க்கமாக இருக்கிறது. அகந்தை, பொருமை ஆகியவற்றின் விளைவுகளைத் தவிர்க்க விரும்பும் அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் அளிக்கும் பதில் இதுதான்.

ஒன்பதாவது அத்தியாயத்திற்கு ''ராஜ ரக்சிய யோகம்'' என்று தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. தியான முறைகளைப் பற்றி அதில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அதாவது ஒவ்வொரு மனிதனும் அவனது சிந்தனையின் எல்லைக்கு உட்பட்டு இவ்விஷயங்களை அறிந்து கொண்டு, உலகில் அவனது ஆன்மிக நிலைக்குத் தகுந்தவாறு அவன் தன் கடமையை நிறைவேற்றலாம்.

பத்தாவது அத்தியாயத்திற்கு, "தெய்விக சக்தி யோகம்" என்ற தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு யுகத்திலும், ஒவ்வொரு காலத்திலும் உள்ள சிந்தனையாளர்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை அந்த அத்தியாயம் குறிப்பிடுகிறது. கடவுளும் பிரபஞ்சமும் ஒரே பொருளைக் குறிக்கும் இரண்டு பெயர்களே எனில், பல்வேறு சொற்களும் பலனற்றவை என்று ஆகிவிடுகின்றன; உண்மையான ஆராய்ச்சியில் உள்ள அக்கறையும் மழுங்கி விடுகின்றது. பிரபஞ்சமும் கடவுளும் ஒன்றே எனில், பின்னர் இயற்கையையே உயர்ந்ததாக எண்ணி, ஆன்மிக சக்திகளை விட்டுக் கொடுக்கும்படி நேருகிறது.

தெய்விக சிருஷ்டி கர்த்தாவான கடவுளை அவன் மனம் அங்கீகரிக்கும் போது கூட, உலகாயதமான ஸ்தூல சக்தியை உயர்வானதாக அவன் கருதுகிறான். சாஸ்திரம் கூறும் கடவுள் அல்ல, ஏதோ கடவுள் இருக்கிறார் என்பதை கண்மூடித்தனமாக ஒப்புக் கொள்ளுவோர், தங்களுடைய பொருளாதார வாழ்க்கையில் ஸ்தூல சக்திகளே ஆட்சி புரிவதாகக் கருதுகின்றனர். ஆனால் இதற்கு மாறாக, கடவுள் உருவம் உள்ளவர். ஒவ்வொருவரும் தனித்தனியாக அவரை அணுகலாம். இந்த இடத்தில் தான், இந்திய சரித்திரத்தில் காந்திஜியைப் போன்ற மகான்கள் தோன்றுவதை ஆஸ்திகக் கொள்கை உள்ளவர்கள் ஆதரிக்க முன்வருகின்றனர்.

பதினோராவது அத்தியாயத்தில் விசுவரூப தரிசனம் அடங்கியிருக்கிறது. ஆன்ம ஞானத்தைப் பெறுவதற்கான கருவி, காலமே என்பதை நிரூபிப்பதே, அந்த அத்தியாயத்தின் நோக்கம் ஆகும். "விறுகொண்டு எழுந்து புகழை அடைவாயாக; பகைவர்களை வென்று விரோதிகளே இல்லாத சாம்ராஜ்யத்தை அடைவாயாக." என்று கிருஷ்ணன் கூறுகிறார். பன்னிரண்டாவது அத்தியாயம் பக்தி யோகத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. உலகத்தின் ஆன்மாவாகத் திகழும் கடவுளைப் பூஜிப்பதே மோட்சத்தை அடைவதற்கான வழி என்று அந்த அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

தனி நபரின் ஆன்மாவுக்கும் உலகத்தின் ஆன்மாவுக்கும் இடையே உள்ள தொடர்பை, கீதையின் மூன்றாவது பாகம் விவரிக்கின்றது. மனிதனாகிய சிற்றண்டமும் உலகமாகிய பிரமாண்டமும் ஆன்மிக அடிப்படையில் உருவானவை; ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பு உடையவை. பதின்மூன்றாவது அத்தியாயத்தில், அழியக் கூடிய உடல் அல்லது க்ஷேத்திரத்திற்கும், அழிவற்ற க்ஷேத்திரக்ஞன் அதாவது க்ஷேத்திரத்தை அறிந்தவனுக்கும் இடையே உள்ள தத்துவம் விளக்கப்பட்டிருக்கிறது. சாதாரண மனிதனுக்கு, உடல் இயற்கையின் பிரதிநிதியாகவும், ஆன்மா கடவுளின் பிரதிநிதியாகவும் இருக்கின்றன.

பதினுன்காவது அத்தியாயத்தில் நல்ல குணங்களைப் பற்றியும், தீய குணங்களைப் பற்றியும், பதினைந்தாவது அத்தியாயத்தில் மோட்சம் அடைவதற்கான ஒரே வழியைப் பற்றியும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பதினுருவது அத்தியாயம், தெய்வ, அசுரத் தன்மைகளைப் பற்றி விவரமாகக் குறிப்பிடுகிறது. நம்பிக்கையின், சிரத்தையின் மூன்றுவிதமான பிரிவுகளைப் பற்றி பதினேழாவது அத்தியர்யத்தில் காண்கிறோம். மனிதன் உயர்ந்த நிலையையோ அல்லது தாழ்வையோ அடைவதற்கு அவனது நம்பிக்கை அல்லது சிரத்தையே காரணம் என்ற முக்கிய விஷயம் அந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

ஆன்மிக விஷயங்களில், வேதநூல்கள் அல்லது சாஸ்திரங்களே மனிதனின் கண்களாக இருக்கின்றன என்று கூறலாம். அதே சமயத்தில் சாட்டர்ஜியின் கருத்தையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது, மெய்ப்பொருளை அறிந்துகொள்வதற்கான வழியை சாஸ்திரங்கள் காட்டுகின்றனவேயன்றி, சாஸ்திரங்களையே மெய்ப்பொருளாக எண்ணிவிடக் கூடாது என்று அவர் கூறியுள்ளார்.

கீதையின் இறுதி அத்தியாயம், மற்ற பதினேழு அத்தியாயங்களில் உள்ள விஷயங்களைச் சுருக்கமாகக் கொடுக்கின்றது; மகத்தான ஆஸ்திகக் கொள்கையை வற்புறுத்துகின்றது. குறிப்பிட்ட எல்லைகளுக்கு உட்பட்டே மனிதன் இயங்க வேண்டிய வறைக இருக்கிருன் என்பதையும், எத்தனையோ ஏமாற்றங்களுக்கும் அவன் உட்பட வேண்டியிருக்கிறது என்பதையும் தினசரி நடவடிக்கைகளிலிருந்து நாம் அறிகிறோம். இவற்றிலிருந்து விடுதலை பெறுவதற்கான வழி, எங்கும் நிறைந்த தெய்விக சக்தியுடன் ஆன்மா ஒன்றுபடுவதேயாகும். தனி நபரோ அல்லது கோஷ்டியினரோ தவிர்க்க முடியாத கர்ம வினைக்கு உட்பட வேண்டியிருக்கிறது. யுகம் யுகமாக சரித்திர நிகழ்ச்சிகளுக்கெல்லாம் அதுதான் காரணம். கீதை உபதேசிக்கப்பட்ட போர் முனையில் நிகழ்ந்த சம்பவங்களுக்கும் அதுதான் காரணம். அந்தப் போர் நிகழ்ந்த இடம், நவீன டில்லிக்கு, காந்திஜி கொல்லப்பட்ட இடத்திற்கு அருகாமையில்தான் இருக்கிறது.

# 2

# அவதார மூர்த்தி

'அவதார மூர்த்தி' என்ற மகுடத்துடன் ஸ்ரீ மார்க் எட்மண்ட் ஜோன்ஸ் அவரது நூலின் மற்றோர் அத்தியாயத்தில் எழுதியுள்ள விவரங்களின் சாரத்தை இங்கே கொடுத்துள்ளோம்:

காந்திஜியைப்பற்றி முற்றிலும் ஒன்றுக்கொன்று நேர்மாறான இரு விதமான கருத்துகள் நிலவி வருகின்றன. அவரது ஆன்மிகப் பெருமையை, சிலர் வெகுவாகப் போற்றுகிறார்கள். மற்றும் சிலர், அவரது வாழ்க்கை மதப்பற்றுதலை அடிப்படையாகக் கொண்டதல்ல என்று கருதுகிறார்கள். காந்திஜியே தம்மைப்பற்றிக் கூறியிருப்பது, அவரது நிலையைத் தெளிவாக விளக்குவதாக இல்லை. அவர் ஒரு சமயம் தம்மைப்பற்றி இவ்விதம் கூறினார்: ''நான் சந்தித்த பெரும்பாலான சமயவாதிகளும் மாறுவேடம் பூண்ட அரசியல்வாதிகளாக இருக்கிறார்கள். நானோவெனில், அரசியல் வேடம் பூண்டிருந்தாலும், என் இதயத்தில் நான் ஒரு சமயவாதியாகவே இருக்கிறேன்.''

மேலெழுந்தவாரியாகக் கூறுமிடத்து, காந்திஜியை ஒரு சமூக சீர்திருத்தவாதி எனலாம். மற்ற எல்லாப் பிரச்னைகளையும் விட, இந்தியாவில் உள்ள வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான மக்களின் நலனிலேயே தாம் மிகவும் அதிக அக்கறை கொண்டிருப்பதாக அவரே கூறியுள்ளார். இந்திய மக்களுக்கோ அல்லது உலகத்திற்கோ சமயத்தை அடிப்படையாகக் கொண்டு அவர் யாதொரு வேண்டுகோளும் விடுக்கவில்லை. ஆனால் அதற்கு மாறாக, காந்திஜியின் ஒவ்வொரு நடவடிக்கையும், அவரது ஒவ்வொரு உபதேசமும் அரசியல், தார்மிக, பொருளாதார விதிகளையே அடிப்படையாகக் கொண்டிருந்தன.

எனினும், குறிப்பாக இந்தியாவில், அவரை ஒரு தீர்க்கதரிசியாகவோ அல்லது அறியாமையை அகற்றி ஒளியைக் காட்டுபவராகவோ கருதும் கோடிக்கணக்கான மக்கள் இருக்கின்றனர். காந்திஜி கொல்லப்பட்டபோது, பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு பேசுகையில், ''நமது வாழ்க்கையின் தீபம் அணைந்துவிட்டது; எங்கும் இருள் சூழ்ந்திருப்பதையே காண்கிறோம்'' என்று மனம் உருகிக் குறிப்பிட்டார். அப்போது அவர், கோடிக்கணக்கான மக்களின் கருத்தையே வெளியிட்டதாகத் தோன்றியது. இந்தியாவை நன்கு அறிந்தவர்கள், ஹிந்துக்களுடைய வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் மதமே ஊடுருவியிருப்பதை உணர்ந்து கொள்வார்கள். எனவே, காந்திஜியை ஓர் அரசியல்வாதி என்று கூறுவதைக் காட்டிலும் சமயவாதி என்று

கூறுவதே பொருந்தும். சாபர்மதி ஆசிரமத்தைப்போல் இந்தியா முழுவதும் கடவுளின் சாம்ராஜ்யமாக விளங்க வேண்டும் என்பதே, அதாவது மனித வர்க்கத்தினிடையே செயற்கை வேற்றுமைகளாகிய தடைகள் எதுவும் இருக்கக் கூடாது, எல்லோரும் தாங்களாக வலுவில் வறுமையை வரவேற்று எளிய வாழ்க்கை நடத்துவதில் மகிழ்ச்சி அடையவேண்டும் என்பதே அவரது ஆர்வமாகும்.

இம்சையிலிருந்து அகிம்சைக் கொள்கைக்கு மாறும் ஒவ்வொரு மனிதனின் சமய சம்பந்தமான அனுபவத்தையும் கீதை எதிரொலிக்கின்றது. அர்ஜுனனும் அத்தகைய ஒரு கட்டத்தை அடைகிறான். எனினும், அவன் தனது பரந்த கொள்கையை நிறைவேற்ற முடியாதவனாக இருக்கிறான். அவன் சமூகத்தின் குறிப்பிட்ட ஒரு பிரிவைச் (க்ஷத்திரிய வகுப்பை) சேர்ந்தவன். எனவே, அவன் அத்தியாவசியமான சில கடமைகளை நிறைவேற்றித் தீரவேண்டியவனாக இருக்கிறான். அந்தக் கடமைகளைத் தவிர்க்க அவனால் முடியவில்லை. கீதையில் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில், மனம் எதைக் காண முற்படுகிறது என்பதுதான். அர்ஜுனன் அவனது மனச்சாட்சியுடன் போராடத் தொடங்குகிறான். அவன் உள்ளத்தில் யுத்தம் மூள்கின்றது. வெளியே நடைபெறும் யுத்தத்தின் ராணுவ அம்சம் அவ்வளவு முக்கியமானது அல்ல. சாதாரணமாக மேற்கொள்ளப்படும் நாசகரமான போட்டி அவனுக்கு ஒழுங்கற்றதாகவும் அசாதாரணமானதாகவும் தோன்றுகிறது. நாசகரமான போட்டியைக் காட்டிலும் ஒரு சிறந்த வழி இருப்பதாக அவன் கருதுகிறான். அந்தச் சிறந்த வழியையே காந்திஜி தமது வாழ்க்கையில் நடைமுறையில் காட்டவும், பிறருக்கு விளக்கிக் கூறவும் முற்பட்டார்.

## 3

# இடையறாத தொண்டு

மார்க் எட்மண்ட் ஜோன்ஸ் எழுதியுள்ள "காந்தி வாழ்கின்றார்" என்ற நூலுக்கு சுவாமி பரமஹம்ச யோகானந்தா ஒரு பின்னுரை எழுதியுள்ளார். அது மேற்கண்ட நூலின் இறுதியில் வெளியாகி யிருக்கிறது. அந்தப் பின்னுரையில் உள்ள விவரங்களே இங்கே கொடுக்கப்பட்டுள்ளன:

இந்தியாவில் உள்ள முடிவே இல்லாத சாலைகளில் மகாத்மா காந்தி நடப்பதையோ அல்லது அவர் மாலைப் பிரார்த்தனைக் கூட்டங்களை நடத்துவதையோ இனி நாம் காண முடியாது. மூப்பெய்தி மெலிந்த உடலிலிருந்து அவர் தப்பிச் சென்றுவிட்டார். அவரது சாம்பலும் புனித தீர்த்தங்களில் கலந்துவிட்டது. எனினும், நமது உள்ளங்களிலிருந்து காந்திஜி தப்பிச் செல்ல முடியாது; அவரது ஜீவ ஆன்மா நம்முடன் இருந்து வருகிறது.

அவரது ஆன்மா பரமாத்மாவுடன் கலந்து விட்டது என்றாலும், அவர் எந்த லட்சியத்திற்காக உயிர் துறந்தாரோ அந்த லட்சியத்தை நாடும் நம்முடனும் அவரது ஆன்மா கலந்திருக்க வேண்டும்.

காந்திஜி, இந்தியாவுக்கு மாத்திரம் சொந்தமானவர் அல்ல, பரந்த உலகத்திற்கே சொந்தமானவர். சில ஆண்டுகளுக்கு முன் வரையில் சிறிய உருவம் உள்ள இந்த விசித்திரமான மனிதரின் (காந்திஜியின்) படத்தையே அமெரிக்கர்கள் பார்த்திருந்தனர். அப்படிப்பட்ட அமெரிக்காவில்கூட இன்று காந்திஜி பதினாயிரக் கணக்கான மக்களின் மதிப்பையும், அன்பையும் பெற்றுள்ளார். அவரது தலைமையில் இந்தியா, சமாதான முறைகளால் விடுதலைப் போராட்டத்தில் வெற்றி பெற்றதை அவர்கள் நேரில் கண்டனர்.

அமெரிக்காவில் உள்ள எல்லாப் பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் காந்தி உயிர் நீத்ததைக் குறித்தும், அவரது சிறப்பைக் குறித்தும், வாழ்க்கை வரலாற்றையும் பக்கம் பக்கமாகப் பிரசுரித்தன. ஆனால் இந்தியாவில் உள்ள நாம், அவருடன் நெருங்கிப் பழகியவர்களான நாம் நமது பங்கிற்கு என்ன செய்யப் போகிறோம்? காந்திஜி அடிபட்டுத் தரையில் சாய்ந்தபோது, தம்மைச் சுட்டவனை மன்னிப்பதாக அவர் செய்த சமிக்ஞையைப்பற்றி நாம் பத்திரிகைகளில் வாசித்தோம்; அவரது சீடர்களுக்கு ஏற்பட்ட அதிர்ச்சியிலும் துக்கத்திலும் நாமும் பங்கு எடுத்துக் கொண்டோம்; துக்ககரமான அந்த இரவு முழுவதும் அவர்கள் வேத வாக்கியங்களையும், பகவத் கீதையிலிருந்து சுலோகங்களையும் கோஷம் செய்ததை நாம் கற்பனைக் கண்ணால் பார்த்தோம். அவரது உடல் இறுதி யாத்திரை செய்வதற்கான ஏற்பாடுகள் எல்லாம் நடந்து கொண்டிருந்தபோது, மெலிந்த அந்த உடலை ஒரு நிமிடமாவது தரிசனம் செய்வதற்காக லட்சக் கணக்கான மக்கள் பாதை நெடுக காத்துக் கொண்டிருந்தனர். இறுதி யாத்திரையின்போது ரோஜா இதழ்களால் மூடப்பட்டிருந்த மகாத்மாவின் படங்களையும் பார்த்தோம். அவரது முகத்தோற்றம் அமைதியாக இருந்ததால், துப்பாக்கி ரவைகளால் ஏற்பட்ட கோரக் காட்சியை நாம் மறந்து சிறிது ஆறுதல் அடைந்தோம்.

காந்திஜியின் இறுதி யாத்திரை சம்பந்தமான நிகழ்ச்சிகளை விவரமாக எடுத்துக் கூறினார்கள். அந்தப் புனித உடலின் மீது மக்கள் பூமாரி பொழிந்தனர். ‘ஓம்’ என்றும் ‘ராம்’ என்றும் கோஷங்கள் செய்தனர். ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவ வேத நூல்களிலிருந்து சுலோகங்கள் எடுத்துக் கூறப்பட்டன.

அப்போது நான் லாஸ் ஏஞ்சலஸ் (அமெரிக்கா) வானொலி மூலம் காந்திஜிக்கு எனது இறுதி அஞ்சலியைச் செலுத்தினேன்.

மகாத்மா காந்தியின் மறைவு, இந்தியாவுக்கு மாத்திரம் அல்ல, உலகம் முழுவதற்குமே ஒரு பெரும் நஷ்டமாகும். இந்தியாவில் உள்ள சகலரும், உலகத் தலைவர்கள் யாவரும் அவரது

மறைவைக் குறித்து துக்கப்படுகின்றனர். அவருக்காக நாம் துக்கப்படுகின்றோம் என்றாலும், அவர் முன்னரைக் காட்டிலும் அதிக சுதந்திரத்துடன் சூட்சும உலகத்திலிருந்து தொண்டு செய்ய முடியும். மகாத்மா காந்தியைப் போலவே, ஏசுநாதரும், அப்ரகாம் லிங்கனும் ஒரே லட்சியத்திற்காகவே உயிர் நீர்த்தனர். ஏசுநாதரின் உபதேசம் எங்கும் பரவும்படி செய்ததற்கு, அவரைத் துரோகம் செய்த யூதாஸ் காரணமாக இருந்தது போலவே, காந்திஜியைக் கொன்றவன், அவரது அகிம்சைக் கொள்கை பரவுவதற்கு உதவியாக இருப்பான்.

காந்திஜியின் அகிம்சைக் கொள்கையைப் பின்பற்றியதன் காரணமாக, இந்தியா துப்பாக்கியால் ஒரு தடவை கூடச் சுடாமல் சுதந்திரத்தைப் பெற்றது. அவரது சித்தாந்தத்தை உலகம் பின்பற்றுமாயின், நாசகரமான, துன்பங்களுக்குக் காரணமான யுத்தங்களாகிய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெறும். எல்லைக்கு உட்பட்ட மெலிந்த உடலையுடைய காந்திஜி எல்லையற்ற தொண்டு புரிந்துள்ளார். உடலிலிருந்து விடுதலை பெற்றுள்ள அவரது ஆன்மா என்றென்றும் தேசங்களின் உள்ளங்களிலும், தனி நபர்களின் உள்ளங்களிலும் வீற்றிருந்து, மேலும் மகத்தான தொண்டுகள் புரிந்துவரும். ஈடுஇணையற்ற புனித வாழ்க்கையை நடத்திய காந்திஜியின் தொண்டிற்கு எவ்வித இடையூறும் ஏற்படாது. அமரரான அவர், நமது உள்ளங்களாகிய ஆலயத்தில் இருந்துகொண்டு இடையறாத தொண்டு புரிந்து வருவார்.

# சுலோகங்களின் அகர வரிசை

(எண்-அத்தியாயங்களையும் சுலோகங்களையும் குறிக்கும்)

## அ - अ

## ஆ - आ



## இ - इ

ஈ - ई



உ - उ



ஊ - ऊ



ரு - ऋ



ஏ - ए



ஓ - ओ

க - க்ரு



க — ग



ச — च

## ஜ - ज



## ஞ - ञ



## த - त

## த - द



## த - ध



## ந - न

ப – प

ர - र

ல - ல



வ - வ



ச - ஶ

ஸ - स



ஹ - ह

# பொருட் குறிப்பு அகரவரிசை

( எண்-பக்கத்தைக் குறிக்கும் )

ஓ



க



கா







காந்திஜி

கி



கீ

கெ



கே



ச



சா

டி



டீ



த



தா



தி

## பு



## பெ



## பே



## பை

யு



யூ



யோ



ர



ரா



லா

ஜ



ஜா



ஸ



ஸா



ஸோ



ஸௌ



ஸ்